செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்
திட்ட இயக்ககம்

# நடைமுறைத் தமிழ்
# அகரமுதலி

**முனைவர் கோ. விசயராகவன்**
இயக்குநர்

**தமிழ்நாடு அரசு**
**2021**

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | நடைமுறைத் தமிழ் அகரமுதலி |
| முதல் பதிப்பு | : | திருவள்ளுவராண்டு 2052<br>துலை (ஐப்பசி) 2021 நவம்பர் |
| பதிப்புரிமை | : | தமிழ்நாடு அரசு |
| பக்கம் | : | 8 + 456 |
| தாள் | : | 80 ஜி.எஸ்.எம். மேப்லித்தோ |
| விலை | : | உருபா |
| நூலின் அளவு | : | டெம்மி 1/8 |
| நூல் வெளியீடும்,<br>கிடைக்குமிடமும் | : | **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,**<br>எண் 75, முதல் தளம்,<br>நகர் நிருவாக அலுவலக வளாகம்,<br>எம்.ஆர்.சி. நகர்,<br>சாந்தோம் நெடுஞ்சாலை,<br>சென்னை–28.<br>தொலைபேசி எண்: 044–29520509<br>044–29520462<br>மின்னஞ்சல் முகவரி :<br>dtedp1974@gmail.com |
| அச்சீடு | : | அரசு மைய அச்சகம்,<br>சென்னை–600 079. |

**திரு. தங்கம் தென்னரசு**
மாண்புமிகு அமைச்சர்,
தொழில்துறை, தமிழ் ஆட்சிமொழி,
தமிழ்ப் பண்பாடு (ம) தொல்லியல் துறை

தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

# வாழ்த்துரை

**தேமதுரத் தமிழோசை உலகமெலாம்**
**பரவும் வகை செய்தல் வேண்டும்**

– மகாகவி பாரதியார்

தொல்பொருள் ஆய்வின்வழி மட்டுமல்லாது சொல்பொருள் ஆய்வின்வழியும் ஓரினத்தின் சமூக நிலை, பழக்கவழக்கம், பண்பாட்டுக் கூறுகள், அயலக வணிகத் தொடர்பு ஆகியவற்றை அறியமுடியும். இதிலிருந்து சொற்களையும் மொழியையும் காக்க வேண்டியதன் தேவையை நாமறியலாம்.

மொழி அறிஞர் எஸ்பெர்ஸன் ‘‘மனிதன் முதலில் தான் கண்ட பொருளுக்குப் பெயர் வைக்கத் தெரியாத விலங்கு நிலையில் இருந்தான். தன் இனத்தவருடன் பேச இயலாதவனாக இருந்தான். பின்னர் நாளடைவில் தன் பட்டறிவைப் பிறரிடம் சொல்வதற்காக அப்பொருளின் உருவத்தினைச் சித்தரித்துக் காட்டினான். பின்னர் தன் செய்கையால் தெரிவித்தான், அதன்பின் ஒலி வடிவில் ஒலிக்குறிப்பை எழுப்பினான். அடுத்து பொருளுக்கு ஓர் எழுத்து இட்டு எழுத முடியாமல் பேச்சு வகையால் சொற்றொடர்களைக் குறிக்க அடையாளம் தந்தான். இங்ஙனம் மொழி உருவானது’’ என்று தன் ஆராய்ச்சி நூலில் விளக்கமாகக் கூறியுள்ளார். இக்கூற்றிலிருந்து மொழி என்பது மக்களினத்தின் வளர்ச்சி வரலாற்றை விளக்கும் காலக்கண்ணாடி என உணரலாம்.

‘புதிய புதிய துறைகள் தோன்றுந்தொறும், ஏராளமான கலைச்சொற்கள் தோன்றுதற்கும், வழங்கும் சொற்களில் புதிய பல பொருள்கள் இணைந்து விரிவடைவதற்கான சூழ்நிலையில் அகரமுதலி மிகவும் இன்றியமையாத நூலாகிறது’ என்று 1974இல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கி **மேனாள் மாண்புமிகு முதலமைச்சர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள்** எடுத்துரைத்தார்கள்.

இதுபற்றி **மாண்புமிகு முதலமைச்சர் தளபதி திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள்** மிகுந்த அக்கறை கொண்டு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் ஒரு செயலியை உருவாக்கி, அதன்வழி பல்வேறு துறைசார்ந்த வல்லுநர் குழு அமைத்து புதிய கலைச்சொற்களைத் திரட்டி சொற்குவையில் பதிவேற்றம் செய்யலாம் என்று அறிவுறுத்தினார்கள் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

ஒரு மொழியின் வளமை அம் மொழியின் சொற் பெருக்கத்தில் உள்ளது. அவ்வாறு சொற்பெருக்கத்தையுடைய மொழிகளுள் முதன்மையான பழமையான மொழி தமிழ்மொழி எனலாம். தமிழ்மொழி தனித்தியங்கும் இயல்புடையது, சொல்வளம் நிறைந்தது

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் மொழியின்நிலைப்பாடு சொற்களை வைத்தே கணக்கிடப்படுகிறது அந்தச் சொற்களைத் தொகுத்து பாதுகாத்து அடுத்த தலைமுறையினருக்குக் கொண்டு செல்வது அகராதிகளாகும்.

நுட்பமிகு ஆய்வுப்பணியான அகராதிப் பணிக்கெனத் தமிழ்நாடு அரசால் துறைத்தலைமை இயக்ககமாக உருவாக்கப்பட்டுச் செயலாற்றிவரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சொற்பிறப்பியல் பேரகரமுதலி உள்ளிட்ட பல அகராதிகளைத் தமிழ்கூறும் நல்லுலகிற்கு வழங்கியுள்ளது, அந்த வரிசையில் தற்போது நடைமுறைத் தமிழ் அகராதியை இவ்வியக்ககம் வெளியிடுவதால் மனம் மிக மகிழ்கிறேன்.

தற்போது நடைமுறையில் வழங்கப்படும் முகாமையான சொற்களையும் அவற்றிற்கான பொருள்களையும் விளக்கும் வகையில் அமைந்துள்ள இந்த அகராதி மொழியின் வளர்நிலையைக் காட்டும் ஆவணமாக விளங்கும் என்பது என் திண்ணமான எண்ணம். இந்த அகராதியைத் தமிழார்வலர்களும் தமிழன்பர்களும் பயன்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்வதுடன், இந்த அகராதியைச் சிறப்புற வெளிக்கொணர்ந்துள்ள அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்கும் அவருக்குத் துணைநின்ற இயக்ககப் பணியாளர்களுக்கும் என் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்த்துகளுடன்,



**(தங்கம் தென்னரசு)**

**மகேசன் காசிராஜன்** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை

தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

நாள் : 29.09.2021

# அருந்தமிழுக்கு அணிகலம்

தமிழுணர்ச்சி – தமிழ் மலர்ச்சி – தமிழ் மணம் – தமிழ் ஒளி – தமிழ் முரசு – தமிழ்க் கலை – தமிழ் விருந்து – தமிழ் வெள்ளம் தமிழ்நாட்டின் மாட்சியாகும்.

தன்னேரில்லாத மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் தலைமையில் 'எங்கும் தமிழ்', 'எதிலும் தமிழ்', 'எல்லாம் தமிழ்' என்ற நிலை ஓங்கி வளர்கின்ற சூழலில் மாண்புமிகு தொழில்கள், தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சரின் சீரிய வழிகாட்டுதலில் தமிழ் வளர்ச்சி துறை தகத்தகாயமாக மின்னுகிறது.

ஒரு மொழியின் சொல்வளம் என்பது அம்மொழியில் வழங்கும் சொற்களின் எண்ணிக்கையைச் சார்ந்தது. 1500 ஆண்டுக்கால வரலாறு கொண்ட ஆங்கில மொழியில் 10,22,000 சொற்கள் வழங்குகின்றன. 98 நிமிடத்திற்கு ஒரு சொல் ஆங்கிலத்தில் வழக்கிற்கு வருகிறது. நாளொன்றுக்கு 14 சொற்கள் ஆங்கில வழக்கில் ஏறுகின்றன. ஆண்டொன்றுக்கு 8500 சொற்கள் நிலைபெறுகின்றன. ஆனால், 3200 ஆண்டுக்கால வரலாறு கொண்ட தமிழ் மொழியில் வழங்கும் சொற்களின் எண்ணிக்கை குறித்த கணக்கும், அச்சொற்களின் பட்டியலும், அவற்றின் வழக்காற்று விவரங்களும் நம்மிடையே உறுதியாக இல்லை என்ற குறையைக் களையும் நோக்கில், தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அகரமுதலிகளைத் தொகுத்து வழங்குவதைச் சிறப்பான பணியாகக் கொண்டு செயலாற்றுகிறது.

அன்றாட நடைமுறையில் பேசப்படும் சொற்களுக்குத் தமிழ் மற்றும் ஆங்கில பொருள் கூறி, தேவைப்படும் இடங்களில் உரிய எடுத்துக்காட்டுச் சான்றுகளுடன் **நடைமுறைத் தமிழ் அகரமுதலி** மக்களின் பயன்பாட்டிற்குப் பெரிதும் உதவும்.

நான் பள்ளியில் பயின்றபோது, மாணவர்கள் அனைவரும் ஆங்கிலக் கையகராதி, உலக நாடுகள் வரைபடம், வரைகலைப் பேழை ஆகிய மூன்றையும் எப்போதும் வகுப்பிற்கு எடுத்து வர வேண்டும் என்று வலியுறுத்திய நினைவு எனக்கு வருகிறது.

நல்ல மாணவன் எந்த நிலையிலும் ஒரு சொல்லுக்குப் பொருள் காணும் பயிற்சியை அகராதியின் வழியாகக் கண்டு தெளிகிற பழக்கம் அமைய வேண்டும். அப்படிப்பட்ட நல்லுணர்வுக்கு ஊக்கம் தருகின்ற வகையில் இந்தச் சிற்றகராதி வெளியிடப் பெறுகின்றது.

திராவிட மொழிகளின் பழம்பெருமைக்கும், கலப்பில்லாத தூய மொழி வளம், இலக்கிய வளம், பண்பாட்டு வளம் ஆகியவற்றுக்கு அரணாகத் தமிழ் வளர்ச்சித் துறையின் கட்டுப்பாட்டில் இயங்கும் செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் செழுமையான முறையில் பல அகராதிகளை வெளியிட்டு தமிழ் மொழியின் ஆக்கத்திற்கு அருந்தொண்டாற்ற வேண்டுகிறேன்.

அன்புடன்,

29/9/2021

**(மகேசன் காசிராஜன்)**

**முனைவர் கோ. விசயராகவன்**
இயக்குநர்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்

நகர் நிருவாக அலுவலக வளாகம்,
முதல் தளம், எண். 75,
சாந்தோம் நெடுஞ்சாலை,
எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.

## பதிப்புரை

இந்திய அகராதி வரலாற்றில் தமிழ்மொழிக்கு ஒரு பெருமை உண்டென்றால், அது இந்திய மொழிகளில் தமிழில்தான் முதன்முதலாக அகராதி வெளியானது என்பதுதான்.

அதுபோல் இந்திய மொழிகளில் தமிழ்மொழியில்தான் பேரகராதி (Lexicon) தொகுதிகளும், சொற்பிறப்பியல் அகரமுதலி (Etymological Dictionary)யும் வெளிவந்தன.

அகராதிகளில் பலவகை உண்டு. அகராதி (Dictionary), பேரகராதி (Lexicon), கலைச்சொல் அகராதி (Glossory), பயன்பாட்டு அகராதி (Pedagogial Dictionary) எனத் தேவைகளுக்கேற்ப பல கோணங்களிலும், பல அளவுகளிலும் அகராதிகள் வெளியிடப்படுகின்றன.

அந்த வகையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அகரமுதலி என்ற இலக்கைத் தாண்டி, தமிழ்ச்சொற்களின் தோற்றத்தை ஆராய்வதுடன், காலந்தோறும் சொற்களின் பொருள் மற்றும் வடிவ மாற்றங்களையும் பதிவு செய்துள்ளது.

இயக்ககம் உருவாக்கப்பட்ட 38 ஆண்டுகளுக்குள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் 31 தொகுதிகளை வெளியிட்டு நிறைவு செய்துள்ளது. அதன் பணி முடிந்தவுடன் பல கோணங்களிலும் அகராதிகளை உருவாக்கும் முயற்சியில் இவ்வியக்ககம் ஈடுபட்டுள்ளது.

பல்வேறு காலக்கட்டத்தில் பல்லாயிரம் சொற்கள் தமிழில் தோன்றியிருக்கின்றன. இவற்றில் பல இன்று நடைமுறையில் பயன்பாட்டில் இருக்கவும் சில பயன்பாட்டில் இல்லாமலும் போயுள்ளன. இவ்வாறு வழக்கற்றுப் போன சொற்களைத் தவிர்த்து, இக்கால மக்களின் நடைமுறையில் உள்ள புதிய சொற்களை இணைத்து அவற்றை மட்டுமே தொகுத்து உருவாக்கப்பட்ட அகராதியே **‘நடைமுறைத் தமிழ் அகரமுதலி’**யாகும்.

தமிழ்மொழியில் பிறமொழிச் சொற்களைக் கலந்து பயன்படுத்தும் இக்காலத் தலைமுறையினருக்குத் தமிழ்ச் சொற்கள் பலவற்றையும் அறிந்திருக்க வாய்ப்பில்லாத நிலையில் இந்த நடைமுறைத் தமிழ் அகரமுதலி மிகவும் பயனுடையதாக இருக்கும்.

இந்த அகரமுதலியைக் கொண்டு நல்ல தமிழ்ச்சொற்களையே இளைஞர்கள் பயன்படுத்தத் தொடங்குவர் என்ற நோக்கத்தில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம் நடைமுறைத் தமிழ் அகரமுதலியை வெளிக் கொணர்ந்துள்ளது.

இந்த இயக்ககத்தின் செயற்பாடுகள் அனைத்திற்கும் ஒத்துழைப்பு அளித்து வரும் **மாண்புமிக தமிழக முதலமைச்சர் திரு. மு.க. ஸ்டாலின்** அவர்களுக்கும், வாழ்த்துரை வழங்கியுள்ள மாண்புமிகு தொழில்துறை, தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு (ம) தொல்லியல்துறை அமைச்சர் **திரு. தங்கம் தென்னரசு** அவர்களுக்கும், இயக்ககச் செயற்பாடுகளுக்குக் கருத்துரை கூறி எப்போதும் ஊக்கமளித்துவரும் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறையின் அரசு செயலாளர் **திரு. மகேசன் காசிராசன்** அவர்களுக்கும், இந்த அகராதியைச் சிறப்பாக உருவாக்கிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் மேனாள் இயக்குநர் திரு. த. காமராசு அவர்களுக்கும், இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், திரு. சு. வீரவேலு, முனைவர் தி.பாலசுப்பிரமணியன், திரு. கி. தமிழ்மணி, மேனாள் பதிப்பாசிரியர்கள் முனைவர் மு. கண்ணன், முனைவர் மு. கோமதிவள்ளியம்மை, உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி, தொகுப்பாளர்கள் திரு. வே. பிரபு, திரு. கி. இராமர், திருமதி ஜெ. சாந்தி, முனைவர் வே. கார்த்திக், திருமதி கு. சங்கீதா, கணிப்பொறியாளர்கள் திருமதி க. கஸ்தூரி, திரு. ப. தீபக், மேனாள் கண்காணிப்பாளர் திரு. ஆ.சுந்தரவரதன், ஓவியர் சா.கி.கணேசன், கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து (ம) நிருவாகப் பணியாளர்கள் பா.சரண்யா, நா.பாலகிருஷ்ணன், வெ.சுதாகர், சீ.ஸ்ரீகாந்த், து. ரஜினிகாந்த், இரா.கற்பகம், ஆ.குணசுந்தரி உள்ளிட்ட அனைத்து பணியாளர்களுக்கும் மனமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(கோ. விசயராகவன்)**

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

### பதிப்புக்குழு

**பதிப்பாசிரியர்கள்**

முனைவர் மா. பூங்குன்றன்
(ஒருங்கிணைப்பாளர்)

திரு சு. வீரவேலு

முனைவர் மு. கண்ணன்

முனைவர் தி. பாலசுப்பிரமணியன்

திரு. கி. தமிழ்மணி

முனைவர் மு. கோமதிவள்ளியம்மை

திரு. ஏ. காந்தி,
உதவிப் பதிப்பாசிரியர்

**தொகுப்பாளர்கள்**

முனைவர் வே. கார்த்திக்

திரு. கி. இராமர்

திருமதி ஜெ. சாந்தி

திரு. வே. பிரபு

திருமதி கு. சங்கீதா

திருமதி க. கஸ்தூரி
கணிப்பொறியாளர்

திரு. ப. தீபக்
கணிப்பொறியாளர்

# அ

**அஃறிணை** பெ. (n.) *உயர்திணை அல்லாதது;* irrational things.

**அக்கக்காக** வி.எ. (adv.) *பகுதி பகுதியாக, தனித்தனியாக;* into one's several parts; in great detail. *'நேரங்காட்டியை (கடிகாரத்தை) அக்கக்காகக் கழற்றித் தூய்மை செய்தான்'.*

**அக்கடா** வி.அ. (adv.) *1. வேலைக்குப் பிறகு ஓய்வாக இருப்பது;* (after hectic activity) leisurely. *'வீட்டு வேலையை முடித்து விட்டு இப்போதுதான் அக்கடா வென்று உட்கார்ந்தேன்'. 2. மற்றவர்கள் வேலையில் தலை யிடாமலிருப்பது;* keeping to oneself.

**அக்கப்போர்** பெ. (n.) *வம்புப் பேச்சு;* anonymous communication. *'இவ னோட அக்கப்போர்தாங்கலை'.*

**அக்கம்பக்கம்** பெ. (n.) *1. குறிப்பிட்ட இடத்தைச் சுற்றியுள்ள பகுதி;* neighbourhood; vicinity. *நேர்ச்சி (விபத்து) நடந்த இடத்திற்கு அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் ஓடி வந்து உதவினர்'. 2. சுற்றுமுற்றும்;* around, about. *'அக்கம் பக்கம் பார்க்காமல் வீட்டை நோக்கி நடந்தான்'.*

**அக்கரைச் சீமை** பெ. (n.) *அயல்நாடு, வெளிநாடு;* foreign country.

**அக்கறை** பெ. (n.) *1. ஈடுபாடு, நாட்டம்;* concern; interest. *2. கருத்து செலுத் துதல்;* serious attention, care. *'நூல் சிறப்பாக வெளிவருவதற்கு மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டார்'.*

**அக்காரவடிசில்** பெ. (n.) *சக்கரைப் பொங்கல்;* cooked rice with milk, sugar and ghee. *'திருமால் கோயிலின் அக்காரவடிசிலின் சுவை அருமை'.*

**அக்கால்** பெ. (n.) *அப்போது;* on that time.

**அக்கி** பெ. (n.) *(வைரஸ்) நுண்ணுயிரி நரம்பு மண்டலத்தைத் தாக்குவதால் அடை அடையாக வேர்க்குரு போல் தோன்றிச் சிவந்து வலியை ஏற்படுத்தும் தோல் நோய்;* herpes.

**அக்கி எழுதுதல்** வி. (v.) *அக்கி வந்த இடத்தில் செம்மண் குழம்பைத் தடவுதல்;* apply a solution of potter's red soil as a remedy for herpes.

**அக்குத்தொக்கு** பெ. (n.) *உறவுத் தொடர்;* relation, connection. *'அக்குத் தொக் கில்லாதவனுக்கு தூக்கமென்ன?'.*

**அகங்கடை** பெ. (n.) *வீட்டுவாயில்;* entrance of a house.

**அகங்கை** பெ. (n.) *உள்ளங்கை;* palm of hand.

**அகத்தர்** பெ. (n.) *1. உள்ளிடத்தார்;* inmates. *2. வீட்டிலுள்ளோர்;* house mates.

**அகத்துளை** பெ. (n.) *உட்டுளை; உள்துளை;* inner hole; internal hole.

**அகந்தை** பெ. (n.) *செருக்கு, நானென்னும் மிக்குணர்வு;* strong feeling of self proudness, arrogance.

**அகப்பட்டது** பெ. (n.) *பிடிபட்டது;* finally it is found out. *'நான் தேடிய நூல் நூலகத்தில் அகப்பட்டது '.*

**அகப்பட்டவன்** பெ. (n.) *சிக்கியவன்;* person who gets caught.

**அகப்படுதல்** பெ. (n.) *1. பொருள்புரிதல்;* to understand. *'செய்யுளின் பொருள் அகப்பட்டது'. 2. ஒருங்கு சேர்தல்;* to collect or gather. *3. சிக்கிக் கொள்ளுதல்;* to be entangled. *'பொறியில் எலி அகப்பட்டது'. 4. பிடிபடுதல்;* to be caught. *'தேடினால் அகப்படும்'. 5. வயப்படுதல்;* to be one's influence. *'கூட்டத்தினர் அவருக்கு அகப்பட் டிருந்தனர்'. 6. கிடைத்தல்;* to be obtained. *'அகப்பட்டதைச்சுருட்டு'.*

**அகப்பைச் செருகி** பெ. (n.) *அகப்பைகள் செருகி வைக்கும் சட்டம்;* perforated wooden frame for holding ladle.

**அகம்** பெ. (n.) *1. மனம்;* mind. *2. தன்னிடம்;* withself. *3. வீடு;* home. *4. உள்;* in. *5. இடம்;* place. *6. மார்பு;* chest. *7. மூலாதாரம்;* fundamental cause. *8. பின்னர்;* after; latter. *9. உள்ளிடம்;* innerplace. *10. குறியிடம்;* target; aim. *11. உட்பட்டது;* included. *12. குறைந்திருப்பது;* not full. *13. எண்ணம்;* thought. *14. அகப் பொருள்;* grammar of lovers poetry. *15. மண்ணுலகு;* earth; this world.

**அகம்பாவம்;** பெ. (n.) *திமிரு;* arrogance; insolence. *'ஆண் என்கிற அகம்பாவம் அவனுக்கு'.*

**அகமகிழ்வு** பெ. (n.) *உள்ளத்தின் உவகை வகை;* delite.

**அகமனை** பெ. (n.) *உள்வீடு;* inner house.

**அகரம்** பெ. (n.) *1. பார்ப்பனர் வாழிடம்;* residential area of Brahmins. *2. ஊர்;* village. *3. நகரப் பொது;* Town in general; Town common property.

**அகரவரிசை** பெ. (n.) *ஒரு மொழியில் எழுத்துகள் அமைந்துள்ள வரிசை யின் அடிப்படையில் சொற்களை வரிசைப் படுத்தும் முறை;* alphabetical order.

**அகராதி பிடித்தவர்** பெ. (n.) *பிறரை மதிக்காமல் எதிர்த்துப் பேசுபவர்;* impudent person.

**அகல்** பெ. (n.) *மண் அல்லது மாழையில் செய்யப்பட்ட எண்ணெயையும் திரியு மிட்டு ஏற்றப்படும் குழிவு அதிக மில்லாத விளக்கு;* small shallow bowl - shaped oil lamp made of clay or metal.

**அகல்(லு)தல்** பெ. (n.) *1. விரிவடைதல்;* to widen, extend. *'மாநகர் நாளுக்கு நாள் அகன்று கொண்டேயிருக்கிறது'.* *2. நீங்குதல்;* to leave, vanish. *'சொந்த நாட்டை விட்டு அகன்று விட்டனர்'.* *3. பிரிதல்;* to separate. *'அவர் என்னை விட்டு அகன்று வெகு நாளாயிற்று'.* *4. தைந்து கிழிதல்;* to be worn out. *'புடவை அகன்று போயிற்று'.*

**அகல்வு** பெ. (n.) *1. பிரிவு;* section. *2. நீங்குகை;* eliminate; remove. *3. விரிவு;* extension. *4. பரப்பு;* area.

**அகலக்கால்** பெ. (n.) *விளைவுகளைச் சிந்திக்காமல் செயலில் இறங்குதல்;* go beyond one's means. *'பெண்ணின் திருமணம் என்று அகலக்கால் வைத்ததில் கடனாகிவிட்டது.'*

**அகலப்படுத்துதல்** வி. (v.) *ஒரு பரப்பின் அகலத்தைக் கூட்டுதல்; விரிவு படுத்தல்;* broaden.

**அகலம்** பெ. (n.) *நீளம் அல்லது உயரம் உள்ள ஒன்றில் இரு பக்கங்களுக்கு மிடையே உள்ள தொலைவு;* breadth; width.

**அகலாப்பிணி** பெ. (n.) *1. நீங்காப்பிணி;* permanent disease. *2. தீராநோய்;* incurrable disease.

**அகலிடம்** பெ. (n.) *1. அகன்ற இடம்;* broad area. *2. உலகம்;* world. *3. அகன்ற இடத்தையுடைய நிலப்பரப்பு;* broad landscape. *4. நீங்கிய இடம்;* removed place. *5. இருப்பிடம்;* residence.

**அகவை** பெ. (n.) *ஆண்டுப்பருவம்;* age (of some one).

**அகவிலைப்படி** பெ. (n.) *விலைவாசி ஏற்றத்தைச் சரி கட்ட அடிப்படை ஊதியத்தின் அளவுமுறை ஊதியத் தோடு கொடுக்கப்படும் கூடுதல் தொகை;* dearness allowance.

**அகற்றுதல்** வி. (v.) *நீக்குதல், அப்புறப் படுத்துதல்;* remove, evict. *'சாலை மறியலில் ஈடுபட்டிருந்தவர்களைக் காவல்துறையினர் அகற்றினர்'.*

**அகன்ற** பெ.எ. (adj.) *அகலமான;* broad. *'அகன்ற தெருக்கள்'.*

**அங்கலாய்ப்பு** பெ. (n.) *மனக்குறையை வெளிப்படுத்தும் புலம்பல்;* grief, complaint. *'மணமகள் நிறமில்லை என்று திருமண வீட்டில் ஓர் அங்கலாய்ப்பு'.*

**அங்காடி** பெ. (n.) *பல பொருட்களை விற்பனை செய்யும் பெரிய கடை அல்லது பல கடைகளின் தொகுதி;* department store, shopping complex.

**அங்குசம்** பெ. (n.) *யானையைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கப் பயன்படுத்தும் வளைந்த முனையை உடைய நீளமான கம்பி;* goad used by muhouts.

**அங்குலம்** பெ. (n.) *1. ஓர் அடியின் பன்னிரெண்டில் ஒரு பாகம்;* inch. 2. *சிறிய அளவு, கொஞ்சம்;* a little. *'இந்தியாவின் ஒரு அங்குல நிலத்தைக் கூட விட்டுக் கொடுக்க மாட்டோம்' என பாதுகாப்பு அமைச்சர் கூறினார்.*

**அங்ஙனம்** வி.அ. (adv.) *அவ்வாறு, அவ்விதம், அப்படி;* in that manner. *'அங்ஙனம் நடந்திருக்காது'.*

**அச்சம்** பெ. (n.) *தீங்கு, இழப்பு முதலியவை நேரக்கூடிய சூழலில் ஒருவருக்கு ஏற்படும் உணர்வு, அச்சம்;* fear, fright.

**அச்சகம்** பெ.(n.) *நூல்கள், அழைப்பிதழ்கள் போன்றவற்றை அச்சடிக்கும் இடம்;* Printing Press.

**அச்சாரம்** பெ. (n.) *முன்பணம்;* money given in advance (to confirm a contract). *'கல்யாணத்துக்காகச் சமையல் காரரைப் பார்த்துப் பேசி அச்சாரம் கொடுத்தாச்சு'.*

**அச்சாரம் போடுதல்** வி. (v.) *எதிர் காலத்தில் தனக்குக் கிடைக்க விரும்பும் ஒன்றுக்குத் தேவையான தொடக்க நிலை ஏற்பாடுகளைத் தற்போதே மேற்கொள்ளுதல்;* prepare the ground. *'அடுத்த தேர்தலில் வெற்றி பெற இப்பவே அச்சாரம் போடுகிறார்'.*

**அச்சிடுதல்** வி. (v.) *எழுத்து, படம் முதலியவற்றை அச்சுப் பொறி கொண்டு பதித்தல்;* print (a book).

**அச்சுக் கூடம்** பெ. (n.) *அச்சகம் பார்க்க.*

**அச்சுப் பிழை** பெ. (n.) *அச்சிடும் போது நேரிடும் எழுத்து மாற்றம், எழுத்து விடுபடுதல் முதலிய தவறுகள்;* Printing error.

**அச்சுவெல்லம்** பெ. (n.) *அச்சைப் பயன்படுத்தி செய்யப்படும் சிறு வெல்லக்கட்டி;* jaggery cake in the shape of a pyramid.

**அச்சுறுத்தல்** வி. (v.) *அச்சமுண்டாக்குதல்;* threaten.

**அச்சேற்றுதல்** வி. (v.) *அச்சிடுதல்;* have (a work) Printed; print. *'எனது நூலை அச்சேற்ற நண்பர் ஒருவர் உதவினார்'.*

**அசட்டை** பெ. (n.) *பொருட்படுத்தாமை;* regardless.

**அசடு** பெ. (n.) *மூடன்;* fool. *'அந்த அசடு எங்கே?'.*

**அசத்துதல்** வி. (v.) *1. மலைக்க வைத்தல்; திணறடித்தல்;* stun, overwhelm. *' ஆளை அசத்தும் அழகு'.* 2. *தூக்கம் மேலிடுதல்;* be overcome by sleep.

**அசதி** பெ. (n.) *1. களைப்பு;* tiredness. 2. *சோர்வு;* langour. *'வீட்டை மாற்றும் வேலை என்றாலே அசதி ஏற்பட்டு விடுகிறது'.*

**அசப்பில்** பெ.எ. (parti.) *போலிருக்கை;* at a fleeting glance. *'இவள் அசப்பில் அவள் அம்மாவைப் போலிருக்கிறாள்'.*

**அசராமல்** வி.அ. (adv.) *அயராமலிருத்தல்;* unwearying. *'அவர் நல்ல உழைப்பாளி அசராமல் உழைக்கும் திறன் உடையவர்'.*

**அசைப்பு** வி. (v.) *அசைக்கை;* shaking. *'அடிபட்டதால் அசைப்பின்றிக் கிடக்கிறான்'.*

**அசைவு** வி. (v.) *1. அசைகை;* shaking. *'அசையாமல் அமர்ந்திடு'. 2. ஆட்டம்;* moving about. *'மரம் அசைவின்றி நிற்கிறது'.*

**அஞ்சல்** பெ. (n.) *1. ஓர் இடத்தில் இருப்பவர் மற்றொரு இடத்திலிருப் பவருக்கு மடல் (கடிதம்) அனுப்பி வைக்கும் முறை;* postal system. *2. ஒலிபரப்பு;* broadcast.

**அஞ்சல் அலுவலகம்** பெ. (n.) *அஞ்சல் அட்டை, அஞ்சல்தலை முதலியன விற்பது, அஞ்சல்களைப் பெற்று உரிய முகவரிக்கு அனுப்புவது, பணச் சேமிப்பு முறையினை ஏற்படுத்தித் தருவது முதலிய பணிகள் செய்யும் ஒன்றிய அரசு அலுவலகம்;* post office.

**அஞ்சல்தலை** பெ. (n.) *மடல் (கடிதம்) போக்குவரத்துக்குப் பயன்படுத்தும் கட்டணமாக ஒட்ட அஞ்சல் நிலையம் விற்கும் ஒட்டுதாள்;* postage stamp.

**அஞ்சல்வழிக்கல்வி** பெ. (n.) *வீட்டி லிருந்தபடியோ, பணி செய்து கொண்டோ கல்லூரிப் பாடங்களை அஞ்சலின் மூலம் பெற்றுப் படிக்கும் படிப்பு;* distance education.

**அஞ்சலி** பெ. (n.) *நினைவேந்தல்; வணக்கம்;* workship. *'மறைந்த தலைவருக்கு மக்கள் அஞ்சலி செலுத்தினர்'.*

**அஞ்சலுறை** பெ. (n.) *மேலுறை;* envelope.

**அஞ்சற்காரன்** பெ. (n.) *மடல்களைக் கொண்டு வந்து கொடுக்கும் பணியாளன்;* Postman.

**அஞ்சற்பணவிடை** பெ. (n.) *அஞ்சலகம் மூலம் பணம் அனுப்புதல்;* money order by Post office.

**அஞ்சற்பிரிப்பு** பெ. (n.) *மடல்களைச் சென்று சேர வேண்டிய இடங்களுக் கேற்பப் பிரித்து ஒழுங்குபடுத்துதல்;* sorting of letters.

**அஞ்சற்பெட்டி** பெ. (n.) *மடல் போடும் பெட்டி;* Post box.

**அஞ்சறைப்பெட்டி** பெ. (n.) *சமையலுக் குதவும் கறிச்சரக்குகளை வைத்துக் கொள்ளும் பெட்டி;* spice box.

**அஞ்சற்பை** பெ. (n.) *அலுவலகத்தில் மடல்களைப் போட்டுக் கட்டி வைக்கும் பை;* Postal bag.

**அஞ்சாமை** பெ. (n.) *செயல் செய்ய அச்சமுறாமை;* fearlessness.

**அஞ்சி** பெ. (n.) *அஞ்சுபவன்; கோழை;* coward. *'அஞ்சி அஞ்சி வாழ்வதை விட அஞ்சாமற் சாவதே மேல்'.*

**அஞ்சிலே பிஞ்சிலே** பெ. (n.) *இளம் பருவத்தில்;* in the young age. *'அஞ்சிலே பிஞ்சிலே அடித்து வளர்க்க வேண்டும்'.*

**அஞ்சு**[1] பெ. (n.) *ஐந்து பார்க்க.*

**அஞ்சு**[2] பெ. (n.) *அச்சம்;* fear. *'அஞ்சு வதற்கு அஞ்ச வேண்டும்'.*

**அஞ்சுகொம்பு** பெ. (n.) *ஐந்து கொம்பு பார்க்க. 'அஞ்சுகொம்பும் அற்ற பின்னரும் ஆணவம் அடங்க வில்லை'.*

**அஞ்சுதல்** வி. (v.) *வெருவுதல்;* to fear.

**அட்டக்கரி** பெ. (n.) *மிகக்கருப்பு;* jet-black. *'அவள் அட்டக்கரிதான் என்றாலும் அழகிய முகம்'.*

**அட்டக்கறுப்பு** பெ. (n.) *மிக்க கருப்பு;* jet black. *'பெண் அட்டக்கருப்பு'.*

**அட்டகோணல்** பெ. (n.) *ஒழுங்கற்ற அமைவு;* not in regular shape. *'பொது*

*இடத்தில் ஒழுங்காய் இல்லாமல் அட்ட கோணலாய் அமர்ந்திருக் கிறான்'.*

**அட்டங்கால்** பெ. (n.) *அட்டணைக்கால் பார்க்க.*

**அட்டணங்கால்** பெ. (n.) *கால்களை ஒன்றின் மேல் ஒன்றாகக் குறுக்காக வைத்து உட்கார்ந்திருக்கும் நிலை; சப்பணம் போடுதல்;* manner of sitting with one leg thrown over the other.

**அட்டணைக்கால்** பெ. (n.) *இருக்கையில் அமர்கையில் கால்மேல் குறுக்காக இடுங்கால்;* one leg placed over the other in sitting, cross legged.

**அட்டலங்காய் புட்டலங்காய்** பெ. (n.) *சிறுவர் விளையாட்டு;* children's game.

**அட்டவணை** பெ. (n.) *1. பொருட்பட்டி;* index. *'நூலின் தலைப்பை அட்ட வணையிட வேண்டும்'.* 2. *பொருட் குறிப்பேடு;* ledger. *'இன்றைய வரவு செலவுகளை அட்டவணைப் போடு'.* 3. *பதிவேடு;* register. *'இன்றைய மடல்களை அட்டவணையில் எழுது'.* 4. *பேரேடு;* catalogue. *'நூல் அட்டவணையின் துணையோடு நமக்குத் தேவையான நூலை எளிதில் எடுத்துக் கொள்ளலாம்'.* 5. *பாட வேளை;*period. *'அட்டவணையின் படி இன்று எனக்கு வகுப்பில்லை'.* 6. *வருகை, புறப்பாடு குறித்த அறிவிக்கை;* time table. *'தொடரி களின் கால அட்டவணையில் மாற்றம் செய்துள்ளனர்'.*

**அட்டவணைக் கணக்கன்** பெ. (n.) *பேரெடெழுதுங் கணக்கன்;* accountant, ledger keeper. '

**அட்டவணைக்காரன்** பெ. (n.) *அட்ட வணைக் கணக்கன் பார்க்க.*

**அட்டவணைச்சாலை** பெ. (n.) *கணக்கு வேலை பார்க்குமிடம்;* office of accountants.

**அட்டவணைப்பிள்ளை** பெ. (n.) *அட்டவணைக் கணக்கன் பார்க்க.*

**அட்டாலை** பெ. (n.) *1. மேல்வீடு;* apartment on an upper storey. 2. *காவற் கோபுரம்;* watch-tower. *'காட்டு விலங்குகளின் நடமாட்டத்தை அட்டாலையின் மேலிருந்து கண் காணிக்கின்றனர்'.* 3. *காவற் பரண்;* raised platform. *'விளை நிலத்தில் அட்டாலை அமைத்துக் காவல் செய்ய வேண்டும்'.*

**அட்டாலை மண்டபம்** பெ. (n.) *மேல் வீடாகக் கட்டப்பட்ட மண்டபம்;* big hall forming the upper storey of a mansion.

**அட்டாளகம்** பெ. (n.) *மேல் மாடி;* upper storey. *'அந்தக் குடியிருப்பின் அட்டாளகத்தில் குடியிருக்கிறேன்'.*

**அட்டிகை** பெ. (n.) *கழுத்தணி வகை;* closely fitting necklace. *'வட்டிக்குப் பணம் வாங்கி அட்டிகைச் செய்தவள் அட்டிகையை விற்று வட்டிப் பணம் கட்டினாளாம் (பழ.)'.*

**அட்டில்** பெ. (n.) *1. மடைப்பள்ளி;* temple kitchen. 2. *சமையலறை;* kitchen. 3. *வேள்விக்கூடம்;* place for performing sacrificial ceremonies.

**அட்டிற்சாலை** பெ. (n.) *சமையற்கூடம்;* kitchen.

**அட்டுதல்** பெ. (n.) *ஒட்டுதல்;* to join. *'ஒருவரை அட்டிப் பிழைப்பதும் ஒரு பிழைப்பா? (பழ.)'.*

**அட்டூழியம்** பெ. (n.) *1. கொடுந்தீம்பு;* atrocity. *'எல்லைப் பகுதியில் அயல் நாட்டுப் படையினரின் அட்டூழியத்திற்கு அளவேயில்லை'.* 2. *சேட்டை;* mischief. *'இவளின் அட்டூழியத்தை எப்படிக் கட்டுப்படுத்துவது என்றே தெரியவில்லை'.*

**அட்டை¹** பெ. (n.) *புழுப்போன்ற ஊரூயிரி;* leech. *'வட்டிக்காரன் அருடையைப் போல் உறிஞ்சு கிறான்'.*

**அட்டை²** பெ. (n.) *1. தடித்த தாளட்டை;* card board. *2. நூலின் கட்டட அட்டை;* bound book cover. *'பிள்ளைகளின் புத்தகங்களுக்கு அட்டை போட வேண்டும்'. 3. செருப்பின் தோலட்டை;* layer of the sole of a shoe.

**அட்டைக்கடி** பெ. (n.) *அட்டைப் பூச்சி யினாற் கடிக்கப்படுதல்;* leech bite.

**அட்டைக்கடி மருத்துவம்** பெ. (n.) *நோயரின் உடலிலுள்ள கெட்ட குருதியை அட்டைப் பூச்சியை விட்டு உறிஞ்சி வெளியேற்றி குணப் படுத்துதல்;* the art of healing by draining impure blood by leech bite; leech - craft.

**அட்டைக்குப்பி** பெ. (n.) *மருத்துவத் திற்கான அட்டைப் பூச்சியை வைத்து வளர்க்கும் குப்பி;* glass tube for keeping leeches meant for curative purposes.

**அட்டைக்குழி** பெ. (n.) *அட்டைப் பூச்சியுள்ள கிடங்கு;* ditch of leeches.

**அட்டைப் பிசின்** பெ. (n.) *அட்டையைப் போல் ஒட்டிக்கொள்ளும் பிசின்;* a kind of grees which would stick like a leech.

**அட்டைப்பூச்சி** பெ. (n.) *மாந்தர்கள் அல்லது விலங்குகளின் உடல் மீது ஒட்டி குருதியை உறிஞ்சும், ஈர நிலத்தில் வாழும் உயிரினம்;* leech.

**அட** இடை. (int.) *1. துயரம், இரக்கம், வியப்பு, வெறுப்பு முதலியவற்றை யுணர்த்தும் இடைச்சொல்;* exclamation of regret, pity, surprise or wonder dislike etc., *'(துயரம்) அட, இறந்து விட்டாரா'. '(இரக்கம்) அட, காலங் கடந்து பிறந்த பிள்ளை இப்படி உடற் குறையோடு பிறந்துள்ளதே'. '(வியப்பு) அட, அதற்குள் ஒரு மடலத்தை முடித்து விட்டாயா'. '(வெறுப்பு) அட, என்ன வாழ்க்கை இது'. 2. விளியிடைச் சொல்;* vocative particle. *'அட தம்பி, நான் சொன்னதைச் செய்'.*

**அடக்கச் சடங்கு** பெ. (n.) *பிணத்தை அடக்கம் செய்யும் வினை;* burial.

**அடக்கச் செலவு** பெ. (n.) *1. அடக்க வினைக்குச் செய்யும் செலவு;* burial expenses. *2. அடக்கச் சடங்கு பார்க்க.*

**அடக்கம்** பெ. (n.) *1. அமைதி;* calmness. *'அறிவுக்கு வித்து'. 2. ஆரவார மின்மை;* unostentatious. *3. பிறர் செய்தியில் தலையிடாமை;* non interference. *4. பணிவான ஒழுக்கம்;* humility. *5. பணிவு;* submission. *6. தன்னடக்கம்;* self control. *7. பொறுமை;* patience. *8. ஐம்பொறி யடக்கம்;* subjugation of the five senses. *9. மூச்சடக்கம்;* suppersion of breath. *10. உயிரொடுங்கியிருக்கை;* subdued state of the animating powers, before death. *11. உடற்புதைப்பு;* burial. *12. சுருக்குகை;* contraction as a tortoise. *13. கமுக்கம்;* secret. *14. செறிந்திருக்கை;* compactness. *'எல்லாப் புத்தகங் களையும் பெட்டிக்குள் அடக்கமாக வை'. 15. உள்ளடங்கிய பொருள்;* contents as of a box, enclosures as of a letter. *16. செலவோடு சேர்ந்த மொத்த விலை;* cost price including expenses. *17. மொத்தச் செலவு;* total expenditure. *18. கருத்து;* gist. *19. புதைபொருள்;* treasure.

**அடக்கம் செய்தல்** வி. (v.) *பிணத்தைப் புதைத்தல்;* to burry the corpse.

**அடக்கம்பண்ணுதல்** வி. (v.) *அடக்கம் செய்தல் பார்க்க.*

**அடக்கமாடுதல்** வி. (v.) *1. பள்ளி (சமாதி) புகல்;* to enter into *samadhi* voluntarily. *2. ஒடுக்கமாதல்;* to become modest.

*3. சுருங்குதல்;* to shrink. *4. மூச் சொடுக்கல்;* to control the breath.

**அடக்கவிலை** பெ. (n.) *ஊதிய (இலாப)ங் கருதாது செய்த செலவின் அளவாகக் குறிக்கப்பட்ட விலை;* actual cost price.

**அடக்கவிலைப் பதிப்பு** பெ. (n.) *ஊதிய (இலாப)ங் கருதாது செலவின் அளவாக விலை குறிக்கப்பட்ட பதிப்பு;* cost price edition.

**அடக்கியொடுக்கி** பெ. (n.) *1. முற்றுங் கீழ்ப்படுத்தி;* having subjucated completely. *2. வேரறக் களைந்து;* having eradicated.

**அடக்குதல்** வி. (v.) *கீழ்ப்படுத்துதல், அடங்கச் செய்தல்;* to bring under control.

**அடக்குமுறை** பெ. (n.) *எதிர்ப்பு, போராட்டம் முதலியவற்றை ஒடுக்க, அதிகாரத்தில் உள்ளவர்கள் மேற் கொள்ளும் கடும் நடவடிக்கை;* repressive measures; repression.

**அடக்குமுறைச் சட்டம்** பெ. (n.) *கண்டித்தடக்கும் சட்டம்;* repressive legislation. *'அடக்குமுறைச்சட்டத்தை எதிர்க்கட்சிகள் வன்மையாகக் கண்டிக்கின்றன.*

**அடக்குமுறையாட்சி** பெ. (n.) *கண்டித் தடக்கும் அரசாட்சி;* repressive government. *'அடக்கு முறை ஆட்சியை அகற்றியே தீருவோம் என்று மக்கள் கிளர்ந்தெழுந்தனர்'.*

**அடகு**[1] பெ. (n.) *இலைக்கறி;* edible green.

**அடகு**[2] பெ. (n.) *கொதுவை;* pledge, pawn of personal property. *'நகையை அடகு வைத்துப் படிக்க வைத்தேன்'.*

**அடகுச்சீட்டு** பெ. (n.) *நகை, ஏனம் (பாத்திரம்) போன்ற பொருளை ஈடாகக் கொடுத்துப் பணம் வாங்கும் போது கொடுக்கப்படும் ஒப்புகைச் சீட்டு;* the acknowledgement given by pawn brokers.

**அடகுபிடித்தல்** வி. (v.) *கடனாகப் பணங் கொடுத்து அதற்கீடாக விலை பெறும் பொருள்களை வாங்கி வைத்தல்;* to do pawn broking.

**அடங்க** பெ. (n.) *1. உள்ளாக;* to be contained within. *2. முழுவதும்;* wholy, entirely.

**அடங்கல்** பெ. (n.) *1. கீழ்ப்படிகை;* obeying. *2. அமைகை;* comprised. *3. உள்ளிடம்;* being possible to be stuffed into. *4. செய்யத்தகுகை;* being fit or worthy to act. *5. சாகுபடி நோட்டம்;* examination of the cultivation of village lands. *6. சாகுபடிக் கணக்கு;* detailed village account showing lands cultivated and the nature of the crops. *7. அடங்கல் வேலை;* contract work.

**அடங்கலாக** வி.அ (adv.) *உள்ளடக்கி, சேர்த்து;* including; inclusive of. *'பொதுவாகக் கிழங்குகளுக்கு, உருளைக்கிழங்கு அடங்கலாக வரிச் சலுகை வேண்டும் என்று கோரி னார்கள்'.*

**அடங்காப்பிடாரி** பெ. (n.) *எவர்க்கும் அடங்காத குணமுடைய பெண் அல்லது சிறுவன்;* termagant, shrew. *'அடங்காப் பிடாரியைக் கொண்ட வனும் கெட்டான், அறுகங் காட்டை உழுதவனுங் கெட்டான் (பழ.)'.*

**அடங்காமாரி** பெ. (n.) *அடங்காப் பிடாரி பார்க்க.*

**அடங்குதல்** வி. (v.) *கீழ்ப்படிதல்;* to obey.

**அடசுதல்** வி. (v.) *1. செறிதல்;* to be crowded. *2. சிறிது ஒதுங்குதல்;* to move aside. *'அடசி நில்'.*

**அடடா** இடை. (int.) *1. வியப்புக்குறிப்பு;* an expression of surprise. *'அடடா, எவ்வளவு இனிமையாகப் பாடு கிறார்'. 2. இகழ்ச்சிக் குறிப்பு;* an expression of contempt. *'அடடா!'.*

*3. வருந்தற் குறிப்பு;* an expression of grief. *'அடடா!' மோசம் போனேன்.*

**அடர்த்தி** பெ. (n.) *செறிவு, நெருக்கம்;* denseness, density, thickness.

**அடமானம்** பெ. (n.) *நிலம், வீடு முதலிய சொத்துக்களை ஈடாக வைத்துப் பணம் பெறுதல்;* mortage, pledge.

**அடாப்பிடி** பெ. (n.) *ஒட்டாரம்;* adament. *'அவள் அடாப்பிடியாய் வாங்கி விடுவாள்'.*

**அடாவடி** பெ. (n.) *கொடுஞ்செயல்;* outrage, violence. *'அவன் ஒரு அடாவடிப் பேர்வழி'.*

**அடி** வி. (v.) *1.கையால் அல்லது கழியால் அறைதல், ஒன்றை மற்றொன்றின் மீது வலுவாக அறைதல்;* beat, hit with the hand or with a cane etc., *'புடவையைக் கல் மீது அடித்து துவைத்தாள்'. 2. இலக்கில் படும்படி எறிதல்;* hit with a stone. *3. ஆணி முதலியவற்றைச் சுவரில் உட் செலுத்த அறைதல்;* drive a nail etc., *4.தட்டி ஒலி எழுப்புதல்;* make a sound by striking; ring. *'கோவில் மணியைக் கணகணவென்று அடித்தான்'. 5. நேரங்காட்டியில் மணி ஒலித்தல்;* bell ring of a clock. *6. பறவைகள் சிறகை ஓசையுடன் அசைத்தல்;* flap wings. *7. வெயில், குளிர் முதலியன வலுவாக உறைத்தல்;* of heat, chillness, etc., be felt sharply.

**அடிக்கடி** வி.அ. (adv.) *பலமுறை;* frequently, very often, repeatedly, time and again.

**அடிக்கல்** பெ. (n.) *கட்டுமானப் பணியின் துவக்கமாக நடத்தும் சடங்கில் வைக்கப்படும் கல்;* foundation stone for a construction.

**அடிக்கொருதரம்** வி.அ. (adv.) *சிறிது நேரத்திற்கு ஒரு முறை;* very often, time and again. *'இடது கை விரலால் அடிக் கொரு தரம் மூக்குக் கண்ணாடியைத் தள்ளிவிட்டுக் கொண்டார்'.*

**அடிக்கோடு** பெ. (n.) *வலியுறுத்திக் காட்டுவதற்காகச் சொல், தொடர் முதலியவற்றின்கீழ் போடப்படும் கோடு;* line drawn under words, phrase etc., for emphasis and for future reference.

**அடிகள்** பெ. (n.) *துறவறம் மேற் கொண்டவர்களை, மதிப்பு மிக்க வர்களை மதிப்புடன் குறிக்கப் பயன்படுத்தும் சொல்;* respectful term of address for a monk or for s.o. of similar status. *'தவத்திரு அடிகள்' (மறைமலையடிகள்).*

**அடிசக்கை** இடை. (int.) *பாராட்டை அல்லது வியப்பைத் தெரிவிக்கும் போது முதலில் கூறும் சொல்;* particle used for expressing one's appreciation or surprise. *'அடிசக்கை! கணக்கில் நூற்றுக்கு நூறு வாங்கியிருக்கிறாயா!'.*

**அடிப்படை** பெ. (n.) *ஒன்றுக்கு மிக அடிப்படையானது;* basis. *'மொழி அடிப்படையில் மாநிலங்களை உருவாக்கினார்கள்'.*

**அடிபடுதல்** வி. (v.) *1. செவிக் கெட்டுதல்;* to reach one's ears as a rumour. *'இந்த செய்தி ஊடகங்களில் அடிக்கடி அடிபடுகிறது'. 2. அடிக்கப்படுதல்;* to be beaten.

**அடிபணிதல்** வி. (v.) *தண்டனிடுதல்;* to fall at one's feet, worship.

**அடிபிடி** பெ. (n.) *சண்டை;* scuffle. *'இரு கட்சியினருக்கும் அடிபிடி நடக்கிறது'.*

**அடிபிடிசண்டை** பெ. (n.) *ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு செய்யுஞ் சண்டை;* quarrel in which both parties exchange blows.

**அடிபிடித்தல்** வி. (v.) *அடுப்பிலேற்றி சமைக்கும்பொழுது உணவு ஏனத்தில் பற்றிக் கொள்வது;* to stick to the bottom

of the cooking vessel and become scorched.

**அடிபோடுதல்** வி. (v.) *ஒருவரிடம் உதவி பெறுதற்கு ஏற்ற செய்திகளை முன்னடிப்படையாகச் சொல்லி வைத்தல்;* to say or do things as preparing the ground for getting favours from somebody.

**அடிமட்டம்** பெ. (n.) *1. பல நிலைகளில் உள்ள கீழ்நிலை;* lower level. *2. ஒரு அடி நீளமுள்ள அளவுகோல்;* measuring scale one foot in length.

**அடிமாட்டு விலை** பெ. (n.) *(பொருள்களின் உண்மையான மதிப்புக்குப் பொருந்தாத) மிகக் குறைந்த விலை;* unreasonably low price; rock bottom price.

**அடிமாடு** பெ. (n.) *(உழுதல், வண்டி இழுத்தல் போன்ற) வேலைகளைச் செய்ய முடியாத இறைச்சிக்காகக் கொல்லப்படும் கிழட்டு மாடு;* old unserviceable cattle meant for the slaughter house.

**அடிமுட்டாள்** பெ. (n.) *முழு மூடன்;* utter fool.

**அடிமேல் அடிவிழுதல்** வி. (v.) *மேலும் மேலும் துன்பப்படுதல்;* a striking something one after another.

**அடிமை** பெ. (n.) *1. தன்னுரிமை இழந்து, பிறருக்கு உடமையாக இருக்கும் பணியாள்;* slave. *2. அளவுக்கு அதிகமாக ஒன்றில் ஈடுபட்டு முற்றிலும் தன்னை இழந்துவிடும் நிலை;* the state of being an addict or slave to something undesirable.

**அடிமைத்தனம்** பெ. (n.) *பிறநாடு, இனம் போன்றவற்றிடம் அடிமைப்பட்டிருக்கும் நிலை;* slavery.

**அடியவர்** பெ. (n.) *இறை வழிபாடு செய்வதைத் தொண்டாகக் கொண்டவர்;* religious follower, devotee.

**அடியவன்** பெ. (n.) *1. அடிமை;* slave. *2. தொண்டன்;* devotee.

**அடியாள்** பெ. (n.) *அடித்து மிரட்டுதல், கொலை புரிதல் போன்றவற்றைச் செய்வதற்கு கூலிக்கு அமர்த்தப்படும் ஆள்;* hireling, henchman.

**அடியுரம்** பெ. (n.) *1. முன்பு இட்ட எரு;* manure put in previous seasons. *2. மரத்தைச் சுற்றியிடும் எரு;* manure added to the soil around a tree.

**அடியெடுத்தல்** வி. (v.) *அடி வைத்தல்;* to step. *'குழந்தை அடியெடுத்து வைத்து நடக்கிறான்'.*

**அடியோடு** வி.எ. (inf.) *வேருடன், முழுவதும்;* radically, completely.

**அடிவயிறு** பெ. (n.) *கீழ்வயிறு;* lower part of the abdomen; lower belly.

**அடிவருடி** பெ. (n.) *1. கால்பிடிப்பவ-ன்-ள்-ர்;* massager. *2. தான் எண்ணியது எய்தப் பிறரைப் போற்றுபவர்;* bootlicker.

**அடிவாரம்** பெ. (n.) *மலையினடி;* foot of a hill.

**அடிவானம்** பெ. (n.) *தொலைவிலிருந்து பார்க்கும்போது நிலத்தை வானம் தொடுவதுபோல் நீண்ட கோடாகத் தெரியுமிடம்; தொடுவானம்;* horizon.

**அடுக்கடுக்காய்** வி.எ. (inf.) *கட்டுக் கட்டாய், வரிசை வரிசையாய்;* in piles, in tiers.

**அடுக்களை** பெ. (n.) *சமையலறை;* kitchen.

**அடுக்குச் சட்டி** பெ. (n.) *அடுக்கு ஏனம்;* tier of pots of a particular size and shape.

**அடுக்குப்பானை** பெ. (n.) *பல் பொருள்கள் போட்டு வைப்பதற்கு ஒன்றன் மேலொன்றாயடுக்கிய மட்பானைகள்;* big earthern pots piled one over another and used as receptacles.

**அடுக்குமாடி** பெ. (n.) *பல நிலையுள்ள கட்டடம் அல்லது வீடு;* multistoried building or house.

**அடுத்தடுத்து** வி.எ. (inf.) *1. ஒன்றன்பின் ஒன்றாக;* one after another. *2. அடிக்கடி;* often. *'அடுத்தடுத்துச் சொன்னால் தொடுத்த காரியம் முடியும் (பழ.)'.*

**அடுத்து** வி.எ. (int.) *மறு நிகழ்ச்சியாக;* as the next item, next.

**அடுத்துக் கெடுத்தல்** வி. (v.) *நட்புப் போற் சேர்ந்து கேடு செய்தல்;* to ruin a person by associating with him to kill by treachery.

**அடுப்பங்கரை** பெ. (n.) *அடுக்களை பார்க்க.*

**அடுப்புக்கரி** பெ. (n.) *அடுப்பிலெரித்த கரி;* dead coals from an oven.

**அடுப்புந்துடுப்புமாய்** வி.எ. (n.) *சமையல் வேலை செய்து கொண்டு;* engaged in cooking.

**அடுப்புப்பற்றவைத்தல்** வி. (v.) *அடுப்பில் நெருப்பு மூட்டுதல்;* to kindle fire in the oven.

**அடுப்பூதுதல்** வி. (v.) *அடுப்பிலுள்ள விறகு எரியாதபோது ஊதாங்குழல் வாயிலாகக் காற்றூதி எரிய வைத்தல்;* to blow and kindle the fire in the oven. *'அடுப்பூதும் பெண்ணிற்குப் படிப்பதெற்கு?'.*

**அடே** இ.சொ. (int.) *1. வியப்பைத் தெரிவிப்பதற்கு சொற்றொடரின் தொடக்கத்தில் பயன்படுத்தப்படும் இடைச்சொல்;* particle used at the begining of a sentence to express surprise. *2. உறவின் நெருக்கத்தை வெளிப் படுத்த அல்லது மதிப்பில்லாத ஒருவரை அழைக்கப் பயன்படுத்தும் இடைச் சொல்;* particle used for addressing a man or a boy in an informal manner or disrespectfully. *'அடே விரைந்து வாடா பாட்டி கூப்பிடு றாங்க'.*

**அடேயப்பா** இ.சொ. (int.) *வியப்பை வெளிப்படுத்துவதற்கு சொற் றொடரின் தொடக்கத்தில் பயன் படுத்தும் இடைச்சொல்;* particle used when one finds something impressive. *'அடேயப்பா உங்கள் அறையில் எத்தனை புத்தகங்கள்'.*

**அடைக்கலம்** பெ. (n.) *புகலிடம்;* person who gives shelter.

**அடைக்கோழி** பெ. (n.) *அடைகாக்குங் கோழி;* incubating hen.

**அடைகட்டுதல்** வி. (v.) *1. நீர்ப் பெருக்கைத் தடுக்க அணைகட்டுதல்;* to construct a dam. *2. வண்டி நகராதபடி சக்கரத்திற்கு முன் தடை வைத்தல்;* to place a bar of wood or stone in front of a wheel of carriage to prevent it from moving. *3. தேர் வண்டிகளின் சக்கரத்தைத் தூக்க அடியில் முட்டுக் கொடுத்தல்;* to insert a piece of wood under a car or cart and thus lift the wheel out of a rut.

**அடைகாத்தல்** வி. (v.) *கோழி அவயங் காத்தல்;* to incubate as a hen.

**அடைகிடத்தல்** வி. (v.) *1. கோழி அடை காத்தல்;* to incubate as a hen. *2. தங்கியிருத்தல்;* to abide, stay permanently.

**அடைசல்** பெ. (n.) *பொருள் நெருக்கம்;* crowded condition, density.

**அடைத்தல்** வி. (v.) *1. பிடித்துவைத்தல்;* put in a prison etc., confine. *'போராட்ட வீரர்களை பிடித்து சிறையில் அடைத் தார்கள்'. 2. நிரப்புதல், திணித்தல்;* fillup a container with liquid, stuff a bag, etc., with something . *3. கதவு, சாளரம் முதலியவற்றைச் சாத்துதல்;* shut the door, close the window. *'சாரல் அடிக்கிறது கதவை அடை'.*

**அடைதல்** வி. (v.) *1. பெறுதல்;* attain, get. *2. ஓர் இடம் சென்று சேர்தல்;* reach a destination. *3. குறிப்பிட்ட அகவையை எட்டுதல்;* reach. *4. தூசி, அழுக்கு சேர்தல்;* (of dust, dirt) collect. *'வீட்டில் தூசி அடைகிறது'. 5. பறவைகள், பூச்சிகள் போன்றவை ஓர் இடத்தில் தங்குதல்;* settle (of birds) rest (of bugs etc.,) settle thickly on something. *'தோட்டத்தில் புதர் இருந்தால் பாம்பு அடையும்'. 6. கடன் மற்றும் நிலுவை தீர்தல்;* of debits, arrears be cleared, be paid up.

**அடைந்துகிடத்தல்** வி. (v.) *வெளியே செல்லாது வெளியாரின் பார்வையில் படாமல் எப்போதும் ஒரே இடத்தில் இருத்தல்;* stay confined to a place.

**அடைப்பிரதமன்** பெ. (n.) *கன்னலமுது வகை;* a kind of porridge.

**அடைப்பு** பெ. (n.) *1. மூடுகை;* shutting, closing, stopping. *2. வேலி;* fence, enclosure. *3. தடை;* obstruction. *4. அடைக்கும் மூடி;* plug, stopper, cork. *5. படற்கதவு;* door or small gate of braided palm.

**அடைப்புக்குறி** பெ. (n.) *ஒரு வாக்கியத்தில் கூடுதல் தரவுகளை அல்லது கணிதத்தில் சமன்பாடு போன்றவற்றின் பகுதியாக அமைவதைக் குறிக்கப் பயன்படும் பிறை வடிவ அல்லது பகர வடிவக் குறியீடு;* brackets.

**அடைமழை** பெ. (n.) *விடாமழை, அடைத்துப் பெய்யும் மழை;* continuous rain from an overcast sky. *'அடைமழையில் நாற்று நட்டால் ஆற்றோடு போகும் (பழ.)'.*

**அடைமானம்** பெ. (n.) *அடமானம் பார்க்க.*

**அடைமொழி** பெ. (n.) *சிறப்பு கருதி ஒன்றுக்கு அல்லது ஒருவருக்கு வழங்கும் சொல் அல்லது தொடர்;* tittle, epithet. *'சிந்தனைச் சிற்பி என்னும் அடைமொழி இவருக்குப் பொருந்தும்'.*

**அடையாள அட்டை** பெ. (n.) *ஒருவருடைய அடையாளத்தை உறுதிப்படுத்தும் வகையில் அவரது புகைப்படம், பெயர், முகவரி போன்றவற்றைக் கொண்ட சிறு அட்டை;* identity card.

**அடையாள அணிவகுப்பு** பெ. (n.) *இழப்புக்குட்பட்டவர் அல்லது சாட்சி சொல்பவர் குற்றவாளியை அடையாளம் காட்டுவதற்காக ஐயத்திற்கு உரியவர்களை வரிசையாக நிற்க வைத்து அடையாளம் காட்டச் செய்தல்;* Identification parade.

**அடையாளம்** பெ. (n.) *அறிகுறி;* symbol, sign.

**அடையாளம் காட்டுதல்** வி. (v.) *பிறர் அறிந்திராத ஒன்றை இனங்கண்டு பிறருக்குத் தெரியப்படுத்துதல்;* identify something or someone to others.

**அண்டக்கட்டுதல்** பெ. (n.) *1. வீங்குதல்;* to swell as on account of a boil. *2. முட்டித் தாங்க வைத்தல்;* to prop up, support.

**அண்டங்காக்கை** பெ. (n.) *மிகக் கருப்பாக இருக்கும் பெரிய காகம்;* large black jungle crow; raven.

**அண்டப்புளுகன்** பெ. (n.) *அப்பட்டமாகப் பொய் சொல்பவன்;* monstrous liar.

**அண்டப்புளுகு** பெ. (n.) *அப்பட்டமான பொய்;* bare faced lie.

**அண்டை அயல்** பெ. (n.) *அக்கம்பக்கம்;* vicinity.

**அண்டைவீடு** பெ. (n.) *அக்கம்பக்கத்து வீடுகள்;* neighbouring houses.

**அண்டிப்பிழைத்தல்** வி. (v.) *ஒருவரைச் சார்ந்து வாழ்தல்;* to live depending someone.

**அண்டுதல்** வி. (v.) *ஒருவரை அணுகுதல், நெருங்குதல், வந்து சேர்தல்;* (of illness, harm, etc.,) come near; get at. *'தீமை'*.

**அண்ணி** பெ. (n.) *அண்ணனுடைய மனைவி;* wife of one's elder brother.

**அணுகுமுறை** பெ. (n.) *ஒன்றைச் செய்ய அல்லது ஒரு சிக்கலைத் தீர்ப்பதற்கு மேற்கொள்ளும் வழிமுறை;* approach.

**அத்தனை** பெ. (n.) *குறிப்பிட்ட அளவு;* that much; all that.

**அத்துப்படி** பெ. (n.) *குறிப்பிட்ட செய்தியைப் பற்றி எல்லாம் அறிந்த நிலை;* being thoroughly informed about something.

**அதட்டல்** பெ. (n.) *குரலில் வெளிப் படுத்தும் கண்டிப்பு;* something said in a sharp tone. *'ஒரு அதட்டல் போட் டால்தான் பையன் அடங்குவான்'*.

**அதிகப்படி** பெ. (n.) *அளவுக்கு அதிக மாகுதல், கூடுதல்;* surplus, more than required, too much, too long. *'அதிகப் படியான நெல்லை விற்று விடலாம்'*.

**அதிகப்படுத்தல்** வி. (v.) *ஒன்றின் அளவைக் கூட்டுதல்;* increase, raise. *'மகிழுந்து(கார்)வின் விரைவை அதிகப்படுத்தினால் மட்டுமே நாம் விரைவாய் ஊர் போய்ச் சேர முடியும்'*.

**அதிகப்படுதல்** வி. (v.) *குறிப்பிட்ட அளவை விட மிகுதல்; மேற்படுதல்;* (usually in the negative) be more than (the limit specified). *'வீட்டுச் செலவு பத்தாயிரம் ரூபாய்க்கு அதிகப்படாமல் பார்த்துக் கொள்'*.

**அதிகபட்சம்** பெ. (n.) *உயர்ந்த அளவு;* maximum, upper limit of something.

**அதிகம்** பெ. (n.) *கூடுதல், மிகுதி;* that which is more.

**அதிர்ச்சி** பெ. (n.) *எதிர்பாராத நிகழ்ச்சி யால் மனத்தில் ஏற்படும் மனக் கலக்கம்;* (Phychological) shock. *'சாவுச் செய்தி கேட்டதும் அதிர்ச்சியில் உறைந்து நின்றான்'*.

**அப்பட்டமாக** வி.அ. (adv.) *ஒளிவு மறைவில்லாமல், வெளிப்படை யாக;* unreservedly, blatantly, downright.

**அப்படி** வி.அ. (adv.) *1. ஏற்கனவே குறிப்பிட்ட வகையில் அல்லது முறையில்; அவ்வாறு;* in the way or manner stated like that. *2. அந்தப் பக்கம், அங்கு;* (of direction) there. *'அப்படிப்போய் உட்கார்ந்து பேசலாம்'*.

**அப்படிஇப்படி** வி.அ. (adv.) *1. திட்ட வட்டமாகக் கூற முடியாதபடி;* uncertain, vague. 2. *எல்லா வகையிலும் சரியாக இருக்கும் என்று சொல்ல இயலாத நிலை;* in a way that is not uniformly good. *'குடும்பம் என்றால் அப்படி இப்படி என்று இருக்கத்தான் செய்யும்'*.

**அப்பப்பா** இ.சொ. (int.) *ஒன்றின் மிகுதியை உணர்ச்சியுடன் வெளிப்படுத்தப் பயன்படும் இடைச்சொல்;* particle used when something.

**அப்பாடா** பெ. (n.) *மன அமைதியை உணர்த்தும் சொல்;* expression of mental peace and relaxation.

**அப்பாடி** இ.சொ. (int.) *அப்பாடா பார்க்க.*

**அப்பாவி** பெ. (n.) *1. கள்ளங்கவடு மில்லாத, தற்காத்துக் கொள்ளவும், சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றிக் கொள்ளவும், தெரியாத தன்மை;* native person; resourceless person. *2. குற்றம் செய்யாமலே குற்றத்துடன் தொடர்பு படுத்தப்படும் ஆள்;* innocent.

**அப்பாபிள்ளை** பெ. (n.) *அப்பாவின் (செல்லத்துக்குரிய) அன்புக்குரிய பிள்ளை;* daddy's pet.

**அப்பால்** வி.அ. (adv.) *இருக்கும் இடத்திலிருந்து வேறு புறமாக;* away (from where one is).

**அம்பலம்** பெ. (n.) *ஊர்ப் பொது இடம்;* a common place in the village.

**அம்பலம் ஏறுதல்** வி. (v.) *கமுக்கமாக இருந்த செய்தி பலரும் அறியும்படி வெளிப்படுதல்;* (of a secret or of something discreditable) be disclosed; be exposed. *'அவர் செய்த தவறெல்லாம் கமுக்கமாக இருக்கிறதென்று நினைத் திருக்கிறார்; என்றாவது ஒரு நாள் அம்பலம் ஏறத்தான் போகிறது'.*

**அம்மணம்** பெ. (n.) *உடை உடுத்தாத நிலை;* nakedness, nudity.

**அம்மணி** பெ. (n.) *பெண்களை மதிப்புடன் அழைக்கப் பயன்படும் சொல்;* a respectful term of address to women.

**அம்மாடி** இ.சொ. (int.) *அப்பாடா பார்க்க.*

**அம்மாபிள்ளை** பெ. (n.) *அம்மாவின் (செல்லத்துக்குரிய) அன்புக்குரிய பிள்ளை;* mother's pet.

**அம்மாள்** பெ. (n.) *அகவையான பெண்மணியை மதிப்பாகக் குறிப் பிடும் சொல்;* term of respect to refer to an elderly woman.

**அமர்த்துதல்** வி. (v.) *1. ஒன்றை வாடகைக்கு ஏற்பாடு செய்தல்;* hire, rent, engage. 2. *பணியை முடித்துத் தர அல்லது ஒருவருக்கு உதவியாக இருக்க, மற்றொருவரை அமர்த்துதல்;* engage a person to do a job or to be of some assistance; post someone employ (a person for a job). *3. ஆட்சியில், பொறுப்பிலிருக்கும் படிச் செய்தல்;* set (a person or group in authority).

**அமர்வு**[1] பெ. (n.) *கூட்டம், மாநாடு போன்றவற்றில் குறிப்பிட்ட நிகழ்வுக் காக ஒதுக்கப்பட்ட நேரம்;* session (at a conference meeting etc.,). *'இரண்டாவது அமர்வில்தான் கட்டுரை வாசிப்பு இருக்கும்'.*

**அமர்வு**[2] பெ. (n.) *நயன்மை (நீதி)மன்றம் கொலை, கொள்ளை போன்ற கடுமையான குற்றங்களை ஆராய அரசால் அமர்த்தப் பயன்படும் மாவட்ட அளவிலான (நீதிபதியின்) நயனகரின் கீழ் செயல்படவும் நயன் (நீதி) மன்றம்;* district criminal court; (in India) sessions court.

**அமளி** பெ. (n.) *(கூச்சல் நிறைந்த) குழப்பம்;* tumult, uproar.

**அமிழ்த்துதல்** வி. (v.) *நீர், சேறு முதலியவற்றில் மூழ்கச் செய்தல்;* cause to go down under the water etc., dip, sink.

**அமிழ்தல்** வி. (n.) *மேற்பரப்பிலிருந்து கீழ் நோக்கிச் செல்லுதல், மூழ்குதல்;* go under (water etc.,) sink.

**அமைச்சகம்** பெ. (n.) *ஓர் அமைச்சரின் பொறுப்பில் இருக்கும் அரசு நிருவாகத்துறை;* Ministry. *'பாதுகாப்பு அமைச்சகம்'.*

**அமைச்சர்** பெ. (n.) *அரசின் குறிப்பிட்ட துறையின் பொறுப்பை ஏற்று கண்காணிக்க அமர்த்தப்பட்டவர்;* Minister.

**அமைச்சரவை** பெ. (n.) *அரசுத் துறைகளை நிர்வகிக்கும் அமைச்சர்கள் அடங்கிய குழு;* council of ministers, cabinet.

**அமைத்தல்** வி. (v.) *1. உருவாக்குதல், ஏற்படுத்துதல்;* make, establish, set up. *'சென்னை புறநகர்ப் பகுதியில் குடியிருப்புகள் அமைக்கப்பட்டு வருகின்றன'. 2. ஆட்சி, நிருவாகக் குழு முதலியவற்றைத் தோற்று வித்தல், ஏற்படுத்துதல்;* form a government, established a committee. *'தொழிலாளர்கள் சங்கம் அமைத்துப் போராடினார்கள்'. 3. ஒன்றை*

இணைத்தல், பொருத்துதல்; build in, connect, install. *'இந்த எந்திரத்தில் அமைக்கப்பட்டுள்ள மின் இணைப்புகளின் வரைபடம்'.*

**அமைதல்** வி. (v.) *1. நிறுவப்படுதல், உருவாக்கப்படுதல்;* form, be established. *2. குறிப்பிட்ட முறையில் வடிவத்தில் அல்லது தன்மையில் இருத்தல்;* be (with the stated quality). *'தோடி பண்ணில் அமைந்த பாடல்'.* *3.* தேடும் ஒன்று கிடைத்தல்; come to be had. *'என் பெண்ணுக்கு மாப்பிள்ளை அமைந்துவிட்டது'.*

**அமைதி** பெ. (n.) *1.* ஒலி இல்லாத நிலை; silence. *2. மனத்தில், முகத்தில் குழப்பமற்ற நிலை;* undisturbed mind, peace. *3.* தொல்லையின்மை; absence of trouble. *'அவருக்கு அமைதியான வாழ்க்கை அமைந்தது'. 4.* போர், *கலகம் இல்லாத நிலை;* peace calmness. *5. அடக்கம்;* modesty quietness. *6. (கலையில்)* இசைவு; harmony. *'மரபுக் கவிதையின் யாப்பில் காணப்படும் ஓசை அமைதி'.* 7. நெறிக்கு மாறாக இருந்தாலும் விலக்காக ஏற்கத் *தகுந்தது;* in grammar through anomalous accepted as a permisible deviation from rules. *'வழுவமைதி'.*

**அமைதிப்படுத்துதல்** வி. (v.) *1.* ஒலி *யில்லாமல்* இருக்குமாறு செய்தல்; pacify, calm. *2.* பதற்றம், சினம் *முதலியவற்றைத் தணித்தல்;* calm down.

**அமைப்பு** பெ. (n.) *பல்வேறு* கூறுகள் *இணைந்து நிற்பது;* structure.

**அயர்ச்சி** பெ. (n.) *1. அசதி, களைப்பு;* fatigue, tiredness. *2. மனத்தளர்ச்சி;* depression.

**அயர்வு** பெ. (n.) *அயர்ச்சி பார்க்க.*

**அயல்நாடு** பெ. (n.) வெளிநாடு; foreign country.

**அயல்பணி** பெ. (n.) *ஓர் அரசு அதிகாரி தான் சார்ந்த துறையல்லாத வேறோர் அரசுத்துறையில் குறுங் காலிகமாக (தற்காலிகம்) ஆற்றும் பணி;* Short term service by a government official in a department (or public undertaking) other than the one to which he or she was originally assigned; deputation; foreign service.

**அயலார்** பெ. (n.) வெளியூரார்; town or village other than one's own.

**அரக்கபரக்க** வி.எ. (inf.) விரைந்து விரைந்து வேலை செய்வது; hurriedly; in haste.

**அரங்கேற்றம்** பெ. (n.) *ஒரு புதிய கலைப் படைப்பைப் பார்வையாளர்களின் முன் முதல் முறையாக அளிக்கும் நிகழ்ச்சி;* premiere, debut. *'என் மகளுக்கு நாட்டிய அரங்கேற்றம் நடைபெறுகிறது'.*

**அரசல்புரசல்** வி.அ. (adv.) *அரைகுறை நிலையில் முழு* விளக்கத்துடன் இல்லாமலிருப்பது; in a way one cannot specify, vaguely.

**அரசாங்கம்** பெ. (n.) *அரசு பார்க்க.*

**அரசாட்சி** பெ. (n.) *அரசனுடைய ஆளுகை, அரசன் நடத்தும் நிருவாகம்;* rule or reign of a king.

**அரசியல்** பெ. (n.) *1. ஆட்சி, அதிகாரம் பற்றிய கோட்பாடுகளும் நடைமுறைகளும்;* politics. *2.* ஒரு *அமைப்பு, அணி போன்றவற்றில் அதிகாரத்தைக் குறிவைத்துச் செயல் படும் போக்கு;* politics (as an activity concerned wih acquisition of authority).

**அரசியல்பண்ணுதல்** வி. (v.) *தனக்கோ, தன்னைச் சார்ந்தவர்களுக்கோ அதிகாரம் கிடைப்பதற்காகச் செயல் படுதல்;* play politics.

**அரசியல்வாதி** பெ. (n.) *அரசியலில் தன்னை முழு நேரமும் ஈடுபடுத்திக் கொண்டவர்;* politician.

**அரசியலாக்குதல்** வி. (v.) *பொது நிகழ்வை தன் அரசியலில் திரித்தல்.* politicize. *'மாணவர்களிடையே நடந்த மோதலை அரசியலாக்கி வேடிக்கை பார்க்கின்றனர்.*

**அரசு** பெ. (n.) *ஒரு நாட்டை அல்லது மாநிலத்தை நிர்வகிக்கும் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்ட அமைப்பு;* Government. *2. மக்களாட்சி முறைப்படி ஒரு கட்சி நடத்தும் ஆட்சி;* rule or reigh, rule by a party in a democracy. *3. ஒரு துறையில் 'இணையற்றவர்' என்ற பொருளில் வழங்கும் பட்டம்;* one considered to be the best person in the field mentioned. *'கவியரசு'.*

**அரசுடைமை** பெ. (n.) *அரசின் உடமையாக இருப்பது;* nationalized property.

**அரசுடைமையாக்குதல்** வி. (v.) *தனியாரால் தொடங்கப்பட்ட ஒரு தொழிலை அல்லது நிறுவனத்தை அரசு தன் உரிமையாக ஆக்கிக் கொள்ளுதல்;* nationalize. *'1967ஆம் ஆண்டு பல தனியார் வங்கிகள் அரசுடமை ஆக்கப்பட்டுள்ளன'.*

**அரசுத்துறை** பெ. (n.) *அரசின் முதலீட்டில் சொந்தமாக இயங்கும் தொழில் களைக் கொண்ட துறை;* public sector.

**அரசு மரியாதை** பெ. (n.) *1. பொது வாழ்வில் சிறப்பு பெற்ற தலைவர்கள், மத்திய, மாநில அரசு விருதுகள் பெற்றவர்கள் போன்றவர்களின் இறுதிச் சடங்கின்போது, காவல் துறையினர் அணிவகுத்து, அரசு சார்பில் செலுத்தும் வணக்கம் (அஞ்சலி);* state honours. *2. மாநில முதல்வர், அமைச்சர் (பிரதமர்) போன்றவர்கள் முகாமையான நிகழ்வுகளுக்கு வருகை தரும்போது காவல்துறை அணி வகுத்துச் செலுத்தும் மரியாதை;* guard of honour.

**அரசுரிமை** பெ. (n.) *நாட்டை ஆளுகிற உரிமை;* the right to be the soverign; (in monarchy) the right of succession to the throne.

**அரசு வழக்கறிஞர்** பெ. (n.) *அரசுத் தரப்பில் வழக்கை நடத்தும் வழக்கறிஞர்;* public prosecutor (in India) Government pleader.

**அரசோச்சுதல்** வி. (v.) *அரசாளுதல்;* rule, reign.

**அரட்டுதல்** வி. (v.) *பிறரை அச்சுறுத்தும் வகையில் சத்தமாகப் பேசுதல்;* frighten.

**அரட்டை** பெ. (n.) *பொழுதுபோக்க மற்றவருடன் நேரிலோ, இணையம் மூலமோ பேசும் பேச்சு;* chat.

**அரண்** பெ. (n.) *பாதுகாப்பிற்குப் பயன்படும் மதில், தடுப்பு போன்ற அமைப்பு;* fortifications; defences. *'காடு, மலை, ஆறு போன்றவை நாட்டுக்கு இயற்கையாக அமைந்த அரண்'.*

**அரண்செய்தல்** வி. (v.) *குறிப்பிட்ட கருத்துக்கு வலு சேர்த்தல்;* strengthen (an argument, etc.,) reinforce.

**அரண்மனை** பெ. (n.) *ஆட்சி செய்யும் அரசன் அல்லது அரசி வசிக்கும் மாளிகை;* palace.

**அரணை** பெ. (n.) *பழுப்பும் கரும் பச்சையும் கலந்த நிறத்தில் பளபளப் பான உடலைக் கொண்ட பல்லி இனத்தைச் சேர்ந்த உயிரி;* skink.

**அரதப்பழசு** பெ. (n.) *நெடுங்காலமாக அல்லது தொடர்ந்து பயன்படுத்தி வந்ததால் மிகவும் பழையதாகிப் போனது;* something that is wornout owing to constant use.

**அரப்பு** பெ. (n.) *இலுப்பைக் கொட்டையை அரைத்து எண்ணெய் எடுத்த பின் எஞ்சும் பிண்ணாக்கை அவித்துக் காயவைத்து, அரைத்துப் பெறும் தூள்;* powdered oil cake of *Iluppai* that is soaked, steamed and dried.

**அரம்** பெ. (n.) *இரும்பை அராவுவதற்குப் பயன்படுத்தும் முப்பட்டை முதலான வடிவங்களில் நெருக்கமான கோடுகளைக் கொண்ட இரும்பால் ஆன சிறு கருவி;* file.

**அரவணைத்தல்** வி. (v.) *அன்போடு அணைத்தல்;* take some one in one's arm with affection, protection; hug.

**அரவணைத்துக் கொண்டு போதல்** வி. (v.) *அன்பும் பரிவும் காட்டி நடத்தல்;* carry on by being tolerant and willing to make concessions. *'கழகத்திலுள்ள (சங்கத்திலுள்ள) உறுப்பினர்களை அரவணைத்துப் போனால்தான் கழகம் நல்ல படியாக நடக்கும்'.*

**அரவணைப்பு** பெ. (n.) *பாதுகாப்பு, தாங்கள்;* protection, support. *'தந்தை இறந்து விட்டதால் தாயின் அரவணைப்பிலேயே வளர்ந்தவன்'.*

**அரவம்** பெ. (n.) *1. ஆள், விலங்கு நடமாட்டத்தால் ஏற்படும் ஒலி;* noise (made by the movement of human beings, animals). *'ஆள் அரவம் இல்லாத வீடு'. 2. பாம்பு;* snake. *'அரவம் தீண்டி மரணமடைந்தார்'.*

**அரவாணி** பெ. (n.) *உடல் அமைப்பைக் கொண்டு ஆண் என்றோ பெண் என்றோ விளக்க முடியாத மாந்தர்;* transgender, third gender.

**அரவை** பெ. (n.) *அரிசி, கோதுமை போன்ற தவசங்களை மாவாகவும், மிளகாய் மல்லி போன்றவற்றைப் பொடியாகவும், நெல்லை அரிசியாகவும் அரைப்பது;* milling (rice, dry chillies, etc.,) or husking paddy.

**அரளிச்செடி** பெ. (n.) *வழிபாட்டுக்குப் பயன்படும் கருஞ்சிவப்பு, இளஞ் சிவப்பு, மஞ்சள், வெள்ளை போன்ற நிறங்களில் பூக்கும் பூச்செடி;* oleander (the flower and the plant).

**அரற்றுதல்** வி. (v.) *1. துக்கம் தாங்காமல் புலம்பி அழுதல்;* cry out in grief. *'அம்மா இறந்த துக்கத்தால் அரற்றியவண்ணம் இருந்தான்'. 2. மனக் குறைகளைக் கூறி வருத்தப் படுதல்;* lament. *3. வலியால் முனகுதல், காய்ச்சல் முதலிய நிலைகளில் உளறுதல்;* groan (with pain).

**அராவுதல்** வி. (v.) *ஒரு பரப்பை வழவழப்பாக்க அல்லது கூராக்க அரத்தால் தேய்த்தல்;* file; file away.

**அரிச்சல்** பெ. (n.) *நமைச்சல் ஏற்படுதல்;* itch. *'உடலெல்லாம் அரிக்கிறது'.*

**அரித்தல்** வி. (v.) *1. புழு, கறையான் முதலியன சிறிது சிறிதாகக் கடித்துச் சிதைவுபடுத்துதல்;* of worms, ants, etc., eat away; gnaw away. *'கறையான் அரித்து மரக்கட்டை உளுத்துப் போனது'. 2. நீர், காற்று, புளிமம் (அமிலம்) முதலியன ஒரு பொருளைச் சிறிது சிறிதாகக் கரையும்படி செய்தல்;* erode; corrode. *'மழை நீர் கரையை அரிக்காமல் மரங்களின் வேர்கள் தடுக்கின்றன.' 3. கவலை, துக்கம், வருந்துதல்;* (of worry) gnaw at (one's heart). *'பணத் தட்டுப்பாடு மனத்தை அரித்துக் கொண்டிருந்தது'. 4. சல்லடை முறம் போன்றவற்றைப் பயன்படுத்தி தவசங்களிலிருந்து தூசி, குப்பைகளைப் பிரித்தல்;* sift out using (a winnowing pan, sieve, etc.,).

**அரிதட்டு** பெ. (n.) *சல்லடை;* fine sieve to (sift flour, grains, etc.,).

**அரிதல்** வி. (v.) *காய்கறி, பழம் போன்ற வற்றை சிறு சிறு துண்டுகளாக நறுக்குதல்;* cut vegetables or fruits into pieces, chop up. *'கீரையை ஆய்ந்து அரிந்து வை'.*

**அரிது** பெ. (n.) *1. எப்போதாவது ஒரு முறை காணக்கூடியது அல்லது நிகழக்கூடியது;* that which is unusual; a rarity. *'வால் விண்மீன் (நட்சத்திரம்) அரிதாகத் தோன்றும்'. 2. வாய்ப்புக் குறைவு;* being unlikely.

**அரிப்பு** பெ. (n.) *1. அரிச்சல் பார்க்க. 2. அரிக்கப்படுவதால் ஏற்படும் சிதைவு;* erosion. *'கடல் அரிப்பைத் தடுக்க முயற்சி மேற்கொள்ளப் படுகிறது'. 3. விடாத தொல்லை;* pestering. *'அவனுடைய அரிப்பைத் தாங்க முடியாமல் பணம் கொடுத்து விட்டேன்'.*

**அரிவாள்** பெ. (n.) *பெரும்பாலும் மரக் கைப்பிடியோடு வளைவான வெட்டும் பரப்புடைய எஃகினால் ஆன கருவி;* sickle.

**அரிவாள்மணை** பெ. (n.) *காய்கறி முதலியன நறுக்கப் பயன்படும் 'உ' போன்று வளைந்த தகட்டைக் கொண்ட சமையல் அறைக் கருவி;* kitchen gadget with a curved blade fixed to a base and used for cutting vegetables etc.,

**அருகதை** பெ. (n.) *தகுதி;* competence, fitness. *'அவரைக் கூற உனக்கு அருகதை யில்லை'.*

**அருகாமை** பெ. (n.) *அண்மை (அருகில்);* proximity, nearness. *'ஊருக்கு வெகு அருகாமையில் ஒரு சிற்றாறு ஓடுகிறது'.*

**அருகுதல்** வி. (v.) *குறைதல்;* become rare; dwindle. *'மரங்கள் வெட்டப்படு வதால், மரங்களின் எண்ணிக்கை அருகி வருகிறது'.*

**அருங்காட்சியகம்** பெ. (n.) *பண்பாட்டுக்கும் வரலாற்றுக்கும் சான்றாகும் பொருள்கள், அறிவியல் விளக்கப் பொருள்கள் முதலியன காட்சிக்காக வைக்கப்பட்டிருக்கும் இடம்;* museum.

**அருணாக்கயிறு** பெ. (n.) *அரைஞாண் கயிறு பார்க்க.*

**அருந்துதல்** வி. (v.) *1. குடித்தல்;* drink. *2. உணவு உண்ணுதல்;* (of food) eat, take, have.

**அரும்** பெ.அ. (adj.) *1. அரிய;* precious, valuable. *2. (இலக்கியத்தில்) எளிதில் புரிந்து கொள்ள முடியாத தாக இருக்கும்;* (of literature) difficult to understand.

**அரும்பதவுரை** பெ. (n.) *இலக்கிய, இலக்கண நூல்களில் உள்ள கடினச் சொற்களுக்குத் தரப்படும் பொருள் விளக்கம்;* the meaning of difficult words (in literary texts).

**அரும்பாடுபடுதல்** வி. (v.) *பெரு முயற்சி செய்தல்;* make great effort, strive hard.

**அரும்பு** பெ. (n.) *மொட்டு;* bud of a flower.

**அரும்புதல்** வி. (v.) *1. துளிர்த்தல்;* bud, sprout. *2. புன்னகை மற்றும் வியர்வை முதலியன தோன்றுதல்;* beg in to appear.

**அருமந்த** பெ.அ. (adj.) *விருப்பமான;* dear, darling. *'அருமந்த பிள்ளை அவன்'.*

**அருமருந்து** பெ. (n.) *மிகச் சிறந்த மருந்து;* effective remedy. *'நோய்வாய்பட்ட போது என் குடும்பத்தாரின் அன்பு தான் அருமருந்தாக இருந்தது'.*

**அருமை** பெ. (n.) *1. பாராட்டும் படியானது, உயர்வாகச் சொல்லக் கூடியது;* being praise worthy. *2. மதிப்பு, உயர்வு;* value, worth.

**அரைஞாண்கயிறு** பெ. (n.) *ஆண்கள் இடுப்பில் கட்டக்கூடிய கயிறு;* thin cord worn around the waist by men and children.

**அல்லல்** பெ. (n.) *துன்பம்;* trouble.

**அல்லாடுதல்** வி. (v.) *அலைதல்;* to wander from place to place. *'அவன் தனியாளாக அல்லாடுகிறான்'.*

**அல்லும்பகலும்** வி.அ. (adv.) *இடைவிடாமல், எப்போதும்;* night and day; always. *'அல்லும்பகலும் உழைத்து சம்பாதித்த காசு'.*

**அல்லோலகல்லோலம்** பெ. (n.) *(பே.வ.) பலர் இருக்குமிடத்தில் ஏற்படும் பெரும் பரபரப்பு; பெருங் குழப்பம்;* great commotion. *'தீ பற்றிக் கொண்டதும் அப்பகுதி ஒரே அல்லோல கல்லோலப்பட்டது'.*

**அலக்கழித்தல்** வி. (v.) *அலைக்கழிப்பு பார்க்க.*

**அலக்காக** வி.அ. (adv.) *சுமையைத் தூக்கும் சூழலில் மிகவும் எளிதாக, வருத்திக் கொள்ளாமல் ஈடுபடுவது;* effortlessly.

**அலங்கமலங்க** வி.அ. (adv.) *அச்சத்தாலோ குழப்பத்தாலோ வருத்தப்பட்டு என்ன செய்வதென்று புரியாமல் விழிப்பது;* confusedly not knowing what to do.

**அலசல்** பெ. (n.) *1. அடர்த்தியின்மை, நெருக்கமின்மை;* sparseness. *'இப்புடவை ரொம்ப அலசலாயிருப் பதால் உடம்பு தெரியும்'. 2. பல்வேறு கூறுகளையும் உள்ளடக்கிய ஆய்வு;* threadbare analysis. *'தேர்தல் முடிவுகளைப் பற்றி ஓர் அலசல்'.*

**அலசுதல்** வி. (v.) *1. துணிகளை நீரில் இட்டு கசக்கிக் கழுவுதல்;* to rinse as soaked cloth. *2. ஆராய்தல்;* to analyse.

**அலட்டுதல்** வி. (v.) *வீண் பேச்சு பேசுதல்;* to talk vainly or incessantly.

**அலம்புதல்** வி. (v.) *கழுவுதல்;* wash, clean.

**அலறுதல்** வி. (v.) *அச்சத்தால் திடுமென்று கதறுதல்;* to cry aloud due to sudden fright.

**அலுப்பு** பெ. (n.) *சோர்வு;* tiredness. *'வேலை அதிகம் என்பதால் அலுப்பு தாங்க முடியவில்லை'.*

**அலுவல்** பெ. (n.) வேலை; work. *'பக்கத்து ஊருக்கு ஒரு அலுவலாகப் போய் வந்தேன்'.*

**அலுவலகம்** பெ. (n.) *பணி செய்யுமிடம்;* office.

**அலுவலர்** பெ. (n.) *பணி செய்பவர்;* office staff.

**அலைக்கழிப்பு** பெ. (n.) *அலைச்சல், மனவருத்தத்தை முடிவெடுக்க இயலாத சிக்கல் போன்றவற்றால் நேரும் துன்பம்;* hassle. *'வேலை தேடி சென்னைக்கு வந்ததில் அலைக் கழிப்புதான் மிச்சம்'.*

**அலைச்சல்** பெ. (n.) *அலைந்து திரிகை;* wandering.

**அலைபாய்தல்** வி. (v.) *நிலை கொள்ளாமல் தவித்தல்;* waver; oscillate. *'கண் இடைக்கும் நேரத்தில் ஆயிரம் சிந்தனைகள் அலைபாய்கிறது'. 2. கூட்டம் திரண்டு வருதல்;* (of crowd) surge (up). '

**அலைமோதுதல்** வி. (v.) *அலைபாய்தல் - 2 பார்க்க.*

**அலைவரிசை** பெ. (n.) *1. ஒலிபரப்புக் காகவோ ஒளிபரப்புக்காகவோ அலைநீளத்தின் அடிப்படையில் பல அலைகளை மின்காந்த அலைகளின் தொடர்/மேற்குறிப்பிட்ட முறையில் ஒலிபரப்பும் அல்லது ஒளிபரப்பும் அமைப்பு;* (radio) frequency/(T.V.) channel.

**அவ்வப்போது** வி.அ. (adv.) *நேரம் கிடைக்கும்போதெல்லாம்; சில சமயங்களில்;* from time to time; periodically.

**அவ்வளவாக** வி.அ. (adv.) *(எதிர்மறை வினைகளோடு மட்டும்) குறிப்பிட்டுச் சொல்லும் அளவுக்கு;* much.

**அவநம்பிக்கை** பெ. (n.) *நம்பிக்கையின்மை;* disbelief.

**அவப்பெயர்** பெ. (n.) *நற்பேறின்மை; கெட்ட பெயர்;* bad name.

**அவிழ்த்துவிடுதல்** வி. (v.) *அளவுக்கு அதிகமாக (பெரும்பாலும் உண்மை அல்லாததை) வெளிப்படுத்துதல்;* reel off (esp. untruth etc.,

**அவிழ்தல்** வி. (v.) *கட்டு, முடிச்சு முதலியவை பிரிதல்;* (of a knot, etc.,) become untied, become loose. *'கூந்தல் அவிழ்ந்தது'*.

**அவை** பெ. (n.) *1. அஃறிணைப் பொருள்களைச் சுட்டும் பெயர்;* plural neutar distal pronoun they; those. *2. பலரும் கூடும் அரங்கம் (சபை);* Assembly, Auditorium.

**அவைக்குறிப்பு** பெ. (n.) *நாடாளுமன்றம், சட்டமன்றம் போன்றவற்றின் கூட்டத்தில் நடந்த தீர்மானங்கள், பேச்சுகள் அடங்கிய தொகுப்பு;* minutes of the proceedings in a legislative body.

**அவைத்தலைவர்** பெ. (n.) *மக்களவை, சட்டமன்றம் ஆகியவற்றின் நடவடிக்கைகளை நடத்தும் பொறுப்பு வகிப்பவர், அவைத்தலைவர் (சபாநாயகர்);* speaker of parliament or of the state legislative assembly.

**அவையடக்கம்** பெ. (n.) *அவையில் தன்னை முதன்மைப்படுத்திக் கொள்ளாத பணிவு;* modesty; humility (particularly in a gathering).

**அழகு** பெ. (n.) *1. கண்ணால், காதால், மனத்தால் துய்க்கும் மகிழ்ச்சி, இனிமை;* beauty. *2. தகுதியான தன்மை;* proper conduct. *3. ஒழுங்கு நிறைந்த தன்மை;* systematic and orderly way, neatness.

**அழகுக்கலை** பெ. (n.) *உடலைப் பொலிவாக்குங் கலை;* the art of beautician.

**அழகுகாட்டுதல்** வி. (v.) *நாக்கை நீட்டுதல், முகத்தைச் சுளித்தல் போன்ற செய்கையால் பழித்துக் காட்டுதல்;* make faces at some one.

**அழகுநிலையம்** பெ. (n.) *ஒப்பனை செய்யுமிடம்;* beauty parlour.

**அழிச்சாட்டியம்** பெ. (n.) *முரண்டு, ஒட்டாரம்;* stubborn behaviour; obstinacy.

**அழித்தல்** வி. (v.) ஒரு வடிவத்திலிருக்கும் பொருளை மற்றொரு வடிவத்துக்கு *மாற்ற உருச்சிதைத்தல்;* reduce to basic material (in order to make something new).

**அழிதல்** வி. (v.) *1. சிதைதல், கெடுதல்;* to decay, to be mutilated, to collapse. *2. மனந்தளர்தல், மனமுடைதல்;* to be disheartened.

**அழிப்பான்** பெ. (n.) *எழுதியதை அழித்து மீண்டும் எழுதுவதற்கும், எழுத்துகளை அழிக்கப் பயன்படும் தொய்வை (ரப்பர்) துண்டு;* eraser.

**அழிவு** பெ. (n.) *சீர்குலைவு;* destruction, ruin. *'பலத்த மழையால் பயிர்கள் அழிவுக்கு உள்ளாயின'*.

**அழுக்காகுதல்** பெ. (v.) *உடை, உடல் முதலியவற்றில் சேரும் தூய்மைக் கேடு;* dirt on clothes, body, etc.,

**அழுகல்** பெ. (n.) *பழம், முட்டை, காய் முதலிய பொருள்களின் தன்மை*

கெட்டுப் போதல்; the state of being rotten or putrefied. 'அழுகல் கத்தரிக்காய்'.

**அழுகுணி** பெ. (n.) *1.* சிறிய செய்திக்குக் கூட அழுதுவிடுபவர்; cry baby, sniveller. *2.* விளையாட்டில் ஏமாற்றுதல்; foul. 'இப்படி அழுகுணி ஆட்டம் ஆடினால் நான் விளையாட வரவில்லை'.

**அழுகை** பெ. (n.) துன்பம், வலி போன்றவற்றால் கண்ணீர் விடுதல்; weeping, crying.

**அழுத்தக்காரன்** பெ. (n.) *1.* கையிறுக்க முள்ளவன்; parisimonious. *2.* அமுக்கன்; deep person

**அழுத்தம்** பெ. (n.) *1.* உறுதி; firmness. *2.* வண்ணங்களைக் குறிப்பிடும் போது அடர்த்தி; (of colours) deep, dark. *3.* பேச்சு, எழுத்து போன்றவற்றில் வலிவு; emphasis (in speech or writing) stress. *4.* தன் கருத்தை எளிதில் வெளி விடாத தன்மை; close mouthed. 'ஆள் அழுத்தம்தான்'. *5.* தெளிவு; clarity. *6.* முழுமை, ஆழம்; depth, strength. *7.* நிறை அல்லது விசை ஒரு பரப்பின் மேல் செலுத்தும் தாக்கம்; pressure.

**அழுத்தந்திருத்தமாக** வி.அ. (adv.) ஐயத்திற்கு இடமில்லாமல் தெளிவாக உறுதியோடு வெளிப்படுத்துகை; clearly/firm and clear.

**அழுதல்** வி. (v.) *1.* துன்பத்தால் கண்ணீர் விடுதல்; weep, cry. 'குழந்தை பசியால் அழுகிறதா?. *2.* பயனற்ற ஒன்றை விடாமல் வைத்துக்கொண்டு துன்பப்படுதல்; be stuck with something. *3.* தவிர்க்க இயலாமல் கட்டாயத்திற்கு உட்பட்டு வேண்டா வெறுப்பாகக் கொடுத்தல்; part with something reluctantly. *4.* எதிர்மறை குரலில் பொருட்டாக மதித்து கவலைப்படுதல், விரும்புதல்; care about always with an implied negative in rhetorical questions.

**அழுதுவடிதல்** வி. (v.) சுறுசுறுப்பு, இயக்கம் போன்றவை வெகுவாகக் குறைந்து காணப்படுதல், பொலிவு இல்லாமலிருத்தல்; look gloomy, be dull.

**அழுமூஞ்சி** பெ. (n.) அழுகுணி பார்க்க.

**அழைத்தல்** வி. (v.) *1.* ஒருவரைப் பெயர் சொல்லியோ அல்லது பிற முறையில் கூப்பிடுதல்; call. 'யாரோ தன்னை கைதட்டி அழைப்பதாக அவள் உணர்ந்தாள்.' *2.* நிகழ்ச்சிக்கு வரும்படி வேண்டுதல்; invite. *3.* தேர்தலுக்குப் பின் வெற்றி பெற்ற அரசியல் கட்சியை ஆட்சி அமைக்க ஆணைப்படி கூறுதல்; invite the election winner of the political party leader to form a government. *4.* ஒருவரை மற்றொரு பெயரில் குறிப்பிட்டு வழங்குதல்; call or regard something as. காந்தியடிகளை 'தேசத் தந்தை' என்று அழைக்கிறோம்'.

**அழையா விருந்தாளி** பெ. (n.) தன்னை அழைக்காத இடத்துக்குத்தானே போவது; uninvited guest.

**அளத்தல்** வி. (v.) *1.* ஒரு பொருளின் எடையைக் கணக்கிடுதல்; measure. *2.* தவசத்தை அளந்து தருதல்; pay the agreed measures (esp. of paddy) grains etc.,

**அளித்தல்** வி. (v.) வழங்குதல்; கொடுத்தல்; give; offer; render. 'அதிக மதிப்பெண் பெற்ற மாணவருக்கு பரிசு அளித்தார்'.

**அறம்** பெ. (n.) தனி மாந்தனின் வாழ்வும் பொது வாழ்வும் சீராக இயங்கத் தனி மாந்தன், அரசு போன்றவர்கள் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கத்தின் அடிப்படையிலான நெறிமுறைகள் அல்லது கடமைகள்; ethics; morality.

**அறிவு** பெ. (n.) *1. பட்டறிவு, படிப்பு, சிந்தனை போன்றவற்றின் மூலமாகத் தெரிந்துகொள்ளுதல்;* know; get to know. *'பல தரப்பட்ட செய்திகளை நாம் அறிந்துகொள்ள நூல்கள் உதவும்'.* 2. *ஒரு துறையைப் பற்றி ஒருவருக்கு இருக்கும் புலமை;* knowledge (in a field or in general); scholarship, erudition.

**அறிவுக்கொழுந்து** பெ. (n.) *பெரும்பாலும் அறிவற்ற செயலைச் செய் பவரைப் பற்றிக் கூறுவதாகும்;* (sarcastically) genius. *'அந்த அறிவுக் கொழுந்து பேச்சைக் கேட்டியா? உருப்பட்ட மாதிரிதான்'.*

**அறிவு கெட்டவன்** பெ. (n.) *அறிவு இல்லாதவர்;* ignoramus.

**அறியாத்தனம்** பெ. (n.) *அறியாமை பார்க்க.*

**அறியாமை** பெ. (n.) *அறிவு இல்லாமை; மடமை;* ignorance.

**அறிவாளி** பெ. (n.) *கூர்ந்த அறிவு உடையவர்;* man of knowledge; savant. *'படித்து நல்ல அறிவாளியாக வர வேண்டும்'.*

**அறிவிலி** பெ. (n.) *அறிவு கெட்டவன் பார்க்க.*

**அறிவுடைமை** பெ. (n.) *ஒரு செயலைச் செய்வதற்குத் தேவையான அறிவைப் பெற்றிருக்கும் தன்மை;* good sense; sensibleness.

**அறிவுரை** பெ. (n.) *நன்மை விளைவிக்கும் நோக்குடன் ஒருவர் மற்றொருவருக்கு வழங்கும் கருத்து; புத்திமதி;* advice, counsel.

**அறிவுறுத்துதல்** பெ. (n.) *கூறியபடி நடந்துகொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுதல்; பணித்தல்;* instruct, advise; exhort.

**அறுத்தல்** வி. (v.) *1. நூல், கயிறு முதலியன துண்டாதல்;* cause, something to snap; break. *'நூலைப் பிடித்து இழுத்து அறுத்துவிட்டான்'.* 2. *ஒரு பொருளின் மீது கத்தி வைத்து வெட்டுதல்;* cut with a saw, knife, etc., *'கத்தியால் பழத்தை அறுத்திட இயலவில்லை'.* 3. *மருத்துவத்தில் உறுப்பைக் கீறுதல்; நறுக்குதல்;* cut open. *4. ஒன்றைத் திரும்பத் திரும்பக் கூறிப் படிப் பவருக்கு அல்லது கேட்பவருக்குச் சலிப்பு உண்டாக்குதல்;* bore (a person by tedious dull talk).

**அறுத்துக் கட்டுதல்** வி. (v.) *கணவனையிழந்தோ தீர்வை செய்யப்பட்டோ தாலி நீங்கிய பின், மறுதாலி கட்டி மணத்தல்;* to remarry.

**அறுந்தவால்** பெ. (n.) *குறும்புக்காரன்;* mischievous person.

**அறுப்பு** பெ. (n.) *அறுவடை;* reaping; harvest.

**அறுபதாம் கல்யாணம்** பெ. (n.) *கணவருக்கு அறுபது அகவை நிறைவடையும் போது, அக்கணவன் மனைவியருக்கு அவர்களுடைய பிள்ளைகளால் நடத்தப்படும் திருமணம்;* ritual marriage of a married couple performed by the children on the husband completing sixty years.

**அறுவை** பெ. (n.) *1. நோயுற்ற உறுப்பைக் குணப்படுத்த அறுத்துச் செய்யப் படும் மருத்துவம்;* surgery. 2. *சலிப் பூட்டுவது;* boredom. *'இந்த அறுவை படத்தைப் பார்க்கத்தான் என்னைக் கூட்டி வந்தாயா?'.*

**அறை** பெ. (n.) *1. மாந்தர்கள் விரித்த கையாலும் விலங்குகள் முன்னங் காலாலும் ஒரு பரப்பில் விரைவுடன் கொடுக்கும் அடி;* slap. *'முதுகில் பலமாக ஓர் அறை விழுந்தது'.* 2. *வீட்டில் தனித்தனியாகத் தடுக்கப் படும் இடம்;* room.

**அன்பர்** பெ. (n.) *1.* *ஒருவர் மீது தன் அன்பை வெளிப்படுத்திக் கொள் பவர்; அன்பிற்கு உரியவர்;* well wisher; a friend. *'தலைவர் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டதை அறிந்ததும் அன்பர்கள் பலர் வந்து பார்த்தனர்'.* *2.* *ஒரு துறையில் ஆர்வமுடையவர்;* enthusiast (in a particular field). *'சென்னையில் டிசம்பர் மாதத்தில் இசை அன்பர்கள் கூட்டம் எங்கும் காணப்படும்'.*

**அன்பளிப்பு** பெ. (n.) *1.* *ஒருவர் மீது கொண்டுள்ள அன்பைத் தெரிவிக்கும் வகையில் அவருக்குக் கொடுக்கப் படும் பொருள் அல்லது பணம்; பரிசு;* gift, present. *2.* *ஒரு பொருளை வாங்கு பவருக்கு அதனோடு கூட விலை இல்லாமல் அளிக்கப்படுவது; இலவயம் (இலவசம்);* free gift given with a purchase. *'நான்கு புடவை வாங்குபவருக்கு ஓர் அழகிய பை அன்பளிப்பாகத் தருகிறார்கள்'.*

**அன்றாடங்காய்ச்சி** பெ. (பே.வ.) (n.) *ஒவ்வொரு நாளும் கிடைக்கும் வருமானத்தில் வாழ்க்கை நடத்தும் ஏழை;* a poor person who lives solely on daily wages; a person who has no resources to fall back on.

**அன்றாடம்** வி.அ. (adv.) *ஒவ்வொரு நாளும்; நாள் தவறாமல்;* daily; everyday.

**அன்றி** வி.அ. (adv.) *1.* *தவிர; தவிர்த்து;* except. *'பாகனன்றி வேறு யாராலும் யானையிடம் நெருங்க முடியாது'.* *2.* *இல்லாமல்; அல்லாமல்;* without. *'அவளன்றி அவனுக்கு வாழ்க்கை இல்லை'.*

**அனல் கக்குதல்** வி. (v.) *பேச்சு, பார்வை முதலியவற்றில் கடுங்கோபம் வெளிப்படுதல்;* show violent anger (in one's speech, look, etc.,). *'தலைவரின் அனல்கக்கும் பேச்சிற்குத் தொண்டர்கள் கைதட்டினர்'.*

**அனல் காற்று** பெ. (n.) *கோடைக் காலத்தில் தொடர்ந்து நிலவும் அதிக வெப்பமான வானிலை;* heat wave. *'கோடைக் காலத்தில் வீசும் அனல் காற்று தாங்க முடியவில்லை'.*

# ஆ

**ஆக்கம்** பெ. (n.) *1.* *உதவி;* help, support. *'மதுவை ஒழிக்க எதிர்த்துப் போராடுபவர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப்பது நம் கடமை'.* *2.* *முன்னேற்றம், வளர்ச்சி;* progress. *3.* *நன்மை தரும் முறையிலானது;* benefit something constructive. *4.* *படைப்புத்திறன்;* creativity. *5.* *இலக்கியப் படைப்பு;* literary work. *'இணைய இதழுக்குத் தங்கள் ஆககங்களை அனுப்பும் படைப் பாளிகள், அவற்றைத் தட்டச்சு செய்து அனுப்ப வேண்டாம்'.*

**ஆக்கியோர்** பெ. (n.) *பா, இலக்கணம் முதலியவற்றை இயற்றியவர்,ஆசிரியர்;* author (of a poem, book, etc.,).

**ஆக்குதல்** வி. (v.) *1.* *படைத்தல், உண்டாக்குதல், உருவாக்குதல்/ மொழி பெயர்த்தல்;* create, produce, cause to come up. *2.* *இயற்றுதல், எழுதுதல்;* write (a book, etc.,). *3.* *நெறிமுறைகளின் அடிப்படையில் ஒன்றை நிறைவேற்றுதல்;* cause to become (the stated thing). *'அந்த எழுத்தாளரின் படைப்புகள் அனைத்தும் நாட்டுடைமையாக்கப் பட்டன'.* *4.* *உணவு சமைத்தல்;* cook food. *5.* *ஒன்றை அல்லது ஒருவரைக் குறிப்பிட்ட நிலைக்குக் கொண்டு வருதல்;* cause to be, cause to become.

**ஆகக்கூடி** இ.சொ. (int.) *ஆக மொத்தம் பார்க்க.*

**ஆகட்டும்** இ.சொ. (int.) *ஒருவர் கூறுவதை ஏற்றுக்கொள்ளும் முறையில் அல்லது*

*சரி என்ற பொருளில் சொற்றொடரின் இடையே உள்ள தொடர்பைக் குறிக்கப் பயன்படுத்தும் இடைச்சொல்;* particle signifying consent. *'எனக்கு ஒரு வேலை வாங்கித் தர வேண்டும் என்று கூறியதும் அமைச்சர் ஆகட்டும் பார்க்கலாம்'* என்றார்.

**ஆகமொத்தம்** இ.சொ. (int.) *எல்லாவற்றையும் கணக்கில் எடுத்துக் கொண்டு பார்த்த பின் முடிவில் என்ற பொருளில் இரு சொற்றொடர்களை அல்லது பகுதிகளைத் தொடர்பு படுத்தும் இடைச்சொல்; இறுதியாக;* particle meaning 'net result' relating two sentences or two parts of a sentence.

**ஆகிவருதல்** வி. (v.) *செயல் நிறைவேறி வருதல்;* to prosper, action under progressing.

**ஆகுதல்** வி. (v.) *1. குறிப்பிட்ட நிலையில் இருத்தல்;* be in a specified state or condition. *'குழாயில் தண்ணீர் வந்து ஒரு வாரமாகிறது'*. 2. *இயலுவதாக இருத்தல்;* be possible for something. *'செய்தியைச் சொல், ஆகுமா? ஆகாதா? என்று சொல்கிறேன்'*. 3. *மற்றொரு தன்மைக்கு, நிலைக்கு வருதல்;* become or change into someone or something mentioned. *'அவள் பல சமயம் குழந்தை மாதிரி ஆகி விடுகிறார்.'*. 4. *ஒருவர் அல்லது ஒன்று மற்றொரு உருவம், வடிவம் பெயர் கொள்ளுதல்; மாற்றம் அடைதல்;* change into something mentioned, become. *'அகலிகை கல்லானாள்'*. 5. *ஒரு பொருளால் செய்யப்படுதல், நூல் குறிப்பிட்ட முறையில் ஏற்றப்படுதல்;* be made of or with something. *'இந்த நாற்காலி தேக்கால் ஆனது'*. '6. *நிகழ்தல், நடத்தல்;* happen, get done. *'நான் அங்கிருந்து வந்த பிறகு என்ன ஆயிற்று?'*. 7. *நேரம் கழிதல்;* (of time) take; require. *'அவள் திரும்பி வர பத்து நிமிடம் ஆயிற்று'*. 8. *செலவு முதலியன ஏற்படுதல்;* cost; come to. 9. *ஒரு பொருள் பயன்படுத்தப்பட்டு தீர்தல், ஒன்று நடந்து முடிதல்;* be exhausted; be over.

**ஆங்காங்கு** வி.அ. (adv.) *இங்கொன்றும் அங்கொன்றுமாக இருத்தல்;* here and there; scattered.

**ஆங்கிலோ இந்தியர்** பெ. (n.) *ஒரு ஆங்கிலேயருக்கும் இந்தியருக்கும் இடையேயான திருமண உறவின் மூலம் பிறந்தவர்;* Anglo Indian.

**ஆச்சி** பெ. (வ.வ.) (n.) *1. அகவை முதிர்ந்த பெண்மணி;* a polite word for an elderly woman. *2. பாட்டி;* grand mother. *3. குடும்பத்தலைவி;* lady of the house. *'வீட்டில் ஆச்சி இல்லை. வெளியூர் போயிருக்கிறார்கள்'*.

**ஆசை** பெ. (n.) *1. ஒன்றைக் குறித்து எதிர்பார்ப்புடன் கூடிய ஆவல்; விருப்பம்;* desire, wish, affection. *'நூல் எழுதி வெளி வந்ததில் நீண்ட நாள் ஆசை நிறைவேறியது'*. 2. *வெளிப் படையான விருப்பம்;* relish, liking, fondness.

**ஆசைகாட்டுதல்** வி. (v.) *ஒன்றை அடைந்துவிடலாம் என்ற உணர்வைத் தருதல்;* lure, tempt.

**ஆசைநாயகி** பெ. (n.) *திருமணமான ஆண், மனைவி அல்லாது தொடர்பு வைத் திருக்கும் வேறொரு பெண்;* mistress.

**ஆசைப்படுதல்** வி. (n.) *ஒன்றைச் செய்ய அல்லது பெற விரும்புதல்;* wish, desire.

**ஆசை வார்த்தை** பெ. (n.) *ஒருவரது விருப்பத்தைத் தூண்டிவிடும் வகையில் கூறப்படும் சொற்கள்;* words of inducement; calculater, seductive words.

**ஆட்காட்டி** பெ. (n.) *ஆளை அடையாளம் காட்டுபவன்;* one who indentifies the correct person.

**ஆட்குறைப்பு** பெ. (n.) *பணி செய்யுமிடத்தில் (பெரும்பாலும் தொழிற்சாலையில்) பணி செய்பவர்களின் எண்ணிக்கையைக் குறைத்தல்;* retrenchment.

**ஆட்கூலி** பெ. (n.) *ஒரு வேலையாளுக்குரிய கூலி;* hire of a workman, wages of a labour.

**ஆட்கொல்லி** பெ. (n.) *1. மாந்தர்களைக் கொன்று உண்ணக்கூடிய (புலி, சிறுத்தை போன்ற) விலங்கு;* maneater. *2. இறப்பை விளைவிக்கும் அளவிற்குக் கடுமையான நோய், உயிர்க்கொல்லி;* killer disease.

**ஆட்கொள்தல்** வி. (v.) *1. அடியாராக ஒருவரை இறைவன் ஏற்றுக் கொள்ளுதல்;* (of god) redeem (something). *2. உணர்வு, சிந்தனை ஒருவரை வயப்படுத்துதல்;* (of feeling, thought, etc.,) possess; occupy.

**ஆட்சி** பெ. (n.) *1. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் நாட்டை ஆளுதல்;* (of an elected political party or persons who has usurped power) office, government. *2. அரசன் போன்றோரின் ஆளுகை, அரசாட்சி;* reign; administration. *'மௌரியரின் ஆட்சிக் காலம்'. 3. (சொல்) எடுத்தாளப் படுதல்;* use; usage (of a word). *'கம்பனின் சொல்லாட்சி'. 4. கணியத்தில் கோளின் செல்வாக்கு அதிகமாக இருக்கும் நிலை;* (in astrology) the ascendancy of a planet in a house.

**ஆட்சிமொழி** பெ. (n.) *அரசு தன் நிருவாகத்தில் பயன்படுத்துவதற்குச் சட்டத்தின் மூலம் வழி செய்திருக்கும் மொழி;* official language.

**ஆட்சியர்** பெ. (n.) *ஒரு மாவட்டத்தில் வரி வாங்குதல், சட்டம், ஒழுங்கு, வளர்ச்சிப் பணி முதலியவற்றைக் கவனிக்கும் முதன்மைப் பொறுப்பிலுள்ள அரசு அதிகாரி;* highest official in the district for revenue collection, law and order, development programmes, etc., (in South India) District Collector.

**ஆட்டக்காரர்** பெ. (n.) *1. (தடகள போட்டிகள் தவிர்த்துப் பிற விளையாட்டுகளில்) விளையாட்டு வீரர் அல்லது வீராங்கனை;* Sports person. *2. கூத்து, கரகாட்டம் போன்ற நாட்டுப்புறக் கலைகளை ஆடுபவர்;* folk dancer.

**ஆட்ட நாயகன்** பெ. (n.) *குழு விளையாட்டுப் போட்டியில் சிறப்பாக விளையாடிய வீரருக்கு வழங்கும் சொல்;* the man of the match.

**ஆட்டபாட்டம்** பெ. (n.) *1. ஆரவாரம் மிகுந்த கேளிக்கை;* boisterous merry making. *2. ஆரவாத்துடன் கூடிய பாட்டும், நடனமும்;* fanfare.

**ஆட்டம்காணுதல்** வி. (v.) *உறுதியான நிலையிலிருந்து வலுவற்ற நிலைக்கு வருதல்;* become shaky or weak. *'பழைய கட்டிடம் ஆட்டம் கண்டு விட்டது'.*

**ஆட்டம்போடுதல்** வி. (v.) *பதவி மற்றும் மேனிலை (அந்தஸ்து) முதலியவற்றின் காரணமாக கட்டுப்பாடில்லாமல் கூடுதல் அதிகாரத்துடன் நடந்துகொள்ளுதல்;* behave unrestrainedly as a result of newly gained status, position, etc.,

**ஆட்டமிழத்தல்** வி. (v.) *விளையாட்டு போட்டிகளில் (மட்டைப்பந்து ரிக்கெட், கபடி) விளையாட்டு நெறிமுறைகளின்படி ஒருவர் மேற்கொண்டு விளையாட முடி

*யாமல் ஆகுதல்;* lose one's wicket (in Cricket) (in Kabaddi) be out.

**ஆட்டிப்படைத்தல்** வி. (v.) *1. ஆழ்ந்த அழிவு ஏற்படுத்தும் வகையில் (உணர்வு அல்லது நோய் முதலியவை) உரிமை செலுத்துதல்;* (of a feeling, idea, issue, etc.,) possess. *2. தான் விரும்பியபடியெல்லாம் பிறரை நடக்கச் செய்தல்; ஆட்டி வைத்தல்;* boss around; have something at one's command.

**ஆட்டிவைத்தல்** வி. (v.) *ஆட்டிப் படைத்தல் பார்க்க.*

**ஆட்டுக்கிடை** பெ. (n.) *ஆடுகளை அடைக்குமிடம், ஆட்டுப்பட்டி;* sheep fold.

**ஆட்டுத்தொட்டி** பெ. (வ.வ.) (n.) *இறைச்சிக்காக ஆட்டை வெட்டும் இடம்;* slaughter house for sheep and goats.

**ஆட்டுதல்** வி. (v.) *1. ஒன்றை அசைத்தல்;* wag (one's tail); move (one's head). *2. உலுக்குதல்; குலுக்குதல்;* shake (an object). *3. ஊஞ்சல், தொட்டில் போன்றவற்றை முன்னும் பின்னுமாகப் போய்வரச் செய்தல்;* move something; rock; swing. *4. எந்திரத்தில் மாவு அரைத்தல், எந்திரத்தில் இட்டு கரும்பு முதலியவற்றைப் பிழிதல்;* press make (dough etc., by grinding). *'இட்லிக்கு மாவு ஆட்டுதல் எளிது'.*

**ஆட்டுரல்** பெ. (n.) *மாவரைக்கும் ஆட்டுக்கல்;* stone mortar for grinding.

**ஆட்படுதல்** வி. (n.) *1. அடிமையாதல்;* to become a devoted servant. *2. தலைப் படுதல்;* to become involved voluntairly.

**ஆட்பழக்கம்** பெ. (n.) *பல்லோர் நட்பு;* friendship with many.

**ஆட்பார்த்தல்** வி. (v.) *ஆள்தேடுதல்;* to recruit person for work.

**ஆடம்பரம்** பெ. (n.) *பகட்டாரவாரம்;* pomp, show, ostentation.

**ஆடி** பெ. (n.) *நான்காம் மாதமாகிய கடகம்;* the fourth Tamil month.

**ஆடிப்பட்டம்** பெ. (n.) *கடக (ஆடி) மாதத்துப் பயிரிடும் பருவம்;* cultivation season in the month of Adi.

**ஆடிப்போதல்** வி. (v.) *1. கட்டுக் குலைந்து போதல்;* to become shaky. *2. எதிர் பாராத துயரமான செய்தி, நிகழ்ச்சி போன்றவற்றால் வருத்தம் அடைதல்;* be rudely shaken, get terribly upset.

**ஆடுசதை** பெ. (n.) *முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் இடையிலுள்ள பின்தசை;* calf muscle.

**ஆடுதல்** வி. (v.) *1. அசைதல்;* move in swaying motion. *2. அச்சம் அல்லது குளிர் இவற்றால் நடுங்குதல்;* shiver, tremble. *3. அதிர்தல்;* vibrate. *4. ஒரு நிலையில்லாமல் சீரற்று அசைதல்;* shake. *5. ஊஞ்சலில் முன்னும் பின்னுமாய் போய் வருதல்;* go forward and backward in a swing. *6. நடனம், கூத்து போன்றவை நிகழ்த்துதல்;* dance. 7. *விளையாடுதல்;* play (a game). *8. செக்கில் எள், கடலை போன்றவற்றை அரைத்து எண்ணெய் எடுத்தல்;* Crush (oil seeds in a press to extract oil). *9. அடக்கமில்லாமல் நடந்துகொள்ளுதல்;* behave without restraint. *10. சூழலுக்குப் பொருத்தமில்லாமல் சினந்து ஆரவாரம் செய்தல்;* fly into a temper. *11. பிறருடைய ஆணைகளுக்கும், விருப்பங்களுக்கும் பணிந்து அடிமையாக நடத்தல்;* dance to the tune of someone.

**ஆண்டாண்டுக்காலம்** பெ. (n.) *காலம் காலமாக;* for ages.

**ஆண்பிள்ளைச் சிங்கம்** பெ. (n.) *(பகடியாக) வீரம் படைத்த ஆண்;* (jocularly) lion of man.

**ஆண்டுவிழா** பெ. (n.) *ஒரு அமைப்பு அல்லது முகாமையான நிகழ்வு நிகழ்ந்த அதே நாளில் ஆண்டு தோறும் நடத்தப்படும் விழா;* anniversary.

**ஆணழகன்** பெ. (n.) *கட்டுடல் கொண்ட அழகான ஆண்;* handsome man.

**ஆணாதிக்கம்** பெ. (n.) *பெண்களை விட ஆண்கள் மேலானவர்கள் என்ற உரிமை மனப்போக்கு;* male chauvinism.

**ஆணித்தரம்** பெ. (n.) *கருத்தைச் சொல்லும் வகையில் உறுதியாகக் கூறுதல்;* firmly; emphatically.

**ஆணுறை** பெ. (n.) *கருத்தடைக்கு உதவுவதும், பாலுறவு நோய்த் தடுப்பாகவும் இருக்கின்ற, உடலுறவின் போது ஆண்குறியில் அணிந்து கொள்ளும் நெகிழியாலான மெல்லிய உறை;* condom.

**ஆணை** பெ. (n.) *1. கட்டளை; உத்தரவு;* order, command. *2. கணிப்பொறியில் குறிப்பிட்ட செயலைச் செய்வதற்காக மேற்கொள்ளப்படும் இயக்க முறை;* command. *3. சான்று சொல்பவர் செய்யும் (சத்தியப் பிரமாணம்) உறுதி;* oath (by a witness before giving evidence). *4. வாக்குறுதி கொடுக்கும்போதும், சூளுரைக்கும்போதும் ஒருவர் தான் மிகவும் போற்றும் அல்லது மதிக்கும் ஒருவரை சான்றாளியாகக் கொண்டு கூறும் சொல் ;* swear; vow.

**ஆணையம்** பெ. (n.) *குறிப்பிட்ட பொறுப்புகளை உரிமைகளை நிருவகிக்க அல்லது குறிப்பிட்ட செயலைச் செய்து முடிக்க அரசால் அமர்த்தப்பட்டக் குழு;* commission. *'தேர்தல் ஆணையம்'.*

**ஆத்தா(ள்)** பெ. (வ.வ.) (n.) *1. தாய்;* mother. *'ஆத்தா அப்பன் இல்லாதவன்'. 2. பெண் தெய்வங்களைக் குறிப்பிடும் பொதுப் பெயர்;* common name of female folk deities. *'காளி யாத்தா'. 3. பாட்டி;* grandmother.

**ஆப்பச்சோடா** பெ. (பே.வ.) (n.) *சமையல் உவர்க்காரம் (சோடா);* baking - soda (Sodium bicarbonate).

**ஆப்படித்தல்** வி. (v.) *ஒருவனைப் பற்றி கூறக் கூடாத இடத்தில் கூறி அவரைச் சிக்கலில் மாட்டிவிடுதல்;* revealing a secret matter of someone to somebody inorder to put him in to trouble.

**ஆப்பம்** பெ. (n.) *நடுப்பகுதி தடிமனாகவும் மென்மையாகவும் ஓரம் மெல்லியதாகவும் இருக்கும் தோசை போன்ற உணவுப்பண்டம்;* rice preparation similar to dosai but softer and thicker in the middle.

**ஆப்பு** பெ. (n.) *மரம் முதலியவற்றைப் பிளக்க அதன் வெடிப்பில் வைத்து அடித்து உள் இறக்கப்படும் கூம்பு வடிவ மரக்கட்டை அல்லது இரும்புத் துண்டு;* wedge. *'பலாப்பழம் பழுக்க ஆப்படிக்கணும்'.*

**ஆப்பைக்கூடு** பெ. (n.) *(அகப்பைக் கூடு) கரண்டி, மத்து போன்றவற்றைச் செருகி வைக்க தொங்கவிடப்பட்டிருக்கும் துளைகள் கொண்ட ஒரு சமையலறைச் சட்டகம்;* a suspended narrow wooden board with holes, for holding ladles, etc., in the kitchen.

**ஆம்**[1] வி. (v.) *செய்யக்கூடுவதாக இருத்தல், ஏற்பளித்தல், கருது கை, அறிவுரை கூறுதல், முடி வெடுத்தல் போன்ற பொருளைத் தரும் ஒரு துணை வினை;* auxiliary verb added to verbal nouns ending in - *அல்* to express probability, permission, possibility, suggestion or proposal. *'இன்று மழை வரலாம்'.*

**ஆம்**[2] இ.சொ. (int.) *1. ஒரு சொற்றொடர் தெரிவிக்கும் செய்தி பிறர் வழியாகத் தெரியவந்தது என்பதை உணர்த்து

வதற்காக அந்த சொற்றொடரின் பயனிலையுடன் சேர்க்கப்படும் இடைச்சொல்; particle added to the predicate of a sentence to indicate that the information conveyed in the sentence is only reported or inferred. *'இவள் அவரோட தங்கச்சியாம்'.* 2. ஒரு கூற்றின் உண்மையை ஏற்பதில் ஒருவருக்கு உள்ள அவநம்பிக்கையை வெளிப்படுத்துவதற்காக ஒரு சொற்றொடரின் பயனிலையோடு சேர்க்கப்படும் பயனிலையோடு சேர்க்கப்படும் இடைச் சொல்; particle used for ridiculing a statement. *'குடிசை போலிருக்கும் கட்டிடம். இது பள்ளிக்கூடமாம்'.* 3. எண்ணுப் பெயர்களோடு இணைக்கப்படும் போது ஒன்று ஒரு வரிசையில் அமைந்திருக்கும் நிலையைக் காட்டுவதற்குக் குறிப்பிட்ட சொல்லோடு சேர்ந்து மற்றொரு சொல்லை உருவாக்கும் இடைச்சொல்; particle forming ordinal numbers. *'எட்டாம் தேதி'.* 4. கேள்விக்கு உடன்பாட்டைத் தெரிவிக்கும்போது பயன்படுத்தும் இடைச்சொல்; particle expressing affirmative response to a question; 'yes' *'இது உன் தம்பியா? 'ஆம்' என் தம்பி தான்'.*

**ஆம்படையான்** பெ. (n.) *கணவன் (அகமுடையான்)*; husband.

**ஆமணக்கு** பெ. (n.) *விளக்கெண்ணெய் எடுக்கப் பயன்படும் கரும் பழுப்பு நிற விதை. இவ்விதையைத் தரும் ஐந்து பிரிவாகப் பிரிந்த இலைகளையுடையச் செடி;* castor seed, plant giving these seeds.

**ஆமவடை** பெ. (n.) *கடலை பருப்புடன் உசிலை (மசாலை) சேர்த்து உரலிலிட்டு ஆட்டி எண்ணெயில் பொரித்தெடுக்கும் வடை;* Vadai prepared out of bengal gram mixed with other spices and fried in oil.

**ஆமாம்** இ.சொ. (int.) *ஆம்*[2] *4 பார்க்க.*

**ஆமாம்சாமி** பெ. (பே.வ.) (n.) *உயர் பதவியில் அல்லது குமுகத்தில் உயர் நிலையில் இருப்பவரை (தன்னலத்துக்காக) மகிழ்விக்கும் வகையில் அவர் சொல்வதற்கெல்லாம் உடன்படுபவர்;* 'yes man'.

**ஆய்தப் பயிற்சி** பெ. (n.) 1. *படைத்துறைப் பயிற்சி;* military exercise. 2. *சிலம்பம் முதலியவற்றின் பயிற்சி;* practice in the art of fencing etc.,

**ஆய்தபூசை** பெ. (n.) *படைகலப் பூசை. கன்னித் (புரட்டாசி) திங்கள் வளர்பிறை முதனால் முதற்கொண்டு அலைமகள், மலைமகள், கலைமகள் ஆகிய முத்தேவியரையும் மும்மூன்று நாளாக ஒன்பது நாள்வரை படைக் கலங்களும், புத்தகங்களும் படைத்துச் செய்யும் பூசை; கருவிப்பூசை;* worship of weapons, tools, books, etc., on the nineth day of Navarathri.

**ஆய்தல்** வி. (v.) 1. *ஆராய்தல், தேடுதல்;* to search, examine, investigate. 2. *சிந்தித்தல்;* to consider. 3. *தெரிந்தெடுத்தல்;* to select, seekout. *'கீரையை ஆய்ந்தாள்'.* 4. *பிரித்தெடுத்தல்;* to separate.

**ஆய்ந்த கீரை** பெ. (n.) *காம்பு களைந்த கீரை;* leaves from which the stems or the pedicles are nipped off.

**ஆய்வகம்** பெ. (பெ.வ.) (n.) *ஆய்வு செய்யும் இடம்;* laboratory in a hospital, factory, school, etc., *அறுவை செய்து எடுத்த கட்டியை ஆய்வகத்திற்கு அனுப்பியுள்ளனர்.*

**ஆய்வடங்கல்** பெ. (பெ.வ.) (n.) *ஒரு குறிப்பிட்ட பொருளின் அடிப்படையில் ஆய்வுக் கட்டுரைகளை, நூல்களை வரிசைப்படுத்தித் தரும் அட்டவணை (பட்டியல்);* bibliography. *'செயகாந்தன் ஆய்வடங்கல்'.*

**ஆய்வாளர்** பெ. (n.) *1. ஒரு குறிப்பிட்ட துறையில் அல்லது தேர்ந்தெடுத்த தலைப்பில் ஆராய்ச்சி செய்பவர்; ஆராய்ச்சி மாணவர்;* researcher; investigator; analyst. *2. காவல்துறை, ஆயத்துறை போன்றவற்றில் இடை நிலை அதிகாரி;* inspector (of police department, customs, etc.,). *'காவல் துறை ஆய்வாளர்'. 3. அலுவலகம், நிறுவனம் போன்றவற்றின் செயல் பாட்டை ஆய்வு செய்யும் அதிகாரி;* inspector. *'விற்பனை வரி ஆய்வாளர்'.*

**ஆய்வு** பெ. (n.) *1. ஆராய்ச்சி;* research, investigation; exploration. *'எண்ணெய் இருப்பதை அறிய ஆய்வு மேற் கொள்ளப்பட்டிருக்கிறது'. 2. திட்டம் முதலியன ஏற்கப்படுவதற்கு உரிய நோட்டமிடுதல்;* (of plans, etc.,) examination.

**ஆய்வுக்கூடம்** பெ. (n.) *அறிவியல் துறை முதலியவற்றில் ஆய்வுகளுக்குத் தேவையான கருவிகள் இருக்கும் இடம்;* laboratory.

**ஆய்வேடு** பெ. (n.) *பெரும்பாலும் உயர்கல்வி நிறுவனங்களில் பட்டம் பெறுவதற்கு ஒரு குறிப்பிட்ட துறை யில் செய்த ஆராய்ச்சியின் முடிவு களைத் தொகுத்து எழுதப்படும் கட்டுரை;* thesis, dissertation.

**ஆயக்கட்டு** பெ. (n.) *குறிப்பிட்ட பாசனம் மூலம் பயன் பெறும் நிலப் பரப்பு;* the area which benefits from a particular source of irrigation (in India) ayacut.

**ஆயக்காரன்** பெ. (n.) *வரி வாங்குபவன்;* tax collector.

**ஆயத்த ஆடை** பெ. (n.) *தேவையான அளவுகளில் தைக்கப்பட்டு விற் பனைக்குக் கிடைக்கும் ஆடை;* readymade garments.

**ஆயி** பெ. (n.) *1. தாய்;* mother. *2. ஒரு மறத் தெய்வம் (சத்தி, காளி);* goddess. *3. மாரியம்மன் தெய்வம்;* goddess Mariyamman. *4. மகளிரைக் குறிக்கும் மதிப்புரவுச் சொல்லீறு;* a term of respect affixed to woman's name.

**ஆயிரத்தில் ஒருவர்** பெ. (n.) *பல நல்ல குணங்களும் தன்மைகளும் நிறைந்த அரிய மாந்தர்;* rare person, one in a thousand.

**ஆயிரம்** பெ. (n.) *1. பத்து நூறுகளைக் கொண்ட (1000) எண்;* one thousand. *2. இவ்வளவு என்று கணக் கிடப்படாத எண்ணிக்கை;* numerous. *3. பல;* many.

**ஆயிரம் இருந்தாலும்** வி.அ. (adv.) *என்னதான் குறைகள் இருந்தாலும்;* whatever may be a good reason for.

**ஆயிரம் பிறை கண்டவர்** பெ. (n.) *எண்பது அகவை நிறைந்தவர் தம் வாழ்நாளில் ஆயிரம் பிறைகள் கண்டிருப்பார் என்று சிறப்பாகக் கூறுவது;* admiring reference to a person who has completed eight years of age.

**ஆயிரம் பெயரோன்** பெ. (n.) *திருமால்;* Thirumal as having 1000 names.

**ஆர்ப்பாட்டம்** பெ. (n.) *1. பகட்டுத் தோற்றம் (ஆடம்பரம்);* great show. *2. ஆரவாரம்;* uproar, loud cry.

**ஆர்வம்** பெ. (n.) *1. விருப்பம்;* desire. *2. பெறக் கருதிய பொருண் மேற் றோன்றிய பற்றுள்ளம்;* hankering.

**ஆர்வலர்** பெ. (n.) *அன்பர், ஈடு பாட்டாளர்;* lovers, fans, devotees.

**ஆரத்தி** பெ. (n.) *1. மணமக்கள் மாண்புமிகு பெரியோர் ஆகியோருக்கு மங்கல நிகழ்ச்சியின் போது கண்ணேறு (திருஷ்டி) கழிப்பதற்காக மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்து சிவந்த ஆலநீர் கரைத்து வலமுறையாகவோ இட முறையாகவோ சுழற்றி நெற்றியில் பொட்டிடும் சடங்கு;* waving of light or

water mixed with lime and turmeric or saffron coloured water before important persons such as newly wedded couple in auspicious occasions. *2. தெய்வத் திருமேனி முன்பு திருவிளக்கு (தீபாராதனை) வழிபாடு;* light or camphor in circular motion before an idol.

**ஆராய்ச்சி** பெ. (n.) *1. ஆய்வு, திறனாய்வு;* research, critical study. *2. நோட்டம், கூர்ந்தாய்வு;* overseeing, investigation, examination.

**ஆலங்கட்டி** பெ. (n.) *1. மழைக்கல்;* hail stone. *2. கல்மழை;* forzen drops of rain. *'நேற்று ஆலங்கட்டி மழை பெய்தது'.*

**ஆலத்தி** பெ. (n.) *ஆரத்தி பார்க்க.*

**ஆலை** பெ. (n.) *கரும்பாலை;* sugar cane.

**ஆவணம்** பெ. (n.) *1. உரிமை ஓலை;* legal document, bond, deed. *2. உரிமை;* right to property, ownership. *3. அடிமைத் தனம்;* slavery, bondage, service.

**ஆவல்** பெ. (n.) *1. பேராசை;* craving, great desire, eagerness, earnestress. *2. விருப் பம்;* desire.

**ஆவி** பெ. (n.) *1. உயிர்;* life. *2. இறந்தோர் உயிர்கள்;* spirits of the dead. *3. ஆதன் (ஆன்மா);* soul. *4. மனம்;* mind. *5. வலிமை;* strength power.

**ஆவிபிரிதல்** பெ. (n.) *சாதல்;* dying.

**ஆவிபோக்கல்** பெ. (n.) *1. உயிர் நீக்குதல்;* taking away life, killing. *2. பேசிப் பேசிக் களைத்தல்;* wasting of energy of excessive talk.

**ஆவியாதல்** பெ. (n.) *ஆவியாய்ப் போதல்;* evaporating.

**ஆழ்தல்** வி. (v.) *1. மூழ்குதல்;* to sink, plunge, dive. *2. அழுந்துதல்;* to be absorbed, immersed, overwhelmed. *3. விழுதல்;* to fall down. *4. சோம்புதல்;* to be idle, lazy. *5. வருந்துதல்;* to suffer.

**ஆழ்துயில்** பெ. (n.) *காதால் கேட்கவும் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு விடை அளிக்கவும் கூடிய உறக்கத்தை ஒத்த நிலைக்கு ஒருவரை உட்படுத்தி அவர் ஆழ்மனத்தில் உள்ளதை அறிய முயலும் உளவியல் பண்டுவ முறை;* hypnosis.

**ஆழங்கால்** பெ. (n.) *1. அதிக ஆழ மில்லாத நீர்நிலை;* shallow water. *2. பலகை தாங்குவதற்காகச் சுவரிற் பதிக்கும் கட்டை;* wooden prop inserted in a wall to support a shelf. *3. பல்கால் பழகி பட்டறிவும் ஈடுபாடும் மிகுதல்;* getting involved after long experience.

**ஆழங்காற்படுதல்** வி. (v.) *1. அழுந்துதல்;* to be immersed in become absorbed in get involved. *2. பட்டறிவு மிகுந்திருத்தல்.*

**ஆழம்** பெ. (n.) *1. ஆழ்ந்திருத்தல்;* depth. *2. நிலத்தில் மேற்பரப்பினின்று கீழே போகும் அளவு, மேலிருந்து கீழே தாழும் அளவு;* measurement from top down. *3. ஆழ்ந்த கருத்து;* depth of thought. *4. நீராழம்;* depth of water. *5. மனத்தின் ஆழம்;* depth of mind.

**ஆழம் பார்த்தல்** வி. (v.) *1. நீர் நிலையின் ஆழத்தை அளந்தறிதல்;* measuring the depth of water sources. *2. ஒருவனறிவு, ஆற்றல், பண்பு முதலியவற்றை ஆய்ந்தறிதல்;* gauge (a person with discreet questions); size (someone) up.

**ஆழ அகலம்** பெ. (n.) *ஒன்றைப் பற்றிய முழுமையான விளக்கம் அல்லது முழுமையான அறிவு;* complete details of something. *'தொழிலின் ஆழ அகலம் புரியாமல் அதில் இறங்கக் கூடாது'.*

**ஆழாக்கு** பெ. (n.) *உழக்கு, அரைக் காற்படி;* 1/8 of a measure, dry or liquid measure known otherwise as Uḻakku.

**ஆள்காட்டிவேலை** பெ. (n.) *ஏமாற்று வேலை;* betrayal.

**ஆள்கை** பெ. (n.) *ஆளுதல்;* governing, rule.

**ஆள் சேர்த்தல்** பெ. (v.) *படைக்கு அல்லது தொழிற்சாலைக்கு ஆட்களைத் தேர்ந் தெடுத்தல்;* recruit (to the army, factory, etc.,).

**ஆள்படை** பெ. (பே.வ.) (n.) *உதவி செய்யச் சேர்ந்திருக்கும் வேலையாட்கள்;* helpers, manpower.

**ஆள் மாறாட்டம்** பெ. (n.) *ஒருவன் தன்னை வேற்றாளாகக் காட்டி ஏமாற்றுதல்;* impersonation (with an intention to cheat).

**ஆள்விடுதல்** வி. (v.) *ஆள் வாயிலாகச் செய்தி அனுப்புதல்;* to send a person as a messenger.

**ஆளறிதல்** பெ. (n.) *ஆளை அடையாளம் காட்டுதல்;* identification.

**ஆளாக்குதல்** வி. (v.) *1. கோபம், வருத்தம் போன்ற விரும்பத்தகாத நிலைகளுக்கு ஒருவரை உள்ளாக் குதல், உட்படுத்துதல்;* plunge someone into something; drive. *'நாட்டின் நிலை அவரைத் துன்பத்திற்கு ஆளாக்கியது'. 2. ஒருவர் வாழ்க்கையில் நல்ல நிலைக்கு வருதல்;* come up in life.

**ஆளாகுதல்** வி. (v.) *பருவமடைதல்;* girl attain puberty.

**ஆளுமை** பெ. (n.) *1. ஒரு மாந்தனின் தனிப்பட்ட குணத் தொகுப்பு;* personality; individuality. *'முரட்டுத் தனம் ஆளுமையின் வெளிப்பாடு'. 2. சொத்தின் மேல் ஒருவருக்கு இருக்கும் உரிமை;* right of possession or ownership.

**ஆற்றல்** பெ. (n.) *1. திறமை;* capability; ability skill. *'நல்லது கெட்டது பகுத்துணரும் ஆற்றல்'. 2. ஒரு செயலுக்கு அல்லது இயக்கத்துக்குத் தேவையான மின் ஆற்றல், வெப்பம், விசை போன்றவை;* energy, power.

**ஆற்றாமை** பெ. (n.) *ஒரு சூழலில் எதுவும் செய்ய முடியாத நிலை; இயலாமை;* helplessness, despair. *'அவளைப் பார்க்கவே முடியாது என்கிற ஆற்றாமை அவனிடம் இருந்தது'.*

**ஆற்றுதல்** வி. (v.) *1. மிகவும் சூடாக இருக்கும் ஒன்றின் சூட்டைக் குறைத்தல்;* cool. *'பால் கொதிக்கிறது ஆற்றிக்கொடுங்கள்'. 2. புண்ணை குணமாக்குதல்;* heal a wound. *3. தலைமுடியிலுள்ள ஈரத்தைக் காற்றில் உலர்த்துதல்;* dry the hair. *4. துன்பத்தில் இருப்பவரை தேற்றுதல்; பிறரிடம் கூறித் தன் மனச் சுமையைக் குறைத்துக் கொள்ளுதல்;* console a person in distress; seek consolation. *'மனைவி இறந்ததால் சோகத்தை ஆற்றமாட்டாமலிருந்தார்'.*

**ஆறப்போடுதல்** வி. (v.) *ஒரு சிக்கலுக்கு உடனடியாகத் தீர்வு காணாது, தள்ளிப்போடுதல்;* defer (something untill the problem loses its urgency).

**ஆறவமர** பெ. (n.) *அமைதியாய், பொறுமையாக;* calmly and patiently.

**ஆறறிவு** பெ. (n.) *ஐம்புலன் உணர்வோடு கூடிய பகுத்தறியும் திறன்;* rational faculty.

**ஆறினகஞ்சி** பெ. (n.) *ஒரு செயலை உடனே முடிக்காமல் தள்ளிப் போட்டதால் அந்தச் செயலுக்கான உந்துதல் தீவிரத் தன்மையை இழந்த நிலை;* something that has been allowed to lose its momentum.

**ஆறுதல்** பெ. (n.) *1. வருத்தம், ஏமாற்றம் முதலியவற்றிலிருந்து மனம் மீள தெம்பு தருவது; தேறுதல்;* comfort, consolation. *'மனம் பாராமாயிருந்த போது அப்பா கூறிய சொற்கள் ஆறுதலாக இருந்தன'. 2. செயல் படுவதில் மிகப் பொறுமை;* calmness. *'உன்னுடைய ஆறுதலான போக்கு வணிகத்திற்குச் சரிவராது'.*

**ஆறுதல்பரிசு** பெ. (n.) *போட்டியில் கலந்துகொண்டு வெற்றி பெறாத வர்களை ஊக்குவிக்கும் வகையில் அளிக்கப்படும் பரிசு;* consolation prize.

**ஆறுமணிப்பூ** பெ. (n.) *மாலையில் மலரும் மலைப்பூ வகை;* evening primrose for it blossoms at about 6 P.M.

**ஆனந்தக்கண்ணீர்** பெ. (n.) *மகிழ்ச்சிப் பெருக்கின் அடையாளமாய் வெளிப் படும் கண்ணீர்;* tears of joy.

**ஆனந்தம்** பெ. (n.) *பெருமகிழ்ச்சி, பேரின்பம்;* felicity, rapturous joy, bliss.

**ஆனைமுகன்** பெ. (n.) *பிள்ளையார்;* ganesa as the elephant - faced god.

## இ

**இக்கட்டு** பெ. (n.) *நெருக்கடி; கடினமான சிக்கல்;* predicament; quandary; crisis.

**இக்கரை** பெ. (n.) *கடல் அல்லது ஆற்றின் கரை;* this side of the shore or bank (of a river, lagoon, etc.,).

**இக்காலம்** பெ. (n.) *1. இந்தக் காலம்;* the present time. *2. இப்பொழுது;* at this time, in this period.

**இகத்தாளம்** பெ. (n.) *ஏளனம்;* mockery.

**இகழ்ச்சி** பெ. (n.) *1. தாழ்வு;* undervalueing *2. இகழ்வு;* detraction. *3. இழிவு;* dishonour,contempt. *4. தாழ்ச்சி;* disparagement. *5. ஈனம்;* baseness. *6. பழி;* scorn. 7. *குற்றம்;* fault.

**இங்குமங்கும்** வி.அ. (adv.) *அங்குமிங்கும் பார்க்க.*

**இங்ஙனம்** பெ. (n.) *1. இங்கு;* here. *2. இவ்வாறு;* thus, in this manner.

**இசகுபிசகு** பெ. (n.) *1. முறைகேடு;* irregularity. *2. குழப்பம்;* confusion. *3. பிறழ்வு;* dislocation.

**இசை** பெ. (n.) *பண்;* music.

**இசைக்கருவி** பெ. (n.) *இசையை உண் டாக்கும் கருவி;* musical instrument.

**இசைத்தட்டு** பெ. (n.) *இசை, பேச்சு முதலியவை கோடுகளாகப் பதிவு செய்யப்பட்டிருக்கும் நெகிழியால் (பிளாஸ்டிக்) ஆன வட்டவடிவத் தகடு;* (gramophone) record.

**இசைத்தமிழ்** பெ. (n.) *முத்தமிழுள் ஒன்று;* Tamil literature which consists of verses set to music as distinct from poetry or drama, one of Mu-t-tamil.

**இசை நாற்காலி** பெ. (n.) *இசை ஒலிக்கும் போது தங்கள் எண்ணிக்கையை விடக் குறைவாகவும், வட்ட மாகவும் போடப்பட்டிருக்கும் நாற்காலி களைச் சுற்றி ஓடிக் கொண்டும் இசை நின்றதும் நாற்காலிகளில் இடம் பிடித்து உட்கார்ந்தும் விளையாடும் விளையாட்டு;* game of musical chairs.

**இசையமைப்பாளர்** பெ. (n.) *திரைப்படம், நாடகம் முதலியவற்றுக்கு இசை யமைப்பவர்;* music director or composer (of a film, play, etc.,).

**இசைவு** பெ. (n.) *1. பொருத்துகை;* suitability, fitting in one with another. *2. தகுதி;* fitness. *3. உடன்பாடு;* agreement, consent, approval. *4. ஏற்றது;* appropriateness. *5. இணக்கம்;* agreement. *6. பொருத்து;* joining so as to fit in, co-ordination.

**இஞ்சி** பெ. (n.) *1. கரிப்புள்ள இஞ்சிப் பூண்டு;* ginger plant. *2. இஞ்சிக் கிழங்கு;* ginger - tuber.

**இஞ்சிக்கருக்கு** பெ. (n.) *இஞ்சிச் சாற்றைக் கொதிக்க வைத்த குடிநீர்;* boiled juice of ginger.

**இஞ்சிச்சாறு** பெ. (n.) *இஞ்சியிலிருந்து எடுக்கும் சாறு;* ginger juice.

**இஞ்சித்துவையல்** பெ. (n.) *இஞ்சியைப் பிற கறிப்பொருள்களோடு சேர்த் தரைத்த ஒரு வகைத் துவையல்;* ginger made into a paste by treating it with other condiments for use as a side dish for food.

**இஞ்சிமுறைப்பாகு** பெ. (n.) *1.* *இஞ்சியை அறுத்துத் தேனிலிட்டுப் பாகம் செய்த ஒரு பாகு;* ginger crushed and preserved in honey. *2.* *இஞ்சியை வெல்லத்திலிட்டுச் சமைத்த ஒரு வகைச் சுண்டாங்கி;* boiled with jaggery or sugar and used in food to give it relsh; a seasoning for food.

**இட்டலி** பெ. (n.) *அரிசி மாவும், உளுந்து மாவும் சேர்த்து ஆவியில் வேக வைக்கும் சிற்றுண்டி வகை;* cake prepared by steaming semi-solid dough made of rice mixed with black gram.

**இட்டலிக் கொப்பரை** பெ. (n.) *இட்டலி சமைக்கும் ஏனம்;* brass vessel into which the ittali-tattu is placed for making steamed rice cakes.

**இட்டலித்தட்டு** பெ. (n.) *இட்டலி வார்க்கும் தட்டு;* a metal plate inserted into the ittali-k-kopparai with the dough to steam and prepare rice cakes.

**இட்டுக்கட்டுதல்** வி. (v.) *1.* *இல்லாததை ஏற்றிச் சொல்லுதல்;* to concoct. *2.* *கற்பனை செய்தல்;* to draw upon the imagination as in writing poetry or drama. *3.* *செயலை முடிக்க முனைந்து நிற்றல்;* to determine to finish a deed.

**இட்டுச்செல்தல்** வி. (v.) *ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு அல்லது மற்றொரு நிலைக்குக் கொண்டு போதல்;* lead to the specified place or level. *'இக்குறுகலான வழி மண்டபத்திற்கு இட்டுச் சென்றது'.*

**இட்டுநிரப்புதல்** வி. (v.) *(எதிர்மறையில்) ஈடு செய்தல்;* in the negative or implying the negative fill the place of something of someone or something. *'மறைந்த தலைவரின் இடத்தை யாராலும் இட்டு நிரப்ப முடியாது'.*

**இடக்கண்** பெ. (n.) *1.* *இடப்புறக்கண்;* left eye. *2.* *ஓரப்பார்வை;* side glance.

**இடக்கு** பெ. (n.) *1.* *இடக்கர்;* vulgar language. *2.* *ஏறுமாறு;* cavil, captious speech. *3.* *முரண் செயல்;* rudeness, obstinacy. *'குதிரை இடக்கு பண்ணுகிறது'. 4.* *இழிசொல்;* mean word

**இடக்குமடக்கு** பெ. (n.) *1.* *ஏறுமாறு;* cavil, spacious objection. *2.* *அலைக்கழிவு;* harasment.

**இடக்குமுடக்கு** பெ. (n.) *1.* *நெடுக்கம்;* straits, difficult circumstances. *2.* *இடர்ப்பாடு;* dilemma, predicament.

**இடக்கை** பெ. (n.) *1.* *இடது கை;* left hand. *2.* *இடக்கையாற் கொட்டும் ஒரு தோற்கருவி;* small drum beaten by the left hand.

**இடக்கையன்** பெ. (n.) *இடக்கையால் வேலை செய்பவன்;* one who does work by left hand.

**இடதுசாரி** பெ. (n.) *தொழிலாளர் உரிமைகளையும், பொதுவுடைமையையும் பேணும் போக்கு. அந்தப் போக்கைக் கொள்கையாகக் கொண்டிருப்பவர்;* leftist, leftist ideology.

**இடப்பெயர்ச்சி** பெ. (n.) *1.* *விசையின் காரணமாக ஒரு பொருள் நகர்வதால் அடையும் இடமாற்றம்;* motion. *2.* *கோள்கள் மாறுவதைக் குறிப்பிடும் சொல்;* migration of planets.

**இடம்பெறுதல்** வி. (v.) *குழுவில், பட்டியலில், நிகழ்ச்சியில் அல்லது காட்சியில் சேர்க்கப்படுதல்;* find a place in something be included. *'இந்திய பண்பாட்டுக் குழுவில் தமிழர் இடம் பெறவில்லை'.*

**இடம் பொருள் ஏவல்** பெ. (n.) *ஒன்றைக் கூறுவதற்குச் செய்வதற்கு உகந்த சூழல்;* circumstances suitable for

something under consideration; context. *'இடம் பொருள் ஏவல் பார்த்து நீ அவரிடம் பேசி யிருக்க வேண்டும்'.*

**இடம் போடுதல்** வி. (v.) *பேருந்து, தொடரி (ரயில்) போன்றவற்றில் துணி, பை முதலியவற்றை அடையாளமாக வைத்து உட்கார்வதற்கான இடத் தைப் பிடித்துக்கொள்ளுதல்;* block a seat in a crowded bus, train, etc., by placing a piece of cloth, etc., on the seat.

**இடமாற்றம்** பெ. (n.) *மாற்றல்;* transfer (of employees from one place to another).

**இடர்** பெ. (n.) *1. இடையூறு;* trouble, hurdle. *2. துன்பம்;* suffering.

**இடர்ப்பாடு** பெ. (n.) *1. இடையூறுக்கு உள்ளான நிலை;* trouble, obstacle. *2. துன்பத்துக்குள்ளான நிலை;* state of suffering.

**இடறுதல்** வி. (v.) *1. கால் தடுக்குதல்;* to stumble, strike one's foot against. *2. துன்பப்படுதல்;* to be afflicted, troubled.

**இடிச்சொல்** பெ. (n.) *இடிந்துரைக்கும் கடுஞ்சொல்;* sharp reproof.

**இடித்தல்** வி. (v.) *1. முழங்குதல்;* to sound loud; to make a noise, as a gun to roar as lion. *2. இடியொலிபடுதல்;* to thunder. *3. நோதல்;* to throb, to beat, to ache as the head. *4. தாக்கப்படுதல்;* to come in contact with hit against. *5. மோதுதல்;* to strike against as a ship against the shore. *6. சினத்தல்;* to be angry, furious. *7. தூளாக்குதல்;* to pound in a mortar, to bray with a pestle; to reduce flour. *8. தகர்த்தல்;* to beat so as to break, to batter to pieces, demolish, shatter. *'வீட்டையிடித்துத் தள்ளினான்'.* *9. நசுக்குதல்;* to press, to crush as sugarcane. *10. தாக்குதல்;* to push or thrust side -wise as with the elbow. *11. முட்டுதல்;* to attack with horns, as a bull. *12. இடியிடித்தல்;* to thunder.

**இடித்துக்காட்டுதல்** வி. (v.) *குத்திக் காட்டுதல்;* draw attention to someone's lapses, weakness, etc., in a mean or malicious way; jibe.

**இடித்துரைத்தல்** வி. (v.) *அறிவுரை கூறித் திருத்தும் நோக்கத்தோடு கண் டித்தல்;* rebuke (some one with the intention of correcting etc.,).

**இடிதல்** வி. (v.) *1. தகர்தல்;* to break, crumble,to be in ruins as a wall; to full to pieces. *2. கரையழிதல்;* to be washed away, to become eroded, as the bank of a river. *3. முளை முறிதல்;* to become bruise, to be broken, as the grain of rice. *'அரிசி இடிந்து போயிற்று'.* *4. வருந் துதல்;* suffer. *5. மலைத்தல்;* to be stunned, staggered. *'அவள் துக்க செய்தி கேட்டு இடிந்து போனாள்'.* *6. முறிதல்;* to break in two, part in two.

**இடிதாங்கி** பெ. (n.) *கட்டடத்தின் மீது இடிவிழாதபடி காக்க வைக்குங் கம்பி அமைப்பு;* lightning conductor or rod.

**இடிந்துபோதல்** வி. (v.) *1. அரிசி மற்றும் தவசம் போன்றவை உமி நீக்கப்படும் பொழுதும், தீட்டும் பொழுதும் உரு அழிந்து உடைந்து போதல்;* when removing the husks and polishing the rice and grain be broken. *2. எதிர்பாராமல் வரும் துன்பச் செய்தி கேட்டு அதிர்ச்சியில் உறைந்துபோதல்;* shocked and frozen by hearing the unexpected sad news.

**இடிபடுதல்** வி. (v.) *1. தாக்கப்படுதல்;* to be assaulted, elbowed. *2. நொறுங்குதல்;* to be comminuted as rice. *3. வெடி படுதல்;* to crackle as fire. *4. துன்பப் படுதல்;* to be vexed or harried.

**இடிபாடு** பெ. (n.) *ஊர்தி, கட்டடம் போன்றவை தகர்ந்து விழுந்த நிலை; சிதைவு;* debris, wreckage. *'கட்டடத்தின் இடிபாடுகளுக்*

*கிடையே சிக்கியிருந்தவர்களை காப்பாற்றினார்கள்.*

**இடிமுழக்கம்** பெ. (n.) *இடியொலி;* thunder clap.

**இடியப்பம்** பெ. (n.) *சிற்றுண்டி வகை;* steamed rice-cake pressed through perforated mould and resembling vermicelli .

**இடியப்பவுரல்** பெ. (n.) *இடியப்பம் பிழியும் ஏனம்;* vessel used for making idi-y-appam.

**இடியாப்பம்** பெ. (n.) *இடியப்பம் பார்க்க.*

**இடியுரல்** பெ. (n.) *1. மருந்துச் சரக்கு களிடிக்கும் ஒருவகைக் கல்லுரல்;* stone vessel with obconical ends connected by a constricted neck, used for pounding drugs. *2. இடியப்பவுரல்;* mould made of iron or wood for making pastry.

**இடிவிழுதல்** வி. (v.) *1. இடி தரையில் இறங்குதல்;* to strike as lightning conductor. *2. தாங்க முடியா துன்பம்;* intolerable sorrow.

**இடுக்காஞ்சட்டி** பெ. (n.) *விளக்குத் தகழி (நெல்லை);* bowl of a lamp made of clay.

**இடுக்கி** பெ. (n.) *1. குறடு;* Pincers, tongs, forceps, tweezers, nipers . *2. எலி முதலியவற்றை அகப்படுத்தும் பொறி;* steal trap. *3. நண்டு முதலியவற்றின் கவ்வுமுறுப்பு;* prehensile chelae of a crab or a scorpion.

**இடுக்கு** பெ. (n.) *ஒடுங்கிய இடைவெளி;* crevice, aperture.

**இடுக்குப்பனை** பெ. (n.) *கள்ளூறும் பனை (யாழ்ப்.);* palmyra free from which toddy is drawn.

**இடுக்குவழி** பெ. (n.) *சந்துவழி;* narrow way or lane.

**இடுக்குவாசல்** பெ. (n.) *சிறு நுழைவாசல்;* strait narrow gate.

**இடுகாடு** பெ. (n.) *பிணம் புதைக்குமிடம்;* burial ground.

**இடுகுறி** பெ. (n.) *1. வைக்கப்படும் அடையாளம்;* symbol. *2. காரண அடிப்படை இல்லாமல் ஒரு பொருளுக்கு வழங்கும் பெயர்;* name without based on reason.

**இடுங்குதல்** வி. (v.) *உள்ளொடுங்குதல்;* to shrink, contract.

**இடுதல்** வி. (v.) *1. வைத்தல்;* to place, deposit. *2. பரிமாறுதல்;* to serve, distribute. *3. கொடுத்தல்;* to give, grant, bestow, as alms. *4. சொரிதல்;* to pour. *5. குறியிடுதல்;* to give as a name to a new born child. *6. சித்திரமெழுதுதல்;* to draw as a figure. *7. உண்டாக்குதல்;* to yield, generate. *8. முட்டையிடுதல்;* to lay as an egg. *9. தின்பண்டம் முதலியன உருவாக்குதல்;* to form or fashion to mould as cakes. *10. தொடுத்து விடுதல்;* to discharge as arrows. *11. கைவிடுதல்;* to forsake, desert. *12. தொடங்குதல்;* to begin. *13. செய்தல்;* to do. *14. புதைத்தல்;* to bury.

**இடுப்பு ஒடிதல்** வி. (v.) *கடுமையான வேலை செய்வதால் மிகுந்த களைப்பு ஏற்படுதல்;* be run-down (through over work).

**இடுப்புவலி** பெ. (n.) *பிள்ளைப்பேற்று வலி;* labour pain.

**இடுப்பு வளைதல்** வி. (v.) *உடலை வருத்தி உழைத்தல்;* be inclined to do physical work; exert oneself.

**இடை** பெ. (n.) *1. இடுப்பை ஒட்டிய பகுதி;* waist (especially of women). *2. காலத்தில் நடு;* middle (in time). *'முதல், இடை, கடை என மூன்று தமிழ்க் கழகங்கள் இருந்தன'.*

**இடைக்காலத்தடை** பெ. (n.) *சட்டத்தின் செயல்பாட்டையோ கீழ்நீதிமன்றத்தின் உத்தரவையோ மேல்முறையீடு முடியும் வரை நிறுத்தி வைக்கும்படி மேல்நயன்மன்றம் பிறப்பிக்கும் தடை உத்தரவு;* interim stay.

**இடைக்காலம்** பெ. (n.) *1. முடிவானத் தீர்வு காண்பதற்கு முன் உள்ள நிலை;* interim. *2. அரசியல், இலக்கிய வரலாற்றில் பண்டைக் காலத்துக்கும், இக்காலத்துக்கும் இடைப்பட்ட காலம்;* period between the ancient and the modern.

**இடைக்கிடை** வி.அ. (adv.) *1. இடையிடையே, நடுநடுவே;* in between (an action, event) every now and then. *2. அவ்வப்போது;* from time to time; periodically.

**இடைச்செருகல்** பெ. (n.) *மூலச் செய்யுளிற் பிறரால் சேர்க்கப்பட்ட பகுதி;* interpolation.

**இடைஞ்சல்** பெ. (n.) *1. நெருக்கம்;* narrowness, closeness. *'இடைஞ்சல் வழி'*. *2. தடை;* obstruction, hindrance. *3. தொல்லை;* trouble, distress.

**இடைத்தரகர்** பெ. (n.) *1. பெரும்பாலும் வணிக ஒப்பந்தம் போன்ற பெரும் பேரத்தை முடித்து வைக்கும் ஆள்;* middle man. *2. அரசுத் திட்டங்களின் பயன் பயனாளிகளுக்கும், விற்பனையின் பயன் உருவாக்குநர்களுக்கும் முழுமையாகச் செல்லவிடாமல் ஊதியம் தேடிக்கொள்ளும் ஆள்;* middle man.

**இடைத்தரம்** பெ. (n.) *நடுத்தரம்;* medium quality, intermediate grade, neither big nor small.

**இடைத்தலைவலி** பெ. (n.) *விட்டு விட்டு வரும் தலைநோய்;* headache usually occuring at intervals - intermittent headache.

**இடைத்தேர்தல்** பெ. (n.) *ஒரு தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் பதவி விலகினாலோ, இறப்பு அடைந்தாலோ அந்தத் தொகுதியில் மீண்டும் நடத்தப்படும் தேர்தல் சட்ட அவை பாராளுமன்றத்துக்கோ வரையறுக்கப்பட்ட காலத்துக்கு முன் நடத்தப்படும் பொது வாக்கெடுப்பு;* by election / election conducted before the end of the term.

**இடைநீக்கம்** பெ. (n.) *1. சம்பளம் பெறும் பணியாளரை அவரது பணியொழுங்கின்மைக்காகப் பணியிலிருந்து விலக்கிவைத்தல்;* to suspend from any privilage, office, emolument, etc., for a time. *2. கட்சிக் கட்டுப் பாட்டை மீறும் தொண்டரைக் கட்சியிலிருந்து இடைக்காலமாக நீக்குகை;* to put or hold in a state of suspense or suspension. *3. குறுங்காலமாக நிறுத்திவைத்தல்;* to stop for a time.

**இடைநேரம்** பெ. (n.) *1. சிற்றுண்டி கொள்ளுஞ் சமயம்;* recess, tiffin time, interval. *2. நடுப்பகல்;* noon. *3. இரண்டு காலப் பகுதிகளுக்கு இடைப்பட்ட நேரம்;* interval between two periods of time.

**இடைப்புழுதி** பெ. (n.) *விதைப்பாட்டு நிலம், புழுதி நிலம்;* land which is neither very moist nor very dry which is suitable for sowing.

**இடைப்பேச்சு** பெ. (n.) *நடுநடுவே சொல்லும் சொல்;* interject.

**இடைபோகம்** பெ. (n.) *1. இடைக்காலத்து விளைவு;* interim crop. *2. இடையில் புன்செய்ப் பயிர் விளைவு;* dry crop between two spells of wet caltivation.

**இடைமறித்தல்** வி. (v.) *1. பேச்சு மற்றும் செயலில் குறுக்கிடுதல்;* interrupt.

2. *வழிமறித்தல்;* block the way of someone; intercept.

**இடையறாத** பெ.அ. (adj.) *இடைவிடாத; தொடர்ச்சியான;* uninterrupted; without break; incessant.

**இடையிடையே** வி.அ. (adj.) *ஒரு செயலின் அல்லது நிகழ்ச்சியின் நடுநடுவே/ஒரு காலத் தொடர்ச்சியில் அவ்வப் போது;* in between an action event / every now and then. *'சாப்பிடும்போது இடையிடையே தண்ணீர் குடிக் காதே'.*

**இடையூறு** பெ. (n.) *இடைஞ்சல், தடை;* impediment, obstruction, hindrance.

**இடைவிடல்** பெ. (n.) *விட்டுவிட்டுத் தொடங்கல்;* off and on intermittent activity, irregular functioning.

**இடைவிடாமல்** கு.வி.எ. (adv.) *1. எப் போதும்;* always, incessantly, constantly. 2. *தொடர்ந்து;* continually.

**இடைவெட்டு** வி. (v.) *பேச்சில் குறுக் கிடுதல்;* interfere while someone is speaking. *'நான் பேசிக் கொண் டிருக்கும்போது இடைவெட்டி பேசாதே'.*

**இடைவெளி** பெ. (n.) *1. வெளிப்பரப்பு;* gap, intervening space. 2. *பிளப்பு;* hole as in a wall, cleft.

**இடைவேளை** பெ. (n.) *திரைப்படம், விளையாட்டு, அலுவலகம், முதலிய வற்றில் உணவு, தேநீர் முதலியன அருந்தத் தரப்படும் குறுகிய ஓய்வு வேளை;* interval in a show; short break for lunch, tea, etc.,

**இண்டிடுக்கு** பெ. (n.) *மிகச் சிறந்த இடைவெளி அல்லது துளை;* cleft nook, minute cavity. *'இண்டும் இடுக்குமாய்'.*

**இணக்கம்** பெ. (n.) *1. இசைப்பு;* fitting well together as two planks. 2. *பொருத்தம்;* suitability. 3. *நட்பு;* friendship. 4. *இசைவு;* agreement. 5. *திருத்தம்;* exactness.

**இணங்கல்** பெ. (n.) *உடன்பாடு;* consent.

**இணங்குதல்** வி. (v.) *மனம் பொருந்துதல், ஒத்துக்கொள்ளல்;* to consent, comply with agree to.

**இணுக்கு** பெ. (n.) *1. கைப்பிடியளவு;* little quantity as a handful of leaves from a plant. 2. *இலைக்கொத்து;* stalk with leaves. *'ஒரு கருவேப்பிலையிணுக்குப் போதும்'.* 3. *வளார்;* twig, forming part of foliage. 4. *கிளை முதலியவைகளின் இடைச்சந்து;* fork or joining of a twig, its branch.

**இணை**[1] வி. (v.) *1. ஒன்று சேர்தல்;* join together get united . *'அனைத்துப் பள்ளிகளும் இணைந்து இந்தப் போட்டியை நடத்துகின்றனர்'.* 2. *ஒன்று மற்றொன்றில் சேர்தல், கூடுதல்;* be linked with another; flow into the main river; join; mingle. *'இந்தச் சாலை தேசிய நெடுஞ்சாலையோடு இணைகிறது'.*

**இணை**[2] பெ.அ. (adj.) *1. ஒத்த நிலை, சமம்;* equal, match. 2. *இரண்டாகச் சேர்ந்து இருப்பது அல்லது இருப்பவர்;* pair. ' 3. *இரட்டையரில் ஆண் அல்லது பெண்; துணை;* mate, partner. 4. *ஒன்றின் போக்கை ஒத்த மற்றொரு போக்கு;* paralled.

**இணைத்தல்** வி. (v.) *1. கட்டுதல்;* to fasten together. 2. *சேர்த்தல்;* to link. 3. *உவமித்தல்;* to compare.

**இணைதல்** வி. (v.) *1. சேர்தல்;* to join. 2. *இசைதல்;* to agree. 3. *ஒத்தல்;* to be like, to resemble. 4. *கூடுதல்;* to couple.

**இணைப்பு** பெ. (n.) *1. இசைப்பு;* union, connection, coupling. 2. *ஒப்பு;* equality, similarity.

**இணைபிரியாத** பெ.அ. (adj.) *ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்திருக்காத நிலை;* inseparable (friends, etc.,). *'இணை பிரியாத நண்பர்கள்'.*

**இணையதளம்** பெ. (n.) *இணையத்தில் குறிப்பிட்ட செய்தி, தரவல், விளக்கம் போன்றவற்றைக் கொண்ட குறிப் பிட்ட அமைப்பு, தனியாள் போன்றோர் வடிவமைத்துக் கையாளும் செய்தித் தொகுப்பு;* website.

**இணையப் பல்கலைக்கழகம்** பெ. (n.) *இணையத்தின் மூலம் உயர்கல்வி அளிக்கும் அமைப்பு;* virtual university.

**இணையாளி** பெ. (n.) *கூட்டுக்காரன்;* companion.

**இத்தனை** பெ. (n.) *1. இவ்வளவு;* so much, this much. *2. சில;* few.

**இத்துடன்** இ.சொ. (int.) *ஒரு நிகழ்ச்சி, செயல் போன்றவை முடிவடைகிறது என்ற பொருளில் ஒரு சொற்றொடரின் முதலில் பயன்படுத்தப்படும் இடைச் சொல்;* particle used in the sense of with this. *'இத்துடன் இன்றைய நிகழ்ச்சிகள் முடிவடைந்தன'.*

**இதர** பெ.அ. (adj.) *பிற; மற்ற;* and, other. *'இந்தியாவிலும் இதர சில நாடு களிலும் வேலையில்லாத் திண் டாட்டம் ஒரு பெரும் சிக்கலாகும்'.*

**இதழ்** பெ. (n.) *1. பூவின் தோடு;* petal. *2. உதடு;* lip. *3. கண்ணிமை;* eye lid. *4. பனையேடு;* palmyra leaf, palm leaf. *5. (நாள், வாரம், மாதம் எனத் தொடர்ந்து வெளிவரும்) அச்சேடு;* newspaper, magazine, periodical, journal.

**இதழ் குவித்தல்** வி. (v.) *1. உதட்டைக் குவித்தல்;* shrinking of the lips conically making a small orifice with the lips. *2. கண்மூடுதல்;* closing the eye lids.

**இதழியல்** பெ. (n.) *செய்தி. அச்சு மற்றும் வானொலி, தொலைக்காட்சி ஊடகங்கள் குறித்தத் துறை;* journalism.

**இதற்குள்(ளே)** இ.சொ. (int.) *ஒரு செயல் எதிர்பார்த்ததைவிட விரைவாக நடந்துவிட்டதை வியப்புடன் குறிப் பிடப் பயன்படுத்தும் இடைச்சொல்;* particle used in the sense of "so soon" already.

**இந்தண்டை** குவி.எ. (adv.) *இப்பக்கம்;* this side.

**இந்தா** இடை. (int.) *1. இதோ;* exclamation calling a person's attention to something near. *2. இங்கே வா என்னுங் குறிப்பு மொழி;* an interjection used in the sense of here take.

**இந்திய ஆட்சிப்பணி** பெ. (n.) *உள்நாட்டில் அரசு நிருவாகப் பொறுப்புகளை மேற்கொண்டிருக்கும் மத்திய அரசின் பணிப்பிரிவு (இ.ஆ.ப.);* Indian Administrative Service (I.A.S.).

**இந்திய காவல்பணி** பெ. (n.) *உள்நாட்டில் சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்கும் பொறுப்பை மேற்கொண்டிருக்கும் மத்திய அரசின் பணிப்பிரிவு; (இ.கா.ப.);* Indian Police Service.

**இந்தியர்** பெ. (n.) *இந்திய நாட்டைத் தாயகமாகக் கொண்டவர்;* Indian.

**இப்படி** குவி.எ. (adv.) *1. இவ்வகை;* in this manner, thus, so. *2. இவ்வாறு;* likewise.

**இப்பேர்ப்பட்ட** கு.பெ.எ. (adj.) *இத்தன்மைய தான;* such as, of this kind.

**இப்போதைக்கு** வி.அ. (adv.) *தற்காலிக மாக; தற்சமயத்துக்கு;* for the time being; for this time.

**இப்போதைய** பெ.அ. (adj.) *தற்சமயம் நிலவும்;* the present.

**இம்மி** பெ. (n.) *மிகச் சிறிதளவு;* bit. *'ஆற்றங்கரையில் இம்மி நிழல்கூட இல்லை'.*

**இமை** பெ. (n.) *1. கண்ணிமை;* eye lid. *2. கண்ணிமைக்கை;* winking of the eye.

*3. கண்ணிமைப்பொழுது;* time spent in winking. *4. கண்ணிமை மயிர், கண் பீலி;* eye lash.

**இமைகொட்டுதல்** வி. (v.) *கண்ணிதழ் சேர்தல்;* to wink, twinkle.

**இமைத்தல்** வி. (v.) *1. இமை கொட்டுதல்;* to wink. *2. ஒளிவிடுதல்;* to glitter, twinkle, shine. *3. சுருங்குதல்;* to diminish, shrink.

**இமைப்பொழுது** பெ. (n.) *கண்ணிமைக்கும் நேரம்;* brief moment of time as the twinkling of the eye.

**இமையாடுதல்** வி. (v.) *கண்கொட்டுதல்;* wink as the eyes.

**இமையோரம்** பெ. (n.) *மயிர் முளைத் திருக்கும் கண்ணிமையின் நுனி;* edge or the margin of the eye lids.

**இயக்குதல்** வி. (v.) *1. செலுத்துதல்;* to drive, cause to go. *2. தொழிற்படுத் துதல்;* to activate and influence the movements of as God prompts all living beings. *3. பழக்குதல்;* to train or break in as a bull or a horse. *4. ஒலிப்பித்தல்;* to cause to sound. *5. நடத்துதல்;* to conduct.

**இயக்குநர்** பெ. (n.) *1. திரைப்படம்,நாடகம், தொலைக்காட்சி நிகழ்ச்சி போன்ற வற்றை இயக்குபவர்;* (of a film or play, etc.,). *2. ஒரு நிறுவனத்தின் அல்லது ஓர் அரசுத் துறையின் உயர் நிர்வாகத் தலைவர்;* director (of an institution, a department of the government, etc.,).

**இயங்குதல்** வி. (v.) *1. அசைதல்;* to move stir. *2. போதல்;* to go, travel, proceed. *3. உலாவுதல்;* to walk about, promenade.

**இயல்(லு)தல்** வி. (v.) *1. கூடியதாதல்;* to be possible. *2. நேர்தல்;* happen. *3. பொருந்துதல்;* to be associated with. *4. தங்குதல்;* to abide. *5. செய்யப் படுதல்;* to be made. *6. அசைதல்;* to move, dance. *7. நடத்தல்;* to move forward. *8. உலாவுதல்;* to walk about gaily. *9. உடன்படுதல்;* to accept. *10. அணுகுதல்;* approach. *11. ஒத்தல்;* to resemble. *12. போட்டியிடுதல்;* to competite.

**இயல்பு** பெ. (n.) *1. தன்மை;* nature. *2. ஒழுக்கம்;* proper behaviour. *3. நற்குணம்;* goodness. *4. முறை;* prescribed code of conduct.

**இயலாமை** பெ. (n.) *கூடாமை;* inability, impossibility.

**இயற்கை** பெ. (n.) *1. (மாந்தனால் உருவாக்கப்படாமல்) தானாகவே உலகில் காணப்படும் மலை, நீர் நிலை, நிலம் போன்றவற்றையும், தானாக உருவாகும் மழை, காற்று, இடி, மின்னல் போன்றவற்றையும் குறிக்கும் சொல்;* nature. *2. மாந்தன், விலங்கு இவர்களுக்குரிய இயல்பான பண்பு;* natural habits. *'அவர் பேச்சும், சிரிப்பும், நடத்தையும் இயற்கையாக இல்லை'.*

**இயற்பெயர்** பெ. (n.) *1. வழங்குதற்கு இடப்பட்ட சிறப்புப் பெயர்;* proper name. *2. பெற்றோரிட்ட பெயர்;* christened name.

**இயற்றுதல்** வி. (v.) *1. செய்தல்;* to do, make, perform, effect, execute. *2. நடத்துதல்;* to cause to act. *3. பொருள் தேடல்;* to earn. *4. தோற்றுவித்தல்;* to create. *5. நூல் செய்தல்;* to compose, to write as a book.

**இரக்கம்** பெ. (n.) *1. அருள்;* mercy, grace. *2. மனவுருக்கம்;* pity, compassion. *3. மனவருத்தம்;* regret, sorrow. *4. ஒலி;* sound.

**இரட்டித்துச் சொல்லுதல்** வி. (v.) *1. மீட்டுங் கூறுதல்;* to repeat. *2. மாறு*

படச் சொல்லுதல்; to make a discrepant statement.

**இரட்டைக்கதவு** பெ. (n.) இரண்டு பிரிவாயுள்ள கதவு; double doors.

**இரட்டைக் குழந்தைகள்** பெ. (n.) ஒரே பேற்றில் பிறந்த இரு குழந்தைகள்; twins.

**இரட்டை நாக்கு** பெ. (n.) மனசாட்சிக்கு சிறிதும் அச்சப்படாமல் எளிதாகப் பேச்சை மாற்றி பேசும் தன்மை; tendency to say unabashedly the opposite of what one has said earlier; being two faced.

**இரட்டை நாடி** பெ. (n.) *1.* இரு பிரிவாக இருப்பது போல் தோற்றம் தரும் அகன்ற முகவாய்; double chin; chin. *2.* பருத்த உடல்; heftiness. *'அவருக்கு இரட்டை நாடி உடம்பு'.*

**இரட்டைப் பிள்ளைகள்** பெ. (n.) இரட்டைக் குழந்தைகள் பார்க்க.

**இரட்டைப் பிறவி** பெ. (n.) இரட்டைக் குழந்தைகள் பார்க்க.

**இரட்டைப்பொருள்** பெ. (n.) மேலோட்டமாக ஒரு பொருளும் உள்ளடக்கமாக நாகரிகமற்ற ஒரு (சில நேரங்களில்) பொருளும் என இரண்டு வகையாகப் புரிந்து கொள்ளக் கூடிய பொருள்; double meaning word.

**இரட்டை மண்டை** பெ. (n.) பிறந்த குழந்தையின் மண்டை எலும்புகள் உரிய காலத்துக்கு முன்பே ஒன்று சேர்ந்துவிடுவதால் இணைக்கிணை அளவை விடச் சற்று பெரிதாக இருக்கும் தலை; head formed by premature closure of skull bones in a baby.

**இரட்டையர்** பெ. (n.) *1.* இரட்டைக் குழந்தைகள் பார்க்க. *2.* இணைந்தே செயல்படும் அல்லது காணப்படும் இருவர்; term of two; pair.

**இரட்டை வேடம்** பெ. (n.) *1.* ஒரு திரைப்படத்தில் ஒரே நடிகர் இரண்டு வகையான வேடங்களை ஏற்று நடித்தல்; (in a film) dual role. *2.* எதிரெதிரான இரண்டு தரப்புகளுக்கும் அல்லது நிலைகளுக்கும் சார்பாக நடந்துகொள்வது போலக் காட்டிக் கொள்ளும் தன்மை; pretending to be loyal to both the opposing parties; double dealing; double cross.

**இரண்டகம்** பெ. (n.) நம்பிக்கை மோசடி; betrayal; breach of trust. *'உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கலாமா?'.*

**இரண்டறக் கலத்தல்** வி. (v.) தனித் தனியானவை வேற்றுமை தெரியாத படி ஒன்றாதல்; become one with someone or something.

**இரண்டாக்குதல்** வி. (v.) குடும்பம், ஊர், கட்சி, குழு போன்றவற்றில் வேற்றுமை உணர்வை உண்டாக்கி இரண்டாகப் பிரிந்து போகுமாறு செய்தல்; divide (into factions).

**இரண்டாகுதல்** வி. (v.) இரு துண்டாதல்; to be split up; get divided.

**இரண்டாங்கட்டு** பெ. (n.) வீட்டின் இரண்டாம் பகுதி; second set of apartments inside a house, inner court.

**இரண்டாம்பட்சம்** பெ. (n.) குறிப்பிடப்படும் இரண்டில் ஒன்று மற்றொன்றைவிட மதிப்பு, முகாமை ஆகியவற்றில் குறைந்தது; உடனடி பார்வைக்கு உரியதாக அமையாதது; secondary.

**இரண்டாம்பேர் அறியாமல்** வி.அ. (adv.) மிக நெருங்கியவர்கள் கூட அறியாமல் எவருக்கும் தெரியாமல் ; secretly.

**இரண்டாம் போகம்** பெ. (n.) *இரண்டா முறைப் பயிர் விளைவு;* second crop raised on land in a year.

**இரண்டிலொன்று** பெ. (n.) *இறுதி முடிவு;* final decision.

**இரண்டுங்கெட்ட நேரம்** பெ. (n.) *1. அந்திப் பொழுது;* dusk of the evening which is neither day or night. *2. பொருத்த மில்லா நேரம்;* not suitable time.

**இரண்டுங்கெட்டான்** பெ. (n.) *1. நடத் தையைக் கொண்டு பார்க்கும் போது நல்லது கெட்டதைப் பிரித்துப் பார்க்கவோ அறிவாளியாக நடந்து கொள்ளவோ தெரியாதவர்;* (callow person; naive person). *2. எந்தச் செயலுக்கும் ஏற்றதாக இல்லாத, இன்னது என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாத வகை;* inconvenient, inopportune.

**இரண்டுபடுதல்** வி. (v.) *1. பகைமையால் குடும்பம், ஊர் முதலானவை இரண்டாகப் பிரிதல்;* of family, village, etc, split, into two (opposing factions); be divided. *2. ஓர் இடம் ஆரவாரத்தோடு காணப் படுதல்;* (of a place) be tumultuous (because of riotous revelry or celebration. *'விடுமுறை நாட்கள் என்றால் பிள்ளைகளால் வீடே இரண்டுபடும்'.*

**இரண்டுபண்ணுதல்** வி. (v.) *1. புரளி பண்ணுதல்;* to tease. *2.வேற்றுமை உண்டாக்குதல்;* to cause to disagree.

**இரண்டெட்டில்** கு.வி.எ. (adv.) *1. விரை வில்;* very soon; quickly, literally in two strides. *2. வெகு அண்மையில்;* very near. *'அவர் வீடு என் வீட்டிலிருந்து இரண்டெட்டில் இருக்கிறது'.*

**இரப்பை** பெ. (n.) *இமையிதழ்;* eyelid.

**இரவல்** பெ. (n.) *1. ஒரு பொருளையோ, பணத்தையோ கடனாகப் பிறரிடம் வேண்டிப் பெறுதல்;* borrowing from other's as loan. *2. மீண்டும் தருவதாகக் கொண்ட பொருள்;* materials borrowed.

**இரவுபகல்** பெ. (n.) *இராக் காலமும் பகற் காலமும்;* day and night.

**இரவுபகலாக** வி.அ. (adv.) *ஓய்வில் லாமல் தொடர்ச்சியாக நடை பெறுதல்;* all the time. *'என் அப்பா இரவு பகலாக உழைத்துக் கட்டிய வீடு'.*

**இரவோடு இரவாக** வி.அ. (adv.) *ஒரு செயலைப் பிறர் அறியாவண்ணம் இரவில் செய்து முடிப்பது;* in the darkness of night; by night *'சாலையோர மரத்தை இரவோடு இரவாக வெட்டிக் கொண்டு போய்விட் டார்கள்'.*

**இரா** பெ. (n.) *இரவு;* night.

**இராக்குருடு** பெ. (n.) *மாலைக்கண்;* night blindnes, nyctalobia.

**இராட்டினம்** பெ. (n.) *1. நூல் நூற்குங் கருவி;* Spinning wheel. *2. நீரிறைக்கும் கருவி;* machine drawing water. *3. பஞ் சரைக்குங் கருவி;* machine for reeling. *4. ஏறி விளையாடும் சுழல் தேர்;* giant wheel in which people ride and amuse themelves at festivals.

**இராத்தூக்கம்** பெ. (n.) *இரவுத் தூக்கம்;* night sleep as opposed to day sleep.

**இராப்பகல்** பெ. (n.) *1. இரவும் பகலும்;* night and day. *2. எப்பொழுதும்;* always.

**இராப்பள்ளிக்கூடம்** பெ. (n.) *இரவில் நடத்தப்படும் பள்ளி;* night school.

**இராப்பாடி** பெ. (n.) *இரவில் வீடு வீடாகச் சென்று சோறு வாங்கும் துணி வெளுக்கும் தொழிலாளி;* a laundry man who begging at night.

**இராப்பிச்சை** பெ. (n.) *இரவில் எடுக்கும் பிச்சை;* begging at night.

**இருகூறு** பெ. (n.) *1. இரண்டு பங்கு;* two parts, two shares. *2. மாறானது, எதிரானது;* opposition, contrariety.

**இருட்டடிப்பு** பெ. (n.) ஒரு செய்தி, நிகழ்ச்சி அல்லது ஒருவருடைய வெற்றி போன்றவற்றைப் பிறர் அறியாதபடி வேண்டுமென்றே மறைக்கும் *செயல்;* deliberately preventing something from being, known; blackout.

**இருட்டல்** பெ. (n.) *இருளாதல்;* becoming dark.

**இருட்டறை** பெ. (n.) *1. ஒளியில்லா அறை;* dark room. *2. அறியாமை;* ignorance.

**இருட்டு** பெ. (n.) *1. இருள்;* darkness. *2. அறியாமை;* obscurity of mind; ignorance. *3. மயக்கம்;* illusion.

**இருத்தல்** வி. (v.) *1. உளதாதல்;* to exist. *'ஊரிலே ஏரி இருக்கிறது'*. *2. நிலை பெறுதல்;* to remain. *3. உட்காருதல்;* to sit down. *4. உள்ளிறங்குதல்;* to sink, as a foundation, comedown. *5. உயிர் வாழ்தல்;* to live. *6. அணியமாயிருத்தல்;* to be ready to act. *7. நினைத்தல்;* imagine, expect.

**இருத்திப்பேசுதல்** வி. (v.) *அழுத்திச் சொல்லுதல்;* to speak emphatically or impressively.

**இருந்துபோதல்** வி. (v.) *1. செயலறுதல்;* to be rendered inactive. *2. கீழே அழுந்துதல்;* to sink. *3. விலை போகாது தங்குதல்;* to remain unsold as good.

**இருநினைவு** பெ. (n.) *இரண்டுபட்ட மனம்;* double mindedness, wavering mind.

**இருப்பிடம்** பெ. (n.) *தங்குமிடம்;* residence.

**இருப்பு** பெ. (n.) *1. இருக்கை;* seat. *2. இருப்பிடம்;* residence. *3. நிலை;* stage, position in life. *4. கையிருப்பு;* balance on hand, whether of cash, reserve funds or commodities.

**இருபிறவி** பெ. (n.) *கலப்பின விலங்கு வகை;* hybrid animal.

**இருபுறம்** பெ. (n.) *இரண்டு பக்கம்;* two sides.

**இருபோகம்** பெ. (n.) *1. ஆண்டுக்கு இருமுறை விளைவு;* two crops, one raised in the wet season and another in the dry. *2. நிலமுடையோனுக்கும் பயிரிடுவோனுக்கும் உரிய பங்கு;* two shares of the crop, one of the landlord and the other of the tenant.

**இருபோது** பெ. (n.) *காலை மாலை பொழுதுகள்;* morning and evening.

**இருமல்** பெ. (n.) *1. செறுமுதல்;* cough, bronchitis. *2. ஆட்டு நோய்வகை;* contagious disease of sheep.

**இருமனம்** பெ. (n.) *1. இரண்டகம்;* double mindedness. *2. துணிவின்மை;* irresolution.

**இருமுதல்** வி. (v.) *இருமல்;* cough.

**இருமுறை** பெ. (n.) *இரண்டுமுறை;* twice, two times.

**இருளுதல்** வி. (v.) *1. ஒளி மங்குதல்; இருட்டாதல்;* to become dark, as the sky over-cast, to be come dim. *2. கறுப்பாதல்;* to be black in colour. *3. அறியாமை கொள்ளுதல்;* to be darkened as the mind.

**இலக்கமிடுதல்** வி. (v.) *எண்ணிடுதல்;* numbering.

**இலக்கு** பெ. (n.) *1. குறிப்பொருள்;* mark, butt, target. *2. அம்பெய்யும் இலக்கு;* target for an arrow. *3. அடையாளம்;* distinguishing mark or sign. *4. இடம்;* place. *5. நாடிய பொருள்;* aim. *6. எதிரி;* competitors. *7. அளவு;* measure. *8. குறித்த காலம்;* convenient time.

**இலைக்கறி** பெ. (n.) *கீரைக்கறி;* leaves prepared for food; greens.

**இலைக்கொழுக்கட்டை** பெ. (n.) *பணிகார வகை;* a kind of thin pastry.

**இலைச்சருகு** பெ. (n.) *உலர்ந்த இலை;* dry leaves.

**இலைச்சாறு** பெ. (n.) *இலையினின்று பிழிந்த சாறு;* juice extracted from leaves.

**இலைச்சுருள்** பெ. (n.) *வெற்றிலைச்சுருள்;* roll of betel leaves.

**இலைபோடுதல்** வி. (v.) *உணவுக்கு இலைக்கலம் இடுதல்;* to set leaf plates in order to serve food.

**இலைமறைகாய்** பெ. (n.) *மறைபொருள்;* meaning in an expression.

**இலையடை** பெ. (n.) *அப்பவகை;* a kind of flat sweet cake prepared by steaming the dough enclosed in a leaf.

**இலையப்பம்** பெ. (n.) *இலையடை பார்க்க;* see ilai-y-aḍai.

**இலையுதிர்காலம்** பெ. (n.) *இலைகள் உதிர்தற்குரிய பருவம்;* season when leaves wither from trees, autumn.

**இலைவடகம்** பெ. (n.) *அரிசிக் கூழை இலையில் ஊற்றிக் காய வைத்து எடுக்கும் வடகம்;* wafers of rice flour prepared on leaves.

**இலைவடாம்** பெ. (n.) *இலைவடகம் பார்க்க;* see ilai vaḍagam.

**இவ்விரண்டு** பெ. (n.) *1. தனித்தனி இரண்டு;* to each. *'ஆளுக்கு இவ் விரண்டு கொடுத்தான்'. 2. இந்த இரண்டு;* these two.

**இவள்** சு.பெ. (demons.pron.) *பெண்ணைக் குறிக்கும் அண்மைச்சுட்டுச் சொல்;* this woman or girl; she used to denote the female among rational beings.

**இவன்** சு.பெ. (demons.pron.) *ஆணைக் குறிக்கும் சொல்;* this man or this boy.

**இழப்பு** பெ. (n.) *இழக்கை;* loss.

**இழவு** பெ. (n.) *1. இழப்பு;* loss. *2. கேடு;* distruction, ruin. *3. சாவு;* death. *4. இறுதிச் சடங்கு;* funeral. *5. தொந்தரவு;* trouble, worry. *6. எச்சில்;* leavings in plates after eating. *7. வறுமை;* destitution.

**இழவுகாத்தல்** வி. (v.) *சாவுத் துயரங் கொண்டிருத்தல்;* to stay at home to mourn till the eighth day after the funeral ceremony.

**இழவுகாரன்** பெ. (n.) *சாவுக்குரியவன்;* mourner.

**இழவு கூட்டுதல்** வி. (v.) *தொல்லையுண் டாக்குதல்;* to cause confusion and uproar as at a funeral to create trouble.

**இழவுகொடுத்தல்** வி. (v.) *இழவு கூட்டு பார்க்க.*

**இழவு சொல்லுதல்** வி. (v.) *சாவறிவித்தல்;* to give intimation concerning a funeral.

**இழவு விழுதல்** வி. (v.) *இறப்பு நேரிடுதல்;* to be full as death.

**இழவு வீடு** பெ. (n.) *சாவீடு;* house where a death has occurred.

**இழிவு** பெ. (n.) *1. தாழ்வு;* inferiority, lowness. *2. இகழ்ச்சி;* disgrace, dishonour. *3. மதிப்புக் குறைவு;* diminution, decrease. *4. கேடு;* ruin, destruction. *5. குற்றம்;* fault. *6. தீட்டு;* pollution. *7. பள்ளம்;* depression, hollow.

**இழிவுபடுத்தல்** பெ. (n.) *தாழ்வுபடுத்தல்;* demean.

**இழுக்கடித்தல்** வி. (v.) *அலைய வைத்தல்;* cause vexatious trouble to a person by constantly putting off the fulfilment of an obligation to him.

**இழுக்கு** பெ. (n.) *1. பொல்லாங்கு;* wickedness. *2. இகழ்ச்சி;* disgrace. *3. வழு;* defect. *4. தாழ்வு;* inferiority. *5. மாறி;* forgetfulness. *6. வழுக்கு நிலம்;* slippery ground.

**இழுத்தல்** வி. (v.) *1. ஈர்த்தல்;* to draw. *2. கவர்தல்;* attract as a magnet.

*3. வயப்படுத்துதல்;* to influence. *4. நீளச் செய்தல்;* to lengthen, stretch. *5. வலிந்து தொடர்புபடுத்துதல்;* to drag one into an affair. *6. கால நீட்டித்தல்;* to protect as time. *7. ஒலியை நீட்டுதல்;* to lengthen as the sound in singing, speaking or in reading. *8. உள் வாங்குதல்;* to swallow up. *9. உறிஞ்சுதல்;* to absorb as a sponge. *10. வலிப்புண்டாதல்;* to be twitched with pain often used impersonally.

**இழுத்துக்கொண்டுபோதல்** வி. (v.) *எதிர்பார்த்ததைவிட மிக அதிகமாக செலவாகுதல்;* (of expenditure) go beyond the estimate.

**இழுத்துப்பறித்தல்** வி. (v.) *1. வலிந்து கொள்ளுதல்;* to take away by force. *2. பெருமுயற்சி செய்தல்;* put forth great and protracted effort. *3. போராடுதல்;* to struggle against contend.

**இழுத்துப்பிடித்தல்** வி. (v.) *செலவு செய்வதில் கட்டுப்பாட்டுடன் இருத்தல்;* rein in or control expenditure.

**இழுத்துப்பேசுதல்** வி. (v.) *1. நிறுத்தி மெல்லப் பேசுதல்;* to speak slowly in a measured manner. *2. நழுவ விட்டுப் பேசுதல்;* to speak evasively.

**இழுத்துப்போட்டுக்கொள்தல்** வி. (v.) *வேலை அல்லது பொறுப்பை வலிய ஏற்றுக்கொள்ளுதல்;* take upon oneself work or responsibilities, etc., voluntarily.

**இழுத்துவிடுதல்** வி. (v.) *ஒருவரைச் சிக்கலில் மாட்டவைத்தல்;* land something in a difficult situation.

**இழுபறி**[1] பெ. (n.) *1. பணியில் சுணக்கம்;* delay. *2. இடைஞ்சல்;* obstruction.

**இழுபறி**[2] பெ. (n.) *முடிவு எவ்வாறு இருக்கும் என்பது தெரியாத நிலை; உறுதியற்ற நிலை;* uncertainty.

**இழுப்பறை** பெ. (n.) *மிசையில் (மேஜையில்) வெளியே இழுக்கக் கூடிய முறையில் உள்ள மேல்புறம் திறந்திருக்கும் பெட்டி;* drawer in a table.

**இழுப்பாட்டம்** பெ. (n.) *நிச்சயமற்ற நிலை, இழுபறி;* (state of) uncertainty.

**இழுப்பு** பெ. (n.) *1. இழுத்தல்;* act of hauling. *2. வலிப்பு (நோய்);* fits, spasm. *3. புகை, பொடி முதலியவற்றை உறிஞ்சுதல்;* drawing on, draging. *4. மூச்சுத்திணறல்;* wheezing. *5. பேச்சில் தயக்கத்தைக் காட்டும் நீட்டிப்பு;* drawl. *'ஐயா..... என்று இழுக்கிறே. சொல்' என்றார் முதலாளி. 6. நீரின் (வேகம்) விரைவு;* water current. *'ஆற்றின் நடுவே இழுப்பு அதிகம்'.*

**இழுவை (ரயில்) தொடரி** பெ. (n.) *மலைப்பகுதிகளில் சுமையை இழுத்துச் செல்லப் பயன்படும் இரண்டு உறுதியான கம்பிகளின் வழியே நகரும் தொடரி;* cable car, winch.

**இழை** பெ. (n.) *1. நூல்;* yarn. *2. நூலிழை;* darning. *3. கல் இழைத்த அணிகலன்;* ornament. *4. மகளிர் அணிவடம்;* kind of necklace, garland. *5. கையிற் கட்டுங் காப்பு;* string tied about the wrist for a vow.

**இழைக்கயிறு** பெ. (n.) *1. நூற்கயிறு;* cord, piece of string. *2. காப்பு நூல்;* thread or string fastened as an amulet about the hair on the arm or around a tree. *3. பந்தல் போன்றவைக் கட்டப் பயன்படும் தேங்காய் நாரை முறுக்கித் தயாரிக்கும் மெல்லிய கயிறு;* rope made from coconut husk.

**இழைத்தல்** வி. (v.) *1. மரச்சட்டம் மற்றும் பலகைகளை வழவழப்பாக்கவும், மெருகேற்றவும் இழைப்புளியால் சீவுதல், தேய்த்தல்;* plane (a piece of wood). *2. சந்தனம், மஞ்சள் முதலிய*

வற்றைச் சிறிது தண்ணீர் விட்டுக் கல் போன்றவற்றில் தேய்த்தல்; rub (sandal wood, turmeric, etc., on a slab stone with a few drops of water to obtain a paste . *ஒள்ளிழைக்கரையால் சேலை அல்லது கரை நெய்தல்;* brocade. *4. முத்து முதலிய மணிகளைப் பதித்தல்;* set (pearl, stones, etc., in a piece of jewellery) be inlaid with. *'கல் இழைத்த அட்டிகை'.*

**இழைதல்** வி. (v.) *1. உணர்வு புரியும் தன்மையில் வெளிப்படுதல்;* be shot through with affection etc,. *'அவள் குரலில் பாசம் இழைந்தது'.* 2. *இணைதல்;* blend (harmoniously). *'குழலின் இசையும் வீணையின் நாதமும் இழைந்து மனதை மயக்கின்'.* 3. *ஒட்டி உறவாடுதல்;* be chummy. *4. உடை உடலோடு பொருந்திப் படிந்திருத்தல்;* (of clothes) be flowing on some one's body.

**இழைப்பு** பெ. (n.) *ஊதை (காச) நோய்;* asthma.

**இழைப்புளி** பெ. (n.) *இழைக்கும் தச்சுக் கருவி;* tool for smoothening wooden surface, joiners plane, trying plane.

**இழையோடுதல்** வி. (v.) *1. ஒரு செய்தி அல்லது உணர்வு ஒன்றின் பின் புலத்தில் ஊடுருவி இருத்தல்;* be threaded with (feelings, emotions, etc.,). *'அவர் பேச்சில் துன்பம் இழையோடியது'.* 2. *மூச்சு மிகச் சிறியதாக வெளிப்படுதல்;* breath be a faint trace. *'உயிர் இன்னும் போகவில்லை, மூச்சு இழையோடுகிறது'.*

**இளக்கம்** பெ. (n.) *நெகிழ்வுத்தன்மை;* State of being loose.

**இளக்காரம்** பெ. (n.) *ஒருவரை இகழ்வாகப் பேசி, பகடி செய்து மதிக்காமல் நடந்து கொள்ளும் போக்கு;* tendency to slight, humiliate or look down upon. *'அவன் அவளை இளக்காரமாகப் பேசினான்'.*

**இளக்குதல்** வி. (v.) *கெட்டித் தன்மையிலிருந்து நெகிழச் செய்தல்;* melt, liquefy.

**இளகுதல்** வி. (v.) *கெட்டித்தன்மை இழத்தல்;* soften, melt slightly.

**இளங்கதிர்** பெ. (n.) *1. பயிரின் முற்றாக் கதிர்;* tender ears of corn. *2. எழு ஞாயிற்றின் மெல்லிய கதிர்;* early rays of the sun. *3. எழு ஞாயிறு;* early morning.

**இளங்கருக்கு** பெ. (n.) *சிறிது காய்ச்சிய கருக்கு (கசாயம்);* decoction.

**இளங்கலை** பெ. (n.) *பல்கலைக்கழகப் படிப்பில் முதல்நிலைப் பட்டப் படிப்பு;* undergraduate (course).

**இளங்கள்** பெ. (n.) *புளிக்காத கள், இனிப்புக் கள்;* sweet toddy.

**இளங்கன்று** பெ. (n.) *1. இளம்பருவக் கன்று;* young calf. *2. மரக்கன்று;* sapling.

**இளங்காய்** பெ. (n.) *முதிராக் காய்;* fruit just formed.

**இளங்காலை** பெ. (n.) *1. வைகறை;* early morning. *2. இளமைப்பருவம்;* period of youth.

**இளங்காற்று** பெ. (n.) *மெல்லிய காற்று;* gentle breeze.

**இளங்குடல்** பெ. (n.) *1. கடைக்குடல்;* rectum. *2. சிறிய குழந்தையின் குடல்;* the soft bowels of a child.

**இளங்குருத்து** பெ. (n.) *முதுமையில்லாத குருத்து;* tender shoot.

**இளங்குழம்பு** பெ. (n.) *திண்ணமில்லாத சாறு; ஒருவகைக் குழம்பு;* a kind of loose broth.

**இளங்கொடி** பெ. (n.) *1. கொடி போன்ற உடலமைப்புள்ள இளம் பெண்;* slim woman as resembling a young vine. *2. ஆவின் நஞ்சுக்கொடி;* after birth of a cow. *3. முதிராத கொடி;* tendrill.

**இளசு** பெ. (n.) *1. காய்கறி, தேங்காய் போன்றவற்றைக் குறிப்பிடும்போது முற்றாதது;* (of vegetables, coconut, etc., tender). *2. (பெரும்பாலும் பன்மையில்) இளம் பெண் அல்லது இளம் பெண்ணும் ஆணும்;* (in plural) young or young people, the youth.

**இளஞ்சாயம்** பெ. (n.) *சிறிது தோய்த்த சாயம்; பற்றாத சாயம்;* slight tinge in dyeing.

**இளஞ்சிவப்பு** பெ. (n.) *வெண்சிவப்பு;* light red, pink.

**இளஞ்சூடு** பெ. (n.) *வெதுவெதுப்பு;* gentle heat, warmth.

**இளஞ்சூல்** பெ. (n.) *1. பயிரிளங்கரு;* young ears of corn which have not yet shot forth. *2. முதிராக் கரு;* embryo.

**இளந்தண்டு** பெ. (n.) *முளைக்கீரை;* plant the leaves of which serves as a pot herb.

**இளந்தயிர்** பெ. (n.) *முற்றும் உறையாத புளிக்காத தயிர்;* half - curdled milk.

**இளந்தாரிக்கல்** பெ. (n.) *இளவட்டக்கல் பார்க்க.*

**இளந்தென்றல்** பெ. (n.) *தென் திக்கிலிருந்து வீசும் மெல்லிய காற்று;* gentle breeze from the south.

**இளந்தேகம்** பெ. (n.) *1. இளமை உடம்பு;* to body of a young man. *2. குழந்தை பெற்ற பெண்ணின் உடம்பு;* the delicate body of a woman immediately after child birth. *3. குழந்தை உடம்பு;* child's body.

**இளநாக்கடித்தல்** வி. (v.) *உடன் பாடின்மை போற் காட்டுதல்;* feign reluctance.

**இளநீலம்** பெ. (n.) *வெளிறிய நீலம்;* light blue.

**இளப்பம்** பெ. (n.) *மதிப்புக்குறைவு;* disgrace.

**இளம்பச்சை** பெ. (n.) *வெளிறிய பச்சை;* whitish green, light green.

**இளம்பதம்** பெ. (n.) *1. முற்றா நிலை;* immaturity. *2. மருந்தெண்ணெய் முதலியன காய்ச்சுவதில் இளம் பாகம்;* consistency of a liquid resulting from the slow application of uniform gentle heat as in the preparation of medicinal oils. *3. சிறிது வெந்த நிலை;* state of being moderately prepared as in cooking, parching, toasting.

**இளம்பருவம்** பெ. (n.) *1. இளமை;* young age. *2. மெல்லிய பதம்;* under cooked.

**இளம்பிள்ளை** பெ. (n.) *சிறுபிள்ளை;* baby, infant, child.

**இளம்பிள்ளைவாதம்** பெ. (n.) *குழந்தைகளின் கை கால் வளர்ச்சியைத் தாக்கி அவற்றின் இயங்கு ஆற்றலை முடக்கும் ஒருவகைத் தொற்றுநோய்;* poliomyelitis.

**இளம்புடம்** பெ. (n.) *சிறியபுடம்;* small fire for calcination.

**இளமண்டை** பெ. (n.) *சிறிய, மெல்லிய தலை, குழந்தையின் தலையோடு;* skull of a child.

**இளமரக்கா** பெ. (n.) *வயல் சூழ்ந்த சோலை;* grove reared in the midst of green fields.

**இளமை** பெ. (n.) *1. இளம்பருவத்து அழகிய தோற்றம்;* childhood, youthfulness. *2. மென்மை;* tenderness. *3. அறிவு முதிராமை;* immaturity of knowledge and intellect. *4. ஒன்றை வேறொன்றாக மயக்கும் மயக்கம்;* illusion.

**இளரத்தம்** பெ. (n.) *விளைவுகளை எண்ணிப் பார்க்காமல் துணிச்சலுடன் எதையும் செய்ய முயலும் இளம் அகவை;* daring young age; impetuous blood (of youth).

**இளவட்டம்** பெ. (n.) *இளைஞர்களைப் பொதுவாகக் குறிப்பிடப் பயன் படுத்தும் சொல்;* youth.

**இளவட்டக்கல்** பெ. (n.) *இளைஞர்களின் உடல் வலிமை ஆய்ந்தறிய சிற்றூரில் வைக்கப்படும் ஒருவகை உருண்டைக் கல்;* round stone about 1 foot in diameter, common in villages with which the young men in a village test or compare their strength.

**இளவாடை** பெ. (n.) *வடக்கிலிருந்து வரும் குளிர் மென்காற்று;* mild north wind.

**இளவெந்நீர்** பெ. (n.) *குறைந்த சூடுள்ள வெந்நீர்;* tepid water.

**இளவெயில்** பெ. (n.) *காலை வெயில்;* morning sunshine which is warm but not sensibly hot.

**இளவேனில்** பெ. (n.) *வெப்பம் முதிராக் கோடை;* early summer season.

**இளிச்சவாயன்** பெ. (n.) *1. எப்போதும் பல்லைக் காட்டுபவன்*; one who is always showing his teeth, one who grins like a monkey. *2. எளிதில் ஏமாற்றப் படுபவன்;* one who is easily misled, simpleton.

**இளித்தல்** வி. (v.) *1. இகழ்தல்;* to disgrace. *2. எள்ளல்;* to laugh, riducule. *3. பல்லைக் காட்டுதல்;* to grin; to show the teeth as in cringing or in craving servilely.

**இளிப்பு** பெ. (n.) *பொருளில்லாது பல்லைக் காட்டிச் சிரித்தல்;* grinning. *2. நாணுதல்;* feeling disgrace or bashful.

**இளைத்தல்** வி. (v.) *1. சோர்தல்;* to grow weary, to be fatigued, to get exhausted. *2. மெலிதல்;* to be emaciated, to grow lean, to become worn out. *3. பின்னடைதல்;* to fail before a foe; to lag behind arival; to yield to superior force. *4. வளங்குறைதல்;* to reach the stage of diminishing returns as land.

**இளைப்பாறுதல்** வி. (v.) *1. இளைப்பாறப் பொழுதின்றி நீங்கி ஓய்ந்திருத்தல்;* to retire from active work, as a pensioner. *2. துஞ்சுதல்;* eternal rest.

**இளையவன்** பெ. (n.) *1. அகவையிற் குறைந்தவன்;* younger person, one who is junior in age. *2. விடலைப் பருவத்தன்;* lad, youth. *3. தம்பி;* younger brother,so called because he is junior than oneself. *4. முருகக்கடவுள்;* Lord Murugan.

**இளையாள்** பெ. (n.) *1. தங்கை;* younger sister. *2. திருமகள்;* Lakshmi, as the younger of two sisters, *mūḍevi* being after the first. *3. மனைவியருள்;* youngest of one's wives.

**இற்றுப்போதல்** வி. (v.) *நைந்து போதல்;* to be worn off; reduced broken, to become decayed.

**இற்றுவிழுதல்** வி. (v.) *நைந்து விழுதல்;* to decay and fall.

**இறக்கம்** பெ. (n.) *1. இறங்குகை;* descent, debarkation. *2. சரிவு;* declivity, depression. *3. இறங்குதுறை;* ford, crossing of a river. *4. நிலை தவறுகை;* decline from a high position.

**இறக்குதல்** வி. (v.) *1. இறங்கச் செய்தல்;* to lower, let-down, put down as a load. *2. எண்ணெய் முதலியவை வடித்தல்;* to distil. *3. அடக்குதல்;* to reduce or bring down as pride. *4. உயர்த்துவது போல இகழ்தல்;* to praise ironically. *5. கெடுத்தல்;* to injure. *6. கொல்லுதல்;* to kill,slay. *7. நஞ்சைத் தணித்தல்;* to counteract or subdue the effect of poisons or poisonous bites.

**இறக்குமதி** பெ. (n.) *1. துறைமுகத்திலிருந்து பொருள் இறக்குகை;* importing. *2. இறக்குந் துறைமுகப் பொருள்கள்;* imports.

**இறகு** பெ. (n.) *1. சிறகு;* wing, pinion. *2. தனியிறகு;* feather, quill. *3. மயிற் பீலி;* peacock's feather.

**இறகுக்கூடு** பெ. (n.) *தூவல் (பேனா) வைக்குங் கூடு;* pen rack.

**இறங்குநெற்றி** பெ. (n.) *முன்பக்கமாகப் புடைத்துக் காணும் நெற்றி;* a rounded eminence projecting on the surface of the forehead. It is opposed to *ஏறு நெற்றி.* receding forehead.

**இறங்குபொழுது** பெ. (n.) *பிற்பகல்;* afternoon, the period of the Sun's declivity from the point overhead.

**இறங்குமுகம்** பெ. (n.) *தணியும் நிலை;* declination, ebb in affairs.

**இறங்குவெயில்** பெ. (n.) *பிற்பகல் வெயில்;* decreasing, sunshine as the Sun descends towards the horizon.

**இறத்தல்** வி. (v.) *சாதல்;* to die.

**இறந்த காலம்** பெ. (n.) *ஒரு செயல் நடந்து முடிந்த காலம்;* past time (denoted by past tense).

**இறந்துபோதல்** பெ. (n.) *சாதல்;* to die.

**இறப்பு**[1] பெ. (n.) *சாவு;* death.

**இறப்பு**[2] பெ. (n.) *வீட்டுக் கூரையின் சாய்வு;* rafter.

**இறவாணம்** பெ. (n.) *கூரையின் உள்பக்கச் சரிவின் கீழ்ப்பகுதி;* eavos of a thatched roof. '*சத்தம் கேட்டதும் இறவாணத்தில் செருகியிருந்த அரிவாளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான்*'.

**இறவை** பெ. (n.) *நீர் நிலைகளிலிருந்து நீரை இறைத்துப் பாசனம் செய்யும் முறை;* lift irrigation.

**இறுக்கம்** பெ. (n.) *1. நெகிழ்வோ தொய்வோ இடைவெளியோ இல்லாத தன்மை; அழுத்தம்; உறுதி;* being taut; tightness, closeness, *2. கட்டுப்பாடுகளைக் கடைபிடிப் பதில் உறுதி;* firmness. *3. எரிச்சல், கோபம் முதலிய உணர்ச்சிகளால் முகத்தில் ஏற்படும் கடுமை;* teaseness. *4. பழக்கமில்லாத இடத்தில், சூழ்நிலையில் ஏற்படும் இயல்பாக இல்லாத நிலை;* tenseness. *5. எழுத்தின் கருத்து ஓட்டத்திலும், மொழி நடையிலும் தளர்வு இல்லாத போக்கு, செறிவு;* terseness.

**இறுக்குதல்** வி. (v.) *நெகிழ்வில்லாமல் அழுத்திப் பிடித்தல், கட்டுதல்;* keep close or tight.

**இறுக** வி.அ. (adv.) *இடைவெளி யில்லாமலிருக்கை;* tight. '*கண்களை இறுக மூடிக்கொண்டு சிந்தித்தான்*'.

**இறுகுதல்** வி. (v.) *மென்மை அல்லது இளகிய தன்மை இழந்து கடினத் தன்மையடைதல், கெட்டிப்படுதல்;* harden, become firm.

**இறுத்தல்** வி. (v.) *நீர் முதலியவற்றில் தெளிந்த பகுதியை வடித்தல்;* decant.

**இறுதி** பெ. (n.) *முடிவு;* the last, end.

**இறுதி ஊர்வலம்** பெ. (n.) *இறந்தவரின் உடலைத் தக்க மதிப்புடன் ஊர்வலமாக இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லுதல்;* funeral procession, cortage.

**இறுதிக்காலம்** பெ. (n.) *1. கடைசிக் காலம்;* time of death. *2. ஊழிக்காலம்;* end of all things.

**இறுதிச் சடங்கு** பெ. (n.) *இறந்துபோன ஒருவரை அடக்கம் செய்ய பின் பற்றும் சடங்கு முறை;* funeral rites.

**இறுதிசெய்தல்** வி. (v.) *திட்டம், உடன்பாடு முதலியவற்றைக் குறித்து உறுதி முடிவுக்கு வருதல்;* finalize something. '*தேர்தல் கூட்டணி பற்றி பிறகு இறுதி செய்யப்படும்*'.

**இறுதி மரியாதை** பெ. (n.) *புகழ் பெற்றவர்கள் இறந்துபோகும் போது, அவர் உடல் முன் நின்று வணங்குகை;* homage to a celebrity on his death; last respects.

**இறுதியாக** வி.அ. (adv.) *ஒன்றை முடிக்கும் வகையில் கூறுவது, கடைசியாக;* finally.

**இறுமாப்பு** பெ. (n.) *பிறரை விட உயர்வாகத் தன்னைப் பற்றி ஒருவர் கொள்ளும் செருக்கு;* pride, arrogance.

**இறைச்சி** பெ. (n.) *உணவாகும் பறவை, விலங்கு, மீன் போன்றவற்றின் கறி, சதைப்பகுதி;* meat.

**இறைத்தல்** வி. (v.) *1. நீரை வெளிக் கொண்டு வருதல், வெளியேற்றுதல்;* draw water from a well, pumpout from a pit, mine, etc., *'கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துக்கொண்டு வா'. 2. பொருள்களைச் சிதறிப் போடுதல்;* be spread in all directions; be scattered.

**இறையாண்மை** பெ. (n.) *ஒரு நாடு முழு விடுதலையுடனும்,அதிகாரத்துடனும் தன் செயல்பாடுகளை ஆளுகைக் கொள்ளும் நிலை;* soveriegnty.

**இறைவன்** பெ. (n.) *கடவுள்;* God.

**இறைவி** பெ. (n.) *கோவிலில் எழுந்தருளி யிருக்கும் பெண் தெய்வம்;* presiding female deity.

**இன்பம்** பெ. (n.) *புலன்களுக்கும், மனத்திற்கும் இனிமை அளிக்கும் உணர்வு;மகிழ்ச்சி;* joy, pleasure.

**இன்புறுதல்** வி. (v.) *மகிழ்ச்சியடைதல்;* derive pleasure, enjoy. *'நூலைப் படித்துக் காட்டி மற்றவரை இன்புறச் செய்யலாம்'.*

**இன்மை** பெ. (n.) *இல்லாதிருக்கும் நிலை;* state of being without (something); absence.

**இன்றி** வி.அ. (adv.) *இல்லாமல்;* without. *'அவனன்றி ஓர் அணுவும் அசையாது'.*

**இன்றியமையாமை** பெ. (n.) *தவிர்க்க இயலாத தன்மை;* indispensability.

**இன்று நேற்று** பெ.அ (adj.) *பெரும்பாலும் எதிர்மறைத் தொடர்களில் வரும் போது அண்மைக் காலத்தில் என்பதைக் குறிப்பிடுவது;* (mostly in the negative) recent.

**இன்றைக்கெல்லாம்** வி.அ. (adv.) *சலிப் படையாமல் நீண்ட நேரம் பேசுவதையோ, பார்ப்பதையோ கூறுவது;* ever. *'பறவை முனியம்மாள் பாட்டு என்றால் இன்றைக்கெல்லாம் கேட்டுக்கொண்டே இருக்கலாம் அப்படி ஓர் இனிமை'.*

**இன்றைய** பெ.எ. (adj.) *1. இந்த நாளினுடைய;* this day's; today's. *'இன்றைய விளையாட்டு அவ்வளவு சிறப்பாகவில்லை'. 2. இந்தக் காலத்தில் இருக்கிற, இந்தக் காலத்தினுடைய;* of this present time. *'இன்றைய முதலீடு நாளைய லாபம்'.*

**இன்றைய தேதி** பெ. (n.) *பேசப்படும் காலப்பொழுது;* as of today.

**இன்பதுன்பம்** பெ. (n.) *நலமும் கேடும்;* joy and sorrow, pleasure and pain.

**இன்னது** பெ. (n.) *இத்தன்மையுடையது;* precisely this; of this nature. *'அழாமல் இன்னது வேண்டுமென்று கேள்'.*

**இன்னமும்** கு.வி.எ. (adv.) *இன்னும்;* yet.

**இன்னபிற** பெ.எ. (adj.) *ஒரு தொகுப் பாகக் கூறப்பட்டவை மட்டுமல் லாமல் இவை போன்ற பிற என்பதைக் குறிப்பிடுவது;* similar and so on. *'காய்கறிகள், பழங்கள் இன்னபிற பொருள்களும் வாங்க வேண்டும்'.*

**இன்னபிறர்** பெ. (n.) *ஒரு தொகுப்பாகக் கூறப்பட்டுள்ளவர்கள் மட்டுமல் லாமல் இவர்கள் போன்ற பிறர்;* and those similar.

**இன்னல்** பெ. (n.) *துன்பம், தொல்லை;* distress, difficulty, hardship.

**இன்னமும்** வி.அ. (adv.) *இது வரையிலும்;* yet, still, till now. *'தேர் இன்னமும் கிளம்பவில்லை'.*

**இன்னார்** பெ. (n.) *குறிப்பிட்ட ஆள்;* person of known identity.

**இன்னும்** கு.வி.எ. (adv.) *1. இவ்வளவு காலஞ்சென்றும்;* still, yet. *2. மறுபடியும்;* again. *3. மேலும்;* still more, more than this. *'இன்னும் வேண்டும்'. 4. அன்றியும்;* also, more than that, in addition to.

**இனக்கட்டு** பெ. (n.) *1. உறவின் நெருக்கம்;* bond of union between relatives. *2. முறைமை;* due respect among the several branches of a family.

**இனக்கவர்ச்சி** பெ. (n.) *ஆணுக்குப் பெண் மீதும், பெண்ணுக்கு ஆண் மீதும் பாலுணர்வு அடிப்படையில் ஏற்படும் விருப்பம்;* sexual attraction.

**இனத்தான்** பெ. (n.) *1. உறவினன்;* relative. *2. ஓரினத்தவன், தன் இனத்தைச் சார்ந்தவன்;* person belonging to one's own community or caste.

**இனப்படுகொலை** பெ. (n.) *ஓர் இனத்தைச் சேர்ந்தவர்கள் திட்டமிட்டு மற்றோர் இனத்தவரை அழிக்கும் போக்கு;* genocide.

**இனப்பெருக்கம்** பெ. (n.) *உலகில் தங்கள் இனம் தொடர்ந்து நிலைத்திருப்பதற்காக மாந்தன் குழந்தைகளையும், விலங்குகள் குட்டிகளையும், பறவைகள் குஞ்சுகளையும் உருவாக்குதல்;* reproduction (human beings, animals, plants).

**இனம்** பெ. (n.) *1. வகை, வகுப்பு;* class, group, division. *2. குலம்;* race, tribe. *3. சுற்றம்;* comrades, associates, neighbors. *4. துணையாகச் சேரும் கூட்டம்;* brotherhood, fellowship. *5. நிரை;* pack, hood. *6. ஒரு தொகுதியுட் சேர்த்து வழங்குதற்குரியது;* associated items. *7. அமைச்சர்;* Ministers in council. *3. ஒப்பு;* Comparison. *9. ஆள்;* individual.

**இனம்புரியாத** பெ.எ. (adj.) *விளக்க முடியாத, காரணம் கூற இயலா உணர்வு;* inexplicable. *'காலையிலிருந்து இனம் புரியாத மகிழ்ச்சி யாய் உள்ளது'.*

**இனமுறை** பெ. (n.) *ஒத்த இனம்;* relationship of the same caste.

**இனவழி** பெ. (n.) *1. குடிவழி;* descent from the same line or ancestry. *2. தலைமுறை (பரம்பரை);* descent from the same bread as of cattle.

**இனவெறி** பெ. (n.) *மாந்த இனத்தில் சில பிரிவினர் தம் பிரிவே (சாதி) உயர்வானது என்று நிலை நாட்டும் ஒட்டாரப் போக்கு;* racism.

**இனி** கு.வி.எ. (adv.) *1. இப்பொழுது;* now, immediately. *2. இனிமேல்;* hereafter, henceforth. *3. இப்பால்;* from here onwards, used of place.

**இனிக்கப் பேசுதல்** வி. (v.) *மற்றவர் மனம் குளிரும்படி பேசுதல்;* convincing talk.

**இனித்தல்** வி. (v.) *1. தித்தித்தல்;* to be sweet, to be taste. *2. இன்பமாதல்;* to be pleasant, attractive, facinating.

**இனிது** பெ. (n.) *1. இன்பந்தருவது;* that which is sweet, pleasing, agreeable. *2. நன்மையானது;* that which is good. *3. நன்றாக;* sweetly, favourably.

**இனிப்பு** பெ. (n.) *1. தித்திப்பு;* sweetness. *2. மகிழ்ச்சி;* pleasure, delight.

**இனிமேல்** கு.வி.எ. (adv.) *1. இதற்குப் பிற்பாடு;* hereafter, at some future time. *2. இது முதல்;* henceforth, from now onwards.

## ஈ

**ஈகை** பெ. (n.) *மனம் உவந்து வழங்கப்படும் பொருள் உதவி;* gift, charity.

**ஈசல்** பெ. (n.) *இறக்கை முளைத்த கறையான்;* winged termite or white ant.

**ஈசான மூலை** பெ. (n.) *வடகிழக்குப் பக்கம்;* north-east quarter.

**ஈட்டி எறிதல்** பெ. (n.) *ஈட்டியை எறியும் விளையாட்டுப் போட்டி;* javelin throw.

**ஈட்டியவிடுப்பு** பெ. (n.) *நிலையான பணியாளர்கள் குறிப்பிட்ட வேலை நாட்களுக்கு ஒரு நாள் விடுப்பு என்ற வகையில் சேர்த்து வைக்கும் விடுப்பு;* leave earned and accumulated by permanent employees at the rate of so many days for a specified period of service.

**ஈடுகட்டுதல்** வி. (v.) *ஒன்றின் குறையை, மற்றொன்றின் மூலம் நிறைவு செய்தல்; சரிகட்டுதல்;* make good, make up for.

**ஈடுகொடுத்தல்** வி. (v.) *ஒருவரின் திறமைக்கு மற்றொருவர் நிகராக நிற்றல்; சமமாக இருத்தல்;* match up to, rise equal to.

**ஈடுசெய்தல்** வி. (v.) *இழப்பை, குறையைச் சரிகட்டுதல்; ஈடு கட்டுதல்;* compensate for, make good.

**ஈடுசெய்விடுப்பு** பெ. (n.) *அறிவிக்கப்பட்ட விடுமுறை நாட்களில் பணி புரிந்தால் அதற்குப் மாற்றாக எடுத்துக் கொள்ளும் வேறொரு விடுமுறை நாள்;* compensatory holiday.

**ஈடுபடுத்துதல்** வி. (v.) *1. ஒருவரை ஒன்றில் முனையச் செய்தல் (அ) இறங்கச் செய்தல்;* engage. *2. நாட்டம் கொள்ளச் செய்தல், ஒன்றைச் செய்தல்;* engage in something.

**ஈடுபடுதல்** வி. (v.) *1. அகப்படுதல்;* to be ensnared. *2. மனங்கவிழ்தல்;* to be absorbed.

**ஈடுவைத்தல்** வி. (v.) *அடகுவைத்தல்;* pledge, mortgage.

**ஈடேற்றுதல்** வி. (v.) *எண்ணத்தை, விருப்பத்தை நிறைவேற்றுதல்;* fulfil.

**ஈடேறுதல்** வி. (v.) *நோக்கம், விருப்பம் நிறைவேறுதல், உண்மையாதல்;* be fulfilled.

**ஈமக்கடன்** பெ. (n.) *இறுதிச்சடங்கு;* funeral rites.

**ஈயடிச்சான்காப்பி** பெ. (n.) *தானே சிந்தித்துச் செய்யாமல், மற்றொருவர் செய்வதைப் பார்த்து, அப்படியே பின்பற்றும் செயல்;* blind copying.

**ஈயம்பூசுதல்** வி. (v.) *ஏனத்தின் உட்பகுதியில் ஈயத்தை உருக்கித் தடவுதல்;* coat (the inside of a brass vessel) with lead (to avoid chemical reaction).

**ஈயெனல்** பெ. (n.) *பல்லைக்காட்டுங் குறிப்பு;* expression signifying grinning.

**ஈயோட்டுதல்** வி. (v.) *1. வேலை இல்லாமல் இருத்தல்;* idle away. *2. வணிகத்தில் பரபரப்பு குறைந்து காணப்படுதல்;* be dull.

**ஈர்க்கு** பெ. (n.) *பனை, தென்னை ஓலையின் நடுவில் உள்ள மெல்லிய நரம்பு;* rib of a palm leaf.

**ஈர்வாங்கி** பெ. (n.) *தலைமுடியிலுள்ள ஈர், பேன் ஆகியவற்றை எடுப்பதற்குப் பயன்படும் மரச்சீப்பு;* long - toothed wooden comb.

**ஈரற்குலை நடுக்கம்** பெ. (n.) *அச்சத்தினால் ஈரற்குலைக்கேற்படும் அதிர்ச்சி;* shock due to visceral tremor through fear.

**ஈரற்குலை பதைத்தல்** வி. (v.) *மிகு துன்பப்படுதல்;* to become deeply grieved.

**ஈருள்ளி** பெ. (n.) *காரம் சற்றுக்கூடிய சிறு வெங்காயம்;* variety of onion.

**ஈவிரக்கம்** பெ. (n.) *அடிப்படை மாந்தத் தன்மைகளான இரக்கம், பரிவு முதலியன;* pity, mercy.

**ஈளையிருமல்** பெ. (n.) *கோழையுடன் கூடிய இருமல்;* cough with phlegm.

**ஈன்றெடுத்தல்** வி. (v.) *குழந்தையைப் பெற்றெடுத்தல்;* give birth.

## உ

**உக்கி** பெ. (n.) *1. மாறுகை செவிப்பிடி கரணம் (தோப்புக்கரணம்);* form of lowering and raising his body a certain number of times folding his arms across his breast and holding his two ears. *'அவன் உக்கி போட்டுப் பிள்ளை யாரை வணங்கினான்'. 2.* தண்டனை வகை; form of punishment . *'வீட்டுப் பாடம் செய்யாத தால் ஆசிரியர் உக்கி போடச் சொன்னார்'. 3.* உடற்பயிற்சி வகை; kind of exercise.

**உச்சந்தலை** பெ. (n.) *தலையின் நடுப்பகுதி;* crown of head.

**உச்சம்** பெ. (n.) *1. செயல், உணர்ச்சி போன்றவற்றின் அதிகளவு;* maximum or extreme point; height of an action, emotion, etc., *'தொழிலாளர்களின் சினம் உச்சத்தை எட்டியது'. 2. ஏதேனும் ஒன்று அல்லது ஒருவர் அமையும் மிக உயர்ந்த நிலை;* zenith, peak. *'இசைத்துறையில் அவர் உச்சத்தைத் தொட்டுவிட்டார்'. 3. பிறப்பியத்தில் ஒரு கோள் தீவிரை வாக செயல்படும் நிலை;* exaltation of a planet in one's horoscope.

**உச்ச வரம்பு** பெ. (n.) *காலம், அளவு பற்றிய வரையறுக்கப்பட்ட உயர் எல்லை;* dead line; upper limit; ceiling. *'இந்தப் பணியை முடிக்க இந்த மாத இறுதியே உச்சவரம்பாகக் கொடுக் கப்பட்டுள்ளது'.*

**உச்சாணி** பெ. (n.) *மரத்தின் உச்சி;* top of a tree. *'புங்கமரத்தின் உச்சாணிக் கொம்பில் குருவி அமர்ந்திருந்தது'.*

**உச்சி** பெ. (n.) *1. உயரமானதின் முடிவிடம்;* top of a tree; tower, etc., peak of a mountain. *'மலையின் உச்சிக்குச் சென்றார்கள்'. 2. உச்சந் தலை;* crown of a head. *'உச்சிமுதல் பாதம் வரை'. 3.* வகிடு*;* parting; line. *'உச்சியெடுத்து சீவினாள்'. 4.* புகழ், செல்வாக்கின் உச்சம்*;* zenith. *'அவர் புகழின் உச்சியில் இருக்கிறார்'.* 5. தலைக்கு நேர் மேலாக உள்ள வான் பகுதி*;* zenith. *'நண்பகலில் சூரியன் உச்சிக்கு வந்துவிடும்'.*

**உச்சிக்கால பூசை** பெ. (n.) *கோவிலில் பகல் பன்னிரண்டு மணியளவில் நடைபெறும் உருமப் பூசை;* noon service in the temple.

**உச்சிக்குடுமி** பெ. (n.) *ஆடவரின் தலையில் சுற்றிலும் மழித்து மழிக்காமல் விடப்படும் மயிர்க் கற்றை;* crest, hair-tuft on the centre of the head.

**உச்சிக்கொண்டை** பெ. (n.) *பெண்கள் உச்சந்தலையின் பின்பகுதியில் கூந்தலை ஒன்று சேர்த்து முடிந்து கொள்ளும் ஒருவகைக் கொண்டை;* (of women) a hair do in which hair is gathered up and knotted behind the crown.

**உச்சிகுளிர்தல்** வி. (n.) *பெரும் மன மகிழ்ச்சி ஏற்படுதல்;* feel flattered. *'அவரைப் புகழ்ந்து சொன்னதும் அவருக்கு உச்சி குளிர்ந்துவிட்டது'.*

**உச்சிநேரம்** பெ. (n.) *உச்சிப் பொழுது; நண்பகல்;* noon, midday.

**உச்சிப்பொழுது** பெ. (n.) *நண்பகல்; நடுப்பகல்;* noon, midday. *'உச்சிப் பொழுது வெயில் அனலா யிருக்கிறது'.*

**உச்சி மாநாடு** பெ. (n.) *ஒன்றுக்கு மேற்பட்ட நாடுகளின் தலைவர்கள் முகாமையான சிக்கல்கள் குறித்துக் கலந்தாராய்வதற்குக் கூடும் சந்திப்பு அல்லது தொடர்ச்சியான சந்திப் புகள்;* summit conference.

**உச்சிமுகர்தல்** வி. (v.) *அன்பை வெளிக்காட்டும் வகையில் முன்னந் தலையில் முத்தமிடல்;* kiss one's forehead as a way of showing one's affection.

**உச்சிவானம்** பெ. (n.) *தலையுச்சிக்கு நேர் மேலாக உள்ள வானம்;* sky overhead; zenith.

**உச்சுக்கொட்டுதல்** வி. (v.) *அக்கறை யின்மை, விருப்பமின்மை, வெறுப்பு ஆகியவற்றை வெளிக் காட்ட 'உச்சு' என்று ஒலி யெழுப்புதல்;* click one's tongue to express one's dislike, indifference, dissatisfaction, etc., *'கடைக்குப் போய் வா என்று அம்மா சொன்னதும் அவன் உச்சுக் கொட்டினான்'.*

**உசத்தி** பெ. (n.) *உயர்த்தி; உயர்வு; மேலானது;* being treated as superior. *'உலகத்தில் தாய் தந்தையைவிட உசத்தியானது ஒன்றுமில்லை'.*

**உசுப்புதல்** வி. (v.) *1. பாய்ந்து தாக்குமாறு ஏவுதல்;* set on; set upon. *'கிடாச் சண்டையில் ஆடுகளை உசுப்பி விட்டனர்'.* 2. *தூண்டுதல்;* urge; motivate. *'முயன்றால் முடியும் என்று அம்மா உசுப்பிவிட்டார்'.* 3. *எழுப் புதல்;* wake up, arouse; stir. *'தூங்கியவனைத் தட்டி உசுப்பினார்'.*

**உசுப்பேற்றுதல்** பெ. (n.) *தூண்டிவிடுதல்;* instigate.

**உட்கரு** பெ. (n.) *1. கதை போன்றவற்றின் அடிப்படைப் பொருள்;* theme of a literary work, kernal. *2. அணுவில் புரோட்டான்களையும், நியூட்ரான் களையும் கொண்ட நடுப்பகுதி;* nucleus of an atom. *3. உயிரணுவின் நடுப்பகுதி;* nucleus of a cell.

**உட்கருத்து** பெ. (n.) *நுட்பச் செய்தி;* intention; implication; import. *'விடுதலை உணர்வே பாஞ்சாலி சபதத்தின் உட்கருத்து'.*

**உட்காய்ச்சல்** பெ. (n.) *வெளியில் காய்ச்சல் தெரியாமல் உள்ளாக அடிக்கும் காய்ச்சல்;* internal fever.

**உட்கார்தல்** வி. (v.) *1. வீற்றிருத்தல்;* to sit down; to occupy a seat. 2. *கட்டடத்தின் அடிப்படை கீழிறங்குதல்;* (of the foundation of a building) sink; go down; *'களிமண் தரையில் கட்டியதால் வீடு உட்கார்ந்துவிட்டது'.* 3. *இரண்டு பகுதிகள் ஒன்றோடொன்று பொருந் துதல்;* fit. *'கதவு இன்னும் பொருத்தில் சரியாக உட்காரவில்லை'.* 4. *பெண் பருவமடைதல்;* attain puberty of girls. 5. *மாதவிடாய் ஏற்படுதல்;* menstruate. *'அவள் உட்கார்ந்து விட்டதால் பூசையில் பங்கேற்க முடியாது'* (பே.வ.). 6. *தேர்வில் தோல்வி யடைதல்;* fail in an examination. *'எட்டாம் வகுப்பிலேயே அவன் ஒரு முறை உட்கார்ந்து விட்டான்'.* 7. *பொருத்தமாக அமைதல்;* settle, fit. *'மெட்டில் பாடல் வரிகள் சரியாக உட்கார்ந்திருக் கின்றன'.*

**உட்கார்த்துதல்** வி. (v.) *அமர்த்துதல்; அமரச் செய்தல்; உட்கார வைத்தல்;* to seat; make to sit.

**உட்கிடக்கை** பெ. (n.) *1. உட்கருத்து பார்க்க.* 2. *உள்ளக்கிடக்கை;* desire. *'அயல்நாட்டில் மருத்துவம் படிக்க வேண்டும் என்பது அவரின் உள்ளக் கிடக்கை'.*

**உட்குழு** பெ. (n.) *ஒரு குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரைக் கொண்டதும், முகாமையான முடிவு களைத் தீர்மானிப்பதுமான சிறு குழு;* inner group; sub committee.

**உட்கொள்ளுதல்** வி. (v.) *1. உணவு, மருந்து போன்றவற்றைச் சாப்பிடுதல்;* take food, etc., consume, ingest. 2. *உறிஞ் சுதல்;* absorb. *'கடல் நீரை உட் கொண்டு கருமுகில் திரண்டிருந்தது'.*

*3.* உட்கூறைக் கொண்டிருத்தல்; அடக்கியிருத்தல்; consist of; include. *'இந்திய அரசியலமைப்புச்சட்டம் பல பிரிவுகளை உட்கொண்டுள்ளது'.*

**உட்செலுத்துதல்** வி. (v.) *1.* உள்ளே செலுத்துதல்; insert. *2.* உள்ளே போகச் செய்தல்; inject (medicine); pump (air) into something. *'மருந்தை நோயாளியின் உடம்பில் உட்செலுத்தினார்கள்'.*

**உட்பகை** பெ. (n.) வெளிக்காட்டாத பகை; covert enmity. *'உட்பகையைக் கண்டறிந்து களையெடுக்க வேண்டும்'.*

**உட்படுத்துதல்** வி. (v.) *1.* ஆய்வு, கட்டுப்பாடு ஆகியவற்றிற்கு உள்ளாக்குதல்; to cause to be put in. *'எதையும் ஆய்வுக்கு உட்படுத்த வேண்டும்'.* *2.* தண்டனை, தொல்லை போன்றவற்றை நுகரச் செய்தல்; subject.

**உட்படுதல்** வி. (v.) *1.* வரம்பு அல்லது எல்லைக்குள் இருத்தல்; fall within; be within. *'இந்திய எல்லைக்குட்பட்ட பகுதி'.* *2.* சட்டம் போன்றவற்றிற்குக் கட்டுப்படுதல்; obey; submit to. *'அனைவரும் சாலை விதிக்கு உட்பட்டு நடக்க வேண்டும்'.* *3.* நிலைமைக்கு ஆளாதல்; be subject to; be subjected to (influence, impact, etc).

**உட்பிரிவு** பெ. (n.) உள்பாகம்; சிறு பிரிவு; subdivision. *'உயிரினங்களுள் பல உட்பிரிவுகள் உள்ளன'.*

**உட்புகுதல்** வி. (v.) *1.* உள்ளே புகுதல்; get into, enter. *'மழைநீர் வீட்டில் உட்புகுந்தது'.* *2.* ஊடுருவுதல்; pass through. *'கண்ணாடியில் ஒளி உட்புக முடியாது'.* *3.* கசிதல்; seep in. *'கடலோரப் பகுதி கிணறுகளில் உப்புநீர் உட்புக வாய்ப்பு அதிகம்'.* *4.* ஆழ்ந்து கவனித்தல்; to enter deeply into, get into the heart of. *'உண்மைக் கருத்தறிய உட்புகுந்து படிக்க வேண்டும்'.*

**உட்புறம்** பெ. (n.) உட்பக்கம்; inner side of a thing. *'கோயிலின் உட்புறத்தில் பொற்றாமரைக் குளம் உள்ளது'.*

**உட்பூசல்** பெ. (n.) குழு, அமைப்பு போன்றவற்றின் உறுப்பினர்களிடையே தன்னலத்தை முன்னிட்டு எழும் மனவேறுபாடு; infighting. *'உட்பூசல் இல்லாத அரசியல் கட்சிகள் அரிது'.*

**உட்பொருள்** பெ. (n.) *1.* உண்மைக் கருத்து; real purport or significane. *'அனைத்துச் சமயங்களுக்கான உட்பொருளும் அன்புதான்'.* *2.* மறைபொருள்; secret or esoteric meaning. *'பெண் கல்வியே இப்புதினத்தின் உட்பொருள்'.*

**உடந்தை** பெ. (n.) தீய செயல்களுக்குத் துணையாயிருத்தல்; connivance; abetment. *'சிலை கடத்தலுக்கு உடந்தையானவர்கள் தண்டிக்கப்பட வேண்டும்'.*

**உடம்புக்கு முடியாமல்** வி.அ. (adv.) உடல்நலம் சரியில்லாமல்; be ill.

**உடம்பு கட்டுவிடல்** பெ. (n.) உடம்பு தளர்தல்; infirmity through old age, to lose strength. *'அகவை முதிர்வினால் அப்பாவுக்கு உடம்பு கட்டுவிட்டது'.*

**உடம்பு காந்தல்** பெ. (n.) உடல் வெப்பங்கொள்ளல்; body becoming hot. *'கோடை வெயிலால் உடம்பு காந்தலெடுக்கிறது'.*

**உடம்பு தேறுதல்** வி. (v.) உடல் நலமடைதல்; to recover one's health and strength as a convalescent. *'காய்ச்சலுக்குப் பின் இப்போது உடம்பு தேறி விட்டது'.*

**உடம்பைத் தேற்றுதல்** வி. (v.) *1.* உடலை வலிமையாக்குதல்; to make one grow strong in body. *'உடற்பயிற்சியின் மூலம் உடம்பைத் தேற்றியிருக்

*கிறான்'.* 2. நோயால் இளைத்த உடம்பை மருந்து கொடுத்துத் தேற்றுதல்; toning up the body with medicine. *'மருத்துவரின் அறிவுரைப் படி மருந்து சாப்பிட்டு உடம்பைத் தேற்றினான்'.* 3. மெலிந்த உடம்பிற்கு ஊட்டங் கொடுத்தல்; strengthening the body by nourishment during convalescence. *'ஊட்டம் மிகுந்த உணவுகளைக் கொடுத்து குழந்தையின் உடம்பைத் தேற்றினாள்'.*

**உடம்பு நடுக்கம்** பெ. (n.) 1. அச்சம், சினம் முதலியவற்றால் உடம்பில் ஏற்படு மொருவகை அசைவு; trembling arising from disease, fear, anger or excitement. 2. குளிரினால் உடம்பு உதறுதல்; shivering out of cold.

**உடம்பு பிடித்தல்** வி. (v.) 1. உடம்பிற் சதை உண்டாதல்; to pick up flesh. *'வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்த நண்பன் உடம்பு பிடித்துக் காணப் பட்டான்'.* 2. உடம்பைக் கையால் பிடித்து அமுக்குதல்; the process of pressing the parts of a person's body, shampooing to massage. *'உடம்பைப் பிடித்துவிட்டதால் தசைப் பிடிப்பு வலி குறைந்தது'.*

**உடல் கனத்தல்** பெ. (n.) உடம்பு பருத்தல்; growing stout and heavy. *'உடல் கனத்தலுக்கு உணவு முறையும் ஒரு காரணம்'.*

**உடல்நலம்** பெ. (n.) உடலின் நோயற்ற நிலை; health. *'அனைவரும் உடல் நலத்துடன் வாழ வேண்டும்'.*

**உடல்நிலை** பெ. (n.) உடம்பின் நலமுள்ள, நலமற்ற நிலைமை; health. *'உடல்நிலை நன்றாக உள்ளது'.*

**உடல்மொழி** பெ. (n.) ஒருவரின் உணர்வையும் ஆளுமையையும் வெளிப் படுத்தும் உடல் அசைவும் இருப்பு நிலையும்; body language. *'நேர் காணலில் உடல்மொழியே முதலில் கவனிக்கப்படுகிறது'.*

**உடலுழைப்பு** பெ. (n.) உடலை வருத்திச் செய்யும் கடின உழைப்பு; physical labour. *'எந்திரங்களின் வருகையால் மக்களின் உடலுழைப்புச் சற்றுக் குறைந்துள்ளது'.*

**உடற்கல்வி** பெ. (n.) விளையாட்டு, மூச்சுப் பயிற்சி ஆகியவற்றின் மூலம் தரப்படும் உடல்நலத்திற்கான கல்வி; physical education.

**உடற்கூற்றியல்** பெ. (n.) உடலுறுப்பு களின் உள்ளமைப்பை விளக்கும் அறிவியல் துறை; anatomy.

**உடற்பயிற்சி** பெ. (n.) உடலை நலமாகவும், வலிமையாகவும் வைத்துக் கொள்ள மேற்கொள்ளும் பயிற்சி; physical exercise or training; light gymnastics.

**உடற்பயிற்சிக்கூடம்** பெ. (n.) உடற்பயிற்சி செய்வதற்குரிய கருவிகளும் ஏந்து களும் நிறைந்த கூடம்; gymnasium.

**உடன்** வி.அ. (adv.) 1. செயல் நடந்த அதே நேரத்தில்; immediately. *'வினாத் தாளை வாங்கிய உடன் படிக்க ஆரம்பித்தான்'.* 2. கூடவே; along with; with. *'கோவிலுக்குப் போகும்போது அப்பாவும் உடன் வந்தார்'.*

**உடன்படிக்கை** பெ. (n.) 1. ஒப்பந்தம்; contract, agreement, pact, treaty. *'சமாதான உடன்படிக்கை கையெழுத் தானது'.* 2. உறுதிப்பாடு; promise; assurance. *'அவளுக்கு அவன் உடன்படிக்கைச் சொல்லுகிறான்'.*

**உடன்படுதல்** வி. (v.) இணங்குதல்; agree. *'அப்பாவின் கருத்துக்கு அனைவரும் உடன்பட்டோம்'.*

**உடன்பாடு** பெ. (n.) 1. இணக்கம், ஏற்பு; acceptance, agreement. *'அப்பாவின் கருத்தில் எனக்கு உடன்பாடு உண்டு'.* 2. உடன்படிக்கை; ஒப்பந்தம்; treaty, agreement. *'இரு நாட்டுக்கும்*

*இடையே எவ்வித உடன்பாடும் இல்லை'. 3. (இலக்.) கூற்றின் நேர்மறைத் தன்மையை விளக்குதல்;* affirmative. *'அவன் செய்தான்'* என்பது *ஒரு உடன் பாட்டுத் தொடர்.*

**உடன்பிறத்தல்** வி. (v.) *ஒரே தாய் வயிற்றில் பிறத்தல்;* to born of the same mother. *'உன்னோடு உடன் பிறந்தவர்கள் எத்தனை பேர்'.*

**உடன்பிறந்த** பெ.எ. (adj.) *1. ஒரே தாய்க்குப் பிறந்த;* born of the same parents; related by blood. *'உடன்பிறந்தவர்களைப் போல் பார்த்துக் கொண்டார்'.* 2. பிறந்ததிலிருந்து ஒருவரிடம் இயல் *பாகக் காணப்படுகிற, எளிதில் விட்டுவிட முடியாத;* in born, innate. *'ஆசை என்பது அனைவருக்கும் உடன் பிறந்த நோய்'.*

**உடன்பிறந்தார்** பெ. (n.) *ஒரே தாய்க்குப் பிறந்தவர்கள்;* brothers and sisters born of the same parents.

**உடன்பிறந்தாள்** பெ. (n.) *கூடப் பிறந்தவள்;* sister.

**உடன்பிறந்தான்** பெ. (n.) *கூடப் பிறந்தவன்;* brother.

**உடன்பிறப்பு** பெ. (n.) *கூடப் பிறந்தவர்;* person or persons born of the same parents. *'எழிலன் பொழிலனை உடன் பிறப்பாகவே பார்த்தான்'.*

**உடன்போக்கு** பெ. (n.) *தான் விரும்பிய காதலனுடன் வீட்டை விட்டு சென்று விடுதல்;* elopment.

**உடனடி** வி.எ. (adv.) *உடனே;* immediately.

**உடனிகழ்ச்சி** பெ. (n.) *ஒரு நிகழ்ச்சி நடக்கும் நேரத்தில் நிகழும் மற்றொரு நிகழ்ச்சி;* contemporaneous events. *'முயற்சியின் உடனிகழ்ச்சியாக வெற்றியும் உருவாகும்'.*

**உடனுக்குடன்** பெ. (n.) *அப்போதைக்கு அப்போது;* then and there. *'கடிதத்துக்கு உடனுக்குடனே மறுமொழி எழுதி விடுவார்'.*

**உடனே** வி.எ. (adv.) *1. கூடிய அதே நேரத்தில்;* immediately. *2. ஒருநேர;* simultaneously. *'அவருடனே சென்றான்'.*

**உடுக்கு** பெ. (n.) *இடைச்சுருங்கு பறையாகிய உடுக்கை;* small drum tapering in the middle.

**உடுக்கை** பெ. (n.) *ஒ1. இடைச்சுருங்கு பறையாகிய இசைக் கருவி;* small drum tapering in the middle. 2. *உடுப்பு;* dress.

**உடுத்தல்** வி. (v.) *ஆடை முதலியன அணிதல்;* to put on as clothes. *'பொங்கலுக்குப் புத்தாடை உடுத்தினான்'.*

**உடுப்பு** பெ. (n.) *ஆடை;* cloth, unsewngarment. *'பொங்கல் திருநாளில் புது உடுப்பு அணிவார்கள்'.*

**உடும்பு** பெ. (n.) *பிளவுபட்ட நாக்கையும் நீளமான வாலையும் கொண்ட, ஊர்வனவற்றில் பல்லி இனத்தைச் சார்ந்த உயிரி;* monitor lizard.

**உடும்புப் பிடியாக** வி.எ. (adv.) *உறுதியாக, விடாப்பிடியாக;* tenaciously. *'தனது நிலத்தில் மரபணு மாற்ற விதைகளைப் பயிர் செய்வதில்லை என்று அவர் உடும்புப் பிடியாக இருந்தார்'.*

**உடை** பெ. (n.) *ஆடை; உடுப்பு;* clothes, garments.

**உடைசல்** பெ. (n.) *உடைந்த பொருள்;* cracked, worthless article broken pieces. *'ஓட்டை உடைசலையெல்லாம் அகற்றிவிடு'.*

**உடைத்தல்** வி. (v.) *1. துண்டாக்குதல்; பிளத்தல்;* break by striking with something, by dropping, etc., *'சினத்தில் கைப்பேசியை எறிந்து உடைத்தான்'.* 2. *தவசங்களைக் குறுநொய் யாக்குதல்;* break grains into pieces. *'உளுந்தைத் திருகையில் இட்டு உடைத்தாள்'.* 3. *முட்டை, தேங்காய்*

போன்றவற்றின் ஓட்டைப் பிளத்தல்; break egg, coconut, etc., *'தேங்காய் உடைத்துப் பூசை செய்தான்'*. *4.* கட்டியிருப்பதை, ஒட்டியிருப் பதைப் பிரித்தல்; மூடியிருப்பதைத் திறத்தல்; break open (a bundle by snapping the string tied around); open (an envelope, a bottle, etc.,). *'புத்தகக் கட்டை உடைத்து எண்ணிட்டு வரிசைப்படுத்தினார்'*. *5.* பூட்டைத் தட்டி நீக்குதல்; break open. *6.* கடலையைத் தோல் நீக்கிப் பருப்பை எடுத்தல்; shell, pod. *7.* ஒற்றுமையைக் குலைத்தல்; split; break up a party, an organization, etc., *'எங்கள் குழுவை உடைக்க அவர் முயற்சி செய்தார்'*. *8.* போராட்டம் முதலியவற்றைச் செயலிழக்கச் செய்தல்; break. *'வேலை நிறுத்தத்தை உடைக்க நிருவாகம் முயற்சி செய்தது'*. *9.* கமுக்கம், உண்மை ஆகியவற்றை வெளியாக்குதல்; make public a secret, hidden fact, etc., *5.* மரபு, கோட்பாட்டை மீறுதல், மாற்றுதல்; break, defy. *'அவரின் படைப்பு இலக்கண மரபை உடைப்பதாக இருந்தது'*. *11.* புதிரை விடுவித்தல்; solve a riddle. *'குறுக்கெழுத்துப் போட்டிப் புதிர்களை உடைப்பதில் அவர் வல்லவர்'*. *12.* கற்பனை, மாயை போன்றவற்றைத் தகர்த்தல்; shatter an illusion, etc.,

**உடைதல்** வி. (v.) *1.* துண்டாதல், பிளத்தல்; break. *'குடம் உடைந்து விட்டது'*. *2.* ஏரி, ஆறு முதலிய வற்றின் கரையுடைதல்; to be breached, as a tank. *'ஏரிக்கரை உடைந்ததால் ஊருக்குள் வெள்ளம் புகுந்தது'*. *3.* கட்சி, அமைப்புகள் பிளவுபடுதல்; of a party an organization etc., split; break up. *'உட்கட்சிப் பூசலால் கட்சி உடைந்தது'*. *4.* புண்கட்டியுடைதல்; to burst open, as a boil. *5.* குரல் மாறுபடுதல்; துன்பத்தால் தழு தழுத்தல்; (of voice) break (because of grief). *'அகவை முதிர்வால் பாடகரின் குரல் உடைந்துவிட்டது'*. *6.* மனம் தளர்தல்; to broken, become heart broken. *'அவர் மனமுடைந்து காணப் பட்டார்'*. *7.* மறைத்திருந்த செய்தி வெளிப்படுதல்; of a secret come into the open. *'அவன் குட்டு உடைந்தது'*.

**உடைப்பில் போடுதல்** வி. (v.) பயனற்ற, விரும்பாத பொருளைத் தூக்கி யெறிதல், ஒதுக்குதல்; throw out; dump; discard (as worthless). *'உன் கருத்தைக் கொண்டு போய் உடைப் பில் போடு'*.

**உடைப்பு** பெ. (n.) *1.* பூட்டு போன்ற வற்றைத் திறப்பதற்காகப் பிளத்தல்; act of breaking open. *2.* கரை, வரப்பு, குழாய் போன்றவை தகர்ந்து போகும் நிலை; breakage of bank, balk, pipe, etc.,

**உடைப்புக்கட்டு** பெ. (n.) அணை, குளம் முதலியவற்றிலுள்ள உடைப்புகளைச் செப்பனிடுகை; repair of a breach in an embankment. *'ஏரிக்கரையின் உடைப் புக்கட்டு வேலை முடிந்து விட்டது'*.

**உடைப்பெடுத்தல்** வி. (v.) வெள்ளத்தால் கரையுடைதல்; to be breached, as a tank. *'ஏரிக்கரை உடைப்பெடுத்ததால் ஊருக்குள் வெள்ளம் புகுந்தது'*.

**உடைபடுதல்** வி. (v.) உடைந்துபோதல், துண்டாதல், பிளத்தல்; break.

**உடைமை** பெ. (n.) உரிமையுடைய சொத்து; possessions; property.

**உடையவன்** பெ. (n.) *1.* உரியவன்; owner one who possesses. *'இந்த வீட்டுக்கு அவன்தான் உடையவன்'*. *2.* செல்வ முள்ளவன்; possessor of wealth. *'உடையவனுக்கு ஏழையின் துன்பம் தெரியாது'*.

**உடைவாள்** பெ. (n.) உடையில் செருகி வைத்திருக்கும் வாள்; short scimitar; sword.

**உண்டாக்குதல்** வி. (v.) *1.* படைத்தல், தோற்றுவித்தல்; create, make. *'உலகத்தை (அண்டத்தை) உண்டாக்கியவன் இறைவனே என்பது சமயங்களின் கருத்து'*. 2. விளைவாக்கம் செய்தல்; produce. *'தரிசு நிலத்தில் தன் கடும் உழைப்பால் பயிரை உண்டாக்கினார்'*. 3. ஒலி, ஒளி ஆகியவற்றை ஏற்படுத்துதல்; make sound and light. *'இருளின் நடுவே ஒளியை உண்டாக்கினார்'*. 4. கட்டடம் போன்றவற்றை உருவாக்குதல்; construct, build. *'இராசராசன் உண்டாக்கிய கோவில்'*. 5. நிறுவனம் போன்றவற்றைத் தோற்றுவித்தல்; establish an institution etc., found. 6. நகரம், மாவட்டம் போன்றவற்றை உருவாக் குதல்; form of city and district. *'இரு மாவட்டங்களிலிருந்தும் சில பகுதிகளைப் பிரித்துப் புதிய மாவட்டம் உண்டாக்கப்பட்டது'*. 7. ஆட்சி, அமைப்புப் போன்றவற்றைத் தோற்றுவித்தல்; establish, start. 8. குறிப்பிட்ட மாற்றம், வடிவம் போன்றவற்றை ஏற்படுத்துதல்; உருவாக்குதல்; create, make. *'நிலநடுக்கம் பெரும்பள்ளத்தை உண்டாக்கியது'*. 9. குறிப்பிட்ட சூழல், தன்மை போன்றவற்றை விளைவித்தல்; bring about; create; start. *'வழக்கில் திடீர் திருப்பத்தை உண்டாக்கினான்'*. 10. குறிப்பிட்ட உணர்வை ஏற்படுத்துதல்; evoke an emotion; produce.

**உண்டாகுதல்** வி. (v.) *1.* இயற்கையாக ஒன்று தோன்றுதல்; come into existence; get formed; get produced. *'அண்டம் எப்படி உண்டானது என்ற ஆய்வு செய்யப்பட்டுவருகிறது'*. 2. குறிப்பிட்ட முறையில் ஒரு பொருள், ஆற்றல் உருவாதல்; get produced. *'மரபணு மாற்றத்தில் உண்டான காய்கறிகள்'*. 3. கண்டு பிடிப்பால் ஒன்று உருவாதல்; develop through discovery. *'கணினி உண்டான வகை வியப்பளிக்கிறது'*. 4. குறிப் பிட்ட தன்மை, உணர்வு, சூழல் போன்றவை ஏற்படுதல்; (of emotion, a situation etc.,) appear, get caused. *'அவருக்குச் சினம் உண்டாகும்படி நாம் நடக்கக்கூடாது'*. 5. நோய், காயம் ஏற்படுதல்; be caused. ' 6. அமைப்பு, கருத்து முதலியன உருவாகுதல்; get formed; appear. *'மொழிப்பற்று அனைவருக்கும் உண்டாக வேண்டும்'*. 7. கருவுறுதல்; to conceive.

**உண்டாயிருத்தல்** வி. (v.) கருவுற்றிருத்தல்; pregnancy.

**உண்டான** பெ.எ. (adj.) *உரிய*; due; what is belonging to one. *'மகனுக்குண்டான பங்கைக் கொடுத்தார்'*.

**உண்டியல்** பெ. (n.) பணம், காணிக்கை ஆகியவற்றை இடுவதற்காக மேல் புறத்தில் நீளவாக்கில் திறப்புடைய பெட்டி போன்ற பொருள்; container for collecting contributions or used for saving money, with a slit for dropping in money; money box.

**உண்டிவில்** பெ. (n.) *1.* கவண்; sling. 2. கவையின் இரு நுனிகளிலும் கட்டப் பட்ட தொய்வை (ரப்பர்) பட்டையின் நடுவில் சிறு கல்லை வைத்து இழுத்துவிடும்போது குறியைத் தாக்கப் பயன்படும் கருவி; catapult. *'உண்டி வில்லால் மாங்காய் அடித்தான்'*.

**உண்டில்லையென்று** வி.எ. (adv.) வாழ்வா சாவா என்ற இறுதிக்கட்ட அளவுக்கு; of rebuking or getting rebuked in such a way as to make one feel miserable.

*'சட்டப்படி நடக்கவில்லையென்றால் உண்டில்லையென்று பண்ணி விடுவார்'.*

**உண்டு** கு.வி.மு. (iv.) *1.* *உள்ளது என்னும் பொருளில் ஐம்பால் மூவிடங்களுக்கு வரும் குறிப்பு வினைமுற்றுச் சொல்;* finite verb denoting existence, used in common to all genders and persons and both numbers. *'உதவி செய்பவர்களும் உலகத்தில் உண்டு'.* 2. *தன் செயல் களை மட்டுப்படுத்திக் கொள்வதைக் குறிக்கப் பயன்படும் வினைமுற்று;* word added to certain words to mean that one has limited one's activities specified by those words . *'தான் உண்டு தன் படிப்பு உண்டு என்று இருந்தான்'.* 3. *குறிப்பிட்ட ஒன்று நிகழ்ந்தால் மட்டுமே எதிர்பார்ப்பது நிறை வேறும் என்பதையுணர்த்தும் வினை முற்று;* used (mostly in conditional sentences) to say that what is expected or desired is possible on the condition that specified even happens.

**உண்டுபண்ணிவைத்தல்** வி. (v.) *நல்ல நிலையில் வைத்தல்;* to put into the state or condition of being, to set up or establish the fortune or standing of, to elevate, as a person.

**உண்டுபண்ணுதல்** வி. (v.) *உண்டாக் குதல்;* to make, create, give rise to. *'ஆசிரியர் கற்பித்தவிதம் இலக் கணத்தில் ஆர்வத்தை உண்டாக் கியது'.*

**உண்டென** கு.வி.எ. (adv.) *நிரம்ப;* profusely, lavishly. *'எனக்கு உண்டெனத் தர வேண்டும்'.*

**உண்டைக்கட்டி** பெ. (n.) *கோயிலில் உருண்டையாகத் தரும் படையல் செய்த உணவு;* balls of offering distributed in temples.

**உண்ணாநோன்பு** பெ. (n.) *1. உண்ணாமல் இருக்கும் நோன்பு;* fasting as a religious observance. *'புரட்டாசி மாதம் காரிக் கிழமைகளில் உண்ணா நோன்பு இருப்போம்'.* 2. *எதிர்ப்பைக் காட்ட உண்ணாமலிருந்து நடத்தும் போராட்டம்;* hunger strike, protest fast. *'ஊதிய உயர்வு கோரி உண்ணா நோன்பு இருந்தார்கள்'.*

**உண்ணாவிரதம்** பெ. (n.) *உண்ணா நோன்பு பார்க்க.*

**உண்ணி** பெ. (n.) *1.* *விலங்குகளின் உடம்பில் ஒட்டிக்கொண்டு குருதியை உறிஞ்சி வாழும் மிகச் சிறிய பூச்சியினம்;* tick. *'நாயின் உடலில் உண்ணி இருந்தது'.* 2. *உணவாகக் கொள்ளும் உயிரினம்;* (of animals) one which feeds on (plants or the flesh of other animals). *'காகம் ஓர் அனைத் துண்ணி'.*

**உண்ணிக்கொக்கு** பெ. (n.) *கால் நடைகளின் உடலிலுள்ள பூச்சிகள் மற்றும் உண்ணிகளை உண்ணும், வெள்ளை நிற உடலும், மஞ்சள் நிற அலகுமுள்ள ஒரு வகைக் கொக்கு;* cattle egret.

**உண்ணுதல்** வி. (v.) *1. சாப்பிடுதல்;* eat. *'உணவு உண்டார்'.* 2. *குடித்தல்;* drink. *'மான்கள் நீரருந்தின'.*

**உண்மை** பெ. (n.) *1. பொய் அல்லாதது;* true, truth. *'ஒழுக்கம் உயர்வு தரும் என்பது உண்மை'.* 2. *போலி அல்லாதது;* genuine; something that is not spurious *'இது காகிதப்பூ அல்ல; உண்மையான பூ'.* 3. *முறை பிறழாதது; நேர்மையானது;* truthfulness, loyal, trustworthy . *'உண்மை நண்பன்'.* 4. *இயல்பில் அமைந் திருப்பது;* something natural or real. *'உன் உண்மையான திறமையை உலகம் ஒரு நாள் அறியும்'.* 5. *அறி வாலும் பட்டறிவாலும் அறியப் படுவது;* truths. *'மெய்ம்ம உண்மைகள்'.*

**உண்மையில்** இ.சொ. (parti.) *'சொல்லப் போனால்', 'பார்க்கப் போனால்' என்ற பொருளில் பயன்படுத்தப் படும் இடைச்சொல்;* particle used in the sense of 'infact'.

**உணர்ச்சி** பெ. (n.) *1. உடலில் அல்லது மனத்தில் ஏற்படும் நிலையை அறிவதால் ஏற்படும் பட்டறிவு; தொடுவதை அறியும் திறன்;* feeling; sensation. *'கால் மரத்துப்போய் உணர்ச்சியற்று உள்ளது'. 2. சினம், அன்பு, பரிவு, பொறாமை போன்ற நிலை;* emotion; sentiments. *'தாய்மை யின் உணர்ச்சிகளைச் சிறப்பாக வடித்துள்ளார்'. 3. குறிப்பிட்ட இயல்பு; தன்மையைக் கொண் டிருக்கும் அல்லது வெளிப்படுத்தும் நிலை;* sensibility; sensitivity.

**உணர்ச்சிவசப்படுதல்** வி. (v.) *அறிவை மீறிய மனநிலைக்கு ஆட்படுதல்;* get worked up; get moved; be overwhelmed (with emotions). *'அவர் உணர்ச்சி வசப் பட்டுப் பேசினார்'.*

**உணர்த்துதல்** வி. (v.) *1. புரியவைத்தல்; தெரிந்துகொள்ளச் செய்தல்;* make known; make one realize. *'அனை வருக்கும் மொழிப்பற்றின் தேவையை உணர்த்த வேண்டும்'. 2. குறிப்பிடுதல்;* indicate. *'இந்தக் கதை எதை உணர்த்துகிறது'.*

**உணர்தல்** வி. (v.) *1. அறிதல்;* feel; sense; perceive; understand. *'கம்பனைச் சொன்னால் இன்பத்தை உணர் கிறேன்'. 2. புரிந்துகொள்ளுதல்;* understand; realize.

**உணர்ந்தோர்** பெ. (n.) *அறிவுடையோர்;* wise, learned persons.

**உணர்வு** பெ. (n.) *1. மனநிலை;* awareness; consciousness; a feeling of something, specified. *'அவருக்குத் தமிழ் உணர்வு அதிகம்'. 2. உள்ளுணர்வு;* intuition; instinct. *3. நினைவு; உணர்ச்சி;* consciousness.

**உணவு** பெ. (n.) *1. உயிரினங்கள் உயிர் வாழ்வதற்காக உண்ணும் பொருள் கள்;* food, subtenance, etables. *'சமச்சீர் உணவை உட்கொள்ள வேண்டும்.* **2.** பயிரிகளுக்குத் தேவையான ஊட் டங்கள்; food. *'ஒளிச்சேர்க்கையின் மூலமாகப் பயிரிகள் (தாவரங்கள்) தங்களுக்குத் தேவையான உணவைத் தாங்களே உருவாக்கிக்கொள் கின்றன'.*

**உணவுக்குழல்** பெ. (n.) உண்ட உணவு உள்ளே செல்வதற்காக வாயிலிருந்து இரைப்பை வரை உள்ள குழாய் போன்ற உறுப்பு; gullet; food pipe.

**உணவுச் சங்கிலி** பெ. (n.) *ஒன்று மற்றொன்றுக்கு உணவு என்ற வகையில் எல்லா உயிரினங்களும் இணைந்த தொடரி (சங்கிலி);* food chain. *'இயற்கையைப் பாழாக்குவ தால் உணவுச் சங்கிலி பாதிக்கப் படுகிறது'.*

**உணவு விடுதி** பெ. (n.) *1.* விலை கொடுத்து உணவு உண்ணும் விடுதி; restaurant. *2. பள்ளி, கல்லூரி* போன்றவற்றிலும், சில இடங்களில் பொதுமக்களுக்காகவும் குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் உணவு வழங்கு *மிடம்;* mess.

**உத்தி** பெ. (n.) *1.* திறமையான வழிமுறை; திறமையான திட்டம்; strategy; technique. *'விளம்பர உத்தியால் விற்பனையைப் பெருக்கினார்'. 2.* இலக்கியத்தில் உள்ளடக்கத்திற்கு ஏற்ற வடிவத்தைப் பயன்படுத்தும் முறை; literaray device.

**உதட்டளவில்** வி.எ. (adv.) *முழு மனத்துடன் இல்லாமல் வெறும் வாய்ச்சொல்லாக;* insincerely; mere lip service.

**உதட்டுச்சாயம்** பெ. (n.) உதட்டுக்கு நிறம் தருவதற்காகச் சில பெண்கள் பூசிக் கொள்ளும் ஒப்பனைப் பொருள்; lipstick.

**உதட்டுப்பிளவு** பெ. (n.) *பிறவியிலேயே காணப்படும் பிளவுபட்ட உதடு;* cleft lip.

**உதட்டைப் பிதுக்குதல்** வி. (v.) *உதட்டை வெளியே தள்ளுவதன் மூலம் 'இல்லை' 'தெரியாது' போன்ற பொருளை உணர்த்துதல்;* indicate one's negative answer (by curling the lower lip).

**உதடன்** பெ. (n.) *தடித்த உதடையுடையவன்;* thick lipped person or the blubber lipped.

**உதடி** பெ. (n.) *தடித்த உதடையுடையவள்;* blubber lipped woman.

**உதடு** பெ. (n.) *வாயிதழ்;* lip.

**உதவாக்கரை** பெ. (n.) *1. எவ்வகைப் பயனுமில்லாதது:* useless. *2. பயனற்ற ஆள்;* useless or worthless person; a good for nothing.

**உதவி[1]** பெ. (n.) *1. பிறர் நன்மை அடையும்படி செய்யும் செயல்; ஒத்தாசை;* help; assistance. *2. ஒரு பொருளின் துணையால் பெறும் நன்மை;* aid; help.

**உதவி[2]** பெ. (n.) *பதவியில் அல்லது பணியில் உயர்நிலைக்கு அடுத்த கீழ்நிலையைக் குறிக்கும் சொல்;* prefix equivalent to 'sub'; 'deputy' 'assistant'. *'உதவிப் பதிப்பாசிரியர்'.*

**உதவித்தொகை** பெ. (n.) *1. கல்வி கற்பதற்கு உதவும் வகையில் அரசு அல்லது தனியார் அமைப்பு குறிப்பிட்ட காலத்துக்கு வழங்கும் பணம்;* scholarship. *2. இயற்கைச் சீற்றங்களில் சிக்குண்டவர்களுக்கு அரசு வழங்கும் துயரழிப்புப் (நிவாரணம்) பணம்;* relief given in cash; ex-gratia cash payment.

**உதவுதல்** வி. (v.) *1. பயன்படுதல்;* be helpful; be useful. *'நாம் தரும் நன்கொடை ஏழை மாணவர்களின் கல்விக்குப் பயன்படும்'. 2. ஒத்துழைத்தல், ஒத்தாசை செய்தல்;* assist; help.

**உதறல்** பெ. (n.) *1. குளிர், அச்சம் முதலியவற்றால் கை, கால் நடுங்குதல்;* trembling of the body, due to cold, fear etc., shiver. *2. விரைந்து அசைதல்;* to move to and fro. to shake.

**உதறுதல்** வி. (v.) *1. தூசி, அடைப்பைப் போக்க வலுவாக அசைத்து வீசுதல்; கத்தையாக இருப்பதைப் பிரிந்து விழுமாறு ஆட்டுதல்;* flap vigorously; shake off dust, water etc., from one's body. *2. காலை மடக்கி நீட்டுதல்;* shake in jerks (a sprained or be numbed hand or leg). *'சுளுக்கிக் கொண்ட காலை உதறி நீட்டினார்'. 3. அச்சம், குளிரால் நடுங்குதல்;* tremble due to cold, fear etc., *4. விட்டுவிடுதல்; கைவிடுதல்;* discard; cast off; give up in a huff.

**உதறுகாலி** பெ. (n.) *1. காலை இழுத்து நடப்பவள்;* woman who shakes her feet in walking, such gait being supposed to bring evil upon her household. *'உள்ளதையும் கெடுத்தாள் உதறு காலி'. 2. உதை காற் பெற்றம் (பசு);* cow that kicks or twitches away its leg and does not allow to be milked.

**உதித்தல்[1]** வி. (v.) *1. கோள்கள், விண்மீன்கள் ஆகியவை கண்ணுக்குப் புலனாகும்படி வானத்தில் தோன்றுதல்;* (of sun or moon) rise; (of star) appear. *'சூரியன் கிழக்கில் உதித்தது'. 2. மனத்தில் எண்ணம் தோன்றுதல்;* (of a thought or idea) strike; occur to something. *3. ஆன்றோர் பிறத்தல்;* to be born as a great personage. *'பல சான்றோர் உதித்த நாடு நம் நாடு'.*

**உதித்தல்[2]** வி. (v.) *பருத்தல்;* to swell, increase in size. *'ஆள் உதித்து விட்டான்'.*

**உதிர்த்தல்** வி. (v.) *1. கீழே விழச் செய்தல்;* cause to fall (one by one or loosely or all at the same time); shake off. *'மயில் இறகை உதிர்த்தது'. 2. சொற்கள், கருத்துகளை ஒன்றன்பின் ஒன்றாக வெளிப்படுத்துதல்;* drop; let fall. *'அவர் உதிர்த்த பல அரிய கருத்துகளில் இதுவும் ஒன்று'. 3. சிரிப்பை வெளிப்படுத்துதல்;* let out a smile. *'அவள் உதிர்த்த சிரிப்பில் மயங்கினான்'.*

**உதிர்தல்** வி. (v.) *1. கீழே விழுதல்;* to drop off, as leaves, fruits; to fall out as hair; to be blasted, nipped, shake with the wind, to drop down. *'இலையுதிர்ந்த மரம்'. 2. பிதிர்தல்;* to crumble, fall to pieces as cakes. *'பழைய புத்தகத்தின் பக்கங்கள் உதிரத் தொடங்கின'.*

**உதிர்காய்** பெ. (n.) *1. காற்றடித்து உதிர்ந்த காய்;* fallen fruit. *'உதிர்காயைச் சேகரித்தான்'. 2. குலையினின்று பிரிந்த காய்;* fruit shaken from a bunch.

**உதிர்காலம்** பெ. (n.) *இலையுதிர் காலம்;* season of the year during which leaves fall off from trees - Autumn.

**உதிர்ச்சருகு** பெ. (n.) *மரத்திலிருந்து காய்ந்து விழுந்த இலை;* the dried leaves dropped off the trees.

**உதிர்ப்பு** பெ. (n.) *1. உதிர்வு;* falling. *2. உகுக்கை;* spitting.

**உதிர்வு** பெ. (n.) *உதிர்கை;* falling. *'முடி உதிர்வைத் தடுக்க மருத்துவ முறைகள் உள்ளன'.*

**உதிரி** பெ. (n.) *1. ஒன்றுடன் ஒன்று இணையாமல் தனித்தனியாக இருப்பது;* state of being separate or loose or detached. *'உதிரிப்பூ வாங்கினாள்'. 2. குறிப்பிட்ட எந்த வகைக்குள்ளும் அடங்காதது;* miscellaneous; sundry. *'உதிரிச் செலவுகள்'. 3. சில்லறை வேலைகள்;* odd jobs.

**உதிரிப்பாகம்** பெ. (n.) *எந்திரத்தின் மாற்றக்கூடிய பகுதி;* spare part.

**உதை** பெ. (n.) *1. காலினால் தாக்கல்;* kick. *'பந்தை ஓர் உதை உதைத்தான்'. 2. அடி;* thrash, beating, flogging. *'தவறிழைத்தவர்களுக்கு உதை கிடைத்தது'.*

**உதைகால்பெற்றம்** பெ. (n.) *பால் கறக்கும்போது உதைக்கும் இயல்புள்ள கறவை மாடு;* cow with kicking leg.

**உதைகாலி** பெ. (n.) *உதைக்கும் இயல்புள்ள மாடு;* cow with kicking leg.

**உதைகாற்பசு** பெ. (n.) *உதைகால்பெற்றம் பார்க்க.*

**உதைகொடுத்தல்** வி. (v.) *உதைத்தல்;* to give kicks. *'திருடியவனைப் பிடித்து உதை கொடுத்தார்கள்'.*

**உதைத்தல்** வி. (v.) *1. காலால் தாக்குதல்;* kick. *'பந்தை உதைத்தான்'. 2. காலை உதறுதல்;* move the foot as if to strike; kick. *3. அவமதித்தல்;* to spum, reject, as advice. *'என் பேச்சை உதைத்துத் தள்ளிவிட்டான்'. 4. வலுவாய் அழுத்துதல்;* kick the starter in two wheeler. *'பல முறை உதைத்தும் விசையுந்து கிளம்பவில்லை'. 5. அடியுதை கொடுத்தல்;* give a good thrash. *6. கணக்கு, செய்தி போன்றவை முரண்படுதல்;* of account, information etc., show discrepancy, be inconsistent. *'எப்படிப் பார்த்தாலும் கணக்கு உதைக்கிறது'. 7. செயலைச் செய்வதில் தடுமாறுதல்;* be deficient. *'அவனுக்கு இலக்கணம் சற்று உதைக்கும்'. 8. பற்றாக்குறை ஏற்படுதல்;* be wanting. *'மாதத் தவணையில் பொருள் வாங்கியதால் வீட்டுச் செலவுக்குப் பணம் உதைக்கிறது'. 9. உள்மனம்*

உறுத்துதல்; அச்சப்படுதல்; feel the prick (of conscience); feel uneasy. *'குற்றவுணர்வால் அவருக்கு உதைத்தது'.*

**உதைத்துக்கொள்ளல்** பெ. (n.) *1. அச்சத்தால், குளிரால் நடுக்கங் கொள்ளல்;* shivering with cold; trembling with fear. *'காவலரைக் கண்டதும் திருடனுக்கு உதைத்துக் கொண்டது'. 2.* வலிப்பு அல்லது இழுப்பினால் கை கால் இழுத்துக்கொள்ளல்; violent and irregular motion of the limbs through; fits. *'காக்காய் வலிப்பு வந்ததால் கைகால் உதைத்துக் கொண்டது'.*

**உதைசுவர்** பெ. (n.) *1. முட்டுச்சுவர்;* wall rest; buttress. *2. அணை சுவர்;* supporting wall.

**உதைப்பு** பெ. (n.) *தவறு செய்திருக்கும் போது உள்ளூர ஏற்படும் மனக் கலக்கம்; உதறல்;* uneasy feeling; sense of guilt. *'வாடகை தராததால் வீட்டுக் காரனைப் பார்த்ததும் அவனுக்கு உதைப்பு ஏற்பட்டது'.*

**உதைபந்து** பெ. (n.) *கால்பந்து;* football. *'உதைபந்தாட்டப் போட்டி நடைபெற்றது'.*

**உந்தம்** பெ. (n.) *1. உந்து விசையால் ஏற்படும் இயக்கம் (பொருளின் நிறையையும் அதன் திசைவேகத்தையும் பெருக்கினால் கிடைப்பது);* momentum. *2. மின்சாரத்தாலோ கன்னெய் (பெட்ரோல்) உதவியாலேயே சுழலும் பொறி;* engine, motor).

**உந்தல்** பெ. (n.) *உந்துதல் பார்க்க.*

**உந்தி** பெ. (n.) *1. கொப்பூழ்; தொப்புள்;* naval. *2. வயிறு;* belly, stomach.

**உந்துதல்**[1] வி. (v.) *1. முன்காலால் அழுத்துதல்;* push; spring forward. *'அவள் ஊஞ்சலை உந்தி ஆடும் காட்சி பார்க்க அழகாக இருந்தது'. 2. முன்னோக்கித் தள்ளுதல்;* of wind push forward. *'பாய்மரக் கப்பல் காற்றால் உந்தப்பட்டது'. 3.* தூண்டுதல்; urge; impel. *'தன்னார்வத்தால் உந்தப்பட்டு தொண்டு செய்தான்'.*

**உந்துதல்**[2] வி. (v.) *தூண்டுதல், ஊக்கம்;* urge; inducement, impetus.

**உந்துபலகை** பெ. (n.) *நீச்சல் குளத்தில் குதிப்பதற்கு முன் உந்தி மேலெழுவதற்கு உதவும் வலுவான நீண்ட பலகை;* springboard. *'உந்துபலகையிலிருந்து எம்பி மேலெழுந்து குளத்தில் குதித்தான்'.*

**உந்துவண்டி** பெ. (n.) *உந்தத்தினால் இயங்கும் வண்டி;* motor car. *'உந்துவண்டியில் ஏறிச் சென்றான்'.*

**உந்துவிசை** பெ. (n.) *ஒரு பொருள் முன்னோக்கிச் செல்ல அல்லது பாயத் தேவையான விரைவைத் தரும் ஆற்றல்;* propulsion. *'ஏவூர்தியை விண்ணில் ஏவ உந்துவிசை உதவுகிறது'.*

**உப்பங்கழி** பெ. (n.) *1. கடலிலிருந்து பிரிந்து உவர் நீர் தேங்கியிருக்கும் நீள்குட்டை;* back water lagoon. *2. உப்பளம்;* salt pan.

**உப்பங்காற்று** பெ. (n.) *கடற்காற்று;* sea breeze. *'உப்பங்காற்று உடலுக்கு ஆகாது'.*

**உப்பங்கோரை** பெ. (n.) *உவர் நிலத்தில் முளைப்பதான கைப்புக் கோரை;* a bitter sedge that grown only by the side of salt marshes.

**உப்பளம்** பெ. (n.) *பாத்திகளில் தேக்கப்பட்ட கடல்நீர் ஆவியாகி உப்புப் படிவதற்கு ஏற்ற வகையில் அமைக்கப்பட்ட இடம்;* salt pan.

**உப்பமைத்தல்** வி. (v.) *உப்பு விளைத்தல்;* to produce salt. *'உப்பளத்தில் உப்பமைத்தார்கள்'.*

**உப்பமைப்போர்** பெ. (n.) *உப்பு விளை விக்கும் நெய்தல் நில மக்கள்;* salt manufactures, dwellers in maritime tracts.

**உப்பர்** பெ. (n.) *உப்பமைப்போர் பார்க்க.*

**உப்பரிகை** பெ. (n.) *அரண்மனை போன்றவற்றின் மேல் மாடம்;* balcony in a palace.

**உப்பல்** பெ. (n.) *ஊதிப் பருத்தல்;* distension, flatulence. *'ஆள் உப்பலாகி யிருக்கிறான்'.*

**உப்பளவர்** பெ. (n.) *உப்பு விளை விப்போர்;* salt maker.

**உப்பளறு** பெ. (n.) *களிமண்ணும் உப்புமணலும் கலந்த களர்நிலம்;* soil containing clay and sand impregnated with alkaline matters generally found along the coasts. *'உப்பளறில் விளையாடாதே என்று அதட்டினார்'.*

**உப்பறுகு** பெ. (n.) *உவர்நிலத்துள்ள ஒருவகை அறுகம்புல்;* species of Bermuda - grass growing in maritime tracts.

**உப்பனாறு** பெ. (n.) *கடலிலிருந்து எதிர்த்துப் பெருகிய உவர்நீருள்ள ஆறு;* back water, regarded as a river of salt water. *'உப்பனாற்று நீரால் தாகம் தணியாது'.*

**உப்புசம்** பெ. (n.) *வீக்கம்;* swelling as of the abdomen; flatulence. *'வயிறு உப்புசமா யிருக்கிறது'.*

**உப்பாரக்காரன்** பெ. (n.) *சுண்ணாம்பு பூசும் வேலைக்காரன்;* one who plasters a wall, who rubs mortar. *'வீட்டுக்கு வெள்ளையடிக்க உப்பாரக் காரனை அழைத்துவா'.*

**உப்பாறு** பெ. (n.) *காட்டாறு;* country stream usually dry except in the rainy season.

**உப்பிட்டவர்** பெ. (n.) *உணவளித்தவர்;* one who offered food, help. *'உப்பிட்டவரை உள்ளளவும் நினை (பழ)'.*

**உப்பில்லாப் பேச்சு** பெ. (n.) *பயனற்ற உரையாடல்;* insipid discourse. *'உப் பில்லாப் பேச்சால் எந்த நன்மையும் விளையப் போவதில்லை'.*

**உப்பு** பெ. (n.) *1.கடல் நீரை ஆவியாக்கி உணக்கிய, படிக வடிவ, உவர்ப்புச் சுவையுடைய வெண் சிறுகல்;* salt; alkali. *2.உப்பின் சுவை; கைப்பு;* saltiness. *'குழம்பு உப்பாயிருக்கிறது'. 3. அமிலமும் காரமும் சேர்ந்து ஏற்படும் மாற்றத்தால் கிடைக்கும் படிக வடிவப் பொருள்;* chemical salt.

**உப்புதல்** வி. (v.) *1.ஊதிப் பெருத்தல்;* be puffed up; bloat. *'ஆள் இப்போது உப்பியிருக்கிறான்'. 2. வீங்குதல்;* swell. *'அழுது அழுது அவள் கண்கள் உப்பியது'.*

**உப்புக்கடலை** பெ. (n.) *உப்பும் மஞ்சட் பொடியும் தூவி வறுத்த கடலை;* parched bengal gram seasoned with salt and turmeric powder.

**உப்புக்கண்டம்** பெ. (n.) *உப்பூட்டிக் காய வைத்த இறைச்சித் துண்டு அல்லது மீன்;* piece of salted meat or salt fish.

**உப்புக்கரித்தல்** வி. (v.) *உவர்ப்பு மிகுதல்;* to have an intensely saline taste. *'தண்ணீர் உப்புக்கரிக்கிறது'.*

**உப்புக்கல்** பெ. (n.) *1.உப்புத்துண்டு;* lump or pinch of salt. *'குழம்புக்கு இரண்டு உப்புக்கல் போடு'. 2. ஒருவகைக் கடற்கல்;* fine grained grit stone formed by the induration of the upper surface of the sea bed.

**உப்புக்கழி** பெ. (n.) *உப்பங்கழி பார்க்க.*

**உப்புக்கறி** பெ. (n.) *உப்பிட்டு உணக்கிய கிழங்கு அல்லது பழத்துண்டுகளின் வறுவல்;* curry of fruits or tubers salted and fried. *'உப்புக்கறி சுவையாக இருந்தது'.*

**உப்புக்காகிதம்** பெ. (n.) *உப்புத்தாள் பார்க்க.*

**உப்புக்காற்று** பெ. (n.) *கடலிலிருந்து வீசும் உப்புத்தன்மை நிறைந்த காற்று;* salty sea breeze. *'உப்புக்காற்று உடம்புக்கு ஆகாது என்றார்'.*

**உப்புக்கீரை** பெ. (n.) *ஒருவகைக் கீரை;* common Indian saltwort.

**உப்புக்கோடு** பெ. (n.) *சதுரக்கோடு கிழித்து ஆடும் கிளித்தட்டு விளையாட்டு;* a game consisting of running through a diagram of squares marked on the ground. *'அவன் உப்புக்கோடு ஆட்டத்தில் வல்லவன்'.*

**உப்புகை** பெ. (n.) *பருத்தல்; வீங்குதல்;* enlarging; swelling.

**உப்புச் சத்தியாகிரகம்** பெ. (n.) *இந்தியாவில் உருவாக்கப்பட்ட உப்புக்கு ஆங்கிலேயே அரசு வரி சுமத்தியதை எதிர்த்து தேசத் தந்தை காந்தி தலைமையில் நடத்தப்பட்ட போராட்டம்;* salt satyagraha.

**உப்புச்சப்பு** பெ. (n.) *1. சுவை;* taste. *'சாப்பாட்டில் உப்புச்சப்பில்லை'. 2.ஆர்வம் (சுவாரஸ்யம்);* Interest. *'ஆட்டம் உப்புச்சப்பில்லாமல் முடிந்தது'.*

**உப்புச்சீடை** பெ. (n.) *உப்புச் சுவையுள்ள சீடைப் பணிகாரம்;* small balls of pastry fried and salted.

**உப்புத்தண்ணீர்** பெ. (n.) *1.உப்புநீர்; கடல்நீர் போல் உவர்ப்பான நீர்;* salt, brackish water. *2.உப்பிட்டுக் கலக்கிய நீர்;* water in which salt is dissolved.

**உப்புத்தள்ளல்** பெ. (n.) *பத்தியத்தில் உப்பு நீக்கல்;* the removal of the salt from diet, de cleridin. *'உப்புத் தள்ளிய உணவு சுவைக்கவில்லை'.*

**உப்புத்தாள்** பெ. (n.) *மணல் போன்ற துகள் ஒட்டப்பட்டு தேய்ப்பதற்கான தாள்;* sand paper, emary sheet.

**உப்புப்புளி** பெ. (n.) *குடும்பம் நடத்துவதற்குத் தேவையான சிறு சிறு தேவைகள்;* small needs of a house hold; bare necessities.

**உப்புப்படுதல்** வி. (v.) *1. உப்பு விளைதல்;* to form as salt by natural process. *2. உப்புத்தன்மையடைதல்;* to become saline.

**உப்புப்பண்டம்** பெ. (n.) *உப்புச் சுவையுள்ள உணவுப் பண்டம்;* salted food.

**உப்புப் பயிர்** பெ. (n.) *உப்பளங்களின் பாத்திகளில் கடல் நீரைப் பாய்ச்சுவதால் விளைந்த உப்பு;* crop of salt.

**உப்புப் பற்றுதல்** வி. (v.) *உவர் பிடித்தல்;* to become saline, as land.

**உப்புப்பாத்தி** பெ. (n.) *உப்பு விளைதற் கிடமான பாத்தி;* beds in salt pans. *'உப்புப் பாத்தியில் வேலை செய்தார்கள்'.*

**உப்புப் பார்த்தல்** வி. (v.) *சுவை பார்த்தல்;* to try seasoning, as of curry by the taste. *'அம்மா குழம்பை உப்புப் பார்க்கத் தந்தார்'.*

**உப்புப்புல்** பெ. (n.) *உவர் நிலத்துண் டாகும் புல்;* grass growing on saline soils.

**உப்புப்பூத்தல்** வி. (v.) *1. வியர்வை காய்ந்து தோலின் மீதும், ஆடை மீதும் உப்புப் படிந்து வெள்ளை வெள்ளையாகக் காணப்படுதல்;* have white patches of salt on the skin or dress when sweat dries up. *'சட்டை உப்புப் பூத்திருக்கு'. 2. உப்புக் காற்றால் அரிக்கப்படுதல்;* be corroded by brackish sea breeze. *'கடற்கரையில் நின்றிருந்த பூநாரையின் உடல் உப்புப் பூத்திருந்தது'.*

**உப்புப்பொரிதல்** வி. (v.) *உப்புப்பூத்தல் பார்க்க.*

**உப்புமண்** பெ. (n.) *உவர் நிலம்;* saline soil, salt earth.

**உப்புமா** பெ. (n.) *ஒருவகைச் சிற்றுண்டி;* salted confection of flour or meal.

**உப்புவணிகன்** பெ. (n.) *உப்பு விற்கும் வணிகக் குடியினன்;* member of salt vendors.

**உம்கொட்டுதல்** வி. (v.) *மற்றவர் ஏதேனும் ஒன்றைச் சொல்லும்போது அதனைக் கவனிப்பதைத் தெரிவிப்பதற்காக 'உம்' என்று ஒலி எழுப்புதல்;* say 'um' (yes), as indication that one is listening to what is being said. *'அம்மா கதை சொல்ல, குழந்தைகள் உம்கொட்டிக் கேட்டார்கள்'.*

**உம்மணாமூஞ்சி** பெ. (n.) *கலகலப்பாக இல்லாத ஆள்; எப்போதும் கடுமையான முகத்துடன் காணப்படும் ஆள்;* person who looks cheerless, morose looking person.

**உம்மென்றிருத்தல்** வி. (v.) *சினம், கவலை முதலியவற்றால் பேச விருப்பமின்றி முகத்தை இறுக்கமாக வைத் திருத்தல்;* grimly, unsmilingly, glumly. *'அப்பா திட்டியதால் உம்மென் றிருந்தான்'.*

**உம்மெனல்** பெ. (n.) *உடன்பாடு, சினம் முதலியவற்றை வெளிப்படுத்தும் ஒலிக்குறிப்பு;* utterance of an interjection sound 'um' expressive of assent, anger or threat. *'நன்றாகப் படிக்க வேண்டும் என்று சொன்ன போது 'உம்மென்றான்'.*

**உம்மைத்தொகை** பெ. (n.) *'உம்' என்னும் இடைச்சொல் மறைந்துவரும் பெயர்ச்சொற்களாலான கூட்டுச் சொல்;* noun compound where the connective 'um' is absent. *'வெற்றிலை பாக்கு (வெற்றிலையும் பாக்கும்)'.*

**உமது** பெ. (n.) *உம்முடைய;* that which belongs to you, yours. *'உமது சட்டை நன்றாய் இருக்கிறது'.*

**உமி** பெ. (n.) *தவசங்களிலிருந்து நீக்கப்பட்ட புறத்தோல்;* husk (removed from grains by milling). *'நெல்லைப் புடைத்து உமியைத் தள்ளினார்கள்'.*

**உமிச்சாம்பல்** பெ. (n.) *உமி எரிந்துண் டாகும் சாம்பல்;* ashes obtained from the burning of rice husks.

**உமிச்சிரங்கு** பெ. (n.) *உமியைப் போன்ற பருக்கள் அல்லது சிறு சிரங்குகள்; நமைச் சிரங்கு;* a superficial, troublesome kind of itch, prurigo.

**உமித்தவிடு** பெ. (n.) *உமி கலந்த தவிடு;* bran mixed with fine or broken husks for feed, course bran.

**உமிப்புடம்** பெ. (n.) *குழி நிறைய உமியிட்டு எரிக்கும் புடம்;* calcination by heating medicinal drugs over a pitful or burning paddy husk.

**உமியுண்ணி** பெ. (n.) *சிறிய உண்ணிவகை; தவிட்டுண்ணி;* small tick.

**உமிழ்வு** பெ. (n.) *ஒரு பொருள் ஒளியையோ, கதிர்வீச்சையோ, வெப்பத்தையோ வெளிப்படுத்தும் நிலை;* emission of heat, light, etc.,

**உமிழ்தல்** வி. (v.) *1. துப்புதல்;* spit. *'காரி உமிழ்ந்தான்'. 2. ஒளி, வெப்பம் முதலியவற்றைச் சிறிது சிறிதாக வெளியிடுதல்;* emit (light), give off (heat). *'ஒளி உமிழும் கண்கள்'.*

**உமிழ்நீர்** பெ. (n.) *வாயூறு நீர்;* spittle, saliva.

**உமை** பெ. (n.) *மலைமகள்;* parvati, consort of sivan.

**உய்கை** பெ. (n.) *1. ஈடேறுகை;* salvation, deliverance. *2. துன்பம் நீங்குகை;* escaping from hardship, relief from distress. *'ஆசை துறத்தலே உய்கைக்கு வழி'.*

**உய்த்தறிதல்** வி. (v.) *உய்த்துணர்தல் பார்க்க.*

**உய்த்துணர்தல்** வி. (v.) *ஆராய்ந்தறிதல்;* to know by careful investigation. *'திருக்குறளை ஆழ்ந்து படித்தால் வள்ளுவரின் மொழியாளுமையை உய்த்துணரலாம்'.*

**உய்தல்** வி. (v.) *தீவினையிலிருந்து நீங்கி நற்கதியடைதல்;* be redeemed, attain freedom (from evil).

**உய்வித்தல்** வி. (v.) *உய்வடையச் செய்தல்;* redeem. *'நாட்டை உய்விக்க வந்த தலைவர்'.*

**உய்விடம்** பெ. (n.) *பிழைக்குமிடம்;* asylum place of refuge, shelter. *'ஏதிலிகள் உய்விடம் தேடி அலைந்தனர்'.*

**உய்வு** பெ. (n.) *தீவினையிலிருந்து நீங்கிப் பெறும் நற்கதி, மீட்சி;* deliverance (from evil), redemption.

**உயர்** பெ. (n.) *1. மேல்;* higher (in grades or in a hierarchy); *'உயரதிகாரி'.* *2. (தரத்தைக் குறிக்கையில்) சிறந்த;* high (in quality; grade). *'உயர்தரப் பொருள்கள்'.*

**உயர்கல்வி** பெ. (n.) *மேற்படிப்பு;* higher education. *'உயர்கல்வித் துறை'.*

**உயர் குருதியழுத்தம்** பெ. (n.) *இயல்பான அளவுக்கு அதிகமாக இருக்கும் குருதியழுத்தம்; குருதிக் கொதிப்பு;* high blood pressure.

**உயர்ச்சி** பெ. (n.) *1. உயரம்;* height, elevation, altitude. *2. மேன்மை;* excellence, superiority, moral worth, valuable trait.

**உயர்சொல்** பெ. (n.) *உயர்த்திக் கூறுஞ் சொல்;* honorific, expression, term of respect. *'உயர்சொல் ஊக்கம் தரும்'.*

**உயர்த்தி** பெ. (n.) *மேன்மை;* excellence; superiority.

**உயர்த்திப் பிடித்தல்** வி. (v.) *முகமை (முக்கியத்துவம்) தருதல்;* give importance. *'உழவை உயர்த்திப் பிடித்தால் நாடு முன்னேறும்'.*

**உயர்த்திப் பேசுதல்** வி. (v.) *1. புகழ்ந்து பேசுதல்;* to speak highly, of a person or a thing. *'பரிசு பெற்ற மாணவரை ஆசிரியர் உயர்த்திப் பேசினார்'.* *2. குரலையோங்கிப் பேசுதல்;* to raise the voice and speak. *'அப்பாவின் முன் யாரும் குரலை உயர்த்திப் பேச மாட்டார்கள்'.*

**உயர்த்துதல்** வி. (v.) *1. கீழ்நிலையிலிருந்து மேல் நிலைக்குக் கொண்டு வருதல்;* raise (one's head, arm, etc.,), lift up. *'தலையை உயர்த்தினான்'.* *2. உயரத்திற்குக் கொண்டு வருதல்;* (of level) cause to rise. *'மேடையை உயர்த்திக் கட்டினார்கள்'.* *3. அளவு, விலை, மதிப்பு முதலியவற்றை அதிகரித்தல்;* increase, raise. *3. புகழ்தல், பாராட்டுதல்;* praise, appreciate. *'தொண்டர்கள் தம் கட்சித் தலைவரை உயர்த்திப் பேசினார்கள்'.*

**உயர்தரம்** பெ. (n.) *பட்டப்படிப்பில் சேர்வதற்கான அடிப்படைத் தகுதியாக அமையும் மேல்நிலைத் தேர்வு;* higher secondary examination; general certificate of examination (advanced level). *'உயர்தரம் முதலாமாண்டு படிக்கிறாள்'.*

**உயர்தல்** வி. (v.) *1. மேல்நோக்கி எழும்புதல்;* rise, go up (from a lower position). *'ஏவூர்தி வான்நோக்கி உயர்ந்து சென்றது'.* *2. அளவு, விலை, மதிப்பு முதலியன அதிகரித்தல்; கூடுதல்;* increase, rise.

**உயர்திணை** பெ. (n.) *மக்களையும் தெய்வங்களையும் உள்ளடக்கிய பெயர்ச்சொல் பகுப்பு;* class of nouns compressing humans and celestial beings.

**உயர்தொழில்நுட்பம்** பெ. (n.) *மின்னணு வியல், கணிப்பொறியியல் ஆகிய வற்றைப் பயன்படுத்தும் தொழில் நுட்பம்;* high-tech. *'உயர் தொழில் நுட்பக் கருவிகள்'.*

**உயர்ந்த** வி.எ. (adv.) *1. உயரமான;* high, tall. *'உயர்ந்த கோபுரம்'. 2. தன்மை, தரம், குணம் போன்றவற்றில் சிறந்த, நல்ல;* high (quality). *'உயர்ந்த குணமுள்ளவர்'.*

**உயர்ந்தவன்** பெ. (n.) *1. உயரமானவன்;* tall man. *2. சிறந்தவன்;* man of rank, man of high character.

**உயர்ந்தபட்சம்** பெ. (n.) *அதிகளவு;* maximum.

**உயர்ந்தோங்குதல்** வி. (v.) *சிறப்பான நிலையை அடைதல்;* attain a high level; flourish.

**உயர்ந்தோர்** பெ. (n.) *பண்பில், கல்வியில் பெரியோர்;* the great; the learned, the exalted, as in piety, in virture, or in austerities.

**உயர்நிலை** பெ. (n.) *1. மேலான நிலை;* high; higher. *'உயர்நிலை ஆய்வு'. 2. மேலான பதவி;* high position.

**உயர்நிலைக் கல்வி** பெ. (n.) *பத்தாம் வகுப்பு வரை பயிலுங் கல்வி;* high school education.

**உயர்நிலைப் பள்ளி** பெ. (n.) *பத்தாம் வகுப்பு வரை உள்ள பள்ளிக்கூடம்;* high school (offering instruction up to the 10th standard).

**உயர்நீதிமன்றம்** பெ. (n.) *மாநிலத் திற்கான தலைமை அறமன்றம்;* high court. *'உயர்நீதிமன்ற ஆணையை மாநில அரசு நிறைவேற்றியது'.*

**உயர்மட்டக்குழு** பெ. (n.) *குறிப்பிட்ட சிக்கல்களை ஆய்வு செய்து அறிக்கை அளிக்கும் பொருட்டு அரசால் அமர்த்தப்படும் குழு;* high level committee (constituted by the government to study and report on specified issues).

**உயர்வு** பெ. (n.) *1. அதிகரிப்பு, கூடுதல்;* rise, increase. *'விலைவாசி உயர்வு மக்களை வாட்டுகிறது'. 2. பதவியில் குறிப்பிட்ட நிலையைவிட அடுத்த மேல்நிலை;* promotion (to a higher post). *'பதவி உயர்வு பெற்றார்'. 3. சிறப்பு;* being high or superior. *'மகன் அம்மாவைப் பற்றி உயர்வாகப் பேசினார்'.*

**உயர்வுமனப்பான்மை** பெ. (n.) *மற்றவர் களைவிட தான் எல்லா வகையிலும் உயர்வு என்ற மனப்போக்கு;* superiority complex.

**உயரம்** பெ. (n.) *1. அடிப்பகுதியிலிருந்து மேல்பகுதி வரை உள்ள அளவு;* height. *'உயரமான கோபுரம்'. 2. அதிக உயரம்;* being tall; being high. *'ஆள் உயரமாக இருக்கிறார்'. 3. உயர்ந்த நிலை, உச்சம்;* (of fame, achievement, etc.,) height; peak, pinnacle. *'பாவாணர் சொற்பிறப்பியல் துறையில் உயரம் தொட்டவர்'.*

**உயரம் தாண்டுதல்** பெ. (n.) *ஓடிவந்து அதிக உயரம் தாண்டும் தடகளப் போட்டி;* high jump.

**உயரழுத்த மின்சாரம்** பெ. (n.) *தொழிற் சாலைகளில் பெரிய எந்திரங்களை இயக்கத் தேவையான ஆற்றல் வாய்ந்த மின்சாரம்;* high tension power.

**உயரிய** பெ.எ. (adj.) *உயர்ந்த, சிறந்த;* noble. *'உயரிய எண்ணம் உடையவர்'.*

**உயரே** வி.எ. (adv.) *மேலே; மேல் நோக்கி;* above. *'உயரே செல்லச் செல்ல காற்றின் அழுத்தம் படிப்படியாகக் குறையும்'.*

**உயவு எண்ணெய்** பெ. (n.) *எந்திர பாகங்கள் ஒன்றோடொன்று உரா*

யாமல் சீராக இயங்குவதற்காக இடப்படும் எண்ணெய், பசைத் தன்மையும் குழகுழப்பும் நிறைந்த பொருள்; lubricant.

**உயிர்** பெ. (n.) *1.* உயிருள்ளவற்றின் அனைத்து இயக்கங்களுக்கும் அடிப் படையாக இருக்கும் ஆற்றல்; life, sign of life. *2.* உயிரோடு இருந்து இனப்பெருக்கம் செய்யும் உயிரி; living being. *3.* கருப்பையில் இருக்கும் கரு; foetus. '*பத்து மாதம் சுமந்த உயிர் பாதுகாப்பாய்ப் பிறந்தது*'. *4.* அதிக விருப்பம்; intense liking. '*என்மேல் அம்மா உயிரையே வைத்திருக் கிறார்*'. *5.* மிக நெருக்கம்; being very close. '*உயிர்த் தோழன்*'. *6.* உயிரெழுத்து; vowel. '*உயிர்பன்னிரண்டு*'.

**உயிர் ஊதுதல்** வி. (v.) குழந்தையின் நெற்றியில் ஊதுதல்; to blow the forehead of infants.

**உயிர் இயற்பியல்** பெ. (n.) இயற்பியல் நெறிமுறைகளைப் பயன்படுத்தி உயிரியலை ஆராயும் துறை; biophysics.

**உயிர்க்கட்டை** பெ. (n.) உடல்; body.

**உயிர்க்கணம்** பெ. (n.) உயிரெழுத்துகளின் கூட்டம்; vowels. '*உயிர்க்கணம் பன்னிரண்டு*'.

**உயிர்க்கப்பண்ணல்** பெ. (n.) உயிர் பிழைக்கச் செய்தல்; to reanimate; to bring to life. '*உரிய நேரத்தில் முதலுதவி செய்து உயிர்க்கப் பண்ணினார்*'.

**உயிர்க்காப்பாற்றி** பெ. (n.) உயிரைக் காக்கும் மருந்து; elixir of life.

**உயிர்க்கொலை** பெ. (n.) *1.* உயிரை வாங்குதல்; taking of animal or human life. '*அவன் உயிர்க்கொலைக்கு அஞ்சாதவன்*'. *2.* துன்புறுத்திக் கொல்லல்; taking of life by gradual dismemberment of limbs and organs.

**உயிர்க்கோழி** பெ. (n.) இறைச்சிக்காக உயிரோடு விற்கப்படும் கோழி; live chicken.

**உயிர்காத்தல்** வி. (v.) பேரிடரிலிருந்து காத்தல்; வாழ வைத்தல்; save (one's) life. '*உயிர்காத்த நட்பு*'.

**உயிர்கொடுத்தல்** வி. (v.) அழிந்துவிடும் நிலையிலுள்ள ஒன்றுக்குப் புத்துயிர் கொடுத்தல்; உயிர்ப்பித்தல்; revive; save from extinction. '*அழிந்துவரும் நாட்டுப்புறக் கலைகளுக்கு உயிர் கொடுக்க வேண்டும்*'.

**உயிர்குடித்தல்** வி. (v.) உயிரைப் போக்குதல்; to devour, life, said of blood thirsty demons and malevolent deities.

**உயிர்சத்து** பெ. (n.) உடல் வளர்ச்சி, உடல் நலம் ஆகியவற்றுக்கு இன்றி யமையாததும், சிலவகை உணவுப் பொருள்களில் காணப்படுவதுமான பல வகை ஊட்டப் பொருள்; vitamin. '*உயிர்ச்சத்து நிறைந்த உணவு*'.

**உயிர்ச்சேதம்** பெ. (n.) நேர்ச்சை, இயற்கைப் பேரிடர் ஆகியவற்றால் ஏற்படும் இறப்பு; loss of life. '*வெள்ளத்தால் பெரும் உயிர்ச்சேதம் ஏற்பட்டது*'.

**உயிர்த்தல்** வி. (v.) கருவாக உருவாதல்; உயிர் தோற்றம் எடுத்தல்; (of life) evolve; emerge. '*மாந்தன் உயிர்த்திராத காலம் அது*'.

**உயிர்த்தறுவாய்** பெ. (n.) சிக்கலான நேரம்; great emergency, critical moment, extreme danger.

**உயிர்த்தன்மை** பெ. (n.) உயிரோடு கூடிய தன்மை; living date.

**உயிர்த்துடிப்பு** பெ. (n.) *1.* உடலில் உயிரிருப்பதை உணர்த்தும் அசைவு, நெஞ்சாங்குலைத் (இதயத்) துடிப்பு; pulse of life; pulsation; throb. '*அடிபட்ட யானையின் உயிர்த் துடிப்பைப் பார்த்தனர்*'. *2.* ஒன்றைச் செய்து

*முடிக்க வேண்டும் என்ற கட்டுக் கடங்காத ஆர்வம்;* liveliness zest. *'அவன் உயிர்த் துடிப்புள்ள இளைஞன்'.*

**உயிர்த்துணை** பெ. (n.) *1. இக்கட்டான நேரத்தில் உதவுபவர்;* friend in need. *2. உயிர்த் தோழன், தோழி;* intimate friend, dear as life. *'உயிர்த்துணையான தோழன்'. 3. மனைவி;* wife. *'என் வாழ்க்கை உயிர்த்துணையால் சிறப்படைந்தேன்'.*

**உயிர்த்தெழுதல்** வி. (v.) *1. மயக்க மடைந்தவர் தெளிவு பெற்று எழுதல்;* to be revived, restored to life. *2. செயல் படத் தொடங்குதல்;* get awakened; become alive, quicken. *'உறங்கிக் கிடந்த உணர்வுகள் உயிர்த்தெழுந்தன'. 3. மீண்டும் உயிர்பெற்றெழுதல்;* to rise from the dead. *'இயேசு மரித்த மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார்'.*

**உயிர்த்தெழுந்த திருநாள்** பெ. (n.) *இயேசு உயிர்த்தெழுந்ததன் நினைவாகக் கொண்டாடப்படுகிற, பெரிய (புனித) வெள்ளிக்குப் பின்வரும் ஞாயிற்றுக் கிழமை;* Easter (Sunday).

**உயிர்த்தோழன்** பெ. (n.) *உற்ற நண்பன்;* bosom friend, inseparable companion.

**உயிர்த்தோழி** பெ. (n.) *உற்ற தோழி;* woman's trusted female companion.

**உயிர்தப்புதல்** வி. (v.) *உயிர்பிழைத்தல்;* escape from death; survive. *'வெள்ளத் திலிருந்து உயிர்தப்பி வந்தான்'.*

**உயிர்தரித்தல்** வி. (v.) *உயிரோடிருத்தல்;* be alive; survive. *'எனக்காகத்தான் என் அம்மா உயிர் தரித்திருக்கிறார்'.*

**உயிர்தரு மருந்து** பெ. (n.) *உயிரை நீட்டிக்கும் மருந்து;* elixir of life.

**உயிர்தோற்றம்** பெ. (n.) *உயிர்களின் பிறவி;* genesis of life in four classes of living organisms.

**உயிர்நாடி** பெ. (n.) *ஏதேனும் ஒன்று நிலைப்பதற்கு அடிப்படையானது;* lifeblood of something; life force; vital force. *'அன்பே உலகத்தின் உயிர்நாடி'.*

**உயிர்நிலை** பெ. (n.) *உயிர்நாடி;* vital element; the most essential; the very essence.

**உயிர்நிலைப்புண்** பெ. (n.) *உடம்பின் உயிர்நிலைப் பாகங்களிலேற்படும் புண்;* wound, injury or sore on a vital part of the body.

**உயிர்நூல்** பெ. (n.) *உயிரைப் பேணும் முறையைத் தழுவிய நூல்;* a treatise on protection of life; science of health.

**உயிர்ப்பயிர்கள்** பெ. (n.) *எல்லாவகை உயிர்கள்;* all lives in the animal kingdom; all things with life.

**உயிர்ப்பலி** பெ. (n.) *உயிரையே கொடுக்கும் காணிக்கை;* sacrifice of life.

**உயிர்ப்பழி** பெ. (n.) *கொலை செய்தவனைத் தொடரும் பழி;* guilt of murder, vengeance divine or human of the foul deed of murder pursuing the murderer to death.

**உயிர்ப்பற்று** பெ. (n.) *உயிரின் தொடர்பு;* desire for life.

**உயிர்ப்பன** பெ. (n.) *மூச்சுடைய விலங்குகள்;* breathing animals.

**உயிர்ப்பிச்சை** பெ. (n.) *உயிர் போகும் நிலையில் காப்பாற்றுதல்; உயிரளிக்கை;* gift of life, saving one's life. *'உயிர்ப்பிச்சை அளித்தார்'.*

**உயிர்ப்பித்தல்** வி. (v.) *1. பிழைக்கச் செய்தல்;* reviving, restoring. *2. உயிர் கொடுத்தல்;* giving life. *3. இறந்தோரை எழுப்புதல்;* animating persons apparently dead. *4. வழக்கற்றதை மீண்டும் வழக்குக்குக் கொண்டு வருதல்; புதுப்பித்தல்;* resurrect (a custom, etc.,) revive (an old word, etc.,); revivify. *'அழிவின் விளிம்பிலிருந்த மொழியை உயிர்ப்பித்தனர்'.*

**உயிர்ப்பிப்பு** பெ. (n.) *பிழைக்கச் செய்தல்;* reviving life.

**உயிர்ப்பு** பெ. (n.) *உயிர் இருப்பதை வெளிப்படுத்தும் மூச்சு, இயக்கம் முதலியன;* signs of life (such as breath, movement, etc.,) life. *'ஆட்டின் உயிர்ப்பு அடங்கியது'.*

**உயிர்ப்பு ஞாயிறு** பெ. (n.) *உயிர்த்தெழுந்த திருநாள் பார்க்க.*

**உயிர்ப்புத் திருநாள்** பெ. (n.) *உயிர்த் தெழுந்த திருநாள் பார்க்க.*

**உயிர்ப்பு வீங்குதல்** வி. (v.) *பெருமூச்சு விடுதல்;* to heave a deep sigh; fetch a deep breath. *'அடுத்தவர் வளர்ச்சியைக் கண்டு உயிர்ப்பு வீங்கினான்'.*

**உயிர்ப்புனல்** பெ. (n.) *குருதி;* blood, lit. life fluid.

**உயிர் பிழைத்தல்** வி. (v.) *சாவிலிருந்து தப்பித்தல்;* escape certain death; survive (something). *'ஆழிப் பேரலையின் தாக்குதலிருந்து சிலரே உயிர் பிழைத்தார்கள்'.*

**உயிர்பெறுதல்** வி. (v.) *உயிரோட்டம் பெறுதல்;* come to life. *'கம்பனின் சொல்நடையால் காட்சிகள் உயிர் பெறும்'.*

**உயிர்போகுதல்** வி. (v.) *1. சாதல்;* to expire, die. *2. மிகுந்த வலி ஏற்படுதல்;* (nearly) die (of pain, etc.,). *'வலி உயிர் போகிறது'.*

**உயிர் மருந்து** பெ. (n.) *1. வாழ்நாளை நீட்டிக்கும் மருந்து;* elixir of life. *2. சோறு;* food, the sustainer of life; boiled rice.

**உயிர்மாய்த்தல்** வி. (v.) *கொல்லல்;* to deprive of life; to kill.

**உயிர்மாற்றல்** பெ. (n.) *1. கொலை செய்தல்;* murdering. *2. தற்கொலை;* suicide.

**உயிர்மெய்** பெ. (n.) *மெய்யெழுத்து முன்னும், உயிரெழுத்து பின்னுமாக இணைந்து நின்று ஒலிக்கும் ஒலி;* the combination of a consonant and a vowel sound; consonant - vowel. *'க,ச,த,ப'.*

**உயிர்வாங்குதல்** வி. (v.) *1. கொல்லல்;* to kill. *2. தொல்லை தருதல்;* giving troubles. *'பணம் கேட்டு என் உயிரை வாங்குகிறான்'.*

**உயிர்வாழ்க்கை** பெ. (n.) *உயிர் வாழ்தல்;* living.

**உயிர்வாழ்தல்** வி. (v.) *உயிரோடிருத்தல்;* live; keep alive; survive, exist. *'நீரை மட்டும் குடித்தே உயிர் வாழ் கிறான்'.*

**உயிர்விடுதல்** வி. (v.) *1. உயிரை இழத்தல்; இறத்தல்;* lay down one's life; die (for a cause). *'போரில் உயிர்விட்ட வீரனுக்காக நடுகல் வைப்பது தமிழர் மரபு'. 2. குறிப்பிட்ட ஒன்றிற் காகவே வாழ்க்கையை அமைத்துக் கொள்ளல்;* be desperate for something. *'பதவி பதவி என்று உயிர் விடுகிறார்'.*

**உயிர்வேதிப்பொருள்** பெ. (n.) *உயிரினங் களின் உடலில் இருக்கும் அல்லது உருவாகும் வேதிப்பொருள்;* biochemical substance.

**உயிர் வேதியியல்** பெ. (n.) *உயிர் வாழ்வன வற்றில் இருக்கும் பொருள்களின் வேதியியல் தன்மைகளை ஆராயும் அறிவியல் துறை;* biochemistry.

**உயிர்வேலி** பெ. (n.) *கழி, கம்பி போன்ற வற்றைப் பயன்படுத்தாமல் அடர்த்தி யாக வளரும் சிறு முள்மரங்களை நெருக்கமாக நட்டு உருவாக்கும் வேலி;* biofence. *'காட்டாமணக்கு, ஆடாதொடை போன்றவற்றை உயிர்வேலியாக நடலாம்'.*

**உயிர்வைத்தல்** வி. (v.) *பற்று வைத் திருத்தல்;* to have more affection, regard. *'அம்மா என்மேல் உயிரே வைத்திருக்கிறார்'.*

**உயிரடங்குதல்** வி. (v.) *1. மூச்சு ஒடுங்குதல்;* to be in a state of unconsciousness in a swoon, to have one's animation suspended. *2. இறத்தல்;* to die. *'அடிபட்ட மானின் உயிரடங்கி விட்டது'.*

**உயிரடைதல்** வி. (v.) *மயக்கந் தெளிதல்;* to revive, to be reanimated.

**உயிரணு** பெ. (n.) *உயிரினங்களின் இயக்கத்திற்கும் உடல் அமைப்பிற்கும் அடிப்படையான, கண்ணுக்குப் புலப்படாத மிக நுண்ணிய உயிரி;* cell.

**உயிரவர்** பெ. (n.) *உயிர் வாழ்கின்றவர்;* living persons.

**உயிரளபு** பெ. (n.) *உயிரளபெடை பார்க்க.*

**உயிரளபெடை** பெ. (n.) *தனக்குரிய மாத்திரையிலிருந்து மிக்கொலிக்கும் உயிரெழுத்து;* vowel which sounds with more than its normal quantity, which fact is indicated in writing by placing a short vowel of the class after the long vowel, as in . *'ஓஒதல், கொடுப்பதூஉம்'.*

**உயிரி** பெ. (n.) *1. உயிரினம்;* living creature; organism, life form. *'நீர் வாழ் உயிரி'.* *2. நுண்ணுயிர்;* micro organism. *'உலகில் முதலில் தோன்றிய உயிரி அமீபா'.*

**உயிரி ஆய்தம்** பெ. (n.) *போரில் பேரழிவை ஏற்படுத்துவதற்குப் பயன்படுத்தும் நச்சுயிரி, தீநுண்மி (பாக்டீரியா);* biological weapon. *'இப்போது நாடுகள் தீநுண்மிப் போரில் ஈடுகின்றன'.*

**உயிரி பூச்சிக்கொல்லி** பெ. (n.) *வேதியியல் பொருள்களின் கலப்பின்றி நிலைத்திணை (தாவரங்) களிலிருந்து உருவாக்கப்படும் இயற்கைப் பூச்சிக்கொல்லி மருந்து;* organic pesticide. *'வேம்பு உயிரி பூச்சிகொல்லியாகப் பயன் படுகிறது'.*

**உயிரியல்** பெ. (n.) *உயிர் வாழ்வன பற்றிய அறிவியல்;* biology.

**உயிரியல் பூங்கா** பெ. (n.) *விலங்குகளும் பறவைகளும் தம்முடைய இயற்கையான சூழலில் வாழ்வது போலவே இருக்கும் வகையில் பெரிய நிலப்பரப்பில் அமைக்கப்பட்ட விலங்குக் காட்சிசாலை;* zoological garden; zoo.

**உயிரிழத்தல்** வி. (v.) *இயற்கையான முறையிலில்லாமல் நேர்ச்சி, நோய் போன்றவற்றால் இறத்தல்;* lose one's life (in an accident, war, etc.,) die (in an unnatural manner) . *'சாலை நேர்ச்சியால் உயிரிழப்பவர்களின் எண்ணிக்கை அதிகம்'.*

**உயிரினம்** பெ. (n.) *1. உயிர் வகைகள்;* living beings. *2. உயிரெழுத்துகள்;* vowels.

**உயிருக்குயிராக** வி.எ. (adv.) *மிகுந்த அன்போடு;* intimately, very dearly. *'உயிருக்குயிராகப் பழகிய நண்பர்'.*

**உயிருண்ணுதல்** வி. (v.) *1. உயிரைப் போக்குதல்;* to devour life kill. *2. தன்னுணர்வு இழத்தல்;* to subjugate a person's will.

**உயிருதவி** பெ. (n.) *1. இக்கட்டில் உதவுகை;* aid when life is in danger. *'படிக்க பணமில்லாதபோது அவர் தான் உயிருதவி செய்தார்'.* *2. உயிர் கொடுத்து உதவுகை;* aid by sacrificing one's life. *'படைவீரர்கள் உயிருதவி செய்து பேரிடரிலிருந்து காப்பாற்றுகிறார்கள்'.*

**உயிருரம்** பெ. (n.) *வளிமண்டலத்தில் காணப்படும் தழையூட்டத்தை (தழைச்சத்து) ஈர்த்துப் பயிர்களுக்குப் பயன்படுமாறு மாற்றிக் கொடுக்கும் நுண்ணுயிரிகள்;* biofertilizers.

**உயிரூட்டுதல்** வி. (v.) *புது விரைவு அல்லது எழுச்சி தருதல்;* enliven, resuscitate; give life to. *'படத்துக்கு*

உயிரூட்டுவதாய் அமைந்துள்ளது திரைக்கதை'.

**உயிரெடுத்தல்** வி. (v.) *1. உயிரை வாங்கிவிடுதல்;* to take away life. 2. *தொல்லை தருதல்;* to give great trouble. *'காசு கேட்டு உயிரெடுக்கிறான்'.*

**உயிரெழுத்து** பெ. (n.) *1. தனித்து இயங்கக் கூடிய உயிர்;* vowel. 2. *உயிரொலியைக் குறிக்கும் வரி வடிவம்;* any of the letters representing a vowel.

**உயிரைக் கொடுத்து** வி.எ. (adv.) *மிகுந்த ஈடுபாட்டுடன் தன்னால் இயன்ற அனைத்தையும் செய்து;* giving heart and soul; whole heartedly. *'புத்தகம் செம்மையாக வர வேண்டும் என்று உயிரைக் கொடுத்து வேலை செய்தோம்'.*

**உயிரைவிட்டு** வி.எ. (adv.) *முழு ஆற்றலையும் பயன்படுத்தி, கடுமையாக உழைத்து;* take a toll of life. *'இங்கு உயிரைவிட்டு வேலை செய்தாலும் நல்ல பெயர் கிடைக்காது என்று புலம்பினான்'.*

**உயிரைவிடுதல்** வி. (v.) *1. மிகுந்த அன்பு காட்டுதல்;* be much attached to someone. *'அம்மா அம்மா என்று அவன் உயிரை விடுவான்'.* 2. *ஒருவர் தான் மிகவும் முகாமையானது என்று கருதும் ஒன்றுக்காக வாழ்க்கையின் பெரும் பகுதியைக் கழித்தல்;* die for; give oneself up (to something). *'கட்சி கட்சி என்று உயிரைவிடுகிறான்'.*

**உயிரொழித்தல்** வி. (v.) *கொல்லல்;* to kill, murder.

**உயிரொளித்தல்** வி. (v.) *உயிர்க்கு இக்கட்டு வந்தது போல் காட்டுதல்;* to feign great weariness or sickness, in order to gain an object.

**உயிரொளித்த கள்ளன்** பெ. (n.) *தன் செல்வ நிலையை மறைத்துப் பிறரை இரந்து ஏமாற்றுவோன்;* cringing deceiver who, when he is really rich and strong, pretends the contrary state.

**உயிரோட்டம்** பெ. (n.) *கதை, ஓவியம் முதலியவற்றில் உணர்ச்சி தரும் கூறு;* verve; vitality; vigour. *'உயிரோட்டமான சிலை'.*

**உயிரோடிருத்தல்** வி. (v.) *பிழைத்திருத்தல்;* to survive.

**உர்ரென்று** வி.எ. (adv.) *முறைப்பாக, இயல்புக்கு மாறாக;* unfriendly, sullen. *'ஏன் முகத்தை உர்ரென்று வைத்திருக்கிறாய்?'.*

**உரக்க** வி.எ. (adv.) *குரலோங்க;* loudly, distinctly. *'உரக்கப் பேசினான்'.*

**உரங்குத்துதல்** வி. (v.) *மரத்தைச் சுற்றி உரமண் கொட்டிக் கெட்டிப்படுத்தல்;* to pound and harden the earth around trees newly set. *'வேப்பங்கன்றுக்கு உரங்குத்த வேண்டும்'.*

**உரங்கொள்ளு—தல்** வி. (v.) *1. கடுமையாதல்;* to gain force, below strong, as the wind; to become boisterous as the sea; to rage, as fever. *'காய்ச்சல் உரங்கொண்டு காய்கிறது'.* 2. *கடினமாதல்;* to be hardened, obdurate. *'நெஞ்சுரங் கொண்டவன்'.*

**உரச்சாக்கு** பெ. (n.) *செயற்கை இழைகளைக் கொண்டு செய்யப்படும் (பொதுவாக உரத்தைக் கட்டப் பயன்படும்) சாக்கு;* cheap sack made of synthetic fibre (mostly for packing chemical fertilizers). *'உரச்சாக்கில் செய்த பை'.*

**உரசல்** பெ. (n.) *விட்டுக் கொடுக்காததால் ஏற்படும் சிறு சச்சரவு; மனத்தாங்கல்;* friction. *'மேலதிகாரியுடன் உரசல் போக்குடன் நடக்காதே என்று அறிவுறுத்தினார்'.*

**உரசுதல்** வி. (v.) *1. உராய்தல்;* rub (against something or one with another). *'மிதிவண்டியின் பின் சக்கரம் உரசுவதால் ஓட்ட கடினமாயிருக்கிறது'. 2. ஒன்றை ஒன்றின்மேல் தேய்த்தல்;* rub (something on something); strike. *'பொன்னை உரசி பார்த்தார்'.*

**உரஞ்சுதல்** வி. (v.) *1. துடைத்தல்;* to rub. *2. தேய்த்தல்;* to scrape.

**உரஞ்செய்தல்** வி. (v.) *1. உறுதி கொள்ளுதல்;* to take effect; to be forceful, as in an argument. *'அவர் எடுத்த செயலில் உரஞ்செய்யவில்லை'. 2. வலிமையுறுதல்;* to grow strong.

**உரஞ்சொல்லுதல்** வி. (v.) *1. உறுதி கூறுதல்;* to encourage. *2. துணையாக நிற்றல்;அருகில் இருத்தல்;* to support, to back up.

**உரட்டுக்கை** பெ. (n.) *இடக்கை;* left hand.

**உரத்த** பெ.எ. (adj.) *ஒலி மிகுந்த;* loud. *'அவர் உரத்த குரலில் பாடினார்'.*

**உரத்த சிந்தனை** பெ. (n.) *மனத்தில் தோன்றும் எண்ணம், கருத்து ஆகியவற்றை அப்படியே வெளிப்படுத்துதல்;* the act of thinking aloud.

**உரத்து** வி.எ. (adv.) *உரக்க பார்க்க.*

**உரநோய்** பெ. (n.) *1. மார்புநோய்;* chest pain from any cause. *2. சுளுக்கு;* sprain.

**உரப்பல்** பெ. (n.) *1. வலுவான பல்;* strong tooth. *2. கூச்சல் ஒலி;* whoop. *3. திரட்டோசை;* roaring sound.

**உரப்புத்தாள்** பெ. (n.) *உப்புத்தாள்;* sand paper.

**உரபடி** பெ. (n.) *வலிமை, திடம்;* strong physique, roughness, strength, firmness of body. *'அவர் உரபடியான ஆள்'.*

**உரபிடி** பெ. (n.) *உரபடி பார்க்க.*

**உரம்** பெ. (n.) *1. பயிர்களின் வளர்ச்சிக்கு இடப்படும் ஊட்டம்;* anything that enriches the soil; fertilizer; manure. *'இயற்கை உரங்களைப் பயன்படுத்துவதே நல்லது'. 2. வலிமை; ஆற்றல்;* (of body) strength. *'சமச்சீர் உணவுகளை எடுத்துக்கொண்டால் உடல் உரம் பெறும்'. 3. எதையும் எதிர்கொள்ளத் தயங்காத, எதற்கும் கலங்காத மன வலிமை;* strong will. *'அவர் நெஞ்சுரம் மிக்கவர்'.*

**உரம் எடுத்தல்** வி. (v.) *பச்சிளம் குழந்தையைப் புடவை அல்லது வேட்டியில் போட்டு உருட்டி, கழுத்து அல்லது முதுகுப் பகுதியில் ஏற்பட்ட சுளுக்கை நீக்குதல்;* roll a baby on a saree or a dhoti held by the ends to cure sprain. *'உரமெடுத்த பிறகுதான் குழந்தை அழுகையை நிறுத்தியது'.*

**உரம்புகுதல்** வி. (v.) *விசையோடு புகுதல்;* to fierce with force.

**உரம் விழுதல்** வி. (v.) *பச்சிளம் குழந்தையின் கழுத்து அல்லது முதுகுப் பகுதியில் சுளுக்கு ஏற்படுதல்;* (of a baby) develop sprain in the neck or back. *'தூக்கத் தெரியாமல் தூக்கியதால் குழந்தைக்கு உரம் விழுந்துவிட்டது'.*

**உரமடித்தல்** வி. (v.) *பயிர்களின் வளர்ச்சிக்காக எரு முதலியன இடுதல்;* to cart manure. *'அப்பா வயலில் உரமடிக்கச் சென்றிருக்கிறார்'.*

**உரமண்** பெ. (n.) *1. ஊட்டச்சத்துகள் நிறைந்த (ஊட்டமுள்ள) மண்;* rich soil. *2. கெட்டியான மண்;* hard ungenial soil.

**உரமாயிருத்தல்** வி. (v.) *1. வலுவாயிருத்தல்;* to be strong. *'ஆள் நல்லா உரமாயிருக்கிறார்'. 2. சுளுக்குக் கொண்டிருத்தல்;* to be in a sprained condition.

**உரல்** பெ. (n.) *தவசங்களைக் குத்த அல்ல இடிக்கப் பயன்படும், கல்லால் செய்யப்பட்ட பொருள்;* a heavy stone cylinder with a pit like receptacle for

husking or pounding grains; a large stone mortar .

**உரலில் துவைத்தல்** பெ. (n.) உரலில் இட்டு இடித்தல்; bruising or pounding in a mortar.

**உரவண்டு** பெ. (n.) ஒரு கொடிய வண்டு; a poisonous beetle.

**உராய்தல்** வி. (v.) இழுபட்டுத் தேய்தல்; உரசுதல்; grate. *'வண்டியின் சக்கரம் உராய்வதால் ஓட்டக் கடினமாக உள்ளது'.*

**உராய்வு** பெ. (n.) *1.* தேய்மானம்; உராய்ந்து போதல்; rubbing, wearing away. *2.* இரு பொருள்களின் பரப்புகள் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருக்கும் நிலையில், ஒன்றின் இயக்கத்திற்கு மற்றொரு பரப்பால் ஏற்படும் தடை; friction.

**உரி** பெ. (n.) உரிச்சொல் பார்க்க.

**உரிக்குட்டி** பெ. (n.) கடல்மீன் வகை; brownish grey suckerfish.

**உரிச்சீர்** பெ. (n.) மூவசைச்சீர்; foot of three aśai.

**உரிச்சொல்** பெ. (n.) பெரும்பாலும் பெயருக்கும் வினைக்கும் அடையாக வரும் சொல்; class of words with an attributive function. *'கூர்வேல் என்பதில் கூர் என்பது உரிச்சொல்'.*

**உரிசை** பெ. (n.) சுவை; taste; relish; *'பலாப்பழம் உரிசையாக உள்ளது'.*

**உரித்தல்** வி. (v.) *1.* பழம், கிழங்கு போன்றவற்றின் தோல், விலங்கின் தோல், மரத்தின் பட்டை ஆகியவற்றை நீக்குதல்; பிய்த்தல்; peel; strip; rind; slough; flay (a person). *'வாழைப் பழத்தோலை உரித்துக் கொடுத்தான்'.* *2.* பனைமட்டை, மட்டையோடு கூடிய தேங்காய் முதலியவற்றிலிருந்து நாரைக் கிழித்தெடுத்தல்; strip fibre off something. *'பனை மட்டையிலிருந்து நாரை உரித்துப் பெட்டி முடைகிறார்கள்'.* *3.* கோழி முதலியவற்றின் இறகுகளைப் பிடுங்குதல்; pluck (fowls while dressing); *'கோழியை உரித்து மஞ்சள் தடவி சமைத்தார்கள்'.*

**உரித்தாக்குதல்** வி. (v.) *1.* ஒருவருக்குத் தன் நன்றி, வாழ்த்து முதலியவற்றைச் சேரச் செய்தல்; convey (thanks, greetings, etc.,). *'என்னை வாழ்வில் உயர்த்திய என் பெற்றோர்க்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்'.* *2.* அளித்தல்; dedicate. *'இந்நூலை என் பேராசிரியர்க்கு உரித்தாக்குகிறேன்.'*

**உரித்தாகுதல்** வி. (v.) நன்றி, வாழ்த்து முதலியன ஒருவருக்குச் சேர்தல்; (of thanks, wishes, etc.,) be due to (someone). *'என் நிறைவான வாழ்த்து உங்களுக்கு உரித்தாகுக'.*

**உரித்தான** பெ. (n.) இயல்பான, பொருத்தமான; characteristic or typical of; befitting. *'மலர்களுக்கே உரித்தான மணம்'.*

**உரித்தானவன்** பெ. (n.) *1.* சொத்துக்குரியவன்; proprietor, owner, heir. *2.* தக்கோன்; suitable, worthy person. *3.* நண்பன்; friend.

**உரித்து** பெ. (n.) உரிமை; right (to something). *'அந்த நிலத்தில் எனக்கும் உரித்து உள்ளது'.*

**உரித்துக்காட்டுதல்** வி. (v.) அறியப்படாமலிருந்த உண்மையான தோற்றம் அல்லது குணத்தை வெளிப்படுத்துதல்; reveal (the true, discreditable nature of something or someone); expose. *'அவன் எப்படிப்பட்டவன் என்பதை அவனது பேச்சே உரித்துக் காட்டியது'.*

**உரித்துவைத்தல்** வி. (v.) தோற்றத்தில், குணத்தில் நெருங்கிய உறவினரை ஒத்திருத்தல்; அச்சாக இருத்தல்; take after (an older relative); be the spitting image of someone. *'பேரன் தாத்தாவை*

*அப்படியே உரித்து வைத்திருக்கிறான்*.

**உரிதல்** வி. (v.) *மரத்தின் பட்டை, உடம்பின் தோல் முதலியன பிரிந்து வருதல்; நீங்குதல்;* (of skin, bark, etc.,) come off; peel. '*மரத்தின் பட்டை உரிந்தது*'.

**உரிது** பெ. (n.) *உரிமையானது;* that which is related.

**உரிப்பொருள்** பெ. (n.) *ஐந்திணைகளுக்கு உரியனவான கூடல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல்களும் அவற்றின் நிமித்தங்களும்;* that distinctive erotic mood in love appropriate to each of the five tracts of land.

**உரிமம்** பெ. (n.) *ஓர் இடத்தைப் பயன் படுத்துதல், ஒரு தொழிலை மேற் கொள்ளுதல் போன்றவற்றுக்கு உரிய அதிகாரியிடமிருந்து பெறப்படும் இசைவு;* licence. '*கல்லூரி தொடங்க உரிமம் கிடைத்துவிட்டது*'.

**உரிமை** பெ. (n.) *1. சட்டப்படி அல்லது முறைப்படி ஒருவர் கோருவது; அப்படிக் கோருவதைச் சட்டமோ மரபோ இசைவளிப்பது;* rights one is entitled to. '*மக்களாட்சியில் அனைவருக்கும் பேச்சுரிமை உண்டு*'. *2. உறவாலோ நட்பாலோ ஒருவர் தன்னளவில் எடுத்துக்கொள்ளும் உரிமை (சுதந்திரம்);* liberty taken (by someone to do something). '*அவர் என் நலத்தில் உரிமையோடு அக்கறை காட்டுவார்*'. *3. ஒருவருக்கு உரியது; சொந்தமானது;* something that one owns; something that belongs to one. '*அவருக்கும் சொத்தில் உரிமை உள்ளது*'.

**உரிமைக்கஞ்சி** பெ. (n.) *1. இறக்குந் தறுவாயில் உள்ளவருக்குக் கடைசியாக இனத்தார் வார்க்கும் கஞ்சி;* conjee poured into the mouth of a dying person as the last token of loven and respect. *2. ஒருவர் இறந்த நாளன்று அவருடைய உறவினர்க்குப் படைக்கும் உணவு;* food served to the relations of a person on the day of his death by the members of his family.

**உரிமைக்கட்டு** பெ. (n.) *1. திருமணத்திற் குரிய இனமுறைத் தொடர்பு;* consanguinity that allows marriage between the two. *2. இனக்கட்டுப்பாடு;* preservation of one's rights as a relative.

**உரிமைக்கடன்** பெ. (n.) *1. உரிமை பற்றிச் செய்யும் கடமை;* obligation, as that of a son to support his parents. *2. பிணக் கடமை;* duties and obligations of near relations to perform funeral rites and show respect to a decesed person.

**உரிமைக்காணி** பெ. (n.) *உரிமையால் கிடைத்த நிலம்;* inherited land.

**உரிமைக்காரன்** பெ. (n.) *சொத்துக்கு உரிமையானவன்;* heir, claimant to a property. '*இந்த வயலுக்கு அவன்தான் உரிமைக்காரன்*'.

**உரிமைக்குழு** பெ. (n.) *சட்டமன்றத்தின் அல்லது நாடாளுமன்றத்தின் உரிமைகளையும் உறுப்பினர்களின் உரிமைகளையும் பாதுகாப்பதற்கு அந்த அவை உறுப்பினர்களுள் சிலரைக் கொண்ட குழு;* privileges committee (of legislative bodies).

**உரிமை கொண்டாடுதல்** வி. (v.) *உறவு முறை கொண்டாடுதல்;* to claim kinship or friendship. '*அவன் தம்பி என்று உரிமை கொண்டாடுகிறான்*'.

**உரிமை செப்புதல்** வி. (v.) *திருமணம் பேசுதல்;* to negotiate a marriage. '*அவனுக்கு மாமன் மகளை உரிமை செப்பினர்*'.

**உரிமைச்சோறு** பெ. (n.) *உரிமைக்கஞ்சி பார்க்க.*

**உரிமைத்தத்துவம்** பெ. (n.) *1. இறந்தவருடைய சொத்தைக் காக்க முறைமன்றத் தலைவரிடம் பெறும் அதிகாரம்;* right of letters of administration to the estate of deceased person. *2. வைத்துக் காப்பாற்றும் உரிமை;* right of guardianship as of a minor or a person of unsound mind.

**உரிமைப்பங்கு** பெ. (n.) *காப்புரிமை செய்யப்பட்ட ஒன்றைப் பயன்படுத்துபவர் அதன் உரிமையாளருக்குத் தர வேண்டிய தொகை / அரசுக்கோ தனிப்பட்டவருக்கோ உரிமையாக உள்ள நிலத்திலிருந்து எடுக்கப்படும் பொருள்களுக்கு ஒரு நிறுவனம் தர வேண்டியத் தொகை;* royalty.

**உரிமைப்படை** பெ. (n.) *கூலிப்படை;* paid soldiers, mercenary force.

**உரிமைப்பாடு** பெ. (n.) *உரிய கடமை;* obligation, duty. *'எனக்கான உரிமைப் பாட்டை நான் நிறைவேற்ற வேண்டும்'.*

**உரிமைப்பிரச்சினை** பெ. (n.) *இந்திய அரசியல் சட்டத்தின்படி சட்டம் இயற்றும் (மக்களவை, மாநிலப் பேரவை போன்ற) பிரிவுக்குத் தரப் பட்டுள்ள உரிமை மீறப்படுகிறது என்று கருத இடமளிக்கும் சிக்கல்;* privileges issue.

**உரிமைபாராட்டுதல்** வி. (v.) *உரிமை கொண்டாடுதல் பார்க்க.*

**உரிமையாட்சி** பெ. (n.) *சொத்தின் உரிமையைத் துய்த்தல் (அனுபவித்தல்);* enjoing possession or right of possession of property (devolving on an) heir.

**உரிமையாளி** பெ. (n.) *சொந்தக்காரன்;* owner. *'இந்தக் கடையின் உரிமையாளி யார் என்று கேட்டார்'.*

**உரிமையிடம்** பெ. (n.) *வீட்டில் மனைவி வாழும் பகுதி;* wife's apartment.

**உரிமையியல்** பெ. (n.) *சொத்துரிமை, சட்டத்திற்குப் புறம்பான இழப்பு போன்ற தனியாள் தொடர்பான சட்டத்துறை;* branch of law concerning civil, private rights and torts.

**உரிமையெடுத்தல்** வி. (v.) *உரிமை பெறுதல்;* to take possession of one's share, as of an inheritance or of produce.

**உரிமைவழி** பெ. (n.) *1. தொடர்பு முறையில் வரும் உரிமை;* consanguinity, lineage. *2. கொடிவழி உரிமை;* ancestral inheritance.

**உரிமைவிடுதல்** வி. (v.) *1. உரிமை அளித்தல்;* to set free, manumit, as a slave. *2. உரிமையை விட்டுக் கொடுத்தல்;* to give up one's right.

**உரிய** பெ.எ. (adj.) *1. இயல்பாய் அமைந்த;* characteristic (of or to something or someone). *'அம்மாவிற்கே உரிய சிரிப்பு மகனிடமும் தெரிகிறது'. 2. சொந்தமான; உரிமையுடைய;* belonging to. *'அரசுக்கு உரிய நிலம்'. 3. தகுந்த; பொருத்தமான;* appropriate; proper; due. *'உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்'. 4. ஏற்ற; உகந்த;* deserving. *'மகன் பிறந்தது மகிழ்ச்சிக்கு உரிய செய்தி'. 5. முடிவு செய்யப்பட்ட (நிர்ணயிக்கப்பட்ட);* fixed. *'பொருளுக்கு உரிய விலையை எழுதி ஒட்ட வேண்டும்'.*

**உரியசை** பெ. (n.) *நேர்பு நிரைபு அசைகள்;* particular kinds of metrical syllables.

**உரியப்பம்** பெ. (n.) *ஒருவகை அப்பம்;* a kind of cake.

**உரியவர்** பெ. (n.) *உரிமையுள்ளவர்;* those who have rights.

**உரியவள்** பெ. (n.) *உரித்தானவள்; மனைவி;* wife.

**உரியவன்** பெ. (n.) *1. உரிமையுள்ளவன்;* one who has rights, heir. *2. அதிகாரி;* one who is worthy, qualified. *3. உறவினன்;* relative. *4. கணவன்;* husband.

**உரியோர்** பெ. (n.) *உரியவர் பார்க்க.*

**உரியோள்** பெ. (n.) *உரியவள் பார்க்க.*

**உரியோன்** பெ. (n.) *உரியவன் பார்க்க.*

**உரு** பெ. (n.) *1. புற அடையாளத் தோற்றம்; புற வடிவ அமைப்பு;* shape; form; image. '*மகன் தந்தையின் மறு உருவாகக் காட்சியளிக்கிறான்*'. *2. உருவம்;* figure; form. '*மாந்த வடிவில் நடமாடும் தெய்வம் அவர்*'. *3. தாலியில் கோக்கப்படும் தங்கத் தாலான சிறு மணி;* gold bead strung on the Tali. '*தாலி உருக்கள் நன்றாக அமைந்திருக்கின்றன*'.

**உருக்கம்** பெ. (n.) *கடும் வெம்மை; புழுக்கம்;* sultriness.

**உருக்கமான** பெ.எ. (adj.) *நெகிழ்ச்சியான; உணர்வுவயமான;* moving. '*தந்தையைப் பற்றி உருக்கமாகப் பேசினார்*'.

**உருக்காங்கல்** பெ. (n.) *கருகிப்போன செங்கல்;* overburnt brick.

**உருக்காட்டி** பெ. (n.) *கண்ணாடி;* mirror.

**உருக்காட்டுதல்** வி. (v.) *வடிவம் வெளியாகத் தோன்றுதல்;* to appear as a hallucination, a visionary object.

**உருக்காலை** பெ. (n.) *மிக அதிக வெப்ப நிலையில் மாழையை (உலோ கத்தை) உருக்கிக் கம்பி, தகடு போன்றவற்றை உருவாக்கும் பெரிய தொழிற்சாலை;* mill which produces metal wires and sheets.

**உருக்கியூற்றல்** பெ. (n.) *உருகிய மாழைகளைச் (உலோகங்களை) சாய்த்தல்;* an ordinary process of casting. '*அச்சில் இரும்பை உருக்கி யூற்றினான்*'.

**உருக்கிவார்த்தல்** வி. (v.) *உருக்கின மாழைகளை (உலோகங்களை) அச்சில் வார்த்தல்;* to cast, found, run as a metal.

**உருக்கு** பெ. (n.) *எஃகு;* steel. '*உருக்கின் பயனைப் பற்றி பண்டைத் தமிழர்கள் அறிந்திருந்தனர்*'.

**உருக்குகை** பெ. (n.) *உருக்குதல்;* the act of melting.

**உருக்குச் சட்டம்** பெ. (n.) *வார்த்த இரும்பு;* iron which has been cast into moulds, cast iron.

**உருக்குச்சுண்ணம்** பெ. (n.) *எஃகைக் கொண்டு புடமிட்டெடுத்த சுண்ணம்;* alkali preparation containing iron and insoluble calcium carbonate as chief ingredients. A kind of ferrous carbonate.

**உருக்குச் செங்கல்** பெ. (n.) *உருக்காங்கல் பார்க்க.*

**உருக்குத்தட்டார்** பெ. (n.) *பொற் கொல்லர்;* goldsmiths.

**உருக்குதல்** வி. (n.) *1. இளகச் செய்தல்;* melt. '*வெண்ணெய் உருக்கும் மணம்*'. *2. நெகிழச் செய்தல்;* melt; '*அம்மாவின் கண்ணீர் மனத்தை உருக்கிவிட்டது*'.

**உருக்குமண்** பெ. (n.) *உருக்கு மணல் பார்க்க.*

**உருக்குமணல்** பெ. (n.) *இரும்புக் கனிமம் அடங்கிய மணல்;* iron ore, iron sand.

**உருக்குமுகம்** பெ. (n.) *உருகிவரும் சமயம்;* the stage at which fusion or melting takes place melting point.

**உருக்குமுறை** பெ. (n.) *முறியாதபடி சரியான பதமாய் உருக்கியெடுத்தல்;* melting in consistence with the principle of melting process.

**உருக்குலைத்தல்** வி. (n.) *1. நோய், கவலை போன்றவை ஒருவரை*

மெலிந்து போகச் செய்தல்; reduce someone; make one thin. *'நோய் அவர் உடலை உருக்குலைத்துவிட்டது'.* 2. சிதைத்தல்; damage (severely). *'புயல் வாழைத்தோப்பை உருக்குலைத்து விட்டது'.* 3. ஆவணங்களை அழித்தல்; tamper with; destroy (evidence). *'சான்றாவணங்களை உருக் குலைத்தல் பெரும் குற்றம்'.*

**உருக்குலைதல்** வி. (v.) *1.* நோய், கவலை போன்றவற்றால் மெலிந்து போதல்; (of one's body) be ravaged; be reduced. *'நோயினால் அவன் உருக்குலைந்து விட்டான்'. 2.* ஒன்றின் உருவம் சிதைதல்; be mangled. *'நேர்ச்சையில் சிக்கிய ஊர்தி உருக்குலைந்து கிடந்தது'.*

**உருக்கூட்டுதல்** வி. (v.) ஒன்று கூட்டுதல்; ஒன்றாக்குதல்; to collect, amass, accumulate.

**உருக்கெண்ணெய்** பெ. (n.) உருக்கி வடித்த எண்ணெய்; oil prepared by boiling coconut milk.

**உருக்கொடுத்தல்** வி. (v.) *1.* உசுப் பேற்றுதல்; instigate; incite. *'உருக் கொடுத்துவிட்டால் போதும் எல்லா வற்றையும் அவனே செய்து விடுவான்'.* 2. வடிவங்கொடுத்தல்; shaping. *'அவன் எண்ணத்திற்கு உருக்கொடுத்தான்'.*

**உருக்கொள்ளுதல்** வி. (v.) உருவாகுதல்; take form or shape. *'வங்கக் கடலில் புதிய காற்றழுத்தத் தாழ்வு மண்டலம் புயல் சின்னமாக உருக்கொண் டுள்ளது'.*

**உருகுதல்** வி. (v.) *1.* இளகுதல்; melt. *'பனிக்கட்டி உருகியது'. 2.* மனம் நெகிழ்தல்; be moved; melt (at heart). *'அம்மாவின் பேச்சைக் கேட்டு அவன் மனம் உருகிவிட்டது'. 3.* (ஒருவரை நினைத்து) ஏங்குதல்; pine (for); languish. *'மகனை நினைத்து மனம் உருகினான்'. 4.* (நோய், கவலை, வேலையால்) உடல் மெலிதல்; become careworn. *'வேலை கிடைக் காததால் ஆள் உருகி விட்டான்'.*

**உருகுநிலை** பெ. (n.) திடப்பொருள் நீர்ம நிலைக்கு மாறத் தொடங்கும் வெப்ப நிலை; melting point. *'தங்கத்தின் உருகுநிலை 1064° செ.கி. ஆகும்'.*

**உருகுபதம்** பெ. (n.) இளகுதற்குரிய பக்குவம்; softness of condition, melting state. *'உருகுபதத்தில் கம்பியை வளைத்தான்'.*

**உருட்சிதிரட்சியான** பெ.எ. (adj.) சதைப்பற்றோடு திடமான; stockily/ muscular. *'உருட்சி திரட்சியான ஆள்'.*

**உருட்டச்சு** பெ. (n.) குறிப்பிட்ட தாளில் எழுத்துகளின் வடிவில் உண்டாக்கும் துளை வழியாக மையைச் செலுத்திப் படிகள் (பிரதிகள்) எடுக்கும் முறை; stencil. *'இது உருட்டச்சு முறையில் உருவான நூல்'.*

**உருட்டல்மிரட்டல்** பெ. (n.) சினம், கடுமை வெளிப்படும் வகையில் அதட்டி அச்சுறுத்துதல்; brow beating; bullying. *'யாருடைய உருட்டல் மிரட்டலுக்கும் அஞ்சமாட்டேன் என்றார்'.*

**உருட்டாலை** பெ. (n.) கட்டடம் கட்டப் பயன்படும் கம்பிகளை உருவாக்கும் தொழிற்சாலை; steel rolling mill.

**உருட்டி திரட்டுதல்** வி. (v.) பணம், பொருள் முதலியவற்றை இயன்ற வழிகளிலெல்லாம் சேர்த்தல்; scraping together (money); gathering up. *'மகனின் உயர்கல்விக்காகப் பணத்தை உருட்டி திரட்டி வைத்திருக்கிறார்'.*

**உருட்டிப் புரட்டுதல்** வி. (v.) ஒரு செயல் நிறைவேற தனக்குத் தெரிந்த எல்லா வழிமுறைகளையும் கையாளுதல்; moving heaven and earth (to accomplish something); adopting ingenious ways.

'உருட்டிப்புரட்டி ஒரு நிலம் வாங்கினார்'.

**உருட்டிமிரட்டுதல்** வி. (v.) *ஒருவரை அடிபணிய வைக்கும் நோக்கத்தோடு அதட்டி மிரட்டுதல்;* by browbeating. *'யாராவது உருட்டி மிரட்டினால் அவன் உண்மையைக் கக்கிவிடுவான்'.*

**உருட்டுக்கட்டை** பெ. (n.) *ஒருவரைத் தாக்கப் பயன்படுத்தப்படும் பருமனான சவுக்குக் கட்டை;* medium sized casuarina stick used as a weapon.

**உருட்டுக்காரன்** பெ. (n.) *ஏமாற்றுவோன்;* deceiver; tricker.

**உருட்டுதல்** வி. (v.) *1. உருண்டையாக்குதல்;* roll (something into a sphere). *'அம்மா சோற்றை உருட்டி உண்ணத் தந்தார்'. 2. கண்களைச் சுழற்றுதல்;* roll (one's eyes). *'குழந்தை கண்ணை உருட்டிப் பார்த்துச் சிரித்தது'. 3. உருளச் செய்தல்; உருண்டு ஓடச் செய்தல்;* make (something) roll. *'நலுங்கில் மணமக்கள் தேங்காயை உருட்டி விளையாடினார்கள்'. 4. தள்ளுதல்;* take along (by rolling); move (something by rolling). *'மிதிவண்டியை உருட்டிக்கொண்டு போனான்'. 5. பொருள்களை அங்குமிங்கும் நகர்த்தி ஒலி உண்டாக்குதல்;* make noise by moving things. *'இரவு ஒரு மணிக்கு மேல் எதை உருட்டிக் கொண்டிருக்கிறாய்?'. 6. (ஒரு செயலில் தொடர்பில்லாதவரைத்) தொடர்புபடுத்துதல்;* drag (someone into an affair). *'உங்கள் சண்டையில் என் தலையை ஏன் உருட்டுகிறீர்கள்?'.*

**உருட்டுப்புரட்டு** பெ. (n.) *முறைகேடான வழிமுறை; பித்தலாட்டம்;* fraud; fraudulent means. *'உன் உருட்டுப் புரட்டு வேலையெல்லாம் என்னிடம் செல்லாது'.*

**உருட்டுமோதிரம்** பெ. (n.) *விரலணி வகை;* plain gold ring.

**உருண்ட** பெ.எ. (adj.) *1. வட்ட வடிவமான;* (of head, face, etc.,) round. *'உருண்ட முகம்'. 2. (தசைகளைக் குறிக்கும் போது) திரட்சியான;* muscular. *'உருண்டு திரண்ட தோள்கள்'.*

**உருண்டு திரண்ட** பெ.எ. (adj.) *சதைப்பற்றான;* chubby. *'உருண்டு திரண்ட கைகள்'.*

**உருண்டை** பெ. (n.) *1. கோள அல்லது குண்டு வடிவம்;* (of shape) round; sphere. *'உலகம் உருண்டை வடிவம் என்ற கருத்து முதலில் மறுக்கப் பட்டது'. 2. சிறு கோள வடிவில் இருக்கும் பொருள் அல்லது செய்யப்பட்ட பொருள்;* small ball. *'வேர்க்கடலை உருண்டை' 'களிமண் உருண்டை'.*

**உருணி** பெ. (n.) *உருளும் தன்மையுடையது;* that which has capacity to roll.

**உருத்தட்டுதல்** வி. (v.) *உருப்போடுதல் பார்க்க.*

**உருத்தாளன்** பெ. (n.) *உரிமையாளர்; சொந்தக்காரர்;* owner. *'உருத்தாளரிடம் கேட்காமல் பொருளை எடுக்காதே என்றார்'.*

**உருத்தாளி** பெ. (n.) *உரிமையாளர்; சொந்தக்காரர்;* owner. *'இந்த நிலத்துக்கு என் நண்பர்தான் உருத்தாளி'.*

**உருத்திரிதல்** வி. (v.) *1. உருமாறுதல்;* to be metamorphosed changed in form. *2. மாறுவேடம் கொள்ளுதல்;* to wear a mask, assume a disguise.

**உருத்து** பெ. (n.) *1. அக்கறை;* interest (in a field or in a person). *'என் மேல் நண்பருக்கு உருத்து அதிகம்'. 2. உறவு; சொந்தம்;* relations. *'மகனின்*

*திருமணத்திற்கு உருத்துக்காரர்கள் அனைவரும் வந்திருந்தனர்*.

**உருப்படி** பெ. (n.) *1. கணக்கிடக்கூடிய பொருள்;* item, piece, any article admitting of counting, unit. *'சலவைக்கு எத்தனை உருப்படிகள் போட்டாய்?'*. *2. பயன்படும் பொருள்;* article of value, useful thing. *'உருப்படியான பொருள்'*. *3. இசைப்பாட்டு;* piece of music. *'அவருக்கு நூறு உருப்படிகள் பாடம் உண்டு'*.

**உருப்படியாக** வி.அ. (adv.) *1. உயிருக்குத் தீங்கு இல்லாமல்;* unharmed. *'பணம் போனால் போகட்டும், நீ உருப் படியாக வந்து சேர்ந்ததே போதும்'*. *2. (பொருள்) சிதைவு அடையாமல்;* intact; without getting damaged. *'இந்த நூலை உருப்படியாகக் கொண்டு போய் உரியவரிடம் கொடு'*. *3. பயனுள்ள வகையில்;* constructively. *'ஒரு செயலையும் உருப்படியாகச் செய்யத் தெரியாதா?'*. *4. ஒழுங்காக;* properly. *'ஒரு தூவல்கூட உருப்படி யாக இல்லையா?'*.

**உருப்படுதல்** வி. (v.) *1. நல்ல நிலை அடைதல்;* prosper. *'நன்றாகப் படித்தால்தான் உருப்படுவாய் என்றார் ஆசிரியர்'*. *2. திட்டம், ஒப்பந்தம் முதலியன நிறைவேறி நடைமுறைக்கு வருதல்;* be useful; serve (a useful) purpose. *'இப்படியே போனால் இந்தத் திட்டம் உருப்படுவது ஐயம்தான்'*.

**உருப்பெயர்த்தல்** வி. (v.) *ஒரு சொல்லைப் பிறமொழியெழுத்தில் எழுதுதல்;* to transliterate.

**உருப்பெருக்காடி** பெ. (n.) *பொருளின் அளவைப் பெரிதாக்கிக் காட்டும் தன்மையுள்ள குவியாடி;* magnifying glass; lens.

**உருப்பெறுதல்** வி. (v.) உருவெடுத்தல் *பார்க்க.*

**உருப்போடுதல்** வி. (v.) *பல முறை படித்துப் படித்து நினைவில் வைத்துக் கொள்ளுதல்; மனப்பாடம் செய்தல்;* learn by rote; mug up (something). *'பொருள் தெரியாமல் உருப் போடாதே'*.

**உருபன்** பெ. (n.) *மொழியியலில் பொருள் அடிப்படையில் மேலும் பிரிக்க முடியாத சொல் அல்லது சொல்லின் பகுதி;* morpheme. *'கண்கள் என்பதில் 'கண்' - 'கள்' என்ற இரு உருபன்கள் உள்ளன'*.

**உருபு** பெ. (n.) இலக்கணத்தில், பெயர்ச் சொல்லோடு சேர்ந்து வேற்றுமைப் பொருளையும் உவமைப் பொருளையும் காட்டப் பயன்படும் இடைச்சொல்; (in grammar) case.

**உருமறைப்பு** பெ. (n.) *உள்ளிருப்பது வெளியே தெரியாதபடி ஏற்படுத்தப் படும் அமைப்பு;* cover. *'குழியில் தென்னையோலைகளைப் போட்டு உருமறைப்புச் செய்திருந்தார்கள்'*.

**உருவ அமைதி** பெ. (n.) *வடிவ ஒழுங்கு;* unity in form. *'நாட்டுப்புறப் பாடல் களிலும் உருவமைதி உண்டு'*.

**உருவ எழுத்து** பெ. (n.) *சொற்களை, ஒலிகளைச் சித்திர வடிவில் குறிக்கும் எழுத்து முறை;* hieroglyphics. *'பண்டைய எகிப்தில் உருவ எழுத்துகள் பயன்படுத்தப்பட்டன'*.

**உருவகப்படுத்துதல்** பெ. (n.) *1. உருவக மாகக் கூறுதல்;* describe metaphorically. *'முகம், 'நிலவு' என்று உருவகப் படுத்தப்பட்டுள்ளது'*. *2. இப்படி இருக்கும் அல்லது இருக்க வேண்டும் என்று கற்பனையாகத் தீர்மானித்தல்;* conceive (of something or someone). *'வாழ்க்கை என்றால் மனைவி, மக்கள், சொத்து என்று தான் நாம் உருவகப்படுத்திக் கொள்கிறோம்'*.

**உருவகம்** பெ. (n.) *உவமானத்தையும் உவமேயத்தையும் வேறுபடுத்தாமல் ஒன்றாகக் கூறும் முறை;* metaphor. *'மதிமுகம் என்பது உவமை; முகமதி என்பது உருவகம்'.*

**உருவகித்தல்** வி. (v.) *உருவகப்படுத்துதல் பார்க்க.*

**உருவங்காட்டி** பெ. (n.) *கண்ணாடி;* mirror.

**உருவடித்தல்** வி. (v.) *உருப்போடுதல் பார்க்க.*

**உருவத்திருமேனி** பெ. (n.) *வடிவுடையவராகக் கருதப்படும் கடவுள்;* God, as assuming form or shape.

**உருவப்படம்** பெ. (n.) *ஒருவரின் முழு உருவத்தைக் காட்டும் பெரிய படம்;* life size portrait. *'திருவள்ளுவரின் உருவப்படம் திறந்துவைக்கப்பட்டது'.*

**உருவப்பொம்மை** பெ. (n.) *வைக்கோல் போன்ற பொருள்களால் செய்யப்படும் உருத்தோற்றம் (கொடும்பாவி);* effigy.

**உருவம்** பெ. (n.) *1. வெளித்தோற்றம்; முழு உடல்;* figure; body; shape. *'யானை உருவத்தில் பெரியது'. 2. தெய்வம் அல்லது மக்கள் வடிவத்தின் படி (நகல்);* picture; image; idol. *'குழந்தையின் உருவத்தை அட்டைப்படத்தில் போட்டிருந்தார்கள்'. 3. நிழல் வடிவம்;* figure. *'இருட்டில் தெரிந்த உருவம் நகரத் தொடங்கியது'.*

**உருவ வழிபாடு** பெ. (n.) *கடவுளுக்கு வடிவம் அமைத்து வழிபடும் முறை;* idol worship.

**உருவாக்குதல்** வி. (v.) *1. புதிதாக ஒன்றை அமைத்தல்; நிறுவுதல்; தோற்றுவித்தல்;* build up; form; make; found; establish (a religion, etc.,). *'சிற்பி அழகான சிற்பங்களை உருவாக்கியிருந்தார்'. 2. (ஒருவர் தன் முயற்சியால் குறிப்பிட்ட துறையில் அல்லது முறையில்) மற்றொருவரை வெளிக்கொண்டு வருதல்;* produce (disciples, students, etc.,). *'அவர் சிறந்த மாணவர்களை உருவாக்கிய பேராசிரியர்'. 3. உண்டாக்குதல்; ஏற்படுத்துதல்;* draw up (plan, scheme, etc.,) enact; formulate (ideas, etc.,). *'மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த அரசு பல திட்டங்களை உருவாக்கியுள்ளது'.*

**உருவாகுதல்** வி. (v.) *1. தோன்றுதல்; உண்டாதல்;* come into existence; appear; evolve; be established. *'கடலில் புதிய காற்றழுத்தத் தாழ்வுமண்டலம் உருவாகியுள்ளது'. 2. (ஒருவருடைய முயற்சியால்) வெளிவருதல்;* be produced come out. *'இந்த ஆசிரியரால் பல மாணவர்கள் உருவாகியிருக்கிறார்கள்'. 3. எழுதல்; ஏற்படுதல்; உண்டாதல்;* be formed; get evoked. *'உள்ளத்தில் உருவாகும் உணர்ச்சிகளைப் புதினம் படம் பிடித்துக் காட்டியுள்ளது'.*

**உருவாடுதல்** வி. (v.) *சாமியாடுதல்;* give oracular responses while being supposedly possessed by a deity. *'ஏன் எதற்கெடுத்தாலும் உருவாடுகிறான்?' (இலங்.).*

**உருவாரம்** பெ. (n.) *அய்யனார் கோவிலில் நேர்த்திக் கடனாகச் செய்து நிறுத்தி வைக்கப்படும் உருவம்;* votive figurines placed at the temple of Ayyanar.

**உருவுதல்** வி. (v.) *1. பற்றிக் கொண்டிருக்கும் ஒன்றிலிருந்து ஒன்றை வலுவாக இழுத்தல்;* pull (quickly) out (from a bundle, sheaf, etc.,). *'கட்டிலிருந்து ஒரு செய்தித்தாளை உருவி எடுத்துப் போட்டான்'. 2. அழுத்தித் தடவுதல்; பிடித்து நீவுதல்;* slide one's fingers along with something, with a pressing motion. *'சுளுக்குப் பிடித்த இடத்தை மெதுவாக உருவி*

*விட்டான்'.* 3. காம்பிலிருக்கும் இலை, கதிரிலுள்ள நெல் போன்ற வற்றை இழுத்து ஒன்றாக எடுத்தல்; sliding along; strip off (leaves, grains, etc.,) by gripping with one's finger. *'கறிவேப்பிலை உருவிப் போட்டுத் தாளித்தாள்'.*

**உருவெடுத்தல்** வி. (v.) *1.* ஒன்று மற்றொன்றாக மாறுதல் அல்லது வெளிப்படுதல்; transform (into something); develop. *'அவனது முயற்சி வெற்றியாக உருவெடுத்தது'.* 2. வேறொரு வடிவம் எடுத்தல்; take the form (of someone or something mentioned. *'கூட்டுப்புழு பட்டாம் பூச்சியாக உருவெடுத்தது'.*

**உருவேற்றுதல்** வி. (v.) *1.* ஒருவரைத் தன்வழிக்குக் கொண்டு வருவதற் காக ஒன்றை மீண்டும் மீண்டும் சொல்லி அவர் மனத்தில் பதிய வைத்தல்; indoctrinate; get something into someone's head. *'என்ன சொல்லி அவனை உரு வேற்றியிருக்கிறாய்?'.* 2. இறைவனை நினைத்து மந்திரத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லுதல்; chant mantrams.

**உருளி** பெ. (n.) வாய் அகன்ற, உருண்டை வடிவ, உயரம் குறைந்த வெண்கல ஏனம்; spherical bronze vessel with a wide mouth. *'நிலைவெள்ளி வராத காலத்தில் சமைப்பதற்கு உருளியைப் பயன்படுத்தினார்கள்'.*

**உருளுதல்** பெ. (n.) *1. (படுத்த நிலையில்)* பக்கவாட்டில் ஒரே திசையில் மீண்டும் மீண்டும் புரண்டு நகர்தல்; roll over. *'குழந்தை உருண்டு வந்து என் பக்கத்தில் படுத்திருந்தது'.* 2. இடம் பெயர்தல்; move rolling along a surface. *'காசு கீழே விழுந்து உருண்டு சென்றது'.* 3. கீழ் நோக்கிப் புரண்டு விழுதல்; (of a vehicle) skid; tumble; roll down. *'மலைப்பாதை வளைவில் திரும்பும்போது பேருந்து பள்ளத்தில் உருண்டது'.* 4. பெயர் அடிபடுதல் அல்லது தொடர்புபடுத்தப்படுதல்; be dragged (into an affair). *'தேவை யில்லாமல் இந்தச் சண்டையில் என் தலைதான் உருளுகிறது'.*

**உருளை** பெ. (n.) *1.* நீள் உருண்டை *(வடிவம்)*; cylindrical. *'உருளை வடிவ ஏனம்'.* 2. நீள் உருண்டை வடிவில் உள்ள பொருள்; anything in cylindrical shape. *'மாழை (உலோக) உருளை யின் மேல் வைத்த பலகையில் யானை ஏறி நின்றது'.* 3. உருளைக் கிழங்கு; potato. *'உருளை விலை உயர்ந்துள்ளது'.*

**உருளைக்கல்** பெ. (n.) பரற்கல்; pebble.

**உருளைக்கிழங்கு** பெ. (n.) பழுப்பு நிற மெல்லிய தோலைக் கொண்ட, உண்ணத்தக்க உருண்டை வடிவக் கிழங்கு; potato.

**உருளைப்பிரண்டை** பெ. (n.) கோப் பிரண்டை; a long round and smooth creeper of vitis.

**உருளைப்புழு** பெ. (n.) மக்களின், விலங்கு களின் வயிற்றுக்குள் காணப்படும், மண்புழுவைப் போன்ற தோற்ற முடைய, நோயைப் பரப்பும் ஒட்டுண்ணி வகையைச் சார்ந்த புழு; nematode.

**உரை** பெ. (n.) *1.* பேச்சு; speech. *'ஆளுநர் உரையாற்றினார்'.* 2. இலக்கிய, இலக்கண நூல்களுக்கு எழுதப்படும் விளக்கம்; explanatory commentary on literary or grammatical works. *'திருக்குறளுக்குப் பலர் உரை எழுதியுள்ளனர்'.*

**உரைக்கோள்** பெ. (n.) உரையாசிரி யர்களின் கருத்து; interpretation given to the text by a commentator.

**உரைக்கோவை** பெ. (n.) ஒரு பொருளைப் பற்றிய பலருடைய கட்டுரைத் தொகுப்பு; anthology (of writings of

different persons); symposium. *'அகராதியியல் பற்றிய உரைக் கோவை வெளியிடப்பட்டது'.*

**உரைகட்டுதல்** வி. (v.) *உரை (விளக்கம்) எழுதுதல்;* to comment on a work.

**உரைகல்** பெ. (n.) *1. தங்கத்தின் தரம் அறியத் தேய்த்துப் பார்க்க உதவும் சிறிய, கருமை நிறக் கல்;* touchstone used by goldsmiths. *2. தரம் அறிவதற் கான சான்று;* standard of comparison; touchstone. *'சோழர்காலச் சிற்பக் கலைக்குத் தஞ்சைப் பெரிய கோவில் ஓர் உரைகல்லாகும்'. 3. மருந் தரைக்கும் சிறு கல்;* small stone for rubbing pills and other forms of medicine into powder.

**உரை கலங்குதல்** வி. (v.) *பேச்சுத் தடுமாறுதல்;* to be confused in speech.

**உரைகாரர்** பெ. (n.) *உரையாசிரியர் பார்க்க.*

**உரைகோள்** பெ. (n.) *நூலுக்குச் செய்யும் உரையில் சொல்லப்படுவன;* the contents, description in a commentary.

**உரை சொல்லல்** பெ. (n.) *இறந்தார் முன்பு மாரடித்துக்கொண்டு பெண்கள் புலம்பிக் கற்பனையாகப் பாட்டுச் சொல்லுதல்; மாரடிப்புப் பாடல்;* mournful singing by the females lamenting at the funeral with rhythmic breast beating for the departed soul.

**உரைத்தல்** வி. (v.) *1. தெரிவித்தல்; கூறுதல்;* state, express. *'இந்தப் பணியை முடிக்க எவ்வளவு காலம் ஆகுமென்று அறுதியிட்டு உரைக்க இயலாது'. 2. தங்கத்தின் தரம் அறியும் பொருட்டுத் தேய்த்தல்;* rub (gold on a touchstone). *'அடகுக் கடையில் பொன்னை உரைத்துப் பார்த் தார்கள்'. 3. சுக்கு முதலியவற்றைக் கல்லில் உரசுதல்;* rub (dried ginger, etc., on a wet stone to get a small amount of paste). *'வசம்பை உரைத்துப் பாலில் கலந்து குழந்தைக்குக் கொடு'.*

**உரைநடை** பெ. (n.) *யாப்பில் அமையாத, இயல்பான எழுத்து மொழி நடை;* prose.

**உரைநயம்** பெ. (n.) *உரையின் இனிமை;* excellence of the exposition on a work.

**உரைபாடம்** பெ. (n.) *மூலமும் உரையும்;* text with commentary.

**உரைமெழுகு** பெ. (n.) *உரைத்த பொன், வெள்ளிகளை ஒற்றும் மெழுகு;* darkish kind of wax, used by goldsmiths as well as by assayers in cash bazaars to take up the dust falling from precious metals that are tested on the touchstone.

**உரையறிகருவி** பெ. (n.) *1. உரைகல்;* touch stone. *2. மாற்றறிவிக்கும் ஆணி;* touch needle.

**உரையாசிரியர்** பெ. (n.) *இலக்கிய, இலக்கண நூல்களுக்கு விளக்கம் எழுதுவோர்;* commentator.

**உரையாடல்** பெ. (n.) *1. இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்டோர் தங்க ளுக்குள் பேசிக்கொள்ளும் பேச்சு;* conversation. *2. சிறுகதை, புதினம் போன்றவற்றில் பேச்சாக அமையும் பகுதி;* dialogue in a story, novel, etc.,

**உரையாடுதல்** வி. (v.) *இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்டோர் இயல் பாகத் தங்களுக்குள் பேசிக் கொள்ளுதல்;* talk, converse.

**உரையேடு** பெ. (n.) *உரைபாடம் பார்க்க.*

**உரைவன்மை** பெ. (n.) *பேச்சுவன்மை;* eloquence, oratorical power.

**உல்லம்** பெ. (n.) *கடலிலிருந்து இனப் பெருக்கத்திற்காக ஆறுகளுக்கு வருகிற, ஏறக்குறைய முக்கால் மீட்டர் நீளம் வரை வளருகிற, வெள்ளி நிற மீன்;* hilsa.

**உல்லடைப்பு** பெ. (n.) *மரத்தால் ஆற்றுக்கு அணையிடுகை;* damming a river with stockade.

**உல்லாடி** பெ. (n.) *ஒல்லியான ஆள்;* thin, gaunt person.

**உலக்கை** பெ. (n.) *இடிமரம்; கூலம், தவசம் முதலியவற்றை உரலில் இட்டு இடிக்க அல்லது குத்த உதவும் உருண்டு நீண்ட மரக் கருவி;* pestle.

**உலக்கைக் கணை** பெ. (n.) *1. உலக்கைப் பூண்;* ferrule on the pestle. *2. தேய்ந்து போன உலக்கை நுனி;* worn out end of a pestle.

**உலக்கைக் கனி** பெ. (n.) *தேங்காய்;* coconut.

**உலக்கைக் கொழுந்து** பெ. (n.) *அறிவுக் குறையுள்ள ஆள்;* stupid person; dullard. *'அவன் ஓர் உலக்கைக் கொழுந்து என்று திட்டினார்'.*

**உலக்கைச் சார்த்துதல்** வி. (v.) *அழித்தல்;* to ruin, destroy.

**உலக்கை வள்ளி** பெ. (n.) *உலக்கை போல் நீண்ட வள்ளிக்கிழங்கு;* a long and thick sweet potato, resembling a pestle.

**உலக அறிவு** பெ. (n.) *உலகத்தைப் பற்றிய பொது அறிவு;* wisdom or knowledge of the world.

**உலகக் கோப்பை** பெ. (n.) *ஒரு விளையாட்டில் உலகளவில் போட்டிகள் நடத்தி, அப்போட்டித் தொடரில் வெற்றி பெறும் அணிக்குத் தரும் கோப்பை;* world cup.

**உலக நோன்பிகள்** பெ. (n.) *சமண புத்த மதங்களில் இல்லறத்தார்;* householders among Jains or Buddhists.

**உலக நோன்பு** பெ. (n.) *இல்லறத்திலிருந்து கொண்டே நோன்பு மேற்கொள்கை;* observances of religious rites by householders among Buddhists, and Jains.

**உலகப் பற்று** பெ. (n.) *1. ஒருவர் தன் குடும்பத்தின் மீதும் தன் உடைமைகளின் மீதும் கொண்டிருக்கும் பிடிப்பு;* attachment to worldly things; worldliness. *2. உலகில் வாழ வேண்டும் என்னும் ஆசை;* attachment to the world.

**உலகப் புரட்டன்** பெ. (n.) *பெருமோசக் காரன்;* great rogue, one who turns the world upside down, well-known cheat.

**உலகப்போர்** பெ. (n.) *பல நாடுகளுக் கிடையே நடைபெறும்; பேரழிவை உண்டாக்கும் போர்;* world war.

**உலகம்** பெ. (n.) *1. உயிரினங்கள் வாழும் நிலவுலகம்;* earth. *2. அனைத்து நாடுகளையும் குறிக்கும் பொதுச்சொல்;* world. *'உலகில் அமைதி நிலவ வேண்டும்'. 3. ஒரு குழுவோ, தனி மாந்தனோ கொள்கை அல்லது அக்கறை அடிப்படையில் இயங்கும் தளம்;* world as a sphere of activity. *'தொழிலாளர் உலகம்'. 4. நிலவுலகில் வாழும் மக்கள்;* people of the world. *'காந்தி சுடப்பட்டபோது உலகமே கண்ணீர்விட்டது'. 5.(தொன்மங்களின்படி) செய்த பாவ புண்ணியங்களுக்கேற்ப இறப்புக்குப் பிறகு ஒருவர் செல்வதாக நம்பப் படும் இடம்;* the other world (to which one believed to go after death). *2. வாழ்க்கையின் போக்கு;* ways of the world. *'உலகம் தெரியாத அப்பாவி'. 7. உயிரின வகைப்பாட்டில் உயிரினங்களை நிலைத்திணைகள் (தாவரங்கள்) விலங்குகள் என்று இரண்டாகப் பிரிக்கும் பெரும் பிரிவு;* kingdom.

**உலகமயமாக்கல்** பெ. (n.) *உலகமயமாதல் பார்க்க.*

**உலகமயமாதல்** பெ. (n.) *உலகமயமாகும் போக்கு;* globalization.

**உலகமயமாகுதல்** வி. (v.) *பன்னாட்டு நிறுவனங்களின் பாதிப்பாலும் பெருகி வரும் தொழில்நுட்பத் தாலும் தொலைத்தொடர்பு ஏந்து களாலும் உலக நாடுகள் ஒரே பொருளாதார அமைப்பாகவும், தடைகளற்ற சந்தையாகவும் மாறி வருதல்;* globalize.

**உலக வங்கி** பெ. (n.) *பொருளாதாரத்தில் பின் தங்கிய நாடுகளின் வளர்ச்சித் திட்டங்களுக்காக வட்டி இல்லா மலோ குறைந்த வட்டியிலோ கடன் கொடுப்பதற்காக உலக நாடுகளால் ஏற்படுத்தப்பட்ட வைப்பகம் (வங்கி);* International Bank for Reconstruction and Development (also known as world Bank).

**உலக வழக்கு** பெ. (n.) *1. பெரும் பாலானவர்கள் பின்பற்றும் வழக்கம்;* common practice. *'எங்கும் அமைதி நிலவ வேண்டும் என்று எதிர் பார்ப்பது உலக வழக்கு'. 2. மக்க ளிடையே பேச்சு மொழியில் வழங்கும் சொற்களின் ஆட்சி;* usage as evident in the spoken language of the people.

**உலகாயதம்** பெ. (n.) *1. பருப்பொருள் களே முதலில் தோன்றியவை, உண்மையானவை, அனைத்திற்கும் அடிப்படையானவை என்று கூறும் மெய்மம் (தத்துவம்);* materialism. *'உலகாயதவாதம்'. 2. பொருளும், பொருளை ஈட்டுவதும் இன்றியமை யாதவை என்று கருதும் நடைமுறை வாழ்க்கை;* worldly life; material life. *'உலகாயதத்தில் ஈடுபடாமல் இறை வனைச் சேரும் வழியைத் தேடுங்கள் என்றார்'.*

**உலகியல்** பெ. (n.) *இந்த உலகத்தில் அன்றாடச் செயல்பாடுகளைச் சார்ந்த நடைமுறை;* of this world; worldly. *'உலகியல் ஆசைகளைத் துறக்க வேண்டும்'.*

**உலகு** பெ. (n.) *உலகம் பார்க்க.*

**உலங்கு** பெ. (n.) *கொதுகு;* gnat, mosquito, pesticide.

**உலப்பெண்ணெய்** பெ. (n.) *காய்ச்சிய குளியலெண்ணெய்;* boiled oil used for oil bath.

**உலர் சலவை** பெ. (n.) *தண்ணீரைப் பயன் படுத்தாமல் வேதிப் பொருள்களைப் பயன்படுத்தி எந்திரத்தால் துணி களைத் தூய்மைப்படுத்தும் முறை;* dry cleaning. *'பட்டுப் புடவையை உலர்சலவை செய்யக் கொடுத்தாள்'.*

**உலர் சாம்பல்** பெ. (n.) *மிக நுண்ணிய சாம்பல்;* fly ash.

**உலர்த்துதல்** வி. (v.) *ஈரத்தைக் காற்றில், வெயிலில் காய வைத்தல்;* dry (anything wet); make dry. *'தலையை உலர்த்திக் கொண்டிருந்தாள்'.*

**உலர்தல்** வி. (v.) *ஈரம் காய்தல்;* become dry; dry. *'நிலத்தில் ஈரம் உலர வில்லை'.*

**உலர் திராட்சை** பெ. (n.) *உலர வைக்கப்பட்ட கொடி முந்திரிப் பழம்;* raisin.

**உலருணவு** பெ. (n.) *1. நீண்ட நாள்கள் கெடாத வகையில் காய வைத்து எளிதில் உருவாக்கிய உணவு;* dry goods. *'குளிர் காலத்தில் கத்தரி வற்றல் குழம்பு சுவையாக இருக்கும்'. 2. அரிசி, பருப்பு, சக்கரை போன்ற உணவுப் பொருள்களைக் குறிக்கும் பொதுப்பெயர்;* a general term to refer to rice, pulses, sugar, etc.,

**உலவுதல்** வி. (v.) *1. (மாந்தர் அல்லாத பிற) நடமாடுதல்;* (of wild animals and those in non-human form) roam; haunt. *'நரிகள் உலவும் காடு'. 2. (கருத்து, பொய்யுரை) பரவலாகப் பேசப் படுதல்; நிலவுதல்;* (of opinion, idea)

go round; circulate. *'மக்களிடையே உலவும் கருத்தை அரசு கூர்ந்து கவனிக்கிறது'*. 3. *நடைமாற்றங் கொள்ளுதல் (சஞ்சரித்தல்)*; move (in a space).

**உலா** பெ. (n.) 1. *இறைவன் அல்லது அரசன் வீதிகளில் சுற்றி வருகிற ஊர்வலம்*; (temple or royal) procession. 2. *நகர வீதிகளில் தலைவன் உலா வரும்போது பெண்கள் அவன் மேல் காதல் கொள்வதாகச் சொல்லும் சிற்றிலக்கிய வகை*; a literary genre (in which the women of the town are said to fall in love with the hero when he goes in procession).

**உவகைப் பறை** பெ. (n.) *மகிழ்ச்சியைக் குறிக்கும் பறை*; drum used to be beaten on occasions of joy.

**உவர்** பெ.அ. (adj.) *உப்புத் தன்மை கொண்ட*; saline; brackish. *'உவர் மண்' 'உவர் நீர்'*.

**உவர்க்கல்** பெ. (n.) *துணி வழலைக்கட்டி*; soap.

**உவர்க்காரம்** பெ. (n.) 1. *உவர் நிலம் பார்க்க*. 2. *துணி வழலைக்கட்டி*; soap.

**உவர்காலி** பெ. (n.) *உப்பு நீரில் கிடக்க விருப்பமுள்ள எருமை அல்லது மாடு*; buffalo, cows that preper to lie in salt water.

**உவர்த்தரை** பெ. (n.) *உவர்நிலம் பார்க்க*.

**உவர்நிலம்** பெ. (n.) *உப்புத் தன்மைக் கொண்ட நிலம்*; saline soil.

**உவர்நீர்** பெ. (n.) *உப்புநீர்*; salt water, brackish water.

**உவர்ப்பு** பெ. (n.) 1. *கரிப்பு*; saltiness. *'நீரில் உவர்ப்புச்சுவை மிகுந்துள்ளது'*. 2. *துவர்ப்பு*: astringency.

**உவர்மண்** பெ. (n.) *உப்புத் தன்மை நிறைந்ததும் துணியை வெளுக்கப் பயன்படுவதுமான ஒருவகை வெள்ளை நிற மண்*; fuller's earth used for washing clothes.

**உழக்கு** பெ. (n.) 1. *முகத்தல் அளவையான, படியில் நான்கில் ஒரு பாகம் அல்லது இரண்டு ஆழாக்கு*; one fourth of a measure (roughly half of a litre used in former times. 2. *மேற்சொன்ன அளவு குறிக்கப்பட்ட காலம்*; a container of this capacity.

**உழக்குதல்** வி. (v.) *மிதித்தல்*; step on; tread. *'மிதிவண்டியை உழக்கிக் கொண்டு சென்றான்'*.

**உழப்புதல்** வி. (v.) 1. *நேரடியாக விடை சொல்லாமல் அல்லது உரிய வேலையைச் செய்யாமல் குழப்புதல்*; muddle; confuse the issue. *'சொன்ன வேலையைச் செய்யாமல் என்ன உழப்புகிறாய்?'*. 2. *வேண்டாததையெல்லாம் நினைத்து மனத்தைக் குழப்புதல்*; be confused due to anxiety or fear. *'மருத்துவ அறிக்கையை எண்ணி மனத்தை உழப்பிக் கொள்ளாதே'*. 3. *கலைத்தல்; தாறுமாறாக்குதல்; உலைத்தல்*; mess up (things). *'குழந்தை பொருட்களையெல்லாம் உழப்பிவிட்டது'*. 4. *கலக்குதல்*; churn up; stir. *'ஏரி நீரை உழப்பி மீன் பிடித்தனர்'*.

**உழலுதல்** வி. (v.) 1. *வறுமை, நோய், வேலை முதலியவற்றில் அமிழ்ந்து திணறுதல்; நீண்ட காலமாகத் துன்பப் படுதல்*; suffer (due to poverty, illness, etc., over a long period); be stuck with something. *'முதுமையிலும் நோயில் உழலாமலிருக்க வேண்டும்'*. 2. *(ஓரிடத்தை அல்லது ஒன்றைச்) சுற்றிச்சுற்றி அல்லது வளையவளைய வருதல்*; move around (within certain confines). *'மனம் நினைவுகளில் உழலுகின்றது'*.

**உழலைப்பிணி** பெ. (n.) *நா வறட்சி, கடு நீர் வேட்கை முதலிய குணங்களோடு*

*கூடிய நோய்;* any disease attended with parched tongue and intense thirst.

**உழலை மரம்** பெ. (n.) *மாட்டின் கழுத்துக் கட்டை;* block of wood suspended from the neck of a cow to prevent it from straying.

**உழலைமாடு** பெ. (n.) *ஓடிப்போகாதபடி கழுத்தில் உழலை மரங்கட்டியுள்ள மாடு;* cow from whose neck a block of wood is suspended so as to impede its running and thus prevent its straying away.

**உழவடை** பெ. (n.) *நிலத்தின் உரிமை; பயிர் செய்யப்போகும் நிலம்;* right of cultivating land.

**உழவடைத்தல்** வி. (v.) *உழுவதற்காக நிலத்தை ஒப்படைத்தல்;* to make over to another a piece of land for purposes of cultivation.

**உழவன்** பெ. (n.) *வேளாளன்; உழவுத் தொழில் செய்பவன்;* farmer.

**உழவன் பாம்பு** பெ. (n.) *ஒருவகைப் பாம்பு;* a kind of snake.

**உழவாரக் குருவி** பெ. (n.) *விரைவாகப் பறப்பதும், தனது எச்சிலால் கூடு கட்டுவதுமான ஒரு சிறு பறவை;* swift. *'உழவாரக் குருவிகளின் கூடுகளைக் கொண்டு ஒரு வகைப் பருகம் (பானம்) உருவாக்கு கிறார்கள்'.*

**உழவாரப் பணி** பெ. (n.) *கோயிலின் வெளிப்புறத்தையும், உட்புறத்தையும் தூய்மைப்படுத்தும் தன்னார்வத் தொண்டுப்பணி;* service of cleaning and maintaining the temple premises offered by devotees. *'நாவுக்கரசர் உழவாரப் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்'.*

**உழவாரப்பிடி** பெ. (n.) *உழவாரம் பார்க்க.*

**உழவாரம்** பெ. (n.) *களைக்கொத்தி போன்ற சிறு கருவி;* a small implement used for weeding.

**உழவியல்** பெ. (n.) *மண்ணாய்வு, உழவு செய்யும் முறைகள், உரமிடுதல், பயிர் விளைவித்தல் போன்ற வேளாண்மைச் செயல்பாடுகளை உள்ளடக்கிய பிரிவு;* agronomy. *'உழவர்களிடையே இயற்கை உழவியல் முறைகளை அரசு ஊக்கு விக்க வேண்டும்'.*

**உழவீரம்** பெ. (n.) *உழுதற்குத் தக்க ஈரம்;* condition of the ground when it has as much moisture as is needed for ploughing.

**உழவு** பெ. (n.) *1. வயலில் கலப்பையால் மண்ணைக் கிளறிவிடும் செயல்;* ploughing; tilling. *'கலப்பை பூட்டி உழவு செய்தார்'. 2. பயிர்த்தொழில்; வேளாண்மை;* agriculture; farming. *'உழவுத் தொழில்'.*

**உழவுகட்டி** பெ. (n.) *உழவிற் பெயர்ந்து வரும் மண்கட்டி;* clods in a ploughed field.

**உழவுகட்டுதல்** வி. (v.) *முதற்சால் போதல்;* to take the lead in ploughing so as to mark the course, as done by the head team.

**உழவுகாடு** பெ. (n.) *உழவுக்கேற்ற நிலம்;* lands that can be ploughed and brought under cultivation.

**உழவுகாணியாட்சி** பெ. (n.) *நிலத்தை உழுது பயிர் செய்யும் உரிமை;* sole right to plough and cultivate a land.

**உழற்றுதல்** வி. (v.) *அலுப்பு, அசதி போன்றவற்றால் படுக்கையில் புரளுதல்;* toss and turn in bed. *'இரவெல்லாம் படுக்கையில் உழற்றிக் கொண்டிருந்தார்'.*

**உழுதல்** வி. (v.) *1. விதைக்கும் முன் வயலில் கலப்பையால் மண்ணைக் கிளறிவிடுதல்;* plough; till. *'ஏர் பூட்டி உழுதார்'. 2. நிலத்தில் பயிர் செய்யும் முறை;* cultivate the land. *'உழுபவருக்கே நிலம் உரிமை'.*

**உழை** பெ. (n.) *தமிழிசையில் ஏழு இசையொலிகளில் (சுரங்களில்) நான்காவது இசையொலியான (சுரமான) 'ம'வைக் குறிப்பது; நடுவண் (மத்யமம்) சுரம்;* the fourth of the seven notes in an octave.

**உழைத்தல்** வி. (v.) *1. கடினமாக வேலை செய்தல்;* work hard; toil. *'உழைக்காமல் வெற்றி பெற இயலுமா?'. 2. நீண்ட நாள் பயன்படுதல்;* (of things) last long; wear well. *'இந்தத் தூவல் நன்றாக உழைக்கும்'.*

**உழைப்பாளி** பெ. (n.) *1. கடுமையாக வேலை செய்பவர்;* hard - working person. *'இவர் நல்ல உழைப்பாளி'. 2. தொழிலாளி;* labourer; worker. *'உழைப்பாளிகள் கூட்டம்'.*

**உழைப்பு** பெ. (n.) *1. கடுமையான வேலை அல்லது பணி;* hard work. *'உழைப்புக் கேற்ற ஊதியம் தர வேண்டும்'. 2. கடும் முயற்சி;* great effort. *'அவருடைய உழைப்பால்தான் மேம்பாலம் கட்டப்பட்டது'. 3. வருமானம் (இலங்.);* income. *'அவன் ஒரு உழைப்பும் இல்லாமல் அல்லல்படுகிறான்'.*

**உழைமண்** பெ. (n.) *உவர்மண் பார்க்க.*

**உள்**[1] வி. (v.) *1. காணப்படுதல் அல்லது இருத்தல்;* be (present in a place or in something). *'கன்னத்தில் மச்சம் உள்ளது'. 2. நிலையாக இருத்தல்;* be (in a place permanently); be situated; exist. *'இமயமலை இந்தியாவில் உள்ளது'. 3. குறிப்பிட்ட நிலையில் அல்லது முறையில் அல்லது வடிவில் அமைதல்;* be (in the specified condition or state). *'நீர் கலங்கலாக உள்ளது'. 4. தங்குதல்; வாழ்தல்;* stay; live or reside (in a place). *'அவர் 20 ஆண்டுகளாக மதுரையில் உள்ளார்'. 5. உடையதாக இருத்தல்; வைத்திருத்தல்; கொண்டிருத்தல்;* have; possess. *'அவருக்கு வீடு நிலம் உள்ளது'. 6. நினைவில் தங்குதல்; பதிதல்;* stay. *'அவரைப் பார்த்த நாள் நினைவில் உள்ளது'. 7. ஒன்று நிகழ்வதற்குக் குறிப்பிட்ட அளவு நேரம் எஞ்சுதல்;* remain. *'பேருந்து கிளம்ப இன்னும் எவ்வளவு நேரம் உள்ளது'.*

**உள்**[2] து.வி. (aux.v.) *1. ஒரு செயல் விரைவில் நிகழப் போவதைத் தெரிவிக்கப் பயன்படும் துணை வினை;* used to express that something is due in the near future. *'திருவாரூர் தொகுதிக்கு இடைத்தேர்தல் வரவுள்ளது'. 2. முதன்மை வினை குறிப்பிடும் செயல் நிகழ்ந்த பிறகு அமையும் நிலையைத் தெரிவிக்கும் துணைவினை;* auxiliary verb used to change the main verb to the stative form. *'மரம் நன்றாக வளர்ந்துள்ளது'.*

**உள்**[3] பெ.அ. (adj.) *1. ஒரு திறப்பின் பின் காணப்படும் பகுதி;* (of a house) the interior; (of a container) inside. *'பெட்டியினுள் என்ன இருக்கிறது?'. 2. வீட்டின் அறை;* room of a house. *3. உடனே தெரியாதபடி தள்ளி அமைந்திருப்பது; ஒன்றிலிருந்து விலகிச் செல்வது;* (at a stated) distance away from. *'நெடுஞ்சாலையின் உள்ளாகச் செல்லும் பாதை'. 4. அமைப்பின் பகுதியாக அமைந்த; வெளியில் தெரியாமல் இருக்கிற;* inner;interval. *'உட்குழு' 'உட்கட்சிப் பூசல்'.*

**உள்**[4] இ.சொ. (int.) *1. 'உள்பகுதி' என்ற பொருளை உணர்த்தும் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபாகிய இடைச்சொல்;* particle, which when occuring after on oblique form or after a dative means 'inside'. *'கிணற்றுக்குள் குதித்துக் குளித்தான்'. 2. 'இடையில்' என்ற பொருளை உணர்த்தும் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபாகிய*

இடைச்சொல்; particle, which when occuring after on oblique form or after dative means 'between' 'among'. *'நால்வருள் மூத்தவர்'*. 3. ஒரு செயல் 'முடிவதற்கு முன்பு' என்ற பொருளில் பயன்படும் இடைச்சொல்; particle, which when occuring after a dative following a verbal noun means 'before an action is completed'. *'நான் போவதற்குள் கூட்டம் தொடங்கி விட்டது'*. 4. குறிப்பிடப்படும் 'காலப்பகுதி முடிவதற்கு முன்பு' என்ற பொருளில் பயன்படும் இடைச்சொல்; particle, which when occuring with words denoting time means 'before the end of a specified period'. *'பத்து மணிக்குள் வீட்டுக்கு வந்து விடுவார்'*.

**உள்கட்டமைப்பு** பெ. (n.) மக்கள் வாழ அல்லது தொழில் நடத்தத் தேவையான மின்னிணைப்பு, நீர், சாலை, தொலைத் தொடர்பு போன்ற அடிப்படை ஏந்துகள்; infrastructure. *'மதுரை நகரின் உள் கட்டமைப்பை மேம்படுத்தும் பணிகள் நடைபெற்று வருகின்றன'*.

**உள்கட்டுமானம்** பெ. (n.) உள்கட்டமைப்பு பார்க்க.

**உள்காது** பெ. (n.) ஒலிகளைக் கேட்டல், உடலைச் சமநிலையில் வைத்திருத்தல் ஆகியவற்றைச் செயல்படுத்தும் காதின் உட்பகுதி; inner ear.

**உள்காயம்** பெ. (n.) அடிபட்டாலும் குருதி கசியாமலோ, தசை கிழியாமலோ இருந்து, தோல் கன்றிச் சிவந்து அழற்சிக்கு உள்ளான நிலை; bruise.

**உள்குத்தகை** பெ. (n.) வீடு, நிலம் போன்றவற்றைக் குத்தகைக்கு அல்லது வாடகைக்குப் பெற்ற ஒருவர் அதை மற்றொருவருக்கு மொத்தப் பகுதியையோ அல்லது ஒரு பகுதியையோ மீண்டும் வேறொருவர்க்கு வாடகைக்கு அல்லது குத்தகைக்கு விடும் முறை; sublease; sublet.

**உள்கை** பெ. (n.) சட்டத்திற்குப் புறம்பான செயல்களுக்குப் பிறர் அறியாமலிருந்து உதவி செய்பவர்;கையாள்; accomplice. *'திருடர்களுக்கு வைப்பக ஊழியரே உள்கையாக இருந்துள்ளார்'*.

**உள்சாதி** பெ. (n.) ஒரு குலத்தின் (சாதி)யின் உட்பிரிவு; subcaste.

**உள்துறை** பெ. (n.) ஒரு நாட்டின் அல்லது ஒரு மாநிலத்தின் சட்டம், ஒழுங்கு முதலியவற்றிற்குப் பொறுப்பாக இருக்கும் அரசுத்துறை; Home ministry; Home department.

**உள்நாக்கு** பெ. (n.) உள்வாயின் குழிந்த மேற்புறத்தின் முடிவில் தொங்கும் சிறு சதை; uvula.

**உள்நாடு** பெ. (n.) ஒரு நாட்டின் எல்லைகளுக்குட்பட்ட பகுதி; inland; internal. *'உள்நாட்டு விவகாரங்களில் அயல்நாடுகள் தலையிடக்கூடாது'*.

**உள்நீச்சல்** பெ. (n.) நீரின் மேற்பரப்பில் அல்லாமல் உள்ளுக்குள்ளேயே நீந்துகை; under water swimming.

**உள்நோக்கம்** பெ. (n.) மனத்தின் உள்ளூரக் கொண்டிருக்கும் கெட்ட எண்ணம்; ulterior motive; hidden intention. *'அவன் உள்நோக்கத்துடன் பழகுகிறான்'*.

**உள்படம்** பெ. (n.) ஒரு பெரிய படத்தின் ஒரு பகுதியைக் காட்டக் கட்டம் கட்டி அதனுள் தரப்படும் சிறிய படம்; inset. *'உலகப் படத்தின் முழுத் தோற்றம்'; உட்படம் 'இந்தியா'*.

**உள்பாடு** பெ. (n.) ஒன்றின் உட்பக்கம்; inside. *'சட்டையின் உள்பாட்டில் கறைபட்டுவிட்டது'*.

**உள்மருந்து** பெ. (n.) உள்ளுக்குக் கொள்ளும் மருந்து; medicine taken internally.

**உள்மனம்** பெ. (n.) *1. எச்சரிக்கும் உணர்வு; உள்ளுணர்வு;* instinct. *2. அடிமனம்;* the subconscious.

**உள்வட்டச் சாலை** பெ. (n.) *எல்லா இடங்களையும் தொடர்புபடுத்துவது போல அமைந்திருக்கும் வட்டமான சாலை;* inner ring road.

**உள்வணக்கம்** பெ. (n.) *உள்மன வழிபாடு;* worship in spirit.

**உள்வயிரம்** பெ. (n.) *மரத்தின் அகக்காழ்;* firmness of wood in the centre of an exogenous tree, core of a tree.

**உள்வலி** பெ. (n.) *1. புண்புரை முதலியவைகளின் உட்பக்கத்தில் காணும் வலி;* inward pain as in an abscess etc., *2. உள்ளுறுப்பின் வலி;* pain in the internal organ.

**உள்வாங்குதல்** வி. (v.) *1. தனக்கான எல்லையிலிருந்து தள்ளி அமைதல்;* be off (the stated place or mark); recede. *'கடல் உள் வாங்கியிருக்கிறது'. 2. ஒருவருடைய கண், உதடு முதலியவை அமுங்கிக் காணப்படுதல்;* (of eyes, lips, etc.,) be sunken. *'உடல் மெலிந்து கண்கள் உள்வாங்கிக் காணப்பட்டார்'. 3. மெத்தை போன்றவை அழுத்தத்தால் உள்ளே அமுங்குதல்;* (of mattress, etc.,) sink. *'அவன் உட்கார்ந்ததும் மெத்தை உள்வாங்கியது'. 4. கருத்து முதலியவற்றைப் பற்றுதல்;* get; grasp; digest. *'இருத்தலியல் மெய்ம்மத்தை (தத்துவத்தை) முழுமையாக உள்வாங்கியிருந்தார்'.*

**உள்வாடகை** பெ. (n.) *ஒருவர் தான் வாடகைக்கு இருக்கும் இடத்தை அல்லது அதன் ஒரு பகுதியை இன்னொருவருக்கு வாடகைக்கு விடும் முறை;* the act of subletting.

**உள்வாய்** பெ. (n.) *1. வாயின் உட்புறம்;* inner part of the mouth. *2. ஏரியின் உட்பக்கம்;* inside of a lake.

**உள்வாயில்** பெ. (n.) *வீட்டின் வெளி வாயிலை அடுத்து உள்ளே இருக்கும் வாயில்;* inner door.

**உள்வாரி** பெ. (n.) *(இலங்.) கல்வி நிலையங்களில் முழு நேரக் கல்வி பயிலும் முறை;* being a regular student. *'உள்வாரி மாணாக்கர்'.*

**உள்விளையாட்டு அரங்கு** பெ. (n.) *உள்ளரங்கம் காண்க.*

**உள்வீட்டு வேலை** பெ. (n.) *(இலங்.) ஒருவர் மற்றவருக்குத் தெரியாமலும் எதிராகவும் செய்யும் செயல்;* covert act. *'நட்பைக் கெடுக்க உள்வீட்டு வேலை நடந்திருக்கிறது'.*

**உள்ள** பெ.அ. (adj.) *உள்[1] பார்க்க.*

**உள்ளக்கருத்து** பெ. (n.) *உள்ளக்கிடக்கை பார்க்க.*

**உள்ளக்களிப்பு** பெ. (n.) *மனமகிழ்ச்சி;* heartfelt joy; delectation.

**உள்ளக்கிடக்கை** பெ. (n.) *ஒருவர் மனத்தின் உள்ளூர வைத்திருக்கும் ஆசை, செய்ய விரும்புவது முதலியவை;* latent or hidden desire; intention. *'இசை பயில வேண்டும் என்ற என் உள்ளக்கிடக்கையை அப்பா புரிந்து கொண்டார்'.*

**உள்ளக்குறிப்பு** பெ. (n.) *உள்ளக்கிடக்கை பார்க்க.*

**உள்ளங்கால்** பெ. (n.) *காலின் அடிப்பகுதி;* sole (of the foot).

**உள்ளங்கை** பெ. (n.) *வரிகை காணப்படும் கைப் பகுதி; அகங்கை;* palm (of the hand).

**உள்ளடக்கம்** பெ. (n.) *1. எழுதப்பட்ட அல்லது பேசப்பட்ட பொருள்;* content; message. *'இந்தப் பாடலைப் பாராட்டுகிற அளவுக்கு அதன்*

*உள்ளடக்கத்தைப் பாராட்ட முடியவில்லை'*. 2. பொருளடக்கம்; table of contents in a book. *'நூலில் யார் யார் கட்டுரை எழுதியுள்ளார்கள் என்பதை உள்ளடக்கத்தைப் பார்த்தாலே தெரியும்'*.

**உள்ளடக்குதல்** வி. (v.) *1.* பல கூறுகளைக் கொண்டிருத்தல்; include; contain; consist of. *'நாட்டியம் என்பது பல கூறுகளை உள்ளடக்கிய தொன்மையான கலை'*. 2. வரம்பு, வரையறைக்கு உட்பட்டதாக ஆக்குதல்; comprise. *'சொத்து என்பது அசையும் சொத்து, அசையாச் சொத்துகளை உள்ளடக்கியது'*.

**உள்ளடங்குதல்** வி. (v.) *1.* ஒன்றில் பல கூறுகள் அமைந்திருத்தல்; be included in something. *'வல்லுநர் குழுவில் அயல்மொழிப் பேராசிரியர்களும் உள்ளடங்குவார்கள்'*. 2. ஒன்றில் குறிப்பிட்ட தன்மை அல்லது பொருள் பொதிந்திருத்தல்; be inherent in something. *'தலைப்புகளைக் கொண்டே கட்டுரைகளில் உள்ளடங்கிய செய்திகளை ஊகித்தறிவதும் ஒரு திறமைதான்'*. 3. சற்றுத் தள்ளி அமைதல்; be a little removed or withdrawn from something. *'வீடு சாலையிலிருந்து உள்ளடங்கியுள்ளது'*. 4. குரல் தாழ்தல்; be deep within. *'அவருடைய குரல் உள்ளடங்கி ஒலித்தது'*.

**உள்ளடி நிலம்** பெ. (n.) ஏரியை அடுத்துள்ள நிலம்; land next to a tank or lake. *'உள்ளடி நிலத்தில் செங்கற் சூளை அமைத்திருந்தார்கள்'*.

**உள்ளது** பெ. (n.) உண்மை; உண்மையில் நடந்தது; truth; fact. *'உள்ளதை மறைக்காதே'*.

**உள்ளநாள்** பெ. (n.) *(இலங்.)* *1.*எப்போதும்; always. *'விடுமுறை என்றால் உள்ளநாள் எல்லாம் விளையாட்டுதான்'*. 2. ஓய்வாக உள்ள நேரம்; available (time, day, etc.,). *'உள்ள நாள் முழுவதும் அவர் படித்துக் கொண்டேயிருப்பார்'*.

**உள்ளப்பாங்கு** பெ. (n.) உளப்பாங்கு பார்க்க.

**உள்ளபடி** வி.அ. (adv.) உண்மையாக; உண்மை நிலவரப்படி; உண்மையான நடப்புப்படி; in truth; in fact. *'உள்ளபடியே எனக்கு மகிழ்ச்சி தான்'*.

**உள்ளம்** பெ. (n.) மனம்; mind; heart. *'உள்ளத்தில் தோன்றிய எண்ணங்கள்'*.

**உள்ளமட்டும்** கு.வி.எ. (adv.) இருக்கிறவரையிலும்; as long as (anything) lasts. *'நான் உள்ளமட்டும் நீங்கள் எதற்கும் கவலைப்படத் தேவையில்லை என்றார் அப்பா'*.

**உள்ளர்த்தம்** பெ. (n.) உட்பொருள் பார்க்க.

**உள்ளரங்கம்** பெ. (n.) விளையாட்டுப் போட்டிகளை நடத்துவதற்காக, மேற்கூரை போடப்பட்ட பெரிய அரங்கம்; indoor stadium.

**உள்ளரங்கு** பெ. (n.) உள்ளரங்கம் பார்க்க.

**உள்ளவன்** பெ. (n.) *1.* உடையவன்; he who has. *2.* பொருளுடையவன்; moneyed man; rich person.

**உள்ளவாறு** வி.அ. (adv.) உள்ளபடி பார்க்க.

**உள்ளழற்சி** பெ. (n.) உடம்பினுள் ஏற்படும் வேக்காடு; inflammation of the internal organ of the body as in tuberculosis.

**உள்ளளவும்** பெ. (n.) உள்ளமட்டும்; as long as (anything) lasts. *'உப்பிட்டவரை உள்ளளவும் நினை (பழ.)'*.

**உள்ளறிவு** பெ. (n.) உள்ளுணர்வு, உள்மனம்; consciousness, intellect, thought-faculty.

**உள்ளாக்குதல்** வி. (v.) *ஓர் உணர்ச்சிக்கு அல்லது ஒரு நிலைக்கு ஆளாக்குதல்;* subject some one to an emotion, a state, etc., '*பழங்கால மதிப்பீடுகள் இன்று கேள்விக்கு உள்ளாக்கப்படுகின்றன*'.

**உள்ளாகுதல்** வி. (v.) *ஓர் உணர்ச்சிக்கு அல்லது ஒரு நிலைக்கு ஆளாகுதல்;* become subjected to an emotion, state, etc., '*அறியாமைக்கு உள்ளாகாமல் தடுக்க கல்வி இன்றியமையாத தாகும்*'.

**உள்ளாட்சி** பெ. (n.) *சிற்றூர்களிலும் நகரங்களிலும் வாழ்பவர்கள் தத்தம் ஊருக்கான நிருவாகங்களை நிகராளிகள் (பிரதிநிதிகள்) மூலம் நடத்தும் முறை;* local government.

**உள்ளாடை** பெ. (n.) *உள்ளுக்குள் அணியும் ஆடை;* under garment.

**உள்ளார்ந்த** பெ.எ. (adj.) *உள்ளே இயற்கையாக அமைந்துள்ள; உட்பொதிந்துள்ள;* intrinsic to something; latent. '*பேச்சின் உள்ளார்ந்த கருத்தை உணர்ந்து கொண்டார்*'.

**உள்ளாற்றல்** பெ. (n.) *ஒருவரின் உள்ளே அடங்கியிருக்கும் வெளிப்படாத திறன்;* potential. '*மாணவர்களின் உள்ளாற்றலைக் கண்டறிந்து ஊக்குவிக்க வேண்டும்*'.

**உள்ளான்** பெ. (n.) *1. நீர் நிலைகளில், வாலை ஆட்டியபடி தலையை மேலும் கீழும் அசைத்துக் கொண்டிருக்கும் கரும் பழுப்பு கலந்த சாம்பல் நிறப் பறவை;* common sand piper. *2. சேற்றில் ஆழமாகத் துழாவுவதற்கு ஏற்ற நீண்ட, குறுகிய அலகைக் கொண்ட சதுப்பு நிலப் பறவை;* snipe.

**உள்ளி** பெ. (n.) *1. வெள்ளைப் பூண்டு;* garlic. *2. சிறுவெங்காயம்; ஈருள்ளி;* Onion (of the smaller variety).

**உள்ளிட்ட** இ.சொ. (int.) *கூறப்பட்ட ஒருவரோ ஒன்றோ அல்லது மேற்பட்டவர்களோ மேற்பட்டவையோ சேர்ந்த என்ற பொருளில் பயன்படுத்தப்படும் இடைச்சொல்;* particle meaning inclusive of 'including'. '*தலைமையாசிரியர் உள்ளிட்ட ஆசிரியர்கள் அனைவரும் வந்திருந்தனர்*'.

**உள்ளிட்டு** இ.சொ. (int.) '*உட்பட*' என்ற *பொருளில் பயன்படுத்தப்படும் இடைச்சொல்;* connecting two phrases meaning 'including'.

**உள்ளிடுதல்** வி. (v.) *கணிப்பொறியில் சேமிக்க விரும்பும் தரவல்களை விசைப் பலகையில் தட்டிப் பதிவு செய்தல்;* key in (the data in a computer). '*தேர்வுக்கான விடைகளை இணைய தளத்தில் உள்ளிட்டிருந்தனர்*'.

**உள்ளித் தேங்காய்** பெ. (n.) *உள்ளீடற்ற தேங்காய்;* Coconut with diseased flesh or without flesh. '*நீ வாங்கி வந்த தேங்காய் உள்ளித் தேங்காயாக உள்ளது*'.

**உள்ளிப்பூடு** பெ. (n.) *உள்ளிப்பூண்டு பார்க்க.*

**உள்ளிப்பூண்டு** பெ. (n.) *வெள்ளைப் பூண்டு;உள்ளி;* garlic.

**உள்ளிருப்பு** பெ. (n.) *1. வைப்புநிதி;* reserve cash. *2. கருவூலக் காவல்;* watching the treasury.

**உள்ளிருப்புப் போராட்டம்** பெ. (n.) *உள்ளிருப்பு வேலை நிறுத்தம் பார்க்க.*

**உள்ளிருப்பு வேலை நிறுத்தம்** பெ. (n.) *பணியாளர்கள் பணியிடத்தின் உள்ளேயே தங்கியிருந்து நடத்தும் வேலை நிறுத்தம்;* a form of protest where the employees stay on the premises of the workplace and go on strike (in India) stay-in-strike.

**உள்ளீடு** பெ. (n.) *1. ஒன்றுக்குத் திண்மையைத் தரும் வகையில்*

உள்ளே இருக்கும் பொருள்; (the hard) core or material (that gives solidity). *'மூங்கில் உள்ளீடற்றது'*. 2. *கதை, (கவிதை) செய்யுள் முதலியவற்றின் பொருள்; உள்ளடக்கம்;* content of a story, poem, etc., *'கதையின் உள்ளீடும் வடிவமும் சிறப்பாக உள்ளது'*.

**உள்ளீடு செய்தல்** வி. (v.) *உள்ளிடுதல் பார்க்க.*

**உள்ளுக்கு** வி.அ. (adv.) *மாத்திரை, மருந்து முதலியவற்றை வாய் வழியாக வயிற்றுக்குள் செல்லுமாறு;* (of drugs) orally. *'நாட்டு மருத்துவர் உள்ளுக்குச் சாப்பிட மருந்து கொடுத்தார்'*.

**உள்ளுக்குள்** வி.அ. (adv.) *1. மனத்தின் அடித்தளத்தில்; மனத்திற்குள்;* within (oneself); deep down. *'உள்ளுக்குள் அச்சமாக இருந்தது'*. 2. *உள்ளே;* inside. *'பழம் உள்ளுக்குள் அழுகி யிருந்தது'*.

**உள்ளுடை** பெ. (n.) *உள்ளாடை பார்க்க.*

**உள்ளுணர்வு** பெ. (n.) *காரணம் தெரியாவிட்டாலும் ஒரு நிகழ்ச்சி நிகழப்போவதை மனம் தானே உணரும் திறன்;* intuition; instinct. *'உன் உள்ளுணர்வுப்படி நட'*.

**உள்ளும்புறமும்** வி.அ. (adv.) *முழுமையாக; முற்றாக;* in and out; thoroughly. *'அவரை உள்ளும் புறமும் நன்கு அறிந்தவர்கள் சிலரே'*.

**உள்ளுறுப்பு** பெ. (n.) *உடலின் உள்ளே இருக்கும் உறுப்பு;* internal organ.

**உள்ளுறை**[1] பெ. (n.) *1. கழக இலக்கிய அகப்பாடல்களில் வெளிப்படையாக ஒப்பிடாமல் பொருளைக் குறிப்பால் உணர்த்தும் உவமை;* in Agam poems of the classical Tamil, implicit simile; smbolic imagery. *2. நூலின் உள்ளடக்கட்டம்;* content of a book.

**உள்ளுறை**[2] பெ. (n.) *உள்ளார்ந்த;* intrinsic, latent. *'மாந்தரின் உள்ளுறை ஆற்றல்கள் வலிமையானவை'*.

**உள்ளுறை வெப்பம்** பெ. (n.) *ஒரு திடப்பொருள் நீர்ம நிலையை அடையும்போது வெப்ப நிலையில் மாற்றம் இன்றி அது உள்வாங்கும் அல்லது வெளிவிடும் வெப்ப ஆற்றல்;* latent heat.

**உள்ளூர்** பெ. (n.) *குறிப்பிடப்படும் ஊரும் அதைச்சார்ந்த பகுதிகளும்;* home town; that which is local.

**உள்ளூர்ச்சரக்கு** பெ. (n.) *1. உள்நாட்டு மருந்துப் பொருட்கள்;* local product, indigenous drugs. *2. சொந்த ஊரில் விளையும் பொருள்கள்;* local product.

**உள்ளூர் வரி** பெ. (n.) *பொருள்களின் மீது உள்ளாட்சி நிருவாகமோ, மாநில அரசோ விதிக்கும் விற்பனை வரி போன்ற வரி;* tax levied on commodities by the state government or local bodies.

**உள்ளூர் விடுமுறை** பெ. (n.) *குறிப்பிட்ட பகுதிக்கு மட்டும் அரசு அறிவிக்கும் விடுமுறை;* local holiday. *'கள்ளழகர் வைகையாற்றில் எழுந்தருளும் நாளன்று மதுரைக்கு உள்ளூர் விடுமுறை அறிவிக்கப்பட்டுள்ளது'*.

**உள்ளூர** வி.அ. (adv.) *உள்ளுக்குள்;* deep down in one's mind. *'உள்ளூர மகிழ்ச்சி ஊற்றெடுத்தது மகன் பிறந்த செய்தி கேட்டதும்'*.

**உள்ளெரிச்சல்** பெ. (n.) *பொறாமை;* envy, jealousy.

**உள்ளே** வி.அ. (adv.) *1. உட்பகுதியில்;* inside; in (opposite to outside, out or open). *'கதவை உள்ளே தாழிட்டுக் கொண்டார்'*. *2. உடலின் பகுதியாக அமைந்து வெளியே தெரியாத உணவுக்குழல், வயிறு போன்றவற்றின் உட்பகுதியில்;* in. *'சோறு உள்ளே போனதும் தெம்பு வந்தது'*. *3. சிறையில்;* in prison. *'உள்ளே தள்ளிவிடுவேன் என்று மிரட்டினார்'*.

**உள்ளே தள்ளுதல்** வி. (v.) *சிறைக்கு அனுப்புதல்;* put someone behind bars. *'குற்றம் செய்தால் உள்ளே தள்ளி விடுவார்கள்'.*

**உள நூல்** பெ. (n.) *1. உளவியல்;* psychology. *'உளநூல் வல்லுநர்கள்'. 2. உளவியல் நூல்;* treatise on psychology.

**உளப்பகுப்பாய்வு** பெ. (n.) *ஒருவருடைய சிக்கல்களுக்குத் தீர்வு காண அவருடைய உணர்ச்சிகளையும் நடத்தையையும் அவரே புரிந்து கொள்ளும் வகையில் தரப்படும் உளவியல் மருத்துவ முறை;* psychoanalysis.

**உளப்படுத்துதல்** வி. (v.) *ஒரு பகுப்பில் உட்படுத்துதல்;* include in a classification. *'நாம் என்பது கேட்பவரையும் உளப்படுத்திக் கூறும் தன்மைப் பன்மையாகும்'.*

**உளப்பாங்கு** பெ. (n.) *மனப்பாங்கு, மனப்பான்மை;* attitude; mentality. *'ஒருவரின் உளப்பாங்கை அறிந்து செயல்பட வேண்டும்'.*

**உளப்புதல்** வி. (v.) *உழப்புதல் பார்க்க.*

**உளம்** பெ. (n.) *உள்ளம் பார்க்க.*

**உளவறிதல்** வி. (v.) *உளவுபார்த்தல் பார்க்க.*

**உளவாளி** பெ. (n.) *உளவு வேலையில் ஈடுபடுபவர்;* spy.

**உளவியல்** பெ. (n.) *மனத்தின் செயல் பாடுகள் குறித்தும், அதன் வெளிப் பாடுகளான நடத்தை, குணம் குறித்தும் ஆராயும் அறிவியல் துறை;* psychology.

**உளவியலாளர்** பெ. (n.) *மனத்தின் இயக்கம் மற்றும் இயக்கம் சார்ந்த நடவடிக்கைகளைப் பற்றி ஆராய் பவர்;* Psychologist.

**உளவு** பெ. (n.) *பிற நாடுகளின் படை (இராணுவ) கமுக்கங்களையோ, அரசியல் கமுக்கங்களையோ, குமுகாயப் போக்குகளையோ, தொழில் துறையில் போட்டி அமைப்புகளைக் குறித்தோ, தரவல்களைக் கமுக்கமாகச் சேகரிக்கும் முறை;* spying; intelligence; espionage.

**உளவு பார்த்தல்** வி. (v.) *வேவு பார்த்தல்;* spy; carry out espionage activities.

**உளறல்** பெ. (n.) *(கேட்பவர் நோக்கில்) பொருளற்ற பேச்சு;* (from the hearer's point of view) nonsense.

**உளறுதல்** வி. (v.) *1. குழறிப் பேசுதல்;* talk nonsense. *'தூக்கத்தில் உளறினாய்'. 2. (கேட்பவருடைய நோக்கில்) பொருளற்று அல்லது கட்டுப் பாடின்றிப் பேசுதல்;* blabber. *'அவனுக்கு ஒன்றும் தெரியாது, சும்மா உளறுவான்'. 3. கமுக்கத்தை வெளியே சொல்லிவிடுதல்;* blurt out.

**உளறுவாயன்** பெ. (n.) *கமுக்கத்தைக் காப்பாற்றத் தெரியாமல் எளிதில் வெளியே சொல்லிவிடுபவன்;* blabber mouth.

**உளி** பெ. (n.) *1. மரம் செதுக்குவதற்கான கூரிய, அகன்ற அடி விளிம்புடைய இரும்புப்பட்டை செருகப்பட்ட கருவி;* (carpenter's) chisel. *2. (செருப் புத் தைப்பவர்கள்) தோலைக் கிழிப்ப தற்குப் பயன்படுத்தும், மேற்குறிப் பிட்டதைப் போன்ற கருவி;* a chisel like implment used for cutting leather. *3. கல் செதுக்குவதற்கான கூரிய முனையும் தட்டையான தலைப்பாகமும் கொண்ட கருவி;* (Sculptor's or stone worker's) chisel.

**உளுத்தங்களி** பெ. (n.) *உளுத்த மாவைக் கிளறி நல்லெண்ணெய் ஊற்றிச் செய்யும் ஊட்டம் மிகுந்த ஒருவகைக் களி;* dish prepared from the flour of blackgram mixed with sesame oil.

**உளுத்தம் பருப்பு** பெ. (n.) *உடைத்த உளுந்து;* blackgram (split in half).

**உளுத்தல்** வி. (v.) *காய்ந்த மரம், மரத்தாலான பொருள்கள் போன்றவை சிறு வண்டு, புழு முதலியவற்றால் அரிக்கப்பட்டுப் பொடியாதல்; வீணாதல்;* (of wood) be worm-eaten; become decayed; become dry rot. *'மரம் உளுத்துவிட்டது'.*

**உளுந்தம் பருப்பு** பெ. (n.) *உளுத்தம் பருப்பு பார்க்க.*

**உளுந்து** பெ. (n.) *பெரும்பாலும் வடை, இட்டலி போன்றவற்றைத் தயாரிக்கப் பயன்படுத்துவதும், மெல்லிய கருநிற மேல்தோல் மூடிய வெண்உருண்டை வடிவப் பருப்பு; அப்பருப்பைத் தரும் செடி;* blackgram (main ingredient for making Ittali, Vadai, etc.,); the crop yielding blackgram.

**உளுவை** பெ. (n.) *அரை மாத்திரி (மீட்டர்) அளவுக்கும் குறைவாக வளரக் கூடிய, விசிறி போன்ற வாலைக் கொண்ட, நீர்நிலையின் அடிப்பகுதியில் காணப் படும் (உணவாகும்) நன்னீர் மீன்;* goby.

**உளை** பெ. (n.) *மண்ணும் நீரும் கலந்த கலவை; சேறு;* mire. *'உளையில் வண்டி பதிந்துவிட்டது'.*

**உளைதல்** வி. (v.) *1. கை, கால், மூட்டு போன்ற இடங்களில் குத்திக் குடைந்து வலித்தல் போன்ற உணர்வு;* of limbs and joints have pricking and gripping pain. *'நெடுநேரம் நின்றதால் கால் உளைகிறது'. 2. (உருவகமாக) மனம் கவலை யடைதல்;* stress. *'அவர் சொன்ன சொல்லால் மனம் உளைகிறது'.*

**உற்ற** பெ.அ. (adj.) *மிகவும் வேண்டிய;* trusted; needed. *'உற்ற நண்பன்'.*

**உற்றறிவு** பெ. (n.) *தொடுவுணர்வு;* sense of touch. *'ஒன்றறிவதுவே உற்றறி வதுவே" (தொல்.மர.27)'.*

**உற்றார்** பெ. (n.) *(உறவால் அல்லாமல்) நெருக்கமானவர்; நண்பர்;* one who is close to a person but not related. *'உற்றார் உறவினர் அனைவரும் வந்திருந்தனர்'.*

**உற்று** வி.எ. (adv.) *கூர்ந்து, உன்னிப்பாக;* keenly; intently; with rapt attention. *'உற்று நோக்கினார்'.*

**உறக்கம்** பெ. (n.) *தூக்கம்;துயில்;* sleep.

**உறங்குதல்** வி. (v.) *தூங்குதல்;* sleep.

**உறவாடுதல்** வி. (v.) *தொடர்பு கொண்டு உறவை ஏற்படுத்திக்கொள்ளுதல்;* be close to someone. *'ஒட்டி உறவாடு கிறார்கள்'.*

**உறவினர்** பெ. (n.) *உறவுக்காரர் நிலை; சொந்தக்காரர்;* relative. *'என் அப்பா வழியில் இவர் எனக்கு உறவினர்'.*

**உறவு** பெ. (n.) *1. சொந்தம்;* relationship. *'அவர் நமக்கு உறவுதான்'. 2. உணர்வுப்பூர்வமான நெருக்கம்;* relationship. *'மாந்த உறவுகளுக் கிடையில் ஏன் இவ்வளவு சிக்கல்?'. 3. துறை சார்ந்த தொடர்பு;* bilateral relations. *'இந்தியா-சீனா இடையே யான வணிக உறவு'. 4. ஏதேனும் பொதுத் தன்மையின் அடிப்படை யிலான பிணைப்பு;* relationship; bondage; attachment. *'மக்களுக்கும் இயற்கைக்குமான உறவு தொடர் கிறது'. 5. உடலுறவு;* sexual intercourse.

**உறவுமுறை** பெ. (n.) *உறவு; உறவால் அழைக்கப்படும் முறை;* relationship between two persons. *'அவர் எனக்கு அண்ணன் உறவுமுறை'.*

**உறி** பெ. (n.) *வீடுகளில் பால், வெண்ணெய் முதலிய பொருள்களை வைத்திருக்கும் பானைகளைத் தாங்கியிருக்கும், உத்தரத்திலிருந்து தொங்கவிடப்பட்டிருக்கும் கயிறு அல்லது தொடரியால் ஆன கூம்பு வடிவ அமைப்பு;* a ropenet suspended

from the roof for keeping vessels with milk, butter, etc., *'உறியில் உள்ள வெண்ணெய்யை எடுத்துக் கொடுத்தாள் அம்மா'*.

**உறிஞ்சுதல்** வி. (v.) *1.* உதடுகளைக் குவித்தோ சிறு குழல் வழியாகவோ நீர்மத்தை உள்ளிழுத்தல்; மூக்கினால் மூக்குப்பொடி முதலியவற்றை உள்ளிழுத்தல்; sip (a drink); suck up (liquid through a straw); draw in (snuff, etc.,). *'குழந்தை மூக்கை உறிஞ்சியது'*. *2.* நிலம், வேர் முதலியன நீரை உள்ளிழுத்தல்; ஈர்த்தல்; (of soil, roots, etc.,) absorb. *'மண் நீரை உறிஞ்சி விட்டது'*. *3.* நீர், மண் முதலியவற்றை எந்திரம் மூலம் மேலிழுத்தல்; (of machine) suck up; pump. *'மண்ணை உறிஞ்சி வெளியில் கொட்டும் எந்திரம் வருகிறது'*.

**உறிஞ்சுதாள்** பெ. (n.) மை முதலியவற்றை உறிஞ்சி உள்ளிழுத்துக் கொள்ளும் தன்மை கொண்ட ஒருவகைத் தாள்; blotting paper.

**உறிதல்** வி. (v.) உறிஞ்சுதல்; draw in. *'மூக்கை உறியாதே'*.

**உறியடி** பெ. (n.) *(திருவிழாக்களின் போது)* இரண்டு உயரமான கழிகளுக்கு இடையில் இருக்கும் குறுக்குக் கழியின் உச்சியில் கட்டியுள்ள மஞ்சள் நீர் நிறைந்த மண்பானையை அடித்து உடைக்கும் விளையாட்டு; festive sport in which young people try to break pots filled with turmeric water suspended from a height. *'உறியடித் திருவிழா'*.

**உறு** து.வி. (aux.v.) *1.* ஓர் உணர்ச்சியை அல்லது ஒரு நிலையை அடைதல், பெறுதல் என்னும் பொருளில் குறிப்பிட்ட பெயர்ச்சொற்களோடு இணைந்துவரும் துணை வினை; an auxiliary verb added to nouns of feeling or state, in the sense 'get', 'obtain' (the stated feeling or state). *'குழந்தை பிறந்த செய்தி கேட்டு மகிழ்ச்சியுற்றோம்'*. *2.* வினைப் படுத்தும் வினை; a verbalizer. *'கண்ணுற்றேன்' 'கேள்வியுற்றேன்'*.

**உறுத்தல்** பெ. (n.) *1.* உடலில் எரிச்சலையும் நெருடலையும் ஏற் படுத்தும் உணர்வு; (of body) irritation. *'கண்ணில் தூசி விழுந்ததால் உறுத்துகிறது'*. *2.* குற்றவுணர்வால் மனத்தில் ஏற்படும் குறுகுறுப்பு; pricks of conscience; qualms. *'பொய் சொன்னதால் மனம் உறுத்துகிறது'*. *3.* இயல்பாக இல்லாமல் இடையூறாக இருப்பது; ஒன்றோடு பொருந்தாமல் இருப்பது; being uncomfortable. *'படத்தின் விரைவுக்குப் பாடல்கள் உறுத்தலாக உள்ளன'*.

**உறுத்துக்கட்டளை** பெ. (n.) ஒருவரின் உரிமைக்கோ சொத்துக்கோ கேடு விளைவிக்க முடியாதபடி, குறிப்பிட்ட ஆள் மீது பிறப்பிக்கும் இறுதியான ஆணை; injunction.

**உறுத்துதல்** வி. (v.) *1.* தொல்லையான நெருடல் உணர்ச்சி தருதல்; cause irritation; grate. *'கண்ணில் தூசி விழுந்ததால் உறுத்துகிறது'*. *2.* கடும் சொல், தவறு முதலியவை மனத்தை வருத்துதல்; trouble (one's conscience). *'பொய் சொல்லிவிட்டோமே யென்று மனம் உறுத்துகிறது'*.

**உறுதி** பெ. (n.) *1.* வலிமை; strength. *'உறுதியான உடல்'*. *2.* மாறாத திடம்; நெகிழாத பிடிப்பு; being firm or determined, firmness. *'கொள்கை உறுதி உடையவர்'*. *3.* முடிந்த முடிவு; நிச்சயம்; being sure or certain about something. *'இன்று மழை பெய்வது உறுதி'*. *4.* சொல்லுறுதி, உறுதிமொழி; promise, assurance; word of honour. *'நாளைக்குள் பணியை முடித்து விடுவேன் என்று உறுதி*

*கூறினார்'.*

**உறுதிசெய்தல்** வி. (v.) உண்மையாக்குதல்; மெய்ப்பித்தல்; confirm; prove. *'உன் கூற்றை உறுதி செய்ய சான்று உண்டா?'.*

**உறுதிப்படுத்துதல்** வி. (v.) ஒன்றை உண்மை என்று ஒத்துக் கொள்ளுதல் அல்லது மெய்ப்பித்தல்; confirm; prove. *'இதழில் வந்த செய்தியைப் பற்றிக் கேட்டபோது அவர் அதை உறுதிப்படுத்த மறுத்துவிட்டார்'.*

**உறுதிப்பாடு** பெ. (n.) *1.* அசைக்க முடியாத நம்பிக்கை; firmness (of purpose). *'கொண்ட கொள்கையில் உறுதிப்பாடு உடையவர்'.* 2. நாட்டின் நிலையான தன்மை; stability. *'நாட்டின் உறுதிப்பாட்டைக் குலைக்க சூழ்ச்சிகள் செய்யப்படு கின்றன'.*

**உறுதிப்பிணை** பெ. (n.) நிலம், வீடு போன்ற அசையாச் சொத்தை ஈடாக அளிக்கும் பிணை; security.

**உறுதிப்பொருள்** பெ. (n.) மக்கள் வாழ்வில் அடையத் தகுந்தவைகளாகக் கூறப்படும் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு குறிக்கோள்; objectives worthy of human pursuit, viz., Aram, Porul Inbam, Veedu.

**உறுதி முடித்தல்** வி. (v.) வீடு, நிலம் போன்றவற்றை மற்றொருவருக்கு உடைமையாக்கும் பொருட்டு ஆவணம் எழுதித் தருதல்; execute an agreement of sale. *'காணியை யாருக்கும் உறுதி முடிக்கவில்லை'.*

**உறுதிமொழி** பெ. (n.) *1.* கட்டுமுறை (நிபந்தனை)க்கு உட்பட்டு நடப்பதாக அளிக்கும் சொல்லுறுதி; undertaking. *'நன்னடத்தை உறுதி மொழி அளிக்க வேண்டும்'.* 2. நாட்டின் நலன் கருதி ஒருவர் எடுத்துக்கொள்ளும் மெய் யுறுதியுரை (சத்தியபிரமாணம்); pledge. *'ஒருமைப்பாட்டைக் காக்க உறுதிமொழி ஏற்போம்'.* 3. அமைச்சர், நயன்மன்ற நடுவர் போன்றோர் பதவி ஏற்கும்போது எடுத்துக் கொள்ளும் அதிகாரப் பூர்வமான மெய் யுறுதியுரை; oath (of office). *'ஆளுநர் பொறுப்பை ஏற்கும் முன் அம்மா நிலத்தின் உயர்முறைமன்றத் தலைமை நடுவர் முன்னிலையில் உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும்'.* 4. வாய் மொழியாகத் தரும் சொல்லுறுதி; assurance, promise. *'தேர்தல் நேரத்தில் பல உறுதி மொழிகள் அள்ளி வழங்கப்படும்'.*

**உறுதுணை** பெ. (n.) உற்ற துணை, துணைவலி (பக்கபலம்); இன்றியமையாப் பெரும் உதவி; unflinching support. *'எல்லா வகையிலும் என் பெற்றோர் எனக்கு உறுதுணையாக உள்ளனர்'.*

**உறுப்பினர்** பெ. (n.) வரையறுக்கப்பட்ட அமைப்பை அல்லது குழுவைச் சார்ந்தவர்; member (of an organization).

**உறுப்பு** பெ. (n.) *1.* தனக்கென தனித்த செயல்பாட்டைக் கொண்டு, உடலின் ஒரு பகுதியாக அமைந் திருப்பது; part of the body, limb. *'உடற்பயிற்சி மூலம் உடல் உறுப்புகள் வலிமை பெறும்'.* 2. ஓர் அமைப்பின் ஒரு பகுதி; part of an organization. *'அணிசேரா நாடுகளின் அமைப்பில் இந்தியா உறுப்பு நாடு'.* 3. ஒன்றின் கூறு; feature. *'யாப் பிலக்கணத்தில் அசை ஓர் உறுப்பு'.* 4. கணிதச் சமன்பாட்டில் அல்லது ஒரு தொகுப்பில் உள்ள பகுதிகளில் ஒன்று; element (4,5,6,7,8) என்ற கணத்தில் ஐந்து உறுப்புகள் உள்ளன.

**உறுமல்** பெ. (n.) சில விலங்குகள் உறுமும் ஒலி; (of tiger) roar, (of dog, monkey, etc.,) growl, (of pig) grunt. *'புலியின் உறுமல் கேட்டு அஞ்சினான்'.*

**உறுமிமேளம்** பெ. (n.) வளைந்த முன்

பகுதியைக் கொண்ட, கோலால் பக்கப் பகுதியில் அழுத்தி இழுக்கும் போது உறுமல் போன்ற ஒலியை எழுப்பும், இரண்டு மேளங்களை இணையாக வைத்தது போல் இருக்கும் தோல் கருவி; kind of two-headed drum which when played with a curved stick produces a sound similar to a growl.

**உறுமுதல்** வி. (v.) *1. புலி, அரிமா போன்ற விலங்குகள் சினம், வெறி போன்ற வற்றை வெளிப்படுத்தும் வகையில் 'உர்உர்' என்ற ஒலியை எழுப்புதல்;* roaring. *2. எரிமலை குமுறுதல்;* rumbling of volcano. *3. சினத்தால் ஒருவர் சீறிப் பேசுதல்;* (of human beings) growl. *'அவன் அப்படியா செய்தான் என்று அப்பா ஊறுமிக் கொண்டிருந்தார்'.*

**உறை** பெ. (n.) *1. கடிதம் முதலியவற்றை வைக்கப் பயன்படுத்தும் தாளால் ஆன கூடு; பொருள்களை மூடு வதற்குப் பயன்படுத்தும் துணி அல்லது துணி போன்ற பொருளால் ஆன மூடி;* envelope (for letters etc.,) cover, case (made of cloth or material similar to cloth). *'விண்ணப்பத்தை உறையிலிட்டு அஞ்சலில் அனுப் பினான்'. 2. வாள், கத்தி ஆகிய வற்றைச் செருகி வைக்கும் தோலால் ஆன மூடி;* scabbard. *'உறையிலிட்ட கத்தி'. 3. மண் சரிந்து விடாமல் இருக்கக் கிணற்றின் உள்ளே ஒன்றின் மீது ஒன்றாக வைக்கும் பைஞ்சுதை (சிமெண்ட்) வளையம்;* cement collar in a wall. *'உறை இறக்கப் பட்ட கிணறு'. 4. (தவசங்களைச் சேமிக்கப் பயன் படும்) ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கிப் பத்தாயமாகச் செய்யப் படும் செவ்வக வடிவ மர அமைப்பு;* rectangular wooden frame (set one upon another to make a large container for graines).

**உறை ஊற்றுதல்** வி. (v.) *காய்ச்சி ஆற வைத்த பாலைத் தயிராக்குவதற்காகச் சிறிது புளிப்பு (பெரும்பாலும் மோர்த்துளிகள்) சேர்த்தல்; பிரை குத்துதல்;* add a few drops of buttermilk to make milk curdle.

**உறைகுத்துதல்** வி. (v.) *உறை ஊற்றுதல் பார்க்க.*

**உறைகுளிர்** பெ. (n.) *நீர் உறைந்து பனிக்கட்டியாக மாறும் வெப்ப நிலை;* freezing point.

**உறைத்தல்** வி. (v.) *1. காரமாக இருத்தல்;* be pungent or hot. *'குழம்பு உறைக் கிறது'. 2. சூடு, குளிர், அடி, உதை முதலியவை உணரப்படுதல்;* (of heat, chillness, pain of being beaten or scolded, etc.,) be felt sharply. *'வெயில் சுள் ளென்று உறைக்கிறது'. 3. கருத்து, பேச்சின் கடுமை முதலியவை மனத்தில் உணரும்படி இருத்தல்; உறுத்துதல்;* (of idea, harshness of speech, etc.,) strike, occur.

**உறைதல்** வி. (v.) *1. கெட்டியாதல்;* (of water) freeze; (of oil etc.,) become solid; harden (of blood) clot. *'குளிரால் எண்ணெய் உறைந்துவிட்டது'. 2. அச்சத்தால் இயங்க முடியாமல் விறைப்பாதல்;* freeze (with fear). *'திடீரென்று கூக்குரல் கேட்டதால் அச்சத்தில் உறைந்து விட்டான்'. 3. பிரை ஊற்றிய பால் தயிராகக் கெட்டிப்படுதல்;* curdle. *'தயிர் நன்றாக உறையவில்லை'. 4. குளிரால் விறைத்தல்;* become stiff (due to cold); freeze. *'குளிரில் நின்றால் உறைந்து விடுவாய்'. 5. தங்குதல்; வாழ்தல்;* dwell. *'இறைவன் நம் உள்ளத்துள் உறைகிறான்'.*

**உறைநிலை** பெ. (n.) *நீர்மப் பொருள் திட நிலைக்கு மாறத் தொடங்கும் வெப்பநிலை;* freezing or solidifying point. *'நீரின் உறைநிலை* $0^0$ செல்சியசு

ஆகும்.

**உறைப்பு** பெ. (n.) *காரச்சுவை;* taste of pungency; sharp; spicy taste. *'குழம்பில் உறைப்பு அதிகம்'.*

**உறைபனி** பெ. (n.) *நிலத்தின் மேல் நீர் உறைந்து காணப்படும் நிலை;* frost.

**உறைமோர்** பெ. (n.) *பாலைத் தயிராக்கு வதற்காக ஊற்றப்படும் மோர்;பிரை மோர்;* buttermilk, used as a curdling agent.

**உறையுள்** பெ. (n.) *தங்குமிடம்;* boarding.

**உறைவிடப் பள்ளி** பெ. (n.) *மாணவர்கள் கட்டாயமாக விடுதியில் தங்கிக் கல்வி பயிலும் முறையில் நடத்தப் படும் பள்ளி;* residential school.

**உறைவிடம்** பெ. (n.) *உயிர்கள் வாழ் வதற்கு ஏற்ற இடம்;* habitat; abode; place of living. *'உணவு, உடை, உறைவிடம் இவை மூன்றும் அடிப்படைத் தேவைகள்'.*

**உன்னிப்பு** பெ. (n.) *1. கூர்மையான கவனம்;* watch fulness; keenness. *'உன்னிப்பான நோக்குடையவர்'.* 2. *மிகுந்த கவனம்;* serious. *'மாணவர் களின் நடவடிக் கையை ஆசிரியர்கள் உன்னிப்பாகக் கவனிப்பார்கள்'.*

**உன்னுதல்** வி. (v.) *எம்புதல்; உந்துதல்;* propel. *'உப்புமூட்டை தூக்கிய வனிடம் உன்னித்தூக்கச்சொன்னான்'.*

## ஊ

**ஊக்க ஊதியம்** பெ. (n.) *பெரும்பாலும் தொழிற்சாலைகளில், உருவாக் கத்தைப் பெருக்கும் பொருட்டுத் தொழிலாளர்களுக்கு ஊதியத்துக்கு மேல் அதிகமாகத் தரப்படும் தொகை;* incentive.

**ஊக்கச் சலுகை** பெ. (n.) *தொழில் வளர்ச்சியில் பின் தங்கிய பகுதிகளில் தொழில் துவங்குபவர்களுக்கு ஊக்கம் தரும் வகையில் வரி முதலிய வற்றில் அரசு அளிக்கும் சலுகை;* concessions (given by the government to entrepreneurs) as incentives.

**ஊக்கத்தொகை** பெ. (n.) *செய்து முடித்த அல்லது செய்து வரும் பணி, செயல், சேவை போன்றவற்றிற்கு ஊக்கம் தரும் வகையில் கொடுக்கப்படும் தொகை;* cash award; incentive.

**ஊக்கம்** பெ. (n.) *1. ஒரு செயலைச் செய்வதற்குப் பிறர் தரும் உள வெழுச்சித் (உற்சாகம்) தூண்டுதல்; துணைத்தரவு;* encouragement; support; incentive. *'நண்பர்களின் ஊக்கம் என் வெற்றிக்கு உதவியது'.* 2. *உந்து தல்;* motivation;drive. *'ஊக்கத்தோடு உழைக்கும் உழவர்'.*

**ஊக்க மருந்து** பெ. (n.) *விளையாட்டுப் போட்டிகளில் திறமையை அதிகப் படுத்திக்கொள்ள வீரர்கள் விதி முறைக்கு முரணாகப் பயன்படுத்தும் ஒருவகை மருந்து;* drug used unlawfully by sports persons to improve their performance during competitions; dope.

**ஊக்குவித்தல்** வி. (v.) *ஒரு செயலைத் தொடங்குமாறும் அல்லது அச் செயலைத் தொடரும் வகையிலும் உளவெழுச்சி (உற்சாகம்) தருதல்;* encourage; motivate. *'என் பெற்றோரின் பாராட்டுதான் என்னை வெற்றியை நோக்கி ஊக்குவித்தது'.*

**ஊக்குவிப்பு** பெ. (n.) *ஊக்கம் தருவதாக அமைவது;* boost; encouragement.

**ஊசல்** பெ. (n.) *1. பொருளின் அலைவு நேரம் அதன் நீளத்தைப் பொறுத்து மாறுபடும் என்பதை விளக்கு வதற்காக, முறுக்கற்ற மெல்லிய நூலில் மாழைக்குண்டு கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கும் அமைப்பு;* pendulum. 2. *சமைத்த உணவுப்பொருள் கெட்டுப் போயி ருக்கும் நிலை; ஊசிப்போனது;* cooked

food that has become stale or gone off. *'குழம்பு ஊசல் வாடை அடிக்கிறது'.*

**ஊசலாட்டம்** பெ. (n.) *முடிவெடுக்க முடியாத தடுமாற்றம்;* vacillation. *'சொந்தத் தொழில் தொடங்குவதா? வேண்டாமா? என்ற ஊசலாட்டத்தில் இருக்கிறார்'.*

**ஊசலாடுதல்** வி. (v.) *1. முன்னும் பின்னுமாக அசைதல்;* move from side to side; sway. *'காற்றில் மலர்க்கொடிகள் ஊசலாடின'. 2. முடிவெடுக்க முடியாமல் தடுமாறுதல்; அலைபாய்தல்;* (of a person or of one's mind) waver; vacillate. *'ஊருக்குப் போவதா? வேண்டாமா? என மனம் ஊசலாடினான்'. 3. உயிர் பிரியும் நிலையில் இருத்தல்; பிழைத்தலுக்கும் சாதலுக்கும் இடையே இருத்தல்;* (of life) be in a critical or precarious condition. *'தாத்தாவின் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கிறது'. 4. மனத்தில் ஐயம் முதலியவை மாறிமாறித் தோன்றவும் மறையவும் செய்தல்;* (of doubt, feeling of guilt, etc.,) flicker.

**ஊசி** பெ. (n.) *1. நூல் கோத்துத் தைக்கப் பயன்படும் முள் போல் கூரிய முனையும் சிறுதுளையும் உடைய, மெல்லிய சிறு கம்பி;* needle (for sewing). *'தையல் ஊசி'. 2. உடம்பில் குத்தி மருந்து செலுத்தப் பயன்படும் கருவி;* syringe with needle. *'ஒருவருக்குச் செலுத்திய ஊசியை மற்றவருக்குச் செலுத்தக் கூடாது'. 3. ஊசியின் மூலம் செலுத்தப்படும் மருந்து;* drug given through injection. *'மருத்துவர் வாரத்துக்கு ஒரு முறை ஊசிப் போட்டுக் கொள்ள வேண்டும் என்றார்'.*

**ஊசிக்காது** பெ. (n.) *1. தைக்கும் ஊசியிலுள்ள துளை;* eye of the needle. *2. சிறு ஒலியையும் கேட்கும் திறன் படைத்த காது;* very sharp ear. *'அவனுக்கு ஊசிக்காது, அவனிருக்கும் போது எதையும் பேசாதே'.*

**ஊசித்தட்டான்** பெ. (n.) *ஊசி போன்ற மெல்லிய உடலைக் கொண்ட சிறிய தட்டான்;* damselfly.

**ஊசித்தொண்டை** பெ. (n.) *1. காதைத் துளைக்கும் குரல்;* shrill or high pitched voice. *'அவனுக்கு ஊசித் தொண்டை, பேசினால் காது வலிக்கும்'. 2. மிகவும் மெதுவாகவும் கொஞ்சம் கொஞ்சமாகவும் சாப்பிடுபவரைக் குறிக்கும் சொல்;* one who takes food slowly and in small morsels.

**ஊசிபோடுதல்** வி. (v.) *ஊசியால் குத்தி மருந்தை உட்செலுத்துதல்;* inject; give an injection.

**ஊசியிலைக்காடு** பெ. (n.) *ஊசியிலை மரங்களைக் கொண்ட காடு;* coniferous forest.

**ஊசியிலை மரம்** பெ. (n.) *கூம்பு வடிவக் காய்களையும் ஊசி போன்ற இலைகளையும் கொண்ட, இலையுதிர் காலத்திலும் இலைகளை உதிர்க்காத ஒருவகை மரம்;* conifer.

**ஊசிவெடி** பெ. (n.) *குறைந்த ஒலியை எழுப்பக்கூடிய குச்சி போன்ற வெடி வகை;* small slender cracker producing a sharp, shrill popping noise.

**ஊசுதல்** வி. (v.) *சமைத்த உணவு கெட்டுப்போதல்;* (of cooked food) become stale; go off; get rotten. *'வெஞ்சணம் ஊசிவிட்டது'.*

**ஊஞ்சல்** பெ. (n.) *உட்கார்ந்து காலால் உந்தி முன்னும் பின்னும் ஆடும் வகையில் தொங்கவிடப்பட்டிருக்கும் அமைப்பு;* swing.

**ஊஞ்சலாடுதல்** வி. (v.) *முன்னும் பின்னும் அசைதல்;* move to and fro; swing. *'கிளையில் பழங்கள் ஊஞ்சலாடின'.*

**ஊட்டச்சத்து** பெ. (n.) *உடல்நலம் அல்லது*

*பயிர் வளத்திற்குத் தேவையான ஊட்டப் (சத்துப்) பொருள்;* nutrition; nourishment. *'குழந்தைக்கு ஊட்டச் சத்து நிறைந்த உணவுகளையே கொடுக்க வேண்டும்'.*

**ஊட்டம்** பெ. (n.) *1. உடல் வளர்ச்சிக்கு வேண்டிய ஊட்டம்;* nourishment. *'தாய்ப்பால் குழந்தைக்கு ஊட்டம் நிறைந்த உணவாகும்'. 2. ஊட்ட முள்ள உணவை உண்பதால் ஏற்படும் செழுமை;* nourishment; strength. *'உடம்பில் ஊட்டத்தின் மெருகு தெரிந்தது'. 3. பயிரின் வளம்; செழிப்பு;* (of crops) rich; healthy. *'பயிர் ஊட்டமாக வளர்ந்திருக்கிறது'.*

**ஊட்டி** பெ. (n.) *குரல்வளை; கண்டம்;* throat; Adam's apple. *'ஊட்டியை அறுத்து விடுவேன் என்று மிரட்டினான்'.*

**ஊட்டுதல்** வி. (v.) *1. உணவை வாயில் கொடுத்தல்; குழந்தைக்குத் தாய்ப் பால் கொடுத்தல்;* feed (esp. a baby) by hand or with a spoon; feed (a child or a sick person) breastfeed (a child) . *'பாலூட்டும் அன்னை தெய்வத்துக்குச் சமம்'. 2. நம்பிக்கை, மகிழ்ச்சி, அச்சம் ஆகியவற்றை ஒருவர் மனத்தில் ஏற்படுத்துதல்; தோற்றுவித்தல்;* evoke (hope, happiness, fear, in someone). *'பேரன் பிறந்த செய்தி என் அம்மா வுக்கு மகிழ்ச்சியை ஊட்டியது'. 3. கல்வி கற்பித்தல்;* impart (knowledge). *'அறிவூட்டிய ஆசிரியர் வழிபாட்டிற் குரியவர்'. 4. கண்ணுக்கு மை தீட்டுதல்;* apply (collyrium to the eyes). *'மையூட்டிய விழிகள்'.*

**ஊடகம்** பெ. (n.) *1. ஒலி, ஒளி முதலிய வற்றை ஊடுருவிச் செல்ல இட மளிக்கும் (காற்று, நீர், கண்ணாடி போன்ற) பொருள்;* medium (of any substance that allows light, to pass through). *2. கருத்து முதலியவற்றை வெளிப் படுத்த உதவுவது;* medium (of communication). *'இணையதளம் ஆற்றல்மிக்க ஊடகம்'. 3. ஓர் உயிரி அல்லது இழைமம் (திசு) வளர் வதற்கான ஆற்றல்களைக் கொண் டிருக்கும் நீர்மம் அல்லது திடப் பொருள்;* medium (for culture).

**ஊடல்** பெ. (n.) *காதலர்களிடையோ அல்லது கணவன் மனைவிக்குள்ளோ ஏற்படும் சிறு பிணக்கு;* lover's tiff.

**ஊடாக** இ.சொ. (int.) *ஊடே பார்க்க.*

**ஊடாட்டம்** பெ. (n.) *நெருக்கமான உறவு; பரிமாற்றம்;* interaction. *'மொழியியல் கோட்பாட்டு வளர்ச்சிக்கும் அகராதி யியலுக்குமான ஊடாட்டம் புதிய பரிமாணங்களை உருவாக்கியது'.*

**ஊடாடுதல்** வி. (v.) *1. நெருங்கி உறவாடுதல்;* interact. *'அயல்மொழிக் காரர்களுடன் ஊடாடும்போது அவர்களின் மொழியும் பண்பாடும் நமக்கு வந்துவிடும்'. 2. ஊடுருவுதல்; பரவியிருத்தல்;* pervade.

**ஊடு** பெ. (n.) *ஊடை பார்க்க.*

**ஊடுகதிர்** பெ. (n.) *உடலின் உள்ளுறுப்பு களை அல்லது பெட்டி போன்ற வற்றுக்குள் இருக்கும் பொருட் களைப் படம் பிடிக்கப் பயன்படும் ஒளிக்கதிர்;* x-ray. *'ஊடுகதிர் ஆய்வு செய்ய வேண்டும் என்று மருத்துவர் கூறினார்'.*

**ஊடுசுவர்** பெ. (n.) *அறையைப் பிரிக்கும் குறுக்குச் சுவர் அல்லது இடைச் சுவர்;* partition.

**ஊடுதல்** வி. (v.) *காதலனிடம் காதலி அல்லது கணவனிடம் மனைவி பொய்ச்சினங் கொள்ளுதல்; பிணங் குதல்;* (of lovers or husband and wife) sulk.

**ஊடுபயிர்** பெ. (n.) *ஒரு பயிர் விளையும்*

வரிசைகளுக்கு இடையே சாகுபடி செய்யப்படும் வேறொரு குறுகிய காலப் பயிர்; short term crop farmed together with the long term crop. *'கடலைக்கு இடையே ஊடு பயிராக உளுந்து பயிரிட்டார்கள்'*.

**ஊடுருவல்** பெ. (n.) *ஊடுருவுதல் என்னும் வினையின் பெயர்ச்சொல்;* noun form of the verb. *''ஊடுருவுதல்'*.

**ஊடுருவுதல்** வி. (v.) *1. ஒரு பரப்பின் வழியே உட்செலுத்துதல்; துளைத்துக் கொண்டு போதல்;* pierce through; penetrate. *'வேர்கள் நிலத்தை ஊடுருவிச் செல்கின்றன'*. 2. *ஒலி, ஒளி, மின்சாரம் முதலியன உட்புகுதல்/நீர் உட்புகுந்து பரவுதல் ;* (of light, electricity) pass through / (of water) seep. *'கண்ணாடி வழியே கதிரொளி ஊடுருவிப் பாய்ந்தது'*. *3. (நாட்டின் எல்லைக்குள், ஒரு அமைப்புக்குள்) கேடு விளைவிக்கும் நோக்கத்தோடு இசைவின்றி நுழைதல்;* infiltrate. *'எல்லைப் பகுதியில் ஊடுருவ முயன்றவர்களைப் படைவீரர்கள் சுட்டுக் கொன்றனர்'*. *4. (மொழி, இலக்கியம், கலை முதலியவற்றில் பிறருடைய அல்லது பிறவற்றின் கொள்கை, கருத்து முதலியன) பரவிக் காணப்படுதல்; விரவி இருத்தல்;* (of ideas, doctrines) pervade. *'மொழியில் பண்பாட்டு அடையாளங்கள் ஊடுருவியிருக் கின்றன'*. *5. உட்புகுந்து கடந்து செல்லுதல்;* pass through. *'மூடு பனிக்குள் ஊர்தியின் விளக்கொளி ஊடுருவிச் சென்றது'*.

**ஊடே** இ.சொ. (int.) *'வழியே', 'இடையில்' என்ற பொருளில் பயன்படும் இடைச்சொல்;* particle used in the sense of 'through'; in between. *'துளைகளினூடே கதிரொளி பாய்ந்தது'*.

**ஊடை** பெ. (n.) *தறியிலோ துணியிலோ குறுக்குவாட்டில் செல்லும் இழை;* weft or filling.

**ஊத்தப்பம்** பெ. (n.) *தடித்த தோசை;* kind of thick dosai.

**ஊத்தை** பெ. (n.) *நாற்றமடிக்கும் வியர்வை; அழுக்கு போன்றவை; குறிப்பாக நாற்றமடிக்கும் பல்லின் அழுக்கு;* (generally) foul smelling (body) waste; (esp.) plaque of unclean teeth. *'ஊத்தைப் பல்'*.

**ஊதல்** பெ. (n.) *1. வாயில் வைத்து ஊதினால் சீழ்க்கை போன்ற ஒலியை எழுப்பும் பொருள்;* whistle. *'குழந்தை ஊதல் ஊதி மகிழ்ந்தது'*. *2. குளிர் காற்று; வாடைக் காற்று;* cold wind. *'மார்கழித் திங்கள் ஊதல் தாங்க முடியவில்லை'*.

**ஊதல் போடுதல்** வி. (v.) *காய்களைப் புகையில் பழுக்கச் செய்தல்;* induce ripening of fruits by smoke.

**ஊதாங்குழல்** பெ. (n.) *1. அடுப்பில் நெருப்பு எரிவதற்காக வாயினால் காற்றை ஊதப் பயன்படும் மாழையால் (உலோகம்) ஆன சிறுகுழாய்;* blow - pipe, used to kindle fire. 2. *குழந்தைகளுக்கான விளையாட்டுப் புல்லாங்குழல்;* toy flute.

**ஊதித்தள்ளுதல்** வி. (v.) *கடினம் என்று கருதுவதை எளிமையாகச் செய்தல்;* do something with ease. *'இந்த வேலையையெல்லாம் அவன் ஊதித் தள்ளி விடுவான்'*.

**ஊதிப் பெரிதுபடுத்துதல்** வி. (v.) *ஒன்றுமில்லாத நிகழ்வை வலிந்து பெரிய சிக்கலாக்குதல்;* exaggerate; cause to be inflated *'சின்ன பையன் பேசியதை ஊதிப் பெரிது படுத்தாதே'*.

**ஊதியக்குழு** பெ. (n.) *குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு ஒரு முறை அரசு ஊழியர்களின் ஊதிய அமைப்புகளைத் திருத்தி அமைப்பது குறித்து ஆய்வு*

செய்து பரிந்துரைக்க அரசால் உருவாக்கப்படும் வல்லுநர் குழு; committee of experts appointed by the government the recommending revision pay scales for employees (in India) Pay commission.

**ஊதியம்** பெ. (n.) *1.* பணிக்காகத் தரப்படும் சம்பளம்; pay; salary. *'அரசு ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு கிடைத்துள்ளது'*. 2. திரைப்படம், நாடகம், இசைத்துறை போன்ற வற்றில் ஒருவர் தனது பங்களிப் புக்காக அல்லது உழைப்புக்காகப் பெறும் தொகை / விளையாட்டு வீரர்களுக்குக் குறிப்பிட்ட அடிப் படையில் தரப்படும் சம்பளம்; fee.

**ஊதிய விகிதம்** பெ. (n.) பணிக்கான அடிப்படைச் சம்பளம் மற்றும் ஒவ்வொரு ஆண்டுக்கான ஊதிய உயர்வு ஆகியவை எவ்வாறு அமைந்திருக்கும் என்ற ஏற்பாடு; scale of pay. *'அரசு ஊழியர்களுக்கான ஊதிய விகிதங்களை ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மாற்றி அமைப்பது வழக்கம்'*.

**ஊது உலை** பெ. (n.) இரும்புத் தாது, கரி, சுண்ணாம்புக்கல் ஆகியவை நிறைந் திருக்கும் கொள்கலனில் கடும் வெப்பம் நிறைந்த காற்றைச் செலுத்துவதன் மூலம் (அச்சில் வார்க்கத் தேவையான) இரும்புக் குழம்பை உருவாக்கும் அமைப்பு; blast furnace.

**ஊதுகாமாலை** பெ. (n.) உடலை வீங்கச் செய்யும் ஒருவகை மஞ்சள் காமாலை நோய்; jaundice with dropsy.

**ஊதுகுழல்** பெ. (n.) *1.* ஊதாங்குழல் பார்க்க. 2. ஒரு செய்தியைப் பலர் அறியும்படி பரப்புபவர்; person given to trumpeting. *'அவளிடம் எதையும் சொல்லாதே அவள் சரியான ஊது குழல்'*.

**ஊதுகொம்பு** பெ. (n.) வாயில் வைத்து ஊதுகிற பகுதி குறுகியும், மறுமுனை அகன்றும் உள்ள, நீண்ட, ஒலி எழுப்பும் குழல் வடிவக் கருவி; horn; bugle. *'கோவில் திருவிழாவில் ஊதுகொம்பு ஊதினார்கள்'*.

**ஊதுதல்** வி. (v.) *1.* வாயைக் குவித்துக் காற்றை வெளியேற்றுதல்; blow (air). *'அடுப்பை ஊதிஊதி வாய் வலிக் கிறது'*. 2. காற்றை ஒன்றினுள் செலுத்துதல்; நிரப்புதல்; fill in (air). *'ஊதாம்பி (பலூன்) ஊதிக்கொடு'*. 3. உடல் அல்லது உடலு றுப்புப் பெருத்தல்; (of body or body part) swell; bloat. *'ஆள் அடையாளம் தெரியாதபடி ஊதியிருந்தான்'*. 4. ஒலி யெழுப்புதல்; (of train) whistle; (of siren, conch) blow. *'ஆலையில் சங்கு ஊதும் ஒலி கேட்டது'*. 5. காற்றிசைக் கருவிகளை வாசித்தல்; play a wind instrument. *'புல்லாங்குழல் ஊதி னான்'*. 6. புகைத்தல்; smoke. *'பீடியை ஊதித் தள்ளினான்'*. 7. ஒருவரைப் பற்றி மற்றொருவரிடம் கமுக்கமாகக் குறை கூறுதல்; speak ill of someone in their absence. *'பணியாளர்களைப் பற்றி மேலதிகாரியிடம் யாரோ ஊதி ஊதி அவர் மனத்தை மாற்றியிருக் கிறார்கள்'*.

**ஊதுபத்தி** பெ. (n.) ஊதுவத்தி பார்க்க.

**ஊதுவத்தி** பெ. (n.) நறுமணத்துக்காக எரிக்கும், மணப்பொருள் பூசப்பட்ட குச்சி; incense stick, joss stick.

**ஊமத்தை** பெ. (n.) முட்கள் நிறைந்த உருண்டையான காய்களையும், குழல் வடிவப் பூக்களையும் உடைய ஒருவகைச் செடி; thorn apple, datura plant.

**ஊமை** பெ. (n.) பெரும்பாலும் பிறவி யிலேயே பேசும் திறன் இல்லாதவர்; dump person.

**ஊமைக் காயம்** பெ. (n.) *வெளியில் தெரியாத காயம்; உள்காயம்;* confusion.

**ஊமைக்குசும்பு** பெ. (n.) *கமுக்கமாகச் செய்யும் குறும்பு;* sly prank.

**ஊமைக்கோட்டான்** பெ. (n.) *செயல் நடந்ததை அறிந்திருந்தும், அதைப் பற்றி எதுவும் சொல்லாமல் இருப்பவர்;* one who keeps mum when something done stealthily comes to light. *'அவன் சரியான ஊமைக் கோட் டான், அவனிடம் எந்தச் செய்தியை யும் வாங்க முடியாது'.*

**ஊமைப்படம்** பெ. (n.) *ஒலியற்ற திரைப் படம்;* silent film.

**ஊமையடி** பெ. (n.) *ஊமைக்காயம் பார்க்க.*

**ஊமை வெயில்** பெ. (n.) *சுளீரென்று இல்லாமல், ஆனால் வெப்பத்தை உணரக்கூடிய மெதுமையான வெயில்;* sun that is dull yet hot.

**ஊர்** பெ. (n.) *1. மக்கள் வாழ்கிற, எல்லைகள் வரையறுக்கப்பட்ட இடம்;* village; town; city; place. *2. ஊரில் வாழ்கிற மக்கள்;* people of the town; community. *'ஊரோடு ஒத்துவாழ்'. 3. ஊரில் வாழும் மக்க ளுக்குப் பொதுவானது;* something, belongs to or owned by the local community. *'ஊர்க் கிணறு, 4. ஒருவர் பிறந்து வாழ்ந்த இடம்;* hometown; native place. *'உங்களுக்கு எந்த ஊர்?'.*

**ஊர்க்கட்டுப்பாடு** பெ. (n.) *ஊராட்சி அல்லது ஊர் மக்கள் ஒன்று கூடி முடிவெடுத்திருக்கும் தடை;* social boycott or prohibition.

**ஊர்க்கதை** பெ. (n.) *மற்றவர்களின் சொந்த வாழ்க்கை அல்லது ஊர் நடப்புகள் பற்றிய தேவையற்ற பேச்சு;* gossip. *'ஊர்க்கதையெல்லாம் பேசாதே; உருப்படியான வேலை யிருந்தால் பார்'.*

**ஊர்க்காவல் படை** பெ. (n.) *காவல் துறையினருக்கு உதவியாகப் பாது காப்புப் பணியில் ஈடுபடப் பயிற்சி அளிக்கப்பட்ட, உள்ளூர்க்காரர் களைக் கொண்டு அமைக்கப்படும் அணி;* voluntry force to assist the local police in maintaining law and order (in India) homeguards. *'தேர்தல் பாது காப்புப் பணியில் ஊர்க்காவல் படையினரும் ஈடுபட்டுள்ளனர்'.*

**ஊர்க்குருவி** பெ. (n.) *1. சிட்டுக்குருவி;* house sparrow. *2. ஊர் சுற்றுபவன்;* gadabokt. *'அவன் ஓர் ஊர்க் குருவி'.*

**ஊர்காலி மாடு** பெ. (n.) *சிற்றூருக்குப் (கிராமத்திற்குப்) பொதுவாக ஒரு வருடைய பொறுப்பில் மேய்ச்சலுக்கு அனுப்பப்படும் மாடு;* cattle let incharge of a person appointed by the village for grazing.

**ஊர்சுற்றுதல்** வி. (v.) *அலைந்து திரிந்து வீணாகக் காலம் கழித்தல்;* go gallivanting; gad about. *'வெட்டியாக ஊர்சுற்றாமல் பிழைப்பைப் பார்'.*

**ஊர்தல்** வி. (v.) *1. ஒரு பரப்பை ஒட்டியவாறே நகர்தல்;* (of certain creatures) crawl; creep. *'ஊர்ந்து செல்லும் உயிரிகளில் பாம்பும் ஒன்று'. 2. மெல்ல மெல்லச் செல்லு தல்;* move slowly. *'போக்குவரத்து நெரிசலில் ஊர்திகள் ஊர்ந்து சென்றன'. 3. அரிப்பு உண்டாதல்;* have an itching sensation. *'உடம்பு முழுவதும் கம்பளிப்பூச்சி கடித்தது போல் ஊர்கிறது'.*

**ஊர்தி** பெ. (n.) *1. போக்குவரத்திற்குப் பயன்படும் உந்து;* vehicle for transport. *'போக்குவரத்து நெரிசலில் ஊர்திகள் மெதுவாகச் சென்றன'. 2. (தொன் மத்தில்) கடவுள், வானவர் ஆகியோர் ஏறி அமர்ந்து செல்வதாகச் சொல்லப்*

படும் பறவை அல்லது விலங்கு; bird or animal used as a mount by gods or celestial beings. *'மயில் முருகனின் ஊர்தி'.*

**ஊர்ப்பஞ்சாயத்து** பெ. (n.) *ஊருக்குப் பொதுவான செய்திகளைப் பற்றி பேசி முடிவெடுக்கவும், தனியார் கொண்டு வரும் சிக்கல்களுக்குத் தீர்வு காணவும் ஊர்ப் பெரியவர் களை வைத்து நடத்தும் கூட்டம்;* non official assembly of villagers to discuss common issues and also to decide on private disputes.

**ஊர்ப்பட்ட** பெ.எ. (adj.) *அளவுக்கு அதிகமான; ஏகப்பட்ட;* more than usual; more than manageable. *'ஊர்ப் பட்ட வேலை இருக்கிறது'.*

**ஊர்ப்புறம்** பெ. (n.) *சிற்றூர்ப்புறம் (கிராமப்புறம்);* rural area; country side. *'ஊர்ப்புறங்களில் தைப்பொங்கல் விழா சிறப்பாகக் கொண்டாடப் படும்'.*

**ஊர்மேய்தல்** வி. (v.) *1. கட்டுப்பாடு இல்லாமல் ஊர் சுற்றுதல்;* gad about. *'எங்கே ஊர்மேய்ந்துவிட்டு இந்த நேரத்துக்கு வீட்டுக்கு வருகிறாய்?'.* 2. பலரிடம் தவறான உறவு கொள் ளுதல்; have sex with many.

**ஊர்வம்பு** பெ. (n.) ஒருவருக்குத் தொடர் *பில்லாத அல்லது தேவையில்லாத சிக்கல் (பிரச்சினை); வீண்வம்பு;* affairs not one's own; gossip.

**ஊர்வலம்** பெ. (n.) *1. குறிப்பிட்ட நோக்கத்துக்காகத் தெருவில் அணி அணியாகச் செல்லுதல்;* procession; rally. *'விலைவாசி உயர்வைக் கண் டித்துப் பொதுமக்கள் ஊர்வலம் நடத்தினர்'.* 2. *விழாவில் அல்லது கொண்டாட்டத்தில் வீதிவலம் வருதல்;* procession in festivals or celebrations. *'குதிரையில் ஊர்வலமாக அழைத்துவரப்பட்டார்'.*



**ஊர்வன** பெ. (n.) *செதில்கள் போன்ற வற்றால் மூடப்பட்ட தோலைக் கொண்ட, கால்களால் அல்லது உடலால் ஊர்ந்து செல்கிற, முட்டை யிட்டுக் குஞ்சு பொரிக்கும் முது கெலும்புள்ள உயிரினம்;* class of reptiles.

**ஊர்வாய்** பெ. (n.) *பிறரின் குற்றம் குறை காணும் ஊராரின் பேச்சு;* gassip; scandal; accusation. *'உலைவாயை மூடலாம் ஊர்வாயை மூட முடியுமா'.*

**ஊர்விலக்கம்** பெ. (n.) *தண்டனையாக ஊரிலிருந்து ஒருவரை விலக்கி வைத்தல்;* social boycott.

**ஊரக** பெ.எ. (adj.) *சிற்றூர்ப்புற;* rural. *'ஊரக வளர்ச்சி'.*

**ஊரடங்கு உத்தரவு** பெ. (n.) *சட்டம், ஒழுங்கு குலையக்கூடிய நிலை மைகள் காரணமாக, தேவை யில்லாமல் மக்கள் பொது இடங்களில் நடமாடக் கூடாது என்று மாவட்ட ஆட்சியர், காவல்துறை ஆணையர் போன்றோர் பிறப்பிக்கும் ஆணை;* curfew.

**ஊரல்** பெ. (n.) *அரிப்பு; உடலில் சொறியத் தூண்டும் உணர்வு;* itching sensation. *'வண்டு கடித்த இடத்தில் ஊரல் எடுக்கிறது'.*

**ஊராட்சி** பெ. (n.) *சிற்றூர்க்கான உள்ளாட்சி அமைப்பு;* machinery for local self - government at the village level; (in India) village panchayat.

**ஊரார்** பெ. (n.) *1. ஊரில் வாழும் மக்கள்;* inhabitants of a village. 2. *ஒரு செயலில் நேரடியாகத் தொடர்பில்லாதவர்கள்;* persons who are not directly connected with something. *'ஊரார் பேச்சைக் கேட்டு ஆடாதே'.*

**ஊருக்கு முன்னால்** வி.எ. (adv.) தேவையில்லாமல் மற்ற அனைவரையும் முந்திக்கொண்டு; (as through something is) the very first thing to be done (implying unseemly hurry). *'ஊருக்கு முன்னால் மண்டபத்துக்கு போய் என்ன செய்யப்போகிறாய்?'.*

**ஊருணி** பெ. (n.) பெரும்பாலும் சிற்றூர்ப் புறத்திலுள்ள குடிநீருக்கான குளம்; tank; pond (in a village maintained as a source of drinking water).

**ஊரைக் கூட்டுதல்** வி. (v.) கூச்சல் போட்டு, பெருங்கூட்டம் கூடுமாறு செய்தல்; collect an unwanted crowd. *'இப்போது என்ன நடந்துவிட்டது என்று ஊரைக் கூட்டுகிறாய்?'.*

**ஊரைவிற்றுவிடுதல்** வி. (v.) பார்ப்பதற்கு ஏதுமறியாத பேதைபோல் தோன்றினாலும் தகுந்த சமயத்தில், பிறர் வியக்கும் வகையில் தனக்குத் தேவையான ஒன்றைச் செய்து கொள்ளுதல்; be far too clever (to be taken for an innocent person or to be trusted). *'ஆளைப் பார்த்து எடை போடாதே; அவன் ஊரை விற்றுவிடுவான்'.*

**ஊழ்வினை** பெ. (n.) இப்பிறவியில் துய்க்கும் நன்மை, தீமைக்குக் காரணம் என்று நம்பப்படும், முற்பிறவியில் செய்த செயல்; முன்வினை; deeds committed in one's previous birth (believed to be responsible for one's lot in this birth).

**ஊழல்** பெ. (n.) முறைகேடு, நேர்மையின்மை; corruption, corrupt practice. *'ஊழலற்ற ஆட்சியையே மக்கள் விரும்புவார்கள்'.*

**ஊழி** பெ. (n.) *1.* நீண்ட காலம் நிலைக்கும் ஒரு கால அளவு; aeon. *'ஊழி முடிவே வந்துவிட்டது போல் இருந்தது'. 2.* ஊழி (யுகம்) முடிவு; apocalypse. *'சிவனின் ஊழித் தாண்டவம்'.*

**ஊழியம்** பெ. (n.) *1.* கடவுள், அரசன் முதலியோர்க்குச் செய்யப்படும் தொண்டு அல்லது சேவை; service (to God, king). *'கோயிலுக்கு ஊழியம் செய்தால் புண்ணியம்'. 2.* கிறித்தவ மதத்தைப் பரப்பும் தொண்டு; work of an evangelist. *'நான் தேவனுக்கு ஊழியம் செய்கிறேன்'. 3.* அரசுத் துறை முதலியவற்றின் பணி, வேலை; service in a department of government or in an organized agency. *'அரசுத் துறையில் ஊழியம் செய்வோர் சங்கம்'.*

**ஊழியர்** பெ. (n.) *1.* பணியாளர்; employee (in an office, bank, etc.,). *'அரசு ஊழியர் சங்கம்'. 2.* தொண்டர்; worker (in an organization). *'கட்சியின் உண்மை ஊழியர்'. 3.* தொண்டு (சேவை) செய்வோர்; servant (of god or king). *'கோயில் ஊழியர்'.*

**ஊளை** பெ. (n.) *1.* நரி, ஓநாய் போன்றவை எழுப்பும் ஒலி; நாயின் அழுகை ஓலம்; (of fox, jackal, dog, etc.,) howl. *'நரி ஊளையிட்டது'. 2.* புளித்த நாற்றம்; stink (of sour milk). *'ஊளைமோர் எனக்கு வேண்டாம்'. 3.* நாற்றமடிக்கும் சீழ் அல்லது சளி; putrid smell (of pus or mucus). *'ஊளைக் காது'.*

**ஊளைச் சதை** பெ. (n.) உடம்பில் அளவுக்கு அதிகமாகத் தொங்கும் சதை; flab.

**ஊற்று** பெ. (n.) *1.* நிலத்திலிருந்து வரும் நீர், எண்ணெய் போன்றவற்றின் சுரப்பு; spring (of a well, pond, etc.,). *'ஊற்று தோண்டி நீர் குடித்தோம்'. 2.* மேல் நோக்கிய பீச்சும் நீர்; fountain.

**ஊற்றுக்கண்** பெ. (n.) *1.* நீர் சுரந்து வரும் வழி; orifice of a spring. *'ஊற்றுக்கண் திறந்துவிட்டது'. 2.* ஒன்று உருவாவதற்கு அல்லது தோன்றுவதற்கு அடிப்படையாக அமைவது; source;

fountain. *'ஊழலின் ஊற்றுக்கண்ணை அடைத்துவிட வேண்டும்'.*

**ஊற்றுதல்** வி. (v.) *1.* நீர்மப் பொருள்களைக் கீழே சாய்த்துக் கொட்டுதல்; pour (water or other liquids). *'தண்ணீரைக் கீழே ஊற்றினார்'.* 2. ஒரு கலனுக்குள் நீர்மத்தை விடுதல்; fill (something with a liquid). *'தூவலில் மை ஊற்றினார்'.* 3. செடிகளுக்கு நீர் பாய்ச்சுதல்; water (the plants). *'பூஞ்செடிக்குத் தண்ணீர் ஊற்றினாள்'.* 4. நீர்மப்பொருள் அதிகளவில் வெளியேறுதல் பொழிதல்; comeout profusely; (of rain) pour down. *'மழை ஊற்றியதால் வெள்ளம் பெருக்கெடுத்தது'.* 5. (அரைத்த மாவை) வார்த்தல்; pour (butter to make dosa, etc.,). *'தோசை ஊற்றினாள்'.* 6. கவனக் குறைவால் சிந்துதல்; spill; splash. *'தேநீரைக் காலில் ஊற்றிவிட்டார்'.*

**ஊறல்** பெ. (n.) *1.* வெறிநீர் (சாராயம்) உருவாக்குவதற்காக ஊமத்தை, கடுக்காய்க் கொட்டை, நறுக்கிய வாழைப்பழம் போன்றவை சேர்க்கப்பட்டு காய்ச்சி வடித்தெடுக்கும் நீர்; anything fermenting for distillation of arrack; (a kind of) fermenting wash. 2. ஊரல் பார்க்க.

**ஊறு** பெ. (n.) தீங்கு; harm. *'உடலுக்கு ஊறு செய்யும் பொருள்களை உண்ணக்கூடாது'.*

**ஊறுகாய்** பெ. (n.) உப்பிட்டு ஊற வைத்த காய்; உணவோடு சிறு அளவில் சேர்த்துக்கொள்ளும் தொடுகறி; pickle.

**ஊறுகாய் போடுதல்** வி. (v.) குறிப்பிட்ட பொருளைப் பயன்படுத்த வேண்டியவற்றுக்குப் பயன்படுத்தாமல் சும்மா வைத்திருத்தல்; (said jocularly or mockingly) keep (esp. hoarded things) untouched. *'மிதிவண்டியை ஓட்டாமல் வைத்திருக்கிறாயே எதற்கு? ஊறுகாய் போடவா?'.*

**ஊறுதல்** வி. (v.) *1.* நீர், எச்சில் முதலியன வெளிவருதல்; சுரத்தல்; (of water) spring (of saliva, enzyme, etc.,) secrete. *'கிணற்றில் நீர் ஊறட்டும்'.* 2. அரிசி, பருப்பு முதலிய பொருள்கள் நனைந்து மென்மையாதல்; be soaked. *'அரிசி ஊறிவிட்டதா?'.* 3. துணி நீரில் நனைதல்; be soaked. *'துணியை ஊற வைத்திருக்கிறேன்'.* 4. தாள், துணி முதலியவற்றில், நீர், மை போன்றவை பரவுதல்; (of water, ink) spread, (on a surface such as cloth, paper, etc.,) smudge. *'மை ஊறும் தாள்'.* 5. குறிப்பிட்ட உணர்வு, பழக்க வழக்கம் போன்றவற்றில் மனம் தோய்தல்; be soaked or immersed (in habits); be steeped in. *'தேசப்பற்று என்பது அவர் குருதியில் ஊறிப் போய்விட்டது'.*

**ஊன்** பெ. (n.) *1.* உணவாக உட்கொள்ளப்படும் விலங்குகளின் அல்லது பறவைகளின் இறைச்சி; புலால்; meat. *'ஊன் உண்ணும் வழக்கத்தை அவர் கைவிட்டார்'.* 2. மாந்த உடல்; human body. *'ஊனும் உயிரும் வருந்த உழைத்தார்'.*

**ஊன்றி** வி.எ. (adv.) *1.* உற்று, உன்னிப்பாக; keenly; intently. *'ஊன்றிக் கவனித்தார்'.* 2. ஆழ்ந்து; கூர்ந்து; deeply. *'நூலை ஊன்றிப் படிக்க வேண்டும்'.*

**ஊன்றுதல்** வி. (v.) *1.* உடல் குறிப்பிட்ட நிலையில் இருப்பதற்காகக் கையையோ, காலையோ, கம்பையோ ஓரிடத்தில் அழுத்தமாகப் பதித்தல்; plant firmly (one's hand, foot, stick, etc, for support). *'கையை ஊன்றி எழுந்தார்'.* 2. விதையை நிலத்தில் ஆழமாகப் பதித்தல்; செடி, கம்பம், நாற்று போன்றவற்றை நடுதல்; plant (seeds, seedlings); fix (a post in a pit). *'செடியை ஊன்றி காப்பாக வளர்த்தார்'.* 3. பதிதல்; நிலை கொள்ளுதல்;

(of plants) get fixed, root. *'வேர் ஊன்றி வளர பல நாள்களாகும்'.*

## எ

**எக்கச்சக்கம்** பெ. (n.) *1.தாறுமாறு;* confusion, muddle. *2.ஏராளம், மிகமிகுதி;* heavy,plenty.

**எக்களித்தல்** வி. (v.) *மிகவும் மகிழ்தல்;* to be over joyed.

**எக்களிப்பு** பெ. (n.) *செருக்கோடு கூடிய மிக மகிழ்ச்சி;* excessive joy tinged with conceit.

**எக்காளம்** பெ. (n.) *செருக்கு;* pride.

**எக்குதல்** வி. (v.) *மேலெழும்புதல்;* to rise, go up.

**எகத்தாளி** பெ. (n.) *எள்ளி நகையாடுதல்;* mockery, jest, ridicule.

**எகனைமொகனை** பெ. (n.) *எதுகை, மோனை;* rhyme in Tamil.

**எகிருதல்** வி. (v.) *துள்ளுதல்;* to cut capers.

**எங்கணும்** கு.வி.எ. (adv.) *எங்கும்;* every where.

**எங்கு** பெ. (n.) *எவ்விடம்;* where.

**எங்கும்** கு.வி.எ. (adv.) *எவ்விடத்தும்;* everywhere.

**எங்ஙனம்** கு.வி.எ. (adv.) *எவ்வாறு;* how, in what manner.

**எச்சமிடுதல்** வி. (v.) *பறவைகள் மலங் கழித்தல்;* to drop excrement as birds.

**எச்சரித்தல்** வி. (v.) *முன்னறிவித்து எச்சரிக்கை செய்தல்;* to caution, warm, fore warm.

**எச்சரிக்கை** பெ. (n.) *விழிப்புணர்வு;* caution.

**எச்சரிப்பு** பெ. (n.) *1.முன்னறிவிப்பு;* caution. *2.முன்னெச்சரிக்கை;* precaution.

**எச்சிலிலை** பெ. (n.) *உணவு உண்ணப் பட்ட இலை;* leaf - plate from which food has been eaten.

**எச்சிற்படுதல்** வி. (v.) *உமிழ்நீர்பட்டுத் தூய்மை கெடுதல்;* to become defiled, as food by contact with the mouth.

**எசப்பு** பெ. (n.) *தரவாளித் தொழில், தரவு;* brokerage.

**எஞ்சி நிற்றல்** வி. (v.) *தொக்கிநிற்றல்;* to be elliptical as a word.

**எஞ்சுதல்** வி. (v.) *மீதியாதல்;* to remain, to be left behind.

**எட்டக்கட்டுதல்** வி. (v.) *நெருங்கி வாராதிருத்தல்;* to keep away, hold off.

**எட்டடிவிரியன்** பெ. (n.) *விரியன் பாம்பு வகை;* a kind of viper.

**எட்டம்** பெ. (n.) *உயரம், தொலைவு;* height, distance.

**எட்டாக்கை** பெ. (n.) *கைக்கு எட்டாத தொலைவான இடம்;* distant place, place out of reach.

**எட்டிநோக்குதல்** வி. (v.) *1. அண்ணாந்து பார்த்தல்;* to look up. *2. தாவிப் பார்த்தல்;* to stretch oneself and see.

**எட்டுக்கண்விட்டெறிதல்** வி. (v.) *எங்குந் தன் அதிகாரஞ் செலுத்துதல்;* to exercise authority everywhere as of one had eight eyes to have very wide influence.

**எட்டுத்திக்கு** பெ. (n.) *எண் திசை;* eight direction viz., the four cardinal points and the four between them.

**எடுகூலி** பெ. (n.) *சுமை கூலி;* porterage hire for carrying a borden.

**எடுத்தாள்(ளு)தல்** வி. (v.) *மேற்கோள் காட்டுதல்;* to quote as an expression.

**எடுத்துக்கட்டி** பெ. (n.) *ஆடையை வரிந்து கட்டுதல்;* to tighten the dress around the waist.

**எடுத்துச் சொல்(லு)தல்** வி. (v.) *1. விளக்கமாகக் கூறுதல்;* to explain dearly. *2. அறிவுரை சொல்லுதல்;* to advice.

**எடுத்துவளர்த்தல்** வி. (v.) *பிறர் குழந்தையை ஊட்டி வளர்த்தல்;* to bring up as a destitute child.

**எடுத்தெறிதல்** வி. (v.) *பொருட்படுத்தாமை;* to disregard one's advice or commands.

**எடுப்பார்கைப்பிள்ளை** பெ. (n.) *யாவர்க்கும் எளிதில் வயப்படக் கூடியவன்;* simpleton; one who is easily gulded by others, as an infant in arms.

**எடுப்பானவன்** பெ. (n.) *தோற்றப்பொலிவுள்ளவன்;* conspicuous personality.

**எடுப்புச் சாப்பாடு** பெ. (n.) *உணவகத்திலிருந்து வீட்டிற்கு எடுத்து வரும் உணவு;* meal taken from a hotel to the residence of a person.

**எடுப்புச்சீட்டு** பெ. (n.) *குலுக்குச் சீட்டு;* chit fund conducted on the lottery system.

**எடுப்புச்சோறு** பெ. (n.) *விருந்திற்கு வரவியலாத உறவினருக்கு அனுப்பும் உணவு;* meal sent to a relative who is unable to attend a special dinner.

**எடுப்புத்தண்ணீர்** பெ. (n.) *நடவு செய்தபின் விடப்படும் முதல் தண்ணீர்;* first watering after transplanting in the field.

**எடுபட்டவன்** பெ. (n.) *ஒழுக்கக் கேட்டால் கூட்டத்திலிருந்து விலக்கப் பட்டவன்;* one who has been expelled from society for violation of its rules, outcaste.

**எடுபிடி** பெ. (n.) *துணைப் பணியாளர்; ஏவலாள்;* attendants.

**எடைகட்டுதல்** வி. (v.) *பாலில் தகுந்தளவு நீர் சேர்த்தல்;* to dilute milk with sufficient water.

**எடைபோடுதல்** வி. (n.) *1.பொருள்களை எடையிடுதல்;* to weight as measure. *2.ஒருவரைப் பற்றியோ, அவரின் திறனையோ கணித்தல்;* Judge oneself.

**எண்சாணுடம்பு** பெ. (n.) *தன்கையால் எட்டுகாண் அளவுள்ள மாந்தவுடல்;* human body of eight span in height when measured by one's own hand.

**எண்ணிக்கை** பெ. (n.) *கணக்கிடுகை;* numbering.

**எண்ணெய்க்கசடு** பெ. (n.) *எண்ணெய் அடிமண்டி;* dregs of oil.

**எத்தன்** பெ. (n.) *ஏமாற்றுவோன்;* impostor.

**எதாச்சும்** பெ. (n.) *என்னமாவது, ஏதாவது;* whatever may be.

**எதிர்க்கட்சி** பெ. (n.) *ஆளும் கட்சிக்கு மாற்றுக் கட்சி;* rival party opposite side.

**எதிர்க்கெடுத்தல்** வி. (v.) *உண்ட ஊண் திரும்பி மேல் வருதல்;* to retch.

**எதிர்ச்சுவர்** பெ. (n.) *முன்பக்கச் சுவர்;* face wall.

**எதிர்த்துப்பேசுதல்** வி. (v.) *அடங்காமற் பேசுதல்;* to retort, speak disobediently.

**எதிர்நில்தல்** வி. (n.) *எதிர்த்து நிற்றல்;* to resist, withstand, oppose.

**எதிர்நீச்சல்** பெ. (n.) *வெள்ளப்போக்கிற்கு எதிராக நீந்துகை;* swimming against the current.

**எதிர்ப்படுதல்** வி. (v.) *முன் தோன்றுதல்;* to appear.

**எதிர்பார்த்தல்** வி. (v.) *ஒன்றை நோக்கியிருத்தல்;* to expect, look forward to envisage.

**எதிர்வாதம்** பெ. (n.) *மாறுபடக் கூறுகை;* objection.

**எதிராளி** பெ. (n.) *பகைவன்;* enemy, adversary.

**எதிரிலி** பெ. (n.) *எதிரியில்லாதவர்;* the unrivalled.

**எதிரெடுத்தல்** வி. (v.) *வாயா லெடுத்தல்;* to vomit.

**எதிரொலித்தல்** வி. (v.) *எழும்பும் ஒலி (சுவர், மலை இவற்றில்பட்டு) திருப்பியொளித்தல்;* to echo.

**எம்புதல்** வி. (v.) *மேலெழுதல் அல்லது துள்ளுதல்;* to rise, spring up.

**எய்தல்** வி. (v.) *அம்பெய்தல்;* to discharge arrows.

**எரிகடுப்பு** பெ. (n.) *எரிச்சலையுண்டாக் குமோர் வகை வலி;* pain marked by burning sensation.

**எரிச்சற்படுதல்** வி. (v.) *பொறாமைப் படுதல்;* to be envious jealous.

**எரிந்துவிழுதல்** வி. (v.) *சீற்றம் காட்டுதல்;* to wax hot and burst into a temper.

**எரிமலை** பெ. (n.) *நெருப்புக் குழம்பாக கக்கும் மலை;* mountain with a burning hole in which stones and mud are converted into a molten state called lava and thrown out Volcano.

**எருதுகட்டு** பெ. (n.) *ஏறுதழுவுதல் போட்டி;* bull-fighting festival.

**எருவறட்டி** பெ. (n.) *கட்டிக் காய வைத்த சாணத்தட்டை ;* cake of cow dung used as fuel.

**எல்லாரும்** பெ. (n.) *யாவரும்;* all persons.

**எல்லை கடத்தல்** வி. (v.) *வரம்பு மீறுதல்;* to trespass.

**எல்லைமால்** பெ. (n.) *நான்கெல்லை;* four boundaries of a piece of land.

**எலிப்பயறு** பெ. (n.) *ஒரு வகைக் காட்டுச் சிறு பயறு;* a wild variety of pulse.

**எலிப்பொந்து** பெ. (n.) *எலி வளை;* rat-hole.

**எலிப்பொறி** பெ. (n.) *எலியைப் பிடிக்கும் கூண்டு;* rat-trap.

**எலிமருந்து** பெ. (n.) *எலியைக் கொல்வ தற்கிடும் மருந்து;* any medicine intended for killing rats.

**எலியன்** பெ. (n.) *பொடியன்;* little boy.

**எலியெலும்பன்** பெ. (n.) *வலிமை யில்லாதவன்;* weak man.

**எலும்பன்** பெ. (n.) *எலும்பு போன்று மெலிந்தவன்;* one who is almost a skeleton, emaciated man.

**எலும்பி** பெ. (n.) *எலும்பு தோன்ற மெலிந் தவள்;* emaciated woman.

**எவ்வண்ணம்** பெ. (n.) *எவ்வாறு, எப்படி;* hour, in which manner.

**எவ்வழி** பெ. (n.) *1. எந்த வழி;* which way, wither. *2. எப்படி;* how.

**எவ்வளவு** கு.வி.எ. (adv.) *எந்த அளவு;* how, much, how far.

**எவ்விடம்** பெ. (n.) *எந்தவிடம்;* which place, where.

**எழுதல்** வி. (v.) *1. எழுந்திருத்தல்;* to rise, as from a seat or bed. *2. மேல் எழும் புதல்;* to ascend. *3. துயிலெழுதல்;* to awake.

**எழுத்தறிவு** பெ. (n.) *எழுதவும் படிக்கவும் பழகும் பயிற்சி;* art of reading and writing.

**எழுத்திடுதல்** வி. (v.) *கைச்சாத்திடுதல்; கையெழுத்திடல்;* to put one's signature.

**எழுத்தெண்ணிப்படித்தல்** வி. (v.) *ஒன்றும் விடாது கற்றல்;* to study a book so carefully as to obtain a through grasp of its contents.

**எழுதிக்கொடுத்தல்** வி. (v.) *எழுத்து மூலமாக ஒப்பந்தம் செய்தல்;* to grant in writing to write and deliver, as a voucher, an agreement a contract.

**எழுதிவைத்தல்** வி. (v.) *பதிவு செய்து வைத்தல்;* to register write and keep for

a memorandum, write and leave behind for the use of others, as a will.

**எழுந்தருள்(ளு)தல்** வி. (v.) *தெய்வம் அல்லது மதிப்புக்குரிய பெரியோர் தோன்றுதல் அல்லது வருகை தருதல்;* gods in the form of idol or holy person appear or arrive at a place and shower blessings.

**எழுநிலை மாடம்** பெ. (n.) *ஏழடுக்கு மாளிகை;* palace seven stories high.

**எழுப்புதல்** வி. (v.) *1. எழும்பச் செய்தல்;* to cause or help to rise, to erect, as a building. *2. துயிலெழுப்புதல்;* to awake, rouse. *3. உயிர் பெற்றெழச் செய்தல்;* to raise from the dead, resuscitate.

**எழுபிறப்பு** வி. (v.) *ஏழுவகையான பிறவி;* seven kinds of births, in metempsychosis.

**எள்நெய்** பெ. (n.) *எள்ளிலிருந்து வடித் தெடுக்கும் நல்லெண்ணெய்;* gingili oil.

**எள்ளளவும்** வி. (v.) *சிறிதளவும்;* not even a little; not even as much as a sesame seed.

**எள்ளுந்தண்ணீருமிறைத்தல்** வி. (v.) *நீத்தார்க்கடனிறுத்தல்;* to offer water with sesame seeds on khus grass to the spirits of the dead.

**எளிது** பெ. (n.) *எளிமையானது;* that which is easy of execution.

**எளியன்** பெ. (n.) *1. வறியவன்;* poor man. *2. பண்பில் தாழ்ந்தவன்;* mean man.

**எற்றைக்கும்** கு.வி.எ. (adv.) *எப்பொழு தும், என்றென்றைக்கும்;* for all time, for ever.

**எறிகால்** பெ. (n.) *மோதுங்காற்று;* violent wind.

**எறிகாலி** பெ. (n.) *பால் கறக்கும்போது உதைக்கும் மாடு;* cow that kicks, when midking.

**எறிபடை** பெ. (n.) *வீசுங்கொலைக்கருவி;* missile.

**என்றாலும்** இடை. (conj.) *1. என்று சொன் னாலும்;* though. *2. ஆயினும்;* though.

**என்றைக்கும்** கு.வி.எ. (adv.) *1. எக்காலத் தும்;* for ever. *2. ஒரு நாளும்;* even a day.

**என்னது** சு.பெ. (n.) *எது;* what.

**என்னுங்காட்டில்** இடை. (conj.) *என்பதைக் காட்டிலும்;* morethan saying that.

**என்னும்** கு.வி.எ. (adv.) *1. யாவும்;* all. *2. சிறிதும்;* even a little.

**என்னை** பெ. (n.) *1. என் தந்தை;* my father. *2. என் தலைவன்;* my master, my lord. *3. என் தாய்;* my mother.

**என்னென்ன** கு.வி.எ. (adv.) *எதுயெது, எவையெவை;* whatever.

**என்னோரும்** பெ. (n.) *1. எத்தன்மை யோரும்;* persons of whatever kind. *2. எல்லாரும்;* all persons.

**எனவே** இடை. (conj.) *1. அவ்வாறு சொன் னதால்;* when it was so said; therefore. *2. போல; ஒன்றை ஒத்திருப்பது;* just like.

**எனில்** இடை. (conj.) *என்று சொன்னால்;* if it is said so.

**எனினும்** இடை. (conj.) *1. என்று சொல் லினும்;* said so. *2. என் கையால்;* in consideration of.

**எனும்** கு.வி.எ. (adv.) *சிறிதும்;* even a little.

**எனை** கு.வி.எ. (adv.) *என்ன, எந்த, எத்தகைய;* what, why.

**எனைத்து** வி.பெ. (inter.pron.) *எத்தன்மைத்து;* of what kind.

**எனைப்பல** கு.பெ.எ. (adj.) *எத்தனையோ பல;* how many, very many.

**எனையதும்** கு.வி.எ. (adv.) *சிறிதும்;* even a little.

# ஏ

**ஏக்கம்** பெ. (n.) விரும்பியது கிடைக் காமையால் வரும் வருத்தம்; despondency, depression of sprits.

**ஏக்கம் பிடித்தல்** வி. (v.) வருத்தம் மிகுதல்; to be in low sprits, to languise. '*மகன் இறந்ததினாலே அவளுக்கு ஏக்கம் பிடித்தது*'.

**ஏக்கழுத்தம்** பெ. (n.) *1.* *தலையெடுப்பு;* superciliousness, strutting. *2.* *இறு மாப்பு;* arrogance, pride. *3.* *வீற் றிருக்கை;* sitting majestically.

**ஏக்கழுத்து** பெ. (n.) *நீண்ட கழுத்து;* high neck.

**ஏக்கறுதல்** பெ. (n.) *1.* *இளைத்தல்;* to languish. *2.* *ஆசையால் தாழ்தல்;* to bow before superiors. *3.* *விரும்புதல்;* to desire.

**ஏக்கன்போக்கன்** பெ. (n.) *ஒன்றுக்கும் உதவாதவன்;* man of no consequence.

**ஏக்கிபோக்கி** பெ. (n.) *ஒன்றுக்கும் உதவாதவள்;* woman of no consequence.

**ஏகப்பட்ட** கு.வி.எ. (adj.) *1.* *மிகுதியான;* plenty. '*அவரிடம் ஏகப்பட்ட நூல்கள் உள்ளன*'. *2.* *எண்ணிலடங்கா;* numerous. '*அவர் மீது ஏகப்பட்ட வழக்குகள் உள்ளன*'.

**ஏங்கிப்போதல்** வி. (v.) *ஏக்கம் பிடித்தல்;* to be in low sprits. '*தாயைப் பிரிந்த குழந்தை ஏங்கிப் போயிற்று*'.

**ஏங்குதல்** வி. (v.) *இளைத்தல்;* to pine. '*நல்ல உணவுக்கு ஏங்குகிறாள்*'.

**ஏச்சு** பெ. (n.) *1.* *வசவு;* abuse. *2.* *அவமதிப்பு;* insult.

**ஏச்சுரை** பெ. (n.) *பழிப்புரை;* opprobrium, calumny. '*அலுவலரின் ஏச்சுரை அனைத்தையும் பொறுத்துக் கொண்டார்*'.

**ஏசுதல்** வி. (n.) *இகழ்தல்;* to abuse, reproach.

**ஏட்டிக்குப்போட்டி** பெ. (n.) *நேருக்கு மாறான செயல்;* logomachic retort. '*எதைச் சொன்னாலும் ஏட்டிக்குப் போட்டியாகப் பேசுவதே அவர் வழக்கம்*'.

**ஏட்டுச்சுரைக்காய்** பெ. (n.) *1.* *பட்டறி வற்ற கல்வி;* book learning that is devoid of practical wisdom. '*ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது (பழ.)*'. *2.* *பட்டறிவு இன்றி நூலறிவு மட்டு முள்ளவர்;* person with such book learning. '*அவனொரு ஏட்டுச் சுரைக் காய்; அவனால் எதுவும் செய்து காட்ட முடியாது*'.

**ஏட்டுப்படிப்பு** பெ. (n.) *ஏட்டுச்சுரைக்காய் பார்க்க.*

**ஏடகப்பை** பெ. (n.) *ஏடு அல்லது வண்டலை வழிக்கப் பயன்படுத்தும் அகப்பை;* ladle used for removing the scum of liquids, skimma.

**ஏடல்** பெ. (n.) *1.* *உள்ளீடு;* inner content. *2.* *கருத்து;* meaning, intension, thought.

**ஏடற்குழு** பெ. (n.) *கருத்துரைஞர் குழு;* advisory board. '*கலைச்சொல் அக ராதித் தொகுப்பு ஏடற் குழுவில் பல துறை சார் அறிஞர்களும் இடம் பெற்றிருத்தல் முகாமை*'.

**ஏடாகூடம்** பெ. (n.) *1.* *தாறுமாறு;* perverseness, contradiction. '*எந்தச் செய லையும் ஏடாகூடமாகச் செய்வதே அவரது இயல்பு*'. *2.* *குழப்பம் உண்டாக்கும் நிலை;* trouble.

**ஏடு** பெ. (n.) *1.* *பூவிதழ்;* petal. *2.* *கண்ணிமை;* eyelid. *3.* *பனை யோலையிதழ்;* strip of palmyra leaf for writing. '*முன்னைக் காலத்தில் ஏட்டில் எழுதுவதே நடைமுறை வழக்கம்*'. *4.* *ஏட்டுப் புத்தகம்;* book of palmyra

leaves. *'திருக்குறளின் பழைய ஏடு அருங்காட்சியகத்தில் உள்ளது'*. 5. வாழையிலைத் துண்டு; section of a plantain cut, near the base, for use as a plate. *'சிற்றுண்டியைச் சாப்பிட ஏடே போதும். நுனியிலை வேண்டா?'*. 6. பால், தயிர், கஞ்சி இவற்றின் மேலேடு; a upper layer of curd, milk, rice. *'ஏடு நீக்கிய பால், ஏடகற்றிய தயிர்; கஞ்சி ஏடு கட்டிவிட்டது'*. 7. குறிப்பெழுதும் தாளின் பொதிவு; note book, note pad.

**ஏடுகட்டல்** பெ. (n.) *(மேலேடு) ஆடை படர்தல்;* formation of a scum on the surface of any liquid. *'காய்ச்சிய பால் ஏடு கட்டிவிட்டது'*.

**ஏடுகோத்தல்** வி. (v.) *பனையிதழ்களைக் கயிற்றிற் கோத்தல்;* to string together the leaves of a palmyra leaf-book.

**ஏடுசேர்த்தல்** வி. (v.) *பனையோலைகளை ஏடுகளாகச் சீவிப் பொத்தகமாக்குதல்;* to make up a book of the strips of palmyra leaves.

**ஏடுதயிர்** பெ. (n.) *ஆடை நீக்காத் தயிர்;* curd from which cream has not been removed.

**ஏடுபடர்தல்** பெ. (n.) *ஆடையுண்டாதல்;* formation of coating on the surface of some liquids. *'காய்ச்சிய பாலில் ஏடு படர்ந்துள்ளது'*.

**ஏடெழுதுதல்** வி. (v.) *1.* புதுப்பொத்தகம் எழுதத் தொடங்குதல்; to start writing a new book. *2.* படி எடுத்தல்; to begin copy a book.

**ஏணல்கோணல்** பெ. (n.) *ஒழுங்கின்மை;* unevenness. *'ஏன் இப்படி ஏணல் கோணலாய் அடுக்கி வைத்துள்ளாய்'*.

**ஏணி** பெ. (n.) *மேலேற உதவும் படியமைந்த மரச் சட்டம்;* ladder.

**ஏணிப்படி** பெ. (n.) *மேலேற உதவும் மரச்சட்டத்திலமைந்துள்ள குறுக்குச் சட்டம்;* step or rung of a ladder.

**ஏணிப்பழு** பெ. (n.) *ஏணிப்படி பார்க்க.*

**ஏணை** பெ. (n.) *துணியாலமைந்த தொங்கும் தொட்டில்;* cloth - cradle hung from a cross piece hammock. *'அழுகிற குழந்தையை ஏணையில் போட்டு ஆட்டு'*.

**ஏத்தம்வாழை** பெ. (n.) *நேந்திரம் வாழை;* a kind of banana.

**ஏத்துதல்** வி. (v.) *1. வாழ்த்துதல்;* to bless. *2. புகழ்தல்;* to prise.

**ஏதம்** பெ. (n.) *1. துன்பம்;* suffering. *2. கேடு;* calamity. *3. அழிவு;* ruin.

**ஏதாகிலும்** பெ.அ. (n.) *ஏதாவது பார்க்க.*

**ஏதாவது** பெ.அ. (n.) *ஒன்று அல்லது மற்றொன்று;* whatever.

**ஏதிலார்** பெ. (n.) *1. பிறர் (அந்நியன்);* others. *2. வறுமையாளர்;* poor man.

**ஏது** பெ. (n.) *1. எது;* which. *'உனக்கு இந்த எழுதுகோல் ஏது?'*. *2. எங்கிருந்து, எப்படி;* hence, how. *'உனக்கு ஏது இந்தப் பணம்'*.

**ஏதேது** பெ.அ. (n.) *எதுவாயினும்;* whatsoever.

**ஏதேனும்** பெ.அ. (n.) *குறைந்த அளவாவது;* a little of something.

**ஏந்தல்** பெ. (n.) *1. கையேந்துகை;* stretching out the hands, as a begger. *2. தாங்குகை;* holding up, supporting. *3. நீர்த்தேக்கம்;* wide shallow pond.

**ஏந்தி** பெ. (n.) *தாங்குபவன்;* bearer, possession. *'புகழேந்தி, தமிழேந்தி'*.

**ஏந்திக்கொள்ளுதல்** வி. (v.) *1. கையால் தூக்குதல்;* to lift by the hands. *'புத்தகத்தை ஏந்திக்கொள்'*. *2. கையால் தாங்குதல்;* to support by the hands. *'குழந்தை கீழே விழாமல் ஏந்திக் கொள்'*. *3. கைகொடுத்தல்;* to lend a hand. *'தொழில் நொடித்த நேரத்தில்

*அவரது நண்பர் அவரை ஏந்திக் கொண்டார்*.

**ஏந்திசை** பெ. (n.) *செய்யுளோசை வகை;* rhythm in verse.

**ஏந்திரம்** பெ. (n.) *மாவரைக்கும் திரிகை;* hand mill.

**ஏந்திழை** பெ. (n.) *1. அழகிய அணிகலன்;* beautiful ornament. *2. அணிகலனணிந்த பெண்;* woman beautifully decked with jewels.

**ஏந்துதல்** பெ. (n.) *1. உயரத் தூக்குதல்;* to lift. *2. உயரத் தூக்கிப் பிடித்தல்;* to hold a thing after lifting it. *3. கை நீட்டுதல்;* to streetch out the hands. *'நீ தர நான் ஏந்தி வாங்கினேன்'*. *4. கையில் எடுத்தல்;* to receive in the hands. *'நீரை ஏந்திப் பருகினான்'*. 5. *தாங்குதல்;* to hold in the hands. *'கையில் வேலேந்திச் சென்றான்'*. 6. *சுமத்தல்;* to support as a beam. *'உத்திரத்தைத் தூண் ஏந்தி நிற்கிறது'*.

**ஏந்து** பெ. (n.) *வாய்ப்பானது; வாகு (வசதி);* convenience. *'அலுவலகத்தில் அனைத்து ஏந்துகளும் உள்ளன'*.

**ஏந்துகுழந்தை** பெ. (n.) *கைக்குழந்தை;* infant in arms.

**ஏந்தெழில்** பெ. (n.) *மிகுந்த அழகு, பேரழகு;* surpassing beauty.

**ஏப்பம்** பெ. (n.) *தேக்கெறிவு;* eructation; belch.

**ஏப்பம்விடுதல்** வி. (v.) *1. தேக்கெறிதல்;* to belch, to eject as of wind, from the mouth. 2. *ஏமாற்றுதல்;* to cheat.

**ஏம்பல்** பெ. (n.) *ஏரிப் பாசனமாக அமைந்த நிலம்;* land cultivated by lake irrigation.

**ஏமம்** பெ. (n.) *காப்பு;* safety. *'ஏமப் பேரூர்'*.

**ஏமாந்துபோதல்** வி. (v.) *ஏமாறுதல்;* to be disappointed. *'அவன் ஏமாந்து போனான்'*.

**ஏமாற்றம்** பெ. (n.) *ஏய்ப்பு;* deceit,fraud.

**ஏமாற்றுதல்** வி. (v.) *ஏய்த்தல்;* to hoodwick disappoint.

**ஏமாறுதல்** வி. (v.) *1. அலமருதல்;* to be confused, bewildred. *2. ஏய்க்கப் படுதல்;* to be guiled.

**ஏய்ப்ப** இடை. (n.) *ஓர் உவமவுருபு;* adverbial word of comparison.

**ஏய்ப்பு** பெ. (n.) *ஏமாற்று;* deceit, fraud.

**ஏய்ப்புக்காட்டுதல்** வி. (v.) *ஏமாற்றம் செய்தல்;* to dupe, deceive.

**ஏர்** பெ. (n.) *1. கலப்பை;* plouge. 2. *ஒரு கலப்பையும் ஓரிணை மாடும்;* team of oxen and plough. *'இன்று நான்கு ஏர் உழுதது'*. 3. *அழகு;* beauty. *'ஏரெழில் மங்கையர்'*.

**ஏர்க்கட்டுதல்** வி. (v.) *கலப்பையில் எருதை பூட்டுதல்;* to yoke the plough. *'அந்தி ஏர் கட்டுகிற நேரம்'*.

**ஏர்க்களம்** பெ. (n.) *நெற்களம்;* threshing floor.

**ஏர்க்கால்** பெ. (n.) *1. கலப்பையின் நுகம்;* shaft, as of a plough. 2. *ஆரக்கால்;* spoke of a wheel.

**ஏர்த்தொழில்** பெ. (n.) *உழவுத் தொழில்;* husbandary.

**ஏர்த்தொழிலோர்** பெ. (n.) *உழுதுண்போர்;* agriculturists.

**ஏர்த்தொழிலர்** பெ. (n.) *ஏர்த்தொழிலோர் பார்க்க.*

**ஏர்ப்பூட்டு** பெ. (n.) *முதல் உழவு;* ploughing for the first time in the season on an auspicious day.

**ஏர்பூட்டுதல்** வி. (v.) *ஏரில் மாடு கட்டுதல்;* to yoke the oxen to the plough.

**ஏர்மங்கலம்** பெ. (n.) *பொன்னேர் பூட்டிப் பாடும் மங்கலப்பாட்டு;* ancient song of benediction sung at the commencement of ploughing.

**ஏரடித்தல்** வி. (v.) *உழுதல்;* to plough.

**ஏரணம்** பெ. (n.) *காரணங்காட்டி மெய்ப்பிக்கும் அறிவியல்;* logic.

**ஏராண்மை** பெ. (n.) *உழவு;* tillage, agriculture.

**ஏராளம்** பெ. (n.) *மிகுதி;* abundance.

**ஏராளர்** பெ. (n.) *1. உழவர்;* husband man. *2. வீரர்;* brave man.

**ஏரி** பெ. (n.) *1. இயற்கையாகப் பள்ளத்தில் தேங்கிய பெரிய நீர்நிலை;* lake. *2. செய்கரை நீர்நிலை;* embanked lake. *3. பாசனத்திற்குப் பயன்படும் நீர் நிலை;* reservoir for irrigation. *4. பக்கக் கரைகளைக் காப்பாகக் கொண்ட பெரிய நீர்நிலை;* large lake with bank.

**ஏரிப்பாய்ச்சல்** பெ. (n.) *ஏரிப்பாசனம் பார்க்க.*

**ஏரிப்பாசனம்** பெ. (n.) *ஏரியில் தேங்கியுள்ள நீரைக்கொண்டு வேளாண்மை செய்கை;* irrigation from a tank.

**ஏரிவாரியத்தார்** பெ. (n.) *ஏரியை மேற்பார்வையிடும் குழுவினர்;* local committee of ancient times which functioned as a supervising body over tanks and irrigation.

**ஏரிவாரியம்** பெ. (n.) *ஏரி வாரியத்தார் பார்க்க.*

**ஏரின்வாழ்நர்** பெ. (n.) *உழுதுண்போர்;* agriculturists as those who live by the plough.

**ஏரோடுதல்** பெ. (n.) *உழுதல்;* to plough.

**ஏரோர்** பெ. (n.) *உழுவோர்;* ploughman.

**ஏருழவர்** பெ. (n.) *ஏர்கொண்டு உழுபவர்;* plough tillers.

**ஏருழவு** பெ. (n.) *1. வேளாண்மை;* ploughing, agriculture. *2. ஒரு நாளில் ஓரிணை மாடுகளைக் கொண்டு உழக்கூடிய நிலம்;* extent of land that can be ploughed by a plough.

**ஏல்**[1] இடை. (n.) *எதிர்மறை ஏவலொருமை ஈறு;* negative imperative singular ending. *'ஈவது விலக்கேல்'.*

**ஏல்**[2] வி.எ. (n.) *என்றால்;* if, used as an eding in a conjunctional sense. *'நீ வந்தாயேல்'.*

**ஏலக்காய்** பெ. (n.) *ஏலச் செடியின் காய்;* cardamom. *"மருத்துக்கும் உணவுக்குமான மணமுள்ளகாய்"*

**ஏலங்கேட்டல்** பெ. (n.) *ஏல விலையை ஏற்றி அல்லது குறைத்துக் கேட்டல்;* to bid at an auction.

**ஏலம்**[1] பெ. (n.) *1. செடிவகை;* cardamon plant. *2. ஒரு மணப்பொருள்;* cardamon seed.

**ஏலம்**[2] பெ. (n.) *போட்டியிற் பலர்முன் விலையேற்றம் செய்து விற்கும் விற்பனை முறை;* auction.

**ஏலவரிசி** பெ. (n.) *ஏலக்காயில் உள்ளீடு;* cardamon seed.

**ஏலா** விளி. (int.) *விளிச்சொல்;* word of endearment. *'ஏலா, இங்கே வா'.*

**ஏலாமை** பெ. (n.) *1. இயலாமை;* inability, impossibility. *2. பொருந்தாமை;* unsuitableness.

**ஏலுதல்** வி. (v.) *1. நிகழ்தல்;* to happen, occur. *2. பொருந்துதல்;* to join, mingle. *3. செய்ய முடிதல்;* to be possible. *'இது உன்னால் செய்ய ஏலுமா'.*

**ஏலே** விளி. (int.) *விளிச்சொல்;* exclamation or familiar address. *'ஏலே! என்னலே அது'.*

**ஏலேலோ** விளி. (int.) *ஏலப் பாட்டில் வரும் சொல்;* onom expression that occurs in songs by boatsman. *'மண்ணை நம்பி ஏலேலோ - மரமிருக்க

*ஏலேலோ -மரத்தை நம்பி - ஏலேலோ கிளையிருக்க ஏலேலோ'.*

**ஏவல்** பெ. (n.) *1. தூண்டுகை;* instigation, incliement. *'அவனது ஏவலுக்கு இவன் செயற்படுகிறோம்'. 2. ஓதுகை;* recital. *3. ஆணை;* comment. *'இஃது அரசனின் ஏவல்'. 4. ஏவலாள்;* servant. *'இவன் எம் இல்லத்து ஏவல்'. 5. தீய ஆவியை ஏவி விடுகை;* inciting a devil against an enemy by witch craft. *'என் குடும்பத்தின் மீது யாரோ ஏவல் செய்துள்ளனர்'.*

**ஏவல்கேட்டல்** வி. (v.) *1. ஏவிய பணி செய்தல்;* to serve. *2. ஆணைக்குக் கீழ்ப்படிதல்;* obey order.

**ஏவல்கொள்ளுதல்** வி. (v.) *வேலை வாங்குதல்;* to get work done by others.

**ஏவல்மேவல்** பெ. (n.) *கட்டளை;* commands. *'அவருடைய ஏவல் மேவலுக்கு நான் ஆளில்லை'.*

**ஏவல்விடை** பெ. (n.) *வினாவுக்கு விடையாக ஒரு கட்டளை இடுவது;* a question by an imperative retort as when asked. *'இது செய்வாயோ? என்பவரிடம் நீ செய் என்று விடையிறுப்பது'.*

**ஏவல்வினா** பெ. (n.) *கட்டளையிடும் நோக்கத்துடன் கேட்கும் வினா;* questioning with a view to give a command. *'நண்பா சாப்பிட்டாயா?'.*

**ஏவல்வினை** பெ. (n.) *முன்னால் நிற்பவரை கட்டளை இடும் வினை;* verb in the emperative mood.

**ஏவலன்** பெ. (n.) *பணிவிடை செய்வோன்;* attendant, servant. *'எம் அலுவலக ஏவலன் எங்கே சென்றார்'.*

**ஏவலாள்** பெ. (n.) *ஏவலன் பார்க்க.*

**ஏவற்பணி** பெ. (n.) *ஆணையிட்ட வேலை;* service commanded.

**ஏவுதல்** வி. (v.) *1. ஆணையிடுதல்;* to command. *2. தூண்டிவிடுதல்;* in incite.

**ஏவுகணை** பெ. (n.) *குறிதவறாமல் இலக்கைச் சென்று தாக்கும் படைக் கலம்;* missile.

**ஏவுகை** பெ. (n.) *ஏவுதல்;* inciting.

**ஏவுவான்** பெ. (n.) *கட்டளையிடுபவன்;* master, director.

**ஏவூர்தி** பெ. (n.) *விண்ணில் செலுத்தும் ஊர்தி;* vehicle which is sent through sky.

**ஏழ்** பெ. (n.) *ஏழு பார்க்க, ஏழ் பிறப்பு, ஏழிசை.*

**ஏழ்மை** பெ. (n.) *ஏழு;* seven.

**ஏழத்தனை** பெ. (n.) *ஏழு மடங்கு;* seven time. *'அவன் எனக்குச் செய்ததைப் போல் ஏழத்தனை நான் செய் துள்ளேன்'.*

**ஏழமை** பெ. (n.) *வறுமை;* poverty.

**ஏழரை நாட்டுச்சனி** பெ. (n.) *நிலைவோரையிலிருந்து 12, 1,2 ஆம் இடங்களில் ஏழரை ஆண்டுக்காலம் வருத்தும் சனி;* Saturn in his malign influence for 7 1/2 years when passing through the zodical sign of one's star at birth, the one previous and one after.

**ஏழாங்காப்பு** பெ. (n.) *குழந்தை பிறந்த ஏழாம் நாளில் செம்பிலும், வெள்ளியிலுமான நாணினால் புனைந்த ஒருவகைக் கால் கொலுசைக் காப்பாக அணிவிக்கும் நிகழ்ச்சி;* bracelets fattern of copper and silver wire twisted together, put on the anklets of a baby on the seventh day after birth as an amulet.

**ஏழிசை** பெ. (n.) *இசைக்குறிப்புகள்;* seven notes of the diatonic scale.

**ஏழிலைக்கிழங்கு** பெ. (n.) *மரவள்ளிக் கிழங்கு;* tapioca.

**ஏழு** பெ. (n.) *1. ஏழு என்னும் எண்ணுப் பெயர்;* number seven. *2. ஆறின் மேல் ஒன்று;* more than six.

**ஏழை** பெ. (n.) *1. அறிவிலான்;* foolish, silly person. *2. அறியாமை;* ignorance, simplicity. *3. வறியவன்;* indigent person.

**ஏழைத்தன்மை** பெ. (n.) *1. அறியாமை யாகிய பண்பு;* state of ingorance. *2. வறுமை நிலை;* state of poverty.

**ஏழையாளன்** பெ. (n.) *வறியவன்;* poor.

**ஏளனம்** பெ. (n.) *இகழ்ச்சி;* mockery, jeer.

**ஏற்க** இடை. (conj.) *ஏற்றுக்கொள்;* accept.

**ஏற்கனவே** கு.வி.எ. (adv.) *முன்னமே;* before, early.

**ஏற்கை** பெ. (n.) *1. இணங்குகை;* to consent, agree to. *2. வாங்குந்தன்மை;* receiving capacity.

**ஏற்ப** பெ. (n.) *1. உவம உருபு;* adverbial word of comparison. *2. தக்கபடி;* in accordance with. *'அமைச்சரின் ஆணைக் கேற்ப இக்கருத்து அனுப் பப்பட்டது'.*

**ஏற்படுதல்** வி. (v.) *1. உண்டாதல்;* to come into existence. *'அந்த நகரம் அவரால் ஏற்பட்டது'. 2. உடன் படுதல்;* to agree.

**ஏற்படுத்துதல்** வி. (v.) *1. உண்டு பண்ணுதல்;* to create. *'இதை ஏற்படுத் தியவன் பெயர் அறிய இயல வில்லை'. 2. நிறுவுதல்;* to found as an organization. *'இந்த ஊரில் இந்த நிறுவனத்தை ஏற்படுத்தினார்கள்'. 3. தோற்றுவித்தல்;* to create new posting. *'இந்தப் பணிக்கென்று ஒரு பதவி சிறப்பாக ஏற்படுத்தினார்கள்'.*

**ஏற்பாடு** பெ. (n.) *1. ஒழுகை;* arrangement. *'அந்த கருத்தரங்கத்தின் ஏற்பாடு அருமை'. 2. அமர்த்தம்;* appointment to an office. *'அந்த வேலைக்கு அவரை ஏற்பாடு செய்தான்'.*

**ஏற்போன்** பெ. (n.) *இரவலன்;* beggar.

**ஏற்றக்கால்** பெ. (n.) *துலாவைத் தாங்கும் கால்;* frame for supporting a sweep or picottah for irrigation.

**ஏற்றபடி** பெ. (n.) *1. தக்கவாறு;* as is fit. *2. விரும்பியவாறு;* as one likes, according to one's own pleasure.

**ஏற்றம்** பெ. (n.) *1. மேல் ஏறுகை;* mounting as on a ladder. *2. மேடு;* ascent. *'அந்த ஏற்றத்தை அடுத்து எங்கள் வீடு உள்ளது'. 3. கொடியேற்றம்;* hoisting as a flag. *'இன்று நாட்டுக்கொடி ஏற்றம் நடக்கவுள்ளது'. 4. ஏற்றமரம்;* well sweep, picottah. *'எனது கழனியில் மூன்று ஏற்றம் உள்ளது'.*

**ஏற்றம் போடுதல்** வி. (v.) *1. துலாமரம் அமைத்தல்;* to set a well sweep or picottah. *2. தோப்புக்கரணம் போடுதல்;* to punish or humble one's self by taking hold of the right ear with the left hand and the left ear with the right hand and then raise and lower the body many times in quick succession.

**ஏற்றமரம்** பெ. (n.) *துலாமரம்;* long lever or yard picoted on an upright post in an irrigatting mechine as the well sweep or picottah.

**ஏற்றல்** பெ. (n.) *1. ஏற்றுக்கொள்ளுதல் பார்க்க. 2. ஒப்புக்கொள்ளுதல்;* agreeing, accepting. *3. ஊசி வழி மருந் தேற்றுதல்;* to inject the medicine by syringe.

**ஏற்றவாறு** கு.வி.எ. (adv.) *1. ஏற்றபடி;* suitably. *2. முறைப்படி;* proportionately.

**ஏற்றாற்போல** கு.வி.எ. (adv.) *ஏற்றபடி;* appropriately, in accordance with.

**ஏற்றியிறக்குதல்** வி. (n.) *கண்ணேறு கழிக்கும் சடங்கு நடத்துதல்;* to perform the ceremony of waving lights etc., before a person to avert the evil eye.

**ஏற்றுதல்** வி. (v.) *1. தூக்குதல்;* to lift up. *'உத்தரத்தை ஏற்றினான்'. 2. மிகைப் படுத்துதல்; விலையை ஏற்றுதல்;* to increase as price. *3. ஏறச்செய்தல்;* to run over. *'காலில் வண்டியை ஏற்றி*

*விட்டான்'*. 4. *அடுக்குதல்;* to pile up. 5. *குடியேற்றுதல்;* to adonize. 6. *உட்செலுத்துதல்; ஊசி ஏற்றினான்.* 7. *சுடர்கொள்ளுதல்;* to light as a lamp. *'விளக்கேற்றினாள்'*.

**ஏற்றுக்கொள்ளுதல்** வி. (v.) *1. ஒத்துக் கொள்ளுதல், இசைதல்;* to receive, admit, accept. 2. *மேற்கொள்ளுதல்;* to undertaken, engage.

**ஏற்றுதுறை** பெ. (n.) *சரக்கைக் கப்பலில் ஏற்றுந் துறைமுகம்;* place of export or embarkation.

**ஏற்றுமதி** பெ. (n.) *பண்டங்களை அயலகத்துக்கு அனுப்புகை;* export.

**ஏற** கு.வி.எ. (adv.) *1. அதிகமாக;* so as to exceed; more than. *'அரைப்படிக்கு ஏறக்கொடு'*. 2. *உயர;* on high.

**ஏறக்குறைய** கு.வி.எ. (adv.) *சற்றொப்ப (சுமார்);* more or less, about.

**ஏறத்தாழ** கு.வி.எ. (adv.) *ஏறக்குறைய பார்க்க.*

**ஏறவிறங்கப் பார்த்தல்** வி. (v.) *மேலும் கீழும் மேலும் பார்த்தல்;* to state at, surves from head and foot. *'அவன் என்னை ஏற இறங்கப் பார்த்தான்'*.

**ஏறிட்டுப்பார்த்தல்** வி. (v.) *நிமிர்ந்து பார்த்தல்;* to look up. *'என்னை ஏறிட்டும் பார்க்கவில்லை'*.

**ஏறு[2]தல்** வி. (v.) *1. உயர்தல்;* to go up. 2. *மேலேறுதல்;* to rise, ascend. *'குன்றில் ஏறு'*. 3. *வளர்தல்;* to grow. *'பயிறேறி விட்டது'*. 4. *உட்செலுத் துதல்;* to enter, to penetrate. *'அவர் சொன்னது மனதில் ஏறவில்லை'*. 5. *குடி யேறுதல்;* to settle. 6. *ஏற்றி வைக்கப்பெறுதல்;* to be laden as cargo. *'சரக்குந்தில் மூட்டை ஏற்றப் பட்டது'*.

**ஏறுக்குமாறு** பெ. (n.) *தாறுமாறு;* improper, unruly behaviour.

**ஏறுநெற்றி** பெ. (n.) *அகன்ற நெற்றி;* broad forehead.

**ஏறுபடி** பெ. (n.) *அதிகப் படித்தரம்;* extra bathe to a servant.

**ஏறுபொழுது** பெ. (n.) *முற்பகல்;* forenoon.

**ஏறுமாறு** பெ. (n.) *1. உண்மை நெறியி னின்று மாறுதல்;* deviation from the path of truth or justice. 2. *குழப்பம்;* disorder. 3. *தாறுமாறு;* improper.

**ஏறுமி** பெ. (n.) *1. ஒரு துணை வினை;* auxiliary verb. *'நடந்தேறுதல்'*. 2. *காளை;* bull.

**ஏறுமுகம்** பெ. (n.) *1. வளர்நிலை;* waxing state. 2. *சினம் மிகு முகம்;* angry face.

**ஏறுவெயில்** பெ. (n.) *முற்பகல் வெயில்;* increasing heat and sunshine. *'ஏறு வெயில் உடம்பிற்கு ஆகாது'*.

**ஏறெடுத்து பார்த்தல்** வி.அ. (v.) *1. தலை நிமிர்ந்து பார்த்தல்;* to be in an upright or a prepandicula posture. *'அவள் யாரையும் ஏறெடுத்துப் பாராள்'*.

**ஏன்** கு.வி.எ. (adv.) *1. எதற்கு;* why. 2. *தன்மையொருமைப் பெயர் வினைகளில் வரும் ஈறு;* first person singular suffix. *'வந்தேன், அடியேன்'*.

**ஏனம்** பெ. (n.) *கலம்;* vessel.

**ஏனென்றால்** இடை. (conj.) *எதற்காக என்றால்;* because. *'நான் அப்படிச் சொல்வது ஏனென்றால்'*.

**ஏனையவர்** பெ. (n.) *மற்றையோர்;* others.

## ஐ

**ஐக்கிய நாடுகள் அவை** பெ. (n.) *போரைத் தடுக்கவும் மனித உரிமை, சுதந்திரம், பண்பாடு போன்றவற்றைப் பாது காக்கவும் ஏற்படுத்தப்பட்ட, உலக நாடுகளை உறுப்பு நாடுகளாகக் கொண்ட அனைத்துலக அமைப்பு;* united nations organization.

**ஐஞ்செலவு** பெ. (n.) *குழம்பு, கூட்டு போன்றவை செய்வதற்காகச் சேர்க்கப்படும் உசிலைப் (மசாலா) பொருள்கள்;* spices condiments.

**ஐந்தறிவு** பெ. (n.) *(பகுத்தறிவு தவிர்ந்த மற்ற) ஐந்து புலன்களின் மூலம் பெறும் அறிவு;* five senses.

**ஐந்தாண்டுத் திட்டம்** பெ. (n.) *அனைத்துத் துறைகளிலும் நாடு முன்னேறுவதற்குக் குறிப்பிட்ட இலக்குகளை அடைய, ஐந்தாண்டுகளில் செயல்படுத்துவதற்கு நடுவண் அரசு வகுக்கும் திட்டம்;* five year plan (of the central government for planned economic grwoth). '*சிற்றூர் வளர்ச்சிக்கு ஐந்தாண்டுத் திட்டங்கள் உதவியுள்ளன*'.

**ஐந்தாம்படை** பெ. (n.) *எதிரிகளுக்கு உதவி செய்யும் கும்பல்;* fifth column.

**ஐந்துணவு** பெ. (n.) *கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல் முதலிய ஐந்து வகையால் உண்ணுதற்குரிய உணவுப்பண்டம்;* five kinds of food differentiated according to the manner of taking them viz., bitting, licking, drinking, swallowing and munching.

**ஐந்தொகை** பெ. (n.) *வரவு, செலவு, கொள்முதல், விற்றுவரவு, இருப்பு ஆகிய ஐந்தையும் சரி பார்க்கும் கணக்கு விபரம்;* balance sheet.

**ஐம்படைத்தாலி** பெ. (n.) *கழுத்திலே பிள்ளைகளணியும் ஐந்து படைக்கலன் உருவமைந்த அணி;* Gold pendant worn by children in a necklace bearing in relief of five weapons of visnu as an amulet.

**ஐம்புலன்** பெ. (n.) *பார்த்தல், கேட்டல், முகர்தல், சுவைத்தல், தொடுதல் ஆகிய ஐந்து உணர்வுகள்;* five senses.

**ஐம்பெருங்குழு** பெ. (n.) *அரசர்க்கு இன்றியமையாதவரான அமைச்சர், அந்தணர் (அறவோர்), படைத் தலைவர், தூதர், ஒற்றர் என்னும் ஐவகை அரசியல் தலைவர்;* five chief officers of a king.

**ஐம்பெருங்குற்றம்** பெ. (n.) *கொலை, பொய், களவு, கள்ளுண்ணுதல், சூது என்ற ஐவகைத் தீச்செயல்கள்;* the five heinous sins.

**ஐம்பொறி** பெ. (n.) *கண், காது, மூக்கு, வாய், உடல் ஆகிய ஐந்து உறுப்புகள்;* five sense organs.

**ஐம்பொன்** பெ. (n.) *பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்ற ஐவகை மாழைகள்;* five chief metals, viz., gold, silver, copper, iron, and lead.

**ஐயப்படுதல்** வி. (v.) *1. ஐயுறுதல்;* suspect. '*மயங்கிய நிலையில் இருந்த அவன் தூக்க மாத்திரையைச் சாப்பிட்டிருக்கலாம் என்று மருத்துவர் ஐயப்பட்டார்*'. *2. சந்தேகப்படுதல்;* have misgivings about; doubt. '*இந்தச் செய்தியில் ஐயப்பட ஒன்றுமில்லை*'.

**ஐயா** பெ. (n.) *ஆண்களில் அகவையில் மூத்தவரையோ உயர்ந்த நிலையில் இருப்பவரையோ குறிக்கும்போது பயன்படுத்தப்படும் மதிப்புரவுச் சொல்;* sir. '*ஐயா, நீங்கள் எங்கு செல்ல வேண்டும்?*'. *2. தந்தை அல்லது தந்தையின் தந்தை;* father or (paternal) grand father. '*சின்னப் பையனாக இருக்கும்போது ஐயாவோடு சந்தைக்குச் சென்றிருக்கிறேன்*'.

**ஐயோ** இ.சொ. (n.) *ஒருவர் தன்னுடைய வலி, துக்கம், இரக்கம் முதலியவற்றைத் தெரிவிப்பதற்கு வாக்கியத்தின் தொடக்கத்தில் பயன்படுத்தும் இடைச்சொல்;* particle used for expressing pain, sorrow, pity, etc., '*ஐயோ! தலைவலி உயிர் போகிறதே!*'.

**ஐவகைமன்றம்** பெ. (n.) *வெள்ளிடை, இலஞ்சி, நெடுங்கல், பூதச்சதுக்கம், பாவை என்னும் பெயர்களில் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த ஐந்து வகையான மன்றங்கள்;* names of five city - squares in ancient poompugār.

## ஒ

**ஒக்க** கு.வி.எ. (adv.) *1. ஒரு சேர;* together. *2. மிகுதியாக;* plentifully.

**ஒக்கடித்தல்** வி. (v.) *செப்பனிடுதல்;* to repair, renovate.

**ஒக்கநோக்குதல்** வி. (v.) *சமமாகப் பார்த்தல்;* to look at dispassionately.

**ஒக்கலித்தல்** வி. (v.) *1. ஆவலங் கொட்டுதல்;* to shout in joy. hullabaloo. *2. உறவினரோடு கலந்து பேசுதல்;* to converse freely.

**ஒக்கலை** பெ. (n.) *இடுப்பு;* hip. *'ஒக்கலை வேண்டியழல்' (பழ.290).*

**ஒக்களித்தல்** வி. (v.) *கக்கலுக்கு முந்திய வாயசைவு;* inclination to vomit.

**ஒக்கிடுதல்** வி. (v.) *பழுதுபார்த்தல்;* repair. *'கடிகாரத்தை ஒக்கிடக் கொடுத்திருக் கிறேன் '(உ.வ.).*

**ஒக்குதல்** வி. (v.) *1. கொப்புளித்தல்;* to gargle. *2. பிற்படவிடுதல்;* to leave behind.

**ஒக்கு** பெ. (n.) *இடுப்பு;* hip. *'ஒக்கில் குழந்தையோடு ஓடி வந்தாள் ஒரு பெண்'.*

**ஒச்சம்** பெ. (n.) *குற்றம், குறைவு;* defect.

**ஒஞ்சட்டையன்** பெ. (n.) *ஒல்லியானவன்;* tall lean man.

**ஒஞ்சரித்தல்** வி. (v.) *ஒரு பக்கமாய்ச் சாய்தல்;* to lie on one side.

**ஒட்ட[1]** கு.வி.எ. (adv.) *1. முற்றிலும், முழுமையாக (அகற்றுதல், நீக்குதல்);* completely. *'பாலை ஒட்டக் கறந்து விடாதே'. 2. (அடிப்பகுதியைத் தொடும்படி) மிகவும் குட்டையாக வெட்டுதல்;* closely (to the root). *'முடியை ஒட்ட வெட்டி விட்டான்'.*

**ஒட்ட[2]** கு.வி.எ. (adv.) *1. இறுக்கமாக;* tightly. *'ஏன் இப்படி சட்டை ஒட்டப் போட்டுக் கொண்டிருக்கிறாய்'. 2. நெருக்கமாக;* closely. *'அவனோடு ஒட்ட உட்கார்ந்துப் பேசாதே'.*

**ஒட்டடை** பெ. (n.) *கூரையிலும் சுவர் மூலையிலும் திரிதிரியாய்த் தொங்கிக் கொண்டியிருக்கும் வலை அதன்மீது படிந்திருக்கும் தூசி;* dusty cob webs.

**ஒட்டடைக் கம்பு** பெ. (n.) *ஒரு முனையில் துடைக்கும் நார் பொருத்தப்பட்ட நீளமான கழி;* long stick attached coconut fibre at one end.

**ஒட்டடைக்குச்சி** பெ. (n.) *ஒட்டடைக் கம்பு பார்க்க.*

**ஒட்டப்பிடித்தல்** வி. (v.) *1. இழுத்துப் பிடித்தல்;* to hold fast or tight. *2. வலுக் கட்டாயம் செய்தல்;* to apply pressure to, to compel.

**ஒட்டம்** பெ. (n.) *1.ஓடுதல்;* to run. *2.பந்தயம்;* wager, stake.

**ஒட்டமொட்டுதல்** வி. (v.) *பந்தயம் போடுதல்;* to wager.

**ஒட்டல்** பெ. (n.) *சேர்க்கை;* adhesion, contact attachment.

**ஒட்டவிடுதல்** வி. (v.) *சேரவிடுதல்;* to let one join, permit access.

**ஒட்டாங்கிளிஞ்சில்** பெ. (n.) *உடைந்த சிப்பி;* broken oyster shell.

**ஒட்டாநோய்** பெ. (n.) *தொற்றா நோய்கள்;* disease which do no infect persons.

**ஒட்டாமல்** வி.அ. (adj.) *'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின் பின்) முழுவதுமாக;* (to removing) totally. *'பேசவொட்டாமல் குழந்தை அழுதுகொண்டேயிருக்கிறது'.*

**ஒட்டார்** பெ. (n.) *பகைவர்;* foes, those who will not unite.

**ஒட்டாரக்காரன்** பெ. (n.) *பிடிவாத முள்ளவன்;* obstinate fellow, contumacious.

**ஒட்டாரங்கட்டுதல்** வி. (v.) *பிடிவாதம் பண்ணுதல்;* to be obstinate, to be perverse head strong.

**ஒட்டாரம்** பெ. (n.) *முற்கூறியதை யொட்டியே இறுதிவரை மாறாது நிற்றல் (பிடிவாதம்);* constanton principles.

**ஒட்டி** பெ. (n.) *1. அடுத்தாற்போல்;* close to, near by, alonside. *'கோயிலை யொட்டி கடைத்தெரு'. 2. அடுத்து என்னும் பொருளில் தொடர்ந்து;* following. *'மின்தட்டுப்பாட்டை யொட்டி தொழிலுருவாக்கம் குறைந் துள்ளது'. 3. ஒரு குறிப்பிட்ட அளவிலேயே இருந்து கொண் டிருத்தல்;* constantly. *'இந்த மழைக் காலத்தில் அணையின் நீர்மட்டம் நூறு அடியையொட்டியே உள்ளது'. 4. உடனே ஒட்டும் வகையில் பசை பூசிய ஒட்டுத்தாள்;* sticker.

**ஒட்டிக்கிரட்டி** பெ. (n.) *ஒன்றுக்கு இரு மடங்கு;* twice as much (as usual). *'எண்ணெய் விலை ஒட்டிக்கிரட்டி யாக ஏறிவிட்டது'.*

**ஒட்டிக்கொடுத்தல்** வி. (v.) *உறுதி பண்ணித் தருதல்;* to give an assurance; to solemnly promise, guarantee.

**ஒட்டிக்கொள்ளல்** பெ. (n.) *நோய் பற்றுதல்;* infection of disease by contact with a patient directly.

**ஒட்டிப்போதல்** வி. (v.) *கூடப்போதல்;* to go along with.

**ஒட்டியாணம்** பெ. (n.) *பெண்களின் இடுப்பைச்சுற்றி அணிந்துகொள் ளும் பொன் அல்லது வெள்ளியாலான பட்டையான அணிவகை;* Gold or Silver girdle like ornament worn by women around the waist over the saree.

**ஒட்டில்** வி.அ. (adj.) *ஓரத்தில்;* on the edge. *'திண்ணையின் ஒட்டில் அமர்ந்திருந்த குழந்தை விழுந்துவிட்டது'.*

**ஒட்டுதல்** வி. (v.) *1. ஒட்டவைத்தல்;* to stick, as with paste or gum. *'இந்த முகவரித்தாளைப் புத்தகத்தில் ஒட்டு'. 2. புழு, பூச்சி, அட்டை முதலியன சட்டையிலோ காலிலோ ஒட்டுதல்;* (of worm, insect, etc.,) stick, press close. *'சட்டையில் பூச்சியொட்டிக் கொண்டுவிட்டது'. 3. ஒருவரோ (அ) ஒன்றோடு நெருக்கமாதல்;* atached or associate with oneself. *'ஊரிலிருந்து வந்த என் தங்கையோடு குழந்தை யொட்டிக் கொண்டுவிட்டது'.*

**ஒட்டு** பெ. (n.) *1. கிழிந்த துணியில் அப்பகுதியை மறைத்து தைக்கும் துண்டுத் துணி;* patch (on the hole of cloth). *'கிழிந்த சட்டையில் ஒட்டு போட்டுள்ளது'. 2. வெவ்வேறு இன மா போன்ற மரக்கன்றுகளை ஒட்டு முறையில் ஒட்டி புதிய ஒட்டு மர வகையை உருவாக்குதல்;* graft.

**ஒட்டுக்காய்ச்சல்** பெ. (n.) *தொற்றுக் காய்ச்சல்;* contagious fever.

**ஒட்டுக்குடி** பெ. (n.) *பிறரிடத்திற் கூடி வாழுங்குடி;* Co-tenancy in a house.

**ஒட்டுக்குடுமி** பெ. (n.) *சிறு உச்சிக் குடுமி;* tiny tuft or lock of hair on the crown of the head.

**ஒட்டுக்கேள்(ட்)தல்(டல்)** வி. (v.) *பிறர் பேசுவதை மறைந்திருந்தோ (அ) தொலைபேசிகளுக்கிடையிலோ கேட்டல்;* over hear secretly tap (phone, etc.,).

**ஒட்டுண்ணி** பெ. (n.) *மாந்தன், விலங்கு, செடி ஆகியவர்களின் உடல் மேற் புறத்தில் இருந்து உயிர்ச்சாற்றை*

உறிஞ்சி உயிர்வாழும் உயிரினம்; parasite.

**ஒட்டுத்தாடி** பெ. (n.) *நாடகத்தில் நடிகர்கள் ஒட்டி வைத்து நடிக்கும் பொய்த்தாடி;* false beard.

**ஒட்டுத்திண்ணை** பெ. (n.) *பெருந் திண்ணைக்குச் சார்பாகக் கீழ்ப்புறங் கட்டப்படும் சிறு திண்ணை;* raised masonry projection along side the pial.

**ஒட்டுத்துணி** பெ. (n.) *உடலை மறைக்கும் குறைந்த அளவுத்துணி;* rags. *'உடம்பில் ஒட்டுத்துணி கூட இல்லாத ஏழை விளையாட்டுச் சிறுவன்'.*

**ஒட்டுத்தையல்** பெ. (n.) *ஒட்டுத் துணி வைத்துத் தைக்குந் தையல்;* patching needle work.

**ஒட்டுநோய்** பெ. (n.) *தொற்று நோய்;* infectious or contagious disease.

**ஒட்டுப்பலகை** பெ. (n.) *மிக மெல்லிய தகடு போன்ற பலகைகளை ஒன்றின் மீது ஒன்றாக ஒட்டிய வலுவான மொத்தப் பலகை;* plywood.

**ஒட்டுப்பழம்** பெ. (n.) *ஒரே பழ மரத்தின் இரு வகைகளை ஒட்டிய (குறிப்பாக) மாமரங்களை ஒட்டு மரத்தின் பழம்;* graft fruit, esp. the Mango.

**ஒட்டுப்பார்த்தல்** வி. (v.) *உளவு பார்த்தல்;* to spy.

**ஒட்டுப்புண்** பெ. (n.) *தொட்டவுடன் ஒட்டுகின்ற புண்;* sticky sore as ulcer.

**ஒட்டுப்பொறுக்கி** பெ. (n.) *எச்சிற் பொறுக்கி;* beggar who lives on leavings of food.

**ஒட்டுப்பொறுக்குதல்** வி. (v.) *சிதறிய வற்றைச் சேர்த்தல்;* to glean scattered remains as of food, to scrape together.

**ஒட்டுப்போடுதல்** வி. (v.) *துண்டு துணிகளை வைத்து இணைத்தல்;* to stick on as a piece of cloth to sew on, as a patch.

**ஒட்டுமருந்து** பெ. (n.) *துணித்த சதைப் பாளங்களை ஒட்டவைக்கும் மருந்து;* plastic materials used in medicine, plaster.

**ஒட்டுமீசை** பெ. (n.) *திரைப்படம், நாடகங்களில் நடிகர்கள் ஒட்டிக் கொண்டு நடிக்கும் செயற்கை மீசை;* false moustache.

**ஒட்டுமொத்தம்** பெ. (n.) *தனித்தனி வகை யாக கூட்டி, பின் ஒட்டு மொத்தமாகக் காட்டிய மொத்தத் தொகை;* collective total of different kinds of totals.

**ஒட்டுவாரொட்டி** பெ. (n.) *ஒருவரையோ அவர் பயன்படுத்தும் பொருள் களையோ தொட்ட அளவிலேயே பரவும் நோய் வகை;* contagious disease.

**ஒட்டுவேலை** பெ. (n.) *கட்டிடங்களின் மேல்தளத்தைப் போட கலவையைப் பரப்பி உருவாக்கும் வேலை;* roofing with concrete.

**ஒட்டுறவு** பெ. (n.) *உறவு, நட்பு ஆகிய வற்றினும் அதிகமான பாசத்தோடு கூடிய உறவு;* attachment.

**ஒட்டைக் கழுத்து** பெ. (n.) *ஒட்டகத்தைப் போல் நீண்ட கழுத்து;* neck unusually long like the one of a camel.

**ஒடிசல்** பெ. (n.) *1. (உடல் தோற்றத்தில்) ஒல்லி;* (of one's body) thin, slender. *'சற்று ஒடிசலான உடம்பு'.*

**ஒடித்தல்** வி. (v.) *1. கழி, எலும்பு போன்றவற்றை இரண்டாகுமாறு உடைத்தல்;* break. *'முழுக் கரும்பைக் கையால் உடைத்தான்'. 2. ஊர்தி போன்றவற்றை (ஒடிப்பது போல்) வளைத்துத் திரும்புதல்;* turn sharply (to the side). *'கழுத்தை ஒடித்துப் பார்த்தான்'.*

**ஒடிதல்** வி. (v.) *1. எலும்பு, மரக்கிளை, கம்பு முதலியவை துண்டாக முறிதல்;* break (of the branches of trees, etc.,). *2. (மனம்) சோர்வுற்று செயலிழத்தல்;*

be heart broken. *'இறப்பு செய்தியால் மனம் ஒடிந்து போனான்'.*

**ஒடுக்கப்பட்ட** பெ.அ. (adj.) *(சாதிய மைப்பின் காரணமாக) கல்வி, வேலை வாய்ப்பு, பொது நிலை ஆகியவற்றில் சமநிலை தரப்படாமல் அடக்கி வைக்கப்பட்டுள்ள;* oppressed class.

**ஒடுக்கம்** பெ. (n.) *1. குறுகல்;* harrow. *'ஒடுக்கமான சந்து'. 2. பொது இடங்களின் கூட்டமாக அமர்ந் திருக்கும்போது கை கால் மற்றவர் மீது படாது கட்டுப்பாடாக அமர்ந் திருக்கும் வகை;* state of lying or sitting huddled up. *'கூட்டத்தில் அடக்க ஒடுக்கமாக உட்கார வேண்டும்'.*

**ஒடுக்கல்** பெ. (n.) *ஏனங்கள் முதலிய வற்றில் ஏற்படும் நெளிவு;* dent in the vessels. *'ஏனம் ஒடுக்கலாகிவிட்டது'.*

**ஒடுக்கிடம்** பெ. (n.) *மறைவிடம்;* secret place.

**ஒடுக்குதல்** வி. (v.) *1. கலகம் அல்லது போராட்டம் செய்பவரை அடக் குதல்;* put down; repress (rioters, a rebellian, etc.,). *'கலகக்காரர்களை அடக்கக் காவல்துறை தேவைப் படுகிறது'. 2. உரிமைகளைப் பறித்துக் கட்டுப்படுத்துதல்;* suppress. *'செய்தித்தாள் காரர்களைக் கட்டுப் படுத்தித்தான் தீர வேண்டும்'. 3. உடம்பைக் குறுக்கிக் கொள்ளுதல்;* squeeze. *'கூட்டத்தில் நுழைய உடம்பை ஒடுக்கிக் கொண்டுதான் செல்ல வேண்டி யிருந்தது'.*

**ஒடுக்கு** பெ. (n.) *ஏனத்தில் ஏற்படும் நெளிவு;* dent in a vessel. *'குடத்தைக் கீழே போட்டதில் ஒடுக்கு உண்டாகி விட்டது'.*

**ஒடுக்குமுறை** பெ. (n.) *அடக்குமுறை;* repression. *'வரலாறு நெடுகிலும் ஏதோ ஒரு பிரிவினர் அடக்கு முறைக்கு ஆளாகி வந்தேயுள்ளனர்'.*

**ஒடுக்குவாய்** பெ. (n.) *கோணல் வாய்;* wry mouth, crooked mouth.

**ஒடுங்கிய** பெ.அ. (adj.) *1. குறுகிய, சுருங்கிய, ஒடுக்கு விழுந்த;* narrow, small, drawnin. *'வாய் ஒடுங்கிய பாத்திரம். ஒடுக்கு விழுந்த கன்னம்'.*

**ஒடுங்குதல்** வி. (v.) *1. முனைப்பாக இருந்த நிலையில் குறைதல்;* (sound volume) become reduced, become thin. *'மேலதிகாரியைக் கண்டவுடன் அவரின் கலகலப்பு ஒடுங்கி விட்டது'.*

**ஒடுங்குமேனி** பெ. (n.) *இளைக்குமுடம்பு;* emaciated.

**ஒண்டி** பெ. (n.) *துணை இல்லாமல் தனியாக, ஒற்றை;* become alive. *'வீட்டில் மனைவி ஒண்டியாக இருப்பாள்'.*

**ஒண்டிக்கட்டை** பெ. (n.) *யாரும் துணை இல்லாத வாழ்க்கை அமைந்தவர்;* one who is alone. *'எனக்கென்ன ஒண்டிக் கட்டை'.*

**ஒண்டிக்காரன்** பெ. (n.) *தனிமை யானவன்;* single person, lonely.

**ஒண்டுதல்** வி. (v.) *ஒளிந்துகொள்ளுதல், மறைந்து கொள்ளுதல்;* to hide.

**ஒண்டுக்குடித்தனம்** பெ. (n.) *1. மற் றொருவர் வாழும் வீட்டிலேயே ஒரு அறைக்கு பணம் கொடுத்து குடி யிருத்தல்;* living as a co-tenant. *2. ஒரு வீட்டில் தனித்தனியாகத் தடுக்கப் பட்ட பகுதிகளில் பணம் (கூலி) கொடுத்து வாழுதல்;* living in a tenement house.

**ஒத்த** பெ.அ. (adj.) *வெவ்வேறாக இருப்பவர்களில் அல்லது இருப்பன வற்றின் பொதுத்தன்மை;* similar. *'சென்னையை ஒத்த நகரங்களில் மக்கள்தொகை நாளுக்கு நாள் பெருகி வருகிறது'.*

**ஒத்தடம்** பெ. (n.) *வெந்நீரில் துணியை நனைத்து அல்லது இளஞ்சூட்டில் உள்ள தவிட்டைத் துணியில் கட்டி, வலி அல்லது சளி நீங்குவதற்காக உடம்பில் சிறிது வைத்து எடுத்தல்;* fomentation; poultice. *'இடுப்பு வலிக்கு ஒத்தடம் கொடுத்தால் சரியாகும். அவருடைய ஆறுதல் சொற்கள் அவருடைய மனத்தில் ஏற்பட்ட வலிக்கு ஒத்தடமாக அமைந்தது'.*

**ஒத்தணம்** பெ. (n.) *ஒத்தடம் பார்க்க.*

**ஒத்தது** பெ. (n.) *தகுதியானது;* that which is commensurate with fit consistent.

**ஒத்தபடி** கு.வி.எ. (adv.) *ஏற்றவாறு;* agreeably suitably.

**ஒத்தல்** வி. (v.) *1. சமமாதல்;* to be equal. *2. போலுதல்;* to resemble. *3. இசைதல்;* to be acceptable.

**ஒத்தாசை** பெ. (n.) *ஒருவருடைய வேலையைக் குறைப்பதற்குச் செய்யும் உதவி;* help, assistance. *'தள்ளாத அகவையில் ஒத்தாசைக்கு ஆள் வேண்டாமா?'.*

**ஒத்தி** பெ. (n.) *பணம் கடனாகப் பெற தன் உடைமைகளில் ஒன்றை கடன் தருபவருக்கு கொடுத்துவிடுவது;* usufructuary mortgage.

**ஒத்திகை** பெ. (n.) *நாடகம், இசைக் கச்சேரி, தேர்வு போன்றவற்றை நிகழ்த்துவதற்கு முன் சரிபார்க்கும் பயிற்சி;* rehearsal. *'ஒத்திகையின் போது நன்றாக நடிக்கும் நீ மேடையில் ஏன் தடுமாறுகிறாய்?'. 2. பின்னால் நடக்கப்போகும் ஒரு நிகழ்ச்சியை முன்னதாக நிகழ்த்திப் பார்க்கும் செயல்;* rehearsal, trial. *'இந்திய விமானப்படை பல்வேறு வகையான ஏவுகணைகளைச் செலுத்தி ஒத்திகை நடத்துகிறது'.*

**ஒத்திசைவு** பெ. (n.) *பொருத்தம்; இயைபு;* harmony. *'கட்டடங்கள் சுற்றுப்புறத்துடன் ஒத்திசைவு கொண்டதாக இருக்க வேண்டும்'.*

**ஒத்திப்போடுதல்** வி. (v.) *ஒரு செயலை அல்லது பணியைச் செய்ய வேண்டிய நாளில் அல்லது நேரத்தில் செய்யாமல் தள்ளிப்போடுதல்;* postpone; defer. *'ஊருக்குப் போவதை ஒத்திபோட முடியாதா?'.*

**ஒத்திருத்தல்** வி. (v.) *1. இசைந்திருத்தல்;* to live in harmony concord, friendship. *2. ஒன்று போல் இருத்தல்;* to be similar.

**ஒத்திவைப்பு** வி. (v.) *ஒத்திப்போடு பார்க்க.*

**ஒத்திவைப்புத் தீர்மானம்** பெ. (n.) *முதன்மையான பொதுச் சிக்கல் ஒன்றைக் கலந்துரையாடும் பொருட்டு பாராளுமன்றம், சட்டமன்றம் முதலியவற்றில் அவையின் அன்றைய நடவடிக்கைகளைத் தள்ளி வைக்க எதிர்கட்சிகள் கொண்டு வரும் தீர்மானம்;* motion of adjournment on a matter of public importance.

**ஒத்துதல்** வி. (v.) *விலகுதல், ஒதுங்கி நிற்றல்;* to make room for; to take on to one side.

**ஒத்துக்கொள்ளுதல்** வி. (v.) *1. ஒருவருடைய செயல், கருத்து முதலியவற்றைச் சரி என்று மற்றவர் ஏற்றுக்கொள்ளுதல்;* accept (as true or correct); agree with. *'நான் சொல்வதையெல்லாம் நீ ஒத்துக் கொள்ள வேண்டும் என்கிற தேவையில்லை'. 2. ஒருவரின் தவறான செயலுக்கு அவரே பொறுப்பை ஏற்றுக்கொள்ளுதல்; ஒப்புக்கொள்ளுதல்;* admit. *'முதலில் நீ செய்தது தவறு என்பதை ஒத்துக் கொள்'. 3. சம்மதித்தல்;* consent; agree. *4. உணவு, நீர் முதலியவை ஒருவருடைய உடல் நலத்திற்கு ஏற்றதாக இருத்தல்; பொருந்துதல்;* food, climate,

water, etc., be agreeable to one's health. *'எண்ணெய் பண்டம் அவளுக்கு ஒத்துக் கொள்ளாது'.*

**ஒத்துநடத்தல்** வி. (v.) *இசைந்தொழுகுதல்;* to act agreeably to the wishes of another, live in harmony.

**ஒத்துப்போதல்** வி. (v.) *இணங்கிப் போதல்;* be in agreement with; get along.

**ஒத்துவருதல்** வி. (v.) *இணக்கமாக இருத்தல்; சரிபட்டு வருதல்;* be in harmony with. *'எனக்கும் அவருக்கும் ஒத்து வராததால் அவரிடம் பேசுவதைக் குறைத்துக் கொண்டேன்'.*

**ஒத்துவாழ்தல்** வி. (v.) *மனமொத்து வாழ்தல்;* to live in harmony as a family relation, fellow servants.

**ஒத்துழைக்கை** பெ. (n.) *கூடிவினை செய்கை;* co-operation working in union.

**ஒத்துழைத்தல்** வி. (v.) *ஒருவரால் செய்ய முடியாத பணியை முடிப்பதற்கு மற்றவர் உடனிருந்து உதவுதல்;* co-operate. *'எந்தத் திட்டமுமே மக்கள் ஒத்துழைத்தால்தான் நிறைவேறும்'.*

**ஒத்துழைப்பு** பெ. (n.) *இணக்கமான உதவி;* co-operation; assistance. *'இந்தத் திரைப்படம் வெற்றிகரமாக அமைய பலருடைய ஒத்துழைப்பு தேவைப் பட்டது'.*

**ஒத்துழையாமை** பெ. (n.) *பிற கொள்கையோடு இணங்கி நடவாமை;* non-co-operation, dissent.

**ஒத்தூதுதல்** வி. (v.) *எல்லாவற்றிற்கும் ஒத்துப்போதல்;* say yes to; be a yes - man. *'தலைவர் சொல்வதற்கெல்லாம் ஒத்தூதுவதை விட்டுவிட்டு எது சரி என்று எடுத்துச் சொல்லக் கூடாதா?'.*

**ஒதுக்கிடம்** பெ. (n.) *ஒதுங்குமிடம்;* place of retirement.

**ஒதுக்கிப்போடுதல்** வி. (v.) *இனத்தினின்று நீக்கிவிடுதல்;* to expel, as from caste.

**ஒதுக்கிவைத்தல்** வி. (v.) *ஒருவரையோ ஒரு குடும்பத்தையோ அவர் சார்ந்த மக்களுடன் எந்த வகைத் தொடர்பும் இல்லாத வகையில் விலக்கி வைத்தல்; தள்ளிவைத்தல்;* exclude something from the community; ostracize. *'திருடியதால் பஞ்சாயத்தில் அவனை ஊரைவிட்டு ஒதுக்கி வைத்து விட்டார்கள்'.*

**ஒதுக்குதல்** வி. (v.) *1. திரைச்சீலை, முடி முதலியவற்றை ஒரு பக்கமாகத் தள்ளுதல்;* pull back; adjust hair; draw something to one side. *'வெளிச்சம் போதவில்லை சாளரத் திரைச் சீலையை ஒதுக்கு'.* 2. *ஒன்றை ஒன்றின் ஓரத்தில் இருக்கச் செய்தல்;* push to a corner; bring to a side. *'தனக்குப் பிடிக்காத பொரியலை இலையின் ஓரத்தில் ஒதுக்கிவிட்டான்'.* 3. *குறிப்பிட்ட தொகை, நேரம், இடம் போன்றவற்றைக் குறிப்பிட்ட ஒருவருக்கு அல்லது நோக்கத் துக்காக தனியாகப் பிரித்து வைத்தல்;* set aside; allot.

**ஒதுக்குப் பச்சை** பெ. (n.) *புழுங்கலில் வேகாத நெல்;* paddy that is not well boiled and adhering to the sides of the vessel.

**ஒதுக்குப்படல்** பெ. (n.) *காற்றைத் தடுக்குங் கிடைப் படல்;* shed to screen cattle from the wind.

**ஒதுக்குப்புறம்** பெ. (n.) *ஊரிலிருந்து சற்றுத் தொலைவில் தள்ளி அமைந்திருக்குமிடம்;* remote or secluded place. *'ஊருக்கு ஒதுக்குப்புறமாக இருக்கும் தோப்பில் கூடிப் பேசினார்கள்'.*

**ஒதுங்குதல்** வி. (v.) *1. இருந்த இடத்திலிருந்து அகலுதல்; விலகுதல்;* move away; be removed. *'அதிகாரியைக் கண்டதும் ஒதுங்கி வழிவிட்டான்'.*

*2. தனிமைப்படுத்திக் கொள்ளும் வகையில் தனித்திருத்தல்; விலகி யிருத்தல்;* keep aloof; keep away. *3. ஆடை முதலியன அதற்கு உரிய இடத்தில் இருக்காமல் விலகி யிருத்தல்;* (of clothes) gather to one side. *'கீழே விழுந்து கிடந்தவரின் வேட்டி ஒதுங்கியிருந்தது'. 4. நீர் நிலைகளில் கரையோரம் சேர்தல்;* be washed ashore. *'இறந்த மீன்கள் கடலோரம் ஒதுங்கின்'. 5. வீட்டு விலக்கு ஏற்படுதல்;* have one's period. *6. இயற்கை இடையூறு (உபாதை) களைத் தீர்த்துக்கொள்ள தனிமை யான இடத்திற்குப் போதல்;* go to secluded spots (to answer the call of nature). *'அந்த ஊரில் ஒதுங்க இட மில்லை'.*

**ஒப்பங்கூறு** பெ. (n.) *பங்கு ஓலை(பத்திரம்), பங்காவணம்;* partition deed showing division of property.

**ஒப்படி** பெ. (n.) *அறுவடை;* harvest.

**ஒப்படைத்தல்** வி. (v.) *1. தன் பொறுப் பிலுள்ள ஒருவரை அல்லது ஒன்றை மற்றொருவரிடம் பொறுப்பில் விடுதல்;* entrust; hand over. *'இவனை உன்னிடம் ஒப்படைக்கிறேன். நீதான் இவனை முன்னுக்குக் கொண்டு வரணும்'. 2. அதிகாரத்தில் இருப்பவரிடம் அல்லது உரியவரிடம் சேர்ப்பித்தல்;* handover. *'கொள்ளை யர்கள் தங்களின் கொலைக் கருவிகளைக் காவல் துறையினரிடம் ஒப்படைத்தனர்'.*

**ஒப்படைப்பு** பெ. (n.) *முறைமன்ற ஆணையை நிறைவேற்றுகை;* delivery in execution court proceedings.

**ஒப்பந்தம்** பெ. (n.) *உடன்படிக்கை;* agreement, contract.

**ஒப்பம்** பெ. (n.) *கையொப்பம்;* signature.

**ஒப்பாரி** பெ. (n.) *அழுகைப்பாட்டு;* lamentation by women making doleful reference to the personal appearance and good of the deceased.

**ஒப்பித்தல்** வி. (v.) *பாடத்தை மனனஞ் செய்து சொல்லுதல்;* to recite by recalling to mind what has been learnt, as a lesson.

**ஒப்பிடுதல்** வி. (n.) *மூலப் படியுடன் ஒத்துப் பார்த்தல்;* to compare with other copies as manuscripts.

**ஒப்புக்கொள்(ளு)தல்** வி. (v.) *ஏற்றுக் கொள்ளுதல்;* to take charge accept.

**ஒப்புமொழி** பெ. (n.) *உடன்படிக்கை;* agreement, contract.

**ஒப்புரவறிதல்** வி. (v.) *உலக நடைமுறைக் கேற்ற பாங்குகளைத் தெரிதல்;* to know what is accepted by the world as proper, as in relation to gifts.

**ஒப்போலை** பெ. (n.) *1. உடன்படிக்கைச் சீட்டு;* deed of agreement, contract. *2. வாக்குச் சீட்டு;* vote.

**ஒய்யாரக்காரன்** பெ. (n.) *ஆரவார (ஆடம்பர)முள்ளவன்;* top, dandy.

**ஒய்யாரக் கொண்டை** பெ. (n.) *அழகாக (அலங்காரமாக) முடித்த மயிர் முடி;* tuft of hair gracefully tied up.

**ஒய்யார நடை** பெ. (n.) *1. அழகான நடை;* graceful gait. *2. பிலுக்கு நடை;* affected gait.

**ஒய்யாரம்** பெ. (n.) *மகிழ்வான நிலை;* gracefulness of movement elegant bearing.

**ஒயில்** பெ. (n.) *ஒய்யாரம்;* grace of form posture or movement.

**ஒருக்க** கு.வி.எ. (adv.) *1. எப்பொழுதும்;* ever, always. *2. ஒரு முறை, ஒன்று போல்;* once, like one.

**ஒருக்கணிப்பு** பெ. (n.) *ஒரு பக்கமாய்ச் சாய்கை;* lying or leaning on one side.

**ஒருக்களித்தல்** பெ. (n.) *ஒரு பக்கமாகப் படுத்தல்(யாழ்ப்);* lying on one side.

**ஒருக்குத்து** பெ. (n.) *1. ஒரு பக்கத் தலைவலி; ஒற்றைத் தலைவலி;* head ache on one side, migraine. *2. ஒரு கைப்பிடி அளவு;* a handful quantity.

**ஒருகால்** வி.எ. (adv.) *1. ஒரு முறை;* once. *2. ஒரு வேளை;* perhaps. *3. சில வேளை;* some times.

**ஒரு காலில் நில்(ற்)த(றல்)** வி. (v.) *உறுதியாயிருத்தல்;* to be firmy, resolved; to be unflinching, a simile from an ascetic standing resoltely as one leg while doing penance.

**ஒரு கிடை** பெ. (n.) *1. கிடந்த கிடை;* being bedridden state being unable to move from bed. *2. ஒரு பக்கமாய்ச் சாய்ந்து படுக்கை;* lying on one side.

**ஒருகுடி** பெ. (n.) *கொடி வழி உற வினர்கள்; பங்காளிகள்;* agnate.

**ஒருகூட்டு** பெ. (n.) *ஒரு சேர்க்கை;* close, union, compact.

**ஒருகை** பெ. (n.) *ஓர் ஆள்;* one person.

**ஒருகை பரிமாறுதல்** வி. (v.) *விருந்தினர் வரிசையில் ஒருபுறமாகப் பரிமாறுதல்;* to serve food in one of two opposite rows at dinners.

**ஒருகைபார்த்தல்** வி. (v.) *வெல்ல முயலுதல்;* to make a determined effort to win.

**ஒருங்கு** கு.வி.எ. (adv.) *1. முழுதும்;* altogether. *2. ஒரே காலத்தில்;* simultaneously.

**ஒருங்கே** வி.எ. (n.) *1. முழுதும்;* thoroughly, fully. *2. ஒரு சேர;* to the fullest extent or measure.

**ஒருச்சாய்த்தல்** வி. (v.) *ஒரு பக்கமாய்ச் சாய்தல்;* to tilt to one side, to shut partially.

**ஒரு சாயல்** பெ. (n.) *உருவொப்பு;* likeness having the same features; resemblance.

**ஒருசார்** பெ. (n.) *1. ஒரு பக்கம்;* one side. *2. ஒரு தலை;* partiality.

**ஒருசாலை மாணாக்கர்** பெ. (n.) *ஒரு பள்ளியிற் படித்த மாணாக்கர்;* pupils of the same school, schoolmates.

**ஒருசேர** கு.வி.எ. (adv.) *ஒரு மிக்க;* entirely, completely.

**ஒருதரம்** பெ. (n.) *1. ஒரு தடவை;* once. *2. ஒரே முறை;* one and the same kind.

**ஒருதலை** பெ. (n.) *ஒரு சார்பு;* one sidedness.

**ஒருதலைக்காதல்** பெ. (n.) *ஒருவர் மட்டும் மற்றொருவரை விரும்பும் காதல்;* unrequited love.

**ஒருதலைக் குழவி** பெ. (n.) *ஒரு பக்கம் தலைபோல் உருண்டையாயும் மற்றொரு பக்கம் கூர்மையாயும் அமைந்த குழவி;* store pestle shaped like a cone having a bulb atone point and a handle at the top.

**ஒருதலைச் சாயல்** பெ. (n.) *தலை ஒருபுற மாகச்சாய்ந்திருத்தல்;* inclination of the head to one side.

**ஒரு தன்மை** பெ. (n.) *1. ஒரே முறை;* being of one and the same kind. *2. தன்னந்தனி;* quite alone in absolute solitude.

**ஒரு திறம்** பெ. (n.) *ஒரு கூறு;* a part.

**ஒரு நாளும்** வி.எ. (adv.) *எந்நாளும்;* at any day.

**ஒரு நினைவு** பெ. (n.) *1. வேறொன் றையும் கருதாது ஒன்றையே சிந்தித்தல்;* condition in which the mind is occupied by one idea to the exclusion of others. *2. ஒரே சிந்தை;* concentration of mind on one object.

**ஒரு நேரம்** பெ. (n.) *காலமல்லாத காலம்; எப்போதாவது;* unseasonable time occasionally.

**ஒருபடித்தாய்** கு.வி.எ. (adv.) *1. ஒரே முறையாய்;* in the same way. *2. இருக்க வேண்டிய நிலைக்கு சிறிது மாறுதலாய்;* passably tolerably.

**ஒருபாட்டம்** பெ. (n.) *ஒரு பாறல் மழை;* heavy down pour of rain once at a stretch.

**ஒருபிடி** பெ. (n.) *கைப்பிடியளவு;* a handful.

**ஒருபொழுது** பெ. (n.) *1. ஒரு வேளை;* a division of time. *2. ஒரு வேளை மட்டும் உணவு கொள்ளும் தெய்வ வழிபாட்டு நோன்பு;* vow of taking one meal in a day.

**ஒருபோக்கு** பெ. (n.) *1. ஒரு வகை;* one kind. *2. ஒரே முறை;* the same manner. *3. மாறான நடை;* peculiar, singular conduct.

**ஒருபோகம்** பெ. (n.) *ஆண்டுக்கு ஒரு முறை மட்டும் விளையும் விளைச்சல்;* single crop, once a year.

**ஒருமட்டு** பெ. (n.) *1. ஒத்த அளவு;* equality in size or measure. *2. ஒருவாறு;* in a way.

**ஒருமனம்** பெ. (n.) *வேறொன்றும் நாடாத மனம்;* mind without variation, unanimity, one mindedness.

**ஒருமாதிரி** பெ. (n.) *ஒரு வகை;* a kind.

**ஒருமித்தல்** வி. (v.) *ஒன்று சேர்தல்;* to be in unison, to unite.

**ஒருமுகமாய்ப் பேசுதல்** வி. (v.) *1. பலரும் ஒரே மனத்தராய்ப் பேசுதல்;* many to speak with one voice. *2. ஒரு சார்பாகப் பேசுதல்;* to speak biasly.

**ஒரு மூச்சாய்** கு.வி.எ. (adv.) *ஒரு முயற்சியில், ஒரே தொடர்ச் சியாய்;* with sustained, continuous manner.

**ஒரு வயிற்றோர்** பெ. (n.) *உடன் பிறப்பாளர்;* children of the same parents.

**ஒருவாய்கொள்ளல்** பெ. (n.) *ஒரு தடவை வாய் கொள்ளுமளவு உட்கொள்ளல்;* taking one mouthful.

**ஒருவாய்ப்படுதல்** வி. (v.) *ஒரு குரலாகப் பேசப்படுதல்;* to be spoken of with one voice.

**ஒருவாயுணவு** பெ. (n.) *ஒரு பிடி கையளவு உள்ள கவளம்;* one morsel of food.

**ஒருவாறு** கு.வி.எ. (adv.) *1. ஒரு வகையாக;* in a way. *2. ஓரளவாக;* to a certain extent. *3. ஒரு சேர;* entirely.

**ஒருவிசை** பெ. (n.) *ஒரு முறை;* once at one time.

**ஒருவிதமாதல்** வி. (v.) *1. புதிய வகையாதல்;* to be peculiar. *2. வேறுபடுதல்;* to be of a different kind or attitude. *3. மாறுபாடாக இருத்தல்;* to be indifferent.

**ஒருவேளை** கு.வி.எ. (adv.) *1. ஒரு முறை;* on one occasion once. *2. ஒரு கால்;* perhaps.

**ஒரே** கு.பெ.எ. (adv.) *1. ஒன்றேயான;* only, the one. *2. மற்றொரு தரத்தில் இல்லாதது;* the same, not of a different kind.

**ஒரோவொருவர்** பெ. (n.) *தனித்தனி ஒவ்வொருவர்;* each person, individual.

**ஒரோவொன்று** பெ. (n.) *ஒவ்வொன்று;* one in each.

**ஒல்லி** பெ. (n.) *1. மெலிந்தவன்;* thin person. *2. மென்மை;* thinness, skebderbess. *3. துடைப்பம்;* broom.

**ஒல்லிக்காய்ச்சி** பெ. (n.) *உள்ளீடில்லாத காயுள்ள தென்னை;* coconut palm that yields blighted fruit.

**ஒல்லிநாடி** பெ. (n.) *ஒற்றை நாடி;* thin or slender habit of the body, lank.

**ஒலித்தல்** வி. (v.) *ஓசையெழுப்புதல்;* to sound, as letter to roar, as the ocean.

**ஒலுங்கு** பெ. (n.) *பெருங்கொசுரு;* big mosquito.

**ஒவ்வாப்பக்கம்** பெ. (n.) *பொருந்தாத பக்கம்;* strained or forced comparison, incongrity.

**ஒவ்வாமை** பெ. (n.) *1. ஒப்பாகாமை;* unlikeness, inequality. *2. இசையாமை;* discord. *3. தகுதிக் குறைவு;* being not equal. *4. உண்மையல்லாமை;* not true.

**ஒவ்வொன்று** ப.பெ. (pron.) *1. ஒன்று மேனி;* one each. *2. சில;* one here and there.

**ஒவ்வோன்** பெ. (n.) *ஒப்பில்லாதவன்;* one who has no equal.

**ஒழித்தல்** வி. (v.) *1. முடித்தல்;* to bring to an end, finish. *2. அழித்தல்;* to ruin. *3. நீக்குதல்;* to put away. *4. தவிர்த்தல்;* to except, avoid, omit. *5. வெறுமை யாக்கல்;* to clear out, empty.

**ஒழுக்கம்** பெ. (n.) *நல்லியல்பு, நன்னடை;* good conduct.

**ஒழுக்கல்** பெ. (n.) *நீர் கசிதல், ஊறுதல்;* leaking, oozing.

**ஒழுக்குப்பீளை** பெ. (n.) *பீளையைப் பெருக்கும் கண்ணோய் வகை;* blennorrola, acute catarhal, opthalmia.

**ஒழுங்கு** பெ. (n.) *1. வரிசை;* row, rank, line, senes. *2. நேர்மை;* order, regularity. *3. முறை;* rule of action. *4. நன்னடை;* good conduct. *5. முறை (விதி);* regulation.

**ஒழுங்குபடுத்துதல்** வி. (v.) *நேராக்குதல்;* to set in order, to arrange.

**ஒளி** பெ. (n.) *1. வெளிச்சம்;* light, brightness. *2. கதிரவன்;* sun. *3. நிலா;* moon. *4. விண்மீன்;* star. *5. தீ;* fire. *6. வெயில்;* sunshine.

**ஒளித்தல்** வி. (v.) *1. மறைத்தல்;* to hide, conceal, keep out of sight. *2. மனத்தி லடக்குதல்;* to keep in mind.

**ஒளித்து விளையாடுதல்** வி. (v.) *1. ஒரு பொருளை ஒளித்துவிட்டு தேடி விளையாடச் செய்தவர், கண்பொத்தி விளையாடுதல்;* to play hide and seek.

**ஒளிப்பிடம்** பெ. (n.) *மறைவிடம்;* ambush, convert hiding place.

**ஒளிப்பிழம்பு** பெ. (n.) *தீச்சுடர்த்திரள்;* flame.

**ஒளிப்பு** பெ. (n.) *1. பதுங்கி மறைகை;* absconding, slinking or stealing away. *2. மறைவு;* convert.

**ஒளிப்பொலி** பெ. (n.) *களத்தில் நீட்ட மாகத் தூற்றிய நெற்குவியல்;* long heap of paddy on the threshing flow.

**ஒளிமறைவு** பெ. (n.) *1. ஒளித்துத்திரிகை;* wondering in disguise. *2. கமுக்கம்;* secrecy.

**ஒற்றடம்** பெ. (n.) *வெப்பம் பட ஒற்றுகை;* fomentation.

**ஒற்றன்** பெ. (n.) *உளவு பார்ப்பவன்; வேவுகாரன்;* male spy.

**ஒற்றி** பெ. (n.) *உடைமையை நுகரும் உரிமையுடன் கூடிய அடைமானம்;* mortgage with possession, as of land, trees, cattle, etc.,

**ஒற்றிக்காணி** பெ. (n.) *அடைமான நிலம்;* mortgaged land.

**ஒற்றுக்கேள்(ட்)த(ட)ல்** வி. (v.) *பிறர் பேச்சை மறைந்து நின்று கேட்டல்;* to play the eavesdropper.

**ஒற்றுமை** பெ. (n.) *1. ஒன்றாயிருக்குந் தன்மை;* union, agreement, concord. *2. மனம் ஒரு நிலைப்படுகை;* application of the mind to one object.

**ஒற்றைப்படை** பெ. (n.) *ஒற்றையான எண்;* odd number.

**ஒற்றையடிப்பாதை** பெ. (n.) *ஒருவழி நடைபாதை;* foot-path.

**ஒற்றையாள்** பெ. (n.) *சுற்றத்தார் ஒருவரு மில்லாத தனியாள்;* single person, one having no relations.

**ஒற்றைவலி** பெ. (n.) *ஒரு பக்கத்து வலி;* neuraliga on one side only hemialgia.

**ஒறுவாய் போதல்** வி. (v.) *1. வாயொடிதல்;* to be broken at the edge; to be chipped off. *2. குறைவடைதல்;* to be defective.

**ஒறுவாயன்** பெ. (n.) *உதடு சிதைந்த வாயுடையவன்;* haralipped man.

**ஒன்றரைக் கண்ணன்** பெ. (n.) *ஒரு பக்கஞ் சரிந்த பார்வையன்;* one who looks obliquely one who squints.

**ஒன்றாக** வி.எ. (adv.) *உறுதியாக;* certainly, surely, positively.

**ஒன்றிக்கட்டை** பெ. (n.) *தனித்த ஆள்;* single person, individual.

**ஒன்றிக்காரன்** பெ. (n.) *மனைவியில்லாதவன்;* bachelor or widower.

**ஒன்றியாள்** பெ. (n.) *ஒற்றையாள்; தனியாள்;* single person.

**ஒன்றிரண்டாய் அரைத்தல்** பெ. (n.) *பொடியாக்காமல் சிறிய துண்டுகளாகும்படி அரைத்தல்;* grinding into several small rough granular pieces without making into a fine powder.

**ஒன்றிரண்டு** வி.எ. (adv.) *மிகக் குறைவு;* one or two, a few.

**ஒன்றுக்கிருத்தல்** வி. (v.) *சிறுநீர் கழித்தல்;* to orinate.

**ஒன்றுக்குமற்றவன்** பெ. (n.) *பயனற்றவன்;* good-for-nothing useless person.

**ஒன்றுகட்டுதல்** வி. (v.) *சரிப்படுத்துதல்;* to square up; to balance.

**ஒன்றுகுடி** பெ. (n.) *ஒட்டுக்குடி;* family or person living in another's house or garden.

**ஒன்றுகூட்டுதல்** வி. (v.) *1. ஒன்றாய்ச் சேர்த்தல்;* to gather together, collect. *2. ஒரு மனதாக்குதல்;* to bring about an agreement.

**ஒன்று கூடுதல்** வி. (v.) *1. ஒன்றாய்ச் சேர்தல்;* to meet one another, to gather in an assembly. *2. ஒன்றுபடுதல்;* to be united in harmony.

**ஒன்றுகை** பெ. (n.) *இசைகை;* fitting together.

**ஒன்றுபடுதல்** வி. (v.) *1. ஒரு தன்மையாதல்;* to coalesce. *2. இணக்கமாதல்;* to make peace.

**ஒன்றுபாதி** பெ. (n.) *1. பாதி;* moiety, half. *2. ஏறக்குறைய பாதி;* roughly half. *3. நடுஇரவு;* mid night. *4. சில பல;* some.

**ஒன்றும்** பெ. (n.) *சிறிதும்;* anything, even onething.

**ஒன்றுமற்றவன்** பெ. (n.) *1. ஏழை, வறியவன்;* destitute, poorman. *2. பயனற்றவன்;* good for nothing fellow; useless person.

**ஒன்றுவிட்ட** கு.பெ.எ. (adv.) *உறவு முறையில் ஒரு தலைமுறை விட்ட;* one step removed in relationship.

**ஒன்றுவிடாமல்** வி.எ. (adv.) *முழுமையாக ஒன்றும் விடாமல்;* not leaving out anything everything included, entirely, fully.

# ஓ

**ஓக்காளம்** பெ. (n.) *வாந்தியெடுக்க வேண்டும் போன்ற உணர்வு;* nausea; retching.

**ஓங்காரம்** பெ. (n.) *1. 'ஓம்' என்னும் மந்திரம்; பிரணவம்;* mystic syllable ஓம். *'ஓங்காரநாதம் தொடர்ந்து ஒலிக்கும் வகையில் ஒலிப்பேழைகள் வந்துள்ளன.'* *2. வலுத்த ஒலி;* roar. *'புயல் காற்று ஓங்காரமிட்டு வீசியது'.*

**ஓங்குதல்** வி. (v.) *1. உயர்த்துதல்;* lift. *'அந்தச் சிறுவனை அடிக்க அவர் கையை ஓங்கினார்'. 2.* மேல் நிலைக்கு வருதல்; முன்னேறுதல்; சிறத்தல்; get better; improve; flourish, rise. *'இந்தப் படத்திற்குப் பிறகு புது நடிகரின் புகழ் மேலும் ஓங்கும்'.*

**ஓசை** பெ. (n.) *1.* ஒலி, இரைச்சல்; sound; noise. *'பாத்திரங்கள் நகர்த்தப்படும் ஓசை கேட்டது/தோசை வார்க்கும் ஓசை'. 2.* இனிய ஒலி; sound. *'குழலோசை/குயிலோசை'. 3.* செய்யுளுக்கு உரிய ஒலியின் அளவு; rhythm. *'வெண்பா விற்கு உரிய ஓசை'.*

**ஓட்டப்பந்தயம்** பெ. (n.) ஓடும் போட்டி; running race. *'நூறு மீட்டர் ஓட்டப் பந்தயம்'.*

**ஓட்டம்பிடித்தல்** வி. (v.) தப்பி ஓடுதல்; flee; take to one's heels. *'கொள்ளையர்கள் நகையுடன் ஓட்டம் பிடித்தார்கள்'.*

**ஓட்டாஞ்சல்லி** பெ. (n.) உடைந்த மண் ஏனத்தின் சிறு துண்டு; small piece from a broken earthenware; shard; potsherd.

**ஓட்டாண்டி** பெ. (n.) ஓட்டை வைத்துப் பிச்சையெடுப்பவன்; pauper. *'ஓட்டாண்டியாகச் சுற்றி கொண்டிருந்தவன் ஒரே நாளில் கோடீஸ்வரன் ஆகிவிட்டான்'.*

**ஓட்டி** பெ. (n.) செலுத்துபவர்;ஓட்டுநர்; one who operates. *'தேரோட்டி/படகோட்டி/காரோட்டி'.*

**ஓட்டுதல்** வி. (v.) *1.* துரத்துதல்; விரட்டுதல்; drive away; chase away. *'தோட்டத்துக்குள் ஆடு புகுந்து விட்டது. அதை ஓட்டு'. 2.* கொண்டு போதல்; take along; drive along. *'சந்தைக்கு மாடுகளை ஓட்டிச் செல்லும் சத்தம் கேட்டது'. 3.* நடக்க அல்லது போகச் செய்தல்; cause to walk or go. *4.* இயக்குதல்; drive, row. *'ஏர் ஓட்ட மாடு இல்லை'. 5.* விரைவாக நகர்த்துதல்; move, quickly.

**ஓட்டு** பெ. (n.) *(தேர்தலில் வேட்பாளர் களுக்கு அளிக்கப்படும்) ஒப்போலை;* vote. *'நாளை ஓட்டு எண்ணப்படும்/கள்ள ஓட்டு போட்டவர் கைது/செல்லாத ஓட்டு'.*

**ஓட்டுநர்** பெ. (n.) பேருந்து, மகிழுந்து முதலிய ஊர்திகளை ஓட்டும் பணிபுரிபவர்; driver. *'பேருந்து ஓட்டுநர் பயிற்சிப் பள்ளி'.*

**ஓட்டை** பெ. (n.) ஒரு பரப்பில் இருக்கும் துளை; hole; leak. *'படகில் ஏற்பட்ட ஓட்டையை உடனே அடைத்தார்கள்'. 2.* குறைபாடு; loop-hole. *3.* நல்ல நிலையில் இல்லாதது; பழுதாகக் கூடியது; anything not in good repair; anything rickety. *'ஓட்டை வண்டி/ஓட்டை பேனா'.*

**ஓட்டைக்கை** பெ. (n.) எவ்வளவு பணம் இருந்தாலும் எளிதாகச் செலவு செய்துவிடும் தன்மை; being incapable of saving or conserving money.

**ஓட்டைப்பல்** பெ. (n.) பல் உடைந்துவிட்ட அல்லது விழுந்துவிட்டதால் பற்களுக்கு இடையே தெரியும் இடைவெளி; gap in a row of teeth. *'பல் விழுந்து விட்டதால் தம்பியை எல்லோரும் ஓட்டைப் பல்லைக் காட்டாதே என்று கேலி செய்தார்கள்'.*

**ஓட்டையுடைசல்** பெ. (n.) பயன்படுத்த முடியாத உடைந்த வீட்டு ஏனம் அல்லது வீட்டுப் பொருள்கள்; scrap; old junk. *'ஓட்டையுடைசலை யெல்லாம் தூக்கி எறியாமல் இன்னும் ஏன் வைத்திருக் கிறீர்கள்?'.*

**ஓட்டைவாய்** பெ. (n.) எதையும் பிறரிடம் எளிதாகச் சொல்விடும் இயல்பு; blabber mouth. *'அவனுக்கு ஓட்டை வாய்'. 2.* பிறரிடம் எல்லாவற்றையும் எளிதாகச் சொல்லி விடுவர்; blabber mouth. *'அந்த ஓட்டை வாயிடமா இந்த செய்தியைச் சொன்னாய்'.*

**ஓடம்** பெ. (n.) குறைந்த அகலமும் அதிக நீளமும் உடைய ஒருவகைச் சிறிய படகு; kind of small boat to ferry passengers across ariver or a lake.

**ஓடிப்பிடித்து விளையாடு** வி. (v.) *பலர் ஓட ஒருவர் துரத்திப் பிடித்துத் தொடுதல்;* tag (game). *'தெருவில் குழந்தைகள் ஓடிப்பிடித்து விளையாடிக் கொண்டிருந்தனர்'.*

**ஓடிப்போதல்** வி. (v.) *(மன வருத்தத்தால் வீட்டை விட்டு) வெளியேறுதல் (காதலிப்பவருடன் வீட்டுக்குத் தெரியாமல் வெளியேறுதல்);* run away (from home in protest); elope. *'ஓடிப்போன தன் மகளை நினைத்து அவர் கண்ணீர் விடாத நாளே இல்லை'.*

**ஓடியாடுதல்** வி. (v.) *(களைப்பு இல்லாமல்) அலைந்து திரிதல்;* be active and energetic; move about actively. *'அவரால் முன்போல் ஓடியாட முடியவில்லை'.*

**ஓடிவருதல்** வி. (v.) *(இக்கட்டான நேரத்தில் உதவி செய்தல்;* come forward (to help). *'தம்பிக்கு ஒரு சிக்கல் என்றால் அண்ணன் ஓடி வந்து விடுவார்'.*

**ஓடு** பெ. (n.) *1. சிறு பலகை போன்ற சுட்ட மண் துண்டு;* tile (for roofing). *'ஓடு போட்ட வீடு'. 2. மண் பானையின் உடைந்த பகுதி; சில்லு;* broken piece of earthern ware; potsherd. *'வழியில் கிடந்த ஓடு காலைக் குத்திவிட்டது'. 3. (ஆமை; நண்டு) உடலின் மேல் பகுதியில் இருக்கும் கனமான அல்லது உறுதியான கூடு;* (of a tortoise, turtle, crab, etc.,) shell. *4. (முட்டை) மேல் புறத்தில் கூடு போல இருக்கும் பகுதி;* shell, hard outer cover.

**ஓடுகாலி** பெ. (n.) *(முறைகேடாக) வீட்டை விட்டுச் சென்றுவிடும் பெண்;* girl or woman of loose morals who runs away from home. *'அந்த ஓடுகாலி திரும்பி வந்தால் நான் வீட்டுக்குள் சேர்க்க மாட்டேன்'. 2. ஓடிப் போய்விடும் வீட்டு விலங்கு;* (of domestic animals) stray. *'ஓடுகாலி மாடு'.*

**ஓடுதல்** வி. (v.) *நடப்பதை விட விரைந்து செல்லுதல்; (மீன் போன்றவை நீரில்) விரைவாக ஊர்ந்து செல்லுதல்;* run. *'வேகமாக ஓடித்தான் ரயிலைப் பிடிக்க வேண்டியிருந்தது'. 2. ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்லுதல்;* run; ply. *3. உருளுதல்;* roll (fast). *4. பாய்தல்;* flow, pass. *5. விரைவாகத் தப்பிச் செல்லுதல்;* flee; escape. *6. வேறிடம் செல்லுதல்;* run away. *7. நாடிச் செல்லுதல்;* run after. *8. விரைதல்;* run.

**ஓடுதளம்** பெ. (n.) *வானூர்தி மேல் எழும் முன் அல்லது கீழ் இறங்கிய பின் சற்றுத் தூரம் ஓடுவதற்கான நீண்ட பாதை;* run way.

**ஓடை** பெ. (n.) *(பெரும்பாலும்) இயற்கையாக ஆற்றிலிருந்து பிரிந்து வரும் (சிறிய) நீர்வழி; நீரோடை;* stream or rivulet. *'பாறைகளுக்கு அருகிலேயே ஒரு சிறு ஓடை'.*

**ஓணான்** பெ. (n.) *தடித்த சொர சொரப்பான செதிகள் உள்ள தோலும் கூம்பு போன்ற வாயும் நீண்ட வாலும் கொண்ட, பல்லி இனத்தைச் சேர்ந்த ஒரு சிறு விலங்கு;* garden lizard.

**ஓதுதல்** வி. (v.) *1. முறைப்படி வாய் விட்டுச் சொல்லுதல்; பேயோட்டுகைச் செய்தல்;* recite; chant. *'பூசாரி மந்திரம் ஓதிப் பேயை விரட்டினார் திருமணம் நடத்தி வைத்தார்'. 2. குறை கூறுதல்;* whisper.

**ஓந்தி** பெ. (n.) *1. ஓணான்;* garden lizard. *2. பச்சோந்தி;* chameleon.

**ஓநாய்** பெ. (n.) *கூட்டமாக வாழும் இயல்பு உடைய, காட்டு விலங்கு;* wolf.

**ஓம்** பெ. (n.) *சிவனியர்களால் மிகப் தூய்மையாகக் கருதப்படும் மந்திரம்;* mantra considered most sacred by Saivars.

**ஓம்புதல்** வி. (n.) பேணுதல்; protect; guard. *'தனி மாந்தனின் உரிமையை உயிரினும் மேலாக ஓம்பும் மக்கள் முற்றதிகாரத்தை ஏற்க மாட்டார்கள்'.*

**ஓய்ச்சல்** பெ. (n.) *அசதி; தளர்ச்சி;* tiredness; exhaustion. *'ஓரே ஓய்ச்சலாக இருக் கிறது; படுத்துத் தூங்க வேண்டும்'.*

**ஓய்வு** பெ. (n.) *1.* களைப்பை நீக்கிப் பெறும் அமைதி; ஆறுதல்; relaxation (brief) rest from work. *'கிடைத்த ஒரு மணி நேர ஓய்வைக் கூட ஏற்க முடியாதபடி தொலைபேசியில் அழைப்புகள்'. 2.* அமைதி நிலை; (complete) rest. *'ஒரு மாதக் காலம் என்னை ஓய்வில் இருக்கும்படி மருத்துவர் கூறிவிட்டார்'. 3.* பெரும்பாலும் ஒருவரின் பெயரை அடுத்து வரும்போது) (அரசு) பணிக்காலம் முடிந்த நிலை; state of having retired.

**ஓய்வு ஒழிச்சல்** பெ. (n.) *மிகக் குறைந்த நேர ஓய்வு;* respite; breathing space; breather. *'காலையிலிருந்து இரவு வரை ஓய்வு ஒழிச்சல் அற்ற வேலை'.*

**ஓய்வுக்காலம்** பெ. (n.) வரையறுக்கப்பட்ட அகவைக்குப் பிறகு பணியிலிருந்து விலகிக் கழிக்கும் காலம்; retirement. *'ஓய்வுக் காலத்தில் வேலை செய்ய வேண்டிய சூழ்நிலை அவருக்கு ஏற்பட்டது'.*

**ஓய்வுநாள்** பெ. (n.) *1.* விடுமுறை நாள்; holiday. *2. (கிறித்.)* உலகை ஆறு நாட்களில் படைத்த பின் இறைவன் ஓய்வெடுத்த நாளாகக் கூறப்படும் ஞாயிற்றுக் கிழமை; Sunday; day of rest.

**ஓய்வுபெறுதல்** வி. (v.) *1.* பணியிலிருந்து விலகுதல்; retire (from servie). *'முப்பது ஆண்டுகள் பணியாற்றிய பின் அவர் இன்று பதவியிலிருந்து ஓய்வு பெற்றார்'. 2.* மேற்கொண்டு பங்கு கொள்வதிலிருந்து ஒருவர் நிலையாக விலகுதல்; retire. *'உடல்நிலை நிலையாக அந்த மூத்த தலைவர் அரசியலிலிருந்து ஓய்வு பெறப் போவதாக அறிவித்துள்ளார்'.*

**ஓய்வூதியம்** பெ. (n.) *அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெறுபவருக்கு ஒவ்வொரு மாதமும் அரசால் வழங்கப்படுகிற ஊதியம்;* (retirement pension.

**ஓய்வூதியர்** பெ. (n.) ஓய்வூதியம் பெறுபவர்; pensioner.

**ஓய்வெடுத்தல்** வி. (v.) அமைதியுடன் இருத்தல்; இளைப்பாறுதல்; take rest. *'எவ்வளவு தூரம்தான் நடப்பது, சிறிது ஓய்வெடுக்கலாமா?'.*

**ஓயாமல்** வி.அ. (adv.) இடைவிடாமல்; தொடர்ச்சியாக; continuously; incessantly. *'ஓயாமல் பெய்த மழையினால் நீர் நிலைகள் நிரம்பி வழிந்தன'.*

**ஓர்மை** பெ. (n.) *1.* ஒற்றுமை; unity; oneness. *'இந்த நிகழ்ச்சி தொழிலாளர்களிடையே வகுப்பு ஓர்மை வளர்வதற்கு அடிப்படையாக அமைந்தது'. 2.* நினைவு; remembrance; memory. *'உங்களை எங்கோ பார்த்ததாக ஒரு ஓர்மை'.*

**ஓரகத்தி** பெ. (n.) *கணவனுடைய உடன்பிறப்பின் மனைவி (ஓர்+அகத்தி);* wife of one's husband's brother; co-sister.

**ஓரங்க நாடகம்** பெ. (n.) தொடக்கம் முதல் முடிவு வரை ஒரே களத்தில் நிகழ்த்தப்படும் நாடகம்; one-act play.

**ஓரம்** பெ. (n.) *1.* ஒதுங்கிய பக்கம்; side. *'வண்டியைத் தெரு ஓரமாக நிறுத்தி விட்டு வந்தான்'. 2.* விளிம்பு; பக்கவாட்டு நுனி; edge, corner.

*'புகைப் படத்தின் ஓரம் கிழிந்திருந்தது'.*

**ஓரம் கட்டுதல்** வி. (n.) *1. ஓரத்துக்குக் கொண்டு போதல்;* take to one side (of the road). *2. ஓரத்தில் ஒதுங்குதல்;* go to the side (of the road). *3. ஒதுக்குதல், புறக்கணித்தல்;* side line, disregard.

**ஓரளவு** வி.அ. (adv.) *குறிப்பிட்ட அளவுக்கு;* in some measure; somewhat. *'அவன் சொல்வதில் ஓரளவு உண்மை இருக்கிறது'.*

**ஓராசிரியர் பள்ளி** பெ. (n.) *ஒரே ஒரு ஆசிரியரை மட்டும் கொண்ட தொடக்கப் பள்ளிக்கூடம்;* (mostly in village) primary school with a single teacher.

**ஓராட்டுதல்** வி. (v.) *(குழந்தையை) தாலாட்டுதல்;* rock (a child) singing lullabies. *'ஓராட்டிப் பிள்ளையை தூங்க வைத்தாள்'.*

**ஓரிரு** பெ.அ. (adj.) *மிகவும் குறைவான; சில;* few. *'தலைவர் அவர்களை ஓரிரு சொற்கள் பேசும்படி கேட்டுக் கொள்கிறேன்'.*

**ஓரை** பெ. (n.) *ஒரு நாளில் ஒரு கோளின் ஆதிக்கம் பெற்றிருக்கும் காலப் பொழுது;* period in which a planet exercises its power in a day.

**ஓலம்** பெ. (n.) *துயரம் மிகுந்த ஒலி;* heart-rending cry; wail. *'போர்க்களத்தில் காயமுற்றவர்கள் எழுப்பிய மரண ஓலம்'.*

**ஓலை** பெ. (n.) *1. பனை, தென்னை, ஈச்ச மரம் ஆகியவற்றின் இலை;* leaf of palmyra, coconut and date trees. *2. உலர்ந்த பனை இலை;* dried palmyra leaf. *'ஓலைப் பெட்டியில் கருப்பட்டி'. 3. ஆவணம்;* document.

**ஓலை அனுப்புதல்** வி. (v.) *மடலின் மூலம் விரும்பத்தகாத செய்தியைத் தெரியப் படுத்துதல்;* unlike message sent by letter. *'வாங்கிய கடனைக் கட்டா விட்டால் வங்கி ஓலை அனுப்பி விடும்'.*

**ஓலைப்பட்டாசு** பெ. (n.) *பனை ஓலையின் ஒரு முனையில் மருந்தை வைத்துச் சுருட்டி உருவாக்கும் ஒரு வகை வெடி;* small firecracker with chemicals encased in one end of a palmyra leaf.

**ஓவியம்** பெ. (n.) *(பெரும்பாலும் தூரிகையால் வரையப்படும்) சித்திரம்;* painting or drawing. *'ரவிவர்மாவின் ஓவியங்கள்/ஓவியக்கலை'.*

**ஓவியர்** பெ. (n.) *ஓவியம் வரைபவர்;* artist. *'இவர் என் நண்பர், ஓவியர். இந்த நூலின் அட்டைப்பட ஓவியர் இவர் தான்'.*

**ஓவென்றவெளி** பெ. (n.) *பரந்த இடம்;* broad, open space.

**ஓவெனல்** பெ. (n.) *ஒரொலிக் குறிப்பு;* Sounding.

## க

**கக்கட்டி** பெ. (n.) *கண்ணில் வரும் கட்டி;* boil in the eve. *'கண்ணில் கக்கட்டி வந்துவிட்டது'.*

**கக்கம்** பெ. (n.) *1. அக்குள்;* armpit. *'குடையைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு நடந்தார்'. 2. நல்லெண்ணெய்; கடலை எண்ணெய் போன்றவற்றின் அடியில் தங்கும் கசடு;* dark coloured sediment (in certain vegetable oils).

**கக்குதல்** வி. (v.) *1. சாப்பிட்ட உணவை வாந்தியெடுத்தல்;* vomit. *'குழந்தை குடித்த பாலையெல்லாம் கக்கி விட்டது'. 2. நோய், நேர்ச்சி காரணமாகக் குருதி வாய் வழியாக வெளித்தள்ளுதல்;* throw up. *'நேர்ச்சி அடிப்பட்டவர் இரத்தம் கக்கி இறந்துபோனார்'. 3. நச்சுத் தன்மையுள்ள உயிரினங்கள் நஞ்சை உமிழ்தல்;* (of venomous creatures) squirt (poison),

spit. *4.* எரிமலை தீக்குழம்பை அல்லது இயந்திரம் முதலியவை புகையை அதிக அளவில் வெளியேற்றுதல்; (of Volcano, etc.,) spew (fire), (of machines) let out (smoke), belch out. *'அனல் கக்கும் விழி'*. **5.** மறைத்து வைத்திருந்த செய்தியைக் கட்டாயத்தின் பேரில் வெளியிடுதல்; cell (the truth under duress). *'அடி பொறுக்காமல் அவன் உண்மையைக் கக்கி விட்டான்'*.

**கக்குவான்** பெ. (n.) குழந்தைகளுக்குத் தொடர்ந்து கடுமையான இருமலையும் நீண்ட மூச்சு இரைப்பையும் ஏற்படுத்தும் நோய்; whooping cough, pertussis.

**கங்காணி(கண்காணி)** பெ. (n.) *1.* தோட்ட வேலை செய்யும் கூலியாட்களை மேற்பார்வையிடும் பணியைச் செய்பவர்; supervisor (of workers in plantations). **2.** வெளிநாடுகளில் வேலை செய்ய ஆள் சேர்க்கும் பணியைச் செய்பவர்; agent (who collects people for jobs in foreign countries).

**கங்கு** பெ. (n.) *1.* முழுவதும் தணலாக உள்ள கரித்துண்டு; live coal, glowing coal, cinder. *'அடுப்பிலிருந்து கங்குகளை வெளியில் தள்ளி நீர் தெளித்து அணைத்தாள்'*. **2.** தென்னை, பனை போன்ற மரங்களில் வெட்டிய சிறகு எஞ்சியிருக்கும் மட்டையின் அடிப்பகுதி; part of the stalk remaining attached to palms after it has been chopped off. *'அடுப்பு எரிப்பதற்குக் கங்கு மட்டை நல்லது'*.

**கச்சிதம்** பெ. (n.) *1.* சற்று அதிகம் அல்லது குறைவு என்று இல்லாமல் மிகவும் சரியான அளவு, ஒன்றுக்கென்றே அமைந்தது போன்ற பொருத்தம்; (most) apt, neat, compact. *'உடை உனக்குக் கச்சிதமாக இருக்கிறது'*. **2.** ஒரு செயலைச் செய்வதில் நேர்த்தி; perfect. *'கொடுத்த வேலையைக் கச்சிதமாகச் செய்து முடிப்பான்'*.

**கச்சைக்கட்டுதல்** வி. (v.) சண்டைக்குத் அணியமாதல்; be ready for a fight. *'அவனைத் தொலைத்துவிடுவது என்று கச்சைக்கட்டிக் கொண்டு நிற்கிறான்'*.

**கசக்கிப்பிழிதல்** வி. (v.) ஒருவரைக் கடுமையாக வருத்துதல்; squeeze. *'அவரிடமா வேலை செய்கிறாய், கசக்கிப்பிழிந்துவிடுவாரே!'*.

**கசக்குதல்** வி. (v.) *1.* ஒன்றை உள்ளங்கையில் வைத்து மற்றொரு கையால் அழுத்தித் தேய்த்தல்; rub. **2.** காகித தாள் முதலியவற்றைக் கையால் கண்டபடி சுருட்டுதல்; crumple (laundered clothes or paper). **3.** துணியில் அழுக்கு போவதற்காகக் கைகள் இடையே வைத்து தேய்த்துத் துவைத்தல்; squeeze and vinse (linen).

**கசகசத்தல்** வி. (v.) வியர்வையால் பிசுபிசுப்பாக உணர்தல்; feel sticky (with sweat). *'உடம்பு முழுக்கக் கசகசக்கிறது'*.

**கசகசப்பு** பெ. (n.) வியர்வை மிகுதியால் பிசுபிசுப்பாக உணரும் நிலை; feeling of stickiness due to perspiration. *'கசகசப்பு போக நன்றாகக் குளிக்க வேண்டும்'*.

**கசங்குதல்** வி. (v.) துணி, தாள் போன்றவற்றில் மடிப்புகளும் சுருக்கங்களும் தோன்றுதல்; (of clothes, paper) get crumpled. *'பானைக்குள் சுருட்டி வைத்திருந்தது போல் சட்டை கசங்கியிருந்தது'*.

**கசமுச என்று** வி.அ. (n.) பேச்சைக் குறித்து வரும்போது வெளிப்படையாக இல்லாமல்; (spreading scandal) in whispers.

**கசிதல்** வி. (n.) அரத்தம், கண்ணீர், வியர்வை முதலியவை மிகச் சிறிய அளவில் வெளிவருதல் அல்லது

ஒழுகுதல்; (of blood, tears, sweat, etc.,) ooze out, leak. *'புது மண்பானையிலிருந்து தண்ணீர் கசிகிறது'*.

**கசை** பெ. (n.) *முற்காலத்தில் தண்டனை பெறும் ஆட்களை அடிப்பதற்குப் பயன்படுத்திய தோலால் அல்லது கயிற்றால் பின்னப்பட்ட நீண்ட சவுக்கு;* lashing whip.

**கசையடி** பெ. (n.) *கசையைக் கொண்டு அடித்துத் தரப்படும் தண்டனை;* lash.

**கஞ்சத்தனம்** பெ. (n.) *தேவையான செலவைக் கூடத் தவிர்த்துப் பணத்தை மிச்சம் பிடிக்க நினைக்கும் குணம்;* niggardliness. *'சிக்கனமாக இருக்க வேண்டியதுதான், ஆனால் கஞ்சத்தனமாக இருக்க வேண்டுமா?'*.

**கஞ்சி** பெ. (n.) *1. சோறு வெந்த பிறகு வடித்து எடுத்த, குழகுழப்புத் தன்மை உடைய நீர்;* sticky, starchy water drained from cooked rice. *2. பருத்தித் துணிகள் மொடமொடப்பாக இருக்க அவற்றைத் தோய்க்கும்போது போடும் பசைத் தன்மை யுடைய கரைசல்;* starch (used for making clothes and sheets).

**கஞ்சி ஊற்றுதல்** வி. (v.) *குடும்பத்துக்கு உணவு, உடை போன்றவை தந்து காப்பாற்றுதல்;* feed. *'இந்தக் குடும்பத்துக்கே என் மருமகன்தான் கஞ்சி ஊற்றுகிறான்'*.

**கஞ்சிகாய்ச்சுதல்** வி. (v.) *பலர் ஒன்றாகச் சேர்ந்து கொண்டு ஒருவரை அளவுக்கு அதிகமாகக் கிண்டல் செய்தல்;* make fun of , tease excessively. *'அந்தச் சின்னப் பையனை ஏன் இப்படிக் கஞ்சி காய்ச்சுகிறீர்கள்'*.

**கட்சிக்காரர்** பெ. (n.) *1. தன் வாழ்க்கை நடத்தும் பொறுப்பை வழக்கறிஞரிடம் ஒப்படைத்தவர்;* client (of a lawyer). *2. ஓர் அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்;* a member of a (political) party.

**கட்சிகட்டுதல்** வி. (v.) *சிக்கல், உறழ்வு, ஏரணம் போன்றவற்றில் குறிப்பிட்ட போக்குக்கு உதவியாகப் பிறரை ஒன்று சேர்த்தல்;* mobilze. *'அவன் எனக்கு எதிராகக் கட்சி கட்டுகிறான் என்பது எனக்குத் தெரியும்'*.

**கட்சிதாவுதல்** வி. (v.) *சட்டமன்ற அல்லது நாடாளுமன்ற உறுப்பினர் ஒரு கட்சியிலிருந்து இன்னொரு கட்சிக்கு மாறுதல்;* switch over (to some opposition party after setting elected); cross the floor.

**கட்சியாடுதல்** வி. (v.) *பல கட்சிகளாகப் பிரிந்து உறழாடுதல்;* argue in a partisan manner.

**கட்செவி** பெ. (n.) *இணையத்தின் உதவியுடன் திறன்பேசியின் வழியே ஒளிப்படம், காணொலி, கருத்துரைகள் ஆகியவற்றைப் பரிமாறிக் கொள்ள உதவும் செய்திப் பரிமாற்றச் செயலி;* this is the app to share news, photos and vedios to other.

**கட்டக் கடைசியாக** வி.அ. (n.) *மிகவும் கடைசியில்;* as the last of all, lastly. *'நேரத்துடன் புறப்பட்டும் நான்தான் கட்டக் கடைசியாகச் சடங்குக்குப் போய்ச் சேர்ந்தேன்'*.

**கட்டணம்** பெ. (n.) *ஒன்றைப் பயன் படுத்திக் கொள்வதற்கு அல்லது ஒரு செயலைச் செய்ய உடன்படுவதற்கு அல்லது ஊழியம் பெறுவதற்குச் செலுத்தும் தொகை;* fare, charge, fee. *'தேர்வுக் கட்டணம்'*.

**கட்டம்** பெ. (n.) *1. நான்கு பக்கமும் கோடுகளால் அமையும் வடிவம்;* square, chequered pattern. *'கட்டம் போட்ட சட்டை'*. *2. படிப்படியான திட்டத்தில் அல்லது வளர்ச்சியில் ஒரு நிலை;* stage, phase (in a plan, development, etc.,).

**கட்டடம்கட்டுதல்** வி. (v.) *செய்தித் தாள்களில் ஒரு செய்தி தனித்துத் தெரிவதற்காகக் கோடுகளால் ஆன பெட்டி போன்ற வடிவத்தை அமைத்தல்;* make a box (to highlight a news).

**கட்டமைப்பு** பெ. (n.) *1. அமைப்பு முறை;* structure, construction. *'வீட்டின் கட்டமைப்பு'. 2. தாள்களை ஒன்றாகச் சேர்த்துப் புத்தகம் போன்ற தொகுப் பாகக் கட்டும் முறை;* binding. *'கட்டமைப்பு சரி இல்லாததால் புத்தகம் தாள்தாளாக வந்துவிட்டது'.*

**கட்டவிழ்த்துவிடுதல்** வி. (v.) *ஓர் அமைப்பு போராடுபவர்கள் மீது வன்முறை போன்ற அழிவு வேலை களை ஏவிவிடுதல்;* let loose (repression, violence), unleash.

**கட்டழகன்** பெ. (n.) *1. கடுமையான பயிற்சிகளால் உடலைக் கட்டுக் குலையாமல் வைத்திருப்பவன்;* well built person. *2. அழகான ஆண்;* handsome man. *'மாப்பிள்ளை நல்ல கட்டழகன்தான்'.*

**கட்டழகி** பெ. (n.) *கட்டுக்குலையாத அழகான பெண்;* beautiful woman.

**கட்டழகு** பெ. (n.) *கட்டுக்குலையாத உடல் அமைப்பினால் பெற்றிருக்கும் அழகு;* shapeliness. *'தாய்ப்பால் கொடுப் பதால் பெண்ணின் கட்டழகு எந்த வகையிலும் குறைந்து விடாது'.*

**கட்டளை** பெ. (n.) *1. சட்டம், நெறி முறைக்கு உட்பட்டு ஒன்றைச் செய்யுமாறு அல்லது கீழ்ப்படியு மாறு பிறப்பிக்கப்படும் உத்தரவு;* command, order. *2. இறைவனின் உத்தரவு (ஆணை);* (god's) will, commandment. *'ஆண்டவனின் கட்டளை இப்படி இருக்கிறது'.*

**கட்டாக்காலி** பெ. (n.) *தன்னிச்சைப்படி அலையும் கால்நடை;* stray animal. *'கட்டாக்காலி மாடுகளைப் பிடித்து வரும்படி சிற்றூர்த்தலைவர் சொல்லி விட்டார்'.*

**கட்டாந்தரை** பெ. (n.) *1. வறண்டு இறுகிக் கெட்டியாக இருக்கும் நிலைப்பகுதி;* hard-set earth. *'இந்தக் கட்டாந் தரையில் புல்கூட முளைக்காது'. 2. வீட்டில் உள்ள வெறும் தரை;* (in the house) floor (not covered by carpet or rug). *'இப்படிக் கட்டாந்தரையில் படுத்துத் தூங்கு கிறாயே?'.*

**கட்டாய ஓய்வு** பெ. (n.) *அரசுப் பணியில் வரையறுக்கப்பட்ட அகவைக்கு முன்னரே பணியிலிருந்து கட்டாய மாக ஒருவரை ஓய்வில் அனுப்பும் நடவடிக்கை;* the act of sending something in government service compulsorily into retirement, (in India) compulsory retirement.

**கட்டாயக் காத்திருப்பு** பெ. (n.) *அரசாங்கத்தில் ஒரு துறையிலிருந்து மற்றொரு துறைக்கு மாற்றப்படும் அல்லது நீண்ட விடுமுறையிலிருந்து திரும்பும் உயர் அதிகாரி அடுத்த பதவி ஒதுக்கப்படும் வரை காத்திருக்க வேண்டிய நிலை;* (interim period of) compulsory waiting (for higher officials for a charge of portfolio).

**கட்டாயம்** பெ. (n.) *1. ஒரு சூழ்நிலையில் ஒன்றைச் செய்வதைத் தவிர்க்க முடியாத நிலை; ஒருவரின் வற்புறுத்தல்;* compulsory, compulsion. *2. குறிப்பிட்ட எண்ணிக்கையில் அடுக்கிவைக்கப்படும் செங்கல் தொகுப்பு;* stack of bricks. *'ஆயிரம் ஆயிரம் கல்லாகக் கட்டாயம் போடு'.*

**கட்டாரி** பெ. (n.) *பிடியுடைய குத்துவாள்;* cross hilted dagger.

**கட்டி** பெ. (n.) *1. உடம்பில் தோன்றி வலியை உண்டாக்கும் கெட்டியான புடைப்பு அல்லது எழுச்சி;* hard boil or swelling. *'கருப்பப்பையில் கட்டி'.*

2. நீர்ம நிலையில் இருப்பது அல்லது மாவாக இருப்பது இறுகிக் கெட்டிப்பட்டிருக்கும் நிலை; anything hardened, lump. *'பனிக்கட்டி'*. 3. தயிரைக் குறிக்கும்போது சற்றே உறைந்த நிலை; (curd etc., in) semi-solid form. *'கட்டித் தயிர்'*.

**கட்டிக்காத்தல்** வி. (v.) ஓர் அமைப்பு சிதறிப் போகாமல் நிலைப் படுத்துதல்; preserve (unity); hold (something) together.

**கட்டிக்கொடுத்தல்** வி. (v.) பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்தல்; give (one's daughter) in marriage, marry.

**கட்டிக்கொண்டு** வி.அ. (n.) பயன் இல்லை என்று தெரிந்தும் ஒன்றைவிடாமல் வைத்துக்கொண்டு; clinging to, sticking to, being unable to give up.

**கட்டிக்கொள்ளுதல்** வி. (v.) *1.* இறுக அணைத்துக் கொள்ளுதல்; hold tightly, hug. 2. திருமணம் செய்து கொள் ளுதல்; marry (a person).

**கட்டிதட்டுதல்** வி. (v.) மாவு அல்லது பைஞ்சுதை (சிமெண்டு) என்பன போன் றவை ஈரத்தினால் சிறுசிறு உருண்டைகளாகப் பயன் படுத்த முடியாத வாறு கெட்டிப்படுதல்; (of flour, etc.,) become lumpy and unusable (due to moisture). *'ஈரம் பட்டால் பைஞ்சுதைக் (சிமிண்டு) கட்டி தட்டிப் போய் விடும்'*.

**கட்டிப்பால்** பெ. (n.) இனிப்புச் சுவை சேர்த்துச் சற்று கெட்டியாக்கப்பட்ட பால்; condensed milk.

**கட்டிப்பிடித்தல்** வி. (v.) கட்டிக்கொள்தல் பார்க்க.

**கட்டிப்புரள்தல்** வி. (v.) சண்டையில் ஒருவர் மற்றொரு வரை கட்டிப்பிடித்த படியே உரு ளுதல்; roll over (one holding the other as in a fight). *'குழந்தைகள் மணலில் கட்டிப் புரண்டு சண்டை போட் டார்கள்'*.

**கட்டிப்போடுதல்** வி. (v.) ஒன்றைச் செய்ய விடாமல் கட்டுப்படுத்துதல்; control.

**கட்டிமேய்த்தல்** வி. (n.) குழுவாக இருப்பவர்களை அடக்கி நடத்துதல் அல்லது வேலை வாங்குதல்; manage or control. *'இத்தனை மாணவர்களை எப்படித்தான் கட்டி மேய்க் கிறீர்களோ?'*.

**கட்டியங்காரன்** பெ. (n.) கூத்தில் பிற உறுப்பினர்களை அறிமுகப்படுத் துதல்; நகைச்சுவையாகப் பேசுதல் முதலிய செயல்களைச் செய்யும் நாடக நடிகன்; a character in கூத்து who, among other things, introduces other characters to the audience and is also a clown.

**கட்டியம் கூறுதல்** வி. (v.) ஒன்றின் அல்லது ஒருவரின் வருகையைத் தெரிவித்து முன்னறிவிப்புச் செய்தல்; announce in advance; herald. *'வசந்தத்தின் வருகைக்குக் கட்டியம் கூறுவது போல் இருந்தது குயில்களின் கூவல்'*.

**கட்டியாள்தல்** வி. (v.) அடக்கி ஆளுதல்; rule (with absolute authority). *'கட்சியைப் பத்து ஆண்டுகளாகக் கட்டியாண்ட பெருமை அவருக்கு உண்டு'*.

**கட்டிவைத்தல்** வி. (v.) கட்டிக்கொடுத்தல் பார்க்க.

**கட்டுதல்** வி. (v.) *1.* வீடு, பாலம் முதலிய வற்றை வடிவமைத்து உருவாக்குதல்; construct (a house, bridge, etc.,). 2. பறவை, தேனீ முதலியவை கூட்டை அமைத்தல்; (of birds) build (a nest, etc.,). *3.* பல பாகங்களை ஒன்று சேர்த்து அமைத்தல்; build (ship, coach). *4.* பாட்டு எழுதுதல்; compose (a song). 5. எலும்பு முறிவு, காயம் போன்ற வற்றுக்கு மருத்துவம் அளிக்கும் வகையில் மருந்து போன்றவற்றை வைத்துக் கெட்டியாகச் சுற்றுதல்;

bandage (the injured part of the body). *6. புடவை, வேட்டி முதலியவற்றைச் சரியான முறையில் உடுத்துதல்;* wear (a saree, dhoti, etc.,), tie (a piece of cloth around the head, waist, etc.,). *7. மணிகாட்டி, சுருள் தகடு போன்றவை அணிதல்;* wear (wrist watch, talisman, etc.,). *8. கண்ணைத் துணியால் மறைத்தல்;* blindfold. *9. வண்டி, ஏர் முதலிய வற்றில் மாட்டைப் பிணைத்தல்; பூட்டுதல்;* yoke (oxen to a cart, plough, etc.,). *10. பூக்களைச் சரமாக அல்லது மாலையாகத் தொடுத்தல்;* string up (flowers), make (a garland). *11. நீரைத் தேக்குதல் அல்லது நீர் தேங்குதல்;* dam (up water), stagnate. *12. கட்டணம், பட்டியல், வட்டி போன்றவற்றைச் செலுத்துதல்;* pay (fees, interest, etc.,). *13. குதிரைப் பந்தயத்தில் ஏதாவது ஒரு குதிரை வெற்றி பெறும் என்று நினைத்து அதன் மீது பணம் செலுத்துதல்;* bet (in a horse race). *14. வேடம் பூணுதல் அல்லது தரித்தல்;* play (a part in a stage play film).

**கட்டுக்கதை** பெ. (n.) *1. முழுக் கற்பனை;* imagination, fabrication, myth. *'புளிய மரத்தில் பேய் இருக்கிறது என்று சொல்வதெல்லாம் கட்டுக்கதை'. 2. உண்மையை மறைப்பதற்குப் பரப்பப்படும் பொய்யான செய்தி;* concocted tale. *'கட்சியில் அவருக்கு மிகவும் செல்வாக்கு இருக்கிறது என்பது வெறும் கட்டுக்கதை'.*

**கட்டுக்காவல்** பெ. (n.) *ஒருவரை அல்லது ஓர் இடத்தைச் சுற்றிப் போடப்படும் வலிமையான காவல்;* strict guard, tight security.

**கட்டுக்கோப்பு** பெ. (n.) *1. கட்டுப்பாட்டோடு கூடிய ஒற்றுமை அல்லது உறுதியான பிணைப்பு;* being well knit or well disciplined, solidarity. *2. கவிதை, கதை போன்றவற்றின் இறுக்கமான அமைப்பு;* (of poetry play, etc.,) well constructed or structured.

**கட்டுச்சோறு** பெ. (n.) *செலவிற்காகப் (பயணத்திற்காக) பொட்டலமாகக் கட்டப்பட்ட உணவு;* food packed (for a journey).

**கட்டுத்திட்டம்** பெ. (n.) *கட்டுப்பாடு;* discipline. *'கட்டுத் திட்டமான வாழ்க்கை'.*

**கட்டுப்படியாகுதல்** வி. (v.) *பொருளின் விலை விற்பவருக்குப் போதுமான தாக இருத்தல்;* (of prices) be enough, be reasonable. *'மாம்பழம் விலையை அதற்கும் குறைத்துக் கொடுத்தால் எனக்குக் கட்டுப்படியாகாது'.*

**கட்டுப்படுதல்** வி. (v.) *1. ஒருவருக்கு அடங்கி நடத்தல், பணிதல், கீழ்ப் படிதல்;* submit (oneself) to (a decision, rule, etc.,) be bound by. *'யாருக்கும் கட்டுப் படாமல் அவர் வாழ்ந்து விட்டார்'. 2. நோய் முதலியவை தணிதல் அல்லது அடங்குதல்;* be under control. *'மஞ்சளைச் சுட்டு முகர்ந்தால் தடுமன் (சலி) கட்டுப்படும்'.*

**கட்டுப்படுத்துதல்** வி. (v.) *1. ஓர் அளவுக்குள் இருக்குமாறு அல்லது வெளிப் படாதவாறு ஒன்றை நிறுத்துதல்;* control, hold back, restrain. *2. ஒன்றை அல்லது ஒருவரைத் தன் வசத்தின் அல்லது தன் ஆளுமைக்குக் கீழ் வைத்திருத்தல்;* keep under one's control.

**கட்டுப்பாடு** பெ. (n.) *1. எல்லை மீறாத ஒழுங்கு;* discipline. *2. உரிமையாகச் செயல்பட விடாமல் ஒருவர் மீது செலுத்தும் ஆளுமை;* restriction, control.

**கட்டுமானம்** பெ. (n.) *1. கட்டடம் போன்ற வற்றின் உருவாக்கம்;* construction (of a building, etc.,). *'கோபுரக்*

*கட்டுமானப் பணி சென்ற மாதம் துவங்கியது'.* 2. *கட்டுப்பாடு;* restriction, control, prohibition. *'ஊர்க் கட்டுமானத்தை யார் மீற முடியும்'.*

**கட்டுறுதி** பெ. (n.) *பெரும்பாலும் உடல் அமைப்பைக் கட்டமைப்பும் வலிமையும் உறுதியும் உடைய தன்மையைக் குறிப்பிடுவது;* (of body or structure) strongly built. *'கட்டுறுதி வாய்ந்த உடல்'.*

**கட்டெறும்பு** பெ. (n.) *சாதாரண எறும்பை விடச் சற்றுப் பெரியதும் கடித்தால் கடும் வலி ஏற்படுத்தும் கறுப்பு நிறத்தில் இருக்கும் எறும்பு;* a kind of black ant (whose sting is painful).

**கட்டை** பெ. (n.) *1. அளவாக வெட்டப் பட்ட மரத்துண்டு;* block of wood split into pieces (such as firewood), log. *'சந்தனக் கட்டை'. 2. துமிக்கியின் கைப் பிடியை ஒட்டிப் பின்புறம் அமைக்கப்பட்டிருக்கும் பட்டையான நீண்ட மரத்துண்டு;* butt (of a gun). *3. ஒருவரின் உடல், ஓர் ஆள்;* (one's) body; a person. *'அவன் எதற்கும் துணிந்த கட்டை'.*

**கட்டைக்குரல்** பெ. (n.) *அடித்தொண்டையிலிருந்து எழும் கனத்த குரல்;* deep voice. *'கட்டைக்குரல் என்பதே தெரியாதபடி பாடினார்'.*

**கட்டைப்பஞ்சாயத்து** பெ. (n.) *சிக்கல்களை களைய அடாவடித்தனத்துடன், சட்டத்துக்குப் புறம்பான வழிகளில் ஒரு குழுவாகச் சிலர் சேர்ந்து கொண்டு தீர்த்துவைக்கும் ஏற்பாடு;* settlement of dispute by a group of persons using unfair means.

**கட்டைப்பேனா** பெ. (n.) *மையில் தொட்டு எழுதும் வகையில் மரப்பிடியின் முனையில் மாழையால் ஆன முள் பொருத்தப்பட்ட எழுதுகோல்;* an instrument consisting of a wooden holder with a metal nib fixed at one end used for writing with ink (not in vogue now).

**கட்டை பிரம்மச்சாரி** பெ. (n.) *திருமணம் செய்து கொள்வதில்லை என்பதில் மிகவும் உறுதியாக இருப்பவர்;* confirmed bachelor.

**கட்டையை நீட்டுதல்** வி. (v.) *1. அலுப் புடன் படுத்து ஓய்வெடுத்தல்;* (lie down in order to) take rest. *'இந்த வீட்டில் ஐந்து நிமிஷம் கட்டையை நீட்ட முடிகிறதா?'. 2. வெறுப்புடனோ மதிப்பு குறைவான முறையிலோ இறத்தல்;* die (flip pant reference to the death of a person). *'நான் கட்டையை நீட்டிவிட்டால் இந்தக் குடும்பம் என்னவாகும் என்று எண்ணினீர்களா?'.*

**கட்டை வண்டி** பெ. (n.) *கட்டையின் இரு பக்கங்களிலும் பெரிய சக்கரங்களை உடைய மூடும் அமைப்பு இல்லாத, பாரம் ஏற்றிச் செல்லும் மாட்டு வண்டி;* a bullock cart without cover used mainly for carrying loads.

**கடகடத்தல்** வி. (v.) *கட்டுத் தளர்ந்து ஆட்டம் காணுதல்;* become loose, become rickety. *'மாட்டுவண்டி கடகடக்க ஆரம்பித்து விட்டது'.*

**கடகடஎன்று** வி.அ. (n.) *1. தடங்கல் இல்லாமல், விரைவாக;* without break, interruption or pause, quickly. *'நீ பாடங்களைக் கடகடவென்று ஒப்பித்து விட்டால் விளையாடப் போகலாம்'.* 2. *ஏதோ ஒரு பொருள் உருள்வதைப் போன்று;* heartily and loudly. *'அவர் கடகடவென்று சிரித்தார்'.*

**கடத்துதல்** வி. (v.) *1. ஒருவரை விருப் பத்துக்கு மாறாகக் கொண்டுபோதல் அல்லது தூக்கிச் செல்லுதல்;* kidnap (a person). *2. அரசால் தடை செய்யப் பட்ட பொருளை இசைவு இல்லாமல் எடுத்துச் செல்லுதல்;* smuggle (goods).

*3. உட்புகுந்து அல்லது ஒன்றின் வழியே செல்ல இசைவளித்தல்;* allow to pass through (without retaining), conduct (electricity, etc.,). *4. காலத்தைப் போக்குதல் அல்லது கழித்தல்;* while away (time), let (time) pass.

**கடந்தகாலம்** பெ. (n.) *முடிந்துபோன காலம், குறிப்பிட்ட அந்தக் காலத்தில் நடந்த நிகழ்வு;* past. *'எனது கடந்த காலத்தைப் பற்றி நான் யோசிப்பதே இல்லை'.*

**கடல் எல்லை** பெ. (n.) *ஒரு நாட்டின் கடற்கரையை ஒட்டி அதன் இறை யாண்மைக்கு உட்பட்டிருக்கும் கடல் பரப்பு;* territorial waters.

**கடல்காற்று** பெ. (n.) *கடல் பரப்பிலிருந்து நிலத்தை நோக்கி வீசும் காற்று;* sea breeze.

**கடலை மிட்டாய்** பெ. (n.) *வறுத்த வேர்க்கடலையை வெல்லப் பாகில் போட்டுச் சிறு சதுரமாகவோ செவ்வகமாகவோ வெட்டி எடுத்த தின்பண்டம்;* peanut candy.

**கடற்கரை** பெ. (n.) *கடல் அலைகள் நிலத்தைத் தொடும் மணல் நிறைந்த பகுதி;* seashore, beach. *'சிறுவர்கள் கடற்கரையின் அலைகளில் நின்று விளையாடிக் கொண்டிருந்தார்கள்'.*

**கடன் உடன்** பெ. (n.) *கடனும் அது போன்ற பிற வழிகளும்;* loans and other such sources. *'கடன் உடன் வாங்கித் தான் அம்மாவுக்கு மருத்துவம் செய்ய வேண்டும்'.*

**கடன்காரன்** பெ. (n.) *1. கடன் கொடுத்தவன்;* (a vexatious) creditor. *'காலையில் கடன்காரன் வந்து கத்திவிட்டுப் போனான்'. 2. கடன் வாங்கியவன்;* person worried by his creditors. *'உன் பேச்சைக் கேட்டுச் செலவு செய்தால் நாளைக்கு நான் கடன்காரனாகத்தான் நிற்பேன்'. 3. பெரும்பாலும் எரிச்சலுடன் திட்டுவதற்குப் பயன்படுத்தும் சொல்;* a term of abuse. *'இப்படிச் செய்து விட்டாயே, கடன்காரா' என்று' என்று அம்மா திட்டத் தொடங்கி விட்டாள்.*

**கடன்படுதல்** வி. (v.) *1. கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டிய நிலையில் இருத்தல்;* be adebtor; owe (money). *'அவர் எனக்கு ஆயிரம் ரூபாய் கடன்பட்டிருக்கிறார்'. 2. ஒருவர் செய்த நன்மை, உதவி ஆகியவற்றின் காரணமாகக் கடமைப் படுதல்;* be indebted to. *'நண்பர்களுடைய உதவிக்கு நான் என்றும் கடன்பட்டுள்ளேன்.'*

**கடனாளி** பெ. (n.) *திருப்பிக் கொடுக்க முடியாத அளவுக்குக் கடன் வாங்கியவர்;* one unable to discharge his debts. *'வறுமை அவர்களைக் கடனாளிகளாக ஆக்கியது'.*

**கடாய்** பெ. (n.) *வாணலி;* (a kind of) frying pan, wok.

**கடித்தல்** வி. (v.) *1. உரிமையோடு ஒருவரைக் கண்டித்தல்;* scold, reprimand. *2. பொருளை நொறுக்குதல், துண்டாக்குதல் போன்றவற்றிற்காகப் பற்களை ஒன்றில் பதித்துப் பலமாக அழுத்துதல்; நாய், பாம்பு முதலியன பல் பதிய கவ்வுதல்;* bite (with teeth), (of a dog, snake, etc.,) bite, sting. *3. புதிய செருப்பு, அரைஞாண் கயிறு போன்றவை தோலில் பதிந்து அல்லது உராய்ந்து புண்ணாக்குதல்;* (of shoes, etc., pinch). *4. பேச்சின் மூலம் சலிப்பு உண்டாக்கி நோகச் செய்தல்;* bore.

**கடி** பெ. (n.) *1. கடிக்கும் செயல் அல்லது கடிக்கப்பட்ட நிலை;* biting (with teeth), (of snake dog) bite. *2. சலிப்பு ஏற்படுத்தும் வகையில் அமைந்திருப்பது;* boredom.

**கடித்துக் குதறுதல்** வி. (v.) *ஒருவரை மிகுந்த கோபத்துடன் கடுமையாகத் திட்டுதல்;* scold severely.

**கடிவாளம்** பெ. (n.) *குதிரையைக் கட்டுப் படுத்தும் வகையில் வாயிலும் தலை யிலும் பொருத்தப்படும், நீண்ட வாளுடன் கூடிய கருவி;* (horse's) bridle with bit and reins.

**கடிவாளம் போடுதல்** வி. (v.) *ஒருவருக்குக் கட்டுப்பாடு இடுதல்;* restrain. *'ஊதாரியாய்த் திரிபவனுக்குக் கல்யாணம் என்ற பெயரில் கடிவாளம் போடப்பார்க்கிறார்கள்'.*

**கடுக்காய் கொடுத்தல்** வி. (v.) *ஒருவர் மற்றொருவரை அவர் கண் எதிரி லேயே திறமையாக ஏமாற்றித் தப்பித்தல்;* give (something) the slip. *'பணத்தை வாங்கிக்கொண்டு பொரு ளைத் தராமல் நமக்குக் கடுக்காய் கொடுத்துவிட்டான்'.*

**கடுகடுத்தல்** வி. (v.) *ஒருவர் தன் பேச்சில் அல்லது செயலில் வாயிலாகச் சினத்தின் கடுமையை வெளிப் படுத்துதல்;* scowl. *'அம்மாவின் முகம் கோபத்தில் கடுகடுத்தது'.*

**கடுங்காப்பி** பெ. (n.) *பால் சேர்க்கப் படாத குளம்பி (காப்பி);* coffee without milk. *'அவர் வழக்கமாகக் கடுங்காப்பி தான் சாப்பிடுவார்'.*

**கடைதல்** வி. (v.) *மத்து, கோல் முதலியவற்றை ஒன்றில் வைத்து வலமாகவும் இடமாகவும் மாறி மாறிச் சுழலச் செய்தல்;* churn (butter milk) drill (a wooden plank with a churnlike rod to strike fire), mash (greens, etc. with a churning stick).

**கடை** பெ. (n.) *1. பொருள்கள் விற்கப் படும் இடம் அல்லது அங்காடி;* shop, stall (dealing in goods). *'பூக்கடை'.*

**கடைக்கண்** பெ. (n.) *1. கண்ணின் ஓரத்திற்குக் கொண்டு வரும் கரு விழி;* corner of one's eye. *2. தெய்வத்தின் அருள் பார்வை;* (of god) benign look.

**கடைக்குட்டி** பெ. (n.) *ஒரு குடும்பத்தில் கடைசிக் குழந்தை;* youngest (of the children). *'எங்கள் வீட்டில் நான்தான் கடைக்குட்டி'.*

**கடைக்கோடி** பெ. (n.) *ஓர் இடம் முடியும் முனை அல்லது கடைசிப் பகுதி;* the very end (of a street, etc.,). *'தெருவின் கடைக் கோடியில் உள்ள வீடு'.*

**கடைகண்ணி** பெ. (n.) *கடையும் அதைப் போன்ற விற்பனையிடங்களும்;* bazaar, market place.

**கடைச்சரக்கு** பெ. (n.) *நாட்டு மருந்தில் பச்சிலைகள் நீங்கலாகக் கடை யிலிருந்து வாங்கப்படும் மருந்து மற்றும் பிற பொருள்கள்;* in indigenous medicine the medicinal substance than fresh others things.

**கடைசி** பெ. (n.) *ஏதோ ஒன்றின் தொடர்ச்சியில், வரிசையில் காலத்தில் முடிவு அல்லது இறுதி;* last, final, end. *'வீட்டில் நான்தான் கடைசிப் பையன்'.*

**கடைத்தெரு** பெ. (n.) *ஊரில் கடைகள் அதிகம் உள்ள தெரு அல்லது பகுதி;* bazaar market place.

**கடைநிலை** பெ. (n.) *பல நிலைகளைக் கொண்ட பணி அமைப்பில் கடைசி நிலை;* last grade (in the hierarchical structure of any service). *'கடைநிலை ஊழியர்கள்'.*

**கடைப்பிடித்தல்** வி. (v.) *கொள்கை, வழிமுறை, மரபு முதலியவற்றைப் பின்பற்றுதல்;* follow adhere to (a principle, procedure, tradition, etc.,).

**கடைப்புத்தி** பெ. (n.) *கீழ்த்தரமான அல்லது மட்டமான அறிவு (புத்தி);* undignified or filthy nature.

**கடையடைப்பு** பெ. (n.) *ஒன்றுக்கு எதிர்ப்போ அல்லது ஒரு கோரிக்கைக் காகவோ அனைத்துக் கடைகளையும் வணிகம் நடக்காதபடி மூடுதல்;* shut down (shops, restaurants, etc., demanding something or protesting against something) hartal.

**கடையாணி** பெ. (n.) *அச்சாணி;* axle pin (of a wheel).

**கடைவாய்** பெ. (n.) *1. வாயில் உதடுகள் பிரியும் ஓரம்;* corner of the mouth. *2. வாயினுள் கடைவாய்ப் பற்களுக்கு அருகில் உள்ள இடம்;* region in the mouth near molar teeth.

**கடைவிரித்தல்** வி. (v.) *1. சாலை ஓரத்தில் அல்லது சந்தையில் பொருள்களை விற்பனைக்கு அணியமாக்கப் பரப்பி வைத்தல்;* (of hawking) set up make shift open stall. *2. தேவையில்லை என்ற போதும் ஒரு கருத்து அல்லது செய்தியை விரிவாகக் கூறுதல்;* parade something.

**கண்கட்டி** பெ. (n.) *கண் இமைகளின் ஓரத்தில் சிவந்த நிறத்தில் வீக்கத் தோடு காணப்படும் எழுச்சி அல்லு புடைப்பு;* sky.

**கண்கட்டுவித்தை** பெ. (n.) *கண் எதிரிலேயே சில பொருள்களைத் திடீரென்று தோன்ற அல்லது மறையச் செய்யும் அல்லது கண்களால் பார்த்தும் நம்ப முடியாத மாயக் கலை;* art of conjuring.

**கண்கண்ட தெய்வம்** பெ. (n.) *தான் இருப்பதை உணரச் செய்வதாகவும் துன்பங்களை உடனே தீர்ப்பதாகவும் நம்பப்படும் தெய்வம்;* god whose grace one experiences personally.

**கண்கலங்குதல்** வி. (v.) *வருத்தத்திற்கு உள்ளாதல்;* be in tears, be in visible distress.

**கண்காணாத** பெ.அ (adj.) *கண்ணுக்குத் தெரியாத தொலைவில்;* remote, far away.

**கண்காணித்தல்** வி. (v.) *சிக்கல், தவறு போன்றவற்றைத் தடுக்கும் வகையில் நடவடிக்கை மேற்கொள்ளுதல்; விழிப்பாகக் கவனித்தல்;* keep watch, watch (the activities), keep track of.

**கண்சிமிட்டுதல்** வி. (v.) *1. கண்ணால் குறிப்புக் காட்டுதல்;* wink ( to signal secret amusement or to invite attention). *2. விண்மீன், விளக்கு முதலியவை விட்டுவிட்டு ஒளிர்தல்;* (of stars) twinkle, (of lights) flicker.

**கண்டதுண்டமாக** வி.அ. (n.) *உருத் தெரியாதபடி துண்டுதுண்டாக;* into pieces.

**கண்டபடி** வி.அ. (n.) *எந்தவகை ஒழுங்கும் இல்லாமல், தாறுமாறாக;* without observing anynorm or standard or rule without restraint.

**கண்டமேனிக்கு** வி.அ. (n.) *கண்டபடி அல்லது தாறுமாறாக;* in an unrestrained way. *'கையில் காசு இருந்தால் கண்ட மேனிக்குச் செலவு செய்வான்'.*

**கண்டறிதல்** வி. (v.) *இதுவரை அறியப் படாதிருப்பதை அல்லது போதிய அறிவிப்பு இல்லாததைத் தெரிந்து கொள்ளுதல்;* enquire into (what is little known so far), examine, investigate.

**கண்டாங்கி** பெ. (n.) *கட்டம் போட்ட நூல் புடவை;* chequered cotton saree. *'சிவப்புக் கண்டாங்கி உனக்கு நன்றாக இருக்கும்'.*

**கண்டித்தல்** வி. (v.) *1. தவறைச் சுட்டிக் காட்டி இவ்வாறு செய்யக்கூடாது என்று திருந்தும்படி கடுமையாகக் கூறுதல்;* rebuke, pull up, scold. *2. கண்டனம் தெரிவித்தல்;* denounce, condemn.

**கண்டிப்பாக** வி.அ. (n.) *1. உறுதியாக;* certainly. *'கண்டிப்பாக ஏதோ தவறு*

*நடந்திருக்கிறது'.* 2. *தவறாமல்;* without fail, imperatively. *'தாங்கள் கண்டிப்பாக எங்கள் வீட்டுத் திருமணத்துக்கு வர வேண்டும்'.*

**கண்டிப்பு** பெ. (n.) *1.* *ஒரு செயலைச் செய்ய வேண்டும் அல்லது செய்யக்கூடாது என்பதில் ஒருவர் காட்டும் உறுதி;* strictness, firmness. *2.* *கடுமையான கட்டுப்பாடு;* firm control.

**கண்டுகளித்தல்** வி. (v.) *கலைநயம் உடையவற்றைப் பார்த்து மகிழ்தல்;* enjoy me self (seeing or viewing artistically produced).

**கண்டுகொள்ளுதல்** வி. (v.) *1.* *இன்னது, இன்னார் என்று இனம் தெரிந்து கொள்ளுதல் அல்லது அறிந்து கொள்ளுதல்;* find out, discriminate. *2.* *எதிர்மறை வடிவங்களில் தெரிந்தது போல் காட்டிக்கொள்ளுதல்;* (in negative forms only) take notice of. *3.* *மதிப்புக்கு உரியவர்களை நேரில் சென்று பார்த்தல்;* pay a formal visit to (respectable persons, higher officials, etc.,).

**கண்டுபிடித்தல்** வி. (v.) *1.* *புதிய பொருள், கொள்கை முதலியவற்றை உருவாக்குதல் அல்லது இதுவரை அறியப் படாமல் இருந்த ஒன்றை அறியச் செய்தல்;* invent, discover. *2.* *ஒன்றைத் தேடி அறிதல்;* figure out, spot.

**கண்டுபிடிப்பு** பெ. (n.) *1.* *புதிதாக உருவாக்கப்பட்டது அல்லது முதல் முதலாக வெளிப்படுத்தப்பட்டது;* invention, discovery. *2.* *ஆராய்ச்சி வழிமுறைப் போன்றவற்றால் கண்டறியப்பட்டது;* finding.

**கண்டும் காணாமல்** வி.அ. (n.) *பொருட்படுத்தாமல் அல்லது கண்டு கொள்ளாமல்;* without making much of, taking no notice of turning a blind eye to.

**கண்டெடுத்தல்** வி. (v.) *1.* *ஒரு பொருளைத் தற்செயலாகப் பார்த்து எடுத்தல்;* find (something), chance to see and pick up. *2.* *நாணயம், மட்பாண்டம் முதலிய பொருள்களை அகழாய்வின்போது கண்டுபிடித்தல்;* find (in an archaeological excavation).

**கண்ணசைவு** பெ. (n.) *விழியை அசைப்பதால் காட்டும் குறிப்பு;* suggestion made by the movement of eyes. *'அவருடைய கண்ணசைவுக்காகப் பலர் காத்திருந்த காலம் உண்டு'.*

**கண்ணயர்தல்** வி. (v.) *அசதி, களைப்பு முதலியவற்றால் ஒருவர் தன்னை அறியாமல் தூங்கிப்போதல், தூங்கி விழுதல்;* doze off.

**கண்ணாமூச்சி** பெ. (n.) *கண்ணைப் பொத்திப் பிறர் ஒளிந்துகொள்ள நேரம் தந்து பின்னர் ஒளிந்து கொண்டவர்களைக் கண்டுபிடிக்கும் சிறுவர் விளையாட்டு;* (a children's same of) hide and seek.

**கண்ணால் பார்த்தல்** வி. (v.) *கண்ட ஒன்றை அழுத்தமாகக் கூறும்போது நேரடியாகப் பார்த்தல்;* see with one's own eyes (generally to dispel doubt). *'அவன் பணம் வாங்கியதை என் கண்ணால் பார்த்தேன்'.*

**கண்ணி** பெ. (n.) *1.* *பறவைகளைப் பிடிப்பதற்காகத் தரையில் பரப்பி யிருக்கும் கயிற்றுச் சுருக்குகள் கொண்ட அமைப்பு;* snare (for trapping birds). *2.* *தொடரியில் ஒரு வளையம்;* a ring or link (in a chain). *3.* *யாப்பில் ஒரே எண்ணிக்கையில் சீர்கள் கொண்ட இரண்டடி இசைப் பாட்டு வகை;* a stanza of two lines with the same number of metrical feet often set to be sung.

**கண்ணியம்** பெ. (n.) *தன் மதிப்பை இழக்காமல் இருப்பது பிறருக்கு*

இருக்கும் மதிப்பை உடன்பட்டு ஏற்றல் நாகரிகம் என்று கொள்ளும் போக்கு; sense of decency, dignity. 'கண்ணியமான பேச்சு'.

**கண்ணில் காட்டுதல்** வி. (v.) *1.* பார்க்க இசைவளித்தல்; allow (one) to see or have a look at. *2.* தர முன் வருதல்; be willing to share.

**கண்ணில்படுதல்** வி. (v.) தற்செயலாகத் தென்படுதல், படிக்கும்போது பார்வைக்கு வருதல்; catch one's attention, come into one's view (by chance).

**கண்ணில் மண்ணைத் தூவுதல்** வி. (v.) ஒருவரை கவனத்தைத் திசை திருப்பி ஏமாற்றுதல்; dodge.

**கண்ணில்வைத்து** வி.அ. (n.) அருமையாகவும் மிகுந்த அக்கறையோடும்; with utmost care.

**கண்ணீர்விழுதல்** வி. (v.) கண்ணீர் வரும்படி அழுதல்; shed tears.

**கண்ணீரைத் துடைத்தல்** வி. (v.) ஒருவரின் துயரத்தை நீக்குதல்; remove the cause of one's distress.

**கண்ணுக்குக் கண்ணாக** வி.அ. (n.) மிகுந்த பாசத்துடன் அல்லது விருப்பத்துடன் அல்லது அக்கறையாக; with utmost love and care.

**கண்ணுங்கருத்துமாக** வி.அ. (n.) மிகுந்த பொறுப்புடன் அல்லது அக்கறையுடன்; showing great concern or care, with great care.

**கண்ணுறங்குதல்** வி. (v.) தாலாட்டுப் பாடல் பாடும்போது அதைக் கேட்டுக் கொண்டே கண்மூடித் தூங்குதல்; (in lullabies) go to sleep.

**கண்ணை உறுத்துதல்** வி. (v.) *1.* ஒருவரின் உடமைகள் மற்றவரை எரிச்சலடையச் செய்தல்; provoke jealousy. *2.* கண்ணில் படுவது ஆசையைத் தூண்டுவதாக அமைதல்; மன அலைவை ஏற்படுத்துதல்; tempt.

**கண்ணைக் கசக்குதல்** வி. (v.) பெரும்பாலும் பெண்கள் அழப்போவதன் அறிகுறியாகத் தோன்றும் கண்ணீரைத் துடைப்பதற்காகக் கண்களைத் தேய்த்தல்; show visible signs of distress, begin to cry.

**கண்ணைக் கட்டுதல்** வி. (v.) *1.*மந்திரத்தால் கண்ணை மறைத்தல்; blind fold (by magic), hoodwink.*2.*;தூக்கம் அடக்க முடியாமல் வருதல்; தூக்கம் கண்ணைக் கட்டுகிறது; to feel so sleepy.

**கண்ணைக் காட்டுதல்** வி. (v.) கண்ணால் குறிப்புக் காட்டுதல், கண் சிமிட் டுதல்; give a wink.

**கண்ணைப் பறித்தல்** வி. (v.) *1.* அதிக ஒளி அல்லது ஏதோ ஒன்றால் கண்களைக் கூசச் செய்தல்; dazzle the eyes, blind. 'கார் விளக்கொளி கண்ணைப் பறித்தது'. *2.* அழகால் பார்வையைக் கவர்தல்; captivate make spellbound.

**கண்ணை மூடுதல்** வி. (v.) இறந்து போதல்; die.

**கண்ணோட்டம்** பெ. (n.) ஒரு நிலையிலிருந்து ஒன்றை அணுகும் அல்லது பார்க்கும் முறை; perspective, point of view, viewpoint.

**கண்திறத்தல்** வி. (n.) *1.* குழந்தை பிறந்தவுடன் முதல் முறையாகக் கண்ணைத் திறந்து பார்த்தல்; open the eyes for the first time (after the birth). *2.* ஒருவர் ஏற்கெனவே கொண்டிருந்த கருத்து மாறி உண்மை தெரிய வருதல்; make realize the truth.

**கண்துடைப்பு** பெ. (n.) உண்மையாக அல்லாமல் நம்பவைப்பதற்காகப் பேசப்படும் பேச்சு அல்லது நடத்தப் படும் செயல்; mere words, bluff.

**கண்படுதல்** வி. (v.) சிலருடைய பார்வையால் தீங்கு நேர்தல் அல்லது

*கண்ணேறு விழுதல்;* be harmed by evil eye.

**கண்பிதுங்குதல்** வி. (v.) *வேலை அல்லது பொறுப்பின் சுமையால் மிகவும் துயரப்படுதல் அல்லது திணறுதல்;* experience severe strain. '*வேலையை முடிக்க முடியாமல் கண் பிதுங்கு கிறது*'.

**கண்மண் தெரியாமல்** வி.அ. (n.) *கட்டுப் பாடு இல்லாமல் அல்லது கட்டுப் பாடு இல்லாத;* recklessly and reckless. '*குடித்துவிட்டுக் கண்மண் தெரி யாமல் வாகனம் ஓட்டினான்*'.

**கண்மண் தெரியாத** பெ.அ. (adj.) *அளவு கடந்த அல்லது அளவிற்கு மீறிய;* blindly and blind.

**கண்மாய்** பெ. (n.) *பாசனத்திற்கான சிறிய ஏரி;* small lake, irrigation tank.

**கண்மூடித்தனம்** பெ. (n.) *1. எதையும் ஆராயாமல் அப்படியே ஏற்றுக் கொள்ளும் அல்லது அறிவு நிறைவாக இல்லாமல் நடந்து கொள்ளும் செயல் அல்லது மடத்தனம்;* docile acceptance, blind obedience, irrationality. *2. எந்தப் பாகுபாடும் கலந்தாய்வும் இல்லாத தன்மை;* indiscretion (in action, speech, etc.,) want of discrimination.

**கண்வைத்தல்** வி. (v.) *ஒருவருக்கு அல்லது ஒன்றுக்கு தீங்கு அல்லது கேடுவரும் வகையில் பார்த்தல் அல்லது பொறாமை கொள்ளுதல்;* give the evil eye.

**கண்றாவி** பெ. (n.) *1. கண்ணுக்குச் சிறிதும் அழகு இல்லாதது அல்லது மகிழ்ச்சி தராதது அல்லது அருவருப்பு;* eyesore. *2. இரக்கத்தை உண்டாக்குவது;* pitiful. *3. வெறுப்பை வெளிப்படுத்தும் சொல்;* a term of disapproval, terrible, horrible. '*அட கண்றாவியே இப்படி யுமா நடக்கும்*'.

**கணக்கிடுதல்** வி. (v.) *1. கணக்குப் பார்த்தல் அல்லது கணக்குப் போடுதல்;* make an estimate, compute, calculate. *2. எண்ணுதல்;* count.

**கணக்கில் எடுத்தல்** வி. (v.) *கவனத்தில் கொள்ளுதல்;* take into account, consider.

**கணக்குத்தீர்தல்** வி. (v.) *ஒருவர் தனக்கு நேர்ந்த அவமானம், தோல்வி போன்றவற்றை ஈடுகட்டும் வகையில் அதற்குச் சமமான செயலைச் செய்தல் அல்லது பழிவாங்குதல்;* settle an old score; take revenge.

**கணக்குப் பார்த்தல்** வி. (v.) *வரவு செலவில் மிகவும் கவனமாக இருத் தல்;* calculate. '*அவன் ஒவ்வொரு காசுக்கும் கணக்குப் பார்ப் பான்*'.

**கணக்குப்பிள்ளை** பெ. (n.) *1. பண்ணை கடை முதலிய சிறு நிறுவனங்களில் வரவு செலவு கணக்குகளைப் பதிவு செய்ய அமர்த்தப்பட்டவர்;* accountant (in shops, large farms, etc.,).

**கணக்குப்போடுதல்** வி. (v.) *ஒரு செயலின் போக்கை அல்லது முடிவைக் கவன மாகக் கணித்தல்;* reckon.

**கணக்குவழக்கு** பெ. (n.) *1. குறிப்பிட்ட நாள்களுக்கு ஒரு முறை சரி பார்க்கப் படும் வரவு செலவு;* accounts. *2. கொடுக்கல் வாங்கல்;* dealings (in money or things). *3. பெரும்பாலும் எதிர்மறையில் அல்லது எதிர்மறைத் தொனியில் அளவு அல்லது எண்ணிக்கை;* reckoning.

**கணக்கெடுத்தல்** வி. (v.) *எத்தனை என்று எண்ணுதல் அல்லது எண்ணிக் குறித்தல்;* count, take note of the number, read (the figures in a meter, gauge, etc.,).

**கணகணத்தல்** வி. (v.) *காய்ச்சல் போன்ற வற்றால் உடல் சூடாக இருத்தல்;* (of body) feel hot, be feverish. '*உடம்பு நெருப்பு மாதிரி கண கணக்கிறது*'.

**கணப்பு** பெ. (n.) *1. குளிர்காய்வதற்காக மூட்டப்படும் நெருப்பு;* fire (for warming). *2. குளிர்ப் பகுதிகளில் (பிரதேசங்களில்) குளிர்காய்வதற்காக நெருப்பு மூட்டப்பட்ட இடம்;* fire place.

**கணிசமாக** வி.அ. (adv.) *குறைவு என்று சொல்ல முடியாதவாறு குறிப்பிடத் தகுந்த அளவில்;* considerably, fairly, in a pretty good way.

**கணிசமான** பெ.அ. (adj.) *குறிப்பிடத் தகுந்த அளவிலான;* considerable fair, pretty good.

**கணினி** பெ. (n.) *கணிப்பொறி பார்க்க.*

**கணிப்பு** பெ. (n.) *1. ஒருவருக்கு நிகழப் போவதைக் குறிப்பிட்ட அடிப்படை களைக் கொண்டு முன்கூட்டியே சொல்லுவது;* fore cast, prediction, claculation. *2. ஒன்றின் தன்மையைப் பற்றிய அல்லது அளவைப் பற்றிய மதிப்பீடு;* evaluation, estimate, opinion, survey. *3. பிறப்பியம் குறித்தல்;* the casting of a horoscope.

**கணிப்பொறி** பெ. (n.) *பெரும் அளவில் தரவுகளைச் சேமித்து வைக்கவும், செயற்படுத்தவும் உதவும் மின்னணு கருவி;* Computer.

**கணிப்பொறியியல்** பெ. (n.) *கணிப்பொறி யின் இயக்கம், மென்பொருள் உருவாக்குதல் ஆகியவற்றைப் பற்றி விளக்கும் அறிவியல் துறை;* Computer Science.

**கணை** பெ. (n.) *மண்வெட்டி, கோடரி முதலியவற்றின் மரத்தால் ஆன கைப் பிடி ;* wooden handle (of spade, axe, etc.,).

**கத்தரித்தல்** வி. (v.) *1. துணி, தாள் போன்றவற்றைக் கத்தரிக்கோலால் வெட்டுதல் அல்லது துண்டாக்குதல்;* cut with scissors snip. *2. பூச்சிகள் வயலில் உள்ள பயிர்களைக் கடித்து துண்டாக்குதல்;* (of grasshopper, rat, etc.,) cut up. *3. ஒருவருடன் உள்ள உறவை நட்பை முறித்துக் கொள்ளுதல் அல்லது ஒருவருடன் பேசிக் கொண்டிருக்கும் போது பேச்சை நிறுத்திக் கொள்ளுதல்;* sever connection, etc., and break off .

**கத்தல்** பெ. (n.) *1. உரத்த குரலாலான பேச்சு;* loud talk shout. *2. அலறல்;* loud cry. *3. விலங்குகள், பறவைகள் எழுப்பும் உரத்த ஒலி;* noise (made by animal, birds).

**கத்திகபடா** பெ. (n.) *கத்தியும் அதைப் போன்ற பிற உதவிக் கருவிகளும்;* knife and other similar weapons.

**கத்தி முனையில்** வி.அ. (n.) *கத்தியைக் காட்டி மிரட்டி;* threatening at knife point.

**கத்துதல்** வி. (v.) *1. வலி, பயம், சினம் போன்றவற்றால் அலறுதல் அல்லது பெரும் குரல் எழுப்புதல்;* scream. *'அவன் வலியால் கத்தினான்'. 2. உரத்த குரலில் பேசுதல் அல்லது திட்டுதல்;* speak loudly, shout. *'ஏன் இப்படிக் கத்துகிறாய்? மெதுவாகப் பேசு'.*

**கத்துக்குட்டி** பெ. (n.) *ஒரு வேலையில் அல்லது ஒரு துறையில் அரைகுறை யான அறிவும் பயிற்சியும் உடைய ஆள்;* green horn, novice, apprentice. *'சங்கீதத்தில் நான் கத்துக்குட்டி தான்'.*

**கதகதப்பு** பெ. (n.) *மிதமான வெப்பம் அல்லது சூடு;* (slight) warmth.

**கதறுதல்** வி. (v.) *துக்கம், வலி போன்ற வற்றால் வாய்விட்டு அழுதல்; அழும்போது பெருங்குரல் எழுப் புதல்;* wail, scream (heart breakingly). *'அவனை உதைத்தால்தான் பணம் கதறிக்கொண்டு வரும்'.*

**கதி** பெ. (n.) *1. வாழ்க்கையில் ஒருவருக்கு ஏற்படும் நிலைமை;* (one's) condition

in life; plight, let. 2. *குறிப்பிட்ட ஒன்றைத் தவிர வேறு எதுவும் முக்கிய மில்லை என்று ஒருவர் இருக்கும் நிலை;* an obsessive addictive enthusiasm.

**கதிகலங்குதல்** வி. (v.) *1. மோசமான நிகழ்வு, விளைவு போன்றவற்றின் வருத்தத்தால் நிலைகுலைதல்;* be badly shaken up, be upset. 2. *ஒருவருக்கு அச்சமும் கலக்கமும் தோன்றுதல்;* give one the creeps.

**கதிமோட்சம்** பெ. (n.) *பிறவித் துன்பம் நீங்குவதற்கான நல்வழி, விடிவு;* salvation.

**கதைத்தல்** வி. (v.) *நம்ப முடியாத அளவுக்குக் கற்பனையாக ஒன்றைக் கூறுதல்;* bluff.

**கதைஅளத்தல்** பெ. (n.) *1. ஒன்றைப் பற்றி நம்ப முடியாத அளவுக்குத் திரித்துக் கூறுதல்;* spin a yarn. 2. *செய்தி தெரியாத காரணத்தால் தேவை இல்லாததை யெல்லாம் தெரிவித்தல் அல்லது எழுதுதல்;* come up with stories, make up (a story).

**கதைகட்டுதல்** வி. (v.) *பொய்ச் செய்தி கிளப்புதல், பொய்யுரைகளைப் பரப்புதல்;* make up a gossipy story.

**கதைசொல்லி** பெ. (n.) *1. கதை சொல்லும் நாடகமாந்தன்;* narrator (as a person). 2. *கதை சொல்பவர்;* story teller, author as the story teller.

**கதைப்பாடல்** பெ. (n.) *வாழ்க்கை வரலாற்றைப் பாட்டு வடிவில் கூறும் நாட்டுப்புற இலக்கிய வகை;* folk epic, folk ballad. '*கட்டபொம்மன் கதைப் பாடல்*'.

**கதைபண்ணுதல்** வி. (v.) *ஒன்றைப் பற்றி தெரிந்து கொண்டும் தெரியாதது போல் பேசுதல்;* (while talking) foreign ignorance dissemble. '*உனக்கு அவரைத் தெரியாதா? என்ன கதை பண்ணு கிறாய்?*'.

**கதையை முடித்தல்** வி. (v.) *ஒருவரைக் கொல்லுதல்;* do away with, eliminate.

**கதைவிடுதல்** வி. (v.) *கதை அளத்தல் பார்க்க.*

**கந்தரகோளம்** பெ. (n.) *ஒழுங்கில்லாத நிலை, தாறுமாறு;* disorderly state, mess. '*ஏன் உன் அறை இப்படிக் கந்தரகோளமாக இருக்கிறது*'.

**கப்சிப் என்று** வி.அ. (adv.) *பேசாமல் அமைதியாக;* quietly, keeping quite. '*எனக்கு உண்மை தெரிந்தாலும் கப்சிப்பென்று இருந்துவிட்டேன்*'.

**கப்பம்கட்டுதல்** வி. (n.) *1.தன் செயல்களைச் செய்து கொடுக்க ஒருவருக்குக் கையூட்டுப் பணம் தருதல்;* bribe. *2.முற்காலத்தில் சிற்றரசர்கள் பேரரசருக்குக் கொடுக்கும் பெருந்தொகை;* tribute by the king to the Emperor. '*இவனுக்கு கப்பம் கட்டாமல் இந்தக் காரியத்தை முடிக்க முடியாது*'.

**கப்பைக்கால்** பெ. (n.) *கவட்டுக் கால் பார்க்க.*

**கபகப என்று** வி.அ. (adv.) *மிகுந்த கடுமையுடன் அல்லது விரைவுடன்;* in a raging manner. '*வயிறு கபகப வென்று பசிக்கிறது*'.

**கம்மென்று** வி.அ. (adv.) *1. எதையும் செய்யாமல் அல்லது பேசாமல்;* quiet; mum; doing anything. '*கொஞ்ச நேரம் கம்மென்று இரு*'. 2. *மூக்கைத் துளைக் கும்படியாக அல்லது அருமையாக;* pleasantly, agreeably fragrantly. '*(சாறு) ரசம் கம்மென்று மணக்கிறது*'.

**கம்பசூத்திரம்** பெ. (n.) *ஒரு செயலை செய்வதற்கு அல்லது அறிந்து கொள் வதற்கு மிகவும் கடினமானது;* involves extraordinary skill. '*இந்தப் பின்னல் என்ன கம்பசூத்திரமா? நான் கூடப் போடுவேனே*'.

**கம்பிஎண்ணுதல்** வி. (v.) *தண்டனை பெற்றுச் சிறையில் இருத்தல்;* be put behind bars, undergo imprisonment. '*திருடிவிட்டு இப்போது கம்பி எண்ணுகிறான்*'.

**கம்பிநீட்டுதல்** வி. (v.) *இடத்தை விட்டு விரைந்து அகலுதல் அல்லது நழுவுதல்;* decamp. '*காவலரைப் பார்த்ததும் அவன் கம்பி நீட்டப் பார்த்தான்*'.

**கம்மல்** பெ. (n.) *1. பெண்கள் அணியும் காதணி;* ear stud worn by women. '*இலை வடிவில் செய்த கம்மல்*'. 2. *சளி, காய்ச்சல் போன்ற வற்றால் குரலின் கம்மிய ஒலி;* being hoarse and faint. '*கரகரத்த கம்மல் குரல்*'. *3. ஒளிக் குறைவு அல்லது மங்கல்;* dimness. '*கம்மலான வெளிச் சத்தில் எப்படிப் படிக்க முடியும்*'. *4. லேசான மாநிறம்;* one little less than fair.

**கமகமத்தல்** வி. (v.) *அதிகமாக மணத்தல்;* be fragrant, have a strong agreeable smell. '*பலகார மணம் கமகமக்கும் கடை*'.

**கமுக்கமாக** வி.அ. (adv.) *வெளியே தெரியாதபடி;* secretively. '*அடித் தாலும் எடுத்த பணத்தைப் பற்றி வாய் திறக்க மாட்டான், கமுக்கமான ஆள்*'.

**கமுக்கமான** பெ.அ. (adj.) *வெளியே தெரியாத;* secretive.

**கயவன்** பெ. (n.) *கீழ்த்தரமான அல்லது தீய குணமுடையவன்;* dishonest person, rogue. '*எல்லோரையும் தூற்றித் திரியும் கயவன் இவன்*'.

**கயவாளி** பெ. (n.) *கயவன் பார்க்க.*

**கயிற்றில் தொங்குதல்** வி. (v.) *தூக்குப் போட்டுக்கொண்டு இறத்தல் அல்லது தூக்கில் தொங்குதல்;* hang oneself.

**கயிறுதிரித்தல்** வி. (v.) *அரைகுறையாகத் தெரிந்த தரவல்களைக் கொண்டு பொய்யாகக் கதைவிடுதல்;* spin a yarn.

**கரகரப்பு** பெ. (n.) *1. தொண்டையில் அரிப்பு;* irritation in the throat. 2. *குரலைக் குறிக்கும்போது சீரற்ற தன்மை;* (of voice) hoarseness (brought about by emotions).

**கரித்துக்கொட்டுதல்** வி. (v.) *வெறுப்பைக் காட்டும் வகையில் ஒருவரைத் திட்டிக் கொண்டே இருத்தல்;* carp. '*ஏன் உங்கள் அண்ணனைக் கரித்துக் கொட்டிக் கொண்டிருக்கிறீர்கள்*'.

**கரித்துணி** பெ. (n.) *சூடான பாத் திரங்களை இறக்குவது போன்ற வற்றுக்குச் சமையல் அறையில் பயன்படுத்தப்படும் சிறிய துணி அல்லது பிடிதுணி;* a piece of cloth used for handling hot vessels in the kitchen.

**கரிநாள்** பெ. (n.) *1. பொங்கல் பண்டி கைக்கு மறுநாள்;* the day after the pongal festival. 2. *நல்ல நிகழ்ச்சிகள் நடத்துவதற்குப் பொருத்தம் இல்லாத நாள்;* inauspicious day.

**கரியாக்குதல்** வி. (v.) *பணத்தை வீணாக்குதல்;* fritter away (money). '*வியாபாரம் செய்கிறேன் என்று சொல்லிக் காசைக் கரியாக்கி விட்டான்*'.

**கருக்கல்** பெ. (n.) *காலையில் வெளிச்சம் பரவும் முன் அல்லது மாலையில் வெளிச்சம் முழுவதும் போகும் முன் உள்ள அடர்த்திக் குறைவான இருட்டு;* predawn or pre dusk darkness.

**கருக்கலைப்பு** பெ. (n.) *மருத்துவரின் உதவியோடு கருவை வெளியேற்றும் செயல்;* abortion.

**கருக்காய்** பெ. (n.) *உள்ளீடாகிய மணி முழு வளர்ச்சி அடையாத நெல்;* paddy in which the grain is not fully grown.

**கருக்குதல்** வி. (v.) *ஒரு பொருளைச் சூட்டில் அல்லது நெருப்பில் கருகச்*

*செய்தல்;* cause to become black (by over roasting sting), char. *'கடலையை இப்படிக் கருக்கிவிட்டாயே'.*

**கருகுமணி** பெ. (n.) *பெண்கள் கழுத்தில் அணியும் கருப்பு நிறப் பாசிமணி;* a string of black beads (worn closely around the neck by women).

**கருணைக்கொலை** பெ. (n.) *இறப்பு (மரணம்) உறுதி என்ற நிலையில், தொல்லை மிகுந்து துன்பப்படு பவருக்கு மருந்து கொடுத்து அவருடைய உயிரைப் போக்கும் செயல் (இது இந்தியாவில் தடை செய்யப்பட்டுள்ளது);* mercy killing, euthanasia.

**கருணைமனு** பெ. (n.) *தூக்குத் தண்டனை கொடுக்கப்பட்டவர் அதைக் குறைக்கு மாறு ஆளுநருக்கோ குடியரசுத் தலைவருக்கோ வேண்டிக் கொள்ளும் விண்ணப்பம்;* petition made to the Governor or president by a convicted person praying for remission or commutation of his or her punishment (in India) mercy petition.

**கருத்தடை** பெ. (n.) *கரு உண்டாவதைத் தவிர்க்க மேற்கொள்ளும் (மருத்துவ வழியான) வழிமுறை;* birth control contraception.

**கருத்தரித்தல்** வி. (v.) *கரு உண்டாதல்;* become pregnant, conceive.

**கருத்துக்கணிப்பு** பெ. (n.) *ஒரு செய் தியைக் குறித்து மக்களின் கருத்தை அறிய நடத்தப்படும் வாக்கெடுப்பு;* opinion poll. *'புதிய கல்வித் திட்டத் தைப் பற்றிய கருத்துக்கணிப்பு'.*

**கருநாக்கு** பெ. (n.) *1. இயல்பாகவே சிறு கரும்புள்ளிகளை உடைய நாக்கு;* tongue with black dots. *2. சொன்னது நடந்துவிடும் என்று கருதப்படும் தீய சொல் கூறுபவரின் நாக்கு;* the supposed tendency of a person's evil words to come true.

**கருப்பட்டி** பெ. (n.) *பதநீரைக் காய்ச்சிக் கட்டி வடிவில் உருவாக்கப்படும் அடர்ந்த பழுப்பு நிறமுடைய இனிப்புப் பொருள்;* unrefined jaggery (made from palmyra or coconut sap).

**கருமுட்டை** பெ. (n.) *விந்தோடு சேர்ந்து கருவை உருவாக்கும் பெண்ணிடம் உள்ள உயிரணு அல்லது கருப்பை யிலிருந்து வெளிப்படும் நுண்ணிய முட்டை;* ovum.

**கருவண்டு** பெ. (n.) *நாவல் பழத்தைப் போன்ற கறுப்பு நிற வண்டு;* black beetle.

**கருவளையம்** பெ. (n.) *அரைவட்டமாகக் கண்களுக்குக் கீழே சிலருக்கு இயல்பான நிறத்தை விடவும் கருப்பாகக் காணப்படும் பகுதி;* dark ring (below the eyes).

**கருவறுத்தல்** வி. (v.) *அடியோடு அழித்தல்;* root out. *'காட்டிக் கொடுத் தவனின் குடும்பத்தைக் கருவறுக்கத் திட்டம் தீட்டினான்'.*

**கருவறை** பெ. (n.) *கோயிலில் மூலவர் சிலை இருக்கும் இடம்;உண்ணாழி;* (in temples) sanctum sanctorum.

**கருவாடு** பெ. (n.) *உப்பைச் சேர்த்து வெயிலில் நன்றாகக் காயவைக்கப் பட்ட உலர்மீன்;* salted and dried fish.

**கருவாப்பட்டை** பெ. (n.) *சமையலுக்கு உதவும் மணப்பட்டை;* cinnamon (used in cooking).

**கரைதல்** வி. (v.) *1. சூடம் முதலிய பொருள்கள் காற்றில் ஆவியாகி ஒன்றுமில்லாமல் போதல்;* evaporate. *2. உடலில் ஏற்பட்ட கட்டி, பரு முதலியவை அமுங்கி மறைந்து போதல்;* subside, disappear. *3. கையில் உள்ள பணம் செலவழிதல்;* be used up. *4. மனம் நெகிழ்தல் அல்லது உருகுதல்;* melt.

**கரை காணாத** பெ.அ. (adj.) *அளவிட்டுக் கூற முடியாத அளவுக்கு மிக அதிகமான;* boundless. ‘*நடனத்தின் மீது அவருக்குக் கரை காணாத ஆசை*’.

**கரைசேர்த்தல்** வி. (v.) *1. தன் பொறுப்பில் உள்ள ஒருவரைப் பாதுகாப்பான நல்ல நிலைக்குக் கொண்டு வருதல்;* help one’s dependents until they become self supporting. *2. தன் பொறுப்பில் உள்ள பெண்களைத் திருமணம் செய்து கொடுத்தல்;* marry.

**கரைத்துக்குடித்தல்** வி. (v.) *ஒரு வேலையில் அல்லது ஒரு துறையில் உள்ள அனைத்து நுணுக்கங்களையும் முழுமையாகத் தெரிந்து கொள்ளுதல்;* know inside out; learn thoroughly. ‘*வரலாற்றுப் பாடத்தை அவன் கரைத்துக் குடித்திருக்கிறான்*’.

**கரைதட்டுதல்** வி. (v.) *கப்பல் அல்லது பெரும் படகு கரையோர மணலில் சிக்கிக்கொள்ளுதல்;* run aground, be stranded.

**கரையேற்றுதல்** வி. (v.) *கரைசேர் பார்க்க.*

**கரையேறுதல்** வி. (v.) *துன்பம், வறுமை முதலியவற்றிலிருந்து மீளுதல் அல்லது விடுபடுதல்;* get out or be saved. ‘*வறுமையிலிருந்து கரையேறுவது எப்போது?*’.

**கரையைக் கடத்தல்** வி. (v.) *கடலில் உருவாகும் காற்றழுத்தத் தாழ்வு மண்டலம் புயலாக மாறி கடற் கரையைக் கடந்து நிலப்பகுதிக்குள் நுழைந்து வலுவிழத்தல்;* cross the coast.

**கல்குட்டை** பெ. (n.) *மலைப்பகுதிகளில் கருங்கல்லுக்காக வெட்டி எடுக்கப் பட்ட இடங்களில் உள்ள குழிகளில் தண்ணீர் தேங்கி உருவாகும் குட்டை;* a pool in a quarry.

**கல்சட்டி** பெ. (n.) *புளி சேர்த்துச் சமைக்கும் கறி, ஊறுகாய் போன்றவை வைப் பதற்காகப் பயன்படுத்தும் மாக் கல்லால் செய்யப்பட்ட மூடி இல்லாத பாத்திரம்;* a container without a lid, made of soapstone.

**கல்தோசை** பெ. (n.) *எண்ணெய் அதிக அளவில் ஊற்றாமல் சற்றுக் கனமாகத் வார்க்கப்படும் தோசை;* a kind of dosai made thick using less oil.

**கல் நெஞ்சம்** பெ. (n.) *இரக்க உணர்வு சிறிதும் இல்லாத மனம்;* hard - heartedness.

**கல்மழை** பெ. (n.) *ஆலங்கட்டி மழை;* shower of hailstones, hailstorm.

**கல்யாண ஊர்வலம்** பெ. (n.) *திருமணத் துக்கு முதல் நாள் இரவு மணமகனை அல்லது மணமகளை ஊர்வலமாக அழைத்துச் செல்லும் நிகழ்வு;* the ritual in which the bridegroom or the bride is taken in procession on the eve of the wedding.

**கல்யாணச்சாவு** பெ. (n.) *முதிர்ந்த அகவையுடையோரின் இயற்கையான இறப்பு;* natural death of a person at a ripe old age.

**கல்லுளி** பெ. (n.) *கல்லைச் செதுக்கப் பயன்படும் உளி;* stone cutter’s chisel.

**கல்லுளிமங்கன்** பெ. (n.) *தான் நினைப் பதையோ தன் உணர்ச்சிகளையோ வெளிவிடாத அழுத்தமான ஆள்;* an obdurate person, stony - faced person, poker-faced person.

**கல்லெறி தூரம்** பெ. (n.) *அண்மையில் அல்லது பக்கம்;* a stone’s throw. ‘*என் வீடு கல்லெறி தூரத்தில்தான் இருக்கிறது*’.

**கல்லைத் தூக்கிப் போடுதல்** வி. (v.) *ஒருவருடைய உறுதி குலைந்து போகும்படி அதிர்ச்சியளிக்கக்கூடிய ஒன்றைச் சொல்லுதல் அல்லது செய்தல், குண்டைத் தூக்கிப்*

போடுதல்; shatter (one's hopes, aspirations, etc.,).

**கல் விளக்கு** பெ. (n.) *மாக்கல்லால் செய்யப்பட்ட எண்ணெய் விளக்கு;* lamp made of soapstone. *'துளசி மாடத்தில் வைக்க ஒரு கல் விளக்கு வாங்க வேண்டும்'.*

**கல்வீச்சு** பெ. (n.) *போராட்டம், ஆர்ப்பாட்டம் போன்றவற்றில் ஈடுபட்டிருக்கும் கும்பல், கூட்டம், கட்டடம், வாகனம் முதலியவற்றின் மீது கற்களை வீசி அழிவு ஏற்படுத்தும் வன்முறைச் செயல்;* pelting (buildings, vehicles, etc., with stones in an act of vandalism).

**கல்வீடு** பெ. (n.) *மண் சுவராக இல்லாமல் கல்லால் கட்டப்பட்ட வீடு;* house built with brick and mortar.

**கல்வெட்டு** பெ. (n.) *1. ஒரு அரசர் பெற்ற வெற்றி, அளித்த கொடை முதலிய வற்றைக் குறித்து பாறையில் அல்லது கல்லில் செதுக்கப்பட்ட செய்தி;* rock inscription (of historical value). *2. இறந் தவரின் நினைவாக அச்சிட்டு வழங்கும் புத்தகம்;* a printed booklet distrubuted in remembrance.

**கலத்தல்** வி. (v.) *1. கூட்டத்தில் ஒருவராகச் சேர்தல்;* mingle (in the crowd). *2. ஒன்றில் ஒன்றைச் சேர்த்து உருவாக்கல்;* make (coffee, tea, etc., by adding the ingredients together). *3. ஆறு, ஓடை போன்றவை கடலில் அல்லது மற்றொரு நீரோட்டத்தில் வந்து சேர்தல்;* (of a river, stream) join, flow into. *4. ஒரு சிக்கல், தீர்மானம் முதலியவை தொடர்பாக ஒருவ ரோடு கலந்தாய்தல்;* consult. *5. ஒன்றாதல்;* become one with, get united. *6. உடலுறவில் சேர்தல்;* copulate, have sex.

**கலக்கம்** பெ. (n.) *உறுதியான முடிவை எடுக்க இயலாத தெளிவற்ற மன நிலை அல்லது குழப்பம்;* state of confusion on disturbance.

**கலகக்காரர்** பெ. (n.) *1. கருவி ஏந்தி ஆட்சியாளரை அதிகாரத்தை எதிர்ப் பவர்;* (armed) rebel. *2. குமுகாயத்தில் நிலவி வரும் மதிப்பீடுகளை கலை, இலக்கியம், மெய்மம் போன்ற வற்றின் மூலம் எதிர்த்துக் குரல் கொடுப்பவர் அல்லது அவற்றுக்கு எதிரான முறையில் வாழ்பவர்;* rebel (against the social orthodoxy).

**கலகம்** பெ. (n.) *1. அமைதியைக் குலைக்கும் சண்டை அல்லது குழப்பம்;* riot, unruliness. *2. ஆட்சி யாளர்களுக்கு, அதிகாரிகளுக்கு எதிரான கிளர்ச்சி;* rebellion, revolt, mutiny.

**கலகலத்தல்** வி. (v.) *1. ஒரு செயலாலும் அல்லது ஊர்தி நெரிசலாலும் ஓர் இடம் ஓசையோடு இருத்தல்;* (of a place) bustle with activity, become lively. *2. நாடகம், திரைப்படம் போன்ற வற்றில் சில தன்மைகளால் அவை யோரிடையே மகிழ்ச்சி மிகுதல்;* show visible signs of appreciation.

**கலகலப்பு** பெ. (n.) *1. பேச்சும் சிரிப்புமாக அல்லது ஆட்கள் நடமாட்டத்தால் ஆரவாரத்தோடு இருக்கும் நிலை;* live liness (resulting from noisy chatter and laughter). *2. பேச்சில்அல்லது பழகு வதில் தங்குதடையற்ற இயல்பான நிலை;* affability, heartiness.

**கலங்கல்** பெ. (n.) *1. நீர், எண்ணெய் போன்ற நீர்மங்களின் கலங்கிய நிலை;* (of liquid) turbidity, the condition of being not cleat, murkiness. *2. பனி, மழை போன்றவற்றால் உருவம் தெளி வில்லாமல் காணப்படும் நிலை;* haziness.

**கலந்துகட்டி** வி.அ. (adj.) *1. தனித் தன்மையோ குறிப்பிடத் தகுந்த*

மேன்மை இல்லாமல்; as in a hotchpotch. *2.* தனித்தனியாக இல்லாமல் எல்லாக் கலத்திலும் ஒன்றிரண்டு என்ற வகையில்; in an assorted manner.

**கலந்துகொள்ளுதல்** வி. (v.) ஒருவர் நிகழ்ச்சி, விழா போன்றவற்றில் பங்கு கொள்ளுதல் அல்லது பங்கேற்றல்; take part (in an activity; a competition, etc.,) participate.

**கலந்துரையாடல்** பெ. (n.) ஏதேனும் ஒரு பொருள் குறித்து சிலர் ஒன்று கூடி நிகழ்த்தும் கருத்துப் பரிமாற்றம்; discussion, get - together for a discussion.

**கலந்துரையாடுதல்** வி. (v.) ஓர் இடத்தில் கூடி, ஏதேனும் ஒரு பொருள் பற்றி கருத்துப் பரிமாறிக் கொள்ளுதல்; discuss, interact.

**கலப்படம்** பெ. (n.) ஒரு பொருளில் அதே மாதிரியான ஆனால் தரம் குறைந்த அல்லது மலிவான வேறொரு பொருளை நெறிமுறைகளுக்கு மாறாகக் கலந்துவிற்கும் செயல்; adulteration (in foodstuff etc.,).

**கலப்பினம்** பெ. (n.) ஓர் இனத்தில் இரு வகைகளை ஒன்று சேர்த்து உரு வாக்கும் மரபணு குலம்; (of animal, seed, etc.,) hybrid. '*கலப்பின விதைகள்*'.

**கலப்பு** பெ. (n.) ஒரே பிரிவின் அல்லது குலத்தின் பல வகைகள் ஒன்றாகச் சேர்ந்திருக்கும் நிலை; amalsam, blend. '*கலப்பு உரம்*'.

**கலப்புத் திருமணம்** பெ. (n.) வேறு பிரிவினர் அல்லது மதத்தைச் சார்ந்தவருடன் செய்து கொள்ளும் திருமணம்; intercaste or interreligious marriage.

**கலப்புபின்னம்** பெ. (n.) ஒரு முழு எண்ணும் தகுபின்னமும் சேர்ந்து அமையும் பின்னம்; mixed number. "*2 3/4 என்பது ஒரு கலப்பு பின்னம்*".

**கலப்பை** பெ. (n.) மாட்டைப் பூட்டி நிலத்தை உழுவதற்குப் பயன்படுத் தும் மரத்தால் ஆன ஏர்க்கருவி; plough.

**கலயம்** பெ. (n.) கஞ்சி, கள் முதலிய வற்றைக் குடிக்கப் பயன்படுத்தும் சற்று நீண்ட கழுத்தும் குறுகிய வாயும் உடைய சிறிய மண் பானை; an earthen pot having raised neck and a narrow mouth. '*கலயத்தில் கஞ்சியா கள்ளா?*'.

**கலவரம்** பெ. (n.) *1.* கலகம், கிளர்ச்சி; revolt, rebellion. *2.* பயம் கலந்த மனக் குழப்பம் அல்லது அதிர்ச்சி; being upset, disturbance.

**கலவை** பெ. (n.) *1.* பல்வேறுபட்ட பொருள்களின் கலப்பு; mixture. '*கலவையான மணம்*'. *2.* சிமிண்டும் (பைஞ்சுதை) மணலும் கலந்த பூச்சுப் பொருள்; mixture of cement and sand.

**கலி முற்றிப்போதல்** வி. (v.) ஊழிக்காலம் என்பதால் வன்செயல்களும், தீமை களும் பெருகுதல்; evil days be on.

**கலுங்கு** பெ. (n.) குளம், ஏரி போன்ற வற்றில் கொள்ளளவுக்கு அதிகமாக நிறையும் நீர் வெளியேறுவதற்கான அமைப்பு; floodgate, sluice.

**கலைநிகழ்ச்சி** பெ. (n.) நாட்டியம், நாடகம் முதலிய கலை வடிவங்களில் வழங்கும் நிகழ்ச்சி; programme of entertainment. '*நாடகக் கலைஞர்*'.

**கலையரங்கு** பெ. (n.) நாடகம், நடனம் போன்ற கலை நிகழ்ச்சி நடக்கும் இடம்; auditorium, concert hall.

**கலைவிழா** பெ. (n.) கலை நிகழ்ச்சிகளைக் கொண்ட விழா; cultural festival.

**கவ்வுதல்** வி. (v.) *1.* பற்களுக்கு அல்லது அலகுகளுக்கு இடையில் அழுத்திப் பிடித்தல்; hold. *2.* இருள் சூழ்தல்; (of darkness) envelop. *3.* ஒன்று மற்

றொன்றோடு இறுக்கமாகப் பொருந்துதல்; fit tightly.

**கவட்டி** பெ. (n.) *கவட்டை பார்க்க.*

**கவட்டுக்கால்** பெ. (n.) *உட்பக்கமாக வளைந்த கால் அல்லது கப்பைக் கால்;* bandy legs.

**கவட்டை** பெ. (n.) *1. இரண்டு சிறு கிளைகள் ஒன்றுக்கொன்று நேர் எதிரில் பிரியும் அமைப்பைக் கொண்ட கம்பு;* fork of a branch. *2. உண்டிவில்;* catapult. *3. இரு தொடைகள் சேரும் இடம்;* fork of the legs, crotch.

**கவண்** பெ. (n.) *கயிற்றில் கட்டப்பட்ட பட்டையான தோலில் கல் வைத்து பயிர்களைக் கொத்தும் பறவைகளை விரட்ட சுழற்றி எறியும் சிறு கருவி;* sling (to drive away birds that destroy the crops).

**கவர்தல்** வி. (v.) *1. குறிப்பிடத்தக்க தன்மை, அழகு காரணமாகக் கவனத்தை ஈர்த்தல்;* attract, draw the attention of captivate. *2. ஒன்றை முறையற்ற வழியில் தன்வயப் படுத்திக் கொள்ளுதல்;* take, appropriate, capture.

**கவர்ச்சி** பெ. (n.) *1. கவனத்தை ஈர்க்கும் தன்மை;* quality that hold one's attention, attraction. *2. பாலுணர்வைத் தூண்டும் முறையிலானது;* being seductive or sexy. *'கவர்ச்சி நடனம்'*. *3. கவரும் அழகு;* special charm, attraction. *4. ஒன்றின் அல்லது ஒருவரின் மேல் உள்ள ஈர்ப்பு;* fascination.

**கவலை** பெ. (n.) *1. ஒரு நிகழ்ச்சியால் அல்லது நிலைமையால் ஏற்படும் நிம்மதியின்மை அல்லது வருத்தம்;* anxiety, worry. *2. விரும்புவது அல்லது தேவைப்படுவது கிடைக்கவில்லை என்று நினைத்து வருத்தப்பட வேண்டிய நிலை;* worry. *'பசுமாடு வாங்கிவிட்டால் பாலுக்குக் கவலை இல்லை'*.

**கவலைக்கிடம்** பெ. (n.) *ஒருவர் உயிர் பிழைப்பாரா அல்லது இறப்பாரா என்பதை உறுதியாகச் சொல்ல முடியாத அளவுக்கு இருக்கும் மிகவும் மோசமான நிலை;* critical condition or state.

**கவலைப்படுதல்** வி. (v.) *ஒன்றைக் குறித்து கவலை கொள்ளுதல்;* worry, be anxious. *'நான் இருக்கும்போது நீ ஏன் கவலைப்படுகிறாய்?'*.

**கவளம்** பெ. (n.) *1. கைப்பிடி அளவான சோற்று உருண்டை, ஒரு பிடி உணவு;* a handful of food, morsel. *'இரண்டு கவளம் கூடக் குழந்தை சாப்பிட வில்லை'*. *2. யானைக்குத் தரும் உணவுக் கட்டி;* elephant fodder rolled into a ball.

**கவன ஈர்ப்புத் தீர்மானம்** பெ. (n.) *முகாமை வாய்ந்த பொதுச் சிக்கல் ஒன்றை அவையின் கவனத் துக்குக் கொண்டு வருவதற்காக அவைத் தலைவரின் அனுமதியுடன் உறுப்பினர் கொண்டு வரும் தீர்மானம்;* statement made by a member of legislature, etc., with the permission of the speaker for calling the attention of the house to a matter of urgent public importance (in India) call attention motion.

**கவனம்** பெ. (n.) *1. ஒரு செயலைச் செய்யும் செயலுடன் மனம் ஒன்றிய நிலை;* attention. *'அவர் சொல்வதைக் கவனத் துடன் கேள்'*. *2. தான் இருக்கும் அல்லது செயல்படும் சூழல்பற்றி விழிப்போடு இருக்கும் நிலை;* alertness, curefulness, vigilance. *3. குறிப் பிட்ட சூழலில் ஒன்றைப் பற்றிய நினைவு;* being mindful. *4. அக்கறை;* care.

**கவனமெடுத்தல்** வி. (v.) *ஒன்றின் மீது அக்கறை காட்டுதல்;* show interest. *'நான் சொன்ன செயலில் கொஞ்சம் கவனமெடு'.*

**கவனித்தல்** வி. (v.) *1. பார்த்தல், கேட்டல் மூலம் ஒன்றை மனத்தால் அறிந்து கொள்ளுதல்;* look or listen intently (so as to recored what is seen or heard), pay attention to, notice. *2. அக்கறையுடன் பேணுதல் அல்லது பராமரித்தல்;* take care of. *3. ஒன்றில் ஒரு சிறப்பை மட்டும் குறிப்பிட்டுச் சொல்லுதல்;* note. *4. ஒருவரை அல்லது ஒரு படைப்பு முதலியவற்றை இனம் காணுதல்;* take notice, acknowledge. *5. ஒருவரைப் பணியச் செய்வதற்காக அவர் மீது வன்முறையைச் செலுத்துதல்;* use force. *6. ஒரு செயலை முடித்துத் தருவதற்காக ஒருவருக்குப் பணம், சலுகை போன்றவற்றைத் தருதல்;* tip so or show concession to something (in return for a favour).

**கவனிப்பு** பெ. (n.) *1. ஒருவர் ஒன்றின் மேல் செலுத்தும் கவனம்;* attention. *'உங்கள் பையனுக்குப் பாடத்தில் சரியான கவனிப்பு இருப்பதில்லை'. 2. ஒருவர் தன்னுடைய செயலால் பிறரிடமிருந்து பெறும் மதிப்பு அல்லது கவனம்;* notice. *3. பணிவிடை, விருந்தோம்பல்;* hospitality. *'கல்யாணத்தில் கவனிப்பு அதிகமாக இருந்தது'.*

**கவிச்சை** பெ. (n.) *1. மீன், இறைச்சி முதலியவற்றின் நாற்றம்;* stink (of meat, esp. fish). *'மீன் கவிச்சை'. 2. ஊண் உணவு;* meat dish, non-vegetarian dish. *'அவருக்குக் கவிச்சை இல்லாமல் சாப்பிட முடியாது'.*

**கவியரங்கம்** பெ. (n.) *ஏதேனும் ஒரு தலைப்பில் கவிஞர்கள் தாங்கள் இயற்றிய கவிதைகளைப் படித்துக் காட்டும் நிகழ்ச்சி;* poets meet or forum (to read poems composed on a common theme).

**கவுதாரி** பெ. (n.) *தவிட்டு நிற உடலில் கறுப்புக் கோடுகளை உடைய, கோழியைவிடச் சற்றுச் சிறிய பறவை;* grey partridge.

**கவுளி** பெ. (n.) *நூறு வெற்றிலை அடங்கிய ஒரு கட்டு;* a pack of hundred betel leaves. *'கல்யாணத்துக்கு முப்பது கவுளி வெற்றிலை வேண்டும்'.*

**கவை** பெ. (n.) *1. கரும்பு, மூங்கில் முதலியவற்றில் இரண்டு துண்டுகளை இணைப்பது போல் இடையில் இருக்கும் சற்றுக் கடினமான பகுதி;* node (in susan cane, bamboo, etc.,). *2. கைவிரல், முதுகுத்தண்டு முதலிய வற்றில் காணப்படும் இணைப்பு;* joint. *'கணுவுக்குக் கணு வலிக்கிறது'.*

**கவைக்கம்பு** பெ. (n.) *கவையை உடைய கம்பு;* stick with forked branch. *'கவைக்கம்பை நான்கு பக்கமும் ஊன்றி வெற்றிலைக் கொடிக்கு ஒரு பந்தல் போட்டான்'.*

**கழனி** பெ. (n.) *நன்செய் நிலம் அல்லது வயல்;* (paddy) field. *'கண்ணுக்கு எட்டிய தூரம்வரை பச்சைப் பசேலென்று காட்சி தரும் கழனி'.*

**கழிச்சல்** பெ. (n.) *உயிரினங்களுக்கு ஏற்படும் வயிற்றுப்போக்கு;* diarrhoea (suffered by cattle).

**கழிசடை** பெ. (n.) *ஒன்றுக்கும் உதவாத ஆள் அல்லது பொருள்;* worthless person or thing, scum of the earth. *'கண்ட கழிசடையெல்லாம் படித்துக் கெட்டுப் போகாதே!'.*

**கழித்தல்** வி. (v.) *1. ஒருவர் காலத்தைச் செலவழித்தல் அல்லது போக்குதல்;* pass (the time, days, etc.,). *2. ஒரு தொகையிலிருந்து மற்றொரு தொகையைப் பிடித்தல் அல்லது ஓர் எண்ணிலிருந்து மற்றோர் எண்ணைக் குறைத்தல்;* deduct (an amount,

interest), subtract (a number from another). *3. ஒரு பொருளில் உள்ள வேண்டாததை ஒதுக்குதல்;* dispose of unwanted. *4. ஒருவரிடம் வாங்கிய கடனைத் தீர்த்தல் அல்லது அடைத்தல்;* clear (the debts). *5. மரத்தின் உள்ள தேவையில்லாத கிளையை வெட்டுதல்;* lop (a branch, etc.,).

**கழித்து** வி.அ. (adj.) *குறிப்பிட்ட காலம், நேரம் கழிந்த பின்;* (in time) after. *'நீ போய் ஒரு வாரம் கழித்து இது நடந்தது'.*

**கழித்துக்கட்டுதல்** வி. (v.) *பயன் இல்லாதது, பழுதடைந்தது என்று பல காரணங்களால் வேண்டாம் என்று ஒன்றை ஒதுக்கிவிடுதல்;* discard.

**கழிப்பிடம்** பெ. (n.) *பொது இடத்தில் உள்ள கழிப்பறை;* public convenience. *'கட்டணக் கழிப்பிடம்'.*

**கழிப்பு** பெ. (n.) *ஏதோ ஒன்றிற்குக் கண்ணேறு கழித்தல்;* evil eye. *'புது வீட்டுக்குப் பூசணிக்காய் வெட்டிக் கழிப்பு கழித்தார்கள்'.*

**கழிவு** பெ. (n.) *1. தேவையற்றது என்று கழிக்கப்பட்டதாகிய குப்பை கூளம்;* garbage. *2. மாந்தர்கள் மற்றும் விலங்குகளின் மலவாய் வழியாக வெளியேறுவது;* faeces. *3. தரத்தில் குறைந்தது என்று நீக்கப்பட்டது;* discarded as inferior in quality, refuse. *4. ஏலச்சீட்டு முதலியவற்றில் அளிக்கப்படும் தள்ளுபடி;* balance of the money (divided among the members after bidding). *5. விற்கும்போது பொருள்களுக்கு அளிக்கப்படும் விலை குறைப்பு அல்லது தள்ளுபடி;* discount.

**கழுத்தறுத்தல்** வி. (v.) *1. ஒருவரைச் சிறுசிறு செயல்களுக்காகத் தொல்லைக்கு உள்ளாக்குதல்;* annoy, be a pain in the neck. *2. நம்பியிருந்த ஒருவர் அல்லது ஒன்று மிகச் சரியான சமயத்தில் கைவிடுதல்;* leave in the lurch.

**கழுத்தில் கட்டுதல்** வி. (v.) *1. ஒருவருக்கு வற்புறுத்தித் திருமணம் செய்து வைத்தல்;* get, married to an unwilling person. *2. வலியுறுத்தி ஒரு பணியை ஒருவர்க்குக் கொடுத்தல்;* to handover one work to one compulsary.

**கழுத்தை நீட்டுதல்** வி. (v.) *ஒரு பெண் திருமண ஏற்பாட்டுக்கு வேறு வழியின்றி உட்படுதல்;* (of a woman) meekly consent to the marriage proposed. *'பணக்காரன் என்பதற்காக எனக்குப் பிடிக்காத ஒருவனுக்குக் கழுத்தை நீட்ட முடியுமா?'.*

**கழுவேற்றுதல்** வி. (v.) *முற்காலத்தில் கடும் குற்றம் செய்த ஒருவரைக் கழு மரத்தில் ஏற்றி உயிரைப் போக்குதல்;* (in former times) impale a person (on a spike). *'கழுவேற்றுவதில் பல முறை உண்டாம்'.*

**கழைக்கூத்து** பெ. (n.) *இரு மூங்கில் (கழை) நிலைகளுக்கிடையில் கட்டப்பட்ட கயிற்றில் ஒரு நீளமான மூங்கில் கழியை வைத்துக் கொண்டு ஆடும் கலைக்காட்சி;* tightrope - walking programme.

**கள்** பெ. (n.) *தென்னை அல்லது பனை மரத்திலிருந்து வடிக்கப்படும், குடி மயக்கம் (போதை) தரும் குடிநீர் (பானம்);* toddy (tapped from palmyra or coconut palm).

**கள்ளங்கபடம்** பெ. (n.) *பொய், களவு, சூழ்ச்சி முதலிய தீய செயல்களைச் செய்யவும் பிறர் செய்தால் அவற்றை அறியவும் இயலும் தன்மை;* guile, deceitfulness. *'அவன் அப்பாவி, கள்ளங்கபடம் அற்றவன்'.*

**கள்ளச்சந்தை** பெ. (n.) *அரசின் கட்டுப்பாட்டின் கீழ் இருக்கும் பொருள்களை உரிமம் பெறாமலும் வரி செலுத்தாமலும் அதிக விலைக்கு விற்கும் வணிகம் அல்லது கறுப்புச் சந்தை;* black market.

**கள்ளச்சாவி** பெ. (n.) *திருடும் நோக்கத்துடன் அல்லது உரியவரின் அனுமதி இன்றிப் பூட்டைத் திறக்கப் பயன்படுத்தும் மாற்றுத்திறவுகோல்;* forged key.

**கள்ளத்தனம்** பெ. (n.) *திருட்டுத்தனம்;* furtiveness. *'அவன் அரைக் கண்ணால் அவளைக் கள்ளத்தனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்'.*

**கள்ளன்** பெ. (n.) *1. திருடன்;* thief. *2. பகட்டுத் தொனியில் உண்மையை மறைப்பவன்;* (jocularly) a good masquerader. *'இவனுக்கு எல்லாம் தெரியும், ஆனால் சொல்ல மாட்டான். சரியான கள்ளன்!'.*

**களங்கம்** பெ. (n.) *ஒருவருடைய நற்பெயருக்கு அல்லது குடும்பத்தின் பெருமைக்கு வந்து சேரும் கெட்ட பெயர்;* slur, blemish, stain, dishonour. *'உங்கள் புகழுக்குக் களங்கம் கற்பிக்கப் பார்க்கிறார்கள்'. 2. பெண்ணைக் குறிப்பிடும்போது நடத்தையில் கெட்ட பெயர்;* stigma (attributed to a woman). *'பெண்ணுக்குக் களங்கம் கற்பித்துத் திருமணத்தை நிறுத்த முயற்சி'.*

**களத்துமேடு** பெ. (n.) *சிற்றூர்களில் கதிரடிப்பதற்கான வயலைவிடச் சற்று உயரமான இடம்;* (in the countryside) threshing ground (a little elevated from the ground).

**களப்படி** பெ. (n.) *அறுவடை செய்தல், கதிரடித்தல் போன்ற வேலைகளைச் செய்தவர்களுக்குக் களத்தில் கூலிக்கு மேல் கூடுதலாகத் தரப்படும் தவசம்;* extra quantity of grains given over and above the wages to workers during harvest.

**களப்பணி** பெ. (n.) *ஆய்வு, அறிக்கை முதலியவற்றிற்காக உரிய இடங்களுக்குச் சென்று தரவல் திரட்டும் பணி;* fieldwork (for research, investigation, etc.,). *'நாட்டார் வழக்காற்றியல் களப்பணி'.*

**களவாடுதல்** வி. (v.) *திருடுதல்;* steal. *'தோட்டத்தில் புகுந்து மரங்களைக் களவாடி மாட்டிக்கொண்டான்'.*

**களவாணி** பெ. (n.) *பொருள்களைத் திருடும் ஆள்;* petty thief.

**களவுபோதல்** வி. (v.) *திருடப்படுதல் அல்லது திருடுபோதல்;* be stolen. *'எங்கள் வீட்டு மாடு களவு போய் விட்டது'.*

**களிமண்** பெ. (n.) *கெட்டியாகவும் இறுகியும் நீர் பட்டால் குழையக் கூடியதாகவும் இருக்கும் ஒரு வகைக் கறுப்பு நிற மண்;* clay. *'அவன் தலையில் மூளை இல்லை, களிமண் தான் என்று அண்ணன் திட்டினான்'.*

**களியாட்டம்** பெ. (n.) *1. அகமகிழ்வு நிறைந்த கொண்டாட்டம்;* gaiety. *2. குடித்தோ சிற்றின்பத்தில் ஈடுபட்டோ மகிழும் கேளிக்கை;* revelry. *'இரவின் களியாட்டங்கள்'.*

**களைத்தல்** வி. (v.) *1. ஒருவர் வேலை செய்து சோர்வடைதல்;* feel tired, feel exhausted. *'ஒரு மைல் கூட நடக்கவில்லை, அதற்குள் களைத்து விட்டாயே!'. 2. ஆடையை உடலிலிருந்து கழற்றி, உருவி நீக்குதல்;* take off (clothes), remove.

**களைக்கொட்டு** பெ. (n.) *களை வெட்டி;* weeding-hook.

**களைக்கொல்லி** பெ. (n.) *களைகளை அழிக்கப் பயன்படுத்தும் வேதிப் பொருள்;* weedicide.

**களைகட்டுதல்** வி. (n.) *நிகழ்ச்சி அல்லது நிகழ்ச்சி நடக்கும் இடம் பொலிவுடன் காணப்படுதல்;* become lively, come alive, take off. *'விருந்தினர்கள் வருகையால் கல்யாண வீடு களை கட்டி விட்டது'.*

**களைப்பாறுதல்** வி. (v.) *ஓய்வெடுத்தல் அல்லது இளைப்பாறுதல்;* have respite, take rest. *'கதை படிப்பவர் கொஞ்சம் நிறுத்திவிட்டுக் களைப்பாறினார்'.*

**களைப்பு** பெ. (n.) *நோயினாலோ, அதிக உழைப்பினாலோ வலிமை இழந்த நிலை;* exhaustion. *'காய்ச்ச லுக்குப் பிறகு அடிக்கடி களைப்பாக இருப்பதை உணர்கிறேன்'.*

**களைவெட்டி** பெ. (n.) *களைகளை நீக்கப் பயன்படுத்தும் சிறிய இருப்புத் தகடு பொருத்தப்பட்ட மரப்பிடியோடு கூடிய கருவி;* a small implement with a flat end attached to a wooden handle for weeding, weeding-hook.

**கற்கண்டு** பெ. (n.) *படிகம் போல இருக்கும் கரும்புச் சாற்றின் கட்டி;* rock-candy (from sugarcane juice).

**கற்பனை** பெ. (n.) *1. இல்லாத ஒன்றைப் புதிதாகச் சிந்தனையில் படைக்கும் அல்லது உருவாக்கும் ஆற்றல்;* imagination. *'மிகுந்த கற்பனை யுடன் உருவாக்கப்பட்ட தோட்டம்'.* **2.** இல்லாததை இருப்பதாக நினைத்துப் பார்ப்பது; imagination. *'அவர் பணத்தைத் திருடிவிட்டார் என்பது உன் கற்பனை'.*

**கற்றுக்கொடுத்தல்** வி. (v.) *கல்வி, வேலை, பழக்கம் முதலியவற்றை ஒருவருக்கு சொல்லிக் கொடுத்தல்;* teach.

**கறுப்பு ஆடு** பெ. (n.) *ஒரு குழுவில் இணக்கமாக இருப்பதுபோல் காட்டிக்கொண்டு மற்றொரு குழுவின் நலனுக்கு எதிராகச் செயல் படுபவர் அல்லது கருங்காலி;* black sheep. *'ஏதோ ஒரு கறுப்பு ஆடு நாம் போடும் திட்டத்தையெல்லாம் மேலிடத்தில் சொல்லிக் கொண் டிருக்கிறது'.*

**கறுப்புக் கண்ணாடி** பெ. (n.) *வெயிலில் செல்லும்போது வெயிலின் ஒளி யானது கண்ணைத் தாக்காமல் இருக்க அணியும் கருப்பு நிற மூக்குக் கண்ணாடி;* sunglasses.

**கறுப்புப்பணம்** பெ. (n.) *வருமான வரிக்கணக்கில் காட்டாமல் பதுக்கப் படும் பணம்;* black money.

**கறுப்பு வெள்ளை** பெ. (n.) *புகைப்படம், திரைப்படம் போன்றவற்றில் வண்ண மல்லாது கறுப்பு, வெள்ளை மட்டுமே கொண்டது;* black and white. *'கறுப்பு வெள்ளைத் தொலைக்காட்சிப் பெட்டி'.*

**கறுவுதல்** வி. (v.) *முன்பகை, போட்டி, சண்டை முதலியவற்றின் காரணமாக மனத்திற்குள் வஞ்சகம் வளர்த்தல் அல்லது பழிதீர்ப்பதாகப் பேசுதல்;* nurse ill feelings, harbour malice. *'போட்டியில் என்னிடம் தோற்றதி லிருந்து கறுவிக்கொண்டு திரிகிறான்'.*

**கன்றுபோடுதல்** வி. (v.) *பசு, எருமை, யானை ஆகிய விலங்குகள் கன்றை ஈனுதல்;* calve (of cow, buffalo, elephant).

**கன்னக்கோல்** பெ. (n.) *முற்காலத்தில் சுவரில் ஓட்டை போடத் திருடர்கள் பயன்படுத்திய கடப்பாரை போன்ற கருவி;* crowbar like tool.

**கன்னங்கரிய** பெ.அ. (adj.) *மிகவும் கறுப்பான;* pitch-black. *'கன்னங்கரிய நிறத்தில் இரண்டு அண்டங் காக் கைகள்'.*

**கன்னங்கரேல் என்று** வி.அ. (adv.) *மிகவும் கறுப்பாக;* in a jet black manner. *'அம்மன் சிலை கன்னங்கரேலென்று இருந்தது'.*

**கன்னாபின்னா என்று** வி.அ. (adv.) *1. எந்த ஒரு முறையும் ஒழுங்கும் இல்லாமல்;* without order or propriety. *'கன்னாபின்னாவென்று செலவு செய்தால் சமாளிக்க முடியாது'.*

2. *தரக்குறைவாகப் பேசுதல்;* using rude language, indecently. *'வாடகை தரவில்லை என்பதற்காக விட்டு உரிமையாளர் கன்னாபின்னாவென்று கத்த விட்டார்'.*

**கன்னிகழிதல்** வி. (v.) *ஒரு பெண்ணின் கன்னித்தன்மை நீங்குதல்;* one's maiden hood come to an end formally.

**கன்னிகாதானம்** பெ. (n.) *பெண்ணை ஒருவருக்குத் தாரைவார்த்துக் கொடுத்துத் திருமணம் செய்வித்தல்;* giving one's daughter in marriage.

**கன்னிசாமி** பெ. (n.) *சபரிமலைக்கு முதல் முறையாகச் செல்வதற்காக மாலை போட்டுக் கொள்பவர்;* person observing rituals for his maiden pilgrimage to Sabarimalai.

**கன்னிமாடம்** பெ. (n.) *அரச குலத்தைச் சேர்ந்த கன்னிப் பெண்கள் வசித்த அரண்மனையின் பகுதி;* part of the palace where the royal maidens lived.

**கன்னியர்மடம்** பெ. (n.) *கத்தோலிக்கப் பிரிவைச் சேர்ந்த கிறித்துவப் பெண் துறவிகள் வசிக்கும் இடம்;* nunnery convent.

**கனத்தல்** வி. (v.) *1. தூக்கும்போது களைப்பு தரக்கூடிய அளவில் அதிக எடை உடையதாக இருத்தல்;* be heavy. *'பொருட்கள் நிறைந்திருந்த பெட்டி தூக்க முடியாமல் கனத்தது'.* 2. *நீர்க் கோவையால் தலை கனமாக இருத்தல்;* feel heavy. *'இரண்டு நாட்களாக எனக்குத் தலை கனத்துக் கொண்டிருக்கிறது'.* 3. *ஒருவரின் உடல் அல்லது உடலின் ஒரு பகுதி பெருத்தல்;* become stout. *'முன்பு பார்த்தபோது இருந்ததைவிட இப் போது சற்று கனத்திருக்கிறாய்'.* 4. *மழை, காற்று வலுத்தல்;* (of rain) become heavy. *'மழை கனக்க தொடங்கி விட்டது'.*

**கனரக வாகனம்** பெ. (n.) *சரக்குகளை அல்லது பயணிகளை ஏற்றிச் செல்லும் பெரிய ஊர்தி;* heavy vehicle. *'இந்தப் பகுதியில் கனரக வாகனங்கள் செல்வதற்கு இசைவு இல்லை'.*

**கனல்** பெ. (n.) *1. நெருப்பு, வெயில் ஆகியவற்றின் கடுமையான சூடு அல்லது தகிப்பு;* intense heat, glow. *'அடுப்பில் கனல்'. 2. ஓர் உவமைச் சொல்;* (mostly metaphorically) fire. *'கனல் கக்கும் சொற்பொழிவு'.*

**கனவு** பெ. (n.) *1. தூக்கத்தில் தோன்றும் உணர்வுகள், மனக்காட்சிகள் போன்றவை;* dream. *'வானூர்தியில் செல்வது போல் ஒரு கனவு'. 2. மனத்தில் வளர்க்கும் எண்ணம், விருப்பம்;* desire, dream. *'அவளுடைய கனவு வீண்போகவில்லை'.*

**கனிவு** பெ. (n.) *பேச்சு, பார்வை, செய்கை ஆகியவற்றில் அன்பு, பரிவு முதலியவற்றின் நயமான வெளிப்பாடு;* tenderness. *'நோயாளிகளிடம் கனிவாகப் பேசினாலே பாதி நோய் போய்விடும்'.*

**கனைத்தல்** வி. (v.) *1. குதிரை அல்லது கழுதை கத்துதல்;* (of horse) neigh, (of donkey) bray. 2. *தொண்டையில் தங்கியிருக்கும் உமிழ்நீர் போன்றவற்றை நீக்க மிகவும் மெதுவாக இருமுதல்;* clear (the throat). *'அவர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு ஒரு மடக்குத் தண்ணீர் குடித்துவிட்டுப் பேசத் தொடங்கினார்'.*

# கா

**காக்காய்க்கடி** பெ. (n.) *பெரும்பாலும் (சிறுவர் பேச்சில் திண்பண்டம் போன்றவற்றை) எச்சில் படாமல் துணியால் மூடிக்கடிக்கும் முறை;* crow bite. *'அந்த மிட்டாயில் எனக்குக் காக்காய்க்கடி கடித்துக் கொஞ்சம் கொடு'.*

**காக்காய்க்குளியல்** பெ. (n.) *முழு உடம்பையும் நனைக்காமல், தண்ணீரை அள்ளித் தெளித்து உடம்பைக் கழுவிக்கொள்ளுதல்;* wash in a hurry. *'காக்காய்க்குளியல் போட்டுவிட்டு ஐந்து நிமிடத்தில் வந்துவிடுகிறேன்'.*

**காக்காய்க்கூட்டம்** பெ. (n.) மேலிடத்தில் உள்ளவர்களைப் புகழ்ந்து அல்லது அவர்களுக்கு இசைவாக நடந்து கொள்ளும் மக்கள்; bunch of toadies. *'அவரைச் சுற்றி எப்போதும் ஒரு காக்காய்க் கூட்டம் இருக்கும்'.*

**காக்காய்ப் பிடித்தல்** வி. (v.) வேண்டியதைச் செய்து மகிழ்வித்தல் *(தன் காரியத் துக்காக ஒருவருக்கு);* curry fovour with ingratiate (oneself). *'மேலதிகாரியைக் காக்காய் பிடித்து எப்படியாவது அவன் செயலை நிறைவேற்றிக் கொள்வான்'.*

**காக்காய் வலிப்பு** பெ. (n.) மூளையில் ஏற்படும் ஒரு வகை நோய்; epilepsy. *'கை கால்கள் வெட்டி வெட்டி இழுத்து வாயில் நுரை தள்ளிச் சுயநினைவை இழக்கச் செய்யும் ஒரு நோய்'.*

**காசாக்குதல்** வி. (v.) தன் வரும்படியைக் குறியாகக் கொண்டு எதையும் விற்று அல்லது பயன்படுத்திப் பணம் சேர்த்தல்; cashing on something. *'அவன் மண்ணையும் காசாக்கி விடுவான்'.*

**காசாளர்** பெ. (n.) *வைப்பகம், அலுவலகம் முதலியவற்றில் பணம் தருதல், பெறுதல்;* cashier. *'பணம் தருதல், பெறுதல் ஆகியவற்றையும் அவை தொடர்பான பிற பணிகளையும் செய்பவர்'.*

**காசு** பெ. (n.) *நாணயம்;* coin. *'குனிந்த போது பையிலிருந்து காசுகள் கீழே விழுந்தன'. '*

**காசுபார்த்தல்** வி. (v.) *பணம் ஈட்டுதல்;* earn money. *'வீணாக ஊர்சுற்றுவதை விட்டு விட்டு ஏதாவது வேலை பார்த்துக் காசு பார்க்கிற வழியைப் பார்'.*

**காசுபிரித்தல்** வி. (v.) பணம் தண்டுதல்; collect donations (or) contributions. *'கூத்து நடந்து கொண்டிருக்கும்போது வேடம் கட்டியவர்களே தட்டுகளை எடுத்துக்கொண்டு கூட்டத்தினுள் சென்று காசு பிரிக்கிறார்கள்'.*

**காசுமாலை** பெ. (n.) பெண்கள் கழுத்தில் *அணியும் மாலை;* a necklace made with coin like pieces of Gold or Silver. *'நாணய வடிவத் தகடுகளைக் கோத்துச் செய்யப்பட்ட நகையணி'.*

**காட்சி** பெ. (n.) கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் ஒருவருக்குத் தென்படும் தோற்றம்; sight, seenery. *'அந்த இயற்கைக் காட்சி அவன் மனதைக் கவர்ந்தது'.*

**காட்டம்** பெ. (n.) எரிச்சல் கலந்த சினம்; sharpness (of temper); pungency. *'மிளகாய்ச் சட்டினியின் காட்டம்'. 'யாரைக் கேட்டு இந்தக் காரியத்தைச் செய்தாய்' என்று அவர் காட்டமாகக் கேட்டார்.*

**காட்டாமணக்கு** பெ. (n.) ஒருவகை *ஆமணக்கு;* Physic nut; purging nut. *(மருத்துவக் குணமுள்ள) ஒடித்தால் பால் வரும் தண்டையும் கொத்துக் கொத்தான பூக்களையும் கொண்ட ஆமணக்கு.*

**காட்சியளித்தல்** வி. (v.) தோற்றம் தருதல்; appear; present (oneself in a particular manner). *'திருவிழாக் கோலத்தில் நகரமே ஒளிமயமாகக் காட்சி யளித்தது'.*

**காட்டான்** பெ. (n.) *முரட்டுத்தனமாக நடந்து கொள்பவன்;* person of rough manners. *'காட்டான் மாதிரி கத்தாதே'.*

**காட்டிக் கொடுத்தல்** வி. (v.) வஞ்சகமாகத் தெரிவித்தல்; inform on (as an act of

betrayal). *'கொலை வழக்கில் தேடப் பட்டுவரும் தந்தையை மகனே காட்டிக் கொடுத்தான்'.*

**காட்டிக்கொள்தல்** வி. (v.) போலியாகத் தோற்றம் செய்தல்; try to pass for; put on airs. *'அவன் தன்னை அறிவாளி போல் காட்டிக் கொண்டான்'.*

**காட்டுக்கூச்சல்** பெ. (n.) பெருத்த ஒலி; raucous clamour; uproarious shouting. *'வீட்டுக்குள் நுழைந்ததும் காட்டுக் கூச்சல் போட்டால் என்ன அர்த்தம்?'.*

**காட்டுத்தனம்** பெ. (n.) கட்டுப்பாடில் லாத முறை; recklessness. *'குழந் தையை இப்படி அடிப்பது முழுக் காட்டுத்தனம்'.*

**காட்டுத்தீ** பெ. (n.) *(விரைவில் எல்லாப் பகுதிகளுக்கும் பரவிவிடும்)* நெருப்பு; wildfire. *'தலைவர் இறந்து விட்டார் என்ற செய்தி காட்டுத் தீ போலப் பரவியது'.*

**காட்டுப்பயல்** பெ. (n.) நாகரிகம் தெரியாத, முரட்டுத்தனமாக நடந்து கொள்பவர்; boor; savage. *'என் மருமகன் ஒரு காட்டுப்பயல். அவனிடம் மாட்டிக் கொண்டு என் மகள் பட்ட துன்பங்கள் கொஞ்சமல்ல'.*

**காட்டுமிராண்டி** பெ. (n.) காடுகளில் விலங்குகளை வேட்டையாடி வாழ்ந்த மனிதன்; savage. *'அந்த காட்டுமிராண்டியுடன் யார் பேச முடியும்?'.*

**காடாற்று** பெ. (n.) இறந்தவரை எரிப்புச் செய்யும் இடத்தில் *(பெரும்பாலும்)* அடுத்த நாள் பால் தெளித்துச் செய்யும் சடங்கு; perform the ceremony of sprinkling milk. *'நேற்றுதான் அவரின் காடாற்று நடந்தது'.*

**காடு** பெ. (n.) *1.* வனம்; forest; jungle. *2.* புன்செய் நிலம்; dry land (under cultivation). *'உழுவதற்காக மாடு களைக் காட்டுக்கு ஓட்டிக்கொண்டு போனான்'.*

**காடுகரை** பெ. (n.) வயலும் வயலைச் சார்ந்த பகுதியும்; (cultivable) land and adjacent area. *'காடுகரையைச் சுற்றிப் பார்த்து விட்டு வீடு திரும்பினார்'.*

**காணம்** பெ. (n.) *1.* செக்கு; oil press. *'உங்களுக்குச் சொந்தக் காணம் இருக்கிறதா?'.* *2.* கொள்ளு; horsegram.

**காணாமல் போதல்** வி. (v.) *1.* தொலைந்து போதல்; be missing. *'காணாமல் போனவர்களைப் பற்றிய அறிவிப்பு'.* *2.* இருக்கும் இடம் தெரியாமல் போதல்; be forgotten. *'வெகு விரை வில் முன்னேறிய பல கலைஞர்கள் இன்று காணாமல் போய்விட் டார்கள்'.*

**காணும் பொங்கல்** பெ. (n.) *1.* பொங்கலை யொட்டி உறவினர்களையும் ஊரையும் கண்டு மகிழும் திருநாள் *(பொங்கல் முடிந்த இரண்டாம் நாளில்)*; second day after pongal on which one goes visiting and sight seeing.

**காததூரம்** பெ. (n.) கூப்பிடுதூரம் என்பதற்கு எதிராகவும் நெடுந் தொலைவு என்ற பொருளிலும் பயன்படுத்தப்படும் சொல்; being a total stranger. *'சங்கீதத்துக்கும் அவனுக்கும் காததூரம்'.*

**காதல்** பெ. (n.) *1.* பிடிப்பு, விருப்பம்; strong liking; love. *'அவர் இசையின் மேல் கொண்ட காதல் அளப்பரியது'.*

**காதலர்** பெ. (n.) *1.* காதலனையும் காதலியையும் குறிப்பிடும் பன்மைச் சொல்; (in General) lovers. *'சிறுவர் பூங்கா இப்போது காதலர் பூங்காவாக மாறி வருகிறது என்று நண்பன் கூறினார்'.*

**காதலித்தல்** வி. (v.) *1.* விரும்புதல், நேசித்தல்; love (a person of the opposite

sex). *'அவர்கள் இருவரும் உயிருக்கு உயிராகக் காதலிக்கிறார்கள்'.*

**காதால் கேள்தல்** வி. (v.) நேரடியாகக் கேட்டல்; hear with one's own ears (said to give emphasis). *'அவன் உன்னைப் பற்றி மோசமாகப் பேசியதை என் காதால் கேட்டேன்'.*

**காதில் போட்டுக்கொள்ளுதல்** வி. (v.) கேட்டு உரிய கவனம் செலுத்துதல்; pay head to; listen to. *'நான் வீடு மாற்ற வேண்டும் என்று சொல்வதை நீங்கள் காதில் போட்டுக்கொள்வதே இல்லை'.*

**காதில் போடுதல்** வி. (v.) கவனத்தில் கொள்ளும்படி தெரிவித்தல்; put in a word; mention. *'என் பையன் வேலை செய்தியை உங்கள் காதில் போட்டு வைக்கிறேன்'.*

**காதுக்கருவி** பெ. (n.) கேட்கும் ஆற்றல் குறைந்தவர்கள் காதில் பொருத்திக் கொள்ளும் சிறு மின் கருவி; hearing aid. *'காது கேட்பதில் குறைபாடு உள்ளவர்கள் கேட்கும் திறனை அதிகப்படுத்தி உதவும் கருவி'.*

**காதுகுத்துதல்** வி. (v.) *1.* காதுமடலின் கீழ்ப் பகுதியில் துளையிடுதல் என்னும் சடங்கை நிகழ்த்துதல்; the ceremony of piercing the ear lobe. *'குழந்தைக்குக் காதுகுத்தக் கோயிலுக்குப் போயிருக்கிறார்கள்'.* 2. ஒன்றைப் பற்றித் தெரிந்தவரிடம் அது அவருக்குத் தெரியாது என்ற எண்ணத்தில் அதற்குமாறான செய்தியைச் சொல்லுதல்; tell fibs. *'நான் இப்போதுதான் அவரைப் பார்த்து விட்டு வருகிறேன். அவர் ஊருக்குப் போய்விட்டார் என்று என்னிடமே காது குத்துகிறாயா?'.*

**காதுகுத்து** பெ. (n.) *1.* காதினுள் ஏற்படும் வலி; ear-ache. *2.* காதுகுத்துதல் என்னும் சடங்கு; the ceremony of piercing the ear lobe. *'என் குழந்தைக்கு நாளை காதுகுத்து'.*

**காதுகேளாத** பெ.அ. (n.) கேட்கும் திறன் இல்லாத; hearing impaired. *'காது கேளாத சிறுவர்களுக்கான பள்ளி'.*

**காதுகொடுத்துக் கேட்டல்** வி. (v.) கவனத்துடன் கேட்டல்; give one's ear to; listen. *'நான் சொல்வதைச் சிறிது நேரம் காது கொடுத்துக் கேள்'.*

**காதைக் கடித்தல்** வி. (v.) செய்தியைப் பிறருக்குக் கேட்காத வகையில் சொல்லுதல்; whisper (confidentially). *'பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருக்கும்போது 'அவசரப்பட்டு ஒத்துக்கொண்டு விடாதீர்கள்' என்று என் காதைக் கடித்தார்'.*

**காதைப் பிளத்தல்** வி. (v.) *மிக அதிக அளவில் வருத்துதல்;* (of sound) be piercing; be shrill; be shrieking. *'காதைப் பிளக்கிறது வண்டிகளின் இரைச்சல்'.*

**காதோடு காதாக** வி.அ. (n.) *மிகவும் மெதுவான குரலில் கமுக்கமாகக் கூராய்வு;* in a hushed voice; in a whisper. *'இரு கட்சித் தலைவர்களும் மேடையில் காதோடு காதாகப் பேசிக் கொண்டிருந்தபோது எடுத்த படம்'.*

**காந்தல்** பெ. (n.) *தீய்ந்து போய்க் காணப்படும் உணவுப் பகுதி;* over cooked or charred part of a dish such as uppuma, pongal, etc., sticking to the bottom of the vessel. *காந்த உப்புமா தனிச் சுவை உண்டு'.*

**காந்துதல்** வி. (v.) *கருகுதல்;* (of foodstuff) get burnt (through overcooking). *'பருப்பு காந்துகிற மணம் அடிக்கிறது'.*

**காப்பகம்** பெ. (n.) *பொறுப்பேற்றுக் கவனிக்கும் இல்லம்;* Home (for or - phans, aged, etc.,). *'குழந்தைகள் காப்பகம்/மனநலக் காப்பகம், முதியோர் காப்பகம்'.*

**காப்பாட்சியர்** பெ. (n.) *அருங்காட்சியகக் காப்பாளர்;* curator of museum. *'இந்த நடுகற்கள் பதின் மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று அருங்காட்சியகக் காப்பாட்சியர் கூறினார்'.*

**காப்பாளர்** பெ. (n.) *1. விடுதிக் காப்பாளர்;* warden. *'மாணவர் விடுதிக் காப்பாளர்'. 2. ஏதிலி (அனாதை) இல்லக் காப்பாளர்;* orphanage superviser.

**காப்பாற்றுதல்** வி. (v.) *பாதுகாத்தல், தீங்கு, அழிவு வராமல் தடுத்தல்;* save (from danger, destruction) protect. *'ஓர் உயிரைக் காப்பாற்ற இந்த மருந்து தேவை'. 'எரிந்து கொண்டிருந்த வீட்டிற்குள் தீயணைப்புப் படையினர் புகுந்து அங்கிருந்து முதியவரைக் காப்பாற்றினர்'.*

**காப்பீடு** பெ. (n.) *இறப்பு இழப்பீடு;* insurance.

**காப்பு** பெ. (n.) *1. கையில் அணியும் அணிகலன்;* Bracelet. *2. நோய்த் தடுப்புக்காகக் காலில் அணியும் வளையம்;* anklet. *'காக்காய் வலிப்புக்கு உள்ளானவரின் காலில் இரும்புக் காப்பு' அணிந்துள்ளனர். 3. மணமகன் கையில் கட்டும் மஞ்சள் கயிறு;* turmeric - dyed cord tied. (especially on occasions such as wedding). *'திருமணம் முதலிய சடங்குகள்'.*

**காப்புக் கட்டுதல்** வி. (v.) *1. கோவில் மரம் நட்டு அதில் மஞ்சள் நூல் கட்டுதல்;* to make the commencement of the temple festival. *2. திருவிழாவின் சடங்குகளை முன்னின்று நடத்துபவர்களின் கையில் காப்புக் கட்டிக்கொள்ளுதல்;* tie a turmeric dyed cord on the wrist of the person authorized to conduct the rituals during a temple festival.

**காப்புத் தொகை** பெ. (n.) *உறுதித் தொகை;* security deposit. *'வீட்டுக்கான மின் இணைப்புப் பெறக் காப்புத் தொகை செலுத்த வேண்டும்'.*

**காப்புரிமை** பெ. (n.) *1. அரசில் பதிவு செய்து பெறும் உரிமை;* patent. *'இந்தியாவில் மரபுவழிக் உருவாக்கப்படும் பொருள்களுக்குச் சில வெளிநாட்டு நிறுவனங்கள் காப்புரிமை கோருகின்றன'. 2. ஒரு படைப்பாளிக்குத் தன் படைப்பில் சட்ட வழியாக இருக்கும் உரிமை;* copy right. *'இந்தியக் காப்புரிமைச் சட்டத்தின் கீழ் ஓர் எழுத்தாளர் இறந்து அறுபது ஆண்டுகள் வரை அவர் எழுதிய நூல்களின் காப்புரிமை அவருடைய பிறங்கடையினரின் உடைமையாக இருக்கும்'.*

**காம்பு** பெ. (n.) *1. பூத்தண்டுப் பகுதி;* stalk. *'பூவைக் காம்போடு பறித்தான்'. 2. மாட்டின் மடியில் பால் வெளி வரும் துளையுள்ள பகுதி;* teat; nipple.

**காய்** பெ. (n.) *1. பழமாவதற்கு முன் உள்ள நிலையிலிருக்கும் காய்ப் பகுதி;* green fruit. *'மாமரத்தில் முற்றிய காயை மட்டும் பறியுங்கள்'. 2. காய்கறி;* vegetables. *'காய் இல்லாமல் வெறும் குழம்பு ஊற்று'.*

**காய்ச்சல்** பெ. (n.) *இயல்பாக இருக்க வேண்டிய சூட்டை விட உடலில் அதிகமாகச் சூடு இருக்கும் நிலை;* fever. *'உடலில் காய்ச்சல் வந்து விட்டது'.*

**காய்ச்சுதல்** வி. (v.) *1. கொதிக்கும் அளவுக்குச் சுட வைத்தல்;* boil (water, milk, etc.,). *'நீரை நன்றாகக் காய்ச்சி ஆறவைத்துக் குடிக்கவும்'.*

**காய்த்தல்** வி. (v.) *1.காயைக் கொடுக்கும் செடி, கொடி மரங்கள் காலத்தால் தரும் காய்க்கும் நிலை;* yielding. *'அவர் வீட்டு மாமரம் இந்த முறை*

*நன்கு காய்கின்றன'*. 2.*தோல் தடித்தல்;* be come calloused (of part of the body). *'கோடரி பிடித்து அடிக்கடி விறகு வெட்டுவதால் என் கையில் தோல் காய்த்துப் போய்விட்டது'*.

**காய்தல்** வி. (v.) *1. ஈரத்தன்மை இல்லாமல் போதல்;* get dried; dry up. *'மழை இல்லாமல் நிலமெல்லாம் காய்ந்துகிடக்கிறது'*. 2. *ஆறுதல்;* heal (of wound). *'புண் நன்றாகக் காய்ந்து பொருக்குப் படர்ந்திருக்கிறது'*. 3. *வறட்சி உண்டாதல்;* (of throat) become dry. *'பேசிப் பேசித் தொண்டை காய்ந்துவிட்டது'*.

**காய்ந்த மிளகாய்** பெ. (n.) *மிளகாய் வற்றல்;* red chillies. *'உப்புமாவைத் தாளிக்க இரண்டு காய்ந்த மிளகாய் வேண்டும்'*.

**காய்ப்பு**[1] பெ. (n.) *மரம், செடி முதலியவை காய் தருவது;* yield (in terms of fruit); produce. *'புளியமரத்தில் சென்ற ஆண்டைப் போலவே இந்த ஆண்டும் காய்ப்பு சரியாக இல்லை'*.

**காய்ப்பு**[2] பெ. (n.) *(கை, கால் முதலியவற்றில்) தோல் காய்த்து போகும் நிலை;* callousness of skin.

**காய்பிடித்தல்** வி. (v.) *பூ காயாக மாறத் தொடங்குதல்;* fruit. *'அவரைச் செடி இன்னும் காய்பிடிக்க ஆரம்பிக்க வில்லை'*.

**காய்விடுதல்** வி. (v.) *1.பூ காயாக மாறுதல்;* bear fruit yield. *2.(நண்பர்களாக இருக்கும் சிறுவர்கள்); ஒருவரோடு ஒருவர் இனி பேசிக் கொள்வதில்லை என்று சொல்லி விடுதல்;* (of children) break friendship. *'மிட்டாய் தராவிட்டால் உன்னோடு காய் விட்டுவிடுவேன் என்றான்'*.

**காயம்** பெ. (n.) *அரத்தம் வரும்படியாகவும் உள்தசை தெரியும்படியாகவும் ஏற்படுகிற தோல் சிதைவு;* injury, wound. *'கல் தடுக்கிக் கீழே விழுந்ததில் முழங்கையில் காயம் ஏற்பட்டது'*.

**காயமாகுதல்** பெ. (n.) *1. (பணி) நிலையாதல்;* (of job) become permanent. *'உனக்கு வேலை காயமாயிற்றா?'*. 2. *(காரியம்) கரணியம் வெற்றியாக நிறைவேறுதல்;* (of a piece of work or mission) get completed successfully. *'போன காரியம் காயமாகவில்லை'*.

**காயா பழமா** பெ. (n.) *ஒன்றின் முடிவு உதவியாக அமைந்ததா இல்லையா என்று கேட்கும் வகையில் பயன்படுத்தும் தொடர்;* an expression used to ask the outcome (of an effort) is positive or negative. *'நீ போன வேலை காயா பழமா'*.

**கார்** பெ. (n.) *மழைக்கால நெற்பயிர்; குறுவை;* the first crop of paddy harvested in the rainy season. *'கார் அறுவடை'*.

**காரம்** பெ. (n.) *உறைப்பு;* pungency; hot (in taste). *'குழம்பில் காரம் அதிகம்'*.

**காரியக்காரன்** பெ. (n.) *தன்னல நோக்கத்தோடு செயல்களைச் செய்து கொள்பவன்;* self centred man.

**காரியக்காரி** பெ. (n.) *தன்னல நோக்கத்தோடு செயல்களைச் செய்து கொள்பவள்;* self centred woman.

**காரை** பெ. (n.) *சுண்ணாம்பும் மணலும் கலந்து நீர் ஊற்றிக் குழைத்த கலவை;* lime plaster; stucco (for building). *'சுவரில் பல இடங்களில் காரை பெயர்த்து விட்டது'*. *'பற்களில் படிந்திருக்கும் காரை'*.

**கால்**[1] பெ. (n.) *1. உடலின் உறுப்பு;* leg; foot. *'பந்தைக் காலால் உதைத்தான்'*. 2. *நாற்காலி மேல்பகுதியைத் தாங்கி நிற்கும் கோல் பகுதி;* leg (of a chair, table, etc.,). *'அந்த நாற்காலியின் ஒரு கால் உடைந்துவிட்டது'*. 3. சக்கரம்,

அடி; lower part of the wheel (of chariat, cart). *'வண்டிக்கால் உடைந்து விட்டது'.*

**கால்²** பெ. (n.) *நான்கில் ஒரு பகுதி;* quarter, one fourth. *'போன வருடம் பெய்த மழையில் கால் பங்குகூட இந்த ஆண்டு பெய்யவில்லை'.*

**கால்கட்டு** பெ. (n.) திருமணம் மூலமாக ஏற்படுத்தும் கட்டுப்பாடு; Bond (of marriage). *'உங்கள் மகனைப் பற்றி கவலைப்படாதீர்கள், கால்கட்டுப் போட்டால் எல்லாம் சரியாகி விடும்'.*

**கால்கடுதாசி** பெ. (n.) *திடீர் பதவி விலகலாவணக் கடிதம்;* letter of resignation (especially one written in a huff). *'அதிகாரி திட்டியதால் கால் கடுதாசியை நீட்டிவிட்டு வந்து விட்டேன்'.*

**கால்வாய்** பெ. (n.) *பாசனத்துக்காக அல்லது* போக்குவரத்துக்காக அமைக்கப்பட்ட *நீர்வழிப்பாதை;* canal (for irrigation or transport). *'அணையிலிருந்து கால்வாய் களின் வழியாக நிலங்களுக்கு நீர் பாய்கிறது'.* 2. இரு நிலப்பகுதிகளை இணைக்கும் *நீர்வழி;* channel, canal. *'பனாமாக் கால்வாய் வட அமெரிக்கா வுக்கும் தென் அமெரிக்காவுக்கும் இடையே இருக்கிறது'.*

**கால்வைத்தல்** வி. (v.) *1. (முதல் முறை யாக)* நுழைதல்; set foot (for the first time or after a long interval). *'மருமகள் நம் வீட்டில் கால் வைத்ததிலிருந்து வீடு கலகலப்பாக இருக்கிறது'.* 2. நுழைதல் *(தொழில் வணிகம் போன்ற துறைகளில்);* enter (a field). *'அவர் கால் வைக்காத வணிகமே இல்லை என்று சொல்லலாம்'.*

**கால அட்டவணை** பெ. (n.) நேரம் குறித்த *விளக்கப் பட்டியல்;* (bus, train or school) time table; schedule. *'புறநகர் செல்லும் பேருந்துகளின் கால அட்டவணை'.*

**காலணி** பெ. (n.) *1. நடக்கும்போது* காலுக்குப் பாதுகாப்பாகப் பாதத்தில் *அணியும் செருப்பு முதலியவை;* footwear (such as sandal, shoes, etc.,). *'ஏழைகளுக்கு இலவயமாகக் காலணிகள் வழங்கப்பட்டன'.* *2. (பெண்கள்) காலில் அணியும் சலங்கை முதலிய அணிகள்;* ornaments (such as anklets, rings, etc.,) worn on the foot or ankle (by women). *'சிலம்பு என்னும் காலணியை வைத்து ஒரு காப்பியம்'.*

**காலப்போக்கு** பெ. (n.) *1. காலம் கழிந்த நிலையில்;* passage of time. *'சில நகரங்கள் காலப்போக்கில் நிலத்திற் கடியில் புதையுண்டன'.* 2. குறிப்பிட்ட காலத்தில் நிலவும் *சூழ்நிலை;* conditions and circumstance of the specified period. *'காலப் போக்கை உணர்ந்து வாழக் கற்றுக் கொண்டால் முதுமைக் காலம் இனிமை நிறைந்த தாக இருக்கும்'.*

**காலம்** பெ. (n.) *1.(நொடி, நிமிடம், மணி, நாள், மாதம், ஆண்டு முதலிய அளவுகளால் குறிப்பிடப்படுவதும் உலகம் தோன்றியதிலிருந்து இடை விடாது தொடர்வதுமான ஒன்று;* (Generally) time. *'காலமும் தூரமும் ஒன்றுதான் என்பது இயற்பியல் உண்மை'. 2. வாழ்நாள் ஏற்றதாகக் கருதப்படும் நேரம்;* (time in one's life); right time (to do). *'காலம் வந்தால் எல்லாம் நடக்கும்'.*

**காலம் கடத்துதல்** வி. (v.) ஒரு பணியை *முடிக்காமல் காலத்தாழ்வு செய்தல்;* delay; protract. *'அரசு காலம் கடத்தாமல் நடவடிக்கை எடுக்க வேண்டும்'.*

**காலம் காலமாக** வி.அ. (n.) நெடும் *காலமாக;* for ages. *'காலம் காலமாக*

*கங்கை ஓடிக்கொண்டுதான் இருக் கிறது'.*

**காலம் செல்தல்** வி. (v.) *இறந்துபோதல்;* die (aeuphenism); pass away. *'அவர் எந்த ஆண்டு காலஞ் சென்றார்'.*

**காலம் தள்ளுதல்** வி. (v.) *தொல்லைப்பட்டு வாழ்க்கை நடத்துதல்;* lead a difficult life; get on.

**காலம் தாழ்த்துதல்** வி. (v.) *ஒரு பணியை முடிக்காமல் வேண்டுமென்றே காலம் கடத்துதல்;* delay. *'காலம் தாழ்த்தாமல் வீட்டைக் கட்டி முடி'.*

**காலாண்டு** பெ. (n.) *ஆண்டின் மூன்று மாதப்பிரிவு;* quarter, quarterly. *'எங்கள் நிறுவனத்தில் காலாண்டு அறிக்கை அடுத்த திங்கள் அணியமாகி விடும்'.*

**காலாட்படை** பெ. (n.) *தரைப்படை;* infantry. *'போரில் காலாட்படை வீரர்கள் அதிகமாகக் கலந்து கொண் டார்கள்'.*

**காலில் விழுதல்** வி. (v.) *வணங்குதல், மன்னிப்புக் கேட்டல்;* prostrate oneself (at the feet of someone).

**காலுறை** பெ. (n.) *காலில் மூடணி போடுவதற்கு முன்பு போடும் துணியாலான உறை;* (pair of) sock(s); stocking(s). *'பாதத்திலிருந்து முழங் காலுக்குச் சற்றுக் கீழ்வரை இறுக்க மாக அணியப்படும் நூலால் பின்னப்பட்ட உறை'.*

**காலூன்றுதல்** வி. (v.) *இடம்பிடித்தல், நிலைபெறுதல்;* be established or settled. *'இப்போது வணிகத்தில் நன்றாகக் காலூன்றிவிட்டான்'.*

**காலை** பெ. (n.) *1. அதிகாலைப் பொழுது;* morning. *'கதிரவன் உதிப்பதிலிருந்து தொடங்கி உச்சிக்கு வருவது வரை உள்ள நேரம்'. 2. ஊருக்கு வெளியே ஆடு, மாடு வளர்ப்பதற்கான இடம்;* pasture.

**காலைக்கடன்** பெ. (n.) *காலையில் கழிவு உட்பட உடலைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும் வேலைகள்;* morning routine (such as brushing the teeth, attending the call of nature taking bath, etc.,). *'காலையில் எழுந்ததும் செய்யும் வேலைகள்'.*

**காலைப்பிடித்தல்** வி. (v.) *மிகவும் பணிந்து வேண்டுதல்;* go down on one's knees (for favour); fall at feet *'பெரியவர் காலைப் பிடித்து உனக்கு வாங்கித் தந்த வேலை இது'.*

**காலை வாருதல்** வி. (v.) *சார்பாக இருப்பதுபோல் இருந்து ஏமாற்றுதல், கைவிடுதல்;* let down; pull the rug from under one's feet. *'பல கோடி உரூபா செலவில் உருவாக்கிய படம் அவரைக் காலை வாரிவிட்டது'.*

**காவடி** பெ. (n.) *கோயில்களுக்குப் பத்தர்கள் தோளில் எடுத்து வருவதும், உருளை வடிவக் கட்டையின் இரு முனைகளையும் இணைக்கும் அரை வட்ட வடிவ மரச்சட்டம்;* a wooden rod joined by semi-circular wooden strip to both end to which offerings are tied and borne to temples on shoulder by devotees.

**காவடியெடுத்தல்** வி. (v.) *1. நேர்த்திக் கடனாகக் காவடியை எடுத்துச் சென்று படையலமுது கோவிலுக்குச் செலுத் துதல்;* carry *Kavadi* to temple as votive offering. *'இந்தத் தைப் பூசத்திற்குத் திருத்தணி முருகனுக்குக் காவடி யெடுப்பதாக நேர்ந்து கொண் டிருக்கிறேன்'. 2. பலமுறை செல்ல நேரிடுதல்;* make repeated calls. *'அமைச்சரைப் பார்க்க எத்தனை முறை காவடியெடுக்க வேண்டி யிருக்கிறது'.*

**காவல்** பெ. (n.) *தாக்குதல். அழிவு ஏற்படாமல் இருக்க செய்து கொள்ளும்*

*பாதுகாப்பு;* Guard, watch. *தோட்டத்தின் காவலுக்கு ஏற்பாடு செய்திருக் கிறேன்.*

**காவல்துறை** பெ. (n.) *சட்டம், ஒழுங்கு பேணும் பொறுப்பை உடைய அரசுத்துறை;* the police (department) . *'மக்கள் போராட்டத்தில் ஈடுபடும் போது காவல்துறையினர் அவர் களுக்கு பாதுகாப்பு அளித்தனர்' .*

**காவல்தெய்வம்** பெ. (n.) *சிற்றூர்களில் எல்லைப் புறத்தில் இருந்து காத்து வருவதாகக் கருதப்படும் காவல் தெய்வம்' .;* deity guarding the village.

**காவல்நிலையம்** பெ. (n.) *சட்டம், ஒழுங்கு ஆகியவற்றை நிலைநாட்டுவதற்காக ஒரு ஊரில் அல்லது நகரத்தின் பல பிரிவுகளில் அமைக்கப்பட்டிருக்கும் காவல் நிலையம்;* police station.

**காவலர்** பெ. (n.) *1. காவல்துறையில் பணிபுரிபவர்;* police constable. *'குறிப்பாகக் காவல்துறையில் துவக்க நிலைப் பதவி வகிப்பவர் ஆவர்' . 2. நிறுவனங்களில் காவல் பணி செய்யும் காவலாளி;* security guard. *'வைப்பகத்தில் காவலர் வேலைக்கு ஆள் எடுக்கிறார்கள்' .*

**காவலாளி** பெ. (n.) *காவல் செய்பவர்;* person employed to guard (a house, garden, etc.,) watchman. *தனியார் நிறுவனம், 'வீடு, தோட்டம் போன்ற வற்றைக் காவல் செய்பவர்' .*

**காழ்ப்பு** பெ. (n.) *பகைமையுடன் கூடிய வெறுப்பு;* (feeling of) intense dislike or hatred; grudge. *'காழ்ப்பின் காரணமாக என் மேல் பழி சுமத்தினார்கள்' .*

**காளவாய்** பெ. (n.) *சூளை;* kiln. *'மட்பாண்டங்கள், செங்கல், சுண் ணாம்பு முதலியவற்றைச் சுட்டு எடுக்கப் பயன்படுத்தும் பெரிய அடுப்பு' .*

**காளான்** பெ. (n.) *மழை பெய்ததும் நிலத்தில் மிக விரைவாக முளைக்கும் ஒரு வகைச் சிறிய பயிரி வகை;* mushroom. *'இப்போது காளான் உருவாக்கம் ஊதியமான தொழிலாக உருவாகி விட்டது' .*

**காளை** பெ. (n.) *1. ஆண்மாடு;* bull. *'காளைகளை அடக்கும் போட்டி' .* 2. *வண்டியில் பூட்டி ஓட்டுவதற்கும் வயலில் உழுவதற்கும் பயன் படுத்தும் காயடிக்கப்பட்ட மாடு;* bullock (used as drought animal); *'காளை இரண்டையும் வண்டியில் பூட்டி னான்' .*

**காற்றாடி** பெ. (n.) *1. மெல்லிய சட்டத்தின் தாள் ஒட்டப்பட்டு நூல் பொருந்தி உயரே பறக்க விடக்கூடிய பட்டம்;* kite. *'தந்திக் கம்பத்தில் காற்றாடி சிக்கிக் கொண்டது' .* 2. *காகிதத்தில் செய்து காற்றில் சுழலவிடும் சிறுவர் விளையாட்டுப் பொருள்;* a kind of pinwheel. *3. மின் விசிறி;* electric fan.

**காற்றாடுதல்** பெ. (n.) *மந்தமான நிலை காணப்படுதல்;* look empty due to lack of patronage. *'ஒரு வாரமாகக் கடை காற்றாடுகிறது' .*

**காற்றாலை** பெ. (n.) *காற்றின் இயக் கத்தைக் கொண்டு மின்சாரம் உருவாக்கவோ எந்திரங்களை இயக்கவோ பயன்படும் அமைப்பு;* wind mill.

**காற்றிசைக் கருவி** பெ. (n.) *ஊதுவதன் மூலம் இசைக்கக் கூடிய இசைக் கருவிகளின் பொதுப்பெயர்;* wind instrument.

**காற்றுக் கறுப்பு** பெ. (n.) *பேய், பிசாசு முதலியவை;* evil, spirits. *'அவனை ஏதோ காற்று கறுப்பு அடித்து விட்டதாகச் சொல்லி வேப்பிலை அடித்து மந்திரித்தார்கள்' .*

**காற்று** பெ. (n.) *1. உலகில் உள்ள உயிரினங்கள் உயிர் வாழ*

மூச்சுயிர்க்கும் உலகைச் சுற்றி நிறைந்திருக்கும், கண்ணுக்குப் புலப்படாத வளிப் பொருள்; air; wind. *'மழையினால் காற்றில் ஈரப்பதம் கூடியிருக்கிறது'*. 2. தாக்கம்; influence. *'உன் மாமா இனிப்பு விரும்பி. அவர் காற்று உனக்கும் அடித்துவிட்டதா?'*.

**காற்றுவாக்கில்** வி.அ. (n.) பிறர் சொல்லி; தற்செயலாக; by word of mouth. *'அவனுக்கு வேலை கிடைத்து விட்டது என்பதைக் காற்றுவாக்கில் கேள்விப்பட்டேன்'*.

**காற்றுவாங்குதல்** வி. (v.) நல்ல காற்று வீசும் இடத்திற்குப் போய் காற்றைத் துய்த்தல்; enjoy fresh air. *'காற்றுவாங்கத் தினமும் நான் கடற்கரைக்கு வருகிறேன்'*.

**காற்றோட்டம்** பெ. (n.) தூய்மையான காற்று வந்து போகும்படியாக இருக்கும் நிலை; ventilation; free circulation of air. *'காற்றோட்டமே இல்லாத இந்த வீட்டில் எப்படி வசிக்கிறீர்கள்'*.

**காறல்** பெ. (n.) கசப்புச் சுவை; bitter taste. *'பாகற்காய்க் கறி ஒரே காறலாய் இருக்கிறது'*.

**காறிதுப்பு** வி. (v.) வெறுப்பை வெளிக் காட்டும் வகையில் பழித்தல்; கீழ்மையாக நினைத்தல்; treat with utmost scorn; spit. *'வீட்டை இப்படிக் குப்பையாகப் போட்டு வைத்திருக் கிறாயே? யாராவது பார்த்தால் காறி துப்ப மாட்டார்களா?'*.

**காறுதல்** வி. (v.) 1. ஒலியுடன் வாய்க்குக் கொண்டு வருதல்; hawk. *'சளியைக் காறித்துப்பு'*. 2. கருணைக்கிழங்கு போன்றவற்றை உண்டவுடன் அரிக்கும் உணர்வு ஏற்படுதல்; (of edible tubers) taste acrid (in the throat). *'இந்தக் கிழங்கை அவிக்காமல் சாப் பிட்டால் காறும் என்று உனக்குத் தெரியாதா?'*.

**காறையெலும்பு** பெ. (n.) கழுத்தின் கீழ் இரு பக்கமும் தோள் மூட்டுவரை அமைந்துள்ள எலும்பு; collarbone; clavicle.

**கானல் நீர்** பெ. (n.) வெப்பப் பகுதிகளில் அனல் காற்றால் நீரோடை ஒன்று ஓடுவது போலத் தெரியும் மாயத் தோற்றம்; mirage. *'வயல் வெளிகளில் கானல் பறந்தது'*.

**கானாங்கெளுத்தி** பெ. (n.) ஒரு வகை மீன்; mackerel (a kind of fish). *'கானாங்கெளுத்தி பெரும்பாலும் கடலின் மேற்பரப்பில் காணப்படும்'*.

## கி

**கிச்சுக்கிச்சுத்தாம்பலம்** பெ. (n.) மணலை ஒரு முழ நீளத்தில் சிறு கரை போலக் குவித்து வைத்து அதில் ஒருவர் குச்சியை ஒளிக்க மற்றவர் கையால் பொத்திக் கண்டுபிடிக்கும் சிறுவர் விளையாட்டு; a children's game for two in which one runs his fingers into the sand leaving a small stick which is to be found by an other by marking the area with his folded palms.

**கிச்சுக்கிச்சு மூட்டுதல்** வி. (v.) கையால் வருடிச் சிரிப்பு வரும்படி கூச்சம் உண்டாக்குதல்; tickle (so as to make one laugh). *'குழந்தைக்குக் கிச்சுக்கிச்சு மூட்டிச் சிரிக்க வைத்தான்'*.

**கிசுகிசு**[1] பெ. (n.) கமுக்கம் (அ) மெதுவாகச் சொல்லுதல்; tell (a secret) in whispering voice. *'அவருடைய காதில் ஏதோ கிசுகிசுத்ததும் அவர் முகம் மாறியது'*.

**கிசுகிசு**[2] பெ. (n.) புகழ் பெற்றவர்களின் சொந்த வாழ்க்கையைப் பற்றிப் பருவ இதழ்கள் முதலிய ஊடகங்களில் இடம் பெறும். உண்மை என்று உறுதியாகத் தெரியாத செய்திகள் அல்லது பொதுவாகப் பலர் பேசிக் கொள்வது;

Gossipy stories. '*இப்போ தெல்லாம் நடிகர் நடிகைகளைப் பற்றி கிசுகிசுக்களை வெளியிடுவதிலேயே பருவஇதழ்கள் ஆர்வம் காட்டு கின்றன.*

**கிசுகிசுப்பு** பெ. (n.) *பிறர் கேட்காத படியான மெல்லிய ஒலி;* whisper, soft voice. '*பக்கத்து அறையில் யாரோ இருவர் கிசுகிசுப்பான குரலில் பேசிக் கொள்வது எனக்குக் கேட்டது*'.

**கிஞ்சித்தும்** வி.அ. (n.) *சிறிதும்;* even a little. '*அவருக்கு ஏழைகள் மீது இரக்கம் கிஞ்சித்தும் கிடையாது*'.

**கிட்ட** வி.அ. (n.) *அருகில், பக்கத்தில்;* near, closer. '*கிட்ட வந்து மெதுவாகப் பேசு/ ஊர்வலம் மிகவும் கிட்ட வந்து விட்டது*'.

**கிட்டத்தட்ட** பெ.அ. (adj.) *ஏறக்குறைய;* about approximately. '*பார்ப்பதற்குக் கிட்டத்தட்ட அப்பா மாதிரியே இருந்தான்*'.

**கிட்டத்தில்** வி.அ. (adv.) *பக்கத்தில், அருகில்;* near, closeby. '*கொஞ்சம் கிட்டத்தில் வந்து பேசு / கடை கிட்டத்தில்தான் இருக்கிறது*'.

**கிட்டப்பார்வை** பெ. (n.) *தூரத்தில் இருப்பவை கண்ணுக்குத் தெளி வாகத் தெரியாத பார்வைக் குறை;* short - sightedness (Myopia).

**கிட்டித்தல்** வி. (v.) *அமுக்கி உள்ளே செலுத்துதல்;* Ram (the gun powder into a gun). '*நாட்டுத் துப்பாக்கியினுள் (துமுக்கி) வெடி மருந்தைக் கிட்டித்துச் சுடுவார்கள்*'.

**கிட்டிபோடுதல்** வி. (v.) *1. கால், கைகளை மடக்கி கிட்டியில் மாட்டச் செய்தல்;* put in a clasp (so as to prevent moving). '*மாட்டைக் கிட்டி போட்டு லாடம் அடித்தார்கள்*'. *2. (மற்றவர் தனக்குத் தர வேண்டிய பணத்தைத் திருப்பித் தருமாறு) விடாது நெருக்குதல்;* urge in a forcible manner. put the squeeze on. '*ஆளைக் கிட்டிப்போட்டுக் கடனை வசூலித்து விட்டார்*'.

**கிட்டுதல்**[1] வி. (v.) *வந்துசேர்தல்; வந்தடைதல்; கிடைத்தல்;* get, accrue. '*மனதிற்குப் பிடித்த செயலைச் செய்யும்போது கிட்டும் இன்பமே தனி*'.

**கிட்டுதல்**[2] வி. (v.) *இறுகுதல்;* (of Jaws, teeth) be firmly locked together. '*காய்ச்சலில் அப்படியே பற்க ளெல்லாம் கிட்டிக் கொண்டன*'.

**கிடத்தல்** வி. (v.) *1. படிந்த நிலையில் இருத்தல்;* be (lying). '*அறையில் கிடந்த பொம்மைகளை எடுத்து வைத்தேன்*'. *2. படுத்திருத்தல்;* be (in the state mentioned or in the physical condition mentioned). '*ஒரு வாரம் காய்ச்சலில் கிடந்தேன்*'. *3. பொருட்படுத்தத் தேவையில்லை என்ற பொருளில் பயன்படுத்தும் சொல்;* let, be (ignored dismissed). '*அவர் கிடக்கிறார், நீ வேலையைக் கவனி*'.

**கிடங்கு**[1] பெ. (n.) *பண்டகச்சாலை;* (Governmenteal or private) warehouse, depot, (in India) godown.

**கிடங்கு**[2] பெ. (n.) *(ஆழமான) பள்ளம்;* ditch, trench. '*இது யானையைப் பிடிப்பதற்காகத் தோண்டிய கிடங்கு*'.

**கிடத்துதல்** வி. (v.) *படுக்க வைத்தல்;* lay (a baby) down (in crib, etc.,) keep (the patient, etc.,) in a lying posture cause something to be laid down. '*குழந்தையை மடியில் கிடத்திப் பால் கொடுத்தாள்*'. '*அறுவை மருத்துவத் திற்காக மேசையின் மேல் நோயாளி கிடத்தப் பட்டார்*'.

**கிடப்பில் இருத்தல்** வி. (v.) *திட்டம் செயல்படுத்தாமல் இருத்தல்;* allow (a plan, etc.,) to be in cold storage. '*இந்த குடிநீர்த் திட்டம் மூன்று ஆண்டு களாகக் கிடப்பில் இருந்து வருகிறது*'.

**கிடப்பில் போடுதல்** வி. (v.) *செயல் படுத்தாமல் அப்படியே வைத்திருத்தல்;* put (a plan, etc.,) in cold storge; put something on ice. *'இரு ஆறுகளையும் இணைப்பதற்கான திட்டம் வெகுநாட்களாகவே கிடப்பில் போடப் பட்டுள்ளது'.*

**கிடுக்கிப்பிடி** பெ. (n.) விடுபட *முடியாத படி கையாலோ காலாலோ பிடித்துக் கொள்கிற (அ) பின்னிக்கொள்கிற பிடி;* vice like grip, wrenching hold. *'மற்போர் போட்டியில் அவனுடைய கிடுக்கிப் பிடியிலிருந்து யாரும் திமிற முடியாது'.*

**கிடுகிடுத்தல்** வி. (v.) *1. வலுவாக அதிர்தல்; ஆடுதல்;* (of wall, etc.,) shake. *'புகைவண்டி போகும் போதெல் லாம் வீட்டுச் சுவர் கிடுகிடுக்கிறது'.* 2. நடுங்குதல்; tremble (with fear). *'இந்தக் கொடுங்கள்ளன் (கேடி) ஊரையே கிடுகிடுக்க வைத்து விட்டான்'.*

**கிடுகிடு** பெ.அ. (adj.) *தலைச்சுற்றல் ஏற்படக் கூடிய அளவுக்கு ஆழ முடைய;* deep (enough to cause dizziness). *'கிடுகிடு பள்ளம்/கிடுகிடு பாதாளம்'.*

**கிடுகிடு என்று** வி.அ. (adv.) *1. தடங்கல் எதுவும் இல்லாமல்; மளமள வென்று;* (in doing something) quickly. *'நேரமாகிறது, கிடுகிடுவென்று புறப்படு'. 2. மிக விரைவாக;* (indicating price) rapidly. *'நெல் விலை கிடுகிடுவென்று இறங்கிவிட்டது'.*

**கிடைத்தல்** வி. (v.) *1. வாய்த்தல்; அமைதல்;* get; be obtained. *'கல்லூரியில் படிக்கிற காலத்தில் எனக்குப் பல நண்பர்கள் கிடைத் தார்கள்'. 'கதைக்கு கரு கிடைத்தது'.* 2. வந்து சேர்தல்; இயலுதல்; be obtainable; be available. *'நீ எழுதிய கடிதம் கிடைத்தது'. 3. உருவாதல்;* produce. *'இந்த மரத்தில் ஐம்பதுக்கும் குறையாமல் தேங்காய் கிடைக்கும்'.*

**கிடை** பெ. (n.) *1. கால்நடைகளை அடைத்துவைக்கும் பட்டி;* herd of cattle. *'ஆட்டுக் கிடையிலிருந்து இரண்டு ஆடுகள் ஓடிப்போய் விட்டன'.* 2. இருந்த நிலை, இருப்பு; state or condition (in which one is or was) *அவன் கிடந்த கிடை என்ன?.*

**கிடைமட்டம்** பெ. (n.) *தரைமட்டத்திற்கு இணையான நிலை;* horizontal lying position. *'கடப்பாரையைக் கிடை மட்டமாக வை'.*

**கிடையாது** எ.வி.மு. (n.) ஒருவருக்கு ஒன்று பழக்கம் என்பதைத் தெரிவிக்கும் உடன்பாட்டுக் கூற்றில் 'உண்டு' என்னும் வினை வடிவத்திற்கு எதிர்மறையாக வருவது; a negation for உண்டு; in the sentence which expresses habituality. *'சினிமாவுக்குப் போவது கிடையாது'.*

**கிண்டல்** பெ. (n.) *மதிப்புக்குறைவு படுத்தும் கேலி ;* making fun (of something). *'கரும்பலகையில் ஆசிரியரைக் கிண்டல் செய்யும் கிண்டல் சித்திரம் வரையப்பட்டிருந்தது'.*

**கிண்டுதல்** வி. (v.) *1. கிளறுதல்; புரட்டுதல்;* stir, upside down. *'வெல்லப் பாகில் மாவைப் போட்ட வுடன் கரண்டியால் கிண்டவும்'.* 2. துருவிப் பார்த்தல்; probe; poke. *'எழுதி வைத்திருந்த கணக்கில் ஐயம் ஏற்பட்டவுடன் அவர் என்னைக் கிண்டிக் கேட்கத் தொடங்கி ஆரம்பித்து விட்டார்.*

**கிண்ணம்** பெ. (n.) *1. சிறிய வட்ட வடிவ ஏனம்;* a small bowl; cup. *'இடியாப்பத்திற்கு ஒரு கிண்ணத்தில் தேங்காய்ப்பால் சேர்த்த குழம்பு மற்றொரு கிண்ணத்தில் பருப்பும் வைக்கப்பட்டிருந்தன'. 2. தட்டை*

*யான சிறு குவளை;* formerly goblet. *'அரசர்கள் பொற் கிண்ணத்தில் தேறல் ஊற்றி அருந்தினர்'.*

**கிணற்றுக்கட்டு** பெ. (n.) *கிணற்றுச் சுவரை ஒட்டிய பகுதி;* parapet (wall) of a well. *'கிணற்றுக் கட்டில் எந்த ஏனத்தையும் வைக்காதே, உள்ளே விழுந்து விடும்'.*

**கிணற்றுத்தவளை** பெ. (n.) *தான் வாழும் சூழலுக்கு அப்பால் உள்ள எதையும் அறியாதவர்;* one who has no knowledge of things outside his or her own small sphere. *'சிற்றூரில் வாழ்கிறவர்கள் கிணற்றுத் தவளை களாக இருந்த காலம் போய் விட்டது'.*

**கிணறு** பெ. (n.) *மண்ணைத்தோண்டி அகற்றி உண்டாக்கிய ஆழமான குழி;* well. *'குடிநீருக்காக நிலத்து அடியில் வெட்டிய கிணறு'.*

**கிணறெடுத்தல்** வி. (v.) *1. கிணறு தோண்டுதல்;* to dig or sink a well. *2. கிணறு தோண்டுதற்கேற்ற இடம் தேர்ந்தெடுத்தல்;* to select a spot for a well.

**கிணுகிணுத்தல்** வி. (v.) *1. சிறுவர்களைப் போல் சிணுங்குதல்;* to whimper. *2. முணுமுணுத்தல்;* to mumble, mutter.

**கிந்தி நடத்தல்** வி. (v.) *1. முன்னங் காலால் உந்தி நடத்தல்;* to walk on tip toe. *2. நொண்டி நடத்தல்;* to hobble, limp.

**கிம்பளம்** பெ. (n.) *சம்பளமல்லாத கையூட்டுத் தொகை;* bribe (as regular as one's salary). *'சம்பளம் மாதம் நானூறு ரூபாய், கிம்பளம் அறுநூறு ரூபாயா?'.*

**கிராம்பு** பெ. (n.) *கருவா மரத்தின் இதழ்கள் விரியாத கரிய நிற மொட்டு;* clove. *'கருவம்பூ நெய்ம்மருந்தைப் பல் வலிக்குப் பயன்படுத்துவார்கள்'.*

**கிழங்கு** பெ. (n.) *1. வேர் பகுதி பருத்துக் கிழங்காக உண்டாகும் பயிரி வகை;* tuber. *'உருளைக்கிழங்கு தண்டிலும் முள்ளங்கி வேரிலும் வளரும் கிழங்கு வகைகள் ஆகும்'. 2. உருளைக் கிழங்கோடு காரம் சேர்த்து தயாரிக் கப்படும் ஒருவகைத் தொடு கறி (பூரி, சப்பாத்தி);* a side dish for poori.

**கிழடு** பெ. (n.) *அகவை முதிர்ந்தவரை மதிப்பு இல்லாமலோ அல்லது அகவையான விலங்கைப் புறக் கணிப்பாகக் குறிப்பிடப் பயன் படுத்தும் சொல்;* (derogatory) aged person or animal. *'இப்போது அந்தக் கிழடுக்குக் காதும் கேட்பதில்லை'.*

**கிழடுதட்டுதல்** வி. (v.) *வெளிப்படை யாகத் தெரியும் வகையில் முதுமைத் தோற்றம் ஏற்படுதல்;* age (in a visible way). *'பழைய நாடக நடிகர் தற்போது கிழடுதட்டி இருக்கிறார்'.*

**கிழமை** பெ. (n.) *வாரம் என்பதன் தமிழ்ப் பெயர்;* day (of the week). *'இன்று என்ன கிழமை?'.*

**கிழவன்** பெ. (n.) *அகவை முதிர்ந் தவன்;வயதானவன்;* old man.

**கிழவி** பெ. (n.) *அகவை முதிர்ந்தவள், வயதானவள்;* old woman. *'கிழவி ஒருத்தி(பாட்டி) போகும் இடம் தெரியாமல் நடுத்தெருவில் நின்று கொண்டிருந்தாள்'.*

**கிழிதல்** வி. (v.) *(துணி, தாள் போன்றவை) ஓர் இடத்தில் பிரிதல் அல்லது பிரிந்து துண்டாதல்;* be torn. *'சட்டை கிழிந்துவிட்டது'.*

**கிழித்தல்** வி. (v.) *1. பெரிதாக ஓட்டை விழுமாறு செய்தல்;* rip. *'துணிக் கடையில் துணி கிழிப்பது போல் என்னால் கிழிக்க முடியாது'. 2. உரசுதல்;* strike (a match stick). *'எத்தனை தீக்குச்சியைத்தான் கிழிப்பது'. 3. (கிண்டலாகப்) பணி முடித்தல்;* accomplish or achieve.

*'காலையில் நான்கு மணிக்கே எழுந்து என்ன கிழிக்கப் போகிறாய்?'.*

**கிழிசல்** பெ. (n.) *1.* கிழிந்திருப்பது; tear (in clothes). *'கிழிசல் தெரியாதபடி வேட்டி மடிக்கப்பட்டிருந்தது'.* *2.* கிழிந்த உடை; garment which is torn in some places; tattered garment, rag. *'ஏன் இந்த கிழிசலைப் போட்டுக் கொண்டிருக்கிறாய்?'.*

**கிள்ளுதல்** வி. (v.) *1.* உகிரால்(நகத்தால்) நெருக்குதல், துண்டாக்குதல்; snip (a leaf, etc.,). *'வெற்றிலைக் காம்பைக் கிள்ள நினைத்தவர் பேசிக் கொண்டே புகையிலையைக் கிள்ளி வாயில் போட்டுக் கொண்டார்.'* *2.* நெருக்குதல் அழுத்துதல்; pinch. *'எங்கள் ஆசிரியர் கிள்ளினால் வலி பொறுக்க முடியாது'.* *3.* வலியுணர்வு உணர்தல்; வருத்துதல்; feel the pain (of hunger); affect, touch . *'காலையில் சாப்பிட வில்லை; பசி வயிற்றைக் கிள்ளு கிறது'.*

**கிளப்புதல்** வி. (v.) *1.* இயங்கச் செய்தல்; start. *'ஓட்டுநர் பேருந்தைக் கிளப்பினார்'.* *2.* ஏற்படுத்துதல்; arouse, etc., *'நீரில் நஞ்சு கலந்துள்ளது என்ற பொய்ச் செய்தி ஊர் மக்களிடையே பீதியைப் கிளப்பியது'.* *3.* (எதிர்ப் பாகச் செயல்படுமாறு) தூண்டுதல்; incite. *'நீ கிளப்பி விட்டுத்தான் அவன் இந்த ஆர்ப்பாட்டம் செய்கிறான்'.* *4.* மேலெழுதல்; raise. *'மெதுவாக மிசையைத் துடை, தூசியைக் கிளப்பாதே'.*

**கிளம்புதல்** வி. (v.) *1.* புறப்படுதல்; leave; set out; go out; start. *'சாப்பிட்டுவிட்டு உடனே வெளியே கிளம்பினான்'.* *2.* வெளிப்படுதல்; issue forth. *'துமுக்கியிலிருந்து சரமாரியாகக் குண்டுகள் கிளம்பின'.*

**கிளர்ச்சி** பெ. (n.) *1.* உணர்ச்சிமயமான மனநிலை; எழுச்சி; arousal; upsurge; excitement (of interest, etc.,) *'கனல் தெறிக்கும் பேச்சால் நான் அடைந்த உள்ளக் கிளர்ச்சியைச் சொல்ல முடியாது'.* *2.* போராட்டம்; protest; agitation. *'ஊதிய உயர்வு வேண்டி அரசு அலுவலர்கள் கிளர்ச்சி செய்து வருகிறார்கள்'.*

**கிளர்த்துதல்** வி. (v.) வெளிப்படச் செய்தல்; தோற்றுவித்தல்; arouse (interest, fear, etc.,). *'பாடல் ஆர்வத்தையும் மகிழ்வையும் கிளர்த்தியது'.*

**கிளர்தல்** வி. (v.) *(உணர்ச்சி முதலியவை)* வெளிப்படுதல்; தோன்றுதல்; (of anger feeling, etc.,) be aroused. *'உணர்வுகள் கிளந்திருக்கும் நிலையில் கவிதை பிறக்கிறது'.*

**கிளவி** பெ. (n.) சொல் *(பெரும்பாலும் இலக்கணத்தில்)*; (mostly in grammatical works) word.

**கிளறுதல்** வி. (v.) *1.* கிண்டுதல்; stir; dig around. *'வெல்லப் பாகில் மாவைப் போட்டவுடன் கரண்டியால் கிளற வும்'.* *2.* உருவாக்குதல்; make; prepare (by stirring). *'காலை உணவிற்கு உப்புமா கிளறிவைத்திருக்கிறேன்'.* *3.* மீண்டும் எழுப்புதல்; bring up. *'முடிந்து போன செய்தியைக் கிளறாதீர்கள்'.*

**கிளி** பெ. (n.) பச்சை வண்ணமாகவும் பலரும் விரும்பும் வண்ணமாக இருக்கும் பறவை இனத்தைச் சேர்ந்த பறவை; parakeet; parrot.

**கிளிஞ்சல்** பெ. (n.) கடலில் வாழும் உயிரினம்; oyster or (its) shell. *'கடற் கரையில் கிளிஞ்சல் பொறுக்கலாம்'.*

**கிளிஞ்சல் சுண்ணாம்பு** பெ. (n.) சுட்டக் கிளிஞ்சலில் நீர் ஊற்றிக் குழையச் செய்து பெறும் சுண்ணாம்பு; shell lime.

**கிளித்தட்டு** பெ. (n.) தடுப்பவர் தொட்டு விடாதபடி வந்து சேரும் பெண்கள்

விளையாட்டு; a game for girls in which they hop across cells drawn on the ground.

**கிளுகிளுத்தல்** வி. (v.) *பாலுணர்வைத் தூண்டுதல்;* titillate. *'வாசகர்களைக் கிளுகிளுக்க வைப்பது எங்கள் இதழின் நோக்கம் அல்ல'.*

**கிளுகிளுப்பு** பெ. (n.) *பாலுணர்வு தூண்டப்பட்ட நிலை;* sexual excitement; titillation. *'அவளுடைய நடையே அவனுக்குக் கிளுகிளுப்பை ஏற்படுத்தியது'.*

**கிளைத்தல்** வி. (v.) *(மரத்திலிருந்து) பல பிரிவுகள் ஏற்படுதல்; கிளை விடுதல்;* branch out. *'ஆலமரம் கிளைத்து அடர்த்தியாக இருந்தது'.* 2. *பெருகுதல்;* branch off; multiply. *'குடும்பம் எப்படிக் கிளைத்துப் பெருகி விட்டது'.*

**கிளை** பெ. (n.) *தண்டிலிருந்து பக்கவாட்டில் பிரிந்து இலை, பூ, காய் ஆகியவற்றைத் தாங்கியிருக்கும் பகுதி;* branch (of a tree) bough. *'மரத்தில் ஏறிக் கிளைகளை வெட்டிப் போடு'.* 2. *வேறு இடத்தில் இயங்கும் பிரிவு;* (of an institution) branch. *'எங்கள் வைப்பகத்தின் கிளைகள் நாடெங்கும் உள்ளன'.* 3. *உட்பிரிவு;* supplementary. *'கிளைக் கதை'.*

**கிறக்கம்** பெ. (n.) *கண்கள் செருகிக் கொள்ளும் மயக்க நிலை;* stupor; drowsiness; languor. *'தூக்கக் கிறக்கம்'.*

**கிறங்குதல்** வி. (v.) 1. *நிலை தடுமாறுதல்; மயங்குதல்;* be in languor, stupor, etc., 2. *சோர்வடைதல்;* be languid. *'வெயிலில் நடந்து வந்ததால் குழந்தை கிறங்கிப் போய்விட்டான்'.*

**கிறுக்கன்** பெ. (n.) *கோட்டிக்காரன்; பித்துக்கொளி; பைத்தியக்காரன்;* lunatic; old nut. *'அந்தக் கிறுக்கன் யாரைக் கண்டாலும் சிரிப்பான்'.*

**கிறுக்குதல்** வி. (v.) 1. *படிக்க முடியாதபடி தெளிவு இல்லாமல் எழுதுதல்;* write illegibly; scrawl. *'பாடம் எழுதச் சொன்னால் இப்படியா கிறுக்குவது?'.* 2. *(சிறு குழந்தைகள்) எழுதுவதான பாவனையில் கோடுகள் போடுதல்;* (of children) scribble. *'சுவர் முழுதும் குழந்தை கிறுக்கி வைத்திருந்தது'.*

**கிறுக்கு** பெ. (n.) 1. *கோட்டி;* insanity. *'அவனுக்குக் கிறுக்கு பிடித்து விட்டது'.* 2. *கோட்டி பிடித்தவர்;* insane person. 3. *மற்றவர்களிலிருந்து வேறுபட்ட வகையில் இயல்புக்கு மாறாக சிந்திப்பவர்;* crazy (person) *மற்றவர்கள் தங்களைக் 'கிறுக்கு' என்று சொல்வதுதான் சில கலைஞர்களுக்குப் பிடிக்கும்போல்' இருக்கிறது.*

**கிறுக்குத்தனம்** பெ. (n.) *முட்டாள்தனமாக நடந்துகொள்ளும் தன்மை;* (of behaviour) madness. *'கிறுக்குத்தனமாக இப்போதே உன் காதலை அவளிடம் சொல்லிவிடாதே. கொஞ்சம் பொறுத்திருந்து பார்!'.*

**கிறுகிறுத்தல்** வி. (v.) *தன் நிலை (அல்லது) வயம் இழுத்தல்;* be bewitched or charmed; swoon over. *'அந்த இளைஞனின் பாட்டைக் கேட்டுக் கிறுகிறுத்துப் போனேன்'.*

**கிறுகிறுப்பு** பெ. (n.) *தலைச்சுற்றல்; மயக்கம்;* giddiness; dizziness. *'வெயிலில் நடந்து வீட்டுக்குள் வந்ததும் கிறுகிறுப்பு அடங்கச் சிறிது நேரமாயிற்று'.*

# கீ

**கீரியும் பாம்புமாக** வி.அ. (adv.) *மிகுந்த பகை உணர்வோடு;* as sworn enemies. *'சொத்தைப் பற்றிப் பேசினாலே இருவரும் கீரியும் பாம்புமாகச் சண்டை போட்டுக் கொள்கிறார்கள்'.*

**கீழ்¹** பெ. (n.) *கிழக்கு;* east. *'கீழ்த்திசை நாடுகள், கீழ்ப்பக்கம்'.*

**கீழ்²** பெ. (n.) *1. தாழ்ந்த நிலை; தரக்குறைவு;* being inferior or low. *'உங்களை விட நான் மிகவும் கீழ்நிலையில் இருக்கும் ஊழியன்'.* *2. அடிப்பகுதி;* lower or bottom part. *'கீழ் இமையில் மை தீட்டினாள்'.* *3. குறைந்த பகுதி;* minimum; lower (limit). *'இந்தப் போட்டியில் கலந்துக் கொள்பவர்களுக்குக் கீழ் எல்லையாக இருபது அகவை (வயது) நிர்ணயிக்கப் பட்டுள்ளது'.*

**கீழ்த்தட்டு** பெ.அ. (n.) *அடித்தட்டு;* (people in the) lower economic stratum. *'பேருந்துக் கட்டண உயர்வால் கீழ்த்தட்டு மக்கள் அதிகம் பாதிக்கப் படுவார்கள்'.*

**கீழ்த்தரம்** பெ. (n.) *தரக்குறைவு;* baseness; vulgarity. *'இப்படிக் கீழ்த்தரமாகப் பேசுவான் என்று நான் நினைக்க வில்லை'.*

**கீழ்த்திசை** பெ. (n.) *கிழக்கு (திசை) ஆசியப் பகுதி;* east; oriental. *'கீழ்த் திசை நாடுகளில் பொருளியல் முன்னேற்றம் என்ற தலைப்பில் அவர் உரையாற்றினார்'.*

**கீழ்நிலைத் தொட்டி** பெ. (n.) *நிலத்தைத் தோண்டிக் கட்டப்படும் தொட்டி போன்ற அமைப்பு;* underground storage tank, sump.

**கீழ்ப்படிதல்** வி. (v.) *பணிதல்;* obey; submit. *'கட்சிக் கட்டுப்பாட்டுக்கு கீழ்ப் படிந்து தொண்டர்கள் செயல்பட வேண்டும்'.*

**கீழ்ப்படு(த்)தல்** வி. (v.) *உட்படுதல்; அடங்குதல்;* come under; be included. *'பத்து அகவைக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகள் இந்த ஓவியப் போட்டியில் கலந்துகொள்ளலாம்'.*

**கீழ்பாலம்** பெ. (n.) *பாலத்தின் கீழ் குறுக்குவாக்கில் அமைந்த பாதை;* subway.

**கீழ்மடை** பெ. (n.) *தண்ணீர் கடைசியாகச் சென்றடையக் கூடிய பாசனப் பகுதி; கடைமடை;* the lower area of an irrigation far removed from the water sources. *'எனது வயல் கீழ்மடையில் இருப்பதால் ஏரித் தண்ணீரை நம்பி உழவு செய்ய முடியாது'.*

**கீழ்மை** பெ. (n.) *இழிவு;* lowliness; meanness. *'சில நேரங்களில் மாந்தர் களின் கீழ்மைக் குணம் வெளிப் படுகிறது'.*

**கீழ்வாரம்** பெ. (n.) *நிலத்தை உள் குத்தகைக்கு விடுதல்;* the practice of subletting farm land.

**கீழினம்** பெ. (n.) *பெரிய அளவீடுகளுக்குச் சமமாகக் குறிக்கப்படும் சிறிய அளவீடுகள்;* lower denomination. *'2.5 மீட்டரின் கீழினம் 2500 மில்லி மீட்டர் ஆகும்'.*

**கீழுலகம்** பெ. (n.) *நிலத்துக்கு அடியில் இருப்பதாகச் நம்பப்படும் உலகம்;* the mythical world below the earth.

**கீழே** வி.அ. (adv.) *1. தரையில், நிலத்தில்;* below, on the ground or floor. *'மரத்திலிருந்து கீழே இறங்கு'.* *2. குறைவாக;* below. *'குளிர்காலத்தில் வெப்பநிலை சராசரி வெப்ப நிலையைவிடக் கீழே செல்கிறது'.*

**கீற்று** பெ. (n.) *1. முடைந்த தென்னை ஓலை; கிடுகு;* plaited coconut leaf (used for roofing). *'கீற்றுக் கொட்டகை வெயிலுக்கு இதமாக இருந்தது'.* *2. நீளவாக்கில் அறுத்து எடுத்த துண்டு;* slice. *'ஒரு பூசணிக் கீற்று வாங்கி வா'.* *3. கற்றை;* beam, ray. *'உடைந்த கண்ணாடியில் எதிரொளி ஒளிக் கீற்று'.* *4. கோடு; வரி;* streak or line (of sacred ash sandal paste, etc., on the forehead). *'அவன் நெற்றியில் சந்தனக் கீற்று தெரிந்தது'.*

**கீறல்** பெ. (n.) *ஒன்றோடு ஒன்று (அ)கூர்ப்பகுதி உராய்வதால் ஏற்படும்*

கோடு; scratch; incision, slit. *'சில வகை மரங்களில் கீறல் ஏற்படுத்திப் பிசின் வடிக்கிறார்கள்'.*

**கீறுதல்** வி. (v.) *1.* கிழித்தல்; scratch. *'வேலியைத் தாண்டும்போது காலில் முள் கீறிவிட்டது'.* *2.* கோடு போல் நீளவாக்கில் வெட்டுதல்; make a cut in; incise; cut open. *'மருத்துவர் கட்டியைக் கீறிவிட்டு மருந்து வைத்து கட்டினார்'.* *3.* (தேங்காய் முதலிய வற்றின்) கீற்று எடுத்தல்; slice. *'கத்தியால் தேங்காய் மூடியைக் கீறிப் போட்டார்'.*

## கு

**குக்கிராமம்** பெ. (n.) *ஏந்துகள் குறைந்த மிகச் சிறிய சிற்றூர்;* hamlet, small village.

**குகை** பெ. (n.) *மலையில் இயற்கையாக அமைந்துள்ள பொந்து அல்லது நீண்ட வழி;* cave (wild animals's) den. *'குகையில் வாழ்ந்த மாந்தர்கள்'.*

**குச்சி** பெ. (n.) *1.* மெல்லிய கிளை, சிறிய கோல்; twig. *'வேப்ப மரத்திலிருந்து ஒரு குச்சியை ஒடித்து வந்து மாட்டை விரட்டினான்'.* *2.* தீக்குச்சி; (safety) match. *'தீப்பெட்டியில் குச்சியே இல்லை'.*

**குச்சிக்கிழங்கு** பெ. (n.) *1. பனங்கிழங்கு;* edible shoot growing from palmyra seed. *'கிழவி வேக வைத்த குச்சிக் கிழங்கை விற்றுப் பிழைப்பு நடத்துகிறாள்'.* *2.* மரவள்ளிக் கிழங்கு; tapioca.

**குச்சு** பெ. (n.) *ஓலையால் வேயப்பட்ட சிறிய அமைப்பு கொண்ட குடிசை;* a small hut with a thatched roof; shanty. *'குச்சு வீட்டுக்குக் கூட, வகை யில்லாமல் இருக்கிறான்'.*

**குச்சுப்புடி** பெ. (n.) *நாட்டிய நாடக மரபில் ஆந்திர மாநிலத்தில் தோன்றி முதலில் ஆண்களால் ஆடப்பட்ட, தற்போது பெண்களாலும் ஆடப்படும் நாட்டியம்;* the dance drama tradation originating in Andhra Pradesh, practised earlier by men and now by women too.

**குச்சுமட்டை** பெ. (n.) *திரிதிரியாக நுனி நசுக்கப்பட்ட, ஒரு வகை மரத்தின் மட்டை அல்லது தாழை நார்;* brush like stick used in white - washing.

**குசுகுசுத்தல்** வி. (v.) *காதில் மெல்லப் பேசுதல், கிசுகிசுத்தல்;* whisper (something into one's ears). *'அவன் காதில் என்ன குசுகுசுக்கிறாய்?'.*

**குஞ்சு** பெ. (n.) *1. இளம் உயிர் (பறவைகள், மீன்) குட்டி (எலி, அணில்);* the young ones (of birds, fish, etc., that lay eggs or of some species such as mouse; squirrel. *2. ஆணின் பிறப்புறுப்பு;* (male child's) genital organ.

**குஞ்சு குளுவான்** பெ. (n.) *வெவ்வேறு அகவையில் உள்ள குழந்தைகள்;* a group of children of different ages; a gathering of kids. *'கல்யாண மண்டபம் குஞ்சு குளுவான்களின் ஒலியால் அதிர்ந்தது'.*

**குஞ்சுபொரித்தல்** வி. (v.) *தாய் கோழியின் உடல் சூடு பட்டு உண்டாக்கி முட்டை யிலிருந்து குஞ்சு வெளிவருதல்;* hatch. *'கோழி நேற்றுதான் குஞ்சு பொரித்தது'.*

**குட்டி** பெ. (n.) *1. (நாய், புலி போன்ற) பாலூட்டி இனத்தைச் சேர்ந்த சில விலங்குகளுக்கு அல்லது பாம்பு போன்றவற்றுக்குப் பிறக்கும் இளம் உயிர்;* the young ones (of certain mammals and certain reptiles); *'ஆட்டுக் குட்டி, யானைக்குட்டி'.* *2. சிறுமி;* little girl. *'இந்த குட்டிக்குப் பத்து வயது இருக்குமா?'.* *3.* இளம்பெண்; young women; chick. *4. குறைந்த அகவையு (வயது)டைய; இளம்;* young or little. *'குட்டி இளவரசன்'.* *5.* நேரம் குறைவான, குறைந்த அளவான; short.

'*குட்டிக் கட்டில், குட்டித் தூக்கம்*'. 6. *சிக்கல் இல்லாத சிறிய; மிக விரைவாக இல்லாத;* simple; not very complicated. '*குட்டிக் கணக்கு*'.

**குட்டிக்கரணம்** பெ. (n.) *தலையைத் தரையில் ஊன்றிக் கால்களைத் தலைக்கு மேலாக மறுபுறம் தூக்கிப் போட்டு சுழன்று எழுதல்;* somer sault. '*குரங்கைக் குட்டிக் கரணம் அடிக்க வைத்துக் காசு வாங்கினான்*'.

**குட்டிச்சுவர்** பெ. (n.) *இடிந்துபோய் பயனற்றதாக இருக்கும் சிறு சுவர்;* dilapidated wall. '*குட்டிச்சுவர் அருகில் கழுதை நிற்கிறது*'. 2. *சீரழிவு;* ruin. '*அவன் இப்படிக்குக் குட்டிச்சுவராகப் போனதற்குக் காரணமே குடிப்பழக்கம்தான்*'.

**குட்டிபோடுதல்** வி. (v.) *(மாடு, ஆடு, யானை) குட்டி ஈனுதல்;* (of mammals) calve. '*குட்டிப் போட்ட பூனை மாதிரி வீட்டைச் சுற்றிச் சுற்றி வருகிறான்*'.

**குட்டிவை** பெ. (n.) *அடக்கி வைத்தல்; கட்டுப்படுத்துதல்;* control (something who exceeds his or her limit). '*அவன் அதிகமாகத் துள்ளுகிறான்*'. '*கொஞ்சம் குட்டி வைத்தால்தான் சரிப்படுவான்*'.

**குட்டுதல்** வி. (v.) *குத்துதல், தட்டுதல்;* rap with the knuckles (on the head) or tap (on the temples). '*வீட்டுக்கணக்கு செய்து கொண்டு வராத மாணவனின் தலையில் ஆசிரியர் ஓங்கிக் குட்டினார்*'.

**குட்டு**[1] பெ. (n.) *விரல் முட்டியால் விழும் குத்து;* a hit with knuckles (on the head). '*அம்மா தம்பியின் தலையில் நறுக்கென்று ஒரு குட்டு வைத்தாள்*'.

**குட்டு**[2] பெ. (n.) *தவறான செயல்;* deceit. '*அமைச்சரின் செயலாளர் என்று கூறிக் கொண்டு வைப்பகத்தில் நிறைய கடன் வாங்கினார். பிறகு குட்டு வெளிப்பட்டுச் சிறைப்பட்டார்*'.

**குட்டை**[1] பெ. (n.) *உயரத்தில் குறைவு;* shortnessmess, shorter. '*பையன் சற்றுக் குட்டைதான்*'.

**குட்டை**[2] பெ. (n.) *குறைந்த அளவில் நீர் தேங்கிக் கிடக்கும் இடம்; (கரை இல்லாத) ஆழமற்ற குளம்;* (shallow) pond; pool. '*ஆடுமாடுகள் இந்தக் குட்டையில் தண்ணீர் குடிக்க வரும்*'.

**குட்டையைக் குழப்புதல்** வி. (v.) *குளறுபடி செய்தல்;* add to the confusion; muddle up. '*ஏற்கனவே இங்கே எல்லாம் குழப்பமாக இருக்கிறது. மேலும் குட்டையைக் குழப்பாதே!*'.

**குடக்கூலி** பெ. (n.) *(குடிக்கூலி) வீட்டுக்குத் தரும் வாடகை;* house rent.

**குடம்** பெ. (n.) *1. வாய்க் குறுகிய பெருத்த ஏனம்;* pot. '*குடத்தில் ஒட்டை விழுந்து விட்டது*'. 2. *உருண்டையான உள்ளீடற்ற பகுதி;* gourd like part (in certain musical instruments). '*வீணைக் குடம்*'.

**குடமிளகாய்** பெ. (n.) *நீளம் குறைந்த, சற்றுப் பருமனான, காரம் குறைந்த ஒரு வகை மிளகாய்;* capsicum; bell pepper. '*கடற்கரையில் குடமிளகாய் தோய்ச்சி (பஜ்ஜி) விற்றுக் கொண்டிருந்தார்கள்*'.

**குடமுழக்கு** பெ. (n.) *(கும்பாபிஷேனம்) புதிய கோயில்களுக்கு அவற்றின் கலசங்களில் தூய்மையான நீர் ஊற்றிச் செய்யப்படும் சடங்கு;* consecration ceremony for newly constructed or renovated temples in which sanctified water is poured over the crown of towers and of other structures.

**குடல்** பெ. (n.) *இரைப்பையிலிருந்து வரும் உணவில் உள்ள சாரத்தை உறிஞ்சி குருதியில் சேர்த்தல், கழிவுகளை*

மலவாய்க்கு அனுப்புதல் ஆகிய செயல்களைச் செய்யும் நீண்ட குழல் போன்ற உறுப்பு; bowel; intestine.

**குடல் தட்டுதல்** வி. (v.) *வயிற்றைக் கையால் தடவிவிட்டுக் குடல் பிறழ்வை ஒழுங்குபடுத்துதல்;* push the bowels in to place by massaging.

**குடல்புண்** பெ. (n.) *உணவுக் குழல், இரைப்பை, குடல் முதலியவற்றில் ஏற்படும் புண்;* ulcer in the stomach.

**குடல்வால் அழற்சி** பெ. (n.) *குடல்வால் தொற்றுக்கு உள்ளாவதால் ஏற்படும் உடல் நலக்குறைவு;* appendicitis. *'முற்றிய குடல்வால் அழற்சிக்கு அறுவைச் சிகிச்சைதான் ஒரே வழி'.*

**குடலிறக்கம்** பெ. (n.) *வயிற்றின் உள்ளுறுப்புகளை தாங்கியிருக்கும் தசை கிழிந்து அதன் வழியே குடல் சிறு அளவில் விதைப் பையில் இறங்கியிருத்தல்;* hernia.

**குடலுறிஞ்சி** பெ. (n.) *உணவிலிருந்து சத்துகளை உறிஞ்சுவதற்காகச் சிறு குடலில் பெரும் எண்ணிக்கையில் மெல்லியதாக அமைந்திருக்கும் விரல் வடிவ நீட்சி;* villus.

**குடலேற்றம்** பெ. (n.) *(குழந்தைகளுக்கு) குடலின் கீழ்ப்பகுதி மேல் பகுதிக்குள் சென்று அடைப்பை ஏற்படுத்தும் நேர்த்தியான நிலை;* a medical condition in which the distal portion of the intestine goes in to the proximal portion causing obstruction (in children).

**குடலை** பெ. (n.) *ஓலையால் பின்னப் பட்ட நீள் உருண்டை வடிவக் கூடை;* long cylindrical basket made of plaited palm leaf (of collecting flowers) . *'பூக்குடலை'.*

**குடலைப் பிடுங்குதல்** வி. (v.) *1. (பசி) வயிற்றைக் கடுமையாக வருத்துதல்;* (of hunger) pinch the bowels. *'குடலைப் பிடுங்கும் பசி, கண்ணைத் திறக்க முடியவில்லை'.* 2. *வாயாலெடுக்கும் உணர்வு ஏற்படுதல்;* be nauseous. *'பிண நாற்றம் குடலைப் பிடுங்குகிறது'.*

**குடவண்டிபோடுதல்** வி. (v.) *பெரும் பாலும் (மாட்டு வண்டி) குடை சாய்தல்;* overturn.

**குடவரைக் கோயில்** பெ. (n.) *மலைப் பாறையைக் குடைந்து சிற்பங்கள் செதுக்கிய மண்டபம் போன்ற அமைப்பு;* rock cut temple.

**குடவிளக்கு** பெ. (n.) *1. சிறு குட வடிவ விளக்கு;* lamp which is shaped like a small pot. 2. *மணவறையில் தென் கிழக்கு மூலையில் குடத்தின் மேல் வைக்கப்படும் விளக்கு;* a lighted lamp placed over a pot in the south east corner of the wedding stage.

**குடவோலை முறை** பெ. (n.) *(முற் காலத்தில்) பெயர் எழுதிய ஓலை நறுக்குகளைக் குடத்தில் போட்டுக் குலுக்கி எடுப்பதன் மூலம் ஊர் நிர்வாக உறுப்பினர்களைத் தேர்ந் தெடுக்கும் முறை;* (in former times) a method of selecting members for the village council in which pieces of palmyra leaf with names of eligible candidates are put into a pot for selection by draw.

**குடற்புழு** பெ. (n.) *குடலில் இருந்து கொண்டு உணவில் உள்ள சத்துகளை உறிஞ்சி வாழும் உயிரினம்;* worm (found in the intestine). *'வயிற்றில் குடற்புழு இருக்கும் என்று நினைக் கிறேன். அதனால்தான் உன் மகன் இப்படி இளைத்துவிட்டான்'.*

**குடி**[1] பெ. (n.) *1. குடித்தல் (அ) குடிக்கும் பழக்கம்;* act of drinking or habit of drinking (alcohol). *'அவனுக்குக் குடிப்பழக்கம் கிடையாது'.* 2. *மது பானம் குடிப்பதால் ஏற்படும் வெறிமயக்கம்;* intoxication. *'குடியில் ஏதாவது உளறுவான்'.*

**குடி²** பெ. (n.) *1.* குடிமகன்*;* citizen. *'குடிமகனின் நலனே அரசின் நோக்கமாக இருக்க வேண்டும்'.* *2.* குடும்பம்*;* family. *'குடி கெடுத்தவன் என்ற பெயரை வாங்காதே!'.* *3.* குலம்*;* clan. *4.* குடித்தனம்*;* tenant. *'இந்த வீட்டில் எட்டுக்குடிகள்'.*

**குடிகாரன்** பெ. (n.) *(அளவுக்கு மிஞ்சி)* மதுபானம் குடிப்பவன்*;* drunkard; alcoholic.

**குடிகொள்ளுதல்** வி. (v.) நிலையாகத் தங்குதல்*;* (of deity) dwell; (of thought, memory, etc.,) occupy (one's mind). *'குன்றில் குடி கொண்ட முருகன்'.*

**குடிசை** பெ. (n.) அதிகம் உயரம் இல்லாத மண் சுவரின் மேல் ஓலையால் வேயப்பட்ட கூரை உடைய சிறு வீடு; hut.

**குடிசைத் தொழில்** பெ. (n.) எளிமையான எந்திரங்களைப் பயன்படுத்தி வீட்டிலேயே செய்யப்படும் சிறு தொழில்*;* cottage industry. *'காளான் வளர்ப்பு ஒரு குடிசைத் தொழிலாகச் செய்யப்படுகிறது'.*

**குடித்தல்** வி. (v.) *1.* உட்கொள்ளுதல்*;* take (liquid food); drink. *'மருத்துவர் கஞ்சி மட்டும்தான் குடிக்கச் சொல்லியிருக்கிறார்'.* 2. மது அருந்துதல்*;* drink alcohol. *'அவர் குடித்திருக்கிறார் என்பது நன்றாகத் தெரிகிறது'.* *3.* உறிஞ்சுதல்*;* absorb (ink, etc.,) இந்தத் தாளில் எழுத வேண்டாம், இது நிறைய மை குடிக்கிறது. *4.* அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்திக் கொள்ளுதல்*;* (of vehicles) consume more fuel than necessary.

**குடித்தனக்காரர்** பெ. (n.) வீட்டில் வாடகைக்குக் குடியிருப்பவர்*;* tenant.

**குடித்தனம்** பெ. (n.) *1.* குடும்ப வாழ்க்கை*;* domestic life. *'குறைந்த வருவாயில் குடித்தனம் நடத்துவது பெருந் துன்பமாகும்'.* *2.* வாடகைக் குடியிருப்பு*;* state of being a tenant. *'இந்த வீட்டில் மூன்று குடித்தனங்கள் உண்டு'.*

**குடிநீர்** பெ. (n.) மாந்தர்கள் *(மனிதர்கள்)* குடிப்பதற்கு ஏற்ற தண்ணீர்*;* drinking water.

**குடிப்பிறப்பு** பெ. (n.) ஒருவர் கல்வி கேள்விகளில் சிறந்த குடி*;* ancestry; (noble) lineage.

**குடிபடை** பெ. (n.) *(அரசனின்)* குடி மக்கள்*;* (king') subjects; countrymen. *'மன்னரின் முடிசூட்டு விழாவைக் குடிபடைகள் கொண்டாடினர்'.*

**குடிபுகுதல்** வி. (v.) *(ஒரு வீட்டில்)* வசிக்கத் தொடங்குதல்*;* move to a new home. *'வீடு வாடகைக்கு எடுத்து நல்ல நாளில் குடிபுகுந்தோம்'.*

**குடிபெயர்தல்** வி. (v.) ஓர் இடத்தை விட்டு வேறொரு இடத்துக்கு வாழச் செல்லுதல்*;* migrate. *'நிலத்தை இழந்த உழவர்கள் நகர்ப்புறத்திற்குக் குடிபெயர்ந்துவிடுகிறார்கள்.'*

**குடிபோதல்** வி. (v.) *1.* குடிபுகுதல்*;* move in (to a new house). *'அவர்கள் அந்த வீட்டுக்குக் குடிபோய் ஐந்து நாள்கள் தான் ஆகிறது'.*

**குடிபோதை** பெ. (n.) *(அளவுக்கு அதிகமாக)* மது அருந்துவதால் ஏற்படும் தன்நினைவற்ற நிலை*;* state of being drunk; drunkenness. *'குடிபோதையில் ஊர்திகளை ஓட்டுவது சட்டப்படி குற்றமாகும்'.*

**குடிமக்கள்** பெ. (n.) ஒரு நாட்டில் வாழ்வதற்குக் குடியுரிமை உடைய மக்கள்*;* citizens; subjects.

**குடிமகன்** பெ. (n.) ஒரு நாட்டில் நிலையாக வாழும் குடிமக்களில் ஒருவர்*;* citizen. *'ஒவ்வொரு மாணவனும் நல்ல குடிமகனாக உருவாக வேண்டும்'.*

**குடிமுழுகுதல்** வி. (v.) கேடு விளைதல்; அழிவு ஏற்படுதல்; இழப்பு ஏற்படுதல்; be lost; be desperate. *'ஒரு வேளை சாப்பிடாவிட்டால் குடிமுழுகி விடாது. அப்படி என்ன குடிமுழுகிப் போகிற செய்தி'.*

**குடிமைப்பணி** பெ. (n.) நாட்டின் பொது நிருவாகம் சட்டம் ஒழுங்கு பாது காத்தல் போன்ற பொறுப்புகளை மேற்கொள்ளும் ஒன்றிய அரசுப் பணி; civil service. *'இந்திய குடிமைப் பணிக்கான தேர்வு பற்றிய அறிவிப்பு நேற்றைய செய்தித்தாளில் வந்துள்ளது'.*

**குடிமைப் பொருள்** பெ. (n.) அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள்; civil supplies. *'குடிமைப் பொருள் வாணிபக் கழகம்'.*

**குடியமர்தல்** வி. (v.) குடியேறுதல்; leave one's place and settle in another place or country; immigrate. *'எங்கள் முன்னோர்கள் நூறு ஆண்டுகளுக்கு முன் குசராத்திலிருந்து வந்து தமிழகத்தில் குடியமர்ந்தார்கள்'.*

**குடியமர்த்துதல்** வி. (v.) தங்க வைத்து வாழச் செய்தல்; குடியேறுதல்; settle (something in a place or country). *'புயலால் வீடு இழந்தவர்கள் அகதிகள் முகாமில் தற்போது குடியமர்த்தப் பட்டுள்ளனர்'.*

**குடியரசு** பெ. (n.) மக்களால் தேர்ந் தெடுக்கப்படும் தலைவர்கள் ஆட்சி செய்வது என்ற அடிப்படையில் உருவாக்கப்படும் அரசியல் அமைப்பு; Republic.

**குடியரசுத் தலைவர்** பெ. (n.) *(இந்தியாவில்)* மாநிலங்களின் சட்ட மன்றங்கள், பாராளுமன்றம் ஆகிய வற்றின் உறுப்பினர்களால் தேர்ந் தெடுக்கும் அல்லது *(சில நாடுகளில்)* மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுக் கும் நாட்டின் தலைமை நிருவாகி; (of the republic) president.

**குடியரசுத் தலைவர் ஆட்சி** பெ. (n.) *(இந்தியாவில்)* அரசியல் சட்டப் படியான அமைப்பு ஒரு மாநிலத்தில் செயலிழக்கும்போது அதன் நிருவாகத்தைக் குடியரசுத் தலைவர் தானே மேற்கொண்டு நேரடியாகச் செயல்படுத்தும் ஆட்சி; the assumption of the functions of a state government by the President of India during failure of consititutional machinery in that state.

**குடியரசுத் துணைத் தலைவர்** பெ. (n.) *(குடியரசுத் தலைவர் பார்க்க) (சில நாடுகளில்)* மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுக்கும் நாட்டின் துணைத் தலைமை நிர்வாகி; (of the republic) Vice-President.

**குடியானவர்** பெ. (n.) வேளாண்தொழில் செய்பவர்; farmer; farm labourer.

**குடியிருத்தல்** வி. (v.) வாழ்க்கை நடத்துதல்; வசித்தல்; take up residence (in a house); live (in a place). *'நாங்கள் இன்னமும் வாடகை வீட்டில்தான் குடியிருக்கிறோம்'.*

**குடியிருப்பு** பெ. (n.) *1.* வசிப்பதற்காக ஒரே மாதிரியாகக் கட்டப்பட்ட வீடுகளின் தொகுப்பு; வீடுகள் கொண்ட பகுதி; group of flats; residential house; colony. *'சென்னை புறநகர்ப் பகுதியில் பல பெயர்களில் பல குடியிருப்புகள் இருக்கின்றன'. 2.* ஓர் இனத்தவர் தமக்கென்று இருப்பிடங்கள் அமைத் துக் கொண்டு வாழும் பகுதி; settlement. *'பழங்குடி மக்கள் குடியிருப்பு'.*

**குடியுரிமை** பெ. (n.) *1.* ஒரு நாட்டில் ஒருவர் வாழ்வதற்கான உரிமை; citizenship. *'மக்களின் குடியுரிமையை மதிக்க வேண்டிய கடமை அரசுக்கு உண்டு'. 2.* அயல்நாட்டில் பிறந்தவர் ஒரு நாட்டின் குடிமகனாக வாழ்வதற்கு

*அந்த நாட்டின் அரசு அளிக்கும் உரிமை;* citizenship.

**குடியெழுப்புதல்** வி. (v.) வாழும் இடத்தை விட்டு மக்களை வேறு இடத்துக்குப் போகச் செய்தல்; evacuate. *'இராணுவத்தினர் மக்களைக் கிராமத்தை விட்டு குடியெழுப்பினார்கள்.'*

**குடியேற்றம்** பெ. (n.) ஒரு நாட்டில் குடியேறி வசிக்க மேற் கொள்ளும் செயல்பாடு; immi-gration,settlement. *'ஆஸ்திரேலியா, கனடா போன்ற நாடுகளில் தமிழர்களின் குடியேற்றம் அதிகரித் திருக்கிறது.'*

**குடியேற்றுதல்** வி. (v.) ஓரிடத்தில் வாழச் செய்தல்; colonize; settle.

**குடியேறுதல்** வி. (v.) *1. நிலையாகத் தங்குதல்;* emignate; move to another country, town, etc., migrate. *'சிற்றூர் (கிராம) மக்கள் வறட்சியின் காரணமாக நகரங்களில் குடியேறுகின்றனர்'.* 2. குடிபுகுதல்; move in; occupy; dwell. *'இந்த வீட்டில் இன்னும் யாரும் குடியேறவில்லை'.*

**குடுகுடுப்பைக்காரன்** பெ. (n.) குடுகுடுப்பையை ஆட்டிக்கொண்டு வீடுவீடாகச் சென்று குறி சொல்லிப் *பிழைப்பவன்;* fortune-teller with a *kudukuduppai* in his hand.

**குடும்ப அட்டை** பெ. (n.) உணவுப் பொருள்கள், மண்ணெண்ணெய் முதலியவற்றைப் பொது வழங்கீடு திட்டத்தில் முறையான விலையில் பெற அரசாங்கத்தால் குடும்பத்திற்கு ஒன்று என்ற கணக்கில் வழங்கப்படும் *(உறுப்பினர்களின் எண்ணிக்கை, வருமானம் முதலியவை பதிவு செய்யப்பட்ட)* குறிப்பேடு; card given under the public distribution system to a family by the government against, which essential things can be had at fair price (in India) ration card.

**குடும்ப அரசியல்** பெ. (n.) *மரபுரிமைகள் (வாரிகள்) அவற்றைக் கைக்கொண்டு (கட்சியின் பொறுப்புகள்) நடத்தும் அரசியல்;* nepotism in the management of a party organization. *'குடும்ப அரசியலின் காரணமாகக் கட்சி பிளவுற்றது'.*

**குடும்ப ஓய்வூதியம்** பெ. (n.) *அரசுப்* பணியிலிருக்கும் ஒருவர் இறந்த பிறகு அவர் மனைவிக்கு அல்லது கணவனுக்கு அரசு வழங்கும் ஓய்வூதியம்; family pension.

**குடும்பக் கட்டுப்பாடு** பெ. (n.) *(குடும்ப அளவு சிறியதாக அமைய)* கருத்தடை மூலம் குழந்தைகள் பிறப்பதைத் தடுக்கும் ஏற்பாடு; family planning.

**குடும்பத்தலைவர்** பெ. (n.) *(பெரும்பாலும்)* பொருளீட்டுபவராக இருந்து ஒரு குடும்பத்தைப் பேணுபவர்; male head (of a family).

**குடும்பத் தலைவி** பெ. (n.) *(பெரும்பாலும்)* பொருளீட்டுபவராக இருந்து ஒரு குடும்பத்தைப் பேணும் பெண்; female head (of a family).

**குடும்ப நீதிமன்றம்** பெ. (n.) மணவிலக்கு, பேணுகைப்படி போன்ற குடும்ப வழக்குகளை ஆராயும் நீதிமன்றம்; family court.

**குடும்பம்** பெ. (n.) *1.* கணவனும், மனைவியும் தம் குழந்தையோடு (சில சமயம் தங்கள் பெற்றோரோடு அல்லது உடன்பிறந்தவரோடு) கூடி வாழும் குமூக ஏற்பாடு; family. *'என் பெற்றோரையும் சேர்த்து என் குடும்பத்தில் எட்டுப் பேர்'.* 2. குடித்தனம்; வாழ்க்கை; family life. *'இந்த வருமானத்தில் எப்படிக் குடும்பம் நடத்துவது?'.* 3. ஒத்த பண்புகளை உடைய மொழிகளை உள்ளடக்கிய பிரிவு; (of languages) family. *'தமிழ், தெலுங்கு, கன்னடம் போன்றவை திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை ஆகும்'.*

**குடும்பி** பெ. (n.) *1. (பெரிய) குடும்பத்தை ஆளுகை பொறுப்பு உள்ளவன்;* man having the responsibility of managing a (large) family. *2. குடுமி பார்க்க;* see *kudumi*. *3. காது குறும்பி;* ear wax.

**குடுமி** பெ. (n.) *(கொண்டைபோல் முடிந்து கொள்ளக் கூடிய அளவுக்கு) ஆண்கள் வளர்த்திருக்கும் நீண்ட முடி;* (of man) tuft of hair. *'இத்தனை நாளும் குடுமி வைத்திருந்தவர் இன்று அதை மாற்றி கிராப் வைத்திருக்கிறாரே!'*. 2. *தேங்காயின்மேல் கூம்பு வடிவத்தில் இருக்கும் நார்க்கற்றை;* tuft of fibre (of coconut). *'குடுமியைப் பிய்த்து விட்டால் தேங்காய் சீக்கிரம் கெட்டுப் போகும்'*.

**குடுமிப்பிடிச் சண்டை** பெ. (n.) *மற்றவர் களின் கேளிக்கு உள்ளாகும் தரக் குறைவான சண்டை;* demeaning quarrel (between to person). *'மேலதிகாரிக்கும் ஊழியருக்கும் நடந்த குடுமிப்பிடிச் சண்டையைப் பார்த்து அலுவலகமே சிரித்தது'*.

**குடுவை** பெ. (n.) *அடிப்புறம் அகண்ட நீண்ட கழுத்துள்ள ஏனம்;* (mud) vessel with round bottom and long neck; (grass) flask (in a laboratory). *'மண் குடுவையில் குடிக்க நீர் வைத் திருக்கிறேன்'*.

**குடைச்சல்** பெ. (n.) *(கை, கால், மூட்டு முதலிய இடங்களில் உண்டாகும்) குடைவது போன்ற வலி;* grawing pain (in the limbs, joints, etc.,). *'மூட்டில் ஒரே குடைச்சலாக இருக்கிறது'*.

**குடை சாய்தல்** வி. (v.) *ஒரு பக்க மாகவோ, தலைக்கீழாகவோ விழுதல்;* (of bullock cart vehicles) overturn. *'காளைகள் மிரண்டதால் வண்டி குடை சாய்ந்து பள்ளத்தில் உருண்டது'*.

**குடை** பெ. (n.) *1. துணி பொருத்தப்பட்டு மழையிலிருந்தும் வெயிலிலிருந்தும் காத்துக்கொள்ள கையில் பிடித்துச் செல்லும் கருவி;* umbrella. *2. நிழல் தருவதற்கு வண்ணத் துணிகளால் போடப்படும் அமைப்பு (கோயில் களில் அல்லது திருமணம் முதலிய நிகழ்ச்சிகளில்)* a structure covered with colourful clothes to provide shade (at festival time); parasol.

**குடைதல்** வி. (v.) *1. துளைத்து ஊடுரு வுதல்;* (of some birds, beetles, etc.,) make holes. *'சில வண்டுகள் மரத்தையும் குடைந்துவிடும்'*. *2. (கருவியால் மரச் சாமான்களை அல்லது மலை, பாறை போன்ற வற்றை) துளைத்தல்;* tunnel (through a hill); bore. *'மலையைக் குடைந்து தொடரிப் பாதை அமைக்கத் திட்டம்'*. *3. துருவித் துருவித் தேடுதல்;* burrow (into old things). *'அவரால் சற்று நேரம் கூடச் சும்மா இருக்க முடியாது. எதையாவது குடைந்து கொண்டே இருப்பார்'*.

**குடைராட்டினம்** பெ. (n.) *1. (திருவிழா நடக்கும் இடங்களில்) பெரிய குடை போன்ற அமைப்பின் கீழ்த் தொங்கவிடப்பட்ட பல (வடிவ) இருக்கைகளில் (சிறுவர்) ஏறிச் சுற்றிவரும் விளையாட்டுக் கருவி;* merry - go - round.

**குண்டர்** பெ. (n.) *குமுகப் பகைச் செயல்களில் இறங்குபவர்;* hooligan; (in India) goonda. *'குண்டர் தடுப்புச்சட்டம்'*.

**குண்டலம்** பெ. (n.) *சிறு குண்டோ மணியோ தொங்கும் காதணி;* a spherical pendant (worn on the ear by kings and sages in olden days).

**குண்டன்** பெ. (n.) *பருத்து இருப்பவன்;* stout (and strong) person. *'இந்தக் குண்டன் ஒரு குத்து விட்டால் எலும்பு நொறுங்கிப்போகும்'*.

**குண்டாந்தடி** பெ. (n.) *சற்றுப் பருமனான சிறு கைத்தடி;* short stout club; cudgel.

**குண்டான்** பெ. (n.) *அகன்ற வாயும் குவிந்த அடிப்பாகமும் உடைய மாழை ஏனம்;* vessel with a wide mouth and a tapering bottom. *'கூழ் என்றால் குண்டான் குடிப்பான்'.*

**குண்டி** பெ. (n.) இரு *பிரிவாக அமைந் திருக்கும் (சதைப் பற்றுடைய) புட்டப் பகுதி;* (of person) bottom, buttocks; (of animals) rump.

**குண்டிக்காய்தல்** வி. (v.) *பசியால் வாடுதல்;* be famished. *'குண்டி காய்ந்தால் தானாகச் சாப்பிட வருவான்'.*

**குண்டு** பெ.அ. (adj.) *1.* இரும்பு *உருண்டை;* ball. *2.* வெடிக்கும் *மாழைக் கருவி;* bomb. *'வானூர்தி குண்டுகள் வீசி ஆயுதக்கிடங்கை அழித்தது'. 3. மூடி யிட்ட மாழைக் குப்பி; ரவை;* bullet; lead shot. *'துமுக்கிக் குண்டு பாய்ந்து மரணம்'. 4. (தாலியில் கோக்கப் படும்)* சிறு *தங்க உருண்டை;* a small spherical piece of gold.

**குண்டு எறிதல்** பெ. (n.) *மாழைக் குண்டை எறியும் விளையாட்டுப் போட்டி;* shotput.

**குண்டுக்கட்டாக** வி.அ. (adv.) *கழுத்தையும் காலையும் ஒன்று சேர்த்துப் பந்து போல் சுருட்டிய நிலை;* bundling up. *'வரமாட்டேன் என்று சொன்னால் உன்னைக் குண்டுக்கட்டாகத் தூக்கிக் கொண்டு போய் விடுவேன்'.*

**குண்டுச்சட்டி** பெ. (n.) *உருண்டை வடிவச் சிறு ஏனம்;* a small round bottomed vessel. *'குண்டுச் சட்டிக்குள் குதிரை ஓட்டுவது போல'.*

**குண்டும் குழியும்** பெ. (n.) *சிறு பள்ளங்கள்;* potholes. *'சாலை குண்டும் குழியுமாக இருக்கிறது'.*

**குண்டூசி** பெ. (n.) *(தாள் போன்ற வற்றை) குத்திக் கோத்து வைப்பதற்குப் பயன்படுத்தும், உருண்ட தலைப் பகுதி உடைய சிறு ஊசி;* pin.

**குண்டைத் தூக்கிப்போடுதல்** வி. (v.) *அதிர்ச்சி தரும் செய்தியைக் கூறுதல்;* disclose a shocking news; drop a bomb shell. *'வேலையைத் துறந்து விட்டேன்' என்று அண்ணன் குண்டைத் தூக்கிப் போட்டான்.*

**குணச்சித்திரம்** பெ. (n.) *1. (கதை, நாடகம் போன்றவற்றில்) கதை மாந்தர்;* scope (of a character in a story, play, etc.,). *'இந்தச் சிறுகதையில் வரும் குணச்சித்திரம் சிறப்பாக அமைந் திருக்கிறது'. 2. உருவாக்கியிருக்கும் முறை;* characterization. *'பாத்திரங் களின் குணச்சித்திரம் சிறப்பாக அமைந்திருக்கிறது'.*

**குணசாலி** பெ. (n.) நல்ல பண்புகள் *நிறைந்தவர்; உடையவர்;* (generally) person of noble traits; (esp) person who has patience and endurance. *'கணவன் மனைவி இருவருமே நல்ல குணசாலிகள்'.*

**குணநலன்** பெ. (n.) இயல்பு*;* (of a person) positive qualities. *'சிறந்த குணநலன்கள் கொண்டவர்'.*

**குணப்படுத்துதல்** வி. (v.) *(நோயை) நீக்குதல்; (நோயாளியை) நலப் படுத்துதல்;* cure; heal, restore health. *'அறுவைச் சிகிச்சை மூலம் எலும்பு முறிவைக் குணப்படுத்திவிட் டார்கள்'.*

**குணம்**[1] பெ. (n.) *1.* இயல்பு; பண்பு; nature; dis-position. *'அக்கா தங்கை இருவருக் கும் ஒரே குணம்'. 2.* இயற்கை யாகவே *அமையும் சிறப்பான இயல்பு;* noble quality; noble traits. *'குணமான பெண்'. 3.* நோய் தீர்க்கும் அல்லது குறிப்பிட்ட *விளைவை ஏற்படுத்தும் தன்மை;* inherrent quality (of something) property.

*'வேப்பெண்ணெய்க்கு நோய்க் கிருமிகளை அழிக்கும் குணம் உண்டு'.*

**குணம்**[2] பெ. (n.) *நலம் பெறுதல்;* healing cure. *'இந்த மருந்தைச் சாப்பிட்டால் மூன்று நாளில் குணம் தெரியும் என்று மருத்துவர் கூறினார்'.*

**குத்தகை** பெ. (n.) *1. உரிமையாளர் தனது நிலத்தை மற்றொருவர் பயிரிடு வதற்கு ஒப்பளித்து, விளைச்சலில் ஒரு பங்கைக் கொடுப்பதற்கான சட்டப்பூர்வமான ஒப்பந்தம்;* lease. *'இரண்டு ஏக்கர் தவிர மற்ற நிலத்தையெல்லாம் குத்தகைக்கு விட்டிருக்கிறேன்.'. 2. சாகுபடி செய்யும் உரிமையை அளித்ததற் காகப் பெறப்படும் தவசம் அல்லது அதற்கு ஈடான பணம்;* rent (in kind or cash). *'அவர் குத்தகை நெல்லை வாங்குவதற்கு ஒருவரை அமர்த்தி யிருந்தார்.'*

**குத்தகைதாரர்** பெ. (n.) *நிலம், மனை முதலியவற்றைக் குத்தகைக்கு எடுப்பவர்;* lessee.

**குத்தல்** பெ. (n.) *1. (ஊசியால் குத்து வதைப் போன்ற) கடுமையான வலி;* piercing or stinging pain. *'தலைக் குத்தல்'. 2. குத்திக்காட்டும் செயல்;* sarcastic or hurtful remarks. *'சம்பளத்தில் எப்போதும் நூறு ரூபாய் குறைகிறது. யாருக்குப் போகிறதோ! என்று மனைவி குத்தலாகப் பேசுவது சினங்கொள்ள வைத்தது'.*

**குத்திக்காட்டுதல்** வி. (v.) *ஒன்றைச் சுட்டிக்காட்டி மனம் புண்படச் செய்தல்;* draw pointed attentition to (one's lapses, weaknesses in a mean or malicious way). *'எனக்கு ஆங்கிலம் தெரியாது என்பதைக் குத்திக்காட்டு கிறாயா?'.*

**குத்திட்டு** வி.அ. (adv.) *1. குத்துக்காலிட்டு;* in squating position. *'கணப்புக்கு அருகில் குத்திட்டு உட்கார்ந்து கொண்டான்'. 2. நெட்டுக்குத்தாக;* like stubble. *'தாடி மயிர் முள்முள்ளாகக் குத்திட்டு நின்றது'.*

**குத்திடுதல்** வி. (v.) *நிலைத்தல்; வெறித்தல்;* (attention, etc.,) get fixed on; stare. *'உயிர் பிரியும் நேரத்தில் பார்வை குத்திட்டது'.*

**குத்திருமல்** பெ. (n.) *கக்குவான்;* whooping cough.

**குத்துதல்** வி. (v.) *1. பலமாக அடித்தல்;* hit (with clenched fist); punch. *'மண் மூட்டையைக் குத்திக் குத்துச் சண்டைக்காகப் பயிற்சி செய்து கொண்டிருந்தார்'. 2. இடித்தல்;* pound (with a pestle). *'அம்மாவும் சித்தியும் திண்ணையில் நெல் குத்திக் கொண்டிருந்தார்கள்'. 3. பதித்தல்;* impress; cancel (a postel tamp by stamping) . *'இந்த அஞ்சல் வில்லையில் மட்டும் முத்திரை குத்தப்பட வில்லை'.*

**குத்து** பெ. (n.) *1. அடி;* hit (with fist); punch. *'முகத்தில் வலுவான குத்து விழுந்தது'. 2. காயம்;* stab. *'கொலை செய்யப்பட்டவன் உடலில் கத்திக் குத்து காணப்பட்டது'.*

**குத்துக்கல்** பெ. (n.) *நிலத்தின் எல்லை யைக் குறிப்பதற்குச் செங்குத்தாக நட்டு வைக்கப்படும் கல்;* stone plate erect on the ground to mark boundary. *'குத்துக்கல்லை யாரோ நகர்த்தி நட்டிருக்கிறார்கள்'.*

**குத்துக்கால்** பெ. (n.) *முழங்காலை மடித்து முகத்துக்கு முன் கொண்டு வந்து இடுப்பின் கீழ்ப் பகுதி தரையைத் தொட்டுக் கொண் டிருக்கும்படி வைத்திருக்கும் நிலை;* squatting position. *'அவள் குத்துக் காலிட்டபடி உட்கார்ந்து பாத்திரம் தேய்த்தாள்'.*

**குத்துக்கோல்** பெ. (n.) *கூர்மையான முனையுடைய கம்பு;* pointed pole (used as a weapon). *'கையில் குத்துக் கோல், அரிவாள் போன்ற ஆயுதங் களுடன் பத்துப் பேர் புறப்பட் டார்கள்'.*

**குத்துச்சண்டை** பெ. (n.) *இரு வீரர்கள் கையில் உறை அணிந்து ஒருவர் முகத்தில் ஒருவர் குத்திப் புள்ளிக் கணக்கில் வெற்றி அடையும் விளையாட்டு;* boxing.

**குத்துமதிப்பு** பெ. (n.) *தோராயம்;* rough estimate. *'அறுபது கலம் நெல் என்று எப்படிச் சொல்கிறாய்?'. 'எல்லாம் ஒரு குத்துமதிப்புதான்'.*

**குத்துயரம்** பெ. (n.) *செங்கோண முக்கோணத்தில் அடிப்பக்கத்திற்கும் மேல் முனைக்கும் இடையில் உள்ள தூரம்;* altitude (in a triangle).

**குத்துவாள்** பெ. (n.) *கைப்பிடியுடைய சிறுவாள்;* small dagger; stilletto.

**குத்துவிளக்கு** பெ. (n.) *வட்ட வடிவமான அடிப்பகுதியில் நேராகப் பொருந்திய தண்டின் மேல் உள்ள தட்டு போன்ற பாகத்தில் திரியிட்டு எண்ணெய் ஊற்றி ஏற்றும் விளக்கு;* oil-lamp with a pedestal.

**குத்தூசி** பெ. (n.) *கூரிய நுனியும் தவசம் வருவதற்கான குழிந்த பகுதியும் கொண்ட ஊசி போன்ற இருப்புக் கம்பி;* a sharp grooved hook. *'குத்தூசியில் இழைக் கயிற்றை வடிவாகக் கோத்துக் கொடு'.*

**குதப்புதல்** வி. (v.) *வாய்க்குள் அடக்குதல்; (கடிக்காமல்) சப்பி மெல்லுதல்;* keep (betel leaf, tobacco, etc.,) as much as fills the mouth) and chew steadily without swallowing; suck (toffee). *'வாயில் இவ்வளவு வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு அவரால் எப்படிப் பேச முடிகிறது'.*

**குதறுதல்** வி. (v.) *நாசப்படுத்துதல்;* tear into shreds (by biting), tear aport. *'பூனை எலியைக் கடித்துக் குதறிவிட்டது'.*

**குதித்தல்** வி. (v.) *1. கீழே பாய்தல்;* jump leap, jump down. *'சிறுவர்கள் நீரில் குதித்து விளையாடினார்கள்'.* 2. *தோன்றுதல்;* appear suddenly as if from an unrelated place. *'இந்த அரிய சிந்தனை (யோசனை) உனக்கு எங்கிருந்து வந்து குதித்தது'.* 3. *இறங்குதல்;* plunge. *'சினிமா நடிகை தேர்தலில் குதிக்கப் போவதாக அறிவித்தார்'.*

**குதி** பெ. (n.) *ஒரு முறை எழும்பிக் கீழே வருதல்;* jump; leap. *'தெருக்கூத்துக் கலைஞரின் குதியும் துள்ளலும் பார்க்கப் பேரின்பமாக (பரவசமாக) இருந்தன'.*

**குதிபோடுதல்** வி. (v.) *துள்ளிக் குதித்தல்;* jump about, frolic. *சுற்றுலாவிற்கு 'உன்னையும் கூட்டிக் கொண்டு போகிறேன் என்றதும் குழந்தை குதிபோட்டது'.*

**குதிர்தல்** வி. (v.) *ஏற்ற வகையில் அமைதல் (பெண்ணுக்கு வரன்) வாய்த்தல்;அமைதல்;* (of a business deal or a marriage proposal) materialize. *'வீட்டுக்கும் விலை குதிரவில்லை, பெண்ணுக்கும் வரன் குதிரவில்லை'.*

**குதிர்** பெ. (n.) *(நெல் முதலிய தவசம் சேமித்து வைப்பதற்கான) மண்ணால் அல்லது மரத்தால் செய்யப்பட்ட அமைப்பு;* a large barrel like receptacle for storing grain.

**குதிரைக் கொம்பு** பெ. (n.) *கிடைப்பதற்கு அரியது;* rarity; a near impossibility. *'தன்னலமற்ற தலைவர்களைக் காண்பது குதிரைக் கொம்பாகி விட்டது'.*

**குதிரைப் படை** பெ. (n.) *1. படை அணி வகுப்பில் இடம் பெறும், குதிரையில் அமர்ந்து வரும் வீரர்களின் பிரிவு;* cavalcade. 2. *குதிரைகளில் அமர்ந்து செயல்படும் காவல் துறையின் ஒரு*

பிரிவு; mounted police. *'கலவரத்தில் ஈடுபட்டிருந்தவர் களைக் கலைக்கக் குதிரைப்படை வந்தது'.*

**குதிரைப்பந்தயம்** பெ. (n.) முதலாவதாக வந்து வெற்றி பெறும் வாய்ப்புள்ள குதிரையின் மீது பணம் கட்டும் விளையாட்டுப் போட்டி; horse racing.

**குதிரை முகம்** பெ. (n.) முழங்காலின் முன் பக்க எலும்பு; shinbone.

**குதிரையேற்றம்** பெ. (n.) குதிரை மீதேறி ஓட்டுவதற்கான பயிற்சி; horseman ship. *'சில பள்ளிகளில் மாணவர்களுக்குத் குதிரையேற்றத்தில் பயிற்சி தரப்படுகிறது'.*

**குதிரையோடுதல்** வி. (v.) ஒருவர் தனக்கு மாற்றாக மற்றொருவரைத் தேர்வு எழுத வைத்து ஆள் மாறாட்டம் செய்தல்; write an examination by proxy. *'அவன் குதிரையோடித்தான் தேர்வில் தேர்ச்சியடைந்தான்'.*

**குதிரைவண்டி** பெ. (n.) குதிரையால் இழுக்கப்படும் செலவு (பயணம்) செய்வதற்கான வண்டி; horse drawn cart (as a mode of transport).

**குந்தகம்** பெ. (n.) தடை; இடையூறு; thwarting, hampering, hindering. *'சட்டம் ஒழுங்கு அமைதிக்கு எந்த வகையான குந்தகமும் ஏற்படக்கூடாது'.*

**குந்துதல்** வி. (v.) குத்துக்காலிடுதல்; squat; crouch. *'கைதிகள் குந்தியிருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்'.*

**குப்பம்** பெ. (n.) *1.* மீனவர்கள் வாழும் கடலோரப் பகுதி அல்லது சிற்றூர்; fishermen hamlet. *2.* குடிசைகள் நிறைந்த பகுதி; (in a city) slum.

**குப்பல்** பெ. (n.) குவியல்; heap. *'குப்பல் குப்பலாகக் கிடந்த துணிகளை எடுத்து மடித்து வைத்தார்கள்'.*

**குப்பாயம்** பெ. (n.) ஆண்களும் பெண்களும் அணியும் மேலாடை; a kind of loose - fitting shirt. *'கதர்க் குப்பாயம்'.*

**குப்பி** பெ. (n.) சிறு புட்டி; small (flask-like) bottle. *'மருந்துக் குப்பி'.*

**குப்புற** வி.அ. (adj.) *1.* தரையில் அழுந்திய நிலையில் கவிழ்ந்து; (of a person) face down wards; on one's belly. *'குப்புறப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான்'.* *2.* தலைகீழாக; (of objects) upside down. *'பழக்கூடை குப்புறச் சரிந்து கிடந்தது'.*

**குப்பை** பெ. (n.) *1.* பயன்பாடற்றவை என்று கழிக்கப்பட்டவை; trash; garbage. *'கூடையில் குப்பை நிரம்பிவிட்டது'.* *2.* காற்று அடித்துக் கொண்டு வரும் தூசி, செத்தை முதலியவை; dust, dried leaves, sweepings, etc., *'முதலில் கொல்லையைப் பெருக்கிக் குப்பையை அள்ளு'.*

**குப்பைக்கூடை** பெ. (n.) குப்பை போடுவதற்கான கூடை வடிவக் கருவி; waste (paper) basket, dust bin.

**குப்பைக் கொட்டுதல்** வி. (v.) பயனற்ற வேலையில் பங்கு பெறுதல்; பயனற்ற (ஒரே) வேலையைச் செய்தல்; (jocularly) take part in an unproductive work; do the (same) useless job (again and again). *'நீயும் அந்த அலுவலகத்தில்தான் குப்பைக் கொட்டுகிறாயா?'.*

**குப்பைத்தொட்டி** பெ. (n.) பைஞ்சுதையினால் செய்த தொட்டி போன்ற அமைப்புடைய நிலைத்தொட்டி; dust bin; garbage can.

**குபீர்** பெ.அ. (adj.) பீறிட்டு வரும்; எதிர்பாராத; திடீர்; a fit of; burst of; sudden. *'குபீர்ச் சிரிப்பு'.*

**குபுகுபு என்று** வி.அ. (adv.) (புகை, நீர்) பெருக்கெடுத்தாற்போல்; விரைவாகவும்; மிகுதியாகவும் தொடர்ச்சியாகவும்; (of water, etc.,) gushing out;

(of smoke) vigorously puffing out. *'தோண்டிய இடத்தில் குபுகுபு வென்று தண்ணீர் வந்தது'.*

**கும்பல்** பெ. (n.) *1. மாந்தர்களின் (மனிதர்களின்) கூட்டம்;* throng; crowd. *'இந்தக் கும்பலில் காணாமல் போன குழந்தையை எப்படித் தேடுவது?'. 2. குழுவாகத் தீய செயல்களில் ஈடுபடுபவர்கள்;* gang. *'திருட்டுக் கும்பல்'.*

**கும்பிடுதல்** வி. (v.) *1.* இரு கைகளையும் கூப்பி வணங்குதல்; make obseisance with folded hands. *'இளைஞனாக இருந்தால் கை குலுக்குவேன், வய தானவராக இருந்தால் கும்பிடுவேன்'. 2. வழிபடுதல்;* worship. *'திருப் பதிக்குப் போய் சாமி கும்பிட் டோம்'.*

**கும்மட்டி** பெ. (n.) *1.* இருப்பு அடுப்பு; a kind of stove which can be lit with coal or chaff to provide heat without flame. *2.* இன்னீர்ப்பழம் *(தர்ப்பூசணி)* இனத்தைச் சேர்ந்த கொடிவகை; bitter apple.

**கும்மாளம்** பெ. (n.) *மகிழ்ச்சி நிறைந்த ஆரவாரம்;* uncontrolled merriment. *'மாணவர் விடுதி என்றால் சிரிப்பும் கும்மாளமும்தான்'.*

**கும்மி** பெ. (n.) பெரும்பாலும் பெண்கள் கைகொட்டி ஆடும் நடனம்; dancing by girls with rhythmic clapping.

**கும்மியடித்தல்** வி. (v.) *(பெண்கள் சுற்றி வந்து) கைகொட்டிப் பாடி ஆடுதல்;* (of girls) dance round clapping and singing.

**கும்மிருட்டு** பெ. (n.) *அடர்ந்த இருள்;* pitch - darkness. *'இந்தக் கும்மிருட்டில் தனி யாகத் தோட்டத்திற்குப் போகாதே!'.*

**கும்முதல்** வி. (v.) மேற்பரப்பில் மெதுவாகக் குத்தியும் அழுத்தியும் எடுத்தல்; wash clothes by rubbing and squeezing them against a hard surface. *'துணி துவைக் கும் கல்லில் சட்டையைக் கும்மித் துவைத்தான்'.*

**குமட்டல்** பெ. (n.) வயிற்றைப் புரட்டி வாயாலெடுக்க வேண்டும் என்ற உணர்வு; nausea; queasiness. *'சாப் பாட்டைப் பார்த்தாலே ஒரே குமட்டல்'.*

**குமட்டுதல்** வி. (v.) புரட்டுதல்; வாயா லெடுத்தல்; turn one's stomach, nauseate. *'வயிற்றைக் குமட்டும் நாற்றம்'.*

**குமரன்** பெ. (n.) இளைஞன்; young man. *'உன்னைப் போல் ஓடிவர நான் என்ன குமரனா?'.*

**குமரி** பெ. (n.) *1.* பருவமடைந்த பெண்; girl who has come of age. *'குமரிகள் இருக்கிற வீட்டில் ஆண்கள் விருப்பப் படி நுழைந்துவிட முடியாது'.* **2.** இளம் பெண்; young girl. *'இவ்வளவு வயதாகியும் இன்னும் குமரி என்று நினைத்துக்கொண்டு இருக்கிறாயா?'.*

**குமாரத்தி** பெ. (n.) *மகள்;* daughter. *'மூத்த குமாரத்தி (திருமண அழைப்பிதழ் முதலியவற்றில் குறிப்பிடும் போது)'.*

**குமாரன்** பெ. (n.) *மகன்;* son. *'மூத்த குமாரன் (திருமண அழைப்பிதழ் முதலியவற்றில் குறிப் பிடும்போது)'.*

**குமாரி** பெ. (n.) செல்வி; Miss. *'(திருமண மாகாத) பெண்ணின் பெயருக்கு முன் மதிப்புத் தரும் வகையில் சேர்க்கும் சொல்'.*

**குமிழ்** பெ. (n.) உருண்டை வடிவப் பொருள்; knob; anything shaped like a knob. *'குமிழைத் திருப்பிக் கதவைத் திறந்தான்'.*

**குமிழி** பெ. (n.) காற்றால் நீர்மத்தில் ஒரு சில நொடிகளே தோன்றி மறையும் சிறு அரைப் பந்து வடிவம்; bubble. *'நீர்க்குமிழி போன்று வாழ்க்கை நிலையற்றது என்று சொல்வார்கள்'.*

**குமிழியிடுதல்** வி. (v.) *1. குமிழி தோன்றுதல்;* bubble. *'பாறைகளுக்கு இடையில் நீர் குமிழியிட்டுச் சுழன்று கொண்டிருந்தது'. 2. பெருகுதல்;* (happiness, enthusiasm, etc.,) bubble up. *'ஆர்வம் அவள் வார்த்தைகளில் குமிழியிட்டது'.*

**குமுறல்** பெ. (n.) *1. (எரிமலை, கடல் முதலியவை தொடர்ந்து எழுப்பும்) உரத்த ஒலி;* rumbling (of volcano, sea, etc.,). *2.* வெளியே தெரியாத கொந் தளிப்பு; simmer. *'எண்ணக் குமுறல் களைக் கவிதையாக வடித்தேன்'.*

**குமைதல்** வி. (v.) *1. சுழன்று வருதல்;* (of smoke fire) spiral (without any outlet). *'சமையல் அறை முழுக்கப் புகை குமைந்துக் கொண்டிருந்தது'. 2. (மனம்) புழுங்குதல்;* become choked up. *'பெற்றோரிடமும் கூடக் கணவன் நடத்தையைப் பற்றிச் சொல்ல முடியாமல் குமைந்தாள்'.*

**குமைச்சல்** பெ. (n.) *(மன) புழுக்கம்;* (of emotions) state of being pent-up. *'குமைச்சலும் பேராசையும் அவனைத் தளர்வடையச் செய்தது'.*

**குயவன்** பெ. (n.) *மட்பாண்டங்கள் செய்பவர்;* potter.

**குரக்குபிடித்தல்** வி. (v.) திடீரென்று கை, *கால்கள் குத்தி இழுப்பது போன்ற வலி உண்டாதல்;* suffer muscle pull or sprain; suffer cramps. *'காலில் குரக்கு பிடித்து விட்டது'.*

**குரங்குப்புத்தி** பெ. (n.) *தடுமாறும் குணம்; அலைபாயும் மனம்;* ficklemindedness. *'இவனுக்குச் சரியான குரங்கு புத்தி. கடைக்கு வந்தால் கூடச் சீக்கிரம் துணியை எடுக்க மாட்டான்'.*

**குரல்** பெ. (n.) *தொண்டையில் உள்ள குரல் நாண்களின் அசைவால் உண்டாக்கும் ஒலி;* voice. *'தொலைபேசியில் உங்கள் குரல் வேறு மாதிரி ஒலித்தது'.*

**குரல்நாண்** பெ. (n.) *ஒலிக்கான அதிர்வுகளை எழுப்பப் பயன்படும், தொண்டையில் உள்ள மெல்லிய சதைத் தொகுப்பு;* vocal cords.

**குரல்வளம்** பெ. (n.) *பலவகை ஏற்ற இறக்கங்களை எளிதாகவும் இனிமை யாகவும் பாடக்கூடிய குரலின் செழுமை;* range of voice; voice culture. *'அவருடைய குரல்வளம் வியக்கத் தக்கது'.*

**குரல்வளை** பெ. (n.) *கண்டம் தெரியும் கழுத்தின் முன் பகுதி;* throat (including Adam's apple). *'குரல்வளையைப் பிடித்து நெரித்து அவளைக் கொன்றிருக்கிறான்'.*

**குரல்வாக்கு** பெ. (n.) *அவையில் ஏரணவுரை முடிந்ததும் தீர்மானிக்கப் பட வேண்டியதை ஆதரித்து அல்லது எதிர்த்து உறுப்பினர்கள் வாய்மொழி யாகத் தெரிவிக்கும் சொல்;* voting by saying 'yes' or 'no' voice vote.

**குரல் வாக்கெடுப்பு** பெ. (n.) *வாய்ச் சொல்லின் மூலம் நடத்தப்படும் வாக்கெடுப்பு;* voice vote. *'இட ஒதுக்கீடு தொடர்பான தீர்மானம் தமிழகச் சட்டப்பேரவையில் குரல் வாக்கெடுப்பு மூலம் நிறை வேறியது'.*

**குரவை** பெ. (n.) *(முற்காலத்தில்) பெண்கள் கைகோத்து ஆடும் ஒரு வகை நடனம்;* (in former times) dancing in a circle by women holding hands.

**குரு** பெ. (n.) *1. ஆசிரியர்; ஆசான்;* (venerable) teacher, master. *'மாதா, பிதா, குரு, தெய்வம். 2. எடுத்துக் காட்டாக இருப்பவர்;* exemplary model; mentor. *'இன்றைய எழுத் தாளர்கள் பலருக்கு இவர்தான் குரு'.*

**குருகுலக் கல்வி** பெ. (n.) *குருவின் இல்லத்திலேயே தங்கிக் கற்கும் கல்வி;* learning by living with the teacher. *'இன்றும் சில இடங்களில் குருகுலக்*

*கல்வி முறை வழக்கத்தில் இருக் கிறது'.*

**குருகுலம்** பெ. (n.) *(குருவோடு இருந்து கற்கும்) பாடசாலை;* school (where disciples live together with the teacher.

**குருசாமி** பெ. (n.) *முதன்முறையாக ஐயப்பன் கோயிலுக்குச் செல்லும் ஆளுக்குரிய சடங்குகள் செய்வித்து அவரைத் தன் குழுவில் சேர்த்துக் கொள்ளும் (மூத்த) பத்தர்;* (a senior) devotee who initiates one into the worship of . *'ஐயப்பன். எங்கள் குருசாமி பதினெட்டு முறை மலைக்குப் போய் வந்தவர்'.*

**குருட்டுப் பாடம்** பெ. (n.) *பொருளைப் புரிந்துகொள்ளாமல் படிக்கும் பாடம்; பொருள் தெரியாத மனப்பாடம்;* anything committed to memory without knowing its meaning; rote.

**குருடன்** பெ. (n.) *பார்க்கும் திறன் இல்லாதவன்; கண் தெரியாதவன்;* blind man.

**குருத்து** பெ. (n.) *(தென்னை, பனை, வாழை போன்ற மரங்களின்) விரியாத இளம் மடல்;* tender leaf (of banana plant); unfurled frond of palm. *'வாழை குருத்துவிடத் தொடங்கி விட்டது'.*

**குருத்து ஞாயிறு** பெ. (n.) *குருத் தோலை களுடன் இயேசுவின் புகழ்பாடி ஞாயிற்றுக்கிழமை கொண்டாடப் படும் திருவிழா;* palm sunday.

**குருத்து மணல்** பெ. (n.) *பொடி மணல், குருமணல்;* fine sand.

**குருபீடம்** பெ. (n.) *மடத்தின் தலைமைப் பொறுப்பு;* headship of a monastic order. *'இந்த குருபீடத்தை அலங்கரித்த மடாதினத் தலைவர் பலர் தமிழ்த் தொண்டாற்றியுள்ளனர்'.*

**குருபூசை** பெ. (n.) *நோன்பு தந்த குருவுக்கு, அவர் முத்தி அடைந்த நாளில் சீடர்களால் நடத்தப்படும் பூசை;* worship offered by the disciples to their guru, who initiated them into a religious order on his death anniversary.

**குரும்பை** பெ. (n.) *(தென்னை அல்லது பனையின் பூவிலிருந்து தோன்றும்) பிஞ்சுக்காய்;* small unripe fruit (of coconut or palmyra trees). *'தென்னங் குரும்பைகளில் பாதி உதிர்ந்து விட்டன'.*

**குருவிக்காரன்** பெ. (n.) *குருவி பிடிப்பவன்;* bird catcher.

**குரைப்பு** பெ. (n.) *நாய் எழுப்பும் ஒலி;* bark (of a dog). *'புதருக்கு அருகில் பன்றியின் உறுமலும் நாயின் குரைப்பும் கேட்டன'.*

**குலதெய்வம்** பெ. (n.) *ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் வழிபடும் சிற்றூர்த் தெய்வம்;* deity (of a community); family deity. *'குல தெய்வத்தை வணங்கிவிட்டுத் திருமண வேலைகளில் ஈடுபட்டார்'.*

**குலம்** பெ. (n.) *1. (மாந்த) இனம்;* general class; type. *'பண்பாடு என்பது மனித குலத்திற்கே உரியது'.* 2. *குலம்;* lineage. *'சில அரசர்கள் தங்களைச் சூரிய குலம் என்று கூறிக் கொண்டனர்'.*

**குலவுதல்** வி. (v.) *நெருங்கி உறவாடுதல்; ஆசையோடு பழகுதல்;* be overly familiar; move freely or intimately. *'நேற்று வரை பகைவனாக இருந்தவன் இன்று ஏன் நம்மோடு குலவு கிறான்?'.*

**குலவையிடுதல்** வி. (v.) *பெண்கள் வாயைத் திறந்து நாக்கை வாயின் பக்கவாட்டிலோ அல்லது மேலும் கீழுமாகவோ அசைத்து ஒரு வகையான ஒலியை எழுப்புதல்;* ululate. *'பெண்கள் குலவையிட சிற்றூராரின் முன்னிலையில்*

*ஊராட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் பதவியேற்றார்'.*

**குலுக்கல்** பெ. (n.) மேடு பள்ளத்தில் வண்டி ஏறி இறங்குவதால் அசைவு; தூக்கிப் போடுதல்; (of vehicles) jolt. *'மாட்டு வண்டியில் உட்கார முடியாத அளவுக்குக் குலுக்கல்'.*

**குலுக்கல்சீட்டு** பெ. (n.) *(ஒருவரை)* குறிப்பிட்ட நாள்களுக்குக் குறிப்பிட்ட தொகை எனக் கட்டச் செய்து குலுக்கலின் மூலம் தொகையையோ பொருளையோ தரும் முறை; a system in which subscription is collected in instalments and the accumulated sum or the article for which the subscription is made is given to a subscriber by draw. *'பத்தாயிரம் ரூபாய் குலுக்கல் சீட்டில் சேர்ந்து கொள்கிறாயா? / தீபாவளிக் குலுக்கல் சீட்டில் சேர்பவர்களுக்கு ஒரு கிராம் தங்க நாணயம் இலவசம்'.*

**குலுக்குதல்** வி. (v.) *(ஒன்றைக் கையில் பிடித்து)* மேலும் கீழும் அல்லது பக்கவாட்டில் ஆட்டுதல்; shake (a bottle, etc.,) shake (a bag, box, etc., to settle the contents). *'மருந்து குடிப்பதற்கு முன் குப்பியை (புட்டியை) நன்றாகக் குலுக்கு'.* 2. அசைத்தல்; ஆட்டுதல்; shake (one's body, shoulder, etc.,). *'அவள் உடலைக் குலுக்கிக் குலுக்கி நடந்தாள்'.*

**குலுங்குதல்** வி. (v.) *1.* எளிமையாக இங்குமங்கும் அசைந்து அதிர்தல்; shake (when doing something) (of vehicle jolt). *'அவர் சிரிக்கும்போது உடல் முழுவதும் குலுங்கும்'.* 2. *(காய்த்தல், பூத்தல் ஆகியவற்றோடு மரம்* நிறைந்திருத்தல்; rich in (something); full of (something). *'தோட்டம் முழுக்க மரங்களில் பூக்கள் பூத்துக் குலுங்கின'.*

**குலைதல்** வி. (v.) *1. (உடல் கட்டு)* தளர்தல்; (of body) become loose or limp. *'அகவையாகியும் உடல் கட்டுக் குலையவில்லை'.* 2. *(கூந்தல்)* பிரிந்து அலைதல்; (of hair) get dishevelled. *'குலைந்த முடியும் அழுத கண்ணுமாக அவள் வந்து நின்றாள்'.*

**குலை** பெ. (n.) *(மரத்தில்)* காய்களின் தொகுப்பு; bunch of unripe fruits, cluster. *'தென்னங்குலை/வாழைக் குலை'.*

**குலைதள்ளுதல்** வி. (v.) *(வாழை காய்ப்பதன் அறிகுறியாக)* பூவுடன் கூடிய காம்பை வெளிப்படுத்துதல்; பாளை வெடித்துக் காய்த் தொகுதியாக மாறுதல்; (of trees such as coconut, palm, plantain, etc.,) put forth a bunch of fruits (as yield). *'வாழைமரம் ஒரு முறைதான் குலை தள்ளும்'.*

**குலை நடுக்கம்** பெ. (n.) *(வயிற்றில் இடுக்கண் உணரும்)* பீதியும் நடுக்கமும்; trepidation; terror. *'அந்த குண்டனை (ரௌடியைப்) பார்த்தாலே எல்லோருக்கும் குலை நடுக்கம்'.*

**குலைநடுங்குதல்** வி. (v.) அச்சத்தையும் நடுக்கத்தையும் உணர்தல்; be terrified; tremble. *'நடு இரவில் அந்தக் கூச்சலைக் கேட்டதும் எனக்குக் குலை நடுங்கிவிட்டது'.*

**குவடு** பெ. (n.) மார்பின் மையத்தில் உள்ள குழிவான பகுதி; depression (in the middle of the chest). *'இருமலுக்கு நெஞ்சுக் குவட்டில் சூடாக எண்ணெய் தடவலாம்'.*

**குவளை** பெ. (n.) *1.* விளிம்பும் பிடியும் இல்லாத கோப்பை; tumbler. *'குவளையில் தண்ணீர் கொடு'.* 2. பருங்கலம்; a large deep vessel with a wide mouth (used as a container). *'நெல் அவிக்கும் குவளை'.*

**குவிதல்** வி. (v.) *1.* அதிக அளவில் சேர்தல்; pile up; form in heaps; crowd. *'அரிசி மூட்டை மூட்டையாக வந்து*

*குவிந்தது'*. 2. குவியலாக ஆக்குதல்; put (things) in heaps. *'துணிகளைக் குவித்துப்போட்டு விற்பனை செய்தார்கள்'*.

**குவிப்பு** பெ. (n.) சேர்ந்து ஒன்றாகிக் காணும் நிலை; piling up; concentration (of troops). *'எல்லைப் பகுதியில் படைக் குவிப்பு'*.

**குவியல்** பெ. (n.) ஒன்றன் மீது ஒன்றாக ஓர் இடத்தில் குவிக்கப்பட்டுள்ள பொருள்களின் தொகுப்பு; pile; heap. *'சட்டைகளைக் குவியலாகப் போட்டு விற்றுக் கொண்டிருந் தார்கள்'*.

**குவியாடி** பெ. (n.) இரு புறமும் சற்றுக் குவிந்து அரைக் கோள வடிவத்தில் இருக்கும் ஆடி; convex mirror or lens.

**குழகுழப்பு** பெ. (n.) பிசுபிசுப்போடு குழைவாக இருக்கும் தன்மை; stickly and slimy nature. *'விரலில் பசையின் குழகுழப்பு'* போகவில்லை.

**குழந்தை** பெ. (n.) *1.* தாயின் வயிற்றில் இருக்கும் அல்லது அண்மையில் பிறந்த பிள்ளை; child baby. *'வயிற்றில் குழந்தை உதைக்கிறது என்றாள் என் மனைவி'*. 2. இணையரின் (ஒரு தம்பதியினரின்) மகன் அல்லது மகள்; மரபுரிமையர்; offspring; child. *'உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?'*.

**குழந்தைக்காரி** பெ. (n.) *(தாய்ப்பால் குடிக்கும்)* கைக் குழந்தையை உடையவள்; mother having a suckling baby. *'குழந்தைக்காரி பட்டினியாக இருக்கக் கூடாது'*.

**குழந்தைக் குட்டி** பெ. (n.) பிள்ளைகள்; children. *'திருமணமாகிக் குழந்தை குட்டி பெற்றுப் பெரிய குடும்பம் ஆகிவிட்டான்'*.

**குழந்தைத்தனம்** பெ. (n.) *1.* கள்ளங் கபடம் இல்லாத தன்மை; வாழ்க்கை பட்டறிவு இல்லாத வெகுளித்தனம்; childishness; innocence. *'அந்தப் பையனின் குழந்தைத்தனமான முகம் இன்னும் எனக்கு மறக்க வில்லை'*. 2. சிறுபிள்ளைத்தனம்; childishness; babyishness. *'இதுபோலக் குழந்தைத் தனமான கேள்விகளையெல்லாம் இங்கே கேட்கக் கூடாது என்று அவர் என்னைக் கடிந்து கொண்டார்'*.

**குழந்தைத் திருமணம்** பெ. (n.) மண அகவை நிரம்பாத சிறுவனுக்கும் சிறுமிக்கும் நடத்தி வைக்கப்படும் திருமணம்; marriage between prepubescent boy and girl child marriage. *'அந்தக் காலத்தில் பரவலாகக் காணப் பட்ட குழந்தைத் திருமணத்தைப் பற்றிய நாவல் இது'*.

**குழந்தைத் தொழிலாளர்** பெ. (n.) பதினான்கு அகவைக்கு உட்பட்ட தொழிலாளர்; child labour. *'குழந்தை தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துவது சட்டப்படி குற்றம்'*.

**குழந்தை நல மருத்துவம்** பெ. (n.) குழந்தைகளின் நலனைக் குறித்த சிறப்பு மருத்துவப் பிரிவு; paediatrics.

**குழப்படி** பெ. (n.) குழப்பமாக இருக்கும் நிலை; குழப்பம்; confused state; muddle. *'நிருவாகத்தில் ஒரே குழப்படி'*.

**குழப்பம்** பெ. (n.) *1.* தெளிவற்ற நிலை; turmoil; confusion *'சிப்பாய்க் கல கத்தை ஒட்டி நாட்டில் பெருங் குழப் பங்கள் தோன்றின'*. 2. *(சிந்தனையில்)* தெளிவின்மை; want of clarity. *'என் கட்டுரையில் எந்தக் குழப்பமும் இல்லை'*. 3. கலவரமான சூழல்; turbulence; confusion. *'நீதி மன்றத்தில் குழப்பம் ஏற்படுத்தியவர் தண்டிக்கப் பட்டார்'*.

**குழப்புதல்** வி. (v.) *1.* தெளிவற்ற நிலைக்கு *(ஒருவரை)* உள்ளாக்குதல்; தெளிவு

இல்லாதபடி ஆக்குதல்; confuse (a person); make a mess of (something) muddle. *'ஒரு இயல்பான மாந்தனைக் குழப்புகிற வகையில் ஒரே மருந்து பல பெயர்களில் விற்பனை யாகிறது'. 2. மாவு, வண்ணம் போன்ற பொருள்களை நீர் முதலிய வற்றோடு சேர்ந்து) குழைத்தல்;* mix (with water, etc., into thin consistency). *'நீரில் களிமண்ணை குழப்பிச் சுவரில் பூசிக் கொண்டிருந்தான்'.*

**குழம்புதல்** வி. (v.) *தெளிவற்ற நிலைக்கு உள்ளாதல்; முடிவுக்கு வர முடியாமல் தடுமாறுதல்;* be confused, be indecisive; be perplexed. *'இருவரும் ஒரே மாதிரி இருந்ததால் யார் அண்ணன் யார் தம்பி என்று தெரியாமல் குழம்பிப் போனேன்'.*

**குழம்பு** பெ. (n.) *1. காய்கறியோடு காரப் பொருள்களை அரைத்து வேக வைத்த அரை நீர்மமாக உருவாக்கும் உணவுப் பண்டம்;* thickened sauce or a kind of broth (for mixing with cooked rice). *'இன்றைக்குப் புளிக் குழம்பு சுவையாக இருக்கிறது'. 2. பசை போன்று அரை நீர்ம நிலை;* molten state. *3. (சந்தனம், வண்ணம் போன்றவற்றின்) கரைசல்;* paste (of sandal) (of colours) mix.

**குழல்** பெ. (n.) *உள்ளீடு இல்லாததாகவும் அளவான நீளமுடையதாகவும் வளையாததாகவும் செய்யப்படும் பொருள்;* any inflexible tube like object of a standard length . *'இந்த துப்பாக்கியில் இரண்டு குழல்கள் இருக்கும்'. 2. தசையாலான, குழாய் போன்ற உள்ளூறுப்பு;* tube; duct; (blood) vessel. *'வாயின் பின்புறத்தி லிருந்து தொண்டை வழியாக மூச்சுப் பைக்கு ஒரு குழல் செல்கிறது'. 3. (பெண்ணின்) முடி;* (woman's long) hair. *'பூவை எடுத்துத் தன் குழலில் செருகிக் கொண்டாள்'.*

**குழல் விளக்கு** பெ. (n.) *நீண்ட குழாய் போன்ற அமைப்புடைய, வெண்ணிற ஒளி தரும் மின் விளக்கு;* (tube) light. *'பெரும்பாலான வீடுகளில் குழல் விளக்குகளையே அதிகம் பயன்படுத்து கிறார்கள்'.*

**குழவி** பெ. (n.) *1. அரைப்பதற்குப் பயன்படுத்தப்படும் நீள் உருண்டை வடிவக் கல்;* stone roller of ammi etc., *'மாவு ஆட்டி முடித்தப் பிறகு குழவியைக் கழுவி வை'. 2.* குழந்தை; child. *3. இரு பக்கமும் கைப்பிடி உடைய நீள் உருண்டை வடிவ மரக் கட்டை;* rolling pin (for rolling out dought to make puri, chappathi, etc.,).

**குழறல்** பெ. (n.) *தெளிவில்லாத பேச்சு;* mumblings. *'அடிபட்டுக் கிடந்தவனின் குழறலிலிருந்து ஒன்றும் புரிந்து கொள்ள முடியவில்லை'.*

**குழறுதல்** வி. (v.) *தெளிவில்லாமல் பேசுதல்;* talk inarticulately; stammer out; falter. *'பக்கவாதம் வந்த பிறகு அவருக்கு நாக்கு குழறுகிறது'.*

**குழாம்** பெ. (n.) *1. ஒரு சிலர் அடங்கிய கூட்டம்;* group; gathering. *'கல்லூரிப் பெண்கள் குழாம்'. 2. குழு; அமைப்பு;* circle; guild. *'எழுத்தாளர் குழாம்/அறிஞர் குழாம்'.*

**குழாய்** பெ. (n.) *நீர் வருவதற்கான கருவி (வீடு முதலியவற்றில்);* (water) pipe. *'குழாயைத் திருகியதும் தண்ணீர் கொட்டும்'.*

**குழாய்க்கிணறு** பெ. (n.) *நிலத்தில் ஆழமாகத் துளை போட்டு (தண்ணீரை வெளியே கொண்டு வருவதற்காக) இறக்கப்பட்ட குழாய்;* tube - well.

**குழாய்ப்புட்டு** பெ. (n.) *குழாய் போன்ற நீண்ட கழுத்துடைய ஏனத்தில் அரிசி மாவை அடைத்து ஆவியில் வேகவைத்துச் செய்யும் புட்டு;* dish prepared by filling a long tube like structure with rice flour and steaming it.

**குழாய் மாத்திரை** பெ. (n.) *இயற்கையான புரதத்தினால் செய்யப்பட்ட சிறு உறையில் மருந்து அடைக்கப்பட்ட மாத்திரை;* capsule.

**குழாயடிச் சண்டை** பெ. (n.) *(தரம் தாழ்ந்து) மிக மோசமான வகையில் நடுத்தெருவில் நடக்கும் சண்டை;* demeaning quarrel. *'இது அலுவலகம் என்ற நினைவே இல்லாமல் இப்படிக் குழாயடிச் சண்டைபோல் போட்டுக் கொள்கிறீர்களே'.*

**குழிதல்** வி. (v.) *1. குழிவு ஏற்படுதல்;* form a hollow; form dimple. *'கன்னம் குழியச் சிரித்தாள்'. 2. குழிவு உண்டாகும்படி செய்தல்;* make a hollow; cup (one's hands). *'சாதத்தைக் குழித்து அதில் குழம்பு ஊற்றிக் கொண்டாள்'. 3. நிலத்தைத் தோண்டி மண்ணை எடுப்பதால் ஏற்படுத்தப்பட்ட பள்ளம்;* pit. *'வாழைக்கன்று நடுவ தற்குக் கொல்லையில் குழி தோண்டி யாயிற்று'.*

**குழித்தறி** பெ. (n.) *குழியில் கால் மிதிகளைக் கண்ட தறி;* loom having treadles in a pit.

**குழிபறிதல்** வி. (v.) *பள்ளம் ஏற்படுதல்;* develop potholes. *'மாடுகள் நடந்து நடந்து களத்துமேடு குழிபறிந்து விட்டது'.*

**குழிபறித்தல்** வி. (v.) *துன்பம் விளைவிக்க மறைமுகமாகச் செயல்படுதல்; வஞ்சனை செய்தல்;* conspire (to harm); undermine. *'கூட இருந்தே குழி பறித்து விட்டான்'.*

**குழியாடி** பெ. (n.) *இருபுறமும் சற்றுக் குழிந்து அரைக்கோள வடிவத்தில் இருக்கும் ஆடி;* concave mirror or lens.

**குழிவு** பெ. (n.) *உள்நோக்கிச் செல்லும் பள்ளம்;* hollow; depression.

**குழு** பெ. (n.) *ஒரு குறிப்பிட்ட பணிக்காக அல்லது நோக்கத்துக்காகப் பலர் சேர்ந்து ஒன்றாக இயங்கும் அமைப்பு;* committee; commission. *'விசாரணைக் குழு உறுப்பினர்கள்'.*

**குழுமம்** பெ. (n.) *ஒருவரின் அல்லது ஒரு குழுவின் நிர்வாகப் பொறுப்பில் செயல்படும் பல நிறுவனங்களின் தொகுப்பு;* group (of companies).

**குழூஉக்குறி** பெ. (n.) *(இலக்.) ஒரு குழுவினருக்குள் குறியீடாக வழங்கும் சொற்கள்;* jargon; argot.

**குழைதல்** வி. (v.) *(அரிசி முதலியவை அதிகமாக வெந்துவிடுவதால்) குழகுழப்புத் தன்மை ஏற்படுதல்;* (of rice) be overcooked; become sticky or pulpy by being over cooked. *'சாதம் குழைந்து களி மாதிரி ஆகிவிட்டது'.*

**குழைவு** பெ. (n.) *நெகிழ்வு;* tenderness or softness (in tone; speech). *'பரிவும் குழைவும் கலந்து குரலில் என்ன வேண்டும்? என்று கேட்டார்'.*

**குள்ளநரி** பெ. (n.) *1. சாம்பல் நிற விலங்கு;* fox. *2. திறமையாக ஏமாற்றும் ஆள்;* cunning fox; trickster; cheat. *'அவனுடன் பார்த்துப் பழகு; அவன் சரியான குள்ள நரி'.*

**குள்ளம்** பெ. (n.) *குறைந்த உயரம்; உயரக் குறைவு;* being shorter then average. *'என் மகன் குள்ளமே தவிர பருமன் இல்லை'.*

**குளத்துக் கரம்பை** பெ. (n.) *குளத்திலிருந்து எடுக்கப்பட்டு வயலுக்கு உரமாக இடப்படும் தூர்மண்;* pond silt.

**குளம்** பெ. (n.) *ஏரியைவிடச் சிறிய நீர்நிலை;* pond; (in India) tank. *'கோயிலுக்குச் சொந்தமான குளம் தூய்மை செய்யப்படுகிறது'.*

**குளம்பு** பெ. (n.) *விலங்குகளின் காலின் அடிப்பகுதியில் கடினத் தன்மையுடன் உள்ள பகுதி;* hoof (of certain animals).

*'மாடு, குதிரை போன்றவற்றின் குளம்புகளில் குளம்பணி (லாடம்) அடிப்பார்கள்'.*

**குளறுதல்** வி. (v.) கூக்குரலிடுதல், உளறுதல்; wail. *'ஏன் இப்படி தூக்கத்தில் குளறுகிறாய்?'.*

**குளறுபடி** பெ. (n.) *1. குழப்பம்; தாறுமாறானது;* confusion, disorder, muddle. *'நிர்வாகத்தின் குளறுபடி களைச் சரி செய்யவே சில மாதங்கள் ஆகும்'. 2. முறைகேடு;* irregularity. *'சங்கத் தேர்தலில் பல குளறுபடிகள் நடந்துள்ளன'.*

**குளித்தல்** வி. (v.) *1. நீராடுதல்;* take bath. *2. (விலங்குகள், பறவைகள்) நீரில் அமிழ்ந்து கிடத்தல்;* wallow in the water, splash the water. *'அந்தக் காட்டாற்றில் யானைகள் கூட்டமாகக் குளித்துக் கொண்டிருந்தன'. 3. மாத விடாய் வந்து நீராடுதல்;* have one's period. *'திருமணமான என் மகள் குளித்து இரண்டு மாதம் ஆகிறது. மூழ்காமல் இருக்கிறாள்'.*

**குளிக்காமலிருத்தல்** வி. (v.) *கருவுற் றிருத்தல்; கருவுற்றிருத்தல்;* be pregnant. *'உன் மகள் குளிக்காம லிருக்கிறாளா? எத்தனை மாதம்'.*

**குளிகை** பெ. (n.) *அரைத்து உருண்டை யாகத் தரப்படும் மருந்து;* (siddha) medicine in the form of pills.

**குளிப்பாட்டுதல்** வி. (v.) *1. நீர் ஊற்றிக் கழுவிவிடுதல்;* bathe (something) wash (a cow, etc.,). *'குழந்தையைக் குளிப்பாட்டிக் கண்ணுக்கு மை யிட்டாள்'. 2. (பிணத்தை) நீரால் கழுவுதல்;* wash (the corpse as a part of funeral rite). *'பிணத்தைக் குளிப்பாட்டி யாகி விட்டதா?'.*

**குளியல்** பெ. (n.) *குளிக்கும் செயல்;* bath; bathing. *'அதிகாலைக் குளியல் உடலுக்கு இதமளிப்பதாக இருந்தது'.*

**குளியல் அறை** பெ. (n.) *குளிப்பதற்குப் பயன்படுத்தும் அறை;* room for taking bath.

**குளிர்தல்** வி. (v.) *(ஒரு பொருள், திரவம்). 1. இயல்பு வெப்ப நிலைக்கும் குறைவான நிலையை அடைதல்;* become cold. *'மலைப் பகுதிகளில் மாலையானால் குளிர ஆரம்பித்து விடும்'. 2. குளிரை உடல் உணர்தல்;* feel cold, feel a chill. *'கதவைச் சாத்து. எனக்குக் குளிர்கிறது'. 3. மகிழ்ச்சி யடைதல்; சுகம் என்று உணர்தல்;* feel satisfied or happy; be pleased. *'அவரின் சிறப்பான வரவேற்பில் குளிர்ந்து போனார்'.*

**குளிர்** பெ. (n.) *1. வெப்பமே இல்லாத அல்லது வெப்பம் மிகக் குறைவாக இருக்கும் நிலை;* coldness. *'ஊட்டி ஒரு குளிர்ப்பகுதி'. 2. உடல் வெப்பத்தை விடக் காற்று மண்டலத்தின் வெப்பம் குறைவாக இருக்கும் நிலை;* cold; chillness. *'குளிரால் உடல் நடுங்கியது'.*

**குளிர்காய்தல்** வி. (v.) *1. உடம்பைச் சூடுபடுத்திக் கொள்ளுதல்;* warm oneself (by the fireside). *'பனை ஓலைகளை எரித்துக் குளிர் காய்ந்து கொண்டிருந்தோம்'. 2. ஊதியம் தேடுதல்;* take advantage. *'பங்காளிகள் சண்டை போட்டுக் கொண்டால் எதிரி அதில் குளிர் காய்வான்'.*

**குளிர்காய்ச்சல்** பெ. (n.) *உடலை நடுங்க வைக்கும் காய்ச்சல்;* fever with shivering.

**குளிர்காலம்** பெ. (n.) *(கார்த்திகை, மார்கழி, தை ஆகிய மாதங்களை உள்ளடக்கிய) குளிர் அதிகம் உள்ள பருவம்;* cold season (mid - november to mid - February).

**குளிர்ச்சி** பெ. (n.) *1. வெப்பம் குறைந்த இதமான நிலை;* coolness. *'கோடை யில் கூரை வீடு குளிர்ச்சியாக இருக்கும்'. 2. சுகம்; இதம்;* pleasantness. *'இயற்கைக் காட்சிகளைப்*

*பார்க்கும் போது ஏற்படும் குளிர்ச்சியே இன்பமளிக்கும்'.* 3. வெப்பம் குறைந்த நிலை; the condition of being cold. *'மோர் உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும்'.*

**குளிர்தல்** பெ. (n.) மிகக் குறைந்த வெப்ப நிலைக்கு மாறும் நிகழ்வு; condensation.

**குளிர்ந்த** பெ. (n.) குளிர்ச்சியான; cool. *'குளிர்ந்த காற்று/குளிர்ந்த பார்வை/குளிர்ந்த காட்சி'.*

**குளிர்பதனக் கிடங்கு** பெ. (n.) உறை குளிர் நிலையில் அமைக்கப்பட்ட பெரிய அறை அல்லது கட்டடம்; cold storage.

**குளிர்பதனப்பெட்டி** பெ. (n.) மிகக் குறைந்த வெப்பநிலையில் உணவு, காய்கறி, குளிர்குடிப்பு போன்றவற்றை வைத்துக் கெடாமல் பாதுகாக்க உதவும் பெட்டி போன்ற மின்பொறி; refrigerator, deep-freeze, freezer.

**குளிர்பதனம்** பெ. (n.) *(வீடு, பேருந்து முதலியவற்றின் உட்பகுதியை)* குளிர்ச்சியாக இருக்கச் செய்வதற்கு உதவும் மின்பொறி; air - conditioner.

**குளிர்பானம்** பெ. (n.) *(புட்டில் போன்றவற்றில் அடைத்து விற்கப்படும்)* கரிவளி சேர்க்கப்பட்ட குடிப்பு வகை; (bottled) carbonated soft drink kept in cooler.

**குளிர்விட்டுப்போதல்** வி. (v.) *(பயம்)* அச்சம் இல்லாமல் போதல்; no longer fear authority. *'அவனுக்குக் குளிர் விட்டுப் போயிற்று; இனிமேல் நம்மை மதிக்க மாட்டான்'.*

**குளிர்வித்தல்** வி. (v.) குறைந்த வெப்ப நிலைக்குக் கொண்டு வருதல்; cool (something to room temperature). *'உருக்கப்பட்ட இரும்புக் குழம்பு குளிர்விக்கப்படும்போது திடப் பொருளாக மாறுகிறது'.*

**குளிரூட்டும் நிலையம்** பெ. (n.) பாலைப் பதனப்படுத்திச் சேமித்து வைப்பதற்காகக் குளிர்ச்சியடையச் செய்யும் நிலையம்; chilling plant (for preserving milk).

**குளுகுளு** பெ.அ. (adj.) *(குளிரூட்டக் கருவி பொருத்தப்பட்டு)* குளிர்ச்சியாக இருக்கும்; air-conditioned. *'குளுகுளு அறை/குளுகுளு பேருந்து/குளுகுளு திரையரங்கம்'.*

**குளுகுளு என்று** வி.அ. (adv.) *(இதமான)* குளிர்ச்சியாக; (pleasantly) cool. *'காற்று குறுகுளுவென்று வீசுகிறது'.*

**குளுமை** பெ. (n.) 1. குளிர்ச்சி உடையது; coolness. *'காற்று குளுமையாக வீசியது'.* 2. *(கண், காது, மனம் முதலியவற்றுக்கு)* இதமளிப்பது; pleasantness (to the senses). *'குளுமையான சிரிப்போடு வரவேற்றாள்'.*

**குற்ற உணர்வு** பெ. (n.) குற்றம் செய்ததை உணர்ந்த மனநிலை; (feeling of) guilt; guilty conscience. *'குற்ற உணர்வு மனத்தில் முள்ளாகத் தைத்தது'.*

**குற்றக் குறிப்பாணை** பெ. (n.) ஒரு பணியாளர் செய்ததாகக் கருதப்படும் குற்றங்களைப் பட்டியலிட்டு அவர் தனது விடையைத் தெரிவிக்க வாய்ப்பு அளிக்கும் நோக்கில் மேலதிகாரியால் கேள்வி கேட்டுத் தரப்படும் ஆவணம்; charge memo.

**குற்றச்சாட்டு** பெ. (n.) 1. ஒருவர் மீது சுமத்தும் குற்றம்; accusation; allegation. *'உன்னுடைய குற்றச்சாட்டுகளுக்கு நான் பதில் சொல்ல வேண்டிய தேவை இல்லை'.*

**குற்றப் பத்திரிகை** பெ. (n.) புலனாய்வு முடிந்தவுடன் தொகுக்கப்பட்ட கூற்றுச்சான்று, துணைத்தரவுகளுடன் நீதிமன்றத்தில் ஆராய்வு அதிகாரி ஒப்படைக்கும் அறிக்கை; charge sheet;

police report. *'பேருந்தை எரித்தது தொடர்பாக நான்கு பேர் மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட் டிருக்கிறது'.*

**குற்றப்பிரிவு** பெ. (n.) *சில குற்றங்களின் தன்மையைக் கருதி சிறப்புப் புலனாய்வு செய்வதற்காகத் தனியாக அமைக்கப்பட்டிருக்கும், காவல் துறையின் பிரிவு;* crime branch (of the police force).

**குற்றம்** பெ. (n.) *1. தவறு; பிழை;* (moral) blemish; fault. *'பெற்றோரைப் பழித்த குற்றத்திற்கு ஆளாகி விட்டேன்'. 2. சட்டப்படியோ குமுக வழக்குப் படியோ தண்டிக்கத் தகுந்ததாகக் கருதப்படும் செயல்;* crime offence. *' நீ செய்த குற்றத்தை ஒப்புக்கொள்'.*

**குற்றம் சாட்டுதல்** வி. (v.) *1. குற்றத்தை ஒருவர் செய்ததாகக் காவல்துறை அவரைச் சிறைக்காவல் செய்யும் போது அவரிடம் அறிவித்தல்;* charge; accuse. *'தொடரியைக் கவிழ்க்க முயன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சிலர் கைது செய்யப்பட்டுள்ளனர்'. 2. தவறுக்கு ஒருவரைப் பொறுப் பேற்கச் செய்தல்;* find fault with, blame. *'நடந்த தவறுக்கு என்னைக் குற்றம் சாட்டுவது போலப் பேசினார்'.*

**குற்றம்சொல்தல்** வி. (v.) *விரும்பத் தகாதது நடந்ததற்கு ஒருவரைப் பொறுப்பாக்குதல்; குறை கூறுதல்;* blame. *'நீயே சரி பார்த்து விடு; பிறகு என்னைக் குற்றம் சொல்லாதே!'.*

**குற்றம் பாராட்டுதல்** வி. (v.) *குற்றம் சொல்லுதல்;* keep finding fault with someone; carp at . *'தகுந்த காரணம் இல்லாமல் ஒருவரைக் குற்றம் சொல்லக்கூடாது'.*

**குற்றவாளி** பெ. (n.) *1. உசாவலுக்குப் (விசாரணை) பிறகு நயன்மன்றத்தால் குற்றம் மெய்ப்பிக்கப்பட்ட ஆள்;* a person found guilty by a court of law; convict; offender; delinquent. *'அவன் ஒரு கொலைக் குற்றவாளி'. 2. தவறு செய்தவர்;* wrongdoer; culprit. *'அப்பா பையில் இருந்த பணத்தைக் காண வில்லை என்பதற்காக என்னைக் குற்றவாளி ஆக்காதீர்கள்'.*

**குற்றவியல்** பெ. (n.) *1. குற்றம் பற்றியும் குற்றவாளிகள் பற்றியும் அறிவியல் அடிப்படையில் விளக்கும் துறை;* criminology. *2. குற்றம் சார்ந்த நடவடிக்கை தொடர்பானது;* anything relating to crimes (used mostly as an adjective). *'குற்றவியல் வழக்கு / குற்றவியல் சட்டம்'.*

**குற்றுயிரும் குலையுயிருமாக** வி.அ. (adj.) *உடல் தாக்கமுற்று உயிர் போகிற நிலை;* quivering on the verge of death. *'கத்தியால் குத்தப்பட்டவன் குற்றுயிரும் குலை யுயிருமாகக் கிடக்கிறான்'.*

**குற்றேவேல்** பெ. (n.) *சின்னச்சின்ன வேலைகள்; பணிவிடை;* menial task. *'குருவுக்குக் குற்றவேல் செய்வதில் அவர் மகிழ்ச்சியுற்றார்'.*

**குறட்டுதல்** வி. (v.) *இழுத்தல்;* pull.

**குறட்டை** பெ. (n.) *(தூக்கத்தில்) மூச்சு விடுகிற போது (வாய் வழியாக) வெளிப்படுகிற ஒலி;* snore. *'அவன் குறட்டை விட்டால் பக்கத்து வீட்டுக்குக் கூடக் கேட்கும்'.*

**குறடு** பெ. (n.) *1. திண்ணையின் கீழ்ப்பகுதியை ஒட்டித் தரைக்கு மேல் போட்டிருக்கும் தளம்;* flooring adjacent to. *'திண்ணை வீட்டிற்கு வந்தவர்களைக் குறட்டிலேயே நிற்க வைத்துப் பேசிக் கொண்டிருக் கிறாயே!'. 2. படிகள் முடிவடையும் அல்லது தொடங்கும் சமதளம்;* landing. *'மாடிப்படிக் குறட்டில் ஒரே குப்பையாக இருந்தது'.*

**குறண்டுதல்** வி. (v.) *1. (மரம், செடி, கொடி, பூ போன்றவை) வாடுதல்;* (of plants, flower, etc.,) fade; wither. *'மழை இல்லாமல் மரங்கள் குறண்டி விட்டன'. 2. (தசைப் பகுதி அல்லது விரல்கள்) உள்ளிழுக்கப்படுதல்; இறுகுதல்;* get a cramp.

**குறத்தி** பெ. (n.) *திணைபுலம் காத்தல். வேட்டையாடல். தேனெடுத்தல் முதலியவற்றைத் தொழிலாகக் கொண்ட குறவர் இனத்தைச் சேர்ந்த பெண்;* woman of the kurava community or tribe.

**குறவர்** பெ. (n.) *தேனெடுத்தல், விலங்குகளை, பறவைகளை வேட்டையாடுதல் முதலியவற்றைத் தொழிலாகக் கொண்ட குறிஞ்சி நில மக்கள்;* a nomadic community (known by the name of kurava).

**குறவை** பெ. (n.) *பழுப்பு நிற மீன்;* snake head.

**குறளிப்பிசாசு** பெ. (n.) *மாய வேடிக்கை செய்யக் கூடியதாகக் கூறப்படும் பேய்;* dwarf-demon capable of doing magical acts.

**குறளிவித்தை** பெ. (n.) *மந்திரத்தால் செய்வதாகக் கூறப்படும் நுண்ணுத்தி வேடிக்கை;* legerdemain; magical tricks.

**குறிக்கோள்** பெ. (n.) *அடைய நினைக்கும் குறி; நோக்கம்;* goal; ideal; target; aim. *'குறிக்கோள் இல்லாத வாழ்க்கை அர்த்தமற்றது என்று ஆசிரியர் கூறினார்'.*

**குறிகேள்தல்** வி. (v.) *குறி சொல்பவரிடம் (ஒன்றைப் பற்றி) கேட்டு அறிதல்;* consult a diviner. *'வீட்டிலிருந்து பணத்தை யார் எடுத்திருப்பார்கள் என்று குறி கேட்கப் போகிறேன்'.*

**குறிசொல்தல்** வி. (v.) *எதிர்காலத்தைப் பற்றி அல்லது காணாமல் போன பொருளைப் பற்றி ஏதேனும் ஓர் அடையாளத்தின் அடிப்படையில் கூறுதல்;* divine. *'காளி கோயில் பூசாரி குறி சொல்வாராமே!'.*

**குறிஞ்சி** பெ. (n.) *பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நீல நிறப் பூப்பூக்கும் (மலைகளில் மட்டும் காணப்படும்) சிறு குத்துச் செடி;* strobilanthus kunthianus. *'நல்ல திரைப்படங்கள் குறிஞ்சி பூப்பது போல எப்போதாவதுதான் வருகின்றன'. 2. மலையும் மலையை ஒட்டிய பகுதியும்;* mountin and the place adjacent to it. Mountainous region; hilly tract.

**குறித்தல்** வி. (v.) *1. சுருக்கமாக எழுதுதல்;* note down; jot down. *'அவர் சொன்னதையெல்லாம் குறித்துக் கொண்டாயா?'. 2. பதிதல்; பதிவு செய்தல்;* mark; note. *'கேள்விக்கான பதில்களை ஆசிரியர் புத்தகத்தில் குறித்துக் கொடுத்தார்'. 3. மணவுறுதி; முடிவுபடுத்தல்;* fix (a date); appoint (an hour). *'கல்யாணத் தேதியும் குறித்தாகிவிட்டது'.*

**குறிப்பாக** வி.அ. (adv.) *முகாமையாக; சிறப்பாக;* particularly; (more) specifically; especially. *'நாட்டு மக்களின், குறிப்பாகச் சிற்றூர் மக்களின், உடல் நலத்தைக் கருத்தில் கொண்டு இந்தத் திட்டம் உருவாக்கப் பட்டிருக்கிறது'.*

**குறிப்பிட்ட** பெ.அ. (adj.) *1. பிரித்துச் சொல்லப்பட்ட;* specified. *'குறிப் பிட்ட சில துறைகளுக்கு மட்டுமே இந்த ஆணை பொருந்தும்'. 2. முடிவு செய்யப்பட்ட; உரிய;* oppointed. *'குறிப்பிட்ட நேரத்தில்தான் மருத்து வரை நீங்கள் பார்க்க முடியும்'.*

**குறிப்பிடுதல்** வி. (v.) *1. குறிப்பாக அல்லது முகாமையாகச் சொல்லுதல்; சுட்டிக்காட்டுதல்;* make a specific mention of; indicate. *'தற்கால*

*எழுத்தாளர்களில் யார் சிறந்தவர் என்று நீங்கள் குறிப்பிடுவீர்கள்?'*. 2. தெரிவித்தல்; சொல்லுதல்; mention; point out. *'நீங்கள் வெளியூர் செல்ல இருப்பதை ஏன் உங்கள் கடிதத்தில் குறிப்பிட வில்லை?'*.

**குறிப்பு** பெ. (n.) *1. சிறு விளக்கம்; சுருக்கம்;* (brief) note; sketch. *'வகுப்பில் ஆசிரியர் கூறிய பாடக் குறிப்புகள் தேர்வுக்குப் பயன்படும்'*. 2. *சுருக்க மான சான்று;* note (s). *'பண்டைத் தமிழகம் பற்றி அறிய வெளிநாட்டார் எழுதிய சில குறிப்புகள் பயன்படும்'*.

**குறிப்பெடுத்தல்** வி. (v.) *(பேச்சு, பாடம், தருக்கம் போன்றவற்றை) தொகுத்து எழுதுதல்; முகாமையாகச் செய்தி களைச் சுருக்கமாக எழுதுதல்;* take notes; take down; jot down. *'முதலமைச் சரின் பேச்சைப் பத்திரிகை நிருபர்கள் குறிப் பெடுத்துக் கொண்டிருந்தனர்'*.

**குறிப்பேடு** பெ. (n.) *1. அன்றாட நிகழ்ச்சிகள், பாடங்கள், வரவு செலவுகள் முதலியவற்றைக் குறித்து வைத்துக் கொள்ளும் புத்தகம்;* diary; note book; ledger. *'மாணவர் குறிப்பேடு'*. 2. ஒன்றைக் குறித்த சட்ட திட்டம், நெறிமுறை முதலியவை அடங்கிய நூல்; hand book (of rules). *'சாலைப் பாதுகாப்புக் குறிப்பேடு'*.

**குறிபார்த்தல்** வி. (v.) குறி வைத்தல்; take aim (in shooting, etc.,). *'மரத்தில் தொங்கும் மாங்காயைக் குறி பார்த்துக் கல்லை எறிந்தான்'*.

**குறியாக இருத்தல்** வி. (v.) *மிகுந்த கருத்துடன் எச்சூழலிலும் இலக்கை அடைவதில் குறியாக இருத்தல்;* be intent on; be keen on. *'பணம் சேர்த்து விட வேண்டும் என்பதிலேயே அவன் குறியாக இருந்தான்'*.

**குறியீட்டெண்** பெ. (n.) *பொருள்களின் விலை, வாழ்க்கைத் தகுதி முதலிய வற்றின் போக்கில் ஏற்படும் மாற்றங் களை ஒப்பிட்டுப் பார்ப்பதற்காகப் பயன்படுத்தப்படும் அடிப்படை எண்;* index. *'பங்குச் சந்தை குறி யீட்டெண்'*.

**குறியீடு** பெ. (n.) *1. அடையாளம்; சின்னம்;* symbol. *'சிவப்புக் கொடி பேரிடரின் குறியீடாகும்'*. 2. ஒரு கருத்துக்குப் பதிலாக வழங்கும் குறி; sign (as a representation of a concept). *'கணிதத்தில் + என்னும் குறியீடு கூட்டலைக் குறிக்கும்'*. 3. கருத்தை வெளியிடும் கருவி; notation; symbol; tool. *'மொழி என்ற குறியீடு'*.

**குறிவைத்தல்** வி. (v.) *1.* இலக்கை *உன்னிப்பாகப் பார்த்தல்;* aim at. *'மாங்காயைக் குறி வைத்து அடித்தான்'*. 2. *(ஒன்றை அல்லது ஒருவரை)* இலக்காக அல்லது நோக்கமாகக் கொள்ளுதல்; aim at; target something. *'அவர் மட்டுமல்ல, பலரும் அந்தப் பதவியின் மீது குறி வைத்துள்ளனர்'*.

**குறுக்கம்** பெ. (n.) *சுருக்கமாகக் குறிப்பிடப் பயன்படுத்தும் வடிவம்;* abbreviation. *'குடந்தை'* என்பது *'கும்பகோணம்'* என்பதன் குறுக்கம்.

**குறுக்களவு** பெ. (n.) எதிரெதிர் *முனை களுக்கு* இடைப்பட்ட தொலைவு; *(வட்டத்தில்)* விட்டம்; diagonal length; diameter.

**குறுக்கிடுதல்** வி. (v.) *1. (பேசும்போது)* இடை *மறித்தல்;* intervene (when one is talking); interrupt. *'நான் பேசும்போது குறுக்கிடாமல் கேளுங்கள்'*. 2. *(பிறர் செய்திகளில்)* தலையிடுதல்; interfere (in the affairs of others). *'இந்த உறழ்வில் நீங்கள் குறுக்கிட வேண்டாம்'*. 3. *எதிர்ப் படுதல்;* come across; encounter. *'கடைத்தெருவுக்குச் சென்றபோது வழியில் நண்பன் குறுக்கிட்டான்'*.

**குறுக்கீடு** பெ. (n.) *1. (பிறர் செயலுக்கு) தடையாக அமையும் தலையீடு;* interference. *'பணி அமர்த்தங்களில் யாருடைய குறுக்கீடும் இருக்கக் கூடாது'. 2. (பேச்சில்) இடை மறிப்பு;* interruption. *'செய்தியாளருடைய குறுக்கீடு அமைச்சருக்கு எரிச்சல் தந்தது'.*

**குறுக்கு** பெ. (n.) *1. முதுகு;* back. *'குறுக்கு வலி'. 2. இடுப்பு;* hip. *'காலையிலிருந்து ஓயாமல் வேலை செய்வதால் குறுக்கு வலிக்கிறது'.*

**குறுக்குதல்** வி. (v.) *1. குறைத்தல்;* shorten (something by cutting). *'இரண்டு அடி நீளம் இருந்த தடியை வெட்டி ஓர் அடியாகக் குறுக்கிவிட்டான்'. 2. (உடலை) சுருக்குதல்;* contract (the body as in entering a narrow door). *'உடலைக் குறுக்கிக் கொண்டுதான் வாசலில் நுழைய வேண்டியிருந்தது'. 3. தொலைவு அல்லது இடைவெளி;* transverseness; crosswise. *'குறுக்குச் சந்து வழியாகச் சென்றால் விரைவில் வீட்டை அடைந்துவிடலாம்'.*

**குறுக்குக் கேள்வி** பெ. (n.) *(ஒருவர் தந்த) பதிலை அல்லது விளக்கத்தை மறுத்துக் கேட்கும் கேள்வி;* cross - questioning. *'நான் பேசும்போது குறுக்குக் கேள்விகள் கேட்கக் கூடாது'.*

**குறுக்குச் சட்டம்** பெ. (n.) *இணையாக இருக்கும் இரண்டு சட்டங்களை இணைக்கும் சட்டம்;* brace (to connect a pair of rafters); cross piece.

**குறுக்குச்சால்** பெ. (n.) *முதலில் ஏர் உழுத திசைக்குக் (குறுக்கான) எதிர் திசையில் இரண்டாம் முறை ஏர் உழுதல்;* ploughing across the furrows left by the first ploughing.

**குறுக்குச்சால் ஓட்டுதல்** வி. (v.) *மேலும் சிக்கலுக்கு உள்ளாக்குதல்;* aggravate (the existing problem). *'நாங்களே எரிச்சலில் இருக்கிறோம். நீ வேறு குறுக்குச்சால் ஓட்டாதே'.*

**குறுக்குப்பாதை** பெ. (n.) *அதிக தொலைவு இல்லாத வழி; குறுக்கு வழி;* short cut (to reach a place).

**குறுக்கும் நெடுக்குமாக** வி.அ. (adv.) *ஒரே திசையில் இல்லாமல் மாறி மாறி; இங்குமங்குமாக;* up and down; here and there. *'அவர் கூடத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார்'.*

**குறுக்குவழி** பெ. (n.) *1. சுருக்கமான முறை; எளிய முறை;* short or simple method; a short cut. *'இந்தக் கணக்கைக் குறுக்கு வழியில் இரண்டே நிமிடத்தில் செய்துவிடலாம்'. 2. நேர்மை இல்லாத முறை;* dishonest means. *'நீ குறுக்கு வழியில் பணம் தேட ஆசைப்படுகிறாய்'.*

**குறுக்கு விசாரணை** பெ. (n.) *(முறை மன்றத்தில்) ஒருவர் ஏற்கனவே கொடுத்த சான்றின் அடிப் படையில் அவரை மறுதரப்பு வழக்கறிஞர் கேள்வி கேட்டு நடத்தும் உசாவுகை;* cross examination.

**குறுக்கு வெட்டுத் தோற்றம்** பெ. (n.) *ஒரு பொருளின் உள்ளமைப்பைக் காட்ட அதைக் குறுக்காக வெட்டியது போல் காட்டப்படுவது;* cross section. *'இது வீட்டின் குறுக்கு வெட்டுத் தோற்றம்'.*

**குறுக்கெழுத்துப் புதிர்** பெ. (n.) *தரப்பட்ட குறிப்புகளைக் கொண்டு கட்டங் களை நிரப்புவதன் மூலம் சொற் களைக் கண்டுபிடிக்கும் வகையில் அமைக்கப்படும் புதிர்;* crossword puzzle.

**குறுக்கே நிற்றல்** வி. (v.) *(ஒருவரின் செயலுக்கு) எதிர்ப்புத் தெரிவித்தல்; தடையாக இருத்தல்;* stand in someones

way; go counter to; oppose *'உன் திருமணத்திற்கு நாங்கள் குறுக்கே நிற்கவில்லை'.*

**குறுஞ்செய்தி** பெ. (n.) *கைபேசியின் மூலம் சுருக்கமாகச் செய்தி அனுப்பும் முறை;* short message sent through a mobil phone/short message service (abbreviated to SMS).

**குறுந்தகடு** பெ. (n.) *கணிப்பொறியில் பதிவு செய்யக்கூடிய மெல்லிய வட்ட வடிவ நெகிழித் தகடு;* compact disc, CD.

**குறுந்தொழில்** பெ. (n.) *மிக அதிக மூலதனமோ அல்லது பெரிய எந்திரங்களோ இல்லாமல் நடத்தப்படும் தொழில்;* medium scale industry. *'குறுந்தொழில் நிறுவனங்கள் பெருமளவில் வேலை வாய்ப்புகளை வழங்குகின்றன'.*

**குறுநாவல்** பெ. (n.) *அளவில் சிறுகதையை விட நீளமாகவும், நாவலை விடச் சிறியதாகவும் இருக்கும் கதை;* short novel; novelette.

**குறுநிலம்** பெ. (n.) *சிற்றரசனின் ஆளுகைக்கு உட்பட்ட சிறிய நிலப் பகுதி;* (in former times) land ruled by a feudatory. *'குறுநில மன்னன்'.*

**குறுநொய்** பெ. (n.) *ஒன்றிரண்டாக நொறுங்கியுள்ள தவசம்;* broken grain (esp. rice, used for cooking); grit like grain. *'அரிசி குறுநொய்/ கோதுமைக் குறுநொய்'.*

**குறும்படம்** பெ. (n.) *குறைந்த நேரமே ஓடக்கூடிய திரைப்படம்;* short film. *'குழந்தைத் தொழிலாளர்களைப் பற்றிய குறும்படம்'.*

**குறும்பர்** பெ. (n.) *வேட்டையாடுவதையும் உழவையும் தொழிலாகக் கொண்ட ஒரு பழங்குடியினர்;* kurumba (tribe).

**குறும்பன்** பெ. (n.) *குறும்பு செய்பவன்;* mischiefmaker; prankster.

**குறும்பி** பெ. (n.) *காதின் உள்ளே பழுப்பு நிறமுடைய மெழுகு போன்று காணப்படும் பொருள்;* ear wax.

**குறும்பு** பெ. (n.) *1. சிறு தொல்லை தரும் விளையாட்டுச் செயல்/மகிழ்விக்கும் விளையாட்டுத்தனம்;* playful act; prank/mischief. *'குறும்பு செய்யாமல் ஒழுங்காகப் படி'. 2. பண்பாடற்ற செயல்;* teasing. *'தனியாக நின்றிருந்த பெண்ணிடம் குறும்பு செய்த இளைஞரைக் காவல்துறையினர் தளை (கைது) செய்தனர்'.*

**குறும்புத்தனம்** பெ. (n.) *விளையாட்டுத் தனம் அல்லது கரடுமுரடானத்தனம்;* mischievousness; impishness. *'தோழி குறும்புத்தனமாக என் கன்னத்தில் கிள்ளினாள்'.*

**குறுமணல்** பெ. (n.) *சன்னமான மினுமினுப்புடன் இருக்கும் மென்மையான மணல்;* fine sand. *'காற்றடித்துத் தரையெங்கும் குறுமணல் படிந்திருந்தது'.*

**குறுவை** பெ. (n.) *வைகாசி வாக்கில் விதைத்து ஆவணி வாக்கில் அறுவடை செய்துவிடக் கூடியதாகச் சாகுபடி செய்யும் குறுகிய கால நெற்பயிர்;* the short term crop of paddy cultivated during May - August. *'தமிழ்நாட்டில் தஞ்சாவூரில் குறுவைப்பயிர் அதிகமாகப் பயிரிடப் படுகிறது'.*

**குறைதல்** வி. (v.) *1. எண்ணிக்கை, அளவு, தன்மை போன்றவை முன்பிருந்த நிலைக்கும் கீழே வருதல்;* come down (in number, in quantity); get reduced; diminish. *'மூல வளங்கள் குறைந்து கொண்டிருப்பது கவலை அளிக்கும் செய்தி'. 2. தணிதல்; கட்டுப்படுதல்;* come down (in intensity); subside; lessen. *('மாத்திரையால் தலைவலி) குறைந் திருக்கிறது'.*

**குறை** பெ. (n.) இருக்க வேண்டியது இல்லாத நிலை அல்லது வேண்டுவது கிடைக்காத நிலை; ஒன்று போதுமான அளவு இல்லாத நிலை; wants; needs; lack (of something). *'குழந்தை ஒரு குறையும் இல்லாமல் வளர்கிறது'.*

**குறைகாண்தல்** வி. (v.) குற்றம் கண்டுபிடித்தல்; find fault. *'அவரிடம் உள்ள சிக்கல் எல்லோரிடமும் குறை காண்பதுதான்'.*

**குறைச்சல்** பெ. (n.) *1.* ஏந்தின்மை *(வசதிக்குறை);* the wanting of something. *'இந்த வீட்டுக்கு என்ன குறைச்சல்'. 2.* குறைவு; being low. *'சம்பளம் குறைச்சல்'. 3.* குறைந்த பட்சம்; minimum. *'எவ்வளவு குறைச்சலாகப் பார்த்தாலும் இந்த வீடு இருபது இலக்கம் உரூபா பெறும்'.*

**குறைகூறுதல்** வி. (v.) குற்றம் சாட்டுதல்; find fault with; criticize; blame. *'எல்லாவற்றுக்கும் ஏன் ஆசிரியர்களையே குறை கூற வேண்டும்'.*

**குறைத்து** வி.அ. (adv.) குறைவாக; தாழ்வாக; மலிவாக; belittlingly. *'அவரைக் குறைத்துப் பேசாதே'. 'இந்த ஊரிலேயே அவருக்கு இருக்கும் செல்வாக்கு வேறு யாருக்கும் கிடையாது'.*

**குறைந்த** பெ.அ. (adj.) அதிகம் இல்லாத; போதுமானதாக இல்லாத; moderate; not high; low; insufficient. *'குறைந்த வாடகை/ குறைந்த சாமான்'.*

**குறைந்த அழுத்த மின்சாரம்** பெ. (n.) குறைந்த அளவு மின் அழுத்த ஆற்றலை அளிக்கும் மின்சாரம்; low tension electricity; LT power.

**குறைந்த அரத்த அழுத்தம்** பெ. (n.) உடலில் இயல்பாக இருக்க வேண்டிய குருதி அழுத்தத்தை விடக் குறைவாக இருக்கும் நிலை; low blood pressure.

**குறைந்தது** பெ. (n.) குறைந்த அளவு; minimum. *'இந்த வேலைக்குக் குறைந்தது நான்கு ஆண்டுகள் பட்டறிவு உள்ளவர் தேவை'.*

**குறைந்தபட்சம்** பெ. (n.) மேலும் குறைக்க முடியாத அளவு; minimum. *'குறைந்த அளவு ஆயிரம் பேராவது கல்யாணத்துக்கு வருவார்கள்'.*

**குறை நிறை** பெ. (n.) *(பெரும்பாலும் பன்மையில்)* நல்ல பிரிவுகளும் குறைபாடுகளும்; plus and minus (of something); merits and defects. *'ஒருவரோடு நெருங்கிப் பழகும் போதுதான் அவருடைய குறை நிறைகள் தெரிய வரும்'.*

**குறைப்பு** பெ. (n.) குறைத்தல்; reduction. *'போர்க்கருவி குறைப்பு செய்யுமாறு வல்லரசுகளை உலக நாடுகள் கேட்டுக்கொண்டன'.*

**குறைபடுதல்** வி. (v.) வருத்தத்தை வெளிப்படுத்துதல்; குறை கூறுதல்; complain. *'தன்னுடைய சிறுகதைகளை எந்தப் பத்திரிக்கையும் வெளியிடவில்லை என்று நண்பன் குறை பட்டுக் கொண்டான்'.*

**குறைபாடு** பெ. (n.) *(உடலில் சத்துகள்)* போதிய அளவு இல்லாமை; deficiency (of certain essential things for one's health). *'இரும்புச் சத்துக் குறை பாட்டைக் கீரை வகைகள் போக்கும்'.*

**குறைபிரசவம்** பெ. (n.) *(கருவுற்ற) 21-ஆவது கிழமையிலிருந்து 37-ஆவது* கிழமைக்குள் பிறக்கும் குழந்தை; premature delivery.

**குறைமாதம்** பெ. (n.) *(பிள்ளைப் பேற்றி)* நிறை மாதத்திற்கு முந்திய காலம்; (of the birth of a baby) prematurity. *'குறை மாதத்தில் பிறந்த பிள்ளை'.*

**குறைவு** பெ. (n.) *1.* குறைந்து காணப்படும் நிலை; கம்மி; being low; being less than normal. *'நான் பார்க்கும் வேலைக்கு*

*இந்தச் சம்பளம் குறைவுதான்'.* 2 போதிய அளவு இல்லாதிருத்தல்; insufficiency; deficiency. *'தேனீரில் சக்கரை குறைவாக இருக்கிறது'.*

**குறைவைத்தல்** வி. (v.) ஒருவர் குறையாக உணரும் வகையில் ஒன்றைச் செய்தல்; cause something to be dissatisfied. *'படிப்புப் பணியில் உனக்கு நான் என்ன குறை வைத்தேன்?'.*

**குன்றுதல்** வி. (v.) *1.* குறைந்த நிலைக்கு வருதல்; குறைதல்; become less (than what it was) diminish. *'அகவையாகி விட்டாலும் வலிமை குன்ற வில்லை'.* 2 உடல் சிறுத்து விட்டதைப் போல் உணர்தல்/ (மனம்) கூசுதல்; feel small. *'தன்னைப் பற்றிய அவதூறுகளைக் கேட்டு உடலும் உள்ளமும் குன்றிய நிலையில் அவர் இருந்தார்'.*

**குன்று** பெ. (n.) தொடர்ச்சியாக இல்லாத (உயரம் குறைந்த) சிறுமலை; hill. *'குன்றின் உச்சியில் ஒரு முருகன் கோயில் இருக்கிறது'.*

**குனிதல்** வி. (v.) *(தலை அல்லது உடல்)* கீழ் நோக்கி வளைதல்; (of head or body) bend; bow down. *'குனிந்தும் நிமிர்ந்தும் உடற்பயிற்சி செய்தான்'.*

**குனியக் குனியக் குட்டுதல்** வி. (v.) மேலும் அதிகாரம் செலுத்துதல்; தொடர்ந்து ஒடுக்குதல்; harass more the more one submits. *'அவன் சொல்வதை எல்லாம் செய்வாய் என்று தெரிந்தால் நீ குனியக் குனியக் குட்டுவான்'.*

## கூ

**கூக்குரல்** பெ. (n.) *1.* உரத்த ஒலி; கூச்சல்; scream; shout (of someone or many). *'ஒரு பெண்ணின் கூக்குரல் கேட்டுக் குரல் வந்த திசை நோக்கி ஓடினோம்'.* 2. எதிர்ப்பு, முறையீடு, கண்டனம் போன்றவற்றை வெளிப் படுத்துவது; outcry. *'பத்திரிக்கைச் சுதந்திரம் தடை செய்யப்படுகிறது என்ற கூக்குரல் எங்கும் கேட்கத் தொடங்கிவிட்டது'.*

**கூச்சநாச்சம்** பெ. (n.) தயக்கமும் வெட்கமும்; (usually in the negative) sense of shame. *'கூச்சநாச்சமின்றி வெளிப்படையாகப் பொய் சொல்லு வான்'.*

**கூச்சம்** பெ. (n.) *1.* தயக்க உணர்வு, வெட்கம்; shyness. *'மேடையில் பேச இவ்வளவு கூச்சமா?'.* 2. ஒவ்வாத கிளர்ச்சி உணர்வு; tickling sensation. *'இடுப்பைத் தொடாதே. கூச்சமாக இருக்கிறது'.*

**கூசுதல்** வி. (v.) *1.* மனத்தில் ஒவ்வாத உணர்வு ஏற்படுதல்; feel delicate; shrink back. *'கெட்ட சொற்களால் திட்ட வாய் கூசவில்லையா?'.* 2. (அதிக ஒளியால் கண்) பார்க்க முடியாமல் சுருங்குதல்; (of eyes) be dazzled (by the brightness of light). *'கண்கூசும் மின்விளக்கு அலங்காரம்'.*

**கூட்டணி** பெ. (n.) தனித்தனியாக இயங்கும் சங்கம், கட்சி போன்றவை குறிப்பிட்ட ஒரு நோக்கத்திற்காக இணைந்து செயல்பட ஏற்படுத்தப்பட்ட கூட்டான அமைப்பு; alliance of political parties; front consisting of association. *'ஊதிய உயர்வு கேட்டு ஆசிரியர் கூட்டணி நடத்தும் வேலை நிறுத்தம் இன்னும் தொடர்கிறது'.*

**கூட்டத்தொடர்** பெ. (n.) *(பாராளுமன்றம், சட்டமன்றம் போன்ற அமைப்பு களில்)* உறுப்பினர்கள் குறிப்பிட்ட காலம் வரை நாள்தோறும் கூடும் கூட்டம்; session (of parliament, etc.,). *'நாடாளுமன்றத்தின் மழைக்காலக் கூட்டத் தொடர் தொடங்கியது'.*

**கூட்டம்** பெ. (n.) *1.* திரண்டிருக்கும் மக்கள் தொகுதி; crowd; gathering. *'பொங்கலை முன்னிட்டுக் கடை வீதியில் கூட்டம் அலைமோதியது'.* 2. கூடுதல்; meeting. *'அமைச்சரவைக்*

*கூட்டம் நாளை நடைபெறும்'*. 3. பொது மக்களை ஒரு இடத்தில் கூடச் செய்து, தலைவர் பேசும் ஏற்பாடு; public meeting. *'தலைமை அமைச்சர் பேசும் கூட்டத்திற்குப் வலுத்த பாதுகாப்பு போடப்பட்டிருந்தது'*. 4. தீய செயலில் ஈடுபடுபவர்களின் குழு; gang. *'கொள்ளைக் கூட்டம்'*.

**கூட்டமைப்பு** பெ. (n.) ஒன்றுக்கு மேற்பட்ட அமைப்புகளின் இணைப்பு; federation (of unions and associations). *'தொழிற்சங்கக் கூட்டமைப்பு இன்று ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் மேற்கொண்டது'*.

**கூட்டல்** பெ. (n.) ஒரு எண்ணோடு மற்றொரு எண்ணைச் சேர்த்து மொத்தமாக்கும் கணித முறை; addition (in arithmetic). *'ஆரம்ப வகுப்புகளில் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் போன்றவை கற்றுத் தரப்படுகின்றன'*.

**கூட்டறிக்கை** பெ. (n.) *(நாடுகள் அல்லது அமைப்புகள்)* ஒன்றாகச் சேர்ந்து விடுக்கும் அறிக்கை; joint communique.

**கூட்டாஞ்சோறு** பெ. (n.) சிறுவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் வீட்டிலிருந்து அரிசி, காய்கறிகள் போன்றவற்றைக் கொண்டு வந்து விளையாட்டாகச் செய்யும் சமையல்; cooking done by children as a play with rice and vegetables brought from each one's home.

**கூட்டாட்சி** பெ. (n.) ஒன்றுக்கு மேற்பட்ட கட்சிகள் இணைந்து அமைக்கும் அரசு; கூட்டணி ஆட்சி; coalition government. *'மத்தியில் கூட்டாட்சி என்பதே எங்கள் கட்சியின் நோக்கமாகும்'*.

**கூட்டாளி** பெ. (n.) 1. தீய செயலில் ஒருவருக்குத் துணையாக ஈடுபடுபவர்; accomplice. *'இந்த வட்டாரத்தில் பழங் கள்வனையும், அவனது கூட்டாளியையும் காவல் துறை கைது செய்தது'*. 2. வணிகம் முதலியவற்றில் பங்கு போட்டு பணி செய்யும்போது இணையும் பங்காளர்கள்; partner. *'கூட்டாளிகளிடமிருந்து விலகித் தனியாகத் தொழில் செய்கிறேன்'*. 3. நண்பன்; friend. *'கூட்டாளிகளோடு அவன் கும்மாளமடித்துக் கொண்டிருந்தான்'*.

**கூட்டிக் கழித்துப்பார்** வி. (v.) எல்லா நிலவரங்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ளுதல்; make an assessment; take everything into account.

**கூட்டிலை** பெ. (n.) *(உயிரி)* ஒரு நடுக் காம்பில் சிறு இலைகள் பலவற்றைக் கொண்ட தொகுப்பு; compound leaf. *'வேப்பிலை கூட்டிலை வகையைச் சேர்ந்ததாகும்'*.

**கூட்டுதல்** வி. (v.) 1. ஒன்று சேர்த்து அகற்றுதல்; பெருக்குதல்; gather up; sweep. *'தெருவில் சேர்ந்திருக்கும் குப்பையைக் கூட்ட இன்னும் ஆட்கள் வரவில்லை'*. 2. ஒன்று சேர்த்தல்; திரட்டுதல்; bring together; collect. *'வேப்பங் கொட்டையைக் கூட்டிக் குவித்தாள்'*. 3. *(உறுப்பினர்களை)* வருவித்துக் கூட்டம் நடத்துதல்; convene (a meeting) collect (a crowd). *'சட்டப் பேரவையை எப்போது கூட்டுவது?'*.

**கூட்டு** பெ. (n.) 1. பங்கு அல்லது துணை; partnership complicity. *'என் நண்பனை வணிகத்தில் கூட்டு சேர்த்துக் கொண்டேன்'*. 2. ஒரு காய்கறியை நறுக்கி வேக வைத்துப் பருப்பு, தேங்காய் முதலியவை சேர்த்து செய்யப்படும் ஒரு தொடு கறி; a semi-solid dish of vegetable cooked with lentils,

coconut, etc., *'புடலங் காய்க் கூட்டு'*.

**கூட்டுக் குடும்பம்** பெ. (n.) *மணமான பிள்ளைகள் பெற்றோர்களுடன் ஒரே வீட்டில் இணைந்து வாழும் குடும்ப முறை;* joint family (with undivided property). *'கூட்டுக் குடும்பத்தில் இருந்துகொண்டு தன்னிச்சையாக எந்த முடிவும் எடுக்கக் கூடாது'*.

**கூட்டுச்சொல்** பெ. (n.) *தனிப் பொருளைத் தரும் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட சொற்களின் கூட்டு;* compound (word). *'அறுவை' என்ற சொல்லும் 'பண்டுவம்' என்ற சொல்லும் சேர்ந்து 'அறுவைப் பண்டுவம்' என்ற கூட்டுச்சொல் உருவாகிறது'*.

**கூட்டுசேராக் கொள்கை** பெ. (n.) *வல்லரசு நாடுகளுடன் சேராமல் தனித்துச் செயல்படுவதைக் கடைபிடிக்கும் கொள்கை;* the policy of non-alignment.

**கூட்டு நுண்ணோக்கி** பெ. (n.) *(இயற்.) மிகச் சிறிய பொருள்களையும் நுண்ணுயிரிகளையும் பல ஆயிரம் மடங்கு பெரிதாகக் காட்டும் ஒரு வகை நுண்ணோக்கி;* compound microscope.

**கூட்டுப்பண்ணை** பெ. (n.) *பலர் ஒன்று சேர்ந்து கூட்டுறவு முறையில் சேர்ந்து ஊதியத்தைப் பிரித்துக் கொள்ள அமைத்த வேளாண் பண்ணை;* co-operative farm.

**கூட்டுப்பிணை** பெ. (n.) *ஒருவர் தன்னுடைய கடனுக்காக அளிக்கும் கூட்டு உறுதிப்பாடு;* collateral. *'சிறு தொழில் நிறுவனங்கள் ஐந்து இலக்கம் ரூபாய் வரை பெறும் வங்கிக்கடனுக்குக் கூட்டுப் பிணை தர வேண்டிய தில்லை என்ற புதிய விதி வந்துள்ளது'*.

**கூட்டுச்சாலை** பெ. (n.) *ஊருக்கு வெளியே சாலைகள் இணையும் இடம்;* junction of roads on the outskirts of a town, village, etc., *'எங்கள் சிற்றூர்க்குப்*



*போக கூட்டுச்சாலை (கூட்டு ரோடு) இறங்கி ஒரு மாத்திரி (கிலோ மீட்டர்) தூரம் நடக்க வேண்டும்'*.

**கூட்டுவட்டி** பெ. (n.) *(கடன் தொகைக்கு) ஒவ்வொரு ஆண்டுக்கான வட்டியும் முதலும் சேர்க்கப்பட்டு அந்தக் கூட்டுத் தொகைக்குக் கணக்கிடப் படும் வட்டி;* compound interest.

**கூட்டுறவு** பெ. (n.) *1. ஒன்று சேர்ந்து செயல்படும் தன்மை அல்லது நிலை;* co-operation. *'உலக நாடுகளிடையே கூட்டுறவை வளர்க்க வேண்டும்'*. *2. உறுப்பினர்களே உடைமையாளர் களாக இருந்து கூட்டாகச் செயல்படும் நிர்வாக முறை;* co-operative. *'தொழிலாளர் கூட்டுறவு அங்காடி'*.

**கூடக்குறைய** வி.அ. (adv.) *அதிகமாக வேறுபடாமல்;* a little more or a little less. *'விலை கூடக்குறைய இருந்தாலும் சரி, வீட்டை வாங்கி விடுவோம்'*.

**கூடப்பிறத்தல்** வி. (v.) *ஒரே பெற்றோருக்குப் பிறத்தல்; உடன்பிறத்தல்;* be born of the same parents. *'இவன் ஒன்று விட்ட தம்பியல்ல, என் கூடப் பிறந்த தம்பி'*.

**கூடம்** பெ. (n.) *1. குறிப்பிட்ட நோக்கத் திற்கான இடம் அல்லது கட்டடம்; நடுவம்; மையம்;* a building or a place for the purpose specified. *'ஆய்வுக் கூடம்'*. *2. இடப்பரப்பு உள்ள வீட்டின் நடுப்பகுதி;* spacious central hall of a house. *'முன்பெல்லாம் வீட்டுக் கூடத் திலேயே திருமணங்கள் நடக்கும்'*.

**கூடமாட** வி.அ. (adv.) *(ஒருவர் செய்யும்) செயலுக்குத் துணையாக;* lending a helping hand. *'அம்மாவுக்குக் கூடமாட இருந்து உதவி செய்'*.

**கூடாரம்** பெ. (n.) *1. (இடைக்காலமாகத் தங்குவதற்கு) கழிகளை நட்டு அவற்றின் மேல் தண்ணீர் புகாத*

கனத்த உரப்பந் துணியை விரித்து இழுத்துக் கட்டி அமைக்கும் கூம்பு வடிவ அமைப்பு; tent. *'வெள்ளத் துயர் துடைப்புப் பணிகளை மேற்கொள்ள வந்திருக்கும் படைத் துறையினர் கூடாரம் அடித்துத் தங்கியுள்ளனர்'.* 2. வீரதீர விளை யாட்டுகளைப் பொது மக்கள் பார்ப் பதற்காக அமைக்கும் அமைப்பு *(வட்டரங்குக் குழுவினர்)*; tent (put up by circus). *'இந்த வட்டரங்கு கூடாரத்தில் ஒரே நேரத்தில் ஆயிரம் பேர் உட்கார்ந்து பார்க்கலாம்'.*

**கூடிக்குலாவுதல்** வி. (v.) *(தேவைக்கு அதிகமாக ஒருவருடன்)* நெருங்கி உறவாடுதல்; (jocularly or disapprovingly) be close to someone. *'நேற்று கூடிக் குலாவிக் கொண்டிருந்தீர்கள். இன்று ஆளுக்கொரு திசையில் போய்க் கொண்டிருக்கிறீர்களே?'.*

**கூடியமட்டும்** வி.அ. (adv.) *(ஒருவரால் ஒன்றைச் செய்ய) முடிந்த அளவு*; as far as possible. *'கூடிய மட்டும் கடன் வாங்காமல் காலம் கழிப்போம்'.*

**கூடிய விரைவில்** வி.அ. (adv.) *மிகக் குறுகிய காலத்தில்; வெகு விரைவில்;* at the earliest; as soon as possible. *'கூடிய விரைவில் தேர்தல் நடக்கும் என்று அறிவித்துள்ளார்கள்'.*

**கூடிவருதல்** வி. (v.) ஒத்து வருதல் அல்லது *ஏற்றதாக அமைதல்;* be appropriate be propitious. *'நேரமும் காலமும் கூடி வந்தால் எல்லாம் நடக்கும்'.*

**கூடுதல்** வி. (v.) *1.* வந்து சேர்தல்; *குழுமுதல்;* gather; come together; meet at. *'நாடகத்தைப் பார்க்க மக்கள் பெரும் திரளாகக் கூடியிருந்தனர்'.* 2. குறிப்பிட்ட நோக்கத்திற்காக *முறையாகச் சந்தித்தல்;* meet; assemble. *'பாராளுமன்றம் நாளை கூடுகிறது'.* *3.* ஒன்று சேர்தல்; பொருந்துதல்; join; get set. *'சின்னப் பையன்தானே உடைந்த எலும்பு கூடிவிடும்'.*

**கூடு** பெ. (n.) *1. (பறவை, தேனீ, பூச்சி முதலியவை) அமைத்துக்கொள்ளும் வசிப்பிடம்;* nest, hive, web of birds, insects, etc., *'பறவைகள் தங்கள் கூட்டிற்குத் திரும்பின'.* 2. பத்தாயம்; *(நெல் கொட்டி வைக்கும்);* receptable for grain. *3.* வண்டியில் கூரை போல் போடப் படும் தடுப்பு; hood of a cart. *'வண்டிக்குக் கூடு கட்ட வேண்டும்'.*

**கூடுமான** பெ.அ. (adj.) இயன்ற அல்லது *முடிந்த (அளவில்);* to the extent possible. *'கூடுமான வரைக்கும் அதிகச் செலவாகாமல் பார்த்துக்கொள்'.*

**கூடை** பெ. (n.) மூங்கில், பிரம்பு, நார் முதலியவற்றால் பின்னிச் செய்யும் அகன்ற வாய் உடைய பெட்டி; basket (made of bambu, cane, wire, etc.,). *'கூடையில் சாப்பாட்டு ஏனங்களை வைத்தாள்'.*

**கூடை நாற்காலி** பெ. (n.) கூடை போன்ற அமைப்பில் செய்த ஒருவகை நாற்காலி; chair with a basket like seat.

**கூடைப்பந்து** பெ. (n.) ஆடுகளத்தின் இருபுறமும் அமைக்கப்பட்டிருக்கும் கம்பத்தில் உள்ள கம்பி வளையத் திற்குள் பந்தை (இரு அணியினராகப் பிரித்து) போடும் விளையாட்டு; basket ball.

**கூண்டில் ஏற்றுதல்** வி. (v.) *(ஒரு சிக்கல்) மறுப்பீடு, சண்டை போன்றவற்றின் கரணியமாக ஒருவர் மீது) வழக்குத் தொடர்தல்;* sue someone. *'வாடகை பாக்கி தரா விட்டால் கூண்டில் ஏற்றி விடுவேன்'.*

**கூண்டு** பெ. (n.) *1.* கம்பி அல்லது கம்புகள் கொண்டு ஏற்படுத்தப்பட்ட அமைப்பு; cage, coop, pej, cage - like structure. *'புலிக்கூண்டு'. 2. (அற மன்றத்தில் குற்றவாளி அல்லது சான்றாளி ஏறி நிற்க வேண்டிய)*

மேடை போன்ற இடம்; box (for witnesses).

**கூண்டு வண்டி** பெ. (n.) மேல்புறம் வளைவான கூரை போடப்பட்ட *மாட்டு வண்டி;* (bullock) car with a hood.

**கூண்டோடு** வி.அ. (adv.) *(குறிப்பிடப் படும் சூழலில்) தொடர்புடைய அனைவரும்; பூண்டோடு;* totally. *குல(சாதி)ச்சண்டையில் கூண்டோடு அழிந்த குடும்பங்களும் உண்டு'.*

**கூத்தாடி** பெ. (n.) *1.ஆர்ப்பாட்டமாக நடந்து கொள்ளுதல்;* create a noisy scene; behave in an unruly way. *'குடித்துவிட்டு வந்து கூத்தாடிக்கிறான் . 2.கூத்தில் ஆடிப்பாடி நடிப்பவர்;* sing and dance.

**கூத்தாடு** வி. (v.) *(நாட்டுப்புறக் கூத்தில்) ஆடிப் பாடி நடித்தல்;* act, sing and dance (in folk play).

**கூத்து** பெ. (n.) வசனம், பாட்டு, அடவுகள் போன்றவற்றைக் கொண்டு நடிக்கும் *நாட்டார் கலை;* a farm of folk theatre with song, dialogue and movements, enacting stories from mythology. *'தமிழகத்தின் வட மாவட்டங்களில் பாரதக் கதை கூத்தாக ஆடப் படுகிறது'. 2. நாடகம்;* drama play. *'இயல், இசை, கூத்து என்ற மூன்று பிரிவுகளில் கூத்துத் தமிழ் நூல்கள் கிடைக்கவில்லை'.*

**கூதல்** பெ. (n.) *குளிர்;* chill. *'கூதல் காற்று'.*

**கூந்தல்** பெ. (n.) *(பெண்ணின்) தலை முடி;* hair (of a woman). *'எவ்வளவு நீளமான கூந்தல்'.*

**கூப்பாடு** பெ. (n.) *1. பரவலாகக்* கேட்கும்படிக் கூப்பிடுதல்; shout; yell. *'தெருவில் நின்றுகொண்டு அம்மா, அம்மா என்று ஏன் கூப்பாடு போடுகிறாய்?'. 2. (ஒருவரை) கண்டிக்கும்போது அல்லது (ஒருவருடன்) சண்டை போடும் போது போடும் கூச்சல்;* yell. *'அடகு வைத்த நகையை இன்னும் மீட்கவில்லை என்று என் மனைவி கூப்பாடு போடுகிறாள்'.*

**கூப்பிடுதல்** வி. (v.) *1.* ஒருவர் கேட்கும்படி சொல்லுதல்; *அழைத்தல்;* call; call out; address. *'தெருவில் விளையாடிக் கொண்டிருந்த பையனைக் கூப்பிட்டு முருகன் கோயில் எங்கிருக்கிறது என்று கேட்டார்'. 2.* வரும்படி வேண்டுதல்; invite. *'அவரே நேரில் வந்து என்னை கூப்பிட்டதால் போகிறேன்'. 3.* தொடர்பு கொள்ளுதல்; call. *'சரியாக பத்து மணிக்குத் தொலைபேசியில் என்னை கூப்பிடுவதாக நண்பர் சொல்லியிருந்தார்'. 4. கூவுதல்;* crow (at day break). *'இன்னும் கோழி கூப்பிடவில்லை'.*

**கூப்பிடு தூரம்** பெ. (n.) குறைந்த தொலைவு; hailing distance. *'கூப்பிடு தூரத்தில் உள்ள கடைக்குப் போய் வர இவ்வளவு நேரமா!'.*

**கூப்புதல்** வி. (v.) *(வணங்கும்போது)* உள்ளங்கை ஒன்றோடு ஒன்று தொடும்படி (கைகளை) மார்புக்கு நேராக இணைத்தல்; join (one's palms together and bring them in front of the chest as in paying one's respects or praying). *'கை கூப்பி வணங்கினார்'.*

**கூப்பு** பெ. (n.) குத்தகைக்கு விடும் *குறிப்பிட்ட பகுதியில் உள்ள மரங்களின் தொகுப்பு;* trees in an area of forest market as a unit for leasing. *'இந்த ஆண்டும் மூங்கில் கூப்புகள் காகித ஆலைக்கே வழங்கப்படும்'.*

**கூம்புதல்** வி. (v.) ஒன்றாக இணைதல்; குவிதல்; fold up. *'காலையில் மலரும் தாமரை சூரியன் மறைந்ததும் கூம்பிவிடும்'.*

**கூமுட்டை** பெ. (n.) *1. அழுகிய முட்டை;* addled egg. *'கடைக்குப் போய் முட்டை வாங்கி வா என்றால்*

கூமுட்டையாக வாங்கி வந்திருக்கிறான்'. 2. விவரமறியாதவன்-வள்; innocent person.

**கூர்தல்** வி. (v.) காட்டுதல்; செலுத்துதல்; கொள்ளுதல்; (mostly in past forms) have (love - mercy, pity, ect. on others). *'என் மேல் அன்புகூர்ந்து இதை முடித்துத் தர வேண்டும்'.*

**கூர்** பெ. (n.) *1.* குத்தும் அல்லது வெட்டும் முனை; pointed tip; sharp edge. *'கூர் உடைந்த ஊசி'.* 2. கரிக்கோலின் எழுதும் முனை; tip (of a pencil). *'கரிக்கோலின் கூர் உடைந்து விட்டது'.*

**கூர்மை** பெ. (n.) *1.* வெட்டும் பதம்; கிழிக்கும் அல்லது குத்தும் தன்மை; sharpness; pointedness. *'மாட்டின் கொம்பு கூர்மையாக இருந்தது'.* 2. நுட்பமானதையும் உன்னிப்பாகக் கவனிக்கும் அல்லது பற்றிக் கொள்ளும் தன்மை; sharpness; keenness. *'கூர்மையான பார்வை'.*

**கூரை** பெ. (n.) சாய்வாகவோ சமதளமாகவோ அமைக்கப்படும் கட்டடத்தின் மேல் பகுதி; ceiling; roof.

**கூரை ஓவியம்** பெ. (n.) கூரைப் பகுதியின் உட்பக்கத்தில் வரையப்படும் ஓவியம்; mural on the inner surface of the roofs of a palace or temple.

**கூலி** பெ. (n.) *1.* நாள் அல்லது வார அடிப்படையில் தரும் பணம்; வேலைக்கான பணம்; daily or weekly wage; payment. *'நாற்று நட்டதற்குக் கூலி இரண்டு மரக்கால் நெல் அல்லது 150 ரூபாய் பணம் தர வேண்டும்'.* 2. வண்டியைப் பயன்படுத்தியதற்குத் தர வேண்டிய பணம்; fare; freight; hire charge. *'வண்டிக் கூலி'.*

**கூலிக்கு மாரடித்தல்** வி. (v.) ஏனோ தானோவென்று வேலை செய்தல்; மனம் இல்லாமல் வேலை செய்தல்; do a mercenary's work; do one's work half - heartedly'. *'என் திறமைக்கு ஏற்ற வேலை இது அல்ல ஏதோ கூலிக்கு மாரடிக்கிறேன்'.*

**கூலிப்பட்டாளம்** பெ. (n.) கூலி வேலை செய்து பிழைப்பு நடத்துபவர்கள்; (when used derogato rily) wage slaves; hirelings. *'நாங்கள் கூலிப்பட்டாளம் தான். ஆனால், எங்களுக்கும் தன்மானம் உண்டு'.*

**கூலிப்படை** பெ. (n.) *1.* பணம் கொடுத்துத் தற்காலிகமாக அமர்த்தப்படும் படை; mercenary force. *'அந்நியக் கூலிப் படையைச் சேர்ந்த தீவிர வாதிகள் பத்து பேர் காஷ்மீரில் சுட்டுக் கொல்லப்பட்டனர்'.* 2. பணம் பெற்றுக்கொண்டு வன்முறையில் ஈடுபடும் ஆட்கள்; goons; goondas. *'அரசியல்வாதியைக் கொலை செய்த கூலிப்படையினரைப் பிடிக்கத் தனிப்படை அமைக்கப்பட்டுள்ளது'.*

**கூலியாள்** பெ. (n.) கூலி வேலை செய்ய அமர்த்தப்படுபவர்; hired labourer. *'கூலியாட்களை வைத்தாவது வேலையை முடி!'.*

**கூவுதல்** வி. (v.) *1.* ஒலி எழுப்புதல்; call; crow. *'முதல் கோழி கூவியதும் கிழவர் விழித்துக் கொண்டார்'.* 2. சத்தமிடுதல்; cry; shout. *'மீனோ மீன் என்று கூவிக்கொண்டே போனாள்'.*

**கூழ்** பெ. (n.) *1.* சில தவசங்களின் மாவைக் கொதித்த நீரில் போட்டுத் தயாரித்த, சற்றுக் குழைந்திருக்கும் நீர்ம உணவு; orridge like preparation from the flour of certain millets. *'இன்று காலையில் கேழ்வரகுக் கூழ்தான் குடித்தான்'.* 2. மரத்தூள் குழம்பு; pulp.

**கூழ் ஊற்றுதல்** வி. (v.) கூழைக் காய்ச்சிப் படைத்து எல்லோருக்கும் வழங்குதல்; distribute to the public the ritual offering of porridge made to village deities as a form of worship. *'ஊரில் மாரியம்

*மனுக்கு நாளை கூழ் ஊற்று கிறார்கள்'.*

**கூழாங்கல்** பெ. (n.) *வழவழப்பான சிறிய உருண்டைக் கல்;* pebble (found on seashore and on river beds).

**கூழை** பெ. (n.) *குட்டை;* short; puny. *'ஆள் கூழையாக இருக்கிறான்'.*

**கூழைக்கும்பிடு** பெ. (n.) *போலியான நன்னடப்பு;* obsequiousness. *'முதலாளிக்குக் கூழைக்கும்பிடு போட்டே அவன் மகனுக்கு வேலை வாங்கி விட்டான்'.*

**கூளம்** பெ. (n.) *1. நெல்மணிகள் நீக்கிய வைக்கோல்;* bits of straw. *'மரத்தடியில் மாடுகளைக் கட்டி விட்டுக் கூளம் அள்ளிப் போட்டான்'. 2. கழிவுப்பொருள்;* farm waste; refuse. *'குப்பை, சாணம், வேளாண் கூளங்கள்'.*

**கூற்று** பெ. (n.) *(ஒருவர்) சொன்னது; (ஒருவரால்) கூறப்பட்டது;* something said by a person. *'உன் கூற்றுப்படி எதுவும் நடக்கவில்லை'.*

**கூறுதல்** வி. (v.) *(பேச்சு அல்லது எழுத்து மூலமாக) (பிறர்) அறியச் செய்தல்; சொல்லுதல்;* say; tell; state. *'நீங்கள் போகலாம் என்று கூறிவிட்டு அவர் வேலையில் ஈடுபட்டார்'.*

**கூறு** பெ. (n.) *1. சிறப்புக்கூறு;* aspect; feature. *'மொழியின் அடிப்படைக் கூறு 'சொல்' ஆகும். 2. கண் திட்டமாகவோ குறிப்பிட்ட அளவிலோ பிரித்து வைக்கப்பட்ட குவியல்;* portion of something; division, share. *'கத்தரிக்காய்க் கூறு ஒவ்வொன்றின் விலையும் 10 ரூபாய் தான்'.*

**கூறுபாடு** பெ. (n.) *நற்கூறு;* feature. *'இவை அனைத்துக்கும் உள்ள பொதுவான கூறுபாட்டை அவர் விளக்கினார்'.*

**கூறைப்புடவை** பெ. (n.) *திருமணச் சடங்குகளின் போது மணமகள் அணிந்து கொள்ளும் (பெரும்பாலும்) அரக்கு நிறத்தில் இருக்கும் சேலை;* saree, usually in deep crimson colour, worn by the bride during wedding rituals. *'சின்னாளப்பட்டி கூறைப் புடவை விலை அதிகம்'*

**கூன்** பெ. (n.) *(முதுகுத்தண்டின்) முன்னோக்கிய வளைவு (முதுகுத் தண்டில் ஏற்படும்);* round shoulers / hump on the back. *'இந்த வயதில் உனக்குக் கூன் விழுந்துவிட்டதே!'.*

**கூனன்** பெ. (n.) *கூன் விழுந்தவன்;* (male) hunch back.

**கூனி** பெ. (n.) *கூன் விழுந்தவள்;* (female) hunch back.

**கூனிக்குறுகுதல்** வி. (v.) *(அவமானம், குற்றம் போன்றவற்றால்) உடல் சுருங்குவது போல் உணர்தல்;* feel small. *'குற்ற உணர்வு உடலைக் கூனிக் குறுக வைத்தது'.*

**கூனுதல்** வி. (v.) *(ஒருவரின் உடல்) முன் புறமாக வளைதல்;* stoop. *'குனிந்தே வேலை செய்து இடுப்பு கூனி விட்டது'.*

# கெ

**கெட்டகோபம்** பெ. (n.) *கட்டுப்படுத்த முடியாத சினம்;* seething rage. *'அவர் பேசும்போது குறுக்கே பேசாதே அவருக்குக் கெட்ட கோபம் வரும்'.*

**கெட்டிக்காரன்** பெ. (n.) *திறமைசாலி; அறிவுமிக்கவன்; திறமையுள்ளவன்;* capable man, smart man.

**கெட்டித்தல்** பெ. (n.) *1. நிலம் முதலியவற்றை இறுக்கப்படுத்துதல்;* to harden, strengthen. *2. துமுக்கி (துப்பாக்கி)யில் மருந்திட்டுக் கெட்டிப்படுத்துதல்;* charge or load a fire arm.

**கெட்டிமேளம்** பெ. (n.) *திருமணத்தின் சில முகாமைச் சடங்குகளில் குறிப்பாகத்*

தாலி கட்டும்போது இசைக் கருவிகள் அனைத்தையும் கூட்டாக எழுப்பும் உரத்த (மங்கல) ஒலி; simultaneous and rapid playing of all musical instruments at certain important stages of the wedding ceremony.

**கெடு** பெ. (n.) ஒரு செயலை முடிக்கத் தரப்படும் கால வரம்பு; கால எல்லை; deadline; last date or due date; date of expiry.

**கெடுதல்** வி. (v.) *1.* ஒன்று அல்லது ஒருவர், இழிவான நிலையை அல்லது தன்மையை அடைதல்; சீர்குலைதல்; get affected; deteriorate. *2.* வறுமை யுறுதல்; to fall on evil days. *3.* ஒழுக்கங் கெடுதல்; to degenerate. *4.* கெடுதல்; to be elided, dropped. *5.* காய்கறி முதலியன அழுகுதல்; to rotting of vegetables.

**கெடுபிடி** பெ. (n.) நெறி(விதி) முறைகள், கட்டளைகள் ஆகியவற்றை நிறை வேற்றுவதில் காட்டப்படும் கடுமை; severity in enforcement of order, regulations.

**கெண்டி** பெ. (n.) குழந்தைகளுக்குப் பால், நீர் முதலியவற்றைக் கொடுப்பதற்குப் பயன்படுத்தும் சற்று நீண்ட குழல் போன்ற குவளை; a small cup like vessel with a spout.

**கெந்துதல்** வி. (v.) *1.* தத்துதல்; to hop, skip. *2.* கிட்டிப் புள்ளடித்தல்; to strike the stick in the game of tipcat. *3.* ஒற்றைக் கால் ஊன்றியும் மறுகால் ஊன்ற முடியாமலும் கெந்தி கெந்தி நடத்தல்; walk with one lep pressed and other leg not capable of pressing.

# கே

**கேட்டுக்கொள்தல்** வி. (v.) ஒன்றைச் செய்யுமாறு அல்லது செய்ய வேண் டாம் என்று ஒருவரை வேண்டிக் கொள்ளுதல்; ask politely; make an appeal; request.

**கேட்பாரற்று** வி.அ. (adv.) கவனிப் பதற்கோ கண்காணிப்பதற்கோ உரிமை கொண்டாடுவதற்கோ தட்டிக் கேட்பதற்கோ யாரும் இல்லாமல் இருத்தல்; uncared for; unclaimed.

**கேடு** பெ. (n.) *1.* அழிவு; ruin, destruction. *2.* இழப்பு; loss waste. *3.* வறுமை; adversity, indigence. *4.* குற்றம்; defect. *5.* இறப்பு; death. *6.* தீமை; evil, injury. *7.* அழகின்மை; ugliness.

**கேடுகாலம்** பெ. (n.) அழிவுறுங்காலம்; bad time. *'நல்ல தலைமை இல்லாத இந்த அமைப்பிற்குக் கேடுகாலம் தொடங்கிவிட்டதோ என சிலர் ஐயங்கொண்டனர்'.*

**கேடுகெட்ட(வன்)** பெ. (n.) சீரழிந்த, மட்டமான, நிலைமையழிந்த(வன்); wretched, despicable.

**கெடுதி** பெ. (n.) *1.* அழிவு, கெடுதல்; ruin; damaging. *2.* தவணை; time limit for a payment. *'அவன் சொன்ன கெடுதிக்குள் நீ பணம் கொடுத்துவிட வேண்டும்'.*

**கெத்து** பெ. (n.) தன்னுடைய உயர்வையும் பெருமையையும் காட்டிக்கொள்ளும் போக்கு; being haughty; proud bearing. *'புதிய தலைவர் அல்லவா; அதனால் கெத்தாக இருக்கிறார்'.*

**கேழ்வரகு** பெ. (n.) உணவாகப் பயன் படுத்தும் கடுகு போன்ற உருண்டை யான செம்பழுப்பு நிறத் தவசம்; a kind of millent; ragi.

**கேள்தல்** வி. (v.) *1.* குறிப்பிட்ட செய்தி சொல்லும்படி ஒருவரிடம் வின வுதல்; (கேள்வி) எழுப்புதல்; ask; enquire. *2.* பாடங் கேட்டல்; to learn, be instructed in. *3.* வேண்டுதல்; to request. *4.* கேள்விப்படுதல்; to be informed of. *5.* ஒலி, பேச்சு, இசை முதலியவை கவனத்தில் படும்படி செவிப் புலனால் உணர்தல்; listen to music, etc., *6.* ஒருவருடைய இசைவைக்

கோருதல்; ask for permission. 7. பொறுத்தல்; to tolerate, brook. 8. தண்டித்தல்; to avenge.

**கேள்விஞானம்** பெ. (n.) ஒரு துறையில் முறையாகப் பயிற்சி பெறாமல், கேட்பதால் மட்டுமே பெறும் அறிவு; knowledge gained through observation and listening . *'நாலு பேரோடு கலந்து பழகுவதால் கேள்விஞானமும் கிடைக்கிறது'.*

**கேள்விநேரம்** பெ. (n.) சட்டமன்றம், பாராளுமன்றம் போன்றவற்றில் உறுப்பினரின் கேள்விகளுக்காக ஒதுக்கப்படும் நேரம்; the time allotted in a sitting of Parliament, etc., for members to ask questions; question hour.

**கேள்விப்படுதல்** வி. (v.) ஒரு செய்தியை நேரடியாக அல்லாமல் பிறர் சொல்லக் கேட்டறிதல் அல்லது தெரிந்து கொள்ளுதல்; hear, being said.

**கேளா ஒலி** பெ. (n.) மாந்தன் (மனிதக்) காதினால் உணரப்பட முடியாததும் புதுமையான கருவிகளால் பதிவு செய்யக் கூடியதுமான ஒலி; ultra sound.

**கேளிக்கை** பெ. (n.) மகிழ்ச்சியாக இருக்க உதவும் இசை, திரைப்படம் போன்ற பொழுதுபோக்கு; entertainment; merrymaking.

**கை ஓங்குதல்** வி. (v.) ஒருவருடைய செல்வாக்கு உயர்தல்; enjoy a high status; be in the ascendant.

## கை

**கைக்காசு** பெ. (n.) ஒருவரின் சொந்தப் பணம்; one's personal money.

**கைக்குட்டை** பெ. (n.) முகம், கை முதலியவற்றைத் துடைத்துக் கொள்ளப் பயன்படுத்தும் சதுர வடிவச் சிறுதுணி; handkerchief.

**கைக்கும் வாய்க்கும்** வி.அ. (adv.) ஒருவரின் பொருளியல் நிலை அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கு மட்டுமே போதுமான அளவில்; of one's income being barely enough; hand to mouth.

**கைக்குள்போடல்** வி. (v.) தன்வயப் படுத்துதல்; to bring someone under one's influence. *'திருமணம் ஆகி ஒரு மாதம் கூட முடியவில்லை. பெண் மாப்பிள்ளையைக் கைக்குள் போட்டுக் கொண்டுவிட்டாள்'.*

**கைக்குழந்தை** பெ. (n.) கையில் தூக்கிச் செல்ல வேண்டியதாக இருக்கும் சிறு குழந்தை; babe in arms; nursling.

**கைக்கூலி** பெ. (n.) பணத்திற்கு அல்லது உரிமைக்கு மற்றவர்களுக்காகத் தன்னை ஒப்படைத்துக் கொள்பவர்; lackey stroge.

**கைகலப்பு** பெ. (n.) ஒருவரையொருவர் கைகளால் அடித்துக்கொள்ளும் சண்டை; hand-to-hand fight; scuffle.

**கைகழுவுதல்** வி. (v.) கைவிடுதல், ஒதுங்கிக்கொள்தல், விட்டுவிடுதல்; wash one's hands of, abandon, forsake.

**கைகாட்டி** பெ. (n.) (பெரும்பாலும் வெவ்வேறு திசைகளில் போகும் சாலைகளைச் சுட்டிக்காட்டும் விதத்தில்) ஊர்ப் பெயர் எழுதிய பலகைகளைக் கொண்ட கம்பம்; sign post.

**கைகாட்டு–தல்** வி. (v.) வாழ்க்கையில் துவக்க நிலையில் ஒருவருக்கு உதவி செய்தல்; தீராய்வு (ஆலோசனை) சொல்லுதல்; வழிகாட்டுதல்; give help and guidance to one esp, at the beginning of an undertaking.

**கைகாரி** பெ. (n.) திறமையாக தன் வேலையை முடித்துக் கொள்ளும் பெண்; a twnning like smart woman.

**கைகூடுதல்** வி. (v.) ஒருவர் மேற்கொண்ட செயல், நினைத்த

எண்ணங்கள் வெற்றிகரமாக நிறைவேறுதல்; materialize; come to fruition.

**கைகொட்டிச்சிரித்தல்** வி. (v.) *இகழ்ச்சியை வெளிப்படுத்துதல்;* laugh at; mock at; deride.

**கைகொடுத்தல்** வி. (v.) *துன்ப நிலையில் இருக்கும்போது உதவி செய்தல்; துணையாக இருத்தல்;* help a person in distress give a helping hand.

**கைச்சுத்தம்** பெ. (n.) *திருடுதல், கையூட்டு (இலஞ்சம்) வாங்குதல் முதலிய செயல்களில் ஈடுபடாத நேர்மை யான குணம்;* probity, rectitude.

**கைச்செலவு** பெ. (n.) *செலவு (பயணம்) செய்யும்போது அல்லது அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் சிறு செலவு;* minor or incidental expenses.

**கைத்தடி** பெ. (n.) *1. அகவை முதிர்ந்தோர் நடக்கும்போது ஊன்றிக் கொள்ளப் பயன்படும் மரக்கம்பு;* walking stick. *2. ஒருவரின் கையாள்;* crony.

**கைத்தறி** பெ. (n.) *கையால் இயக்கப்படும் தறி;* handloom.

**கைத்திறன்** பெ. (n.) *கைவேலையில் வெளிப்படும் திறமை, நுணுக்கம் முதலியவை;* craftsmanship; dexterity.

**கைதட்டல்** பெ. (n.) *பாராட்டும் வகையில் இரு கைகளையும் தட்டி எழுப்பும் ஒலி;* applause.

**கைதூக்கிவிடுதல்** வி. (v.) *பொருளியல் வழியாக நல்ல நிலைக்குக் கொண்டு வருதல்; உயர்த்துதல்;* help a person in dire straits; rescue from sinking.

**கைதேர்ந்த** பெ. (n.) *கலையில், தொழிலில் திறமையானவர்;* adept.

**கைநழுவுதல்** வி. (v.) *கிடைக்கும் என்று நம்பிக் கொண்டிருந்த ஒன்று கிடைக்காமல் போதல்;* slip out of one's hand.

**கைநனைத்தல்** வி. (v.) *ஒருவர் வீட்டில் உறவை நிலைநாட்டும் அல்லது உறுதிப்படுத்தும் முறையில் உணவு உண்ணுதல்;* dine in someone's house (as a token of establishing or confirming good relations).

**கைநாட்டு** பெ. (n.) *1. எழுதப் படிக்கத் தெரியாததால் கையெழுத்துக்குப் பதிலாக இடதுகை கட்டைவிரல் வரிகையை மையில் தொட்டுப் பதித்தல்;* impression of one's left thumb recorded on a document as subscription. *'இவர் அரசுப் பணியில் கை நிறைய சம்பளம் வாங்குகிறார்'.*

**கைநிறைய** வி.அ. (adv.) *பணிப்பணம் போதுமான அளவுக்கும் அதிகமாக;* (of income, remuneration) substantially. *'இவர் அரசுப்பணியில் கைநிறைய சம்பளம் வாங்குகிறார்'.*

**கைநீட்டுதல்** வி. (v.) *உதவி செய்யும்படி கேட்டல்;* ask for (monetary) help.

**கைநீள்தல்** வி. (v.) *கட்டுப்பாட்டை மீறி ஒருவரைக் கையால் அடித்தல்;* strike intemperately.

**கைப்பக்குவம்** பெ. (n.) *1. உணவு, மருந்து பதமாக உருவாக்குவதில் ஒருவருக்குள்ள திறமை;* of cooking, making homemade remedies preparation that has an initable flavour. *'என் அம்மாவின் கைப்பக்குவம் சமையலில் தெரியும்'. 2. வீட்டிலேயே மருந்து உருவாக்கிப் பயன்படுத்தும் முறை;* using home made remedies.

**கைப்பந்து** பெ. (n.) *நடுவில் வலை கட்டிப் பந்தை ஓர் அணியினர் கையால் அடிக்க, அதை எதிர் அணியினர் தரையில் பட்டுவிடாமல் திரும்பிச் செல்லும் வகையில் அடித்து விளையாடும் விளையாட்டு;* volleyball.

**கைப்பழக்கம்** பெ. (n.) *கையால் செய்யப் படும் வேலைகளைக் குறிக்கும் போது திரும்பத் திரும்பச் செய் வதனால் ஏற்படும் பயிற்சி;* practice leading to the acquisition of a skill. 'சித்திரமும் கைப்பழக்கம்'

**கைப்பற்று** பெ. (n.) *1. சட்ட நடவடிக் கைகள் அல்லது பிற நடவடிக்கை களின் மூலமாக ஒன்றைத் தன்வயம்*

எடுத்துக்கொள்ளுதல்; take possession; confiscate. *2.* போர், வன்முறை போன்றவற்றின் மூலம் ஒரு இடம், நாடு நகரம் போன்றவற்றைத் தன் வசமாக்கிக் கொள்ளுதல்; capture (a country, seixe; annex. *3.* அதிகாரம், பதவி முதலியவற்றை முயன்று அடைதல்; எடுத்துக்கொள்ளுதல்; wrest; grab. *4.* தேர்தல், விளையாட்டுப் போட்டி போன்றவற்றில் தொகுதிகள், கோப்பைகள் போன்றவற்றை வெல்லுதல்; win in a competition.

**கைப்பிடிச் சுவர்** பெ. (n.) *படிக்கட்டு, பாலம் முதலியவற்றின் பக்கங்களில் நடப்பவர் விழுந்துவிடாமல் இருப்பதற்கு உதவியாகப் பக்கவாட்டில் அமைக்கப்படும் உயரம் குறைவான சுவர்;* wall similar to railing on both the sides of a staircase bridge.

**கைப்பிடித்தல்** வி. (v.) *1. திருமணம் செய்துகொள்ளுதல்;* marry. *2. மண் வெட்டி போன்ற சில வகைக் கருவிகளிலும் ஏனங்களிலும் பிடித்துக் கொள்வதற்கு ஏதுவாக ஏற்படுத்தப் பட்ட தண்டு அல்லது வளையம்;* handle. *3. கையால் அள்ளும் அல்லது கைக்குள் கொள்ளும் அளவு;* handful.

**கைப்பிள்ளை** பெ. (n.) *பார்க்க; கைக்குழந்தை.*

**கைபேசி** பெ. (n.) *கம்பிகள் வழியாக இணைக்கப்பட்டிருக்காமல் ஒலி அலைகளை நேரடியாகப் பெறுவதும் எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் சென்று பேசும் வகையில் இருப்பதுமான தொலை பேசிக் கருவி;* mobile phone; cellular phone.

**கைம்பெண்** பெ. (n.) *கணவனை இழந்த பெண்; விதவை;* widow.

**கைமருந்து** பெ. (n.) *வீட்டில் இருக்கும் பொருள்களைக் கொண்டே உருவாக்கிக்கொள்ளும் மருந்து;* homemade remedy.

**கைமறதியாக** வி.அ. (adv.) *நினைவில்லாமல்;* forgetfully.

**கைமாற்று** பெ. (n.) *உடனடித் தேவைகளுக்காகத் தெரிந்தவர்களிடம் வாங்கிக்கொள்ளும் வட்டி, கடன் இல்லாத சிறு தொகை;* a small sum borrowed from friends in a contingency.

**கைமாறுதல்** வி. (v.) *உரிமை, தொகை முதலியவை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குச் செல்லுதல்;* change hands.

**கைமாறு** பெ. (n.) *செய்த உதவிக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் செய்வது;* a return (made out of gratitude).

**கைமீறுதல்** வி. (v.) *சிக்கல் கட்டுப் பாட்டுக்கு உட்படாத அல்லது நிறைவேற்ற முடியாத நிலையை அடைதல்;* get out of hand.

**கையடக்கம்** பெ. (n.) *எளிதாகக் கையில் எடுத்துச்செல்லக் கூடிய அளவில் இருப்பது;* being handy. '*கையடக்க அகராதி*'.

**கையாடல்** பெ. (n.) *மோசடி;* defalcation.

**கையாள்–தல்** வி. (v.) *1. ஒன்றை உரிய முறையில் பயன்படுத்துதல்;* use, adopt; handle. *2. குறிப்பிட்ட செயல், பணி போன்றவற்றை மேற்கொள்ளுதல்;* deal with handle.

**கையிருப்பு** பெ. (n.) *உடனடியாகப் பயன்படுத்திக்கொள்ளும் நிலையில் தற்போது ஒருவர் வயம் சேமிப்பாக இருப்பது;* something in hand; readily available for use; saving.

**கையும் களவுமாக** வி.அ. (adv.) *குற்றம் அல்லது தவறு செய்யும் அதே நேரத்தில்;* red - handed. '*கையூட்டு வாங்கும்போது கையும் களவுமாகப் பிடிபட்டார்*'.

**கையேடு** பெ. (n.) *1. ஒரு துறையில் பணிபுரிவோருக்குப் பயன்படும் வகையில் செயல் முறைகளைக் கூறும் சிறிய நூல்;* hand book, manual. *2. அன்றாட நிகழ்ச்சிகளைக் குறித்துவைத்துக்கொள்ள உதவும் சிறிய குறிப்பேடு;* diary. *3. தேர்வு எழுதுபவர்களுக்குப் பயன்படும் வகையில் வினா விடைகளைக் கொண்ட நூல்;* a book of reference with questions and answers.

**கையைக் கட்டுதல்** வி. (v.) *ஒன்றைச் செய்யவிடாமல் ஒருவரைக் கட்டுப் படுத்துதல்;* bind someone hand and foot.

**கையைக்கடித்தல்** வி. (v.) *1. எதிர் பார்த்ததற்கும் மேலாகச் செலவாகி வருத்தத்தை ஏற்படுத்துதல்;* suffer more loss than what one can afford. *2. இழப்பு ஏற்படுத்துதல்;* cause to; incur loss.

**கைராசி** பெ. (n.) *ஒருவருக்கு உள்ளங் கையில் உள்ள கைவரைகளால் இருப்பதாக நம்பப்படும் நன்மை விளைவைத்தரும் தன்மை;* auspiciousness associated with. *'நல்ல கைராசியான மருத்துவர்'.*

**கைவசம்** பெ. (n.) *குறிப்பிட்ட நேரத்தில் ஒருவரின் வயம் இருப்பது;* being in one's possession; being available with some one. *'என் வங்கிக் கணக்கில் குறைந்தளவு பணமே கைவசம் உள்ளது'.*

**கைவண்ணம்** பெ. (n.) *கலைப் படைப்பு கைவினைப்பொருள்கள்ஆகிய வற்றை உருவாக்குவதில் ஒருவருடைய கைத் திறன்;* craftsmanship; artistry.

**கைவந்தகலை** பெ. (n.) *ஒருவருக்கு இருக்கும் திறமை கரணியமாக மிகவும் எளிதாகச் செய்யக்கூடியது;* being adept in something. *'பேச்சால்பிறரை மயக்கிவிடுவது அவனுக்குக் கைவந்த கலை'.*

**கைவரிசை** பெ. (n.) *கண்டிக்கத் தக்க செயலைச் செய்வதில் காட்டும் திறமை;* sleight of hand; smartness; cleverness.

**கைவிடுதல்** வி. (v.) *குறிப்பிட்ட முடிவு, திட்டம், எண்ணம் முதலியவற்றை மேற்கொண்டு தொடராமல் இருத் தல்;* drop; give up. *'மழையின் காரணமாகப் போட்டி கைவிடப் பட்டது'.*

**கைவிரித்தல்** வி. (v.) *ஓர் உதவிக்காக ஒருவரை மிகவும் நம்பிக்கையுடன் நாடும்போது அவர் இயலாது என்று தெரிவித்தல்;* express one's inability to give a much expected help. *'திருமணத்துக்கான உதவிகளைச் செய்வதாகச்சொல்லிவிட்டுக்கடைசி நேரத்தில் கை விரித்து விட்டார்'.*

**கைவிலங்கு** பெ. (n.) *காவல்துறையினர், தாம் கைது செய்தவனைக் கைகளைப் பிணைத்து மணிக்கட்டில் மட்டும் இரண்டு வளையங்கள் இணைக்கப் பட்ட விலங்கு;* handcuffs.

**கைவேலைப்பாடு** பெ. (n.) *நகை, தச்சுத்தொழில், பூத்தையல் போன்ற வற்றில் நுணுக்கமாக வெளிப்படும் திறன்;* workmanship.

**கைவைத்தியம்** பெ. (n.) *நோய்கள் நீங்க மருத்துவரிடம் போகாமல் அன் றாடம் பயன்படுத்தும் உணவு, பச்சிலை போன்றவற்றைப் பட்டறி வின் வாயிலாகத் தெரிந்து கொண்டு வீட்டிலேயே செய்யும் (மரபு வழி) வைத்தியம்;* treatment using home made remedies.

## ச

**சக்கரநாற்காலி** பெ. (n.) *நடக்க முடியாதோர் இடம் விட்டு இடம் செல்லப் பயன்படுத்தும் சக்கரங்கள் பொருத்தப்பட்ட நாற்காலி;* wheel chair.

**சக்கரம்** பெ. (n.) *1. அச்சில் சுழலக்கூடிய வட்டமான பாகம்;* of a cart, vehicle, etc., *2. குயவர்கள் மட்பாண்டம் செய்வதற்குப் பயன்படுத்தும் கிடைமட்ட நிலையில் ஓர் அச்சில் சுழலும் வட்டமான (சாதனம்) கருவி;* wheel.

**சக்கரைநோய்** பெ. (n.) *நீரிழிவு நோய்;* diabetes.

**சக்கை** பெ. (n.) *1. (கரும்பு, காய்கறிகள் முதலியவற்றிலிருந்து பிழிதல், மெல்லுதல் போன்ற முறையில்) சாறு, சதைப் பகுதி போன்றவற்றை எடுத்த பிறகு எஞ்சியிருப்பது;* dry residue after extraction of juice; bagasse. *2. பலாப் பழம் சுளையை நீக்கிய பின் எஞ்சியிருக்கும் பகுதி;* discarded fibrous part of jack fruit.

**சக்கைப்பழம்** பெ. (n.) *பலாப்பழம்;* jack fruit.

**சக்கைப்புரட்டி** பெ. (n.) *களத்தில் சக்கைகளைப் புரட்டி விடவும், சென்று சேர்க்கவும் பயன்படும் கருவி;* an implement used to gather straw.

**சக்கையன்** பெ. (n.) *உடல் வலியற்றுப் பருத்திருப்பவன்;* a stout, but weak person.

**சக்கையாகப் பிழி** வி. (v.) *களைத்துப் போகும் அளவுக்கு ஒருவரை வேலை செய்ய வைத்தல்;* make someone break sweat.

**சகட்டுமேனிக்கு** வி.அ. (adv.) *எந்த வகை வேறுபாடும் பார்க்காமல், பாகு பாடு இல்லாமல் ஒட்டு மொத்தமாக;* without any discretion or discrimination in a jump on, an average.

**சகடக்கால்** பெ. (n.) *வண்டிச் சக்கரம்;* cart wheel, carriage - wheel.

**சகடை** பெ. (n.) *கிணற்றில் நீரிறைக்கப் பயன்படுத்தும் கப்பி;* roller - pulley to draw water from well.

**சகதி** பெ. (n.) *1. சேறு, ஈரக்குழைவான மண்;* mud; mire. *2. பொல்லாநிலம்;* boo puddle.

**சகோடயாழ்** பெ. (n.) *16 நரம்பு கொண்ட யாழ்;* a lute with 16 strings.

**சங்கம்** பெ. (n.) *1. சங்கு;* conch shell, an instrument of sound. *2. கைவளை;* bracelet. *3. நெற்றி;* fore-head. *4. குரல்வளை;* Adam's apple.

**சங்கமுகம்** பெ. (n.) *ஆறு கடலுடன் கூடுமிடம்;* face of a conch.

**சங்கு** பெ. (n.) *1. குவிந்த முனையையும் உட்புறமாக வளைவுகளையும் உடைய ஓட்டினைக் கொண்ட, மெல்லுடலி இனத்தைச் சேர்ந்த கடல்வாழ் உயிரினம்; நந்துக்கூடு;* chank, conch, large convolute shell. *2. கழுத்து;* throat. *3. பாலடை;* conch like vessel for feeding babies.

**சங்கு ஊதுதல்** வி. (v.) *1. ஒன்றுக்கு முடிவு கட்டுதல்;* put an end. *2. இறப்புக்குறி;* sign of death.

**சங்குக்கோலம்** பெ. (n.) *சங்கு உருவம் அமையுமாறு போடும் கோலம்;* ornamental figures like conch, drawn of floor, wall or sacrificial pots.

**சங்கு சக்கரம்** பெ. (n.) *தரையிலோ கம்பியிலோ சுழலக் கூடிய சுருள் வடிவான ஒரு பட்டாசு;* cracker that either spins on the floor or rotates on a metal wire when lit.

**சங்குப்பூ** பெ. (n.) *சங்கின் முட்டைக் கூடு;* egg mass.

**சங்கூதி** பெ. (n.) *1. சங்கூதுவோன்;* conch-blower. *2. வழக்குத் தீர்ப்பதற்கு ஊர் அவையைக் கூட்டுபவன்;* convener of a village committee for setting disputes.

**சங்கொலி** பெ. (n.) *சங்கிலிருந்து எழும் ஒலி;* blowing sound of a conch.

**சச்சரவு** பெ. (n.) *கலகம்;* quarrel, disturbance.

**சட்டக்கல்லூரி** பெ. (n.) *சட்டக் கல்வி கற்பிக்கும் கல்லூரி;* law college.

**சட்டசபை** பெ. (n.) *சட்டப் பேரவை;* legislative assembly.

**சட்டத்துறை** பெ. (n.) *சட்ட நுணுக்கங்கள் பற்றிய துறை;* law department.

**சட்டதிட்டம்** பெ. (n.) *1. சட்ட ஒழுங்கு;* code or regulation. *2. உறுதிப்பாடு;* accuracy, preciseness.

**சட்டம்**[1] பெ. (n.) *1. பாராளுமன்றத் தாலோ சட்டமன்றத்தாலோ பொது மக்கள் நலன் கருதி இயற்றப் படுவது;* act. *2. மக்களின் நலனுக்காக இறை யாண்மை வகுக்கும் நெறிமுறை;* law.

**சட்டம்**[2] பெ. (n.) *நாற்காலி, மேசை, கதவு போன்ற மர அறைகலன்கள் செய்வ தற்காக அளவாக வெட்டப்பட்ட மரத்துண்டு;* piece of wood cut to size.

**சட்டமன்றம்** பெ. (n.) *மாநிலத்துக்கான சட்டங்களை இயற்றும் சட்டப் பேரவையையும் மேலவையையும் கொண்ட, அரசின் மூன்று உறுப்பு களில் ஒன்று;* legislature.

**சட்டமாக்குதல்** வி. (v.) *ஒரு தீர்மானத்தை எல்லோரும் பின்பற்ற வேண்டிய நெறியாக சட்டமன்றம் அல்லது பாராளுமன்றம் ஏற்பிசைவு அளித்தல்;* enact; legislate.

**சட்டமூலம்** பெ. (n.) *சட்டமன்றம் நாடாளுமன்றம் முதலியவற்றில் ஒன்றைச் சட்டமாகச் செய்வதற்கு உறுப்பினர்களால் அல்லது அரசால் கொண்டுவரப்படும் திட்டம் முதலியவை அடங்கிய குறிப்பு, திட்ட வரைவு;* bill (in a legislature or parliament).

**சட்டமேதை** பெ. (n.) *சட்ட வல்லுநர் பார்க்க.*

**சட்ட மேலவை** பெ. (n.) *மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப் படாத அவை;* legislative council.

**சட்டயாப்பு** பெ. (n.) *அரசமைப்புச் சட்டம்;* constitution.

**சட்டவல்லுநர்** பெ. (n.) *சட்டத் தொடர் பானவற்றில் நுட்ப அறிவுடையவர்;* expert in law.

**சட்டவிரோதம்** பெ. (n.) *சட்டத்துக்குப் புறம்பானது அல்லது சட்டத்தை மீறியது;* violation of law; transgression.

**சட்டவிளக்கு** பெ. (n.) *கோயிலில் சட்டத்தில் அமைத்து இடும் விளக்கு வரிசை;* rows of lamps fixed to a frame, as in a temple.

**சட்டி** பெ. (n.) *1. அகன்றவாயுள்ளதும் அடிப்பக்கம் தட்டையாகவுள்ளது மான மட்பாண்டம்;* broad mouthed flaten earthen pot. *2. சமையற்கலம்;* vessel in general.

**சட்டிக்கரணை** பெ. (n.) *காறாக்கரணை;* a tuberous rooted herb.

**சட்டிச்சோறு** பெ. (n.) *1. கோயிற் பணியாளர்க்கும் சிவனடியார்க்கும் சட்டி அளவிட்டுக் கொடுக்கும் சோறு;* food offerings distributed as a perquiste to temple servants.

**சட்டி சுரண்டு** வி. (v.) *சாப்பாட்டுக்கே துன்பப்படுதல்;* scrape the barrel.

**சட்டித்தலை** பெ. (n.) *1. பெருந்தலை;* pot head. *2. வழுக்கைத்தலை;* bald head.

**சட்டிப்பானை** பெ. (n.) *சமையல் முதலிய வற்றிற்கு உதவும் மட்பாண்டங்கள்;* pots and pans, cooking utensils, crockery.

**சட்டுவம்** பெ. (n.) *1. தோசைத்திருப்பி;* spatula. *2. கரண்டி;* ladle. *3. அன்ன வெட்டி;* ladle used to serve cooked rice.

**சட்டை** பெ. (n.) *மெய்ப்பை;* jacket, coat, gown.

**சட்டைக்காரன்** பெ. (n.) *ஐரோப்பிய ருக்கும் இந்தியருக்கும் பிறந்து*

*இந்தியாவில் வாழ்பவன்;* Anglo - Indian.

**சட்டைக்காரி** பெ. (n.) *ஐரோப்பியருக்கும் இந்தியருக்கும் பிறந்து இந்தியாவில் வாழ்பவள்;* Anglo - Indian woman.

**சட்டைத்துணி** பெ. (n.) *சட்டை தைப்பதற்கான துணி;* shirt - cloth.

**சட்டைப்பை** பெ. (n.) *சட்டையில் அமைக்கப்படும் முன் பக்கப் பை;* shirt pocket.

**சடக்கு** பெ. (n.) *விரைவு;* speed, rapidity.

**சடங்கு** பெ. (n.) *பிறப்பு, இறப்பு, திருமணம் போன்ற முக்கிய நிகழ்ச்சி களில் பின்பற்றப்படும் மரபு சார்ந்த செயல்;* ritual (on occasions like birth, death, marriage, etc.,); rite.

**சடங்கு கழித்தல்** வி. (v.) *பெண் பருவம் அடைந்ததை முன்னிட்டு மஞ்சள் நீராட்டிச் சடங்கு நடத்துதல்;* perform ceremony for a girl who has come of age.

**சடலம்** பெ. (n.) *இறந்த உடல்;* dead body.

**சடாரி** பெ. (n.) *கவசம்;* coat of mail. *'பெருமாள் கோயிலில் (ஆசி) வழங்குவதற்காக பக்தர்களின் தலையில் வைத்து எடுக்கப்படும் (வெள்ளி, தங்கம்) போன்ற உலோகங்களால் ஆன திருமாலின் பாதம் பொறிக்கப்பட்ட சிறு (மணிமுடி)'.*

**சடுகுடு** பெ. (n.) *கபடி;* kabaddi.

**சடை[1]** வி. (v.) *தலைமுடி ஒன்றோ டொன்று சேர்ந்து திரளுதல்;* (of hair) get matted; form a lock.

**சடை[2]** பெ. (n.) *பெண்களின் பின்னப் பட்ட தலைமுடி;* plaited hair (of women); pigtail. *2. ஒன்றோ டொன்று சேர்ந்து திரண்ட முடிக் கற்றை;* matted lock of hair.

**சடைவில்லை** பெ. (n.) *தலைப் பின்னலிற் பெண்கள் செருகியணியும் தலையணி வகை;* gold disc worn on the hair - plait, a woman's ornament.

**சண்டை** பெ. (n.) *1. ஒருவரோ அல்லது குழுவினரோ ஒருவரை ஒருவர் கையாலோ கம்பாலோ தாக்கிக் கொள்ளுதல்;* fight; attack. *2. போர்;* war.

**சண்டைக்காரன்** பெ. (n.) *1. சண்டை யிடுங் குணமுள்ளவன்;* quarrelsome person. *2. பகைவன்;* enemy.

**சண்டைக்கு நிற்றல்** வி. (v.) *சண்டை போடுவதில் விரைவு காட்டுதல்;* be ready to fight or confront.

**சண்டைக்கோழி** பெ. (n.) *சண்டை யிடுவதற்காகவே வளர்க்கப்படும் சேவல்;* cock bred for cock fight.

**சண்டைபிடித்தல்** வி. (v.) *ஒருவரிடம் சண்டைக்குப் போதல் அல்லது சண்டையிடுதல்;* pick up a quarrel with.

**சண்டைபோடுதல்** பெ. (n.) *போராடுதல்;* to pick quarrel, fight.

**சண்டை மூட்டுதல்** வி. (v.) *இருதரப்பி னர்க்கிடையே சண்டை உருவாக் குதல்;* to create quarrel or fight between two parties.

**சணப்பை** பெ. (n.) *சற்றுக் குட்டையாக வளரும் ஒருவகைப் பசுந்தாள் உரப் பயிரி;* sun hemp.

**சணல்நார்** பெ. (n.) *புளிச்சைக் கீரையிலிருந்து எடுக்கும் ஒருவகை நார்;* fibres taken out from sour green or chicori plant.

**சதங்கை** பெ. (n.) *ஒலி எழுப்பக்கூடிய சிறுசிறு மணிகள் இணைக்கப்பட்ட பட்டை;* strip of small metal bells.

**சதசதத்தல்** வி. (v.) *ஈரப்பதமாயிருத்தல்;* to be damp, wet.

**சதசதப்பு** பெ. (n.) *மண், மணற் களிமண் முதலியவற்றில் நீர்பட்டுக் குழைவாக இருக்கும் நிலை;* wetness, sogginess.

**சதுக்கம்** பெ. (n.) *1. பெரும்பாலும் நான்கு சாலைகள் கூடும் இடத்தி லுள்ள சதுர வடிவத் திறந்தவெளி;* road junction; cross roads; square. *2. மறைந்த தலைவரின் நினைவாக எழுப்பப்படும் சதுர மேடையுடன் கூடிய நினைவுச் சின்னம்;* memorial built for famous persons.

**சதுப்பு நிலம்** பெ. (n.) *எல்லாப் பருவங்களிலும் ஈரமும் சேறுமாக இருக்கும் நிலப்பகுதி;* marsh.

**சதுரம்** பெ. (n.) *ஒத்த அளவுடைய நான்கு பக்கங்களையும் கோணங்களையும் கொண்ட வடிவம்;* square.

**சதை** பெ. (n.) *1. உடலில் தோலுக்குக் கீழ் எலும்பைச் சுற்றியுள்ள கொழுப்பு நிறைந்த மென்மையான பகுதி;* flesh; muscle. *2. பழம், தண்டு போன்ற வற்றில் தோலுக்குக் கீழ் உள்ளே அமைந்திருக்கும் திரட்சியான, மென்மையான பகுதி;* fleshy part (of fruit).

**சதைப்பற்று** பெ. (n.) *சதை நிறைந்துள்ள நிலை;* the state of being fleshy.

**சதைப்பிடிப்பு** பெ. (n.) *சதை நிறைந்துள்ள நிலை;* the state of being fleshy.

**சதைபோடுதல்** வி. (v.) *1. பருத்தல்;* to stout. *2. குண்டாதல்;* to plump.

**சந்தப்பாட்டு** பெ. (n.) *நான்கெழுத்து முதல் இருபத்தாறெழுத்து வரை யுள்ள அடிகள் நான்கு கொண்ட பாவகை;* stanza of four lines with twenty six syllables to a line.

**சந்தம்** பெ. (n.) *செய்யுளில் தாள கதியைத் தோற்றுவிக்கும் ஓசை நயம்;* musical or rhythmic flow.

**சந்தனக்கல்** பெ. (n.) *சந்தனம் அரைக்கப் பயன்படுங்கல்;* stone for grinding sandal.

**சந்தனக்காப்பு** பெ. (n.) *சந்தனத்தைக் கடவுளின் திருமேனியில் வழிபாட்டுக் காகப் பூசுகை;* anointing an idol with sandal paste.

**சந்தனக்குச்சி** பெ. (n.) *மணக்குச்சி (ஊதுபத்தி);* incense stick; scented stick.

**சந்தனக்கூடு** பெ. (n.) *முகமதியப் பெரியவர்களுக்காக நடத்தப்படும் திருவிழாவில் சிறு தேரின் நடுவில் வைத்து எடுத்துச் செல்லும் சந்தனக் குடம்;* a small pot filled with sandal paste kept in a temple chariot taken act in procession in honour of muslim saints.

**சந்தனக்கோல்** பெ. (n.) *சந்தனக் குச்சி;* stick.

**சந்தனத்திரி** பெ. (n.) *சந்தனம் முதலிய மணப்பொருள்களால் செய்யப்படும் மணக்குச்சி (ஊதுவத்தி);* wick or thin stick coated with sandal or other perfumed paste for diffusing odour while burning joss-stick.

**சந்தனநலங்கு** பெ. (n.) *திருமணத்திற்கு முன்னால் பெண்ணுக்கும் மாப் பிள்ளைக்கும் அவரவர் வீடுகளில் அரைத்த சந்தனம் முதலியவற்றைப் பூசி நலங்கு வைக்கின்ற சடங்கு;* a ceremony prior to marriage in which nalaṅgu is performed in the respective houses of the bride and bridegroom.

**சந்தனநீராட்டு** பெ. (n.) *கடவுள் திருமேனிக்குச் சந்தனக் குழம்பால் செய்யும் நீராட்டு;* anointing an idol with sandal paste.

**சந்தனப் பலகை** பெ. (n.) *சந்தன மரத்தாலான மணைப் பலகை;* well polished seats made of sandal wood.

**சந்தனப்பொட்டு** பெ. (n.) *சந்தனக் குழம்பால் நெற்றியில் வைக்கும் பொட்டு;* a circular mark of sandal paste worn on the forhead.

**சந்தனப்பொடி** பெ. (n.) *நறுமணச் சந்தனத் தூள்;* sweet - scented sandalwood powder.

**சந்தனம்** பெ. (n.) *மணம் மிகுந்த எண்ணெய் எடுக்கவும் மணப் பொருள்கள் உருவாக்கவும் பயன் படும் மரம்;* sandal wood.

**சந்தனமுழுக்கு** பெ. (n.) *இறைவன் திருமேனிக்குச் சந்தனத்தில் செய்யும் முழுக்கு;* anointing an idol with sandal paste.

**சந்தனவில்லை** பெ. (n.) *சந்தன உருண்டை;* sandal tablet, small cake of sandal paste.

**சந்தி** பெ. (n.) *1. சாலைகள் கூடும் இடம்;* junction; cross roads. *2. இரண்டு சொற்கள் அல்லது இடைச்சொற்கள் சேரும்போது அவற்றின் இறுதி எழுத்தும் அடுத்து வருவதன் முதல் எழுத்தும் இணையும்போது ஏற்படும் மாற்றம் முதலியவை;* sandhi.

**சந்திக்கிழு–த்தல்** பெ. (n.) *மானக்கேடு உண்டாக்கும் நோக்கத்தோடு ஒருவரின் குறைகளைப் பலரும் அறியச் செய்தல்;* to expose to public, ridicule, drag somebody through the mud.

**சந்திசிரித்தல்** வி. (v.) *பலருடைய ஏளனத்திற்கு உள்ளாகுதல்;* become the object of public ridicule.

**சந்தித்தல்** வி. (v.) *1. ஒருவரைக் குறிப்பிட்ட இடத்தில் திட்டமிட்ட படியோ தற்செயலாகவே பார்த்துப் பேசுதல்;* meet. *2. ஆறுகள், சாலைகள் கூடுதல்; இரண்டு கோடுகள் ஒரு புள்ளியில் சேருதல்; ஒன்று சேர்தல்;* of rivers flow together; of roads join.

**சந்திப்பு** பெ. (n.) *1. ஒருவர் மற்றொரு வரைச் சந்திக்கும் செயல்;* meeting with a person. *2. சாலைகள் சேரும் இடம்;* junction. *இரண்டுக்கு மேற்பட்ட திசைகளில் போகும் இருப்புப் பாதைகள் உள்ள இடத்தில் அமைந் திருக்கும்.*

**சந்தியில்போடுதல்** வி. (n.) *சந்தியி லிழு-த்தல் பார்க்க.*

**சந்தியில்விடுதல்** வி. (v.) *ஒருவன் குடும்பத்தைப் போக்குப் புகலில் லாதவாறு செய்தல்; தெருச் சந்தியில் ஒருவனை விடுதல்;* lit., to leave one at the cross roads, to desert as one's family.

**சந்தியிலிழுத்தல்** வி. (v.) *ஒருவனது குற்றங்குறைகளை வெளிப்படுத்திப் பலர் பழிதூற்றுமாறு செய்தல்;* lit., to drag one the cross rods to expose publically to ridicule and shame.

**சந்தியில் நில்தல் (சந்தியில் நிற்றல்)** வி. (v.) *அனைத்தையும் இழந்து தெருச் சந்தியில் நிற்றல்;* be driven to helplessness.

**சந்து** பெ. (n.) *1. அகலம் குறைவான தெரு அல்லது வழி;* narrow street; lane. *2. குறுகிய இடைவெளி; இடுக்கு;* narrow gap; cleft; chink.

**சந்துக்கட்டு** பெ. (n.) *1. செயல் நிகழுங் காலம்;* period, duration. *2. நெருக்கடி யான நேரம்;* crisis, critical juncture.

**சந்துபொந்து** பெ. (n.) *1. மூலை முடுக்கு;* nook and corner. *2. பொந்துபுடைகள்;* interstices.

**சந்தை** பெ. (n.) *1. குறித்த காலங்களில் பொருள்களை விற்கவும் வாங்கவும் பலரும் கூடுமிடம்;* shandy, fair, a market functioning on specified occasion. *2. கூட்டம்;* multitutude, herd, flock. *3. இரு புருவமுங் கூடுமிடம்;* the mid-point between the eye brows.

**சந்தை கூடுதல்** வி. (v.) *பொருள்களை விற்க ஓரிடத்தில் கூடுதல்;* to assemble in a particular place to sell goods.

**சந்தைப்படுத்துதல்** வி. (v.) *நுகர்வோரைச் சென்றடையும் வகையில் தகுந்த ஏற்பாடுகளைச் செய்து பொருள்கள், விற்பனைக்குக் கிடைக்கச் செய்தல்;* market a product, service, etc.,).

**சப்பணங்கட்டுதல்** வி. (v.) *அட்டணைக் காலிடுதல்;* to sit cross legged.

**சப்பணம்** பெ. (n.) *அட்டணைக் காலிடுகை;* act of sitting flat and cross legged.

**சப்பளக்கட்டை** பெ. (n.) *இசையுடன் கதை கூறுவோர் நான்கு விரல்களில் ஒன்றும் கட்டை விரலில் ஒன்றுமாகக் கோத்துக் கொள்ளும் சிறு மணிகள் இணைக்கப்பட்ட தாளக்கட்டை;* being held in between the fingers, pair of wooden pieces with tiny bells for marking time by the performers of religious songs.

**சப்பாணி** பெ. (பே.வ.) (n.) *நொண்டி;* cripple; lame person.

**சப்பாணிப்பருவம்** பெ. (n.) *பிள்ளைத் தமிழில் இலக்கியத்துக்கு உரிமை பூண்ட குழந்தையைக் கைகொட்டி விளையாடுமாறு வேண்டும் பருவம்;* section of *piḷḷai-t-tamil*, which describes the stage when a child begins to clap hands.

**சப்பி** பெ. (n.) *பதர்;* chatt *(யாழ்ப்.)*.

**சப்புதல்** வி. (v.) *1. உண்ணும்போது நாக்கினால் அல்லது உதடுகளால் 'சப்' என்ற ஒலி உண்டாக்குதல்;* to make sound 'sap' either with tongue or lips while eating. *2. சுவைத்து ஒன்றன் சாறை உறிஞ்சிக் குடித்தல்;* to sip, suck. *3. குதப்புதல்;* to mumble in eating; to munch.

**சப்புக்கொட்டுதல்** வி. (v.) *சுவை மிக்க தின்பண்டங்களைச் சுவைக்கும் போது நாக்கினால் ஒலி எழுப்பிச் சுவையின் அருமையை வெளிப் படுத்துதல்;* to relish a dish or an item of food by making a click.

**சப்பெனல்** பெ. (n.) *1. சுவையின்மைக் குறிப்பு;* onom, expr. signifying insipidity. *2. முற்றிலும் நீங்குதலைக் குறிக்கும் ஒலிக்குறிப்பு;* onom, expr. signifying complete removal. *'வீக்கம் சப்பென்று குறைந்துவிட்டது'*.

**சப்பை** பெ. (n.) *1. தட்டை;* flat. *2. தட்டையான தொடைப் பகுதி;* flank.

**சப்பைக்கட்டு** பெ. (n.) *1. தவறான காரணம், நொண்டிச்சமாதானம்;* lame excuse. *2. உறுதி யில்லாத முடிச்சு;* uncertain knot.

**சப்பைக்கட்டை** பெ. (n.) *வலை மிதவைக் கட்டை;* floating log of fishing net.

**சப்பைப்பிடிப்பு** பெ. (n.) *இடுப்புப் பக்கத்தில் உண்டாகும் ஊதை வகை;* rheumatism in the hips, hip gout.

**சப்பைமூக்கு** பெ. (n.) *தட்டையான மூக்கு;* flat pug nose.

**சப்பையான்** பெ. (n.) *பயனற்றவன்;* a worthless person.

**சப்பையெலும்பு** பெ. (n.) *இடுப்பெலும்பு;* hip bone.

**சப்பைவேலை** பெ. (n.) *இழிவானதாகக் கருதப்படும் பணி;* work of inferior quality.

**சம்பல்** பெ. (n.) *தேங்காய், மிளகாய், புளி முதலியவற்றைச் சேர்த்து அரைத்த துவையல்;* a kind of tuvaiyal.

**சம்பளம்** பெ. (n.) *செய்த வேலைக்குப் பெறும் கூலி;* salary.

**சம்பளம்போடுதல்** வி. (v.) *கூலி கொடுத்தல்;* to pay wages.

**சம்பா** பெ. (n.) *பெரும்பாலும் சுறவ (தை) மாதம் அறுவடையாகும், ஐந்து மாதக் கால நெற்பயிர்;* a crop of paddy of five months duration harvested sometime in thai.

**சம்பாமிளகாய்** பெ. (n.) *மிளகாய் வகையுள் ஒன்று;* a kind of chilly.

**சம்மணங்கால்** பெ. (n.) *சம்மணம் பார்க்க.*

**சம்மணங்கால்போடுதல்** வி. (v.) *இரு காலையும் மடக்கி நிலத்தில் உட்காருதல்;* to squat down with folded legs.

**சம்மணம்** பெ. (n.) *சப்பணம்;* a cross legged sitting posture.

**சம்மட்டி** பெ. (n.) *கல்லை உடைக்க அல்லது காய்ச்சிய இரும்பை அடித்து நீட்டப் பயன்படுத்தும் (கனமான) வலுவான இரும்புத் துண்டில், நீளமான மரம் கைப்பிடி செருகப் பட்ட பெரிய சுத்தியல்;* larg hammer; sledge hammer.

**சமக்கோடு** பெ. (n.) *சமமானது என்பதைக் காட்டும் இரு இணை கோடுகள்;* the symbol (=) which shows equal.

**சமகாலம்** பெ. (n.) *1. தான் வாழும் காலம், ஒருவர் வாழ்ந்த, தோன்றிய காலம்;* contemporary. *2. ஒரே காலம்;* same period or time.

**சமகோணம்** பெ. (n.) *ஒத்த கோணங் களையுடைய வடிவம்;* equiangular figure.

**சமச்சதுரம்** பெ. (n.) *ஒத்த அளவுள்ள நாற்கோணம்;* square.

**சமச்சீர்** பெ. (n.) *ஏற்றத்தாழ்வுகள் இல்லாத நிலை;* balance, equity.

**சமச்சீர்வரி** பெ. (n.) *மாநிலங்களுக்கு இடையே வேறுபாடு இல்லாத ஒரே சீரான விற்பனை வரி;* uniform tax.

**சமஞ்செய்தல்** வி. (v.) *1. மேடு பள்ளம் சரிபடுத்துதல்;* to make even. *2. ஒழுங்காக்குதல்;* to put in order.

**சமத்துவம்** பெ. (n.) *உலக மக்கள் அனைவரும் சமம் என்றும் அவர் களுக்குச் சம வாய்ப்புகள் கிடைக்க வேண்டும் என்றும் கூறும் கொள்கை;* equality; egalitarianism.

**சமதளம்** பெ. (n.) *மேடு பள்ளம் இல்லாமல் ஒரே சீராக இருக்கும் நிலம்;* level evenness.

**சமநிலம்** பெ. (n.) *மேடுபள்ளமில்லாமல் சமமாக இருக்கும் நிலம்;* plain country, level ground.

**சமநிலை** பெ. (n.) *1. ஏற்றத்தாழ்வு, வேறுபாடு ஆகியவை இல்லாத ஒப்பான நிலை;* equal footing, equality. *2. நடுவு நிலைமை;* fairness, impartiality. *3. விளையாட்டுகளில் வெற்றி தோல்வியைக் கணிக்க முடியாத நிலை;* draw, tie.

**சமநிலையாளர்** பெ. (n.) *நிலை, மதிப்பு, தன்மை, அகவை போன்றவற்றில் ஒத்த தன்மையுள்ளவர்;* equal.

**சமநோக்கு** பெ. (n.) *எல்லாவற்றையும் ஒரே மாதிரியாக நோக்குகை;* impartial attitude considering all things alike.

**சமப்படுத்துதல்** வி. (v.) *1. மேடு பள்ளத்தை நீக்கி மட்டமாக்குதல்;* to make level. *2. ஒழுங்குபடுத்துதல்;* to put in order. *3. நல்லதாக்குதல்;* to make proper or nice.

**சமப்பார்வை** பெ. (n.) *எல்லாவற்றையும் ஒரே மாதிரியாக நோக்குகை;* impartial attitude considering an things alike.

**சமபந்தி** பெ. (n.) *1. விருந்தில் ஒரே வரிசை;* same row at a feast. *2. ஒரே பந்தியில் உணவு கொள்ளும் உரிமை;* right of taking meals at the same table commensality. *2. சாதி வேறுபாடு, ஏழை, பணக்காரன் போன்ற ஏற்றத் தாழ்வு பார்க்காமல் எல்லோரும் ஒன்றாக உணவு உண்ணும் பொது நிகழ்ச்சி;* sitting together to eat food.

**சமம்** பெ. (n.) *1. ஒப்பு;* likeness, equality. *2. ஒத்தபொருள்;* equal or similar object. *3. நடுவு நிலை;* impartiality. *4. ஏற்றத் தாழ்வின்மை, ஒரே சீரான தன்மை;* evenness.

**சமயக்குரவர்** பெ. (n.) *மதத்தை நிலை நிறுத்திய சைவப் பெரியோர்;* great man who established a religion.

**சமயக்கொள்கை** பெ. (n.) *மதக் கொள்கை;* principles or doctorines of religion.

**சமயச்சந்துக்கட்டு** பெ. (n.) *சமையச் சந்துக்கட்டு பார்க்க.*

**சமயப்பற்று** பெ. (n.) *மதத்தின் மேல் ஒருவன் கொள்ளும் அன்பு;* love of one's own religion.

**சமயபோதனை** பெ. (n.) *மதக்கொள்கை களைக் கற்பித்தல்;* religious instruction.

**சமயம்** பெ. (n.) *1. மதம்;* creed or religious system. *2. மதநூல்;* text book as of a religion. *3. குறிப்பிட்ட ஒன்றைச் செய்வதற்கான அல்லது செய்யும் நேரம்;* time.

**சமயம்பார்த்தல்** வி. (v.) *தக்க காலத்தை எதிர்ப்பார்த்திருத்தல்;* to watch for a suitable opportunity.

**சமயவாதி** பெ. (n.) *தன் மதத்தைப் போற்றிப் புகழ்பவன்;* exponent of a religion.

**சமவலிமை** பெ. (n.) *இணையான ஆற்றல் அல்லது திறமை;* equal strength.

**சமவிலை** பெ. (n.) *ஏற்றமில்லாத நடுத்தர விலை;* moderate price.

**சமன்செய்தல்** வி. (v.) *சமஞ்செய்தல் பார்க்க.*

**சமவுரிமை** பெ. (n.) *இணையான உரிமை;* equal rights.

**சமவெளி** பெ. (n.) *1. மேடு பள்ளமற்ற நிலப்பகுதி;* plain. *2. ஆறுகள் பாயும் நிலப்பகுதி;* valley.

**சமன்** பெ. (n.) *சமநிலை;* balance; equilibrium.

**சமன்பாடு** பெ. (n.) *1. ஒன்றுக்கொன்று சமநிலையில் இருக்கும் அல்லது ஒத்துப்போகும் தன்மை;* balance. *2. இரு அளவுகள் சமம் எனக் காட்டும் குறியீட்டு வடிவிலான கூற்று;* mark of an equation.

**சமையச்சந்துக்கட்டு** பெ. (n.) *நெருக் கடியான நேரம்;* critical time.

**சமையம் பார்த்தல்** வி. (v.) *வினைக்குத் தக்க வேளையை எதிர்பார்த்தல்;* to watch for a suitable opportunity.

**சமையற்கட்டு** பெ. (n.) *உணவு சமைக்கும் அறை; சமையலறை;* kitchen.

**சமையல் உப்பு** பெ. (n.) *சமையலுக்கு என்றே அணியமாக்கப்பட்ட உப்பு;* salt manufactured exclusively for cooking.

**சமையல் சோடா** பெ. (n.) *ஆப்பம் முதலிய உணவுப் பண்டங்களுக்குப் பயன் படுத்தும் ஒரு வகை வேதி உப்பு;* baking soda; sodium bicarbonate.

**சமையல்** பெ. (n.) *1. சமைக்கை;* cooking. *2. சமைத்த உணவு;* cooked food.

**சமையல்வாயு** பெ. (n.) *இல்லத்தில் சமைக்கப் பயன்படும் நீர்ம நிலையில் உள்ள கன்னெய், எரிபொருள்;* cooking gas; liquefied petroleum gas.

**சமையலறை** பெ. (n.) *சமையற்கட்டு பார்க்க.*

**சமையற்குறிப்பு** பெ. (n.) *ஒரு குறிப்பிட்ட உணவு சமைக்கத் தரப்படும் செய் முறை விளக்கம்;* recipe, tips for cooking.

**சர்க்கரைப் பொங்கல்** பெ. (n.) *அரிசியையும் பாசிப் பருப்பையும் நன்றாக வேக வைத்து வெல்லத்தைப் பொடித்துப் போட்டு நெய் ஊற்றிச் செய்யும் இனிப்பு உணவு;* boiled rice mixed with jaggery and ghee.

**சரக்கு** பெ. (n.) *1. வணிகப்பண்டம்;* articles of merchandise. *2. விரிந்த கல்வியறிவு முதலியவற்றால் ஏற்படும் தகுதி அல்லது திறமை;* solid worth ability. *3. மது;* liquor.

**சரக்குந்து** பெ. (n.) *பொருள்களை ஏற்றிச் சாலையில் செல்லும் வண்டி;* heavy vehicle such as lorry, truck, etc.,

**சருகு** பெ. (n.) *1. உலர்ந்து வற்றிய இலை;* dried leaf. *2. வெற்றிலை;* betel leaf.

**சல்லடை** பெ. (n.) *தவசம் முதலியன சலிக்கும் கருவி;* sieve.

**சல்லடைக்கட்டில்** பெ. (n.) *மணல் சுண்ணாம்பு முதலியவற்றைச் சலிப்பதற்குப் பயன்படும் இரும்புக் கம்பி வகையாலான கட்டில்;* large sieve for litting sand, lime, etc.,

**சல்லடைக்கண்** பெ. (n.) *சல்லடையின் துளை;* hole of sieve.

**சல்லடைபோட்டுத்தேடுதல்** வி. (v.) *ஓரிடங்கூட விடாமல் தேடுதல்;* to search thoroughly.

**சல்லம்** பெ. (n.) *சிறியது;* that which is small.

**சல்லரிதல்** வி. (v.) *துண்டு துண்டாக நறுக்குதல்;* to hack, cut into pieces.

**சல்லி** பெ. (n.) *1. கல் முதலியவற்றின் உடைந்த துண்டு;* a small piece of stone or glass. *2. சிறுகாசு;* small copper coin, fractional part of a larger coin, 1 1/2 anna. *3. பொறுப்பற்றவன், இழிந்தவன்;* a mean fellow, a trifler.

**சல்லிக்கட்டு** பெ. (n.) *முரட்டு எருதுகளைக் கொட்டு முழக்குடன் வெளியில் விட்டுத் துரத்தி அவற்றினைத் தழுவிப் பிடிக்கச் செய்யும் ஒரு வீர விளையாட்டு;* bull baiting festival in which the competitors capture fierce bulls let loose on the occasion.

**சல்லிக்கரண்டி** பெ. (n.) *துளையுள்ள ஒருவகைச் சிறுகரண்டி;* a broad perforated ladle.

**சல்லிசு** பெ. (n.) *மலிவு;* cheap. '*சல்லிசு விலையில் மிளகாய் கிடைத்தது*'

**சல்லிவேர்** பெ. (n.) *ஆணிவேரின் கிளையில் கொத்தாக வளரும் வேர்;* root let.

**சலசலத்தல்** வி. (v.) *1. சலசலவென ஒலித்தல்;* to rustle. *2. ஓயாமற் பேசுதல்;* to be talking incessantly.

**சலசலப்பு** பெ. (n.) *1. நீர் ஓடும் ஓசை;* the wash of flowing water. *2. அச்சுறுத்தும் பேச்சு;* threat.

**சலவை** பெ. (n.) *ஆடை வெளுக்கை;* bleaching or washing of clothes.

**சலவை இயந்திரம்** பெ. (n.) *துணிகளைத் துவைத்தும், உலர்த்தியும் தரும் சலவைப்பொறி;* washing machine.

**சலவைக்கல்** பெ. (n.) *ஒருவகை வண்ணக்கல்;* marble, polished stone.

**சலவைத்தூள்** பெ. (n.) *துணிகளைத் துவைக்கப் பயன்படும் நுரைக்கும் தன்மை உள்ள (தாவர எண்ணெயிலிருந்தோ தயாரிக்கப்படும்) தூள்;* washing powder.

**சலித்தல்** வி. (v.) *1. மனக்கலக்கமடைதல்;* to be trouble in mind. *2. வெறுத்தல்;* to hate, to be disgusted with. *3. சல்லடையாற் சலித்தல்;* to shift.

**சலிப்பு** பெ. (n.) *1. வெறுப்பு;* dissatisfaction. *2. சோர்வு;* wearness, languor.

**சலுகை** பெ. (n.) *நெறிமுறைகளைத் தளர்த்தி வழங்கப்படும் விலக்கு;* concession, relief.

**சலுகை அட்டை** பெ. (n.) *விலையில் அல்லது கட்டணத்தில் வழக்க மானதைவிடக் குறைவாகச் செலுத்த இசைவு தரும் படிவம்;* concessionary coupon.

**சலுகைவிலை** பெ. (n.) *குறிப்பிட்ட விலையில் தரப்படும் தள்ளுபடி;* discount.

**சவக்கிடங்கு** பெ. (n.) *பிணங்களைக் கெடாமற் காக்கும் அறை;* mortuary.

**சவ்வு** பெ. (n.) *1. பழங்கொட்டை முதலியவற்றை மூடியுள்ள தோல்;* envelope round the pulp of fruit. *2. கண் முதலியவற்றின் மெல்லிய மூடு தோல்;* membrane, as of the diaphragm.

**சவக்குழி** பெ. (n.) *பிணக்குழி;* grave, sepulchre.

**சவட்டு நிலம்** பெ. (n.) *உவர்மண் நிலம்;* saline, barren soil.

**சவப்பெட்டி** பெ. (n.) *பிணத்தை வைத்து மூடிப் புதைப்பதற்கான மரப்பெட்டி;* coffin.

**சவர்மண்** பெ. (n.) *உப்புத்தன்மை கொண்ட மண், உவர்மண்;* fullers earth impregnated with carbonate of soda.

**சவலை** பெ. (n.) *(அடுத்தடுத்துப் பிறந்துவிடுவதால் தாய்ப்பால் கிடைக்காத முந்தைய குழந்தையின் அல்லது கன்றின்) வளர்ச்சியும் வலிமையும் இல்லாத மெலிந்த நிலை;* thinness (of an infant deprived of mother's milk due to the birth of a new born).

**சவலைக்குழந்தை** பெ. (n.) *தாய்ப் பாலின்றி மெலிந்த குழந்தை;* sucking child which grown lean for want of mother's milk.

**சவலைப்பயிர்** பெ. (n.) *கதிர் வராமல் வாடிய பயிர்;* plant which does not give corn.

**சவலைப்பிள்ளை** பெ. (n.) *சவலைக் குழந்தை பார்க்க.*

**சவலைவெண்பா** பெ. (n.) *தனிச் சொல்லின்றி இரண்டு குறள் வெண் பாக்களை இணைத்துச் செய்யும் வெண்பா (மாறனலங் 198.உரை)* venbā composed of two kuraḷ-veṇbā without an extra detached foot in the middle.

**சவள்** பெ. (n.) *படகு தள்ளும் துடுப்பு;* a kind of oar.

**சவளிக்கடை** பெ. (n.) *துணிக்கடை;* cloth shop.

**சற்று** பெ. (n.) *1. சிறிதளவு;* trifle. *2. எளிமை;* ease, facility.

**சறுக்கல்** பெ. (n.) *வழுக்கல்;* slipperiness, slipping.

**சறுக்குதல்** வி. (v.) *1. வழுக்குதல்;* to slip or slide. *2. உராய்ந்து செல்லுதல்;* to skim, graze.

**சறுக்குமரம்** பெ. (n.) *சிறுவர் விளை யாடும் வழுக்குமரம்;* greased pole, slippery post.

# சா

**சாக்கிடுதல்** வி. (v.) *பொய்க்காரணம் கூறுதல்;* to make a false excuse, allege as a pretext.

**சாக்கைக்கூத்து** பெ. (n.) *ஆடவர் ஆடும் கூத்து வகையுளொன்று;* a dance performed by *šākkiyaṉ* .

**சாட்டுதல்** வி. (v.) *1. பொறுப்பை அல்லது கடமையைப் பிறனிடம் சார்த்துதல்;* to transfer as a debt; to assign. *2. ஒருவர் மீது குற்றம் சுமத்துதல்;* to accuse, charge with.

**சாட்டு** பெ. (n.) *சாக்குப்போக்கு;* pre text *(இலங்.).*

**சாட்டை** பெ. (n.) *1. வண்டி இழுக்கும் விலங்குகளை அடிக்கப் பயன் படுத்தும் பிரம்பின் நுனியில் சிறிய தோல்வாரையுடைய ஒருவகைக்*

'கசை'; whip, made of cord or leather. *2. பம்பரத்தைச் சுழலச் செய்வதற் கான நீண்ட நூல் கயிறு;* string to spin a top.

**சாட்டைஅடி** பெ. (n.) *ஒருவருடைய தவறைச்சுட்டிக்காட்டித் தெரிவிக்கும் கண்டனம்;* stinging attack.

**சாட்டைக்கோல்** பெ. (n.) *சாட்டையின் கைப்பிடிக்கோல்;* the wooden handle of a whip.

**சாடி–த்தல்** வி. (v.) *கோள் சொல்லுதல்;* to slander.

**சாடுதல்** வி. (v.) *1. அடித்தல்;* to beat. *2. தாவுதல், தாண்டுதல்;* leap; jump. *3. குறைகூறிக் கடுமையாகத் தாக் குதல்;* to critisize vehemently, attack verbally.

**சாடை** பெ. (n.) *1. சாயல்;* appearance, feature. *2. சைகை;* hint, significant, gesture.

**சாடைமாடையாய்** வி.எ. (adv.) *1. குறிப் பாக;* by hint. *2. பார்த்தும் பாராமல்;* without taking serious notice, somewhat indifferently.

**சாணஎரிவாயு** பெ. (n.) *மாட்டுச் சாணத்தை நொதிக்க வைத்து அணியமாக்கும் எரிவளி;* gas produced from decomposed cow dung, gobar gas.

**சாணக்கல்** பெ. (n.) *சாணைக்கல் பார்க்க.*

**சாணைக்கல்** பெ. (n.) *கத்தி, அரிவாள் போன்ற கருவிகளைத் தீட்டுங்கல்;* grindstone, whetstone, hone.

**சாணந்தெளித்தல்** வி. (v.) *வீடு முதலிய வற்றைத் தூய்மை செய்ய ஆவின் சாணி நீர் தெளித்தல்;* to sprinkle cow-dung mixed in water, for cleansing.

**சாணிதட்டுதல்** வி. (v.) *சாணியை வறட்டிக்காகத் தட்டுதல்;* to beat cow-dung into cakes for fuel.

**சாணிப்பால்** பெ. (n.) *களத்தில் நெற் குவியலின் மேல் குறியிடுதற்குரிய சாணி நீர்;* cow dung mixed in water and unst for making paddy heaped on the threshing floor.

**சாணிபோடுதல்** வி. (v.) *ஆ மலங் கழித்தல்;* to evacuate dung, as cow or buffalo.

**சாணை** பெ. (n.) *சாணைக்கல் பார்க்க.*

**சாணைப்பிள்ளை** பெ. (n.) *கைக்குழந்தை;* infant in arms; nursling.

**சாணைபிடித்தல்** வி. (v.) *கத்தி போன்ற கருவியைக் கூர்மைப்படுத்துதல்;* to grind, whet, sharpen, as a weapon.

**சாத்துதல்** வி. (v.) *1. கதவு, காலதர் போன்றவற்றை மூடுதல்;* shut the door, window, etc., close. *2. ஒன்றின் மேல் சாய்ந்த நிலையில் இருக்கச் செய்தல்;* rest something, at a slant. *3. தெய்வத்துக்கு மாலை அணிவித்தல்;* decorate; bedeck with.

**சாத்துக்கம்பு** பெ. (n.) *தாழ்வாரத்தைத் தாங்கச் சாய்வாக அமைக்கப்பட்ட கழி;* support pole.

**சாத்துக்கழி** பெ. (n.) *கூரையைத் தாங்க முகட்டு வளையையும் சுவரின் மேற்பகுதியிலமைந்த சட்டத்தையும் இணைக்கும் மரச்சட்டம்;* a kind of wooden bar used in sloping roof.

**சாத்துவாய்** பெ. (n.) *கோட்டுவாய் (உமிழ்நீர் ஒழுகும் வாய்);* saliva trickling from one's mouth; dribble.

**சாதிக்காய்** பெ. (n.) *உருண்டையாயும், பழுப்பு நிறமாயும், மணம் கொண்டுள்ளதாயுமுள்ள ஒரு வகை நெற்றுக்காய்;* common nutmeg.

**சாந்தகப்பை** பெ. (n.) *கொத்தன் கரண்டி;* mason's trowel.

**சாந்து** பெ. (n.) *1. சுண்ணாம்புடன் மணல் சேர்த்து அணியப்படுத்தப் படும் கலவை;* lime mortar used instead of

cement. 2. *(உடலில் பூசிக் கொள்ளும் சந்தனம்; மருதாணி முதலியவற்றின்) அரைத்த கலவை;* paste of sandal, etc., 3. *பெண்களும் குழந்தைகளும் வைத்துக்கொள்ளும் மை;* black pigment (used as a cosmetic).

**சாந்துப்பொட்டு** பெ. (n.) *கருஞ்சாந்தால் நெற்றியிலிடும் பொட்டு;* tilakam made with black pigment.

**சாப்பாட்டுராமன்** பெ. (n.) *பெருந்தீனிக் காரன்;* glutton.

**சாப்பாடு** பெ. (n.) *சோறு, குழம்பு, சாறு, மோர் போன்றவை அடங்கிய உணவு;* generally food; (particularly) meal.

**சாப்பிடுதல்** வி. (v.) *1. உட்கொள்ளுதல், உண்ணுதல்;* eat. *2. (பானம்) குடித்தல், மருந்து விழுங்குதல்;* drink coffee, etc.,

**சாபக்கேடு** பெ. (n.) *சீர்கெட்ட தன்மை;* cursed state; accursed thing.

**சாபம்** பெ. (n.) *ஒருவர் மீது சினம் கொண்டு அவருக்குத் தீங்கு அல்லது அழிவு நேர வேண்டுமென்று கூறும் சாவ மொழி;* curse, imprecation.

**சாபம்கொடுத்தல்** வி. (v.) *சாபமிடு-தல் பார்க்க.*

**சாபமிடுதல்** வி. (v.) *திட்டுதல்;* to curse, revile.

**சாம்பல்** பெ. (n.) *1. மரம், கரி முதலியவை எரிந்து கிடைக்கும் தூள்;* ashes. 2. *இறந்தவரை எரித்த பின் கிடைக்கும் என்புத் தூள்;* ashes.

**சாம்பல்கரைத்தல்** வி. (v.) *சாம்பற் கரை-த்தல் பார்க்க.*

**சாம்பல்சத்து** பெ. (n.) *பயிரின் திரட்சிக்கும், நோய் எதிர்ப்புத் தன்மைக்கும் உதவியாக இருந்து நல்ல விளைச்சலைத் தரும் ஊட்டம்;* potash.

**சாம்பல்நோய்** பெ. (n.) *எள் பயிரைத் தாக்கும் நோய்;* a disease attack gingelly.

**சாம்பல்பூ** வி. (v.) *1. கதிரில் உள்ள கங்கின்மேல் சாம்பல் படிதல், மரம், காய் முதலியவற்றில் சாம்பல்நிறப் பொருள் படிதல்;* to be covered with ashes or ash like thing. 2. *உடல் வெளுத்தல்;* to turn ashen to body.

**சாம்பற் கரைத்தல்** வி. (v.) *பிணத்தை எரித்த பின்பு, சாம்பலை நீர் நிலைகளில் கரைக்கும் சடங்கு;* performing the ceremony of pouring water on the ashes and collecting the bones after cremation.

**சாம்பற்கோழி** பெ. (n.) *சாம்பல் நிறத்தில் இருக்கும் கோழி;* ash coloured fowl.

**சாம்பு** வி. (v.) *வாடுதல், வருந்துதல்;* lose lustre, languish.

**சாமக்காரன்** பெ. (n.) *இரவுக் காவலாளன்;* night - watchman.

**சாமக்கோடங்கி** பெ. (n.) *நடு இரவில் குறி சொல்பவர்;* midnight fore-teller.

**சாமக்கோழி** பெ. (n.) *நள்ளிரவில் கூவுங்கோழி;* cock crowing at midnight.

**சாமந்தி** பெ. (n.) *மஞ்சள், வெள்ளை முதலிய நிறங்களில் உருண்டை வடிவத்தில் மலரும் பூச்செடி;* chrysanthemum (flower and the plant).

**சாமம்** பெ. (n.) *1. இரவு அல்லது நள்ளிரவு;* night or midnight. 2. *பொதுவாகக் காலத்தைக் குறிப்பிடும்போது மூன்று மணி நேரம் கொண்ட கால அளவு;* a three hour unit of measurement.

**சாமுகூர்த்தம்** பெ. (n.) *சாமுழுத்தம் பார்க்க.*

**சாமுழுத்தம்** பெ. (n.) *கெட்ட காலம்;* fatal hour, inauspicious time.

**சாமை** பெ. (n.) *பழுப்பு நிற மணியாக உள்ள ஒரு வகைச் சிறு தவசம்;* a kind of millet.

**சாய்தல்** வி. (v.) *நேர் நிலையிலிருந்து பக்கவாட்டில் தாழ்தல்;* lean against, towards, over. *2. மரம் விழுதல்;* of tree, post, etc., fall.

**சாய்த்தல்** வி. (v.) *1. சாயச் செய்தல்;* to cause to incline. *2. ஒரு பக்கமாக ஓட்டுதல்;* to turn in a new direction , to drive. *3. முறித்தல்;* to break off. *4. தோல்வியுறச் செய்தல்;* to discomfit, defeat.

**சாய்சதுரம்** பெ. (n.) *ஒத்த அளவு கொண்ட பக்கங்களையும் வேறு பட்ட இரு கோணங்களையும் கொண்ட சாய் வாக அமைந்த சதுரம்;* rhombus.

**சாய்கை** பெ. (n.) *சாயும் நிலை;* house, rest - house.

**சாய்ங்காலம்** பெ. (n.) *சாயுங்காலம் பார்க்க.*

**சாய்த்துக் கொடுத்தல்** வி. (v.) *ஒருசேரக் கொடுத்தல்;* to give in abundance.

**சாய்த்துப்பார்த்தல்** வி. (v.) *கண்ணைக் கோணலாக வைத்துக்கொண்டு பார்த்தல்;* to look askance.

**சாய்ந்தாடுதல்** வி. (v.) *நிலத்தில் நின்று கொண்டு அல்லது இருக்கையில் இருந்து கொண்டு பக்கவாட்டில் அல்லது முன்னும் பின்னும் அசைதல்;* to swing or swerve sideways without shifting position.

**சாய்ப்பாங்கரை** பெ. (n.) *அடுப்பங்கரை, அடுப்படி;* kitchen, the front of the hearth.

**சாய்ப்பிடம்** பெ. (n.) *1. படை பின் வாங்குமிடம்;* place of retreat, as of an army. *2. சிறு கொட்டகை;* a shed with sloping roof.

**சாய்ப்பு** பெ. (n.) *1. தாழ்வு;* slope, slant. *2. மலைச்சரிவு;* slide or declivity of a mountain. *3. சாய்வான கூரை;* sloping or slanting roof.

**சாய்பலகை** பெ. (n.) *சாய்மானப் பலகை;* sloping wooden bake for redining.

**சாய்மானப்பலகை** பெ. (n.) *1. சாய்ந்து கொள்ளுதற்குரிய பலகை;* a pink used for reclining. *2. துணிவெளுக்கும் பலகை;* washboards.

**சாய்மானம்** பெ. (n.) *சாய்ந்து கொள்ளத் தேவையானது;* for reclining or leaning.

**சாய்வு** பெ. (n.) *1. சரிந்து இருக்கும் நிலை;* incline ; slope. *2. சார்பு;* leanings; inclination.

**சாய்வு நாற்காலி** பெ. (n.) *கெட்டியான துணியைத் தொட்டில் போல் தொங்கவிட்ட, சாய்ந்துகொள்வதற் கான நாற்காலி;* dock-chair; easy chair.

**சாய்வுப்பாதை** பெ. (n.) *மாடிக்கு அல்லது மேடைக்குச் செல்லப் படியில்லாமல் சாய்வாக அமைக்கப்பட்ட தளப் பாதை;* terrace way without step, ramp.

**சாய்வுமேசை** பெ. (n.) *எழுதுவதற்கு ஏந்தாகக் கீழ்நோக்கிச் சாய்த்த பரப்பையுடைய மிசை;* a desk with a sloping top.

**சாயக்காரன்** பெ. (n.) *1. சாயமிடுபவன்;* dyer. *2. சாயம் காய்ச்சுபவன்;* one who prepares dye.

**சாயக்கோரை** பெ. (n.) *சாயம் நனைத்துப் பாய் முதலியன பின்னப் பயன்படும் கோரைவகை;* a sedge used for making mat etc.,

**சாயங்காய்ச்சுதல்** வி. (v.) *சாயம் போடுதல்;* to dye, colour.

**சாயச்சந்தி** பெ. (n.) *1. மாலை மங்கல்;* evening twilight. *2. மாலை வழிபாடு;* evening devotions.

**சாயச்சாந்தி** பெ. (n.) *சாவுச்சடங்கு;* crematory rite *(யாழ்.அக.).*

**சாயச்சீலை** பெ. (n.) *சாயமேற்றப்பட்ட வண்ணத்துணி;* coloured cloth.

**சாயத்துணி** பெ. (n.) *நிறமேற்றப்பட்ட துணி;* dyed cloth.

**சாயந்தரம்** பெ. (n.) *சாயுங்காலம் பார்க்க.*

**சாயந்தோய்த்தல்** வி. (v.) *சாயம் போடுதல்;* to dye, colour.

**சாயப்பட்டறை** பெ. (n.) *நெசவு நூலுக்கு வண்ணச் சாயம் ஏற்றும் பணி நடைபெறும் தொழிற்கூடம்;* dyeing factory.

**சாயம்** பெ. (n.) *1. நிறம்;* colour, tinge, tint. *2. நூல் முதலியவற்றிற்கு ஊட்டும் வண்ணம்;* dye. *3. உண்மைத்தன்மை;* true colour; real nature.

**சாயம்பற்றவைத்தல்** வி. (v.) *பொய்ச் செய்தியைப் பரப்புதல்;* to spread false information.

**சாயம்பிடித்தல்** வி. (v.) *சாயம் பற்றுதல்;* to take on colour.

**சாயம்போடுதல்** வி. (v.) *சாயந்தோய்-த்தல் பார்க்க.*

**சாயம்போதல்** வி. (v.) *ஏற்றிய நிறம் நீங்குதல்;* to become change of real colour.

**சாயம்வெளுத்தல்** வி. (v.) *1. பொய் மறைந்து உண்மை வெளிப்படுதல்;* to come to light; get exposed. *2. சாய மேற்றிய துணிகள் நிறம் மங்குதல்;* colour, fating.

**சாயமடித்தல்** வி. (v.) *சாயந்தோய்-த்தல் பார்க்க.*

**சாயல்**[1] பெ. (n.) *1. சாய்வு;* inclining slanting *2. இளைப்பு;* weariness, exhaustion. *3. துயிலிடம்;* bed, sleeping place.

**சாயல்**[2] பெ. (n.) *தோற்றம், செயல், தன்மை முதலியவற்றில் மற்றொருவரை அல்லது மற்றொன்றை நினைவுபடுத்தும் ஒத்த தன்மை;* trace; suggestion or reflection.

**சாயல்காட்டுதல்** வி. (v.) *1. நடித்தல்;* to imitate, represent, personate. *2. முன் குறியாகக் காட்டுதல்;* to foreshadow.

**சாயவேட்டி** பெ. (n.) *சாயமேற்றிய வேட்டி;* dyed cloth worn by men.

**சாயுங்காலம்** பெ. (n.) *கதிரவன் சாயும் வேளை (எற்பாடு) மாலைப் பொழுது;* evening.

**சாயை** பெ. (n.) *1. நிழல்;* shadow. *2. சுவடு;* trace.

**சார்**[1] பெ. (n.) *வீட்டின் அமைப்பைக் குறிக்கும்போது பக்கவாட்டில் அமைக்கப்படும் கட்டு;* bay.

**சார்**[2]**–தல்** வி. (v.) *1. மற்றொருவரை நம்பியிருத்தல்;* depend. *2. ஒரு தன்மை, நிலை, பொறுப்பு முதலியவை ஒன்றுக்கு அல்லது ஒருவருக்கு உரியதாக இருத்தல்;* belong to; be associated with.

**சார்த்து–தல்** வி. (v.) *1. சாரச் செய்தல்;* to cause to lean, to support. *2. இணைத்தல்;* to join, unite, connect.

**சார்ந்தோர்** பெ. (n.) *1. சுற்றத்தார்;* relatives. *2. நண்பர்;* friends, associates.

**சார்நிலை** பெ. (n.) *மாவட்ட அளவில் அலுவலர்க்கோ அலுவலகத்துக்கோ அடுத்த நிலை;* subordinate to district level officer or offices sub as in subregistrar.

**சார்ப்பு** பெ. (n.) *1. மேல்தளம், சாய்ப்புக் கூரை;* sloping roof. *2. மலைச் சரிவு;* slope of hill.

**சார்பதிவாளர்** பெ. (n.) *பதிவுத்துறை உதவிப்பதிவாளர்;* sub-registrar in registrar in registrar office.

**சார்பாக** வி.அ. (adv.) *ஒருவருக்கோ ஒன்றனுக்கோ நிகராளியாக;* on behalf of; for someone.

**சார்பியல் கோட்பாடு** பெ. (n.) *இயக்கத்திலிருக்கும் பொருளின் அளவு, நிறை, காலம் ஆகியவை விரைவைச் சார்ந்து மாறுபடும் என்பதை விளக்கும் கோட்பாடு;* theory of relativity.

**சார்பு** பெ. (n.) *1. ஒன்றைச் சார்ந்திருக்கும் நிலை;* dependence. *2. ஒன்றின் அல்லது ஒருவரின் தரப்பு;பக்கம்;* one's side.

**சார்புச் செயலர்** பெ. (n.) *தலைமைச் செயலக உதவிச் செயலர்;* Under Secretary in Secretariat.

**சார்பு நீதிபதி** பெ. (n.) *உரிமையியல் நயன்மன்றத்திற்கு அடுத்ததாக மேல் நிலையிலுள்ள நீதிபதி;* Sub - judge.

**சார்பு நீதிமன்றம்** பெ. (n.) *உரிமையியல் நயன்மன்றத்தைவிடக் கூடுதல் அதிகாரங்களைப் பெற்றிருக்கும், தனியாள் சட்டம் குறித்து வழக்கு களை ஆராயும் நயன்மன்றம்;* magistrate court.

**சார்பு நூல்** பெ. (n.) *முதல் நூலிலிருந்தும் வழி நூலிலிருந்தும் பல சிறப்பு கூறுகள் வேறுபட்டதாக இயற்றப் படும் நூல்;* treatise that differs in many respects from.

**சார்பெழுத்து** பெ. (n.) *தமக்கென்று தனியான வரி வடிவங்கள் இல்லாமல் முதலெழுத்துகளைச் சார்ந்து ஒலிக்கும் எழுத்துகள்;* Secondary letters.

**சார்வோலை** பெ. (n.) *முதிர்ந்த குருத்தோலை;* matured palm leaf adjoining Kuruttu.

**சாரக்கயிறு** பெ. (n.) *சாரங்கட்டும் கயிறு;* rope.

**சாரங்கட்டுதல்** வி. (v.) *கட்டடத்தின் மேற்பகுதிக்கு ஏறுவதற்கு ஏந்தாக (வாய்ப்பாக)க் கம்புகளைக் கொண்டு படி போன்ற நிலையினை உருவாக் குதல்;* to scaffold.

**சாரத்துளை** பெ. (n.) *சாரக்கழி வைக்கும் சுவர்த்துளை;* scaffold - hole or put log hole in a building.

**சாரம்** பெ. (n.) *கட்டட வேலையில் உயரமான இடத்திலிருந்து வேலை செய்ய ஏந்தாகச் சுவரை ஒட்டி கம்புகளை அல்லது இரும்புக் குழாய்களை ஊன்றி அவற்றின் மேல் பலகைகளைப் பரப்பி உருவாக்கப் பட்ட தள அமைப்பு;* scaffolding.

**சாரம்போடுதல்** வி. (v.) *சாரங்கட்டு-தல் பார்க்க.*

**சாரமிறக்குதல்** வி. (v.) *கட்டடச் சாரத்தைப் பிரித்தல்;* to take down a scaffoldings.

**சாரமிறக்குதல்** வி. (v.) *1. சாறுபிழிதல்;* to express juice, distil. *2. சாற்றை உட்செலுத்துதல்;* to swallow the juice of anything chewed or dissolved in the mouth.

**சாரர்** பெ. (n.) *1. ஒற்றர்;* spy. *2. நண்பர்;* friend.

**சாரல்** பெ. (n.) *சாய்வாகவும் துளித்துளி யாகவும் விழும் மழை அல்லது காற்றால் அடித்து வரப்படும் மழை;* light drizzle, driving rain.

**சாரல்கட்டுதல்** வி. (v.) *மழை பெய்தற்கு ஏற்றபடி கார்முகில் நிறைந்திருத்தல்;* to be dense, with water - vapour as clouds on hill-side.

**சாரல்காற்று** பெ. (n.) *மேற்குக் காற்று;* west wind.

**சாரலி** பெ. (n.) *நெல்வகை;* a kind of paddy.

**சாரார்** பெ. (n.) *குழுவினர்;பிரிவினர்;* group or party; section.

**சாரிசாரியாக** வி.அ. (adv.) *வரிசை வரிசை யாக;* in a row or series.

**சாரைசாரையாக** வி.அ. (adv.) *வரிசை வரிசையாக;* in a row or series

**சால்[1]** பெ. (n.) *1. ஏற்றம், கமலை முதலிய வற்றில் நீர் முகப்பதற்குப் பயன் படுத்தும் கலன்;* container used in bucket. *2. தண்ணீர் நிரப்பும் பானை;* large water - pot.

**சால்**[2] பெ. (n.) *1. உழும்போது நிலத்தில் கொழு ஏற்படுத்தும் நீள்வட்டமான பள்ளம்;* furrow. *2. நிலத்தை ஒரு முறை கலப்பை கொண்டு செய்யும் உழவு;* one round of ploughing.

**சால்பு** பெ. (n.) *நிறைந்த பண்பு; மேன்மை;* excellence.

**சாலை** பெ. (n.) *1. ஊர்திகள் செல்லவும் மக்கள் நடக்கவும் ஏற்றதாக அமைக் கப்படும் பாதை;* (public) road; (paved) way. *2. பெரும்பாலும் கூட்டுச் சொற்களில் (ஏதேனும் ஒன்றுக்காக ஏற்படுத்தப்பட்ட) கூடம் என்ற பொருள்தரும் இடைச்சொல்;* particle occuring in compounds meaning a structure.

**சாலை நடவு** பெ. (n.) *வரிசையாக பயிர் நடவு வகை;* transplantation of seedling.

**சாலை வரி** பெ. (n.) *ஊர்தி உரிமை யாளர்கள் சாலையைப் பயன்படுத்து வதற்காக அரசுக்குச் செலுத்தும் வரி;* road tax.

**சாவி** பெ. (n.) *மணிபிடியாமற் பதராய்ப் போன பயிர்;* withered crop, brighted empty grain.

**சாவு** பெ. (n.) *உயிர் இழப்பு, இறப்பு;* death (in accident, etc.,).

**சாவுக்குருவி** பெ. (n.) *கூகை; கோட் டான்;* barn owl; screech owl.

**சாவுத்தீட்டு** பெ. (n.) *உறவினரின் இறப்பால் நேரும் தீட்டு;* pollution on the death of a relative.

**சாவுமணி** பெ. (n.) *1. ஒருவர் இறப்பைத் தெரிவிக்கும் வகையில், கிறித்துவர் கோயிலில் அடிக்கப்படும் மணி;* knell; death bell in a church. *2. ஒன்றின் முடிவு;* end.

**சாவுவீடு** பெ. (n.) *இறப்பு (மரணம்) நிகழ்ந்த வீடு;* house where somebody has died.

**சாளரம்** பெ. (n.) *பலகணி;* (latticed) window.

**சாறு**[1] பெ. (n.) *பழம், இலை, தண்டு போன்றவற்றைப் பிழிந்து எடுக்கும் சாறு;* juice; extract.

**சாறு**[2] வி. (v.) *நிலத்தை மேலாகக் கொத்துதல்;* turn over the top layer of the soil; dig.

**சான்றளி** வி. (v.) *சான்றிதழ் உண்மை யானது என்று கையெழுத்தும் முத்திரையும் போட்டு உறுதி யளித்தல்;* attest (a copy of a document).

**சான்றாண்மை** பெ. (n.) *1. பெருந்தன்மை நற்குணங்கள் பல்லாற்றானும் அமைதல்;* nobility greatness. *2. பொறுமை; பல குணங்களாலும் நிறைந்து அவற்றை ஆளுந்தன்மை;* self-control, patience.

**சான்றாதாரம்** பெ. (n.) *1. துணைநூற் பட்டியல்;* bibliography. *2. சான்று;* evidence.

**சான்றிதழ்** பெ. (n.) *ஒருவரின் பிறப்பு, இறப்பு, கல்வி, திருமணம் முதலி யவை பற்றி குறிப்பிட்ட விளக் கத்தைத் தந்து உரிய அதிகாரி அல்லது அமைப்பு அதிகாரச்சான்றாவணமாக வழங்கும் எழுத்து வடிவிலான சான்று;* testimonial certificate.

**சான்று** பெ. (n.) *கண்டசான்றாளி (சாட்சி);* witness, evidence.

**சான்றுரை** பெ. (n.) *சான்றுக்காகச் சொல்லும் உரை;* evidence, demonstration.

**சான்றுறுதி** பெ. (n.) *எழுத்து மூலம் அளிக்கும் உறுதி;* testimony.

**சான்றோர்** பெ. (n.) *1. அறிவொழுக் கங்களால் நிறைந்த பெரியோர்;* the great, the learned, the noble.

**சான்றொப்பம்** பெ. (n.) *ஓர் ஆவணத்தின் நகலையும் அசலையும் ஒப்பிட்டுப் பார்த்து நகல் உண்மையானது என்று சான்றளிக்க (அரசு ஒப்பளிப்பு செய்துள்ள அதிகாரி) இடும் கையெழுத்தும், முத்திரையும்;* attestation.

**சான்றோன்** பெ. (n.) *அறிவொழுக்கங்களால் சிறந்தவன்;* a wise, learned and respectable man.

## சி

**சிக்கல்** பெ. (n.) *1. தாறுமாறு;* tangle. *2. பின்னல்;* plaiting. *3. கோளாறு;* complication. *4. அருமைப்பாடு, முட்டுப்பாடு;* difficulty. *5. குழப்பம், தடுமாற்றம்;* embarrassment. *6. மாட்டிக் கொள்ளல்;* entangling.

**சிக்கவைத்தல்** வி. (v.) *மாட்டிவிடுதல்;* to cause oneself to be caught.

**சிக்கறுத்தல்** வி. (v.) *1. நூல் முதலியவற்றில் சிக்குவிடுவித்தல்;* to untie a knot, disentangle. *2. சிக்கலானதைத் தீர்த்தல்;* to settle an intricate business. *3. துறவறம் புகுதல்;* to give up wordly attachment.

**சிக்கித்திணறுதல்** வி. (v.) *1. சிக்கலில் மாட்டிக்கொண்டு இன்னலுறுதல்;* struggle. *2. சொற்களில் தடுமாற்றம்;* stammer out.

**சிக்குதல்** வி. (v.) *வெளியில் வர முடியாத அளவுக்கு அல்லது விடுபட முடியாத அளவுக்கு மாட்டிக் கொள்ளுதல்;* get stuck.

**சிக்கு** பெ. (n.) *1. எண்ணெய்ச்சிக்கு;* stickiness of hair, due to oil. *2. சிக்குநாற்றம்;* rancid smell of oil or ghee on clothes.

**சிக்குண்டாக்குதல்** வி. (v.) *சிக்கு ஏற்படுத்துதல்;* to cause to become entangled or ensued.

**சிக்குவாங்கி** பெ. (n.) *மயிர்களின் சிக்குகளை எடுக்குங் கருவி; ஒருவகைச் சீப்பு;* a kind of comb.

**சிக்குவாங்குதல்** வி. (v.) *1. மயிர் முதலியவற்றில் சிக்கெடுத்தல்;* to disentagle. *2. முடிச்சவிழ்த்தல், தளர்த்துதல்;* unravel.

**சிக்கெடுத்தல்** வி. (v.) *சிக்குவாங்குதல்; பார்க்க.*

**சிக்கெனப்பிடித்தல்** வி. (v.) *1. உறுதியாகப் பிடித்தல்;* to catch firmly. *2. இறுக்கமாகப் பிடித்தல்;* to catch tightly.

**சிட்டாய்ப்பறத்தல்** வி. (v.) *சிட்டுக்குருவி போல விரைந்தோடிப்போதல்;* to run or fly like a house sparrow.

**சிட்டிகை** பெ. (n.) *1. கைந்நொடி;* snap of the fingers. *2. கைந்நொடிப்பொழுது;* moment, as measured by snap of the finger. *3. விரற்பிடியளவு;* a pinch, as of snuff.

**சிடுசிடுப்பு** பெ. (n.) *1. சினக்குறி;* knitting the brow in anger, frowning. *2. காய்ச்சும் எண்ணெய்யில் நீரிருப்பதை உணர்த்தும் ஒலிக்குறிப்பு;* onom, expr. of hissing noise.

**சிடுமூஞ்சி** பெ. (n.) *கடுகடுத்த முகம்;* flowning face.

**சிணுங்குதல்** வி. (v.) *1. மூக்காலழுதல்;* to whine, whimper. *2. விட்டுவிட்டு மழை தூறுதல்;* to drizzle intermittently. *3. கொஞ்சுதல்;* to caress.

**சித்தமருத்துவம்** பெ. (n.) *சித்தர்கள் கையாண்ட மருத்துவ முறை;* a kind of healing art ascribed to *šittar;* sittar medicine.

**சித்தமருந்து** பெ. (n.) *சித்த முறைப்படி 212 மூலப்பொருள்களினின்று செய்யும் மருந்துகள்;* medicines in sittar system are prepared from out of the mineral substances which are 212 in number.

**சித்திரம்** பெ. (n.) *1. ஓவியம்;* picture, painting. *2. சிறப்பு;* excellence. *3. அழகு;* beauty. *4. அணியழகு;* decoration. *5. ஒரு சிற்ப நூல்;* a treatise on architecture.

**சித்திரக்கவி** பெ. (n.) *நால்வகைப் பாக்களுள் சித்திரத்தில் அமைத்துப் பாடும் இறைப்பா;* a variety of metrical composition filled into fanciful figures, one of *nāṟ-pā* .

**சிதறுதல்** வி. (v.) *1. இறைத்தல்;* to fall in different places. *2. சிறிய பொருள்களாய்த் தெரித்தல்;* to be strewn in small particles. *3. சிறுதுண்டுகளாக உடைந்து போதல்;* to be broken into pieces, to explode.

**சிந்தனை** பெ. (n.) *1. எண்ணம்;* thought, idea. *2. படித்த பாடத்தை மீண்டும் நினைக்கை;* revision of lessons. *3. ஊழ்கம் (தியானம்)* meditation. *4. கவலை;* care, concern grief.

**சிந்தித்தல்** வி. (v.) *அறிவால் பகுத்துக் காணுதல்;* think about.

**சிந்துதல்** வி. (v.) *தண்ணீர், தவசம் முதலியவை பரவலாகக் கீழே விழுதல்;* of water, grain, etc., spill scatter water, etc.,

**சிப்பம்** பெ. (n.) *1. பொட்டலம்;* parcel. *2. சிறுமூட்டை;* bundle.

**சிப்பி** பெ. (n.) *முத்து முதலியவை பொதிந்திருக்கும் ஓடு;* shell; pearl oyster.

**சிரித்தல்** வி. (v.) *1. ஒலியெழுப்பியோ முகக்குறிப்பின் மூலமோ பல் தெரிய உதடுகளை விரிப்பதன் மூலமோ மகிழ்ச்சி, ஏளனம் முதலியவற்றை வெளிப்படுத்துதல்;* to laugh. *2. மலர்தல்;* to bloosom.

**சிராய்ப்பு** பெ. (n.) *பெரும்பாலும் தோலில் கரடு முரடான பரப்பு அல்லது கூர்மையான முனை; உராய்வதால் அல்லது தேய்ப்பதால் ஏற்படும் அழுத்தமான கீறல்;* scratch.

**சிரிப்புக்காட்டுதல்** வி. (v.) *வேடிக்கையான பேச்சு, செய்கை மூலம் சிரிப்பை உண்டாக்குதல்; சிரிக்க வைத்தல்;* make laugh by mimicry, etc.,

**சிரிப்பாய்ச்சிரித்தல்** வி. (v.) *1. இகழ்தல்;* to laugh at. *2. நிலை கெட்டுத்திரிதல்;* to lead a despicable life.

**சில்லறை** பெ. (n.) *1. சிறுசிறு பகுதிகளாகக் கிடப்பவை;* things scattered here and there in small quantities or amounts. *2. காசு (நாணயம்);* change as of coin.

**சில்லறைச்சாமான்** பெ. (n.) *உதிரிப் பொருள், மளிகைப்பொருள்;* sundry articles of commerce, as grain, etc.,

**சில்லறைச்செலவு** பெ. (n.) *சிறிய தொகைக்கான செலவு;* the non descriot petty expenses.

**சில்லறைத்தனம்** பெ. (n.) *தகுதிக்குச் சற்றும் பொருந்தாது கீழ்த்தரச் செய்கை;* meanness.

**சில்லறைப்புத்தி** பெ. (n.) *1. சிறுமைத் தனம்;* silliness, mean - mindedness. *2. கூடாவொழுக்கம்;* adultery.

**சில்லாக்கோல்** பெ. (n.) *எலி, பாம்பு போன்றவற்றைக் கொல்ல கூரான கொம்பு பொருத்தப்பட்ட மூங்கில் கழி;* stick.

**சில்லிக்கரண்டி** பெ. (n.) *மரம் அல்லது இரும்பினாலாகியதும், துளைகள் அமைந்ததும், நீர் வடிகட்டப் பயன் படுவதுமான சிறிய அகப்பை;* a wooden or iron spoon with small holes for filtering.

**சில்லு** பெ. (n.) *1. சிறுதுண்டு;* small piece, as of broken glass. *2. ஒட்டுச்சீலை;* small patch of cloth. *3. வட்டமானது;* anything flat and round. *4. உருளை;* wheel, as of a car.

**சில்லுக்கருப்பட்டி** பெ. (n.) *பனை வெல்லத்தாலான துண்டுக் கருப்பட்டி;* jaggery part.

**சிலம்பம்** பெ. (n.) *கழியைக் கைகளால் பிடித்து முன்னும் பின்னும் பக்க வாட்டிலும் சுழற்றித் தாக்கவும் தாக்குதலைத் தடுக்கவும் பயிலும் கலை;* a kind of martial art where fencing is donewith a staff.

**சிலம்பாட்டம்** பெ. (n.) *சிலம்பம் பார்க்க.*

**சிலம்பு[1]** பெ. (n.) *1. ஒலி;* sound. *2. இரைச்சல்;* noise.

**சிலம்பு[2]** பெ. (n.) *உள்ளீடு அற்றதும் பொன்னாலோ வெள்ளியாலோ ஆனதும் வளைகூட்டில் பரலிடப் பட்டு ஒலியெழுப்புவதுமான மகளிர் காலணி;* a kind of tinkling hollow anklet made of gold, silver, copper, etc.,

**சிலிர்த்தல்** வி. (v.) *குளிர், அச்சம் முதலியவற்றால் மயிர்க்கால்கள் சிறிது புடைத்து முடிகள் படிந்த நிலையிலிருந்து சற்று மேலே நீளுதல்;* get the gooseflesh.

**சிலுசிலுப்பு** பெ. (n.) *1. குளிர்ச்சி;* cold, chill. *2. சிறுசினம்;* querulousness. *3. குறும்பு;* mischief.

**சிலேடை** பெ. (n.) *சொல் அல்லது சொற்றொடர் பல பொருள் தருமாறு அமையும் வகையில் இயற்றும் செய்யுள்;* in poetry paronomasia.

**சிலையடி–த்தல்** வி. (v.) *கல்லில் உருவம் அமைத்தல்;* to carve in a stone.

**சிவப்பு** பெ. (n.) *1. செந்நிறம்;* ruddiness, red colour. *2. சிவப்புக்கல்;* ruby. *3. கறுப்பு;* blackness. *4. சினம்;* anger.

**சிவபூசை** பெ. (n.) *நெறிமுறைப்படி செய்யும் சிவவழிபாடு;* worship of *šivan* usually ceremonial.

**சிற்றறிவு** பெ. (n.) *1. புல்லறிவு;* unsound, imperfect knowledge or understanding. *2. சுருங்கிய அறிவு;* limited knowledge.

**சிற்றன்னை** பெ. (n.) *சிறிய தாயார்;* second wife.

**சிற்றாறு** பெ. (n.) *1. சிறு ஓடை;* rivulet. *2. துணை ஆறு;* tributary stream.

**சிற்றிதழ்** பெ. (n.) *குறிப்பிட்ட துறைகளில் குறைந்த அளவு படிப்பாளிகளுக்காக நடத்தப்படும் இதழ்;* journal with limited circulation for limited readers.

**சிற்றிலக்கியம்** பெ. (n.) *உள்ளடக்கத்தின் அடிப்படையிலும் செய்யுள் வடிவ அடிப்படையிலும் பாகுபடுத்தப் பட்ட இலக்கிய வகை;* minor literary genre.

**சிற்றின்பம்** பெ. (n.) *1. இம்மை நலம்;* earthly pleasure. *2. மெய்யுறுவின்பம், காமவின்பம்;* sexual pleasure, carnal.

**சிற்றுண்டி** பெ. (n.) *1. இட்லி, வடை மற்றும் அப்ப வகை, பண்ணிகாரம்;* pastry, cake and kind of tiffin. *2. அரிசி அல்லது கோதடை மாவிற் செய்த பண்ணிகார வகை;* sweet pastry - ball made of rice or wheat flour.

**சிற்றுந்து** பெ. (n.) *மக்களின் போக்கு வரத்துக்குதவும் சிறிய இயக்கி;* mini bus.

**சிற்றுண்டிச்சாலை** பெ. (n.) *சிற்றுண்டியும், தேநீர் முதலிய பருகங்களும் சாப்பிடுமிடம்;* snack restaurant, canteen.

**சிற்றுயிர்** பெ. (n.) *சிறிது காலம் வாழும் விலங்கு;* short - lived being. *2. மிகச் சிறிய உயிரி;* minute insect animakule.

**சிற்றூர்** பெ. (n.) *1. சிறிய ஊர்;* small village, hamlet. *2. குறிஞ்சி நிலத்தூர்;* village in the hilly tracts.

**சிறகு** பெ. (n.) *இறக்கை;* (of birds) wing; plumage.

**சிறந்தோர்** பெ. (n.) *1. உயர்த்தோர்;* the great, the renowned, the illustrious.

*2. கடவுளர்;* Gods. *3. உறவினர்;* relatives. *4. துறந்தோர்;* ascetics.

**சிறப்பாசிரியர்** பெ. (n.) *1. பத்திரிகையின் குறிப்பிட்ட இதழை மட்டும் தொகுத்து வெளியிடும் பொறுப்பை ஏற்பவர்;* guest editor of a journal. *2. அழைப்புக்கு இணங்கிப் பெருமைப்படுத்தும் வகையில் ஆசிரியராக இருப்பவர்;* honorary editor.

**சிறப்பு** பெ. (n.) *1. சிறந்த முறையில் அமைந்திருப்பது;* excellent. *2. தனித் தன்மை; தனித்துவம்;* excellence; outstanding quality. *3. பெருமை, புகழ், மதிப்பு;* renown; esteem.

**சிறப்புச்செய்தல்** வி. (v.) *1. ஒப்பனை செய்தல், அழகுபடுத்துதல்;* to embellish. *2. வரவேற்று முகமன் கூறுதல், விருந்தோம்பல்;* to welcome, show hospitality.

**சிறப்புத் தமிழ்** பெ. (n.) *11, 12ஆம் வகுப்புகளில் எல்லோருக்கும் பொதுவாக உள்ள தமிழ்ப் பாடம் அல்லாமல் மாணவர் விருப்பப் பட்டுத் தேர்ந்தெடுக்கும் மற்றொரு தமிழ்ப் பாடம்;* advanced Tamil, an optional subject for higher secondary students.

**சிறப்புப் பெயர்** பெ. (n.) *பண்பு, குணம், செயல் முதலிய சிறப்பால் பெறுகிற பெயர்;* appellation; descriptive name.

**சிறப்பு விருந்தினர்** பெ. (n.) *ஒரு நிகழ்ச்சியைச் சிறப்பிப்பதற்காக அல்லது நிகழ்ச்சியில் சிறப்புரை ஆற்றுவதற்காக அழைக்கப்படுபவர்;* guest of honour.

**சிறப்பு ழகரம்** பெ. (n.) *ல, ள என்னும் ஒலிகளிலிருந்து வேறுபடும் 'ழ' என்னும் ஒலி;* the sound '*ழ*' which is unique to the Tamil language.

**சிறார்** பெ. (n.) *சிறுவர்கள்;* children.

**சிறிது** பெ. (n.) *உருவம், வடிவம் போன்றவற்றில் குறைந்த அளவைக் கொண்டது;* (of size, quantity) small.

**சிறுகதை** பெ. (n.) *பெரும்பாலும் ஒரு மையக் கருவை அல்லது பட்டறிவைக் கதையாக உரைநடையில் எழுதும் ஓர் இலக்கிய வகை;* short story.

**சிறுகிழங்கு** பெ. (n.) *உணவாகப் பயன் படும் பழுப்பு நிறத்தில் உருண்டையாக இருக்கும் ஒருவகைக் கிழங்கு;* a variety of yam.

**சிறுகீரை** பெ. (n.) *சமையலில் பயன் படும் குறைந்த நீளமுள்ள தண்டையும் சிறுசிறு இலைகளையும் கொண்ட ஒருவகைக் கீரை;* a kind of greens.

**சிறுகுடல்** பெ. (n.) *இரைப்பை முதல் பெருங்குடல் வரையுள்ள உணவுக் குழாயின் பகுதி;* small intestine.

**சிறுசு** பெ. (n.) *(பே.வ.) 1. சிறிது;* small in size. *2. சிறுகுழந்தை;* kid.

**சிறுசேமிப்பு** பெ. (n.) *வைப்பகத்திலோ அஞ்சலகத்திலோ தொகை குறைவாக இருந்தாலும் அவ்வப்போது செலுத்திச் சேமிக்கும் முறை;* small savings scheme offered by a bank or post office.

**சிறுக்கி** பெ. (n.) *இழிநடத்தையுடையவள்;* woman of meniel behaviour.

**சிறுதானியம்** பெ. (n.) *சோளம், தினை, வரகு போன்ற புன்செய் நிலத் தவசங்களில் ஒன்று;* millets.

**சிறுதெய்வம்** பெ. (n.) *சிற்றூர் தெய்வம்;* village deity.

**சிறுதொழில்** பெ. (n.) *குறைந்த அளவில் முதலீட்டையும் ஊழியர்களையும் கொண்டு நடத்தப்படும் தொழில்;* small scale industry.

**சிறுநீர்** பெ. (n.) *1. மூத்திரம்;* urine. *2. குறைந்த அளவு நீர்;* little water.

**சிறுநீரகம்** பெ. (n.) *உடலில் அரத்தத்திலிருந்து கழிவுப் பொருளைச் சிறுநீராக வெளியேற்றும், அவரை விதை வடிவில் இரண்டாக அமைந்திருக்கும் உறுப்பு;* kidney.

**சிறுபத்திரிகை** பெ. (n.) *சிற்றிதழ்;* journal with a limited circulation and run without profit motive; little magazine.

**சிறுபயிறு** பெ. (n.) *பாசிப்பயிறு;* green gram.

**சிறுபான்மை** பெ. (n.) *மொத்த எண்ணிக்கையோடு ஒப்பிடும்போது குறைவான அளவுள்ள மக்கட்தொகை;* minority; not many.

**சிறுபிள்ளை** பெ. (n.) *1. குழவி;* child; infant. *2. இளைஞர்;* youngster.

**சிறுபிள்ளைத்தனம்** பெ. (n.) *முதிர்ச்சியின்றியும், பொறுப்பின்றியும், குழவியைப் போன்று செயற்படுந்தன்மை;* childishness.

**சிறுபொழுது** பெ. (n.) *கழகஇலக்கியத்தில் ஒரு நாளை ஆறு பிரிவுகளாகப் பிரிக்கும் பாகுபாட்டின் ஒரு பகுதி;* division of day in classical Tamil literature.

**சிறுமி** பெ. (n.) *பன்னிரண்டு வயதுக்குக் கீழ் உள்ள பெண்;* girl who has not attained puberty.

**சிறுமூளை** பெ. (n.) *உடலில் தசைகளில் செயல்பாடுகளை முறைப்படுத்திக் கட்டுப்படுத்தும் இரு பிரிவாக அமைந்த மூளையின் ஒரு பகுதி;* cerebellum.

**சிறுமை** பெ. (n.) *மதிப்பிழந்து வெட்கப்பட வேண்டிய நிலை; கீழ்நிலை;* meanness; degradation; smallness.

**சிறுமைத்தனம்** பெ. (n.) *1. வறுமை;* poverty. *2. குறைபாடு;* diminution. *3. நுண்மை;* minuteness.

**சிறுவர்** பெ. (n.) *சிறுவன், சிறுமி ஆகிய இரு பாலினரையும் குறிக்கும் பொதுச்சொல்;* a term for children.

**சிறுவர் சீர்திருத்தப்பள்ளி** பெ. (n.) *பதினெட்டு அகவைக்கு (வயதுக்கு) உட்பட்ட சிறுவர்கள் குற்றம் புரிந்தால் அவர்களை நல்வழிப்படுத்த அரசு ஏற்படுத்தியிருக்கும் பள்ளி அமைப்பு;* reform school for juvenile offenders.

**சிறுவன்** பெ. (n.) *பன்னிரண்டு வயதுக்குக் கீழ் உள்ள பையன்;* boy not yet an adult.

**சிறுவிரல்** பெ. (n.) *சுண்டுவிரல்;* little finger.

**சிறுவியாபாரி** பெ. (n.) *சிறு அளவில் பொருள்களை விற்பனை செய்பவர்;* small trader.

**சிறை** பெ. (n.) *1. காவல்;* guard, watch. *2. அரண்காப்பு;* defence. *3. காவலில் அடைக்கை;* confinement. *4. சிறைப்படுத்துகை;* incarceration. *5. சிறைச்சாலை;* prison jail. *6. அடிமைத்தனம்;* captivity. *7. அடிமையாள்;* captive slave.

**சிறைச்சாலை** பெ. (n.) *காவற்கூடம்;* place of captivity, prison house.

**சிறைத்தண்டனை** பெ. (n.) *குற்றம் புரிந்தவர்களைச் சிறைச்சாலையில் அடைக்கும் தண்டனை;* imprisonment.

**சிறைபிடி** வி. (v.) *1. அடிமையாக்குதல்;* to take captive, enslave. *2. குற்ற வாளியைத் தளை செய்தல்;* to arrest the criminals.

**சிறைவாசி** பெ. (n.) *தண்டனை பெற்றுச் சிறையில் இருப்பவர்;* prisoner.

**சின்ன** பெ.எ. (adj.) *1. சிறிய;* small, little. *2. இழிந்த;* mean, low. *3. தாழ்ந்த;* inferior. *4. இளைய;* young.

**சின்னஞ்சிறிய** பெ.எ. (adj.) *மிகவும் சிறிய; மிகவும் இளைய;* very small; very young.

**சின்னத்திரை** பெ. (n.) *தொலைக்காட்சி;* television.

**சின்னம்** பெ. (n.) *அரசு, அமைப்பு முதலியவற்றின் அல்லது ஒருவரின் அடையாளமாக அமையும் குறியீடு;* sign; mark; token; symbol.

**சின்னம்மா** பெ. (n.) *1. சித்தி;* mother's younger sister; wife of father's younger brother; aunt. *2. குடும்பத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்கள் இருக்கும் போது வீட்டுத் தலைவி தவிர்த்த பிற பெண்களை மதிப்பாகப் பிறர் அழைக்கும் சொல்;* a term of respect used by outsiders for any woman other than the head of the house.

**சின்னவீடு** பெ. (n.) *(ஒருவர்) மனைவி இருக்கும்போதே சட்டத்திற்குப் புறம்பாக மற்றொரு பெண்ணை வைத்து தனியாக நடத்தும் குடும்பம்;* an establishment set up for a mistress.

**சின்னவெங்காயம்** பெ. (n.) *கொத்து கொத்தாகக் காய்க்கும் சிறு வெங்காய வகை;* cluster onion.

**சினத்தல்** வி. (v.) *வெகுண்டு கடிதல், சீற்றமுறுதல்;* to be enraged, to be very angry.

**சினக்குவாதம்** பெ. (n.) *தன் பற்களால் தன் உடலையே அடிக்கடி கடித்துக் கொள்ளச் செய்யும் குதிரை முடக்கு நோய் வகை;* a rheumatic disease of horse in which often bites itself.

**சினம்** பெ. (n.) *1. சீற்றம், வெகுளி;* anger, fury. *2. நெருப்பு;* fire. *3. போர்;* battle, war.

**சினை** பெ. (n.) *1. விலங்கு முதலியவற்றின் சூல்;* embryo or foetus of animals; pregnancy. *2. மீனின் வயிற்றுக்குள் திரளாக இருக்கும் சிறு சிறு முட்டைகள்;* spawn.

**சினைப்பெயர்** பெ. (n.) *உடல் உறுப்பின் அல்லது பயிரின் பாகங்களின் பெயர்;* names of the parts of the body or a plant.

**சீட்டாட்டம்** பெ. (n.) *52 அட்டைகளைக் கொண்டு விளையாடும் விளையாட்டு;* cards play.

**சீட்டாடுதல்** வி. (v.) *சீட்டு விளையாடுதல்;* to play at cards.

**சீட்டுக்கவி** பெ. (n.) *ஓலையில் எழுதும் பாவடிவக் கடிதம்;* epistle or letter written in verse.

**சீட்டுக்கிழித்தல்** வி. (v.) *ஒருவரைப் பணியிலிருந்து நீக்குதல்;* to sack one from service.

**சீட்டுக்குலுக்குதல்** வி. (v.) *குறிப்பிட்ட பெயர்கள், மாற்று எண்கள் எழுதப் பட்ட சிறுதாள் சுருள்களைக் குலுக்கிப் போட்டு ஒன்றைத் தேர்ந்தெடுத்தல்;* draw lots.

**சீடை** பெ. (n.) *அரிசி மாவினால் செய்யப்பட்டு பொறிக்கப்பட்ட உருண்டை வடிவிலான சிறு நொறுவை வகை;* deep fried small balls of rice flour. *2. நருங்கல்;* stunted growth.

**சீண்டுதல்** வி. (v.) *1. தொந்தரவு செய்தல்;* to tese, vex. *2. தீண்டியுணர்த்துதல்;* to tap, touch gently.

**சீம்பால்** பெ. (n.) *ஆவின் ஈன்றணிமைப் பால்;* milk beestings from cow soon after calving.

**சீமை** பெ. (n.) *1. எல்லை;* boundary, limit. *2. நாட்டின் பகுதி;* country, territory. *3. மேலை நாடு;* western country.

**சீமை ஓடு** பெ. (n.) *மேற்கூரை அமைக்கப் பயன்படும் வெளிர் சிவப்பு நிறத்தில் உள்ள தட்டையான ஓடு;* flat and red-coloured tile used for covering the roof.

**சீர்செய்தல்** வி. (v.) *பூப்பெய்தல், திருமணம், காதுகுத்தல் முதலியவற்றில் உறவின் முறையார் செய்யும் சீர்வரிசை;* to give presents as to a marriage as well as purity occassion.

**சீர்திருத்தத்திருமணம்** பெ. (n.) *மரபான சடங்குகளை முற்றுந் தவிர்த்துச்*

*செய்யும் மணமுறை;* marriage conducted according to one's self - respect rejecting all the traditional rites.

**சீர்திருத்தப்பள்ளி** பெ. (n.) *பதினெட்டு அகவை உட்பட்ட சிறுவர்கள் குற்றம் புரிந்தால் அவர்களை நல்வழிப் படுத்த அரசு ஏற்படுத்தியிருக்கும் சிறை அமைப்பு;* reform school for juvenile offenders.

**சீர்திருத்தம்** பெ. (n.) *செவ்வைப் படுத்துகை, சீர்படுத்துகை;* reform, reformation, correction.

**சீர்திருத்துதல்** வி. (v.) *செவ்வைப் படுத்துதல்;* to correct, rectify, reform.

**சீர்ப்படுத்துதல்** வி. (v.) *குணப் படுத்துதல்;* to bring round, cure.

**சீர்வரிசை** பெ. (n.) *சீர்செய்தல் பார்க்க.*

**சீரகச்சம்பா** பெ. (n.) *1. மடங்கல் (ஆவணி) கன்னி (புரட்டாசி) மாதங் களில் விதைக்கப்பெற்று ஐந்து மாதங்களில் பயிராகுஞ் சம்பாநெல் வகை;* a superior kind of paddy sown in September and maturing in five months. *2. ஒருவகைச் செந்நெல்;* a variety of red paddy.

**சீரகம்** பெ. (n.) *1. சமையலில் சேர்க்கும் துணைப்பொருள், செடிவகை;* cumin. *2. ஒரு நிறையளவு;* a small measure of weight.

**சீரமைப்பு** பெ. (n.) *சீரமைக்கும் செயல்;* renovation.

**சீரழித்தல்** வி. (v.) *1. ஒழுங்கைக் குலைத்தல்;* to cause, disorder; to disarrange. *2. நிலைகெடுத்தல்;* to ruin.

**சீரழிவு** பெ. (n.) *மோசமான நிலை; சீர்கெட்ட நிலை; கேடு;* degradation, degeneration.

**சீராட்டுதல்** வி. (v.) *1. செல்லம் பாராட் டுதல்;* to caress pet. *2. கொண் டாடுதல்;* to extol, applaud.

**சீருடை** பெ. (n.) *பள்ளி மாணவர், படைத்துறையினர் ஆகியோர் மற்றும் ஆய்வுக்கூடம் தொழிற் சாலை முதலியவற்றில் பணி செய்வோர் குறிப்பிட்ட நிறத்தில் குறிப்பிட்ட அமைப்பில் (ஒரே மாதிரியாக) அணியும் உடை;* uniform (dress).

**சீலை** பெ. (n.) *1. சேலை;* saree. *2. துணி;* cloth.

**சீற்றம்** பெ. (n.) *1. பாம்பு, காளை முதலியவற்றின் கொடுமையான மூச்சு ஒலி;* of animals, esp. snakes show of anger with a hissing noise. *2. கடல் கொந்தளிப்பு;* eruption of sea. *3. மிகக் கடுமையான சினம்;* fury.

**சீறுதல்** வி. (v.) *1. பாம்பு முதலியன சீற்றத்துடன் வெகுளுதல்;* to hiss, as a serpent. *2. குதிரை முதலியன மூச்செறிதல்;* to snort as a horse. *3. மிகுசினங் கொள்ளுதல்;* to be infuriated.

**சீனியவரை** பெ. (n.) *கொத்தவரை;* cluster-bean.

## சு

**சுட்டகல்** பெ. (n.) *சூளையிற் சுடப்பட்ட செங்கல்;* burnt brick in kiln.

**சுட்டி[1]** பெ. (n.) *1. குழந்தைகளும் மகளிரும் அணிந்துகொள்ளும் நெற்றியணி;* a small designed ornament worn by children and women on the forehead. *2. மாட்டின் நெற்றியிலுள்ள வெண் சுழி;* white curl on the forehead of bull or cow.

**சுட்டி[2]** பெ. (n.) *1. துடிப்பானவன்;* an active fellow. *2. குறும்புத்தனம் உள்ளவன்;* a mischievous fellow. *3. அறிவுக்கூர்மை யுள்ளவன் (இ.வ.);* intelligent person.

**சுட்டி[3]** பெ. (n.) *கணினித் திரையில் இடம் சுட்ட உதவும் கருவி;* computer mouse.

**சுட்டிக்காட்டுதல்** வி. (v.) *1. குறிப்பிடுதல்;* to point out; indicate. *2. அடையாளங் காட்டுதல்;* identify.

**சுட்டித்தனம்** பெ. (n.) *துடுக்குத்தனம்;* mischievousness, kurbulence.

**சுட்டுதல்** வி. (v.) *1. குறிப்பிடுதல்;* to point out. *2. ஒருவர் ஒன்றைப் பார்க்கச் செய்யும்வகையாக அதை நோக்கிக் கைவிரலை நீட்டியோ பிற வகையிலோ காட்டுதல் அல்லது குறிப்பிடுதல்;* point out.

**சுட்டுரை** பெ. (n.) *இணையத்தின் உதவியுடன், ஒளிப்படம், காணொலி, கருத்துரைகள் ஆகியவற்றைப் பரிமாறிக்கொள்ள உதவும் செய்திப் பரிமாற்றச் செயலி;* the app which helps to share the news, photos and vedios with others; the twitter.

**சுட்டுப்பெயர்** பெ. (n.) *ஒன்றை அல்லது ஒருவரை சுட்டிக்காட்டும் 'அவன்', 'அவள்' போன்ற பெயர்ச்சொல்;* demonstrative pronoun.

**சுட்டுவிரல்** பெ. (n.) *ஆட்காட்டி விரல்;* forefinger.

**சுட்டெழுத்து** பெ. (n.) *சுட்டி உணர்த்தும் 'அ, இ, உ' என்ற எழுத்துகள்;* the demonstrative sounds a,i,u.

**சுடர்** பெ. (n.) *1. ஒளி, வெளிச்சம்;* light, brilliance. *2. ஞாயிறு;* sun. *3. வெயில்;* sun shine. *4. நெருப்பு;* fire. *5. விளக்கு;* burning lamp.

**சுடர்தல்** வி. (v.) *ஒளிவிடுதல்;* to give light; to burn brightly; to shine.

**சுடர்விடுதல்** வி. (v.) *கொழுந்துவிட்டு எரிதல்;* to burn brightly; blaze forth.

**சுடலை** பெ. (n.) *சுடுகாடு;* cremation ground; crematorium.

**சுடுதல்** வி. (n.) *1. காயச்செய்தல்;* to warm, heat. *2. எரித்தல்;* to burn up. *3. வெடி சுடுதல்;* to fire. *4. நெருப்பில் வாட்டுதல்;* to roast.

**சுடு** பெ. (n.) *சுடுகை;* burning, heating.

**சுடுகாடு** பெ. (n.) *இறந்தவரின் உடலை எரிக்கும் இடம்; மயானம்;* cremation ground; crematorium.

**சுடுசொல்** பெ. (n.) *வசை, துன்புறுத்தும் மொழி;* caustic remarks.

**சுடுசோறு** பெ. (n.) *புதிதாகச் சமைத்த சோறு;* fresh, cooked rice, opposite to *palañjoru*.

**சுடுதண்ணீர்** பெ. (n.) *வெந்நீர்;* hot water.

**சுண்டக்கஞ்சி** பெ. (n.) *பழைய சோற்றை நொதிக்க வைத்து வெறிமயக்கம் தரும் கஞ்சி போன்ற குடிக்கை;* a kind of rice - brew.

**சுண்டக்கறி** பெ. (n.) *சமைத்ததில் மிச்சமிருக்கும் பொரியல் முதலியவற்றைக் குழம்பில் இட்டுச் சூடுபடுத்திச் சுண்ட வைத்து உருவாக்கும் கறி;* a dish prepared by heating up left over vegetables with the sauce.

**சுண்டல்** பெ. (n.) *பருப்பு அல்லது கடலை வகைகளை வேக வைத்துக் காரம் சேர்த்துத் தாளித்துத் தயாரிக்கப்படும் தின்பண்டம்;* boiled and spiced, pulses served as snacks.

**சுண்டுதல்** வி. (v.) *1. நீர் முதலியவை வற்றுதல்;* to dry up, to be evaporated by heat. *2. குன்றிப்போதல்;* to look small. *3. விரலால் காசு முதலியவற்றைத் தெறித்தல்;* to shoot with the thumb or a finger, a marble, to flip up a coin for testing its ring. *4. வேக வைத்தல்;* to boil, skew, simmer.

**சுண்டுவிரல்** பெ. (n.) *சிறுவிரல், குறுவிரல்;* little finger.

**சுண்டெலி** பெ. (n.) *சிற்றெலிவகை; சிறிய எலி;* mouse.

**சுண்டைக்காய்** பெ. (n.) *மருந்தாகவும் சமையலுக்கும் பயன்படும் ஒரு வகைக் காய்;* a medicinal product from *šuṇḍai* plant which controls many body diseases.

**சுண்ணம்** பெ. (n.) *சுண்ணாம்பு;* lime burnt in the kiln.

**சுண்ணாம்படித்தல்** வி. (v.) *வெள்ளை யடித்தல்;* to white wash.

**சுண்ணாம்பு** பெ. (n.) *1. சுட்ட சுண்ணாம்புக் கல்;* lime burnt in the kiln, quickliïe. *2. நீற்றின சுண்ணாம்பு;* slaked time.

**சுண்ணாம்புச் சத்து** பெ. (n.) *உடலின் எலும்பு வளர்ச்சிக்குத் தேவையான பால், பாலாடைக் கட்டி முதலிய வற்றில் இருக்கும் தாதுப்பொருள்;* calcium.

**சுணக்கம்** பெ. (n.) *1. காலத்தாழ்வு;* delay. *2. சுறுசுறுப்பில்லாத நிலை; சோர்வு;* tired and lethargic state.

**சுணங்குதல்** வி. (n.) *1. காலந்தாழ்த்தல்;* to delay; loiter, linger. *2. தடைப்படுதல்;* to hindered interrupted. *3. கெஞ்சுதல்;* to cringe. *4. சினங்கொள்ளுதல்;* to get angry.

**சுணை** பெ. (n.) *1. நெல், கரும்பு முதலிய வற்றின் மேலுள்ள சிறுமுள்;* prickle, as in leaves staks, etc., *2. அரிப்பு; தினவு;* itching; smarting. *3. சுரணை;* sensibility.

**சுத்தி** பெ. (n.) *சுத்தியல் பார்க்க.*

**சுத்தியல்** பெ. (n.) *ஓங்கியடிக்க உதவும் கம்மாளர் கருவி வகை;* small hammer.

**சுத்துப்பட்டு** பெ. (n.) *ஒரு ஊரைச் சுற்றி அமைந்திருக்கும் பிற ஊர்கள் (பே.வ.);* surrounding villages or towns.

**சும்மா** கு.வி.எ.. (adv.) *1. நோக்கம் இல்லாமல்;* without any purpose or motive. *2. செய்வதற்கு எதுவும் இல்லாமல்;* without having anything to do. *3. பயன் இல்லாமல்;* without any use. *4. தேவை இல்லாமல் அடிக்கடி;* often.

**சும்மாடு** பெ. (n.) *1. சுமையைத் தாங்க உதவும்படி தலையில் வைத்துக் கொள்ளும் சுமையடை;* load - pad for the head. *2. தவசமாகக் கொடுக்கும் உரிமை;* perquisites in grain.

**சுமத்துதல்** வி. (v.) *1. சுமையேற்றுதல்;* to burden to load. *2. கடன் முதலியன பொறுக்க வைத்தல்;* to impose, as a debt. *3. பிறர் மீது குற்றம் சாட்டுதல்;* to impute, as fault.

**சுமை** பெ. (n.) *1. கனம்;* weight, load, burden. *2. கடமை, பொறுப்பு;* duty, responsibility.

**சுமைகூலி** பெ. (n.) *மூட்டைத் தூக்கு வதற்குக் கொடுக்கும் கூலி;* porterage, wage for carrying a load.

**சுமைதாங்கி** பெ. (n.) *சுமையை இறக்கித் தலைச்சுமை ஆற்றுவதற்கு உதவி யாக உயர்த்தி நிறுத்தப்பட்ட கற்கட்டு;* elevated stone platform erected on the roadside to rest burdens.

**சுரத்தல்** வி. (v.) *பால், நீர் முதலியன சுரத்தல்;* to secrete as milk, water.

**சுரங்கம்** பெ. (n.) *நிலத்திற்கு அடியில் இருக்கும் பொன், நிலக்கரி, தாது உப்புகள் போன்றவற்றை எடுப்ப தற்காக ஆழமாகத் தோண்டப்பட்ட இடம்;* mine (of gold, coal, etc.,).

**சுரங்கப்பாதை** பெ. (n.) *1. சாலைகளைக் கடக்க நிலத்திற்கடியில் அமைக்கப் படும் பாதை;* sub-way. *2. மலை யைக் குடைந்து அமைக்கப்படும் பாதை;* tunnel.

**சுரண்டல்** பெ. (n.) *பிறருடைய செல்வம், உழைப்பு போன்றவற்றைத் தன்னலத் திற்காகப் பயன்படுத்திக் கொள்ளும் செயல்;* exploitation.

**சுரணை** பெ. (n.) *1. உணர்ச்சி;* sensitiveness. *2. அறிவு;* sense.

**சுரப்புவிடுதல்** வி. (v.) *கன்றைக் குடிக்க விட்டுப் பால் சுரக்கச் செய்தல்;* to start the flow of milk by letting the calf suck cow's udder.

**சுரம்** பெ. (n.) *1. காய்ச்சல்;* fever. *2. பாலைநிலம்;* desert tract. *3. காடு;* jungle.

**சுருக்கம்** பெ. (n.) *1. குறைவு;* diminution, decrease. *2. கஞ்சத்தனம்;* miserliness. *3. ஆடை முதலியவற்றின் சுருக்கு;* fold or pucker in a garment, crease. *4. முதுமையால் ஏற்படும் தோல் சுருக்கம்;* wrinkle of the skin due to oldage.

**சுருக்கிடுதல்** வி. (v.) *1. சுருக்குப் போடுதல்;* to make a noose on cord. *2. சுருக்கில் மாட்டுதல்;* to noose.

**சுருக்குதல்** வி. (v.) *1. குறைத்தல்;* to curtail, reduce. *2. ஆடை முதலியன சுருக்குதல்;* to pucker, tuck in. *3. வலை, பை முதலியன சுருக்குதல்;* to draw tight. *4. சுருங்கச் செய்தல்;* causing anything to shrink.

**சுருக்குப்பை** பெ. (n.) *வாயைச் சுருக்கவும் விரிக்கவும் கூடிய கைப்பை;* a small bag or purse drawn together at the mouth with a thong or string.

**சுருக்கெழுத்தர்** பெ. (n.) *சுருக்கெழுத்தில் எழுதி முழுமையாகத் தட்டச்சு செய்யும் பணியாளர்;* stenographer.

**சுருங்கச்சொல்லல்** பெ. (n.) *நூலழகு பத்தனுள் ஒன்றான சுருக்கமாகக் கூறுகை;* brevity, terseness of expression one of ten literary - beauty.

**சுருட்டிக்கொள்ளல்** பெ. (n.) *1. சுருண்டு கொள்ளுகை;* winding into round folds coiling reptiles do. *2. களைப்படைகை;* to be fatigued; lying tired. *3. பிறர் பொருளை கவர்ந்துகொள்ளல்;* to stolen.

**சுருட்டிமடக்குதல்** வி. (v.) *1. நுண்ணுத்தி (சூழ்ச்சி) யாய்க் கைப்பற்றுதல்;* to carry off, remove by stratagem. *2. சொற்போர் மற்போர் முதலிய வற்றில் பிறரைக் கீழ்ப்படுத்துதல்;* to overthrow as in debate, wrestling, etc.,

**சுருட்டு** பெ. (n.) *1. சுருட்டுகை;* curling, coiling. *2. சுருள்;* anything rolled up. *3. புகையிலைச் சுருட்டு;* cheroot, cigar, cigarette. *4. நுண்ணுத்தி (சூழ்ச்சி);* shrewdness, cunning.

**சுருட்டுதல்** வி. (v.) *1. சுருளச்செய்தல்;* to roll up, coil curl. *2. கவர்தல், திருடுதல்;* to take away, steal.

**சுருட்டை** பெ. (n.) *1. சுருண்டமுடி;* curly hair. *2. மிளகாய்ச்செடிக்கு வரும் இலை சுருண்டு கொள்ளும் நோய்;* a disease attacking the chilly plant, mainly in leaves.

**சுருட்டைமயிர்** பெ. (n.) *சுருள்முடி;* curly hair.

**சுருட்டைவிரியன்** பெ. (n.) *விரியன் பாம்பு வகை;* carpet snake.

**சுருண்டுபோதல்** வி. (v.) *1. சோர் வடைதல்;* to get exhausted. *2. வலிமை குன்றல்;* to become weak. *3. வாடி யொடுங்குதல்;* to droop, as under scorching sun. *4. இறத்தல்;* to die.

**சுருள்** பெ. (n.) *1. சுருட்டை;* curl; coil. *2. சுருண்ட பொருள்;* roll, scroll. *3. வெற்றிலைச் சுருள்;* roll of betel leaves. *4. பெண்மயிர்; ஐம்பான் முடிகளுள் ஒன்று; கூந்தல்;* female hair curled and tied up.

**சுருள்கத்தி** பெ. (n.) *வீசும்போது கைப்பிடியிலிருந்து விரிந்தும் மற்ற நேரங்களில் சுருண்டும் இருக்கும் மெல்லிய இரும்புப் பட்டையாலான தாக்குதற்கருவி;* a lithal knife the thin blade of which is wound into a spring.

**சுருள்பாக்கு** பெ. (n.) *கொட்டைப் பாக்கி லிருந்து எந்திரத்தால் சுருளாகச் சீவப்பட்ட பாக்கு;* dried shavings of areca-nut.

**சுருள்பூச்சி** பெ. (n.) *நிலக்கடலைச் செடியை அரித்துக் கெடுக்கும் இலைப்பூச்சிவகை;* insect which blight groundnut plant.

**சுரை** பெ. (n.) *1. சுரக்கை;* streaming, flowing, as of milk. *2. பெற்றம் முதலியவற்றின் மடி;* udder, teat of cow and other animals. *3. ஒருவகைக் கொடி;* calabash, climber.

**சுரைக்காய்** பெ. (n.) *வயிற்று வலியை ஆற்றுவதும், நுண்ணுயிரிகளை அழிப்பதும், உருண்டையான தடித்த அடிப்பகுதியையும் சிறுத்த மேற் பகுதியையும் உடைய வெளிர்பச்சை நிறக்காய்;* fruit of bottle gourd which reduces the stomach pain, kills germs.

**சுவடி** பெ. (n.) *1. ஏட்டுப் புத்தகம்;* ōlai book. *2. பொத்தகம்;* book in general. *3.பழங்காலத்தில் எழுத்தாணியால் எழுதி வைப்பதற்குப் பயன்படுத் தப்பட்ட சற்று நீளமான, அகலக் குறைவான பனை ஓலை ஏடு;* palm leaf used for writing.

**சுவடியியல்** பெ. (n.) *சுவடிகளைப் படித்தல், படியெடுத்தல், பாது காத்தல், பதிப்பித்தல் ஆகியவற்றைக் குறித்து கற்றுக்கொடுக்கும் துறை;* the discipline of studying and preserving palm leaf manuscripts, manuscriptology.

**சுவடு** பெ. (n.) *1. அடித்தடம்;* track; foot stop. *2. அடையாளம்;* sing, indication.

**சுவர்** பெ. (n.) *மேற்கூரையைத் தாங்கி நிற்பதற்கோ, காப்பு ஏற்படுத்து வதற்கோ, அறைகள் ஆக்குவதற்கோ எழுப்பப்படும் தடுப்பு;* wall.

**சுவர்க் கடிகாரம்** பெ. (n.) *சுவரில் மாட்டக்கூடிய பொழுது காட்டும் கருவி (கடிகாரம்);* wall clock.

**சுவர்க்கோழி** பெ. (n.) *பெரும்பாலும் பார்வையில் படாமல் இருப்பதும் சுவர் இடுக்கில் வாழ்வதும், நீண்ட நேரம் ஒலி எழுப்பக்கூடியதுமான சிறிய பழுப்பு நிறப்பூச்சி;* cricket.

**சுவர்மாடம்** பெ. (n.) *1. சுவர்ப்புரை;* niche, vaulted recess in house walls. *2. மாடக்குழி;* a planed niche on the wall intenden to light a small lamp for the sake of light - worship and forefather's - worship.

**சுவரொட்டி** பெ. (n.) *1. பலரும் பார்க்கக் கூடியதாகச் சுவர்களில் ஒட்டப்படும் படம், விளக்கம் முதலியவை அச்ச டிக்கப்பட்ட அல்லது எழுதப்பட்ட பெரிய அளவிலானதாள்;* wall-poster. *2. ஆட்டின் மண்ணீரல்;* spleen of goat.

**சுவரோவியம்** பெ. (n.) *பெரும்பாலும் கோயில், அரண்மனை போன்ற வற்றின் சுவர்களில் பயிரிச் (தாவரச்) சாயங்களைப் பயன்படுத்தி வரையப் பட்ட ஓவியம்;* mural painting.

**சுவை[1]** பெ. (n.) *1. சுவையறிதல்;* to taste. *2. உண்ணுதல்;* to eat, chew, suck. *3. முத்தமிடுதல்;* to kiss.

**சுவை[2]** பெ. (n.) *1. சுவையும் மணமும்;* taste and flavour. *2. இனிமைத்தன்மை;* sweetness. *3. இனிமையானது;* that which is pleasing or gratifying to the senses. *4. புலன்களுள் நாவின் உணர்வு;* the sense of taste one of ai-m-pulan. *5. அறிவால் உணரப்படும் மெய்ப்பாடு;* taste which is understand by brain.

**சுவைஞர்** பெ. (n.) *இலக்கியம், கலை ஆகியவற்றை ஆழ்ந்து நுகரும் பண்புடையவர் ;* connoisseur of literature.

**சுழல்[1]** பெ. (n.) *ஒரு பொருள் அதன் அச்சில் வட்டமாகவும் தொடர்ச்சி*

யாகவும் ஒரே திசையில் இயங்குதல்; சுற்றுதல்; whirl; rotate. 2. சுற்றித் திரிதல்; to roam, wander. 3. மனங் கலங்குதல்; to be agitated troubled, distressed in mind.

**சுழல்²** பெ. (n.) ஆற்றில் அல்லது கடலில் குறிப்பிட்ட பகுதியில் நீர் சுழன்று சுற்றியுள்ள பொருள்களை உள்ளி ழுத்துக்கொள்ளும் வகையில் விசை யுடன் சுழலும் நிலை; whirlpool; vortex.

**சுழல்காற்று** பெ. (n.) பெரும்பாலும் நிலத்தில் அல்லது பாலைவனத்தில் உருவாகும் புழுதி பறக்கச் சுழன்று சுழன்று வீசும் காற்று; whirl wind.

**சுழல் துப்பாக்கி** பெ. (n.) ஒரு கையில் வைத்துக்கொண்டு சுழன்று சுட ஏதுவாக உள்ளதும் ஒன்றுக்கு மேற்பட்ட குண்டுகளைப் போடக் கூடியதுமான ஒரு வகைத் துமுக்கி; revolver, machine-gun.

**சுழல் நாற்காலி** பெ. (n.) சுற்றிடும் நாற்காலி; rotating chair.

**சுழல் முறை** பெ. (n.) (தலைமைப் பதவிக்கான அமர்த்தத்தின்போது) குறிப்பிட்ட காலத்திற்கு ஒருவர், பிறகு மற்றொருவர் என்னும் அடிப்படை; (of appointment) rotation.

**சுழலி** பெ. (n.) மின்னாக்கிச் சக்கரத்தைச் சுழல வைப்ப தற்கான எந்திரம்; turbine.

**சுழற்சி** பெ. (n.) 1. ஒன்றை அச்சாக அல்லது (மையமாகக்) கொண்டு சுழலும் நிலை; rotation. 2. ஒரே வரிசையில் அல்லது குறிப்பிட்ட கால இடைவெளியில் திரும்பத் திரும்ப நிகழ்வது அல்லது செய்வது; cycle.

**சுழற்பந்து வீச்சு** பெ. (n.) ஆடுகளத்தில் பட்டு எழும்போது இடது பக்கமோ சற்றுத் திசைமாறிச் செல்லும் வகையில் சுழலுமாறு பந்து வீசும் முறை; spin bowling.

**சுழற்றி** பெ. (n.) 1. சுழற்றுகருவியின் கைப்பிடி; handle, as of a spinning wheel. 2. துளையிடுங்கருவி; brace and bit.

**சுழற்றுதல்** வி. (v.) 1. ஒன்றைச் சுழலச் செய்தல்; சுற்றுதல்; swing around; swirl (of telephone) dial. 2. சுற்றி வீசுதல் அல்லது ஆட்டுதல்; brandish.

**சுழித்தல்** வி. (v.) 1. குறிப்பிட்ட எழுத்து களில் வட்டமான குறி போடுதல்; make a circle. 2. அலையச் செய்தல்; to cause to roam. 3. சினத்தல்; to be angry. 4. மறைத்தல்; to conceal, deposit, to hide.

**சுழிக்காற்று** பெ. (n.) சூறைக்காற்று; whirl - wind.

**சுழியம்** பெ. (n.) எண் வரிசையில் எண்மதிப்பற்ற எண்; zero.

**சுழியன்** பெ. (n.) 1. ஏமாற்றுப் பேர்வழி; deceiver. 2. இனிப்புப் பண்ட வகை; deep fried round sweet with a filling of coconut and jaggery.

**சுழியோடு** வி. (v.) 1. முக்குளித்தல்; to dive into water. 2. மனத்தை ஆராய்தல்; to study one's mind.

**சுள்ளி** பெ. (n.) உலர்ந்த சிறு குச்சி; dry twig.

**சுள்ளெறும்பு** பெ. (n.) செந்நிறக் கொள்ளியெறும்பு; a species of red ant.

**சுளகு** பெ. (n.) வாய்ப்பகுதி குறுக லாகவும் கீழ்ப்பகுதி அகலமாகவும் இருக்கும்படி ஓலை முதலிய வற்றால் பின்னப்பட்ட முறவகை; a kind of winnowing fan for separating chaff from grain.

**சுளித்தல்** வி. (v.) முகத்தை சுருக்குதல்; சுழித்தல்; screw one's face.

**சுளீரென்று** வி.அ. (adv.) வலி, வெயில் முதலியவை உடலைத் தாக்கும்

போது ஏற்படும் நிலை; சுரீரென்று; a term denoting the severity or acuteness of pain or hot sun - shine, etc.,

**சுளுக்கு** பெ. (n.) *நரம்புப் பிறழ்ச்சி;* sprain.

**சுளுக்குதல்** வி. (v.) *நரம்பு பிசகிக் கொள்ளுதல்;* to be sprained; to be deranged, dislocated.

**சுளுக்குவழித்தல்** வி. (v.) *சுளுக்குப் பிடித்துக்கொண்ட பகுதியை நீவி விடுவதன் மூலம் சுளுக்கை நீக்குதல்;* remove the sprain.

**சுளுவு** பெ. (n.) *எளிது;* simple; easy.

**சுற்றத்தார்** பெ. (n.) *உறவினர்;* relatives.

**சுற்றல்** பெ. (n.) *எண்ணல்;* counting thinking.

**சுற்றளவு** பெ. (n.) *வட்டவளவு;* circumference, perimeter, girth.

**சுற்றறிக்கை** பெ. (n.) *ஒரு செய்தியைத் தொடர்புடைய அனைவருக்கும் தெரிவிக்க அனுப்பும் அறிக்கை;* circular in an office or department, etc.,

**சுற்றாலை** பெ. (n.) *நீரிரைக்கும் கருவி;* water drawing machine.

**சுற்றிக்கட்டுதல்** வி. (v.) *1. நீரை வேறு வழியில் திருப்புதல்;* to divert water into a new channel. *2. தீச்செயலுக்கான கலந்தாய்வு செய்தல்; சூழ்ச்சி செய்தல்;* to from a conspiracy.

**சுற்றிக்காட்டுதல்** வி. (v.) *ஓரிடத்தின் எல்லாப் பகுதிகளையும் பார்ப்பதற்கு உதவுதல்;* take some one around.

**சுற்றித்திரிதல்** வி. (v.) *குறிப்பிட்ட நோக்கம் எதுவும் இல்லாமல் அங்குமிங்கும் சென்றுவருதல்; அலைந்து திரிதல்;* roam, wander.

**சுற்றிப்பார்த்தல்** வி. (v.) *1. (அமைச்சர், அதிகாரி போன்றவர்கள் ஒரு இடத்துக்குச் சென்று) பார்வையிடுதல்;* to inspect. *2. சுற்றுலா செல்லும்போது பல இடங்களை அல்லது ஒரு புதிய இடத்தின் எல்லாப் பகுதிகளையும் சென்று பார்த்தல்;* visit (places of interest); go sight seeing.

**சுற்றிப்பிடித்தல்** வி. (v.) *1. வயிறு மிகவும் நோதல்;* to suffer from colic, to have acute, griping pain in the stomach. *2. பற்றிக்கொள்ளுதல்;* to hold in one's grip.

**சுற்றிப்போடுதல்** வி. (v.) *1. மிளகாய், உப்பு, சந்திமண், கிழிந்த துணி இவற்றை நோயாளி தலைமேற் சுற்றிப் பின் நெருப்பிலிட்டுக் கண்ணேறு கழித்தல்;* to avert the effects of evil eye by waving round the affected person by chillies, salt, earth from cross roads and rags and throwing.

**சுற்றிவருதல்** வி. (v.) *1. உலா வருதல்;* go round as a pleasure tour or as an excursion. *2. பணிவுடன் அல்லது பத்தியுடன் சுற்றுதல்;* to go around due to obedience or prayers.

**சுற்றிவளைத்தல்** வி. (v.) *1. நாலாப் பக்கமும் சூழ்ந்து மடக்கிப் பிடித்தல்;* encircle on all sides. *2. செய்தியை நேரிடையாகக் கூறாது தேவையற்ற பிறவற்றையும் சேர்த்து விரிவாக்கிக் கூறுதல்;* to beat about the bush.

**சுற்று** பெ. (n.) *1. வட்டமாய்ச்செல்லுகை;* passing round in an orbit, moving around. *2. சுற்றுவட்டம்;* circumference, periphery, bounding space. *3. சுற்றளவு;* circuit, compass. *4. சுற்றுவழி;* circuitous run, round about way zigzag route.

**சுற்றுக்கட்டு** பெ. (n.) *வீட்டின் உட்புறத்தில் முற்றத்தைச் சுற்றி அமைந்திருக்கும் தாழ்வாரப் பகுதி;* enclosed verandah around the open space inside the house.

**சுற்றுச்சுவர்** பெ. (n.) *சுற்றுப்புற மதில்;* compound wall.

**சுற்றுச்சூழல்** பெ. (n.) *உயிரினங்கள் வாழும் பகுதியில் உள்ள காற்று, நீர் போன்றவை அடங்கிய இயற்கைச் சூழ்நிலை;* environment.

**சுற்றுதல்** வி. (v.) *1. சுழன்று செல்லுதல்;* to revolve, circulate, turn around spin, whirl. *2. அலைதல்;* to move here and there, roam, wander about. *3. வளையக் கட்டுதல்;* to coil up, as rope. *4. கிறு கிறுத்தல்;* to be giddy, dizzy. *5. மனங் கலங்குதல்;* to be perplexed with difficulties.

**சுற்றுப்பயணம்** பெ. (n.) *1. அதிகார முறையில் அதிகாரிகள் பலவூர் களுக்கும் சென்று வருகை;* circuit, tour, as of an officer. *2. பணிநிமித்த மாகவோ, கல்வி தொடர்பாகவோ பல ஊர்களுக்கும் சென்றுவரல்;* tour according to duty or education.

**சுற்றுப்பாதை** பெ. (n.) *1. சுற்றுவழி; நேரற்ற பாதை;* way which is not short - cut. *2. மாற்றுவழிப்பாதை;* by-pass.

**சுற்றுப்புள்ளி** பெ. (n.) *கோலம் போடத் தொடங்கும்போது அதன் வெளி எல்லையைக் கணிக்க வைக்கப்படும் புள்ளி;* dots marking the outer limits.

**சுற்றுப்புறம்** பெ. (n.) *1. அயலிடம்;* adjacent place, neighbourhood, vicinity. *2. குறிப் பிட்ட இடத்தை ஒட்டியுள்ள அல்லது சார்ந்த பகுதி;* surroundings.

**சுற்றுமுற்றும்** கு.வி.எ. (adv.) *நான்கு பக்கமும்; சுற்றிலும்;* on all sides; all around.

**சுற்றுலா** பெ. (n.) *பொழுதுபோக்காக மேற்கொள்ளும் சுற்றுச் செலவு;* tour, excursion.

**சுற்றுலாத்தளம்** பெ. (n.) *சுற்றுலா மேற்கொள்ளுமிடம்;* place of tourist importance.

**சுற்றுலாத்துறை** பெ. (n.) *சுற்றுலா மேற்கொள்ளும் அயல்நாட்ட வரையும் உள்நாட்டவரையும் ஆற்றுப் படுத்தும் ஓர் (அரசுத்) துறை;* a department intended to increase the tourism from the people as well as foreigners.

**சுற்றுலாமாளிகை** பெ. (n.) *சுற்றுலாச் செல்வோர் தங்கும் விடுதி, விருந்தினர் விடுதி;* tourist lodge or hotel government's guest house.

**சுற்றுலாவிடுதி** பெ. (n.) *சுற்றுலா மாளிகை பார்க்க.*

**சுற்றுவட்டப்பாதை** பெ. (n.) *(விண் வெளியில்) ஒரு கோள் அல்லது செயற்கைக்கோள் சுற்றி வரும் நீள்வட்டப் பாதை;* orbit.

**சுற்றுவட்டாரம்** பெ. (n.) *சுற்றுப்புறச் சிற்றூர்கள்;* surrounding country or villages.

**சுற்றுவழி** பெ. (n.) *நேரற்ற பாதை;* round about or circuitous way, indirect course.

**சுற்றுவாடை** பெ. (n.) *சுற்றுப்புறம்; அண்டை அயல் பகுதிகள்;* nearby places.

**சுற்றுவீதி** பெ. (n.) *கோயிலைச் சுற்றியுள்ள தெரு;* streets surrounding a temple.

**சுற்றுவேலை** பெ. (n.) *பெரும்பாலும் வீட்டில் முகாமையான வேலை களோடு தொடர்புடைய சிறு சிறு வேலைகள்;* odd jobs.

**சுறட்டன்** பெ. (n.) *தொந்தரைக்காரன்;* a obstinate person one who creates trouble.

**சுறட்டுக்கோல்** பெ. (n.) *துறட்டுக் கோல்;* an iron crook.

**சுறட்டுப்பிடி** பெ. (n.) *(பிடிவாதம் பிடித்தல்) முரட்டுத்தனம்;* stubborness, obstinacy.

**சுறா** பெ. (n.) *பல வரிசை கூரிய பற்களைக் கொண்டதும் உருவத்தில் பெரியதும் வலிமை மிக விரைவாக*

*நீந்தக்கூடியதுமான சாம்பல் நிறக் கடல் மீன்;* shark fish.

**சுறாப்புட்டு** பெ. (n.) *சுறாமீனைக் கொண்டு சமைக்கப்படும் தொடு கறி;* spicy side dish made from cooking shark with spices.

**சுறுசுறுப்பு** பெ. (n.) *சோம்பல் இல்லாமல் ஊக்கத்துடன் ஒரு செயலைச் செய்யும் தன்மை அல்லது பண்பு;* being active; briskness.

**சுன்னம்** பெ. (n.) *1. சுண்ணாம்பு;* lime. *2. மாழைகளைப் புடமிட்ட தமிழ் மருந்து;* a calcium compound prepared from metals.

**சுனை** பெ. (n.) *காடு, மலை முதலிய இடங்களில் இயற்கையாக நீர் ஊறித் தேங்கும் சிறு குட்டை; நீர் ஊற்று;* mountain spring.

## சூ

**சூட்டடி** பெ. (n.) *1. அறுத்து அடித்த நெல் தாள்களில் இருக்கும் நெல் மணிகளைப் பிரித்தெடுக்கை;* collecting grains from (paddy) sheaves kept in. *2. சூட்டடியில் கிடைத்த நெல்;* grain obtained by treading.

**சூட்டடுப்பு** பெ. (n.) *சூட்டை எளிதில் விட்டு விடாமல் தக்கவைத்துக் கொள்ளும் கரி அடுப்பு;* coke oven.

**சூட்டளவை** பெ. (n.) *வெப்பமானி;* an instrument to measure the temperature (thermometer).

**சூட்டிக்கை** பெ. (n.) *1. அறிவுக்கூர்மை;* ingenuity. *2. சுறுசுறுப்பு;* smartness.

**சூட்டுக்கறி** பெ. (n.) *முகமதியரின் திருநாளில் வழங்கப்படும் இறைச்சி;* Bakri-id, the *muhammadan* festival as time for meat.

**சூட்டுக்காரன்** பெ. (n.) *திறமையாகவும், சுவையாகவும், சிரிப்பாகவும் பேசுபவன்;* witty person.

**சூட்டுக்கோல்** பெ. (n.) *1. மாடு முதலியவற்றின் மேல் அடையாளம் இடுவதற்காகவோ நோய் நீக்கும் என்ற நம்பிக்கையிலோ பயன்படுத்தப் படும் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பி;* branding iron; instrument for cauterising.

**சூட்டுடம்பு** பெ. (n.) *வெப்பம் கொண்ட உடல்;* body, which is over heated.

**சூட்டுதல்** வி. (v.) *1. ஒரு பெயரை இடுதல்; கொடுத்தல்;* give name confer; christen. *2. ஒருவரைச் சிறப்பிக்கும் வகையிலோ பகடி (கேலி) செய்யும் வகையிலோ ஒரு பட்டம் அல்லது பட்டப் பெயர் அளித்தல்;* confer (a title).

**சூட்டுமணல்** பெ. (n.) *1. கருமணல்;* black sand. *2. வெப்பத்தினால் சூடேறிய மணல்;* heated sand.

**சூட்டோடுசூடாக** கு.வி.அ. (adv.) *1. முந்தைய செயல் செய்த விரைவிலேயே அல்லது நடந்த விரைவிலேயே;* the speedy velocity with which prior work or speech has happened. *2. தொடர்ச்சியாக அல்லது உடனடியாக;* continuously or immediately.

**சூடம்** பெ. (n.) *எரியணம் (கற்பூர வகை);* camphor.

**சூடு** பெ. (n.) *1. தொட்டு அல்லது உணர்ந்து அறியும் அளவில் இருக்கும் வெப்பம்;* warmth; heat. *2. சினமுண்டாக்குவது;* that which provokes. *3. சினம்;* anger. *4. விலையேற்றம்;* increase or enhancement, as of prices. *5. வடு;* scar; callosity.

**சூடுகளம்** பெ. (n.) *பிணையல் அடிப்பதற்கான களம் ;* threshing floor.

**சூடுகொட்டை** பெ. (n.) *கல்யாண முருங்கை மரத்தின் கொட்டை;* seed of the Indian coral tree.

**சூடுகொடுத்தல்** வி. (v.) *(ஒருவருக்குத் திருப்பியடி கொடுக்கும் வகையில்) காட்டமாகப் பேசுதல் அல்லது எழுதுதல்;* admonish severely; give someone a dressing down.

**சூடுசுரணை** பெ. (n.) *உணர்ச்சி;* feeling or sensibility.

**சூடுதல்** வி. (v.) *1. அணிதல்;* to wear, especially on the head. *2. பெயர் முதலியன சூட்டிக்கொள்ளுதல்;* to be invested as with a title.

**சூடுபறக்கத் தேய்த்தல்** வி. (v.) *உடம்பில் மருந்தெண்ணெய் பூசிச் சூடு உண்டாகும்படி தேய்த்தல்;* rubbing with hand forcibly after applying ointment to the affected part so as to create heat,

**சூடுபிடித்தல்** வி. (v.) *தொழில் ஏரணம், (விவாதம்) முதலியவை விரைவு அடைதல்;* (of business, discussion) warm up; pick up. *'நண்பர் வந்த பிறகுதான் (விவாதம்) ஏரணம் சூடுபிடித்தது'.*

**சூடுபோடுதல்** வி. (v.) *பழுக்கக் காய்ச்சிய கம்பியை அல்லது எரியும் கட்டையை (தோல் வெந்துபோகும் படி) உடம்பில் வைத்து எடுத்தல்;* brand; cauterize.

**சூடுமிதித்தல்** வி. (v.) *மாடுகளைக் கொண்டு கதிர்ச்சூடடித்தல்;* thresh paddy by beating or walking bullocks over the sheaves.

**சூடேற்றுதல்** வி. (v.) *ஒருவரை சினமடையச் செய்தல்;* provoke; incense.

**சூத்தை** பெ. (n.) *கெட்டுப்போனது; சொத்தை;* of fruits rotten; of tooth decayed.

**சூதாட்டம்** பெ. (n.) *1. சூதாடுகை;* gambling. *2. நுண்ணுத்தி (சூழ்ச்சி), கரவு;* trick.

**சூதாடி** பெ. (n.) *சூதாடுவோன்;* gambler.

**சூதாடுதல்** வி. (v.) *பணம்; பொருள் ஈடாக வைத்து ஆடுதல்;* gamble by betting money or materials.

**சூதானம்** பெ. (n.) *பாதுகாப்பு;* safe.

**சூது** பெ. (n.) *1. ஏமாற்றுகை;* cheat. *2. சூதாட்டம்;* gambling. *3. வெற்றி;* victory, success. *4. நுண்ணுத்தி (சூழ்ச்சி);* trick.

**சூதுவாது** பெ. (n.) *கள்ளங்கபடம்;* guile; cunning.

**சூப்பி** பெ. (n.) *1. குழந்தைகள் வாயில் வைத்துச் சுவைத்தற்கு முலைக் காம்பு போல் அமைந்த குமிழ்;* artifical nipple for a child to suck. *2. கைவிரலைச் சப்பும் சிறுகுழந்தை;* a child sucking its finger.

**சூப்புத்தடி** பெ. (n.) *குச்சியில் செருகியிருக்கும் ஒருவகை இனிப்புப் பண்டம்;* a variety of candy.

**சூப்புதல்** வி. (v.) *சப்புதல்;* to suck, sip.

**சூம்பு** பெ. (n.) *1. கை, கால் முதலிய உறுப்புகள் நோய் கரணியமாக மெலிதல்;* of limbs be or become thin. *2. முகம் வெறுப்பின் கரணியாகச் சிறுத்தல்; சுருங்கிப் போதல்;* of face be shrunk.

**சூரப்புலி** பெ. (n.) *அஞ்சா மறவன்;* dauntless hero, generally used in contempt.

**சூரன்** பெ. (n.) *1. திறமை படைத்தவன்;* extraordinarily smart person. *2. நெருப்பு;* fire. *3. அரிமா;* lion.

**சூரிக்கத்தி** பெ. (n.) *கூர்மையான ஒருவகைக் கத்தி;* a kind of sharp knife.

**சூல்** பெ. (n.) *1. கரு;* conception, pregnancy. *2. முட்டை;* egg. *3. முகில் நீர் நிரம்பியிருக்கை;* wateriness of clouds.

**சூலம்** பெ. (n.) *நீண்ட மாழைத் தண்டின் நுனியில் மூன்று கூரிய முனைகளை உடைய வேல்;* trident.

**சூலை** பெ. (n.) *1. காலந்தவறி நிகழும் மாதவிடாயால் ஏற்படும் மூட்டுவலி நோய் முடக்குவலி நோய், வயிற்றுளைவு நோய் முதலிய நோய்கள்;* a clan of diseases including arthritic complaints, stiffness or contraction of the muscles or nerves, scrofula, rheumatism, gout, colic, spasmodic pain, complaints from irregular menses. *2. ஆங்கில மாதத்தின் ஒரு பெயர்;* one of the english month.

**சூலைக்கட்டி** பெ. (n.) *தாங்க முடியாத குத்தலை உண்டாக்கும் ஒருவகைக் கட்டி;* a small kind of abscess attended with an unbearable excruiating pain.

**சூழ்** பெ. (n.) *1. கலந்தாய்வு;* deliberation, counsel. *2. ஆராய்ச்சி;* investigation.

**சூழ்ச்சி** பெ. (n.) *1. தீங்கு செய்யும் நோக்கில் மேற்கொள்ளப்படும் நுண்ணுத்தி;* plot; scheme; intrigue. *2. செய்வழி;* plan means. *3. மனத் தடுமாற்றம்;* mental disturbance.

**சூழ்த்தல்** வி. (v.) *1. (ஒருவரை, ஒன்றை, ஓர் இடத்தை) சுற்றி அமைதல்;* surround (some one) or a place. *2. சுற்றி வருதல்;* hover about, flow around. *3. அறிதல்;* to know.

**சூழ்நிலை** பெ. (n.) *1. செய்தி அல்லது நிகழ்ச்சிக்குப் பின்னணி, நிலைமை;* circumstances, conditions. *2. மாந்தர் வாழும் இடத்தைச் சுற்றியிருக்கும் இயற்கைப் பொருள்களின் தொகுதி;* surroundings.

**சூழ்வளி** பெ. (n.) *சுழல்காற்று, சூறாவளி;* whirlwind, cyclone.

**சூழ்வினை** பெ. (n.) *சூழ்ச்சி பார்க்க.*

**சூழ** கு.வி.அ. (adv.) *1. கூட்டமாகப் பின்தொடர;* to accompany. *'கட்சித் தொண்டர்கள் சூழத் தலைவர் மேடைக்கு வந்தார்'.* 2. *வெள்ளம் போன்று சூழ வருதல்;* encircling like flood water.

**சூழலியல்** பெ. (n.) *மாந்தர்கள், விலங்குகள், நிலத்தினை ஆகியவை தங்களுக் குள்ளும் சுற்றுச்சூழலுடனும் கொண் டிருக்கும் தொடர்பைக் குறித்த அறிவியல்துறை;* ecology.

**சூழல்** பெ. (n.) *1. (இயற்கையாக அமைந்த) சுற்றுச் சூழல்;* environment. *2. ஒன்று அல்லது ஒருவர் அமையும் நிலைமை;* context; place; environment. *3. தனிமாந்தர்களிடமும் குழுக்களி டமும் சில வகையான போக்குகள், வருத்தங்கள் உருவாவதற்குக் கரணிய மான சிறப்புக்கூறு கொண்ட நிலைமை;* conditions.

**சூழி** பெ. (n.) *1. உச்சி;* crown of the head. *2. மேலிடம்;* top portion.

**சூழியம்** பெ. (n.) *1. உச்சிக்கொண்டை;* hair-knot on the crown of the head. *2. உச்சிக் கொண்டையில் அணியும் அணிகலன்;* ornament worn on the crown of the head.

**சூள்** பெ. (n.) *தென்னை அல்லது பனை ஓலையில் செய்யும் தீப்பந்தம்;* torch made of coconut or palmyra leaf.

**சூள்கொட்டுதல்** வி. (v.) *மனவுருக்கம், எரிச்சல், வருத்தம் போன்றவற்றைக் காட்டுவதற்காக வாயைத் திறக் காமல் நாக்கால் மேலண்ணத்தில் ஒலி எழுப்புதல்;* make a clucking noise.

**சூளுரை** வி. (v.) *ஆணையிடுகை;* oath.

**சூளை** பெ. (n.) *1. செங்கல் முதலியன சுடுங்காளவாய்;* kiln, furnace. *2. ஈம விறகு;* funeral pile.

**சூளையர்** பெ. (n.) *மகளிர்;* woman.

**சூற்சங்கு** பெ. (n.) *முத்திருக்கும் சிப்பி;* shell, oyster containing pearls.

**சூறாவளி** பெ. (n.) *சுழற்காற்று கடுங்காற்று;* whirlpool, tempest.

**சூறை** பெ. (n.) *1. சுழல்காற்று;* whirl wind. *2. கொள்ளை;* decoity.

**சூறைக்காய்விடுதல்** பெ. (n.) *1. ஊர் வலத்தின்போது நிலக்கடலை, முந்திரிக்கொட்டை முதலியவற்றை வாரி இறைத்தல்;* to throw edibles during procession. *2. சிற்றூர்த் தெய்வங்களுக்கு நேர்த்திக்கடன் பொருட்டு சிதறு தேங்காய் உடைத்தல்;* to break coconut on a vow to village deity.

**சூறைக்காரன்** பெ. (n.) *கொள்ளையடிப் பவன்;* robber, plunderer.

**சூறைக்காற்று** பெ. (n.) *சுழல் காற்று;* whirl wind.

**சூறைத்தேங்காய்** பெ. (n.) *நேர்த்திக் கடனாகத் தெய்வத்தின் முன்னி லையில் உடைக்கும் சிதறு தேங்காய்;* coconuts dashed on the ground before a shrine in fulfilment of vow.

**சூறையாடுதல்** வி. (v.) *கொள்ளை யடித்தல்;* to plunder, pillage.

## செ

**செக்கச்சிவத்தல்** வி. (v.) *மிகச் சிவத்தல்;* to be deep red. *'சினத்தால் அவனது முகம் செக்கச்சிவப்பாயிற்று'.*

**செக்காடுதல்** வி. (v.) *செக்கில் அரை படுதல்;* to be pressed in oil - press.

**செக்கிழுத்தல்** வி. (v.) *சிறைத் தண்டனை யின் ஒரு பகுதியாக மாட்டிற்குப் பதிலாக மனிதர்கள் எண்ணெய்ச் செக்கை இழுத்தல்;* to work on the oil - press by pulling the yoke instead of bull. *'இந்திய விடுதலைப்போரின் போது கப்பலோட்டிய தமிழன் வ.உ. சிதம்பரனார் கோவைச் சிறையில் செக்கிழுத்தார்'.*

**செக்கு** பெ. (n.) *மரத்தாலோ கல்லாலோ ஆன பெரிய உரல் போன்ற அமைப்பின் நடுவில் பொருத்தப் பட்டுள்ள உலக்கை போன்ற தடியை மாடுகளைக் கொண்டு வட்டமாகச் சுழலச் செய்வதன் மூலம் வித்து களிலிருந்து எண்ணெய் எடுக்கப் பயன்படும் பொறி;* a country oil-press.

**செக்குலக்கை** பெ. (n.) *செக்கு உலக்கை போல நின்று மெதுவாகச் சுறுசுறுப் பின்றி வேலை செய்பவன்;* a person working very slowly like the shaft used in the oil - press. *'வேலையைச் சுறுசுறுப்பின்றிச் செய்வதால் அவளுக்குச் செக்கு உலக்கை என்பது பட்டப்பெயர்'.*

**செங்கலறுத்தல்** வி. (v.) *ஈரமண்ணி லிருந்து செங்கல் வார்த்தல்;* to make brick with wet clay.

**செங்கற்சல்லி** பெ. (n.) *தளம் போடுவதற் காகவும், தட்டைக் கூரை மீது போடுவதற்காகவும் உடைக்கப் பட்ட செங்கல் துண்டுகள்;* broken brick jelly for flooring and weathering course over that roof.

**செங்கற்சூளை** பெ. (n.) *உலர்ந்த களிமண் பாளங்களை (செங்கற்கள்) இடை வெளியிட்டு அடுக்கி, அதில் மரத் துண்டுகள் இட்டு, எரித்துச் சுடும் அமைப்பு;* stack of dried bricks with wooden blocks as fuels to burn kiln.

**செங்காடு** பெ. (n.) *சிவந்த காட்டு நிலம் (வின்.);* red soil.

**செங்காய்** பெ. (n.) *பழுக்கும் முன்பருவத் துள்ள காய்;* fruit almost ripe.

**செங்குத்தாய்விழுதல்** வி. (v.) *தலை குப்புற விழுதல்;* to fall head long. *'மலை மீதிருந்து செங்குத்தாய் விழுந்ததால் மண்டை உடைந்து அவன் மடிந்தான்'.*

**செங்கோல்** பெ. (n.) *அரச இலச்சினை பொறிக்கப்பட்ட அரசாட்சிச் சின்ன மாகிய நேர்கோல்;* sceptre, a symbol of sovereignty.

**செஞ்சோற்றுக்கடன்** பெ. (n.) *அரசனிடம் பெற்றுண்ட உணவுக்காக அவன் பொருட்டு வீரன் தன் உயிரைப் போரிடைக் கொடுத்தலாகிய கடமை;* duty or obligation of a soldier to lay down his life in the cause of the kind who fed him .

**செண்டு** பெ. (n.) *கட்டப்பட்ட மலர்த் தொகுப்பு பூக்கற்றை;* a kind of bouquet.

**செத்தை** பெ. (n.) *எரிப்பதற்கான காய்ந்த புல், சருகு முதலியன;* dry waste materials like leaves, straw, etc.,

**செதில்** பெ. (n.) *செதில் பார்க்க.*

**செதிள்** பெ. (n.) *மீன், ஓணான் போன்ற வற்றின் உடல் மேல் செறிவாக மூடியிருக்கும் விறைப்பான தோல் அடுக்கு;* scale of garden lizard, of fish, etc.,

**செதுக்குதல்** வி. (v.) *1. புல் முதலியன செதுக்குதல்;* to cut off a surface as in cutting grass; to pare, shave off. *2. மரம் முதலியன செதுக்குதல்;* to plane, how with an adze, chisel. *'கட்டையைச் செதுக்கிக் கத்திக்குப் பிடி போட்டான்'.*

**செதுக்குளி** பெ. (n.) *1. கட்டையைச் செதுக்கப் பயன்படும் உளி;* carpenter's chisel. *2. மணி பதித்தற்குரிய தட்டான் கருவி;* gold - smith's chisel, used in encasing.

**செப்பஞ்செய்தல்** வி. (v.) *1. கட்டடங் களைப் பழுது பார்த்தல்;* to repair buildings, maintenance of buildings. *2. பழுது, குறைபாடு, பிழை முதலிய வற்றை நீக்கிச் சரிசெய்தல்; புதுப் பித்தல்;* restore; renovate; set right.

**செப்பனிடுதல்** வி. (v.) *1. பழுதுபார்த்தல், சீர்திருத்துதல்;* to repair, correct. *'சாலை களைச் செப்பனிடக் கேட் டுள்ளோம்'. 2. சமப்படுத்துதல்;* to level, make even. *3. மெருகிடுதல்;* to polish.

**செப்புக்குடம்** பெ. (n.) *1. கோயில் கோபுரத்தின் மீது பொருத்தப்படும் செம்பாலான குடம்;* ornamental copper kudam placed at the top of vimanam and gopuram. *2. கோயில் பூசைக்கு நீர் எடுத்து வரும் செம்பாலான குடம்;* copper vessel used to bring water to temple rituals.

**செப்பேடு** பெ. (n.) *பழங்கால அரசர்களின் ஆணைகள், அவர்கள் வழங்கிய கொடை பற்றிய செய்திகள் முதலா னவை பொறிக்கப்பட்ட செப்புத் தகடு;* copper - plate grant. *'சோழர் காலச் செப்பேடுகள் அந்தக் கால நிர்வாக முறையை அறிய உதவு கின்றன'.*

**செம்பு** பெ. (n.) *1. வெப்பம், மின்சாரம் ஆகியவற்றை எளிதில் கடத்தக் கூடியதும் கடினத்தன்மை குறைந்தது மான வெளிர்ச் சிவப்பு நிற மாழை, செம்பு;* copper cuprum, as reddish copper, a light and light red metal earily conducting heat and current. *2. பொன்;* gold. *3. நீர், பால் முதலிய வற்றை எடுத்துச்செல்ல ஏந்தாகக் குறுகிய கழுத்தும் உருண்டை வடிவக் கீழ்ப்பகுதியும் உடைய ஓர் மாழை ஏனம்;* a small metal vessel with a narrow neck for carrying water, milk, etc.,

**செம்பொன்** பெ. (n.) *சிறந்த பொன்;* superior gold.

**செம்மண்** பெ. (n.) *மட்பாண்டங்கள் மீது பூசவும், சாலைகள் அமைக்கவும் பயன்படும் ஒருவகைச் சிவப்பு நிற மண்;* a kind of red earth, red soil.

**செம்மறி ஆடு** பெ. (n.) *கம்பளிப் போர்வைக்குத் தேவையான முடியைப் பெறுவதற்காகவும், இறைச்சிக் காகவும் வளர்க்கப்படும் ஒருவகைப் பழுப்பு நிற ஆடு;* common brown sheep.

**செம்மைப்படுத்துதல்** பெ. (n.) *1. ஒழுங்கு படுத்துகை;* to put in order, adjust, arrange, make ready, rectify. *2. தூய்மை யாக்குகை;* to cleanse. *3. அழகு படுத்துகை;* to dress, decorate.

**செய்தி** பெ. (n.) *1. குறிப்பிட்டுச் சொல்லும் படியான நிகழ்ச்சி பற்றிய விளக்கம்;* a detail news about a particular programme. *2. தெரிவிக்கப் படத் தகுதியுள்ள விளக்கம் (செய்தி);* news, message, information. *'அவனுக்குப் பணம் கிடைத்த செய்தி எனக்குத் தெரியாது'.*

**செய்தித்தாள்** பெ. (n.) *நாள்தோறும் செய்திகள் அச்சடிக்கப்பட்டு, விற்ப னைக்கு வரும், நாட்டு நடப்பைக் காட்டும் நாளிதழ்கள் (பத்திரிக்கை);* news paper.

**செய்தித்துணுக்கு** பெ. (n.) *கவனத்தை ஈர்க்கும் வகையில் செய்தியிதழ்களில் வெளியாகும் சுவையான சிறு செய்திகள்;* titbits in periodicals. *'அந்தச் செய்தியிதழில் செய்தித் துணுக்குகள் அதிகம் வெளிவருகின்றன'.*

**செயல்திட்டம்** பெ. (n.) *ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் செய்து முடிக்க வேண்டிய பெரிய திட்டத்தின் நடைமுறைச் செயற்பாடு;* action programme. *'இரண்டாயிரம் வீடுகள் கட்டித் தருவதாக அரசு செயல் திட்டம் வகுத்துள்ளது'.*

**செயலிழத்தல்** வி. (v.) *செயற்படும் திறனை இழத்தல்;* become impaired. *'பக்கவூதையால் ஒரு கையும் காலும் செயலிழந்துவிட்டது'.*

**செயற்குழு** பெ. (n.) *நிருவாகத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் குழு;* executive committee. *'பொதுக் குழுவின் செயற்பாடுகளைச் செயற் குழு நடைமுறைப்படுத்தும்'.*

**செரித்தல்** வி. (v.) *குடலினால் உறிஞ்சப் படுவதற்கு ஏந்தாக உணவில் உள்ள சத்துகள் வயிற்றுத் தசைகளினால் அரைக்கப்பட்டுக் கூழாதல் (சீரண மாதல்);* to be digested. *'தின்ற சோறு செரிக்கவாவது வேலை செய்ய வேண்டும்'.*

**செருக்கு** பெ. (n.) *பிறரை மதிக்காத போக்கு, இறுமாப்பு (அகந்தை);* haughtiness, pride, arrogance, self-conceit.

**செருக்குதல்** வி. (v.) *பாக்கு முதலியன தொண்டையில் அடைத்துக் கொள் ளுதல்;* to be choked, as by a bone or a piece of areca-nut.

**செருகுதல்** வி. (v.) *ஒரு பிடிப்பில் நிற்கும்படி ஒன்றை நுழைத்தல் அல்லது திணித்தல்;* to insert, to slide into.

**செல்லங்கொடுத்தல்** வி. (v.) *அன்பு மேலீட்டால் குழந்தைகட்கு அதிக இடங்கொடுத்தல்;* to be indulgent, as to a child.

**செல்லப்பிள்ளை** பெ. (n.) *செல்லம் கொடுத்து வளர்க்கப்பட்ட அருமைக் குழந்தை;* child brought up delicately, petted child.

**செல்லரித்தல்** வி. (v.) *கறையானால் தின்னப்படுதல்;* to be eaten by white ants.

**செல்லவைத்தல்** வி. (v.) *செல்லாத காசைச் (நாணயத்தை) செலாவணி யாக்குதல்;* to pass, as a base coin.

**செல்லாக்காசு** பெ. (n.) *1. செலா வணியாகாத பணம்;* coin that will not pass, base coin. *2. செல்வாக்கும் மதிப்பும் இழந்தவன் (வின்.);* one who has lost credit or influences. *'அவன் அரசியலில் செல்லாக்காசு ஆகிப் போனான்'.*

**செல்லாக்காசோலை** பெ. (n.) *பணம் மறுக்கப்பட்ட காசோலை;* dis-honoured cheque.

**செல்லாக்காலம்** பெ. (n.) *1. செல்வாக்கு நீங்கின காலம்;* time when one's influence is gone, as by loss of office, reputation, etc., *'அந்தக் கட்சிக்கு இப்போது செல்லாக்காலம்'*. *2. தள்ளாத கிழப்பருவம்;* decrepit, old age.

**செல்லுபடியாகுதல்** வி. (v.) *உரிய மதிப்பையும் பயனையும் பெற்று நடைமுறையில் ஏற்கப்படுதல்;* be valid; be in force. *'உன் அதிகாரமெல்லாம் இனி செல்லுபடியாகாது'*.

**செல்வச்செருக்கு** பெ. (n.) *செல்வ மிகுதியால் உண்டாகும் இறுமாப்பு;* haughtiness due to wealth. *'செல்வச் செருக்கால் அழிந்தோர் பலர்'*.

**செல்வந்தன்** பெ. (n.) *மிகுந்த செல்வம் படைத்தவன்;* rich person, plutocrat.

**செல்வம்** பெ. (n.) *1. மதிப்புள்ள உடைமைகளின் தொகுப்பு; சொத்து; பொருள்வளம்;* wealth, riches. *'எவ்வளவு செல்வம் இருந்தும் என்ன பயன்'*. *2. கல்வி;* learning. *3. குழந்தை;* child.

**செல்வாக்கு** பெ. (n.) *பணம், மதிப்பு, பதவி முதலியவற்றால் பிறரைத் தன் விருப்பத்திற்கு ஏற்ப நடக்கச் செய்ய அல்லது வழிநடத்த இருக்கும் திறன், நாடெங்கும் கிடைக்கும் பெரு மதிப்பு;* influence.

**செலவழிதல்** வி. (v.) *பணம், பொருள், நேரம் முதலியன செலவாய்ப் போதல்;* to be spent, used up, consumed.

**செலவிடுதல்** வி. (v.) *1. கூலி கொடுத்தல், பொருள் வாங்குதல் போன்றவற்றிற்காகப் பணத்தை வழங்குதல்;* to spend. *2. பணம் போன்றே நேரம் முதலியவற்றையும் செலவிடுதல்;* to spend time like money, etc.,

**செலவுசெய்தல்** வி. (v.) *பணம், பொருள், நேரம் போன்றவற்றைத் தீர்த்தல்;* to spend, consume, use up.

**செவிசாய்த்தல்** வி. (v.) *1. சொல்வதைக் கேட்கச் செவி தாழ்த்தல்;* to incline one's ear. *2. விருப்பமுடன் கேட்டல்;* hearing with interest.

**செவிடு** பெ. (n.) *கேட்கும்திறன் இல்லாமை, காது கேளாமை;* deafness. *'நேர்ச்சியி(விபத்தி)ல் அவனுக்குக் காது செவிடாகி விட்டது'*.

**செவிப்பறை** பெ. (n.) *செவியின் உட்பகுதியில் ஒலியை உணர்வதற்காக இருக்கும் மெல்லிய தோலாலான உறுப்பு;* ear drum.

**செழித்தல்** வி. (v.) *தழைத்தல்;* to thrive, flourish, grow well, as vegetation.

**செறுமுதல்** வி. (v.) *கனைத்தல், உறுமுதல்;* to hem, grunt.

## சே

**சேடைபாய்ச்சுதல்** வி. (v.) *வயலில் நீர் நிறைத்தல்;* to fill fields with water.

**சேந்துகிணறு** பெ. (n.) *இறைக்கும் கிணறு;* draw well.

**சேந்துதல்** வி. (v.) *1. கயிறு முதலியவற்றை இழுத்தல்;* to draw, as a rope running over a pulley. *2. கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்தல்;* draw water from a well. *'அவள் கிணற்றிலிருந்து தண்ணீரைச் சேந்தினாள்'*.

**சேமிப்பு** பெ. (n.) *1. எதிர்காலத் தேவை கருதி வைப்பகம் முதலியவற்றில் சிறிது சிறிதாகச் சேர்த்து வைத்திருக்கும் பணம்;* savings in a bank, etc., *2. எதிர்காலத் தேவை கருதி உணவுப் பொருள், குருதி முதலியவற்றைப் பாதுகாப்பாக உரிய இடத்தில்*

*சேர்த்தல்;* store of paddy, blood, etc.; stock.

**சேர்க்கை[1]** பெ. (n.) *1. நட்பு, தொடர்பு;* friendship, intimacy. *2. சீட்டு விளையாட்டு போன்றவற்றில் ஒத்த சீட்டுகளைச் சேர்த்தல்;* collecting the equivalents, as in the playing card game.

**சேர்க்கை[2]** பெ. (n.) *1. ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் நிலை, கூடுகை;* combining, mixing. *'சுண்ணாம்பின் சேர்க்கையால் மஞ்சள் செந்நிற மடையும்'. 2. கலப்புப்பொருள்;* compound, mixture. *3. பள்ளி முதலிய வற்றில் மாணவர்கள் சேருவதற்கான பதிவு;* admission to a school, etc., entrolment.

**சேரிமடை** பெ. (n.) *மதகின் மேலாக வழிந்தோடும் மிகுதி நீர் வாய்க்கால்;* sluice carrying surplus water.

**சேவற்சண்டை** பெ. (n.) *சேவல்களின் காலில் கத்தியைக் கட்டி மோத விடும் ஒருவகை சண்டை;* cock's-fight.

**சேவு** பெ. (n.) *கடலை மாவைப் பிசைந்து அச்சில் தேய்த்து எண்ணெயில் இட்டுச் செய்யப்படும் கார அல்லது இனிப்புச் சுவையுடைய திண் பண்டம்;* a savoury or sweet in the shape of start stick-strips made of chick - pea past fried in oil.

**சேவைநாழி** பெ. (n.) *சேவை பிழிவதற் கான அடித்துளைகளும் கைப்பிடி களும் கொண்டு, ஒன்றுக்குள் ஒன்று செல்லுமாறு அமைந்த உழக்குப் போன்ற கருவி;* a kind of colander - like vessel used in preparing sevai.

**சேற்றுக்கால்** பெ. (n.) *1. வயலில் தொளியடித்து நாற்று நடவு செய்ய அணியாகும் நிலம்;* wet - ploughing system of cultivation. *2. தொளியடித்து விதைக்கும் வயல்;* land (trampled, ploughed and puddled for sowing paddy).

**சேற்றுப்பலகை** பெ. (n.) *சேறடித்த வயலைச் சமன்செய்யப் பயன்படும் பலகை; பரம்புப்பலகை;* wooden plank to flatten the slushed wet land.

**சேற்றுப்புண்** பெ. (n.) *வேளாண் பணி செய்பவர்களுக்குக் கால் விரலிடையில் உண்டாகும் அரிபுண்;* itching sore between to toes, due to frequent walking in the mud.

**சேறாடுதல்** வி. (v.) *வயலில் விதைத் தற்குத் தொளி கலக்குதல்;* to make a field slushy for sowing paddy.

**சேறு** பெ. (n.) *1. நீருடன் கலந்து குழைந்த மண், சகதி;* mud, mire, slush, loam. *2. பனம் பழம், தேங்காய் முதலிய வற்றின் செறிந்த உள்ளீடு;* kernal, as of a coconut.

**சேனைக்கால்** பெ. (n.) *கோயிலில் குடவடிவ விளக்கை வைக்கும் கம்பம்;* stant of a pot-shaped lamp used in temples.

**சேனைப்பால்** பெ. (n.) *குழந்தை பிறந்ததும் புகட்டும் இனிப்புக் கலந்த நீருணவு;* sweetened liquid, used for feeding an infant as soon as it is born.

## சை

**சைகை** பெ. (n.) *செய்தி தெரிவிக்கும் முறையில் கை, கண் முதலிய வற்றால் காட்டும் குறிப்பு;* signal gesture, hint, as winking at the eyes, hand.

## சொ

**சொக்கட்டான்** பெ. (n.) *உருட்டிப்போடும் கட்டைகளின் எண்ணிக்கைக்குத் தகுந்தபடி விளையாடும் தாய விளையாட்டு வகை;* a game similar to backgammon .

**சொக்கட்டான்காய்** பெ. (n.) *சொக் கட்டான் ஆட்டத்தில் பயன்படுத்தும் காய்;* pieces used in the game of *sokkattan.*

**சொக்கிடுதல்** வி. (v.) *மயக்கப்பொடி தூவுதல்;* to sprinkle magic powder for inducing stupor.

**சொக்குதல்** வி. (v.) *1. அழகு, திறமை முதலியவற்றால் தன்வயம் இழத்தல்;மயங்குதல்;* to become languid, sleepy; to be stupefied. *2. தூக்கத்தால் கண்கள் செருகுதல்;* to be heavy with sleep.

**சொக்குப்பொடி** பெ. (n.) *பிறரை மயக்கித் தன்வயப்படுத்துவதற்குப் பயன்படும் மாயப்பொடி;* a magic powder causing stupor love powder.

**சொட்டுநீர்ப்பாசனம்** பெ. (n.) *குழாய்களின் வழியே நீரைச் செலுத்தி, மரம், செடி, கொடிகளின் வேர்ப்பகுதியில் நீர் கொட்டும் வகையில் அமைந்த பாசனமுறை;* drip irrigation.

**சொட்டுமருந்து** பெ. (n.) *1. இளம் பிள்ளை இசிவு நோய் தாக்காமல் இருப்பதற்காக, குழந்தை பிறந்த மூன்றாவது மாதத்திற்குப் பின் 6 திங்களுக்கொரு நாள் மேனி ஐந்து ஆண்டுகள் குழந்தையின் வாயில் சொட்டு சொட்டாக ஊற்றப்படும் மருந்து;* polio drops. *2. கண், காது, மூக்கு, வாய் ஆகியவற்றில் சொட்டுச் சொட்டாக விடப்படும் மருந்து;* medicinal drops.

**சொட்டைவிழுதல்** வி. (v.) *தலையில் வழுக்கை உண்டாதல்;* to become bald, as the head.

**சொடக்கு** பெ. (n.) *கட்டை விரலையும் நடுவிரலையும் சேர்த்துச் சுண்டி யெழுப்பும் ஒலி; கை நொடித்தல் பொழுது;* time taken to snap one's fingers, moment.

**சொண்டுமிளகாய்** பெ. (n.) *விதையில்லாத சொத்தை மிளகாய்த் தோல்;* blignted pod of chilly.

**சொத்து** பெ. (n.) *அசையும் பொருள் அசையாப்பொருள் என்ற இருவகை உடைமைகள்;* property, possessions, being of two kinds viz., *tavaram* and *sangamam*. *'சொத்தை விற்றுக் கடனை அடைத்தார்'.*

**சொத்தை** பெ. (n.) *புழு, வண்டு முதலியன அரித்த காய்கறி பழம் முதலியவை;* that which is decayed, worm - eaten, injured by insects.

**சொருகு** பெ. (n.) *செருகுதல் பார்க்க.*

**சொல்லடைவு** பெ. (n.) *ஒரு நூலில் வழங்கும் சொற்களை அகரவரிசைப் படுத்தி நூலுடன் இணைக்கும் பட்டியல்;* word index (for texts, ext., literary works).

**சொல்லாடுதல்** வி. (v.) *பேசுதல்;* to speak, talk.

**சொறிசிரங்கு** பெ. (n.) *தோலில் சொர சொரப்பான தடித்த சுற்றுப் பகுதியை உடைய புண்களை உண்டாக்கி அரிப்பை ஏற்படுத்தும் ஒருநோய்;* a kind of itch that causes much annoyance, herpes, scab.

## சோ

**சோகை** பெ. (n.) *குருதிக் குறைவால் முகம் வெளுத்து ஊதுமாறு செய்யும் நோய்வகை;* anaemia, a disease characterised by pale and bloated face.

**சோணைக்காது** பெ. (n.) *அடிபெருத்த காது;* large lobed ear.

**சோத்துப்பெட்டி** பெ. (n.) *மீனவர் கட்டுச் சோறு எடுத்துச் செல்லப் பயன் படுத்தும் கோரையினால் ஆன பெட்டி;* small box made of sedge to convey packed meals.

**சோத்துவெள்ளி** பெ. (n.) *மீனவர் இரவில் உணவு உண்ணுவதற்கான நேரம் கணிக்கப் பயன்படும் வெள்ளி (உறுமீன்);* the silver star, which is seen to determine the time for night meals by fishermen in sea.

**சோப்பளாங்கி** பெ. (n.) *1. பயனற்றவன்;* lazy, worthless fellow. *2. வலுவற்றவன்;* weak person.

**சோம்பல்முறித்தல்** வி. (v.) *சோம்பற் குறியாக உடம்பை சொடக்கு வாங்குதல்;* to stretch or twist oneself due to excessive idleness.

**சோம்பியிருத்தல்** வி. (v.) *வேலைக்கு வாராது நின்றுவிடுதல்; உடல் தளர்வாதல்; வாடியிருத்தல்;* to stay away from work.

**சோம்பேறி** பெ. (n.) *சோம்பலுள்ளவன்;* sluggard, idler.

**சோமாறி** பெ. (n.) *1. சோம்பேறி;* idle fellow, sluggard. *2. சொல்மாறி;* person who frequently changes his words.

**சோர்தல்** வி. (v.) *1. உடல் அல்லது மனம் மேற்கொண்டு செயல்பட ஆற்றலற்று தளர்தல்;* to languish, droop; to be prostrate or relaxed, as the limbs in sleep; to be weary, exhausted.

**சோர்வாதம்** பெ. (n.) *கை, கால்களில் அயர்ச்சியுண்டுபண்ணும் முடக்கு நோய்வகை;* a disease causing loss of power in the limbs.

**சோரப்பெய்தல்** வி. (v.) *மழை மிகுதியாகப் பொழிதல்;* to rain profusely.

**சோலை** பெ. (n.) *மரங்கள் செறிந்து நிழல் தரும் இடம்;* flower garden, grove.

**சோழி** பெ. (n.) *மாலையாகக் கோக்கவோ, விளையாடவோ பயன்படும் கடல்வாழ் சிறு உயிரிகளின் வெள்ளை அல்லது பழுப்பு நிற ஓடு, பலகறை;* cowry.

**சோழிக்கூடு** பெ. (n.) *நடுவில் துளையிடப்பட்டு, நான்கு மூலைகளிலும் கயிறுகளால் கட்டப்பெற்ற பலகை;* a plank with a hole in the middle, tied at all four corners.

**சோளக்கூழ்** பெ. (n.) *சோளத் தவசத்தை மாவாக அரைத்துச் செய்யும் கூழ்;* food prepared from maize.

**சோளக்கொல்லைபொம்மை** பெ. (n.) *கம்பு, சோளம் முதலியவை விளையும் நிலத்தில் பறவைகளை விரட்டுவதற்காக உயரமான கழியில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் துணி அல்லது வைக்கோல் அடைத்த மாந்த உருவத்தை ஒத்த பொம்மை;* scarecrow.

**சோளம்** பெ. (n.) *உருண்டையான தனித்தனி மணிகளைக் கொண்ட ஒருவகைத் தவசம்;* maize, great millet.

**சோளி** பெ. (n.) *கிளிஞ்சல்வகை;* a kind of shell.

**சோறாக்குதல்** வி. (v.) *உணவு சமைத்தல்;* to cook food.

**சோறுவடித்தல்** வி. (v.) *சமைத்த சோற்றினின்று கஞ்சியை வடித்தல்;* to strain conjee water from boiled rice.

**சோறூட்டல்** பெ. (n.) *குழந்தைக்கு முதன் முறையாகச் சோறூட்டுகை;* first feeding of an infant with boiled rice.

## த

**தக்கது** பெ. (n.) *தகுதியானது;* that which is fit or proper.

**தக்கவைத்தல்** வி. (v.) *ஒன்றை இழக்காமல் தொடர்ந்து வைத்திருத்தல்;* to retain (a seat, title, etc., in a contest, election, etc.,), to subjugate.

**தக்களி** பெ. (n.) *(கையால் பஞ்சிலிருந்து நூல் நூற்கப் பயன்படும்) கம்பியின், மேற்பகுதியில் கொக்கிபோலக் கூர்மையாக வளைத்துக் கீழ்ப்புறம் தட்டுப் போன்ற ஒரு சிறு பகுதியை இணைத்த சிறு கருவி;* kind of spindle (for spinning).

**தக்கார்** பெ. (n.) *மரபுவழியிலோ, அறங்காவலராலோ, ஆளுகைப் படாத பெரிய திருக்கோவில்களில் பூசை, வருவாய், நகை முதலிய வற்றைப் பொறுப்பாகக் கவனித்துக் கொள்ள, அரசால் பணியமர்த்தம் செய்யப்படும் உள்ளூர்ப் பெரு மகனார்;* one of the local public nominated by the government in the absence of trustee for the management of temples (in India) fit - person.

**தக்கை** பெ. (n.) *1. நீரிலுள்ள நிலைத் திணையிலிருந்து அல்லது ஒருவகை மரத்திலிருந்து எடுக்கப்படும் எடை யில்லாததும், நீரில் மிதக்கக்கூடிய தன்மை உடையதுமான பொருள், அடைப்பான்;* cork. 2. *தூண்டிலோடு சேர்த்து மிதக்கவிடும் மிதப்புச் சக்கைத்துண்டு;* a piece of pith attached to a fishing rod. *'தூண்டில் போட்ட வனுக்குத் தக்கை மேலே கண்'.*

**தக்கைக்கயிறு** பெ. (n.) *வலை மிதவை பிணைக்கப்பட்ட கயிறு;* a rope tied with net - pith.

**தக்கையுடம்பு** பெ. (n.) *மிகவும் ஒல்லி யான (இலகுவான) உடம்பு;* a very light body - body light like pith.

**தகட்டு உளி** பெ. (n.) *தச்சுக் கருவிகளுள் பட்டை செதுக்கப் பயன்படும் கருவி;* a small chisel.

**தகட்டுக்கதவு** பெ. (n.) *மரச்சட்டத்தில் இரும்புத்தகடு பதித்த கதவு;* door made with steel instead of wooden plank.

**தகட்டுப் பலகை** பெ. (n.) *சீவிய பலகை களை ஒட்டி, எந்திரத்தில் நன்றாக அழுத்திச் செய்யப்பட்ட பலகை;* plywood.

**தகடு** பெ. (n.) *மந்திரமெழுதிய மாழைத் தகடு;* a metal plate engraved with mystic diagrams, as amulet.

**தகடுகட்டுதல்** வி. (v.) *மந்திரத்தகடு கொண்டு காப்புக்கட்டுதல்;* to tie a metal plate engraved with mystic diagrams, as amulet.

**தகடுதைத்தல்** வி. (v.) *மரப்பெட்டி முதலியவற்றிற்குப் பட்டிமடித்தல்;* to fasten corner - braces, as to a wooden box.

**தகதகவென்று** கு.வி.எ. (adv.) *(நெருப்பைக் குறிக்கையில்) மிகுதி யாகக் கொழுந்து விட்டு எரிதல்;* (of five burning) brightly, a flame.

**தகர்தல்** வி. (v.) *1. நொறுங்குதல்;* to be broken to pieces, as skull-bone, earthen vessels. *2. உடைதல்;* to be shattered, demolished. *3. சிதறுதல்;* to be scattered, as the ranks of an army.

**தகர்ப்பொறி** பெ. (n.) *கோட்டை மதிலிற் காப்பாக வைக்கும் ஆட்டின் வடி வான எந்திரவகை;* a defensive machine mounted on fort-wall, probably in the shape of a ram.

**தகரக்கொட்டகை** பெ. (n.) *இரும்புத் தகடாலான கூரை போன்ற வீடு, கட்டடம்;* steel roofed building.

**தகரம்** பெ. (n.) *1. எளிதில் உருகக்கூடிய, தகடாக அடிக்கக்கூடிய, வெள்ளை நிற மாழை;* a silvery white, easily fusible, malleable metal. 2. *தகரத்தா லான கொள்கலன்;* container made up of tin sheet.

**தகவமைத்தல்** வி. (v.) *சூழலுக்கேற்ப ஒத்துப்போகுமாறு மாற்றிக் கொள்ளுதல்;* to adopt or adjust.

**தகவல்** பெ. (n.) *1. (குறிப்பிட்ட ஒருவரை அல்லது ஒன்றைக் குறித்து) ஒருவரிடம் இருக்கும் செய்தி பிறர் அறியும் வகையில் வெளிப்படுத்தப்படும் செய்தி;* information; message. 2. *புலன்கள் மூலம் மூளை பெறும் செய்தி;* information (received by the brain).

**தகவல்தொடர்பு** பெ. (n.) *ஒரு செய்தி ஓரிடத்தினின்றும், பிறிதோரிடத் திற்குப் பரிமாறிக் கொள்ளப் பயன் படுத்தும் (தொலை பேசி, கம்பி யில்லாத் தொலைவரி முதலிய) அமைப்பு;* telecommunications.

**தகவல் தொழில்நுட்பம்** பெ. (n.) *கணிப் பொறியையும் மின்னணுக் கருவி களையும் பயன்படுத்திப் பெரிய அளவில் (எண், சொல், ஒலி, படம் ஆகிய வடிவங்களில்) செய்திகளைச் சேமித்து வைக்கவும் பிறருக்கு விரைவாகக் கிடைக்கச் செய்யவும் உதவும் தொழில்நுட்பம்;* information technology.

**தகவலாளி** பெ. (n.) *1. (தான் பேசும் மொழி, தன் குமூக வழக்குகள் முதலியவற்றைப் பற்றி) ஆராய்ச்சி செய்பவருக்கு வேண்டிய செய்தி களைத் தருபவர்;* informant. *2. (காவல் துறையினர், படை பிரிவினர் முதலி யோருக்கு) உளவு சொல்பவர்;* informer.

**தகுதி** பெ. (n.) *(ஒரு பணிக்கு அல்லது செயலுக்கு) ஒருவர் பொருத்தமானவர் என்ற வகையில் அவர் கொண் டிருக்கும் கல்வி, அகவை, பட்டறிவு அல்லது அறிவு போன்றவை;* qualification.

**தகுதிகாண் பருவம்** பெ. (n.) *ஒரு பணியில் புதிதாகச் சேர்ந்தவர், பணிக்கு ஏற்றவர்தானா என்று அறிந்து கொள்ள அவரை தொடர்ச்சியாகப் பணி செய்ய ஒப்புதல் அளிக்கும் காலம்;* probation.

**தகுதிச்சுற்று** பெ. (n.) *ஒரு போட்டியில் பங்கேற்பதற்கு அல்லது கடைசிச் சுற்றில் இடம் பெறுவதற்காக ஒரு அணி அல்லது வீரர் பங்கேற்கும் முதல்நிலைச் சுற்று;* qualifying round.

**தங்கக்கட்டி** பெ. (n.) *சொக்கத்தங்கம், செம்பு கலவாத தங்கம் (24 மாற்றுத் தங்கம்);* pure gold, not mixed with copper.

**தங்கக்கலசம்** பெ. (n.) *கோபுரம், உண்ணாழிகை முதலியவற்றின் உச்சியிலமைக்கும் தங்கப்பூச்சுக் கொண்ட கும்பம்;* gilded pot set ornamentally on the top of a temple tower, etc.,).

**தங்கக்காசு** பெ. (n.) *8 மாற்றுப் பொன் நாணயம்;* 8 ct. gold coin, it is mixed with copper.

**தங்கக்குடம்** பெ. (n.) *பொற்குடம்;* gold pot.

**தங்கக்குணம்** பெ. (n.) *சிறந்த குணம், ஒப்புமையற்ற பண்பு;* excellent character or nature.

**தங்கத்தகடு** பெ. (n.) *1. பொன் தகடு;* gold plate. *2. தங்க மெருகிட்ட தகடு;* gold foil.

**தங்கப்புகைகாட்டுதல்** வி. (v.) *தங்கப் பூச்சுப் (தங்க முலாம்) பூசுதல்;* to gild.

**தங்கப்புடம்** பெ. (n.) *தங்கத்தைத் தூய்மைப்படுத்தும் கலம்;* the gold refining vessel.

**தங்கல்** பெ. (n.) *1. செலவை (பயணத்தை) இடையில் நிறுத்துதல்;* stoping, halting. *2. சல்லடையில் கீழ்ச்சென்றது போக எஞ்சி நிற்பவை;* residual material in a sieve.

**தங்குதுறை** பெ. (n.) *படகுகள் வந்து நிற்கும் சிறிய துறைமுகம்;* small port; jetty.

**தங்குநடை** பெ. (n.) *தங்கித்தங்கிச் செல்லும் செலவு;* journey by stages.

**தங்குவலை** பெ. (n.) *கடலிற் குறிப்பிட்ட சிறிது நேரம் மட்டும் விரித்து வைத்திருக்கும் வலை வகை;* fishing net cast into the sea and left there for some hours.

**தங்குவேட்டை** பெ. (n.) நெடுந்தொலைவு வேட்டைக்குச் செல்பவர்கள் நடுவில், சிலகாலம் தங்கி, வேட்டையைத் தொடருதல்; a temporary halt and hunting in a long journey for hunt.

**தச்சக்கோல்** பெ. (n.) பண்டைத் தமிழ் நாட்டின் செந்தரப்படுத்தப் பட்ட 33 விரலங்கொண்ட நீட்டலளவு; standardized linear measurement of ancient *Tamil nadu* equivalent to 33 inches of FPS units.

**தச்சநூல்** பெ. (n.) கட்டுமானத்தொழில் பற்றிய பட்டாங்குநூல்; treatise on construction.

**தச்சமுழம்** பெ. (n.) பண்டைத் தமிழகத்தில் கட்டுமானத் தொழிலில் பயன்படுத்திய நீட்டலளவுக்கோல்; linear measurement scale used in the construction, industry of ancient Tamil nadu.

**தச்சுக்கழித்தல்** பெ. (n.) புதுமனை, புகுமுன்பு, கட்டடத்தைத் தூய்மை படுத்துதற்குத் தச்சர்கள் செய்யுஞ் சடங்கு; a ceremony performed by carpenters prior to house - warming, with a view to spiritually cleaning the building.

**தச்சுசெய்தல்** வி. (v.) மனைகோலும் போது, வீடு அமையும் இடத்தில் நல்ல நாளில், இறைவனை வேண்டிச் செய்யும் மனை வழிபாடு; inaugurating the construction work of a building with a puja, invoking the blessings of god for successful completion.

**தசைக்கனி** பெ. (n.) சதைப்பற்றுள்ள பழம்; berry, as being pulpy.

**தசைப்பிடிப்பு** பெ. (n.) (கடுமையான உடலுழைப்பு அல்லது உடற்பயிற்சி போன்றவற்றால்) வலி உண்டாகும் வகையில் தசை இறுகும் நிலை;தசை இறுக்கும்; (muscular) cramp.

**தசைபிடி** பெ. (n.) சதைபிடிக்கை; fleshiness, pulpiness.

**தட்டச்சுப்பொறி** பெ. (n.) (எண்கள், எழுத்துக்கள், குறியீடுகள், ஆகியவை கொண்ட விசைகளை விரல்களால் அழுத்த) மை தோய்ந்த நாடாவின் வழியாக மேலே செருகியிருக்கும் தாளில் எழுத்துக்களைப் பதிக்கும் கருவி; type writer.

**தட்டஞ்சுற்றுதல்** வி. (v.) மாலையில் விளக்குத் தட்டுடன் கடவுளை வலம் வருதல்; to go a round the deity in a temple with a lighted salvar in hand, during the evening service.

**தட்டடித்தல்** வி. (v.) கதவுகளுக்காக, மரச்சட்டங்களைப் பொருத்து வதற்கு, மரத்தில் பள்ளம் செய்தல்; to cut out or make a notch or mortise in the edge of wooden board.

**தட்டம்மை** பெ. (n.) உடல் முழுவதும் வேர்க்குரு போலச் சிவந்த சிறு புள்ளிகளும் காய்ச்சலும் ஏற்படும் ஒரு நோய்; மணல்வாரி; measles.

**தட்டறை** பெ. (n.) அடைப்பை முதலிய வற்றிலுள்ள சிறிய உட்பை; small inner pouch in a bag.

**தட்டாமல் வைத்தல்** பெ. (n.) ஒன்றோ டொன்று தொடர்பின்றி வைத்தல்; keeping away from being united.

**தட்டி**[1] பெ. (n.) பிரம்பு முதலியவற்றால் பின்னிய மறைப்புத்தடுக்கு; screen, as of cuscuss grass, rattan, etc., *'அங்கே தட்டி கட்ட வேண்டும்'.*

**தட்டி**[2] பெ. (n.) விளம்பரம் செய்ய வைக்கப்படும் மூங்கில் போன்ற வற்றால் செய்யப்படும் அமைப்பு; arch like, banner like structure of plaited bamboos, etc.,

**தட்டிக்கதவு** பெ. (n.) மூங்கில், பனை, தென்னை ஓலைகளால் பின்னப் பெற்ற கதவு போன்ற அமைப்பு; screen as of cuscuss, palmyra and coconut leaves, grass, rattan, etc., tatty.

**தட்டிக்கழித்தல்** வி. (v.) *பணியை முடிக்காமல் சாக்குப்போக்குச் சொல்லுதல்;* to give lame excuses.

**தட்டிக்கொடுத்தல்** வி. (v.) *1. ஊக்கப் படுத்துதல்;* to cheer, encourage, urge on, as by patting. *2. ஒருவர் மீது தட்டிக் குறிப்புக் காட்டுதல்;* to indicate or betray a person by taping him.

**தட்டிப்பறித்தல்** வி. (v.) *1. அடித்துப் பிடுங்குதல்;* to rob by force. *2. கவர்ந்து செல்லுதல்;* to snatch away.

**தட்டிப்பார்த்தல்** வி. (v.) *தேங்காய், சுட்ட பானை முதலியவற்றைச் சுண்டிப் பார்த்து வரும் ஒலியிலிருந்து அவற்றின் இயல்பை அறிதல்;* to test the soundness, as of coconut or genuineness, as of coin, by tapping or flipping with the fingers.

**தட்டிப்புடைத்தல்** வி. (v.) *முறத்தாற் கொழித்து நெல், பதர் முதலிய வற்றைப் பிரித்தெடுத்தல்;* to separate grain from chaff by winnowing.

**தட்டிப்போடுதல்** பெ. (n.) *இடித்து அல்லது நசுக்கிப்போடுதல்;* stricking or pounding flat and putting as drugs to prepare decoction.

**தட்டியழைத்தல்** வி. (v.) *தொலைவில் உள்ளவரைத் தட்டிக் கூப்பிடுதல்;* to call by clapping the hands.

**தட்டியளத்தல்** வி. (v.) *தலையை வழித்துக் கூலம் முதலியவற்றை அளத்தல்;* to measure grain, etc., stricking off the heaped-up part at the top of a measure. *'தலை தட்டி மூன்று படி நெல் போடு'.*

**தட்டியெழுப்புதல்** வி. (v.) *தூங்குகிற வனைத் தட்டியெழுப்புதல்;* to make a sleeping man rise by tapping him.

**தட்டியோட்டுதல்** வி. (v.) *மாட்டையடித்து வண்டியை விரைவாகச் செலுத்துதல்;* to drive bullocks by beating.

**தட்டுக்கூடை** பெ. (n.) *அகன்ற கூடை வகை;* broad, shallow basket.

**தட்டுப்பலகை** பெ. (n.) *1. இளகியத் தரையைக் கெட்டிக்குங்கட்டை;* rammer plank. *2. கூரை வீடுகளில் கூரை வேயும்போது, தட்டையைச் சரி செய்யப் பயன்படும் மரப்பலகை;* a. wooden plank used for levelling hay.

**தட்டுப்பாடு** பெ. (n.) *போதுமான அளவிற் குறைவு;* shortage.

**தட்டுமாற்றுதல்** வி. (v.) *1. பட்டிழை அணியம் செய்யும்போது அல்லது பட்டுப்பூச்சி வளர்ப்பின்போது, தட்டைத் தூய்மை செய்து மாற்றுதல்;* to clean the plate in sericulture. *2. மண உறுதியின்போது இரு வீட்டாரும் பழத்தட்டை மாற்றி இசைவு தெரிவித்தல்;* exchange of fruit trays at the time of marriage fixation by the two families.

**தட்டைக்கரும்பு** பெ. (n.) *சுவையற்ற கரும்பின் மேற்பகுதி;* tasteless upper part of sugarcane.

**தட்டைப்புழு** பெ. (n.) *உண்ணும் இறைச்சி மூலம், மாந்த உடலினுள் சென்று வாழும் ஒருவகைப் புழு;* tape - worm.

**தட்டோடு** பெ. (n.) *கூரையை மூடுமாறு இடும் வளைவுள்ள ஓடு;* common country tile.

**தட்பவெப்பநிலை** பெ. (n.) *ஒரு பகுதியில் நிலவும் வெப்பம், காற்று, குளிர் முதலியவற்றின் நிலை;* climate, climatic condition.

**தட்பவெப்பமாற்றம்** பெ. (n.) *பருவ நிலையில் ஏற்படும் மாறுபாடு;* climatic change.

**தடகளப்போட்டிகள்** பெ. (n.) *தடங்களின் வழியாக நடத்தப்படும் போட்டிகள்;* track and field events.

**தடநார்** பெ. (n.) *பனையேறிகள் காலில் மாட்டிக்கொள்ளும் பனைநாரினாற்*

*செய்யப்பட்ட கயிறு;* foot - brace used by climbers of palmyras.

**தடபுடல்** பெ. (n.) *மிகுந்த பகட்டான; அமர்க்களம்;* pomp and show.

**தடம்பார்த்தல்** பெ. (n.) *அடிச்சுவடு பார்த்தல்;* to track the footsteps, as of a thief.

**தடம்புரள்(ளு)தல்** வி. (v.) *தொடரி தண்டவாளத்திலிருந்து இறங்குதல்;* derailment.

**தடம்போடுதல்** வி. (v.) *சிறு விலங்குகள், பறவைகளைப் பிடிக்கக் கண்ணி வைத்தல்;* to set a strap for catching small animals.

**தடம்மாறுதல்** வி. (v.) *ஓட்டப்பந்தயத்தில் செல்ல வேண்டிய தடத்தை விட்டு விட்டு மாறியோடுதல்;* to play foul in running race. *'தடம் மாறியவர்கள், வாழ்க்கையில் வெற்றியை நோக்கிச் செல்வது எளிதன்று'.*

**தடமாண்டுபோதல்** வி. (v.) *அடையாளந் தெரியாதபடி முற்றும் அழிந்து போதல்;* to be ruined utterly, as leaving no trace behind.

**தடய அறிவியல்** பெ. (n.) *தடயங்கள் வழிக் குற்றங்களைத் துப்புத்துலக்க உதவும் அறிவியல் துறை;* forensic science.

**தடயம்** பெ. (n.) *நடந்ததை அறிந்து கொள்ளும் வகையில் எஞ்சி யிருப்பது அல்லது கிடைப்பது;* trace.

**தடவிக்கொடுத்தல்** வி. (v.) *1. விளக் கெண்ணெய் போன்ற மருந்தை, குமட்டல் வராமல், வயிற்றையும், நெஞ்சையும் தடவுதல்;* to anoint the hand over the abdomen and chest to prevent vomitting as in administering medicine like castor oil. *2. வளர்ப்பு விலங்குகளை கையால் தடவுதல்;* to anoint the domastic animals.

**தடாரி** பெ. (n.) *1. உடுக்கை;* drum shaped like an hour - glass. *2. பம்பை யென்னும் பறை;* a kind of drum.

**தடித்தஉடல்** பெ. (n.) *பருத்த உடம்பு;* stout body.

**தடிப்பயல்** பெ. (n.) *1. கொழுத்தவன்;* stout fellow. *2. முரடன்;* stubborn, senseless. *3. மட்டி;* blockhead.

**தடிமாடு** பெ. (n.) *கொழுத்தவன்;* stout, fat person.

**தடியடி** பெ. (n.) *கூட்டத்தைக் காவலர்கள் தடியால் அடித்துக் கலைக்கும் வன்முறை வகை;* lathi charge by police men to disburse unruly crowed. *'சட்டத்திற்கு புறம்பான கூட்டத்தைக் கலைக்கக் காவலர் தடியடி நடத்தினர்'.*

**தடிவழி** பெ. (n.) *1. நெடுஞ்சாலை;* highway. *2. வயல்களுக்கிடையே செல்லும் வரப்புப்பாதை;* foot-path, on the ridge of fields.

**தடுக்குப்பாய்** பெ. (n.) *கோரை, சம்பை போன்ற புல்வகை அல்லது, தென்னங்கீற்று, மூங்கிற்பட்டை, பனையோலை போன்றவைகளால் முடையப்படும் பாய்;* mat made up of ribbon like palm leaves, coconut leaves or bamboo ribs instead of korai or sambai.

**தடுப்புக்காவல்** பெ. (n.) *குற்றம் செய்தவர் என்று நம்பப்படுபவரை, முன்னெச் சரிக்கையாகக் குறிப்பிட்ட காலம் வரை சிறையில் வைத்தல்;* detaining a person without trail as a preventive measure; preventive detention.

**தடுப்பணை** பெ. (n.) *நீரை இடைக்காலமாகத் தேக்கிப் பயிர் பாசனத்திற்குப் பயன்படுத்திக் கொள்ள, குறுகிய, ஆழமானகால்வாய் களின் குறுக்கே கட்டப்படும் சிறிய அணை;* check dam.

**தடுப்புச்சுவர்** பெ. (n.) *மண்ணரிப்பு, வெள்ளம் ஆகியவற்றைத் தடுக்கும் சுதைச் சுவர் (பொ.வழ.),*

*மறைப்புக்காகக் கட்டப்படும் சுவர்;* wall built to prevent erosion of soil and flood.

**தடுப்பூசி** பெ. (n.) *முன்விழிப்போடு போடப்படும் ஊசி;* vaccination, inoculation.

**தடுமம்** பெ. (n.) *1. குளிர்ச்சி;* coolness. *2. நீர்க்கோத்தல்;* cold.

**தடை ஆணை** பெ. (n.) *1. ஒன்றைச் செய் அல்லது செய்யற்க என அறமன்றம் இடும் ஆணை;* injuction. *2. பொது அமைதி கருதி ஊர்வலம், கூட்டம் போன்றவற்றை நடத்தத் தடை விதித்து, அதிகாரிகளிடும் ஆணை;* prohibitory order.

**தடைபண்ணுதல்** வி. (v.) *1. காவற் படுத்துதல்;* to arrest, confine. *2. தடுத்தல்;* to stop, exclude, interrupt, possession.

**தடைமரம்** பெ. (n.) *நெய்த துணியைச் சுருட்டுவதற்குத் தறியில் அமைக்கப் பட்ட குறுக்குச் சட்டம் (இ.வ.);* cross-piece in a loom, used for rolling the cloth when woven.

**தடையம்** பெ. (n.) *களவு முதலிய குற்றங்களில் தொடர்புடைய பொருள் கிடைத்தல்;* stolen property; material object concerned in a crime.

**தடையின்மைச் சான்றிதழ்** பெ. (n.) *ஒரு தொழிலை அல்லது நடவடிக்கையை மேற்கொள்ள எதிர்ப்பின்மை எதுவும் இல்லை என்று அந்தத் தொழிலுடன் தொடர்புடைய அதிகாரிகள் வழங் கும் சான்று;* no objection certificate.

**தடையோட்டம்** பெ. (n.) *தடகளப் போட்டியில் ஏற்படும் தடைகளைத் தாண்டி ஓடுகிற ஓட்டம்;* hurdles.

**தண்டக்கட்டு** பெ. (n.) *களத்திற் பொலிவீசும் வேலையில் காற்று அடித்துக் கொண்டு போன நெல்லைத் தூற்றுவோர் அடைதற்குரிய உரிமை;* ryot's perquisite of the grains carried away by wind while winnowing .

**தண்டக்குற்றம்** பெ. (n.) *தண்டனைக்குரிய குற்றம்;* punishable offence.

**தண்டங்கொடுத்தல்** வி. (v.) *1.ஒறுப்புக் கட்டணம் செலுத்துதல்;* to pay a fine, suffer a penalty. *2. இழத்தல்;* to suffer loss.

**தண்டச்சோறு** பெ. (n.) *பயனற்றவனுக்கு இடும் உணவு;* food offered to useless persons under compulsion. *2. இலவய மாகக் கொடுக்குஞ் சோறு;* food given gratis.

**தண்டத்துக்கழுதல்** பெ. (n.) *1. பொருள் முதலியனவற்றைப் பயனின்றிக் கொடுத்தல்;* to give money etc., uselessly by and under compulsion. *2. இழப்பாக இறுத்தல்;* to suffer penalty.

**தண்டப்பொருள்** பெ. (n.) *ஒறுப்புக் கட்டணமாக வாங்கும் பொருள்;* money collected as fines.

**தண்டம்** பெ. (n.) *ஒறுப்புக் கட்டணம்;* fine.

**தண்டல்** பெ. (n.) *1. வரியைத் தண்டுதல்;* tax - collect. *2. வட்டியைப் பிடித்துக்கொண்டு, தரும் கடன்;* loan from which the interest is deducted in advance.

**தண்டவாளம்** பெ. (n.) *1. தொடரி செல்வதற்கு இரும்பாலான பாதை;* rails. *2. இருப்புச் சட்டம்;* iron rail, girder.

**தண்டனை** பெ. (n.) *ஒறுப்பு;* punishment, penalty.

**தண்டால்** பெ. (n.) *உடற்பயிற்சி வகை;* a kind of exercise in Indian gymnastics.

**தண்டிகை** பெ. (n.) *பல்லக்கு வகை;* a kind of palanquin.

**தண்டு** பெ. (n.) *1. மரக்கொம்பு;* branch of a tree. *2. செடி முதலியவற்றின் தாள்;* stalk, stem. *'கீரைத்தண்டு'*.

**தண்டுக்காரன்** பெ. (n.) *மரக்கலத்தை இயக்கத் தண்டுபிடிப்பவன்; கொம்பால் கட்டுமரத்தைச் செலுத்து பவன்;* boat-man.

**தண்டுவடம்** பெ. (n.) *மூளையிலிருந்து உடல் முழுதும் உணர்வுகளைக் கொண்டு செல்லும், முதுகெலும் பினுள் அமைந்திருக்கும் நரம்புத் தொகுப்பு;* spinal cord.

**தண்டெலும்பு** பெ. (n.) *முதுகெலும்பு;* spine, back - bone.

**தண்டை** பெ. (n.) *குழந்தைகள், பெண்கள் ஆகியோர்காலில் அணிவதும், ஒன்றிற் கொன்று தொட்டாற் போலுள்ள முனைகளைக் கொண்டதும், உருட்டுக் கம்பி வடிவிலோ அல்லது குழல் வடிவிலோ அமைந்த, வெள்ளியாற் செய்த காலணி;* a kind of hollow anklet, made of silver work for children or girls.

**தண்டோரா** பெ. (n.) *பறையறைந்து மக்களைக் கூட்டிச் செய்தி கூறுதல்;* proclanation by beat of tom-tom.

**தண்டோராப்போடுதல்** வி. (v.) *1. தமுக் கடித்தல்;* notify the public by the beat of tom-tom. *2. பரப்புதல்;* tom-tom. make public. *'வேலை கிடைத்த செய்தியை அதற்குள் ஊர் முழுக்க தண்டோரா போட்டு விட்டாயா?'.*

**தண்ணீர்** பெ. (n.) *1. குளிர்ந்த நீர்;* cold fresh water. *2. நீர்;* water.

**தண்ணீர் ஊற்று** பெ. (n.) *நீரூற்று வருதல்; இயற்கையாக ஊறும் நீரூற்று;* natural spiring - water.

**தண்ணீர்க்கசிவு** பெ. (n.) *நீர் ஊறி வெளியேறுகை;* oozing.

**தண்ணீர்க்கட்டு** பெ. (n.) *வயல்நீர் வெளியேறாமல் மடைகளை அடைத்து வைக்கை;* the temporary stop-gap in the irrigation canal in paddy - fields.

**தண்ணீர்க்கட்டுதல்** வி. (v.) *வயல் முதலியவற்றில் மடைமாற்று நீர் பாய்ச்சுதல்;* to irrigate a field, garden bed, etc.,

**தண்ணீர்க்கண்டம்** பெ. (n.) *நீரில் மூழ்கிப்போதல் போன்ற நேர்ச்சி (விபத்து) உண்டாகும் என்ற பிறப்பியக் குறிப்பு;* peril by water, as drowning.

**தண்ணீர்காட்டுதல்** வி. (v.) *1. கால்நடை களுக்குக் குடிநீர் காட்டுதல்;* to water, as beasts. *2. பிறரை ஏமாற்றுதல்;* to over reach. *3. அலைக்கழித்தல்;* to tantalize.

**தண்ணீர்ச்சோறு** பெ. (n.) *நீர்விட்ட சோறு;* left over rice mixed with water.

**தண்ணீர்த்தாகம்** பெ. (n.) *நீர் வேட்கை;* thirst.

**தண்ணீர்த்துறை** பெ. (n.) *நீர் நிலையில், இறங்குமிடம்;* ghat, path of descent to a tank or river.

**தண்ணீர்த்தொட்டி** பெ. (n.) *தண்ணீரைத் தேக்கிவைக்கும் தொட்டி;* water cistern.

**தண்ணீர்தெளித்தல்** வி. (v.) *தூய்மையின் பொருட்டு நீர் தெளித்தல்;* to sprinkle water for purification.

**தண்ணீர்தெளித்துவிடுதல்** வி. (v.) *ஒருவனைத் தன் விருப்பப்படிச் சென்றழியும்படி விடுதல்;* to leave one to oneself.

**தண்ணீர்தெளிதல்** பெ. (n.) *தண்ணீர்க் கசடு நீங்குதல்;* cleaning of water from impurities.

**தண்ணீர்ப்பந்தல்** பெ. (n.) *வெயிற் காலத்தில் வழிச்செல்வோர்க்குக் குடிநீர், மோர் முதலியன கொடுத் துதவும் அறச்சாலை;* place where drinking water, buttermilk, etc., are given gratis to passers - by during the hot season.

**தண்ணீர்ப்பாசி** பெ. (n.) *தண்ணீரிலுள்ள பாசி;* water - moss.

**தண்ணீர்ப்பிடிப்பு** பெ. (n.) *குளம் முதலியவற்றில் நீர் பிடித்துள்ள, பரப்பளவு;* quantity of water spread of tank. *'இந்த இடமெல்லாம் முன்பு நீர்ப்பிடிப்பு பகுதியாக இருந்தது'*

**தண்ணீர்வாட்டம்** பெ. (n.) *கட்டடம் முதலியவற்றில், தண்ணீர் தானே ஓடுவதற்கு அமைந்த சரிவு;* water - fall, amount of slope required for unobstructed flow of water, gradient. *'தண்ணீர் வாட்டம் சரியாயிராததால், இங்கு நீர் தேங்குகிறது'.*

**தண்ணீராகச் செலவளித்தல்** வி. (v.) *பணத்தைக் கணக்குப் பார்க்காமல் தாராளமாகச் செலவு செய்தல்;* spend (money) lavishly or liberally; spend money like water.

**தண்ணீரில்லாக்காடு** பெ. (n.) *ஏந்துகளற்ற இடம்;* a place without basic amenities.

**தணல்** பெ. (n.) *1. கனிந்த நெருப்பு;* live coals, embers, cinders. *2. நெருப்பு;* fire.

**தணிக்கை** பெ. (n.) *1. நாட்டு நலனுக்கு அல்லது அரசுச் செயற்பாட்டிற்கு எதிரான பகுதியைத் திரைப்படம், செய்தியிதழ் போன்றவற்றிலிருந்து நீக்குதல்;* censorship. *'இந்தத் திரைப்படத்துக்குத் தணிக்கைச் சான்றிதழ் இதுவரை கிடைக்க வில்லை'. 2. கணக்குகளைச் சரி பார்த்தல்;* auditing.

**தணிந்தவேளை** பெ. (n.) *சாயுங்காலம்; மாலைப்பொழுது (குளிர்ந்திருக்கும் நேரம்);* evening, as being the cool part of the day.

**தத்தளித்தல்** வி. (v.) *1. நீச்சல் தெரியாத நிலையில் தண்ணீரில் விழுந்தவர் வெளிவர முடியாமல் தவித்தல்;* to struggle (in flood who knows not to swim). *2. பணம் திருப்பியளிக்க முடியாமல் கடனாளி தவித்தல்;* one unable to discharge his debts and struggling like anything.

**தத்தளிப்பு** பெ. (n.) *1. உயிர்தப்ப வேண்டித் திகைக்கை;* struggling for life. *2. மனங் கலங்குகை;* porturbation, agitation.

**தத்துதல்** வி. (v.) *1. குதித்தல்;* to leap, jump, skip, hop. *2. தாவிச் செல்லுதல்;* to go by (eups and jumps); to move by jerks and starts, as cockroaches.

**தத்துப்பிள்ளை** பெ. (n.) *மகட்கொடை எடுத்த குழந்தை;* adopted child.

**தத்துப்பூச்சி** பெ. (n.) *பழுப்பு நிறப்புள்ளி களையுடைய தாவிச் செல்லும் ஒருவகைப் பூச்சி;* brown - spotted leaping insect with long antenne.

**தத்துமடை** பெ. (n.) *நீர் வாய்க்காலின் பக்கத்து மடை;* side - course in a water channel.

**தத்துவஞானம்** பெ. (n.) *முடிவான உண்மையுணர்வு;* knowledge of the ultimate truth.

**தத்துவஞானி** பெ. (n.) *முடிவான உண்மையை உணர்ந்தோன்;* one who has realised the ultimate truth.

**தத்துவநூல்** பெ. (n.) *மெய்ம்ம கருத்துகளை உரைக்கும் நூல்;* a treatise on philosophical truth.

**தத்துவம்** பெ. (n.) *1. உலகமெய்மம்;* philosophy. *2. மெய்மை அல்லது பொருளின் மூலவியல்பு;* reality.

**தத்தெடுத்தல்** வி. (v.) *மகவுக்கொடை பெறுதல்;* to adopt.

**தத்தை** பெ. (n.) *கிளி;* parrot, parakeet, palaornis.

**ததும்புதல்** வி. (v.) *1. நிறைதல்;* to fill, become full. *2. நிரம்பி வழிதல்;* to overflow, to leave with fulness.

**தந்திக்கம்பி** பெ. (n.) *வீணை முதலிய வற்றின் நரம்பு;* string of a cute.

**தந்தியடித்தல்** வி. (v.) *வீணை, யாழ் முதலியனவற்றில் மீட்டும் மெல்லிய கம்பியை மேலுங்கீழுமாக அசைப்பது போன்று ஆட்டுதல்;* to tremble.

**தந்தை** பெ. (n.) *தகப்பன்;* father.

**தந்நுகர்ச்சி** பெ. (n.) *தானே நுகர்ந்து மகிழ்தல்;* self enjoyment.

**தப்பட்டம்** பெ. (n.) *இடத்தோளில் மாட்டிக்கொண்டு, குறுந்தடியால் அடிக்கப்படும் சிறுபறை வகை;* a small drum hung from the left shoulder and beaten with a small stick.

**தப்பாட்டம்** பெ. (n.) *தப்பட்டையை அடித்துக் கொண்டே அதன் தாளத் திற்கு ஏற்ப நடனம் ஆடும் ஒரு வகை நாட்டுப்புறக்கலை;* playing thappattai and dancing to its beat.

**தப்பட்டைமேளம்** பெ. (n.) *1. சிறுபறை வகை;* small tomtom. *2. பறை தட்டி இசைக்கும் குழு;* group to beat drums.

**தப்பித்தல்** வி. (v.) *குற்றம் முதலியவற் றினின்று விலகுதல்;* to escape, getfree.

**தப்பிப்பிழைத்தல்** பெ. (n.) *உயிர் பிழைக்கை;* escaping death.

**தப்புக்கணக்கு** பெ. (n.) *உண்மைக்கு மாறான மதிப்பீடு;* miscalculation assessment wrongly.

**தப்புக்கணக்குப்போடுதல்** வி. (v.) *ஒன்றைக் குறித்துத் தவறாக மதிப் பிடுதல்;* to assess wrongly.

**தப்புக்கொட்டை** பெ. (n.) *அறுவடைக் காலத்தில் சிதறிப்போன நிலக் கடலை;* ground nut left in the ground after harvest.

**தப்புச்செடி** பெ. (n.) *தானே தோன்றிய பயனிலாச் செடி;* self - sown, uncultivated plant.

**தப்புத்தண்டா** பெ. (n.) *குற்றம்;* misdemeanour.

**தப்புந்தவறுமாக** கு.வி.எ. (adv.) *மிகையான தவறுகளுடன்;* faultily; in a faulty way.

**தப்பெண்ணம்** பெ. (n.) *தவறான எண்ணம்;* mistaken opinion; wrong idea; prejudice.

**தப்பை** பெ. (n.) *முறிந்த எலும்பு பொருந்தும்படி வைத்துக்கட்டும் மூங்கில் அல்லது தகட்டுப் பற்றை;* bamboo splints for a broken bone. *'தப்பை வைத்துக் கட்டுதல்'.*

**தபதபவெனல்** பெ. (n.) *விரைவாகத் தொடர்தற் குறிப்பு;* expr. signifying quick succession.

**தபுக்கெனல்** பெ. (n.) *விழுதல் முதலிய வற்றின் விரைவுக்குறிப்பு;* expr. signifying haste, rashess, etc., as in falling.

**தம்பட்டமடித்தல்** வி. (v.) *1. பலரறியப் பரப்புதல்;* to spread the news. *2. தற்பெருமையுடன் கூறுதல்;* tom - tom boast. *'வீடுவாங்கி இருப்பதை ஊர் முழுக்கத் தம்பட்டமடிக்காதே'.*

**தம்பம்** பெ. (n.) *யானை முதலியன கட்டுந்தறி;* post to which elephants, etc., are tied.

**தம்பலடித்தல்** பெ. (n.) *பெருமழையால் இறுகின வயலை உழுதல்;* to plough a field after it has been hardened, by rain.

**தம்பலாடுதல்** வி. (v.) *வயலில் நீர்பாய்ச்சி மிதித்துச் சேறாக்குதல்;* to water a field and turn it soft and muddy by trampling.

**தமக்கை** பெ. (n.) *அக்காள்;* elder sister.

**தமதமவெனல்** பெ. (n.) *நெருப்பு முழங்கி யெரியும் ஒலிக்குறிப்பு;* onom, expr. of crackling, roaring sound, as of burning fire.

**தமனி** பெ. (n.) *தூயக்குருதி ஓடும் குழாய்;* blood vessel carrying blood away from the heart.

**தமுக்கடித்தல்** வி. (v.) *தமுக்கு என்னும் பறையைச் சாற்றிச் செய்தி அறிவித்தல்;* to tom tom, publish orders by beat of drum.

**தமுக்கு** பெ. (n.) *செய்தி தெரிவிக்க முழக்கும் ஒரு கட்பறை;* a musical instrument in use for collecting people to pass on a message.

**தமுக்குப்போடுதல்** வி. (v.) *செய்தி கூறுவதற்காக மக்களைத் திரட்ட, தமுக்கு என்னும் ஒரு கட்பாறையில், ஒலி எழுப்புதல்;* to raise sound by beating the *tamukku* to collect people for propagation of a news.

**தயிர்** பெ. (n.) *பால் உறைவிட்ட பின்னர் உறைந்த பண்டம்;* curds, tyre.

**தயிர்வடை** பெ. (n.) *தாளித்த தயிர் ஊறிய வடை;* cake of blackgram pulse soaked in curds.

**தரகர்** பெ. (n.) *தரகு வேலை செய்பவர்;* commission agent.

**தரகுக்கூலி** பெ. (n.) *தவசம் வாங்குவோன், அளப்பவனுக்கு வழங்கும் கூலி;* wages for a person who measures the grain in a sale.

**தரப்படிக்கணக்கு** பெ. (n.) *சிற்றூர் நிலங்களின் தகுதி, விளைச்சல், இறையிலி, வரி முதலியவற்றைக் குறிக்கும் கணக்கு;* account of the village lands distinguishing the varieties of soil, produce and tenure, and the ancient dues and perquisities of the village office and servants.

**தரிசு** பெ. (n.) *பயிரிடப்பெறாத நிலம்;* land lying waste or fallow.

**தருக்கம்** பெ. (n.) *சொற்போர்;* controversy, dispute, logic, contention, wrangling.

**தரைக்காற்று** பெ. (n.) *தரையிலிருந்து கடல் நோக்கி வீசுங்காற்று;* land - breeze, as dist. from sea breeze.

**தரைச்சக்கரம்** பெ. (n.) *தரையில் சுழலும் ஒருவகை வெடி;* a cracker with a knob that spins on the floor.

**தரைத்தளம்** பெ. (n.) *முதல்தளம்;* ground-floor.

**தரைதட்டுதல்** வி. (v.) *கப்பல் தரையில் மோதுதல்;* to run a ground, as a ship.

**தரைப்பங்கு** பெ. (n.) *விளைச்சலில், நில உரிமையாளனுக்குரியது;* owner's share in the produce.

**தரைப்பாலம்** பெ. (n.) *(ஆற்றின் குறுக்கே தாழ்வான பகுதியில்) தண்ணீர் போவதற்கு ஏதுவாகப் பெரிய குழாய்களைப் பதித்து, அவற்றின் மேல் தரை மட்டத்திலேயே அமைக்கப்படும் சாலை;* causeway.

**தரைமட்டம்** பெ. (n.) *கட்டுமானக் காலங்களில், கட்டடங்களின் சுற்றுப்புறத்தில் அமையும் புதிய மட்டம்;* newly designed ground level around newly constructions.

**தரையிறங்குதல்** வி. (v.) *வானூர்தி ஓடுதளத்தில் இறங்குதல்;* to land touch - down (of planes).

**தரையோடு** பெ. (n.) *தரையிற் பாவுதற்குரிய ஓடு;* flooring tiles.

**தலக்காவல்** பெ. (n.) *கொள்ளைக் காரர்களுக்கு இடங்கொடாது செய்யும் நாட்டுக்காவல்;* system of guarding a tract of country.

**தலகாணி** பெ. (n.) *தலையணை;* pillow.

**தலபுராணம்** பெ. (n.) *புனை கதைகள் மூலம் ஊர்ப்பெருமைகளையும், வரலாற்றுச் சிறப்புகளையும் கூறும் நூல். இது பெரும்பாலும் கோயில் சார்ந்ததாக அமையும்;* literature to adore a place, particularly temple towns, with imaginative historical fame.

**தலம்** பெ. (n.) *1. இடம்;* place, site. **2.** *வணங்கும் தூய இடம்;* sacred place, shrine.

**தலைக்கட்டுதல்** வி. (v.) *இறப்பு நிகழ்ச்சியின் இறுதியில் தலைப் பாகை கட்டுதல்;* to perform the ceremony of putting on the turban at the end of the period of mourning.

**தலைக்கயிறு** பெ. (n.) *1. மாட்டின் மூக்குக் கயிற்றிற் கட்டப்பட்டுக் கையிற் பிடிக்குங் கயிறு;* reins of a bullock. *2. மாட்டின் கழுத்துக்கயிறு, மூக்கணாங்கயிறு ஆகியவற்றுடன் இணைக்கப்பட்ட கயிறு;* rope used for tetharing cow to a post. *'மாடு தலைக் கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடியது'.*

**தலைக்கல்** பெ. (n.) *1. கட்டட வளைவின் முதன்மையானக் கல்;* key stone. *2. எந்திரத்தின் மேற்பாகமான ஆட்டுக் கல்;* upper milkstone.

**தலைக்கவசம்** பெ. (n.) *தலைக்காப்புக் கவிப்பு;* helmet.

**தலைக்கறிச்சாறு** பெ. (n.) *ஆட்டின் தலைக்கறியைக் கொதிக்க வைத்து வடித்த சாறு;* essence from the flesh and bones of sheep's head.

**தலைக்கனப்பு** பெ. (n.) *நீர்க்கோவை யால் ஏற்படும் தலைக்கனம்;* heaviness of head from cold.

**தலைக்கனம்** பெ. (n.) *தானுணர்வு, செருக்கு;* head - weight, ego, self - conceit. *'பணம் வந்ததும், அவனுக்குத் தலைக்கனம் கூடிவிட்டது'.*

**தலைக்கிறுகிறுப்பு** பெ. (n.) *1. பித்த மயக்கம்;* dizziness, biliousness. *2. தலை நடுக்கம்;* dizziness of the brain.

**தலைக்கீற்று** பெ. (n.) *முதலில் தோன்றும் குருத்து;* white tender leaf of coconut, palm, etc.,

**தலைக்குடை** பெ. (n.) *தலையில் வைத்துக்கொள்ளும் ஓலைக்குடை;* cover of plaited palmyra leaves used as a protection for the head against rain.

**தலைக்குடைச்சல்** பெ. (n.) *தலைக்குள் குடைச்சல், வலி ஏற்படுத்தும் நோய்;* boring pain in the region of the head.

**தலைக்குமேலே** கு.வி.மு. (adv.) *அளவுக்கு மிஞ்சி;* exceeding all bounds, as price, anger, shame, pride, etc.,

**தலைக்குலை** பெ. (n.) *தென்னை, பனை முதலியவற்றிலிடும் முதற்குலை;* the first bunch yielded by coconut tree or palmyra tree.

**தலைக்குனிவு** பெ. (n.) *மானக்கேடு;* humiliation, loss of face.

**தலைக்கூட்டுதல்** வி. (v.) *கூட்டுவித்தல்;* to unite.

**தலைக்கோல்** பெ. (n.) *ஆடற் கணிகையர் பெறும் பட்டம்;* title given to a dancing girl, who is an adept in her profession.

**தலைக்கோழி** பெ. (n.) *வைகறையில் முதலிற் கூவுங்கோழி;* cock that crowes first in the morning.

**தலைகாட்டுதல்** வி. (v.) *சிறிது நேரம் அரிதாக வந்து காட்சி தருதல்;* to attend for a short time, give attendance.

**தலைகுனிதல்** பெ. (n.) *1. நாணம் முதலியவற்றால் தலை கவிழ்ந்திருத்தல்;* to bow down due to modesty, shyness. *2. மானக்கேட்டால் தலைகுனிதல்;* to bow down due to shame.

**தலைச்சன்** பெ. (n.) *முதற்பிள்ளை;* first born. *'தலைச்சன் பிறந்து பத்தாண்டிற்குப் பின்னரே, அடுத்தவன் பிறந்தான்'.*

**தலைச்சிரங்கு** பெ. (n.) *தலையில் வரும் புண்;* eczeme, scald head, Taenia capitis.

**தலைச்சுமை** பெ. (n.) *தலையில் தூக்கிச் செல்லும் சுமை;* head - load.

**தலைச்சுற்றல்** பெ. (n.) *1. தலைக் கிறுகிறுப்பு;* vertigo, giddiness,

dizziness. 2. *உள்ளம் குழம்பிப்போய், முடி வெடுக்க முடியாமல் இருத்தல்;* confused stage of mind, not possible to take a decision.

**தலைச்சொறி** பெ. (n.) 1. *தலையில் ஏற்படும் சொறி;* scurf which forms on the head attended with itching. 2. *தலைச் சுண்டு; பொடுகு;* dandruff.

**தலைசீவுதல்** வி. (v.) *தலைமுடி வாருதல்;* to comb the hair.

**தலைச்சுழி** பெ. (n.) 1. *விதி; ஊழ்;* fate. 2. *மண்டையோடுகளின் இணைப்பு;* joints of parts of skull with one another.

**தலைத்திமிர்** பெ. (n.) 1. *தலைக்கனம்;* heaviness of the heads, as through cold. 2. *கொழுப்பு;* arrogance, head strongness.

**தலைத்திருப்பம்** பெ. (n.) *குழந்தைத் தலையினைக் கருப்பையினுள் விரல் விட்டுத் திருப்புதல்;* the manual turning of foetus by which the foetal head is caused to present.

**தலைத்திவசம்** பெ. (n.) *இறந்தவர் பொருட்டு நிகழ்த்தும், முதலாமாண்டு நினைவு நாள்;* first annual ceremony of a deceased person.

**தலைத்தீபாவளி** பெ. (n.) *திருமணமான பின், மணமகள் வீட்டில் முதன்முதற் கொண்டாடுந் தீபாவளிவிழா;* the first *tipavali* festival after marriage celebrated at the bride's house.

**தலைதட்டுதல்** வி. (v.) 1. *அளவுப் படியின் தலை மீது கூம்பாகவுள்ள கூலத்தை வழித்தல்;* to strike off the excess of grain, at the top of measure, in measuring. 2. *அடக்குதல்;* to put down.

**தலைதப்புதல்** வி. (v.) *உயிர் பிழைத்தல்;* to escape death.

**தலைதாழ்தல்** வி. (v.) *வணங்குதல்;* to show reverence by bowing one's head.

**தலைதுவட்டுதல்** வி. (v.) *தலை மயிரின் ஈரந்துடைத்தல்;* to wipe and dry one's head after bath.

**தலைதூக்காமை** பெ. (n.) 1. *மயக்கத்தால் தலை தூக்க முடியாமை;* inability to raise the head due to dizziness. 2. *தொழிலில் இழப்பிற்குப் பின் மீளாமை;* regain after lose

**தலைதூக்குதல்** வி. (v.) *சற்று மேல் நிலைக்கு வருதல்;* to lift oneself up. *'மூத்த பிள்ளை சம்பாதித்த பின்பு தான் குடும்பம் தலை தூக்கி யிருக்கிறது'.*

**தலைதேய்த்தல்** பெ. (n.) *நீராடல்;* having a bath.

**தலைதொடுதல்** வி. (v.) *திருமுழுக் காட்டிற்காகத் தலையைத் தொட்டு அருள்புரிந்து, திருத்தந்தையாதல்;* to become sponsor for a child in baptism.

**தலைதோய்தல்** வி. (v.) *நீரில் தலை முழுகுதல்;* to bath for ceremonial purification or for health.

**தலைநகரம்** பெ. (n.) *ஒரு நாட்டின் அல்லது மாநிலத்தின் ஆட்சிப் பணிகள் நடைபெறும் இடம்;* capital city.

**தலைநஞ்சுக்கொடி** பெ. (n.) *தலைப் பிள்ளையின் நஞ்சுக்கொடி;* the navel cord of the first born child.

**தலைநடுக்கம்** பெ. (n.) 1. *கிறுகிறுப்பு;* giddiness. 2. *முதுமையில் உண்டாகும் தலையசைவு;* shaking of head in old persons.

**தலைநடுக்குவலி** பெ. (n.) *ஊதை நோயினாலேற்படும் தலை நடுக்கம்;* shaking palsy due to aggrevated pain.

**தலைநிமிர்தல்** வி. (v.) 1. *தலையை உயர்த்துதல்;* to carry one's head erect, as in pride. 2. *நிலைமேம்படுதல்;* to improve in circumstances.

**தலைநில்லாப்பருவம்** பெ. (n.) *குழவி கட்குத் தலை நில்லாத பருவம்;* that

state of infancy or early childhood, when the head cannot support itself.

**தலைநிற்றல்** பெ. (n.) *குழந்தைகளது தலை சாயாமல், சோர்வின்றி நிற்கை;* the child's head is capable of supporting itself and remaining errect.

**தலைநீட்டுதல்** வி. (v.) *சிறிது நேரம் வந்து கலந்துகொள்ளுதல்;* to attend for a short time. '*நேற்று நடந்த ஈமச் சடங்கில், அவர் வந்து தலையை நீட்டிவிட்டுச்சென்றுவிட்டார்*'.

**தலைநோவு** பெ. (n.) *தலைவலி;* head ache.

**தலைப்பட்டை** பெ. (n.) *மீனவர் அணியும் கூம்பு வடிவ ஓலைக்குல்லா;* conical basket cap, worn by fishermen.

**தலைப்பணி** பெ. (n.) *முதல் வேலை;* first work.

**தலைப்பந்தி** பெ. (n.) *விருந்தின்போது உண்ணுவோரில் முதல் வரிசை;* first set or row of guests entertained.

**தலைப்பளுவு** பெ. (n.) *தலைக்கனம்;* heaviness in the head from cold.

**தலைப்பாகை** பெ. (n.) *குடும்ப நிகழ்ச்சியிலோ, நிறுவன நிகழ்ச்சியிலோ தலையில் சுற்றப்பட்டிருக்கும் துணிக்கட்டு;* turban.

**தலைப்பாமாட்டி** பெ. (n.) *தலைப்பாகை முதலியவற்றை மாட்டுதற்கு உதவுங் கருவி;* hat rack, coat stand.

**தலைப்பாரம்** பெ. (n.) *1. தலைச்சுமை;* head load. *2. தலைக்கனம்;* heaviness in the head from cold. *3. தலைவலி;* head ache.

**தலைப்பாளை** பெ. (n.) *தென்னை முதலிய வற்றில், முதலில் வரும் பாளை;* first spathe of the coconut and other palm trees.

**தலைப்பித்தம்** பெ. (n.) *தலைச்சுற்றல்;* giddiness of the head.

**தலைப்பிள்ளை** பெ. (n.) *முதல் மகன்;* first son.

**தலைப்பிறை** பெ. (n.) *வளர்பிறையில் முதல் நாள்;* the fist day of the bright fortnight.

**தலைப்பு** பெ. (n.) *1. கதை, கட்டுரை, சொற்பொழிவு ஆகியவற்றின் பொருள் தலைப்பு;* title song, essay, lecture, etc.,

**தலைப்புச் செய்தி** பெ. (n.) *(வானொலி, தொலைக்காட்சி, இதழ்கள் ஆகிய வற்றில்) முதன்மைச் செய்தி;* headline of a news, bulletin or story in a newspaper.

**தலைப்புரட்டன்** பெ. (n.) *பெரும் பொய் யன்;* audacious liar.

**தலைப்புற்று** பெ. (n.) *1. தலையி லுண்டாகும் புற்றுநோய்;* a disease attacking the scalp. *2. தலையி லுண்டாகும் ஒருவகை புண்;* canker on the head.

**தலைப்பேறு** பெ. (n.) *1. முதற்பிள்ளை;* first issue, son or daughter. *2. முதல் மகப்பேறு;* first confinement.

**தலைப்பேன்** பெ. (n.) *தலை முடியில் உள்ள பேன்;* lice on the head as dist. for *silai-p-pēṉ*.

**தலைப்பொடுகு** பெ. (n.) *தலைச்சுண்டு;* dandruff.

**தலைபணிதல்** வி. (v.) *வணங்குதல்;* to bow ones head.

**தலைமக்கள்** பெ. (n.) *மேன்மக்கள்;* men of the first rank, great men, leaders.

**தலைமகள்** பெ. (n.) *மூத்தபெண்;* eldest daughter.

**தலைமகன்** பெ. (n.) *மூத்தமகன்;* eldest son.

**தலைமட்டம்** பெ. (n.) *1. மேல் மட்டம்;* top level. *2. ஆளுயரம்;* height of a person.

**தலைமடங்குதல்** வி. (v.) *கதிர் முதலியன விளைந்து சாய்தல்;* to bend, bow, as ears of grain.

**தலைமடை** பெ. (n.) *நீர்ப்பாசனம் தொடங்கும் முதல் மடை;* course of a channel where irrigation first begins.

**தலைமதகு** பெ. (n.) *ஏரி, கால்வாய் முதலியவற்றிலிருந்து தண்ணீர் திறந்துவிடுவதற்கான கதவுள்ள, கட்டுமானம்;* head sluice provided in the tanks and channel to let out water for irrigation, which has control to regulate supply of water.

**தலைமயிர்வாங்குதல்** வி. (v.) *கைம்பெண் தலைமயிரை முதலில் எடுப்பித்தல்;* to shave a womans head for the first time on her widowhood.

**தலைமழித்தல்** வி. (v.) *மொட்டை யடித்தல்;* to tonsure.

**தலைமறைதல்** வி. (v.) *1. ஒளிந்துக் கொள்ளுதல்;* to be concealed. *2. மறைந்துபோதல்;* to abscond.

**தலைமறைவாகுதல்** வி. (v.) *ஒளிந்து வாழுதல்;* to go underground or into hiding abscond.

**தலைமறைவு** பெ. (n.) *(காவல்துறை யினரால் அல்லது எதிரிகளால் தேடப்பட்டு வரும் ஒருவர் அல்லது அரசால் தடை செய்யப்பட்ட இயக்கம்) கமுக்கமாகச் செயல் படுகை;* (being secret of organization).

**தலைமாடு** பெ. (n.) *படுக்கையில் தலைப்பக்கம்;* head of a bed.

**தலைமாணாக்கன்** பெ. (n.) *முதல் மாணவன்;* ideal pupil.

**தலைமாந்தநோய்** பெ. (n.) *தலை, கழுத்து, வீங்கி உடலில் வலியை உண்டாக்கும் செரியாமை நோய்;* a kind of dyspepsia attended with swelling of the head and the neck and pain all over the body.

**தலைமுடி** பெ. (n.) *1. தலையினுச்சி;* crown of the head. *2. தலைச்சிகை;* lock of hair.

**தலைமுழுக்கு** பெ. (n.) *1. மெய்முழுதுங் குளிக்கை;* bathing head and all. *2. எண்ணெய்முழுக்கு;* bathing with oil.

**தலைமுழுகாமலிருத்தல்** வி. (v.) *கருப்பமாயிருத்தல்;* to be pregnant.

**தலைமுழுகுதல்** வி. (v.) *1. உறவை வெட்டிக்கொள்ளல்;* to server one's connection with, as a relative. *2. கைவிடுதல்;* to give up as irrecoverable, as a loan.

**தலைமுறை** பெ. (n.) *கால்வழி, வழிவழி;* generation, lineal descent.

**தலைமை** பெ. (n.) *அதிகாரங்கள் நிறைந்த முதன்மைப் பணியாளர்;* leadership.

**தலைமை உரை** பெ. (n.) *கூட்டத்திற்குத் தலைமை தாங்குபவர் நிகழ்த்தும் உரை;* address of the president.

**தலைமைச் செயலகம்** பெ. (n.) *அரசின் முதன்மை அலுவலகம்;* head quarters, secretariat.

**தலைமைதாங்குதல்** வி. (v.) *வழிநடத்தும் பொறுப்பேற்றல்;* preside over.

**தலைமையாசிரியர்** பெ. (n.) *பள்ளிக்குத் தலைமையேற்பவர்;* headmaster.

**தலையங்கம்** பெ. (n.) *1. செய்தித்தாள் ஆசிரியர் எழுதுங்கட்டுரை;* (editorial); leader, leading article, prevailing immediately after the harvest. *2. செய்தித் தாளின் தலைப்பில் செய்திகளைக் குறிப்பாக எடுத்துக்காட்டும் செய்திச் சுருக்கம்;* heading, headline.

**தலையடிநெல்** பெ. (n.) *நெற்கதிரின் முதலடி நெல் (நெல்லை);* paddy obtained at the first threshing of sheaves, considered superior.

**தலையணி** பெ. (n.) *1. தலைப்பாகை;* head dress. *2. தலைக்கவசம்;* helmet.

**தலையணை** பெ. (n.) *தலைவைத்துப் படுப்பதற்குப் பஞ்சு முதலியன அடைத்துத் தைத்த பை;* pillow.

**தலையலங்காரம்** பெ. (n.) *தலையை அழகு செய்தல்;* decoration of the head.

**தலையாட்டம்** பெ. (n.) *தலைநடுக்கம்;* trembling of the head, as from palsy.

**தலையாட்டிப் பொம்மை** பெ. (n.) *எதற்கும் இணங்கி நடப்பவன் (இங்கு மங்கும் தலையசைந்தாடும் பொம்மை போல இருப்பவன்);* lit., a doll moving it's head to and from a service person.

**தலையாடி** பெ. (n.) *திருமணமானபின் வரும் முதல் ஆடிப் பண்டிகை;* the first adi month after marriage in which the bridegroom while receive gifts from father in law.

**தலையாரி** பெ. (n.) *ஊர்க்காவற்காரர்;* village - watchman.

**தலையாறு** பெ. (n.) *ஆற்றின் தோற்று வாய்;* source of a river.

**தலையிடுதல்** வி. (v.) *தேவையில்லாமல், பிறர் செயலில் புகுதல்;* to meddle, interfere in other's affairs.

**தலையில் இடி விழுதல்** வி. (v.) *கடும் அதிர்ச்சி அடையும் அளவுக்கு ஒருவருக்குத் தீங்கு நேர்தல்;* receive a rude shock.

**தலையிலெழுதுதல்** வி. (v.) *தலைவிதி யமையும் நிலை;* to predetermine one's fate or destiny, as writing on one's head.

**தலையுடைத்துக்கொள்(ளு)தல்** வி. (v.) *பெரும் முயற்சி எடுத்தல்;* to take great trouble, as breaking the head over a work.

**தலையுதிர்நெல்** பெ. (n.) *பெரும் பான்மையும் விதைக்குப் பயன் படுத்தும், முதலடிப்பில் எடுக்கப் படுவதுமான நெல்;* the paddy collected at the first threshing and used generally as seeds.

**தலையெடுத்தல்** வி. (v.) *இழந்த நிலையைத் திரும்பவடைதல்;* to recover, as a lost position.

**தலையெலும்பு** பெ. (n.) *மண்டை யெலும்பு;* cranial bone.

**தலையெழுத்து** பெ. (n.) *வாழ்க்கையை அமைவதாகக் கருதப்படும் விதி; ஊழாற்றல்; விலக்க இயலாத முடிவு;மாற்றமுடியா அமைவு;* fate destiny.

**தலைவணங்குதல்** வி. (v.) *உரிய முறையில் மதித்து வணங்குதல்;* to do homage; to bow the head.

**தலைவர்** பெ. (n.) *1. அணி, கட்சி முதலிய வற்றின் செயற்பாடு, போக்கு, நிருவாகம் ஆகியவற்றிற்குக் கரணிய மாகவிருந்து அனைவரையும் நன் முறையில் வழி நடத்திச் செல்பவர்;* leader, head of an organization, party, etc., *'கட்சித் தலைவர்'. 2. வயதில் மூத்தவ ராகவும், பொருளீட்டுவதில் வல்லவ ராகவும் இருந்து, குடும்பத்தை தன் மேற் பார்வையில், கட்டிக்காக்கும் தலைவர்;* head of a family.

**தலைவலி** பெ. (n.) *1. தலைநோவு;* head ache, cephalalgis. *2. தொந்தரவு தருகிற ஆள்;* a person who action cause headache.

**தலைவலிமருந்து** பெ. (n.) *தலை வலியைப் போக்கும் பொருட்டு பயன்படுத்தப் படும் மருந்து;* that which is acting remedically on the head; any medicine for head ache.

**தலைவழித்தல்** வி. (v.) *முகத்தல் அளவை களில், கூம்பு வரை முழுமையாக அளக்காமல், விளிம்பு வரை மட்ட மாகத் தட்டி அளத்தல்;* to strike off the excess of grain at the top of measure, in measuring. *'தலைவழித்து ஒருபடி அரிசி கொடுத்தான்'.*

**தலைவழிதல்** வி. (v.) *நிரம்பிவழிதல்;* to overflow. *'தலைவழிந்தது'.*

**தலைவழுக்கை** பெ. (n.) *தலையை வழுக்கையாகச் செய்யும் நோய் வகை;* baldness, Alopecia.

**தலைவளர்த்தல்** வி. (v.) *நோன்பு முதலிய வற்றில், தலைமுடி வளர்த்தல்; நேர்த்திக் கடனுக்காக முடி வளர்த்தல்;* to let the hair grow as required ceremonially.

**தலைவறட்சி** பெ. (n.) *சூட்டினால் ஏற்படும் தலைவறட்சி; எண்ணெய் தடவா மயிர்;* dryness in the head due to excess of constitutional heat.

**தலைவன்** பெ. (n.) *1. முதல்வன்;* chief, headman, lord. *2. கணவன்;* husband. *3. அகப்பொருட்கிழவன்;* hero of a love poem.

**தலைவாங்கி** பெ. (n.) *1. தூக்குப் போடு வோன்;* hangman. *2. கேடு விளை விப்பவன்;* villain.

**தலைவாசல்** பெ. (n.) *முதல் வாயில்;* main gate, as of a city, house.

**தலைவாய்** பெ. (n.) *முதல் மடை;* main sluice.

**தலைவாரி** பெ. (n.) *சீப்பு;* comb.

**தலைவாருதல்** வி. (v.) *தலைமுடி வாருதல்;* to comb the hair.

**தலைவாருகை** பெ. (n.) *முதன்முறை கருவுற்ற பெண்ணுக்கு 4 அல்லது 6-ஆம் மாதத்தில், கணவன் வீட்டார் செய்யும் தலைக்கோலச் சடங்கு;* ceremony of adorning the head of a woman at the house of her father in law in the fourth or six month of her first pregnancy.

**தலைவாழையிலை** பெ. (n.) *நுனியோடு கூடிய வாழையிலை;* plantain leaf with pointed end. *'மாப்பிள்ளைக்குத் தலைவாழையிலையில் விருந்து போடுதல், இன்றும் காணப்படும் மரபாகும்'.*

**தலைவி** பெ. (n.) *1. தலைமைப் பெண்;* lady, mistress, matron. *2. மனைவி;* wife. *3. அகப்பொருட்கிழத்தி;* heroine of a love poem. *4. கதைத்தலைவி;* heroine of a story.

**தலைவிதி** பெ. (n.) *ஊழ்;* fate.

**தலைவிரிகோலம்** பெ. (n.) *தலைமுடியை வாரி முடியாமல் விரித்துப்போட்ட நிலை; சினக் குறியுடைய பெண்;* dishevelled hair, as of persons in fright or sorrow.

**தலைவிரிச்சான்சோளம்** பெ. (n.) *மாட்டுத் தீனியின் பொருட்டு மானாமாரி யாய்ப் பயிரிடும் சோளவகை;* a variety of millet that is rainfed and grown for fodder.

**தலைவிரித்தாடுதல்** பெ. (n.) *வற்கடம், கையூட்டு, வன்முறை முதலியவை கட்டுக்கடங்காமல் பரவிக் காணப் படுதல் அல்லது நிலவுதல்;* (of famine, bribe, etc.,) to be rampant.

**தலைவிலை** பெ. (n.) *1. களத்தில் விற்கும் தவச விலை;* price of grain fixed at the threshing floor. *2. அறுவடைக்கு முன் முடிவு செய்யும் நெல்விலை;* price of paddy fixed before harvest.

**தலைவிளை** பெ. (n.) *வயலின் முதல் விளைச்சல்;* first crop of a cultivated field.

**தலைவெட்டிக்கருவாடு** பெ. (n.) *தலை யில்லாது விற்கும் ஒருவகைக் கருவாடு;* the headless trunk of a (karuvadu) dried fish.

**தலைவெட்டுதல்** வி. (v.) *தலைமுடி திருத்தல்;* to crop one's hair.

**தலைவைத்தல்** வி. (v.) *நீர் முதலியன பாயத் தொடங்குதல்;* to begin to flow.

**தலைவைத்துப்படுத்தல்** வி. (v.) *(பெரும் பாலும் எதிர்மறையில்) (ஒருவருடன்) தொடர்ந்து தொடர்பு வைத்துக் கொள்ளுதல்;* go near; have business with.

**தவக்கிடை** பெ. (n.) *நோன்பு கருதி உண்ணாமலிருத்தல்;* observing a fast.

**தவங்கிடத்தல்** பெ. (n.) *1.* *தவ நிலையில் நிற்றல்;* being in a state of resolved penance. *2.* *எதிர்பார்ப்புடன் நெடுநாள் காத்திருத்தல்;* waiting for long time.

**தவசம்** பெ. (n.) *1.* *கூலம்;* grain, especially dry. *2.* *தொகுத்த கூலம்;* grain and other provisions laid by in store.

**தவசத்தொம்பை** பெ. (n.) *நெற்களஞ்சியம்;* granary.

**தவசவட்டி** பெ. (n.) *கூல (தவச)மாகக் கொடுக்கும் வட்டி;* interest payable in paddy.

**தவடை** பெ. (n.) *கன்னம், தாடை;* cheek, jaw.

**தவண்டையடித்தல்** வி. (v.) *நீரில் கை கால்களை அடித்துக்கொண்டு நீந்தும் நீச்சல்;* swimming by striking against the water with hands and feet.

**தவணை** பெ. (n.) *தொகை செலுத்துதல் முதலியவற்றிற்கு ஏற்படுத்திய கெடு;* limited time, fixed term for payment of a due or instalment, period of revenue collection, especially of land tax.

**தவணைகேட்டல்** பெ. (n.) *தடவை, முறை;* occasion, number of times.

**தவணைச்சீட்டு** பெ. (n.) *கெடு வைத்தெழுதிய ஓலை;* bond specifying a fixed term.

**தவணை செலுத்துதல்** பெ. (n.) *கடன் முதலியவற்றை முறையாகச் செலுத்துதல்;* to be paid instalments.

**தவணைப்பணம்** பெ. (n.) *கெடுப்படி செலுத்த வேண்டிய தொகை;* money payable in instalments, periodical payment.

**தவணைமுறை** பெ. (n.) *மொத்தாகச் செலுத்த வேண்டிய பணத்தை வகைப் படுத்தி கால முறையாகப் பகுத்துக் கொண்டு, குறிப்பிட்ட காலத்திற்குள் செலுத்துவது;* hire purchase.

**தவணை வட்டி** பெ. (n.) *வரையறுக் கப்பட்ட கெடுவுக்குள் திரும்பக் கொடுக்கும் பணத்துக்குரிய வட்டி;* interest on fixed deposit.

**தவம்** பெ. (n.) *பற்றை நீக்கி, உடலை வருத்திக்கொண்டு, கடவுளை வழி படுகை;* penance, religious austerities.

**தவமுதுமகன்** பெ. (n.) *தவத்தில் முதிர்ந்த முனிவன்;* a male ripe in asceticism.

**தவலை** பெ. (n.) *அகன்ற வாயுடைய மாழையாலான ஏனவகை;* metallic pot with a wide mouth.

**தவழ்தல்** வி. (v.) *ஊர்தல், நகர்தல்;* to creep, crawl, as infants, lizards, snakes.

**தவழவாங்கிக்கட்டுதல்** வி. (v.) *மாட்டுக் காலைக் கழுத்துடன் தளர்வாகப் பிணைத்துத் தளைதல்;* to tie a bullock's neck to its forelegs to prevent straying.

**தவழவாங்குதல்** வி. (v.) *1.* *ஒருவனைக் குனியவைத்து துன்புறுத்தி அவன் சொத்து முழுமையும், தமதாக்கிக் கொள்ளுதல்;* to deprive a person of all his property, holding him down and robbing him. *2.* *மிகுதியாக வேலை கொடுத்து ஒருவனை வாட்டுதல்;* to weary a person by over work.

**தவளைக்கடி** பெ. (n.) *1.* *சொறிப்புண் வகை;* a kind of eruption. *2.* *தவளைக் கடியினால் உண்டாகும் ஒருவகை நோய்;* a kind of frog bite disease.

**தவளைதத்துதல்** வி. (v.) *தவளை போல் தத்திவிளை யாடுதல்;* to play at leap frog.

**தவறவிடுதல்** வி. (v.) *1.* *காணாமல் போகும்படி நேர்தல்;* to miss. *2.* *தொலைத்தல்;* to lose.

**தவறுதல்** வி. (v.) *1. தப்பிவிழுதல்;* to slip, miss, fall, tumble over, trip lose one's hold. *2. வெற்றிவாய்ப்பிழத்தல்;* to be unsuccessful.

**தவறு** பெ. (n.) *1. நெறிதவறுகை;* fault, delinquency. *2. பிழை;* mistake, error, blunder.

**தவிட்டுக்கிளி** பெ. (n.) *ஒருவகை வெட்டுக்கிளி;* grasshopper, Attilabus as brandbrown.

**தவிட்டுப்புறா** பெ. (n.) *தவிட்டு நிறமுள்ள சிறுபுறாவகை;* little brown dove, Turtur cambayensis.

**தவிடு** பெ. (n.) *நெல் முதலியவற்றைக் குத்தி அரிசி முதலியன எடுத்த பின், உமியொழியக் கழிந்த பகுதி;* bran.

**தவிடுபொடியாதல்** வி. (n.) *1. பொடிப் பொடியாதல்;* to be broken into minute pieces. *2. நிலைகுலைதல்;* to be ruined beyond recovery.

**தவித்தல்** வி. (v.) *இல்லாமை பற்றி வருந்துதல்;* to be distressed, to pant for.

**தவில்** பெ. (n.) *மேளவகை;* a kind of two headed drum.

**தழல்** பெ. (n.) *1. நெருப்பு;* fire. *2. தணல்;* live coals of fire, embers.

**தழும்பு** பெ. (n.) *1. வடு;* scar, cicatrice, bruise, weal. *2. குறி;* mark, impression, dent made in the skin.

**தழை** பெ. (n.) *1. தளிர்;* sprout, shoot. *2. இலை;* leaf, foliage.

**தழைச்சத்து** பெ. (n.) *1. இலை தழைச்சாறு;* juice from leaves. *2. இலை தழைகளான இயற்கை உரம்;* green manure.

**தழைத்தல்** வி. (v.) *1. செழித்தல்;* to flourish, thrive, grow luxuriantly, as plants. *2. வளர்தல்;* to grow, prosper, as a family, people, state.

**தழையுரம்** பெ. (n.) *அடியுரமாக இடப் பெறும் மரங்களின் தழை;* green manure.

**தள்ளாடுதல்** வி. (v.) *தடுமாறுதல்;* to stagger, real, as a drunkard.

**தள்ளாதகாலம்** பெ. (n.) *முதுமைக்காலம்;* time of infirmity, old age.

**தள்ளாதவன்** பெ. (n.) *1. வலுவில்லாதவன்;* infirm person. *2. எதையும் வேண்டாம் என ஒதுக்காதவன்;* person who does not avaid anything.

**தள்ளிப்போதல்** வி. (v.) *ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சி நிகழாமல் பின்னால் போதல்; காலந்தாழ்த்தல்;* to get put off; delayed.

**தள்ளிப்போடுதல்** வி. (v.) *குறிப்பிட்ட காலத்தில் செய்ய வேண்டியதைச் செய்யாமல் காலந் தாழ்த்துதல்;* to postpone things to be done immediately.

**தள்ளிவிடுதல்** வி. (v.) *உரிய விலை வாரா விடினும், குறைந்த விலைக்குப் பொருள்களை விற்று தீர்த்துவிடுதல்;* to sell to lower price and push the products out.

**தள்ளிவைத்தல்** வி. (v.) *1. தள்ளிப் போடுதல்;* to postpone. *2. இடம் விட்டு வைத்தல்;* to remove a little further off, shift. *'புத்தகத்தைத் தள்ளிவை'*. *3. மனம் ஒத்துப் போகாத தால் மனைவியை ஒதுக்கிவைத்தல்;* disowning or discarding one's wife.

**தள்ளுபடிசெய்தல்** வி. (v.) *1. புறந்தள்ளல் (நிராகரித்தல்);* to reject. *2. நீக்கச் செய்தல் (விலக் குதல்);* to write off.

**தள்ளுபடிவிற்பனை** பெ. (n.) *கழிவு விலை விற்பனை;* discount sale.

**தள்ளுவண்டி** பெ. (n.) *1. கையால் தள்ளிச் செலுத்தும் சிறுவண்டி;* wheel barrow, perambulator. *2. சிறுகுழந்தை நடந்து பழக உதவியாக உள்ள, சிறுவண்டி;* small cart.

**தளதளத்தல்** வி. (v.) *விரிவடைதல், பருத்தல்;* to plump, full, sleek, as the body.

**தளபதி** பெ. (n.) *படைத்தலைவன்;* captain, general, marshal, commander in chief.

**தளம்** பெ. (n.) *1.* *செங்கல், கருங்கல், சுதை மா பாவிய தரை;* floor or pavement, as of brick, stone or cement. *2.* *மொட்டை மாடி;* terrace roof, upper open space room or balcony. *3.* *அடுக்கு மாடிகளில் முதல் தளம், இரண்டாம் தளம் என்றமைந்த குடியிருப்புகள்;* various floors in residential flats or any building or tower.

**தளர்ச்சி** பெ. (n.) *களைப்பு, சோர்வு;* weakness, in firmity, decrepitude, faintness, langour, depression of spirits.

**தளர்நடை** பெ. (n.) *முதலில் குழந்தைகள் தடுமாறி நடக்கும் நடை;* tottering walk, wobbling, as of a child.

**தளர்வு** பெ. (n.) *நெகிழ்கை, இளைப் பாறுகை;* growing slak, relaxing.

**தளவாடம்** பெ. (n.) *வேலை செய்வதற்கு வேண்டிய கருவி முதலியன;* tools, materials, requities tackle, furniture.

**தளிகைபோடுதல்** வி. (v.) *கடவுளுக்குப் படைத்தல் பொருட்டு, பழங்கள் சோறு முதலியவற்றைக் கொணர்ந்து படைத்தல்;* to take boiled rice, etc., for offering to idols.

**தளிகைவிடுதல்** வி. (v.) *கோயிலில் தேங்காய்ச்சோறு, புளிச்சோறு, தயிர்ச்சோறு முதலிய தாளித்த சோற்று வகையைக் கலந்து இடுதல்;* to offer variety rice to idols in temples.

**தளிர்** பெ. (n.) *விதையிலிருந்து முளைக்கும் மெல்லிய இலை;* sprout, tender shoot, bud.

**தளும்புதல்** வி. (v.) *கலம் அசைவதால் நீர் தெறித்து கீழே விழுதல்;* to wabble, flap, fluctuate, as water in a moving vessel.

**தளை** பெ. (n.) *1.* *கட்டு;* tie, fastening, bandage. *2.* *கயிறு;* cord, rope.

**தளைநார்** பெ. (n.) *பனையேறுவோர் காலில் மாட்டிக்கொள்ளுங் கயிறு;* foot brace for a palm tree - climber.

**தற்காத்தல்** வி. (v.) *1.* *தன்னைக் காத்துக்கொள்ளுதல்;* to take care of oneself, protect oneself. *'தற்காத்துத் தற்கொண்டாற் பேணி (குறள்.56)'.* *2.* *பாதுகாத்துக்கொள்ளல்;* to preserve, protect.

**தற்காப்பு** பெ. (n.) *தன்னைக் காத்துக் கொள்ளுகை;* self protection.

**தற்காலம்** பெ. (n.) *1.* *நிகழ்காலம்;* present time. *2.* *குறித்த காலம்;* exact or precise time of an action or occurrence.

**தற்காலிகம்** பெ. (n.) *காலவரையறைக் குட்பட்டது;* temporary.

**தற்காவல்** பெ. (n.) *1.* *தன்னைக் காத்துக் கொள்ளல்;* self protection. *2.* *கற்பு நிலை;* chastity.

**தற்குறி** பெ. (n.) *எழுதத் தெரியாதவன். தன் கையெழுத்தாக இடும் இடது கைப் பெருவிரல் அடையாளம்;* signature mark of an illiterate person.

**தற்கொலை** பெ. (n.) *தன்னுயிரைத் தானே மாய்த்துக்கொள்ளுகை;* suicide.

**தற்செருக்கு** பெ. (n.) *தன்முனைப்பு;* self conceit.

**தற்பெருமை** பெ. (n.) *தன்னைக் குறித்துப் பெருமையாகப் பேசுவது;* boasting (of oneself or one own people).

**தறித்தல்** வி. (v.) *துணித்தல், வெட்டுதல்;* to lop, chop off, cut down.

**தன்பொறுப்பு** பெ. (n.) *தன்னதாக ஏற்றுக் கொள்ளும் கடமை;* personal responsibility.

**தன்மானம்** பெ. (n.) *தன்மதிப்பு;* self respect; self dignity.

**தன்னடக்கம்** பெ. (n.) *1.* *தன்னை ஒறுக்கை;* self restraint, self denial, self prossession. *2.* *அமைதி;* modesty, in regard to learning, wealth, etc.,

**தன்னம்பிக்கை** பெ. (n.) *தன் மீதுள்ள நம்பிக்கை;* self confidence (in oneself); assurance. *'வெற்றி தன்னம்பிக்கை அளிக்கிறது'.*

**தன்னலம்** பெ. (n.) *தனக்கேற்ற நன்மை களை மட்டும்பேணுகை;* selfishness.

**தன்னறிவு** பெ. (n.) *சொந்த அறிவு;* consciousness, self knowledge, one's own knowledge.

**தன்னனுபவம்** பெ. (n.) *தன் பட்டறிவு;* self experience.

**தன்னாட்சி** பெ. (n.) *தன்னாளுகைக்குரிய உரிமை;* autonomy; self governance. *'தன்னாட்சிக் கல்லூரி'.*

**தன்னிச்சை** பெ. (n.) *தன் விருப்பம்;* one's wish, self will.

**தன்னியல்பு** பெ. (n.) *சிறப்புக்குணம்;* peculiar quality, distinguishing feature or characteristic.

**தன்னிலை** பெ. (n.) *1. இயல்பு நிலை;* one's proper position, nature or state. *2. நடுநிலை நிற்கை;* equilibrium or natural state.

**தன்னிறைவு** பெ. (n.) *1. தன் நிலையிலேயே நிறைவு பெறும் நிலை;* self sufficiency. *2. கிடைத்தது போதும் என்ற வகையில் அடையும் பொந்திகை;* contentment.

**தன்னுணர்ச்சி** பெ. (n.) *1. தன்னறிவு;* self consciousness. *2. நினைவு;* memory, recollection.

**தன்னைமறத்தல்** வி. (v.) *ஓகம் (யோகம்) அல்லது ஊழ்கம் (தியானம்) முதலிய வற்றால் தன்னிலை மறத்தல்;* to state of insensibility to ones surroundings to be rupt into visions.

**தன்னைமறுத்தல்** வி. (v.) *இன்பத்துன்பங் களை மறுத்தல்;* to indulge in one's own appetites.

**தன்னையறிதல்** வி. (v.) *தனது உண்மைத் தன்மையை உணர்தல்;* to know oneself.

**தன்னொழுக்கம்** பெ. (n.) *தன்னிலைக்குத் தக்க நடை;* conduct suitable to one's age, rank, caste or religion.

**தனதாக்குதல்** வி. (v.) *தனக்குரிமை யாக்குதல்; தம்முடைய தாக்குதல்;* to obtain for oneself.

**தனதாள் (தனது ஆள்)** பெ. (n.) *1. சொந்த வேலைக் காரன்;* one's own permanent servant. *2. உடந்தையாயிருக்கும் ஆள்;* associate, mate.

**தனிக்கட்டை** பெ. (n.) *(குடும்பமாக இல்லாமல்) தனியாக வாழ் பவர்;* one who is single; loner.

**தனிக்காட்டுராசா** பெ. (n.) *கட்டுக்கு அடங்காதவன்;* one who submits to no rule or order.

**தனிக்காவல்** பெ. (n.) *தனியனாக இருக்கும்படி அடைக்குஞ் சிறை;* solitary confinement.

**தனிக்குடி** பெ. (n.) *பல இனத்தவர் வாழும் ஊரில் தனித்துள்ள ஒரு இனக் குடும்பம்;* single family of a caste living among others.

**தனிக்குடித்தனம்** பெ. (n.) *தனி வீட்டில் வாழும் குடித்தனம்;* living apart after marriage.

**தனிச்செய்கை** பெ. (n.) *பிறருடன் சேராது தானே செய்யும் வேளாண்மை அல்லது தொழில்;* single - handed cultivation of land, not jointly with others.

**தனித்த நிலை** பெ. (n.) *1. ஓகநிலை;* yogic posture. *2. தனிமையிலிருக்கை;* solitariness.

**தனித்தமிழ்** பெ. (n.) *பிறமொழிக் கலப்பில்லாத் தூயதமிழ்;* the language of Tamil free of its borrowings.

**தனித்தன்மை** பெ. (n.) *சிறப்பான தன்மை;* remarkable quality; special feture.

**தனித்தனி** பெ. (n.) *ஒவ்வொன்றாய் அல்லது ஒவ்வொருவராய்;* individually, separately, each one, singly.

**தனித்திருத்தல்** வி. (v.) *துணையின்றித் தனிமையிலிருத்தல்;* to get into isolation.

**தனித்துவம்** பெ. (n.) *தனித்தன்மை; வேறுபடுத்திக் காட்டும் தன்மை;* individuality.

**தனித்தேர்வர்** பெ. (n.) *தனிப்பட்ட முறையில் தேர்வு எழுதுபவர்;* private candidate.

**தனிப்படை** பெ. (n.) *ஒரு செயற்பாட்டிற்கு ஒரு குழுவாக அமைத்து செயல் முடிக்க அனுப்பும் படை;* special army.

**தனிப்புறம்** பெ. (n.) *ஒதுங்கின இடம்;* solitary place or state.

**தனிப்பெரும்பான்மை** பெ. (n.) *முழுப் பெரும்பான்மை;* absolute majority.

**தனிமம்** பெ. (n.) *ஒரு தன்மை கொண்ட அணுக்களாலான பொருள்;* element.

**தனிமை** பெ. (n.) *ஒன்றியாயிருக்குந் தன்மை;* singleness, solitude.

**தனிமைப்படுத்துதல்** வி. (v.) *பிரித்து ஒதுக்குதல்;* to isolate.

**தனியார்** பெ. (n.) *தனிப்பட்டவர், தனிப்பட்டவருக்குச் சொந்தமானது;* private ownership.

**தனியெழுத்து** பெ. (n.) *கூட்டெழுத்துகள் போலன்றித் தனித்தனி பிரிந்து தோன்றும்படி, எழுதும் எழுத்து;* letters written separately without being mixed with others, dist. fr. *kutteluttu*.

**தனிவட்டி** பெ. (n.) *கொடுத்த பணத்திற்கு ஆண்டுதோறும் கணக்கிடப்படும் வட்டி;* simple interest.

**தனிவலி** பெ. (n.) *மகப்பேற்று வலி;* labour pain.

**தனிவழி** பெ. (n.) *துணையற்ற வழி;* lonely way.

**தனிவீடு** பெ. (n.) *1. பக்கத்தில் வேறு வீடு இல்லாத, ஒற்றை வீடு;* solitary house. *2. ஒற்றைக் குடித்தனமுள்ள வீடு;* house occupied by only one tenant.

**தனிவெள்ளி** பெ. (n.) *கலப்பற்ற தூய வெள்ளி;* pure or unalloyed silver.

# தா

**தாக்கம்** பெ. (n.) *அடிக்கை, தாக்குகை, மோதுகை, முட்டுகை;* attack, assault, hit. *2. எதிர்தாக்குகை;* reaction, counter action.

**தாக்கல் செய்தல்** வி. (v.) *1. வழக்கு மன்றத்தில் வழக்கைப் பதிவு செய்தல்;* filing the case, etc., *2. வரவு செலவுத் திட்டம் முதலியவற்றை ஒப்படைத்தல்;* to table, to submit.

**தாக்குப்பிடித்தல்** வி. (v.) *1. தாங்கி நிலைத்தல்;* to withstand. *2. நிலைமைக்குத் தக்கவாறு ஈடுகொடுத்தல்;* to brave.

**தாகந்தணித்தல்** வி. (v.) *நீர்வேட்கை நீக்குதல்;* to quench thirst.

**தாகம்** பெ. (n.) *1. உயிர்த்துன்பம் பன்னிரண்டனுள் ஒன்றாகிய நீர் வேட்கை;* thirst, one 12 uyir - *vēdanai*. *2. ஆசை;* eagerness, desire.

**தாகமாயிருத்தல்** வி. (v.) *நீர் வேட்கையில் இருத்தல்;* to be thirst.

**தாகமின்மை** பெ. (n.) *நீர் வேட்கையில்லாமை;* absence of thirst - Adipsia.

**தாகமெடுத்தல்** பெ. (n.) *நீரில் விருப்பங் கொள்ளுகை;* becoming thirsty.

**தாங்கமுடியாமை** பெ. (n.) *பொறுக்க முடியாமை;* unbearableness as pain in diseases.

**தாங்கல்** பெ. (n.) *1. பொறுத்தல்;* enduring. *2. வலியைத் தாங்கல்;* bearing pain.

**தாங்கற்சக்தி** பெ. (n.) *பொறுக்கும் வல்லமை;* power of endurance.

**தாங்கிநடத்தல்** வி. (v.) *நொண்டி நடத்தல்;* to walk limpingly, hobble.

**தாங்குகட்டை** பெ. (n.) *நடக்கப் பயன்படுத்தும் தாங்கு கோல்;* crutches.

**தாங்குசுவர்** பெ. (n.) *முட்டுச்சுவர்;* buttress wall.

**தாங்குதல்** வி. (v.) *1. உதவுதல், சார்தல், பற்றுதல்;* to uphold, bear up, support. *2. பொறுத்துக்கொள்ளுதல்;* to endure.

**தாட்கோல்** பெ. (n.) *1. தாழ்ப்பாள்;* bolt, bar, latch. *2. திறவுகோல்;* key.

**தாட்டுப்பூட்டெனல்** பெ. (n.) *1. வெகுளிக் குறிப்பு;* expr. of being angry. '*தாட்டுப் பூட்டென்று குதிக்கிறான்*'. *2. ஆரவாரக் குறிப்பு;* expr. of being pompous. '*தாட்டுப்பூட்டென்று நடக் கிறான்*'.

**தாட்பாட்கட்டை** பெ. (n.) *தாழ்ப்பாளிட உதவுங்கட்டை;* bar of wood, used as bolt.

**தாடி** பெ. (n.) *1. முகத்தின் தாழ்பகுதி;* chin. *2. முகவாயில் வரும் முடி;* beard.

**தாடிமயிர்** பெ. (n.) *மோவாய் மயிர்;* beard.

**தாடை** பெ. (n.) *1. முகத்தாழ்வுப் பகுதி, கன்னம்;* cheeks, chaps. *2. தாடை யெலும்பு;* jaw bone. *3. மோவாய்;* chin.

**தாடையெலும்பு** பெ. (n.) *கன்னத்தின் கீழெலும்பு;* jaw bone, maxilla.

**தாடைவீக்கம்** பெ. (n.) *காதின் கீழ்ப்புறம் தாடையிற் காணும் வீக்கம்;* ordinary swelling on the sides of the jaw.

**தாண்டுகாலி** பெ. (n.) *கண்டபடி திரிபவ-ன்-ள்;* immoral person, as straying from virtue.

**தாண்டுகோல்** பெ. (n.) *கிட்டிப்புள்ளில் அடிக்குங்கோல்(சென்னை);* the stick used for striking in the game of tipcat.

**தாண்டுதல்** வி. (v.) *1. குதித்தாடுதல்;* to dance, skip, jump. *2. இக்கட்டிலிருந்து காத்தல்;* to pass over a critical period.

**தாத்தா** பெ. (n.) *1. தந்தையின் தந்தை யாகிய பாட்டன்;* grand father. *2. வயது முதிர்ந்தவன்;* aged man.

**தாம்பணி** பெ. (n.) *மாடுகளை வரிசை யாகப் பிணைக்கும் நீண்ட கயிறு; தாம்புக்கயிறு;* tether, halter.

**தாம்பு** பெ. (n.) *1. கயிறு;* rope. *2. தாமணிக் கயிறு;* rope to tie cattle, tether. *3. ஊஞ்சல்;* swing.

**தாமணி** பெ. (n.) *1. மாடுகளைக் கட்ட உதவும் கவையுள்ள தாம்புக்கயிறு;* long line of rope with halters attached for fastening cattle. *2. மாடு, கன்றுகளின் கழுத்திற் கட்டியிருக்கும் தும்பு;* headstall of a halter.

**தாமரை** பெ. (n.) *1. கொடிவகை;* lotus. *2. தாமரை மலரின் இதழ்களை ஒப்ப நிறுத்தப்பட்ட காலாட்படை அமைப்பு;* array of an army arranged in the form of a lotus flower.

**தாமரைப்பூ** பெ. (n.) *தாமரைத் தண்டில் பூத்த இளஞ்சிவப்பு வண்ண இதழ்கள் கொண்ட மலர்;* lotus flower.

**தாய்** பெ. (n.) *அன்னை;* mother.

**தாய்(க்கால்)வழி** பெ. (n.) *தாய்வழி உறவுமுறைத் தொடர்பு;* maternal side or line.

**தாய்ச்சி** பெ. (n.) *தாய்ப்பால் கொடுப் பவள்;* wet nurse.

**தாய்ச்சுவர்** பெ. (n.) *தொடர்ந்து கட்டப் பட்ட வீடுகளில் ஒரு வீட்டின் எல்லையாயமைந்து அதற்கேயுரிய முதன்மைச்சுவர்;* main wall of a house.

**தாய்சேய்நலவிடுதி** பெ. (n.) *தாய்சேய் நல மருத்துவமனை;* maternity and child care hospital.

**தாய்தந்தை** பெ. (n.) *பெற்றோர்;* parents.

**தாய்நாடு** பெ. (n.) *பிறந்த நாடு;* mother country, native land.

**தாய்ப்பால்** பெ. (n.) *குழந்தைக்குத் தாயினிடமிருந்து கிடைக்கும் முலைப்பால்;* milk getting from mothers breast to a child.

**தாய்ப்பாலூட்டல்** பெ. (n.) *தாய்முலையின் பாலைக் குழந்தைக்கு ஊட்டல்;* maternal nursing.

**தாய்மாமன்** பெ. (n.) *தாயுடன் பிறந்தவன்;* maternal uncle.

**தாய்மாமன்மகன்** பெ. (n.) *தாயுடன் பிறந்தவனின் புதல்வன்;* male son of a mother's brother.

**தாய்மாமன்மகள்** பெ. (n.) *தாயுடன் பிறந்தவனின் புதல்வி;* daughter of a mother's brother.

**தாய்மொழி** பெ. (n.) *பிறந்ததிலிருந்து முதலில் பழகும் மொழி;* mother tongue.

**தாய்வழி** பெ. (n.) *உறவு முறையில் தாயின் தொடர்பு;* maternal side or line.

**தாய்வாழை** பெ. (n.) *தார்விட்ட வாழை;* original plantain tree which has born fruit.

**தாய்வேர்** பெ. (n.) *ஆணிவேர்;* main root, taproot.

**தாயக்கட்டம்** பெ. (n.) *தாய விளையாட்டு ஆடுதற்குப் பயன்படும் சதுரக் கட்டம்;* squares for playing dice.

**தாயக்கட்டை** பெ. (n.) *சூதாட்டத்தில் உருட்டுங் கவறு;* dice.

**தாயகம்** பெ. (n.) *1. அடைக்கலம்;* support, shelter, place of refuge. *2. பிறந்தகம்;* birth place.

**தாயமாடுதல்** வி. (v.) *1. கவறாடுதல்;* to play dice. *2. கட்டமாடுதல்;* to play the child's game of tayam.

**தாயார்** பெ. (n.) *அன்னை;* mother.

**தார்** பெ. (n.) *1. மாலை;* garland, wreath, chaplet. *2. பூ;* flower, blossom.

**தாரம்** பெ. (n.) *மனைவி;* wife.

**தாராளக்காரன்** பெ. (n.) *கொடையாளி;* liberal, free handed person.

**தாராளம்** பெ. (n.) *மிகை ஈகைத்தன்மை;* generosity, magnanimity.

**தாரைக்கால்** பெ. (n.) *செங்குத்தானதும், தாரைபோன்றதும், பிரம்பு போன்றது மான தூண்;* a kind of column.

**தாரைவார்த்தல்** வி. (v.) *தன் பொருளை எல்லாம் பிறருக்கு இல்லை என்று சொல்லாமல் கொடுத்தல்;* to lose, as property. *'அவன் தன் சொத்துக் களைத் தாரை வார்த்து விட்டான்'.*

**தால்** பெ. (n.) *1. நா;* tongue. *2. தாலாட்டு; குழந்தைகளுக்கான உறக்கப்பாட்டு;* songs to lull a child.

**தாலப்பருவம்** பெ. (n.) *பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் தலைவனைத் தாலாட்டும் பகுதி;* portion dealing with the cradle - songs of the hero, one of ten sections of pillai - t- tamil.

**தாலாட்டுதல்** வி. (v.) *குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு உறங்கச் செய்யப் பாடும் பாட்டு;* to rock a child in a cradle with lullabies.

**தாலி** பெ. (n.) *திருமணத்தின்போது மணமகள் கழுத்தில், மணமகன் மூன்று முடிச்சுப் போட்டு இணைக்கும் மஞ்சள் கயிற்றில் தொங்கும் பொன்னணி;* golden ornament tied in yellow thread tied in the neck of bride by bridegroom during solomnisation of marriage.

**தாலிக்கயிறு** பெ. (n.) *தாலிகோத்துள்ள கயிறு;* twisted thread on which is hung the tali.

**தாலிக்காரி** பெ. (n.) *திருமணமான பெண்;* married woman, as wearing a tali.

**தாலிக்கொடி** பெ. (n.) *தாலி கோப்பதற்கான பொற்கொடி;* braided gold string on which is hung the tali.

**தாலிகட்டுதல்** வி. (v.) *மணம்புரிதல்;* to marry, as tying tali.

**தாலிப்பெட்டி** பெ. (n.) *தாலி வைக்கும் பொன்னத்துப் பெட்டி;* the basket in which the wedding badge is kept.

**தாலிப்பொட்டு** பெ. (n.) *வட்டமாகச் செய்த தாலியுரு;* disc - shaped tali.

**தாலிப்பொருத்தம்** பெ. (n.) *திருமணப் பொருத்தங்களுள் ஒன்று;* a kaliyana-p-poruttam.

**தாலிபெருக்கிக்கட்டுகை** பெ. (n.) *1. திருமணக் காலத்தில் கட்டப்பட்ட தாலியுடன், மணிகளைக் கோக்கும் விழா;* stringing additional jewels on the tali after marriage. *2. தாலியைப் பழைய நூலிலிருந்து வேறொரு கயிற்றில் கோக்கை;* renewing the tali thread.

**தாலிபெருகுதல்** பெ. (n.) *தாலி பிரிந்திருக்கை (மங்கல வழக்கு);* breaking of the *tali-c-caradu*, a euphemistic expression.

**தாலிமணிவடம்** பெ. (n.) *1. தாலியோடு மணிகள் சேர்ந்த தாலிக்கொடி;* string of beads to which the *tali* is attached. *2. மணிகள் வைத்திழைக்கப்பட்ட மங்கல மாலை;* garland made of gems.

**தாலியறுத்தல்** வி. (v.) *கைம்பெண்ணாதல் (விதவையாதல்);* to become a widow, as having the tali taken off.

**தாலியுரு** பெ. (n.) *1. தாலியோடு கோக்கப்படும் பலவகை உருக்கள்;* beads of different forms attached to the tali. *2. தாலியுள்ள வடம்;* necklace containing the tali.

**தாலிவாங்குதல்** வி. (v.) *கணவன் இறந்தபின் மனைவியின் தாலியை நீக்குதல்;* to remove the tali of a woman on the death of her husband.

**தாவணி** பெ. (n.) *1. மாட்டுச்சந்தை;* cattle - fair. *2. மாட்டைக் கூட்டமாகக் கட்டுமிடம்;* cattle - shed. *3. சிறு பெண்கள் சட்டைமேல் அணியும் மேலாடை;* a piece of cloth worn generally by girls over their petticoats.

**தாவல்** பெ. (n.) *1. தாண்டுகை;* leaping, crossing. *2. பரப்பு;* wideness, expanse. *3. தாவுதல்;* spreading as creepers climbing over adjacent plant.

**தாவழக்கட்டு** பெ. (n.) *கால்நடைகளின் கழுத்தையும் முன்காலையும் பிணிக்குங் கயிறு;* rope for tying the neck of cattle to the foreleg.

**தாவிப்பேசுதல்** பெ. (n.) *சினம் முதலியவற்றால் தடுமாற்றத்துடன் பேசுதல்;* to speak in an incoherent manner, as in wrath.

**தாழ்** பெ. (n.) *1. தாழக்கோல்;* bolt, bar, latch. *2. சுவர்ப்புறத்து நீண்ட தாங்குங்கல்;* blocks in a wall to support beams.

**தாழ்குழல்** பெ. (n.) *தாழ்ந்த கூந்தலையுடைய பெண்;* woman, as having flowing locks.

**தாழ்சீலை** பெ. (n.) *நீர்ச்சீலை, (கோவணம்);* covering for the privities.

**தாழ்த்தப்பட்ட இனம்** பெ. (n.) *கல்விக்கும், பொருளியல் முன்னேற்றத்துக்கும் உரிமை தருவதற்காக அரசால் அறிவிக்கப்பட்ட இனம்;* communities identified by the government as needing special attention because of their economic and social backwardness.

**தாழ்த்திப்புடைத்தல்** வி. (v.) *முறத்தில் தவசத்தைக் கொழிக்கையில், தவசத்தை மேலெறிந்து முறத்தைத் தாழ்த்தி வாங்குதல்;* to receive the

winnowing grains by keeping the fan in a lower candition while winnowing.

**தாழ்த்துதல்** வி. (v.) *தாழச்செய்தல்;* to bring low, lower, let down, deepen.

**தாழ்தல்** வி. (v.) *1. கீழே தாழ்தல்;* to fall low; to be lowered, as a balance. *2. காலம் தாழ்த்தல்;* to delay, to be behind hand indolent. *3. வணங்குதல்;* to bow, to worship.

**தாழ்ந்தகுணம்** பெ. (n.) *1. இழிதகைமை;* base character. *2. அமைதி;* calm temper, modesty.

**தாழ்ந்தநிலம்** பெ. (n.) *1. பள்ளமான நிலம்;* low land. *2. உரமில்லா நிலம்; வளமில்லா நிலம்;* soil of poor quality.

**தாழ்ப்பாள்கட்டை** பெ. (n.) *1. கதவைச் செறிக்கும் சிறு மரக்கட்டை;* small wooden bold. *2. கதவை மூடப் பயன்படுத்தும் குறுக்கு மரம்;* bar of wood placed across a door, cross bar.

**தாழ்ப்பாள்** பெ. (n.) *கதவு செறிக்குந் தாழ்;* bolt, bar, latch.

**தாழ்மை** பெ. (n.) *1. பணிவு;* humility. *2. கீழ்மை;* inferiority, as in rank; lowliness of mind.

**தாழ்வாரம்** பெ. (n.) *1. சரிவான கூரை;* sloping roof. *2. வீட்டைச்சாரப் புறத்தே சாய்வாக இறக்கப்பட்ட இடம்;* leanto, pent house.

**தாழ்வுகூரை** பெ. (n.) *சாய்வான கூரை;* sloping roof.

**தாழ்வுணர்ச்சி** பெ. (n.) *மற்றவர்களை விடத் தான் தாழ்ந்தவன் என்ற எண்ணம்; தன்னைப் பற்றிய குறைந்த மதிப்பு;* inferiority complex.

**தாழக்கோல்** பெ. (n.) *1. தாழ்ப்பாள்;* bar, bolt. *2. திறவுகோல்;* key.

**தாழம்பூ** பெ. (n.) *1. தாழையின் மலர்;* screw - pine flower. *2. தாழம்பூ மடல் வடிவமாகச் செய்யப்பட்ட மகளிர் தலையணி;* woman's hair ornament in the shape of the bract of the screw - pine.

**தாழி** பெ. (n.) *1. வாயகன்ற சட்டி;* large pan, pot or vessal with a wide mouth. *2. இறந்தோரை அடக்கஞ் செய்து வைக்கும் மட்பாண்டம்;* burial urn.

**தாழிப்பானை** பெ. (n.) *வாயகன்ற பெரிய பானை;* large mouthed earthen pot.

**தாழிவிளக்கு** பெ. (n.) *குடவிளக்கு;* a kind of lamp; light.

**தாள்** பெ. (n.) *1. கால்;* foot. *2. மர முதலியவற்றின் அடிப்பகுதி;* foot of a tree or mountain. *3. ஒற்றைத்தாள் (காகிதம்);* sheet of paper.

**தாள்பிடிப்பு** பெ. (n.) *1. முழங்கால் பிடிப்பு;* contraction of the muscles of the leg. *2. தாடைப் பிடிப்பு;* lock jaw.

**தாள்மடங்கல்** பெ. (n.) *சம்பா அறுவடை முடிவு;* close of the wet crop harvest.

**தாளடி** பெ. (n.) *1. கதிர்த்தாள்;* stubble. *2. களத்திற் கதிரை இரண்டாமுறை அடிக்கை;* second beat of sheaves in threshing.

**தாளடிநடவு** பெ. (n.) *முதற்போகம் அறுவடையானதும் வயலை உழுது நடுகை;* cultivation after ploughing the stubble of the first crop.

**தாளம்** பெ. (n.) *கைத்தாளக் கருவி;* a small cymbal for keeping time in music.

**தாளம்போடுதல்** பெ. (n.) *1. தாள மடித்தல்;* to keep time, as with the hands or cymbals. *2. வறுமையால் துன்புறுதல்;* to suffer from want. *3. எதைக் கூறினாலும் சரியென்று கூறும் தன்மை;* accept talk to whatever his master told.

**தாளம்மை** பெ. (n.) *பொன்னுக்கு வீங்கி;* mumps.

**தாளவாத்தியம்** பெ. (n.) *கை, குச்சி முதலியவற்றால் தட்டி வாசிக்கும் தோல் கருவி;* percussion instrument.

**தாளித்தநெய்** பெ. (n.) *நெடுங்காலம் இருத்தற்கு வேண்டிக் காய்ச்சி வைத் திருக்கும் நெய்;* ghee mixed with spices and boiled with a view to preserve it.

**தாளித்தல்** வி. (v.) *கடுகு , உளுத்தம் பருப்பு முதலியவற்றை நெய்யில் வறுத்துக் குழம்பு முதலியவற்றிற்கு நறுமண முண்டாக இடுதல்;* to season and flavour curry, etc, with spices fried in ghee or oil.

**தாற்றுக்கோல்** பெ. (n.) *1. மாடுகளை வேகப்படுத்தும் இரும்பு முட்கோல்;* ox goad. *2. யானைத் துறட்டி (அங்குசம்);* elephant goad.

**தாறு** பெ. (n.) *1. வாழை முதலியவற்றின் குலை;* bunch, cluster, as of plantains, dates areca - nuts. *2. உண்டை நூல் சுற்றுங்கருவி;* weaver's bobbin, reel.

**தாறுமாறாய்ப்பேசுதல்** வி. (v.) *முன்பின் மாறுபடப் பேசுதல்;* to speak incoherently or inconsistently.

**தான்தோன்றி** பெ. (n.) *தானாகத் தோன்றியது;* that which is self - existent.

**தான்தோன்றித்தனம்** பெ. (n.) *தன் விருப்பம் போல் செயல்படுகை;* free-wheeling.

**தானி** பெ. (n.) *மூன்று சக்கரங்களை யுடையதும் எந்திரப் பொறியா லியங்குவதுமான பயணிகள் ஊர்தி;* auto riksha.

**தானியங்கி** பெ.அ. (adj.) *மாந்தனால் தொடர்ந்து இயக்கப்படாமல் தானாக இயங்கக் கூடிய;* automatic.

**தானை** பெ. (n.) *படை;* army.

# தி

**திக்குதல்** வி. (v.) *1. சொற்கள் தடைபடத் தெற்றிப் பேசுதல்;* to stutter, stammer. *2. சொல் குழறுதல்;* to error hesitate as in recitation reading etc.,

**திக்குத்திக்கெனல்** பெ. (n.) *1. அச்சத்தால் நெஞ்சடித்தற் குறிப்பு;* onom expr. of throbbing or beating of the heart through fear. *2. எதிர்பார்ப்பில் நெஞ்சடித்தற் குறிப்பு;* onom, expr. of throbbing or beating of the heart through anxiety.

**திக்குப்பேச்சு** பெ. (n.) *தெற்றிப்பேசும் பேச்சு;* stammering speech, stuttur.

**திக்குமுக்காடுதல்** வி. (v.) *1. மூச்சுவிட முடியாமல் முட்டுப்படுதல்;* to be choked, smothered, strangled. *2. மகிழ்ச்சியில் ஏற்படும் திளைப்பு;* happiness.

**திக்குவாய்** பெ. (n.) *திக்கிப்பேசும் முறை;* stammering.

**திக்குவாயன்** பெ. (n.) *தெற்றிப் பேசுபவன்;* stammerer, stutturer.

**திக்கென்றது** பெ.எ. (part.) *திடீரென உண்டாகும் அச்சம்;* get a fright.

**திகிரிக்கல்** பெ. (n.) *ஆட்டுக்கல்;* grinding stone, rubbing stone.

**திகில்** பெ. (n.) *1. அச்சம்;* fright. *2. திடீர் அச்சம்;* sudden fear.

**திகிலெனல்** பெ. (n.) *திடுக்கிடுதற் குறிப்பு;* expr. signifying unexpected terror.

**திகைத்தல்** வி. (v.) *நிலை மறத்தல்; (அசத்தல் (பிரமித்தல்) மயங்குதல்;* to be astonished, amazed.

**திங்கள்** பெ. (n.) *1. மதி;* moon. *2. மாதம்;* month, lunar month.

**திசைக்கல்** பெ. (n.) *எல்லைக்கல்;* boundary stone.

**திசைதப்புதல்** வி. (v.) *வழி தவறுதல்;* to miss the road, lose one's way, as a vessel.

**திசைமானி** பெ. (n.) *எப்போதும் வடக்குத் திசையையே காட்டும் முள்ளை உடைய கருவி;* compass.

**திசையறிகருவி** பெ. (n.) *திக்குகளைக் காட்டுங் கருவி;* mariner's compass.

**திசையறிபுகைக்கூண்டு** பெ. (n.) *காற்று வீசும் திசையையும் விசையையும் கண்டறிவதற்காக மேலே பறக்க விடப்படும் சிறுபுகைக்கூண்டு;* pilot balloon.

**திசைவேகம்** பெ. (n.) *கடக்கும் தொலைவை நேரத்தால் வகுத்து ஒரு நொடிக்கு அல்லது ஒரு நிமையத்துக்கு இவ்வளவு அடி என்று கூறுதல்;ஒரு பொருள் செல்லும் நேரக் கூறுபாடு;* measurement of speed.

**திட்டக்குழு** பெ. (n.) *அரசு மேற்கொள்ள வேண்டிய குமுகப் பொருளியல் வளர்ச்சித் திட்டங்களை வகுத்துக் கொடுக்கக் கூடிய வல்லுநர்கள் அடங்கிய குழு;* a body of experts to advise the government in developmental policies and schemes, planning commission.

**திட்டமிடுதல்** வி. (v.) *ஒரு செயலுக்கு முன்னேற்பாடு செய்தல்;* consider and arrange before hand.

**திட்டிவாசல்** பெ. (n.) *1. பெரிய கதவுகளை மூடிய பின் உட்செல்லுதற்கு அமைக் கப்படும் சிறிய நுழைவாயில்;* wicket, small door or gate in the campass of a larger one. *2. சல்லிக்கட்டில் காளைகளை அவிழ்த்துவிடும் வழி;* wicket gate.

**திட்டு** பெ. (n.) *1. மேட்டு நிலம்;* rising ground, bank, elevation. *2. சிறுகுன்று;* hillrock. *3. வசை;* reviling, scolding, vulgar abuse.

**திட்டுதல்** பெ. (n.) *1. பழித்தல்;* to abuse, revile. *2. இகழ்தல்;* to curse, utter imprecations.

**திட்டுக்கேள்தல்** வி. (v.) *பிறரால் பழிக்கப்படுதல்;* to be abused, cursed.

**திட்டையுரல்** பெ. (n.) *அடியாழமற்ற உரல்;* shallow mortar.

**திடஉணவு** பெ. (n.) *நீர்மமாக இல்லாமல் மென்று சாப்பிடக் கூடியதாக இருக்கும் இட்டலி, சோறு போன்ற உணவு;* solid food.

**திடஉராய்வு** பெ. (n.) *ஒரு திடப்பொருள் மற்றொரு திடப்பொருளின் மேலே குறுக்காக நகரும்போது உண்டாகும் உராய்வு;* solid friction.

**திடங்கொள்ளுதல்** வி. (v.) *உள்ளுரமடைதல்;* bravery.

**திடச்சான்று** பெ. (n.) *உண்மை கூறும் சான்று;* positive testimony.

**திடச்செய்தி** பெ. (n.) *உண்மையான செய்தி;* certain information, true information.

**திடசாலி** பெ. (n.) *உடல் வலிமை உள்ளவன்;* strong well built person.

**திடஞ்சொல்(லு)தல்** வி. (v.) *உறுதி சொல்லுதல், தேற்றப்படுத்தல்;* acto of encouraging.

**திடப்படுத்துதல்** வி. (v.) *1. வலுப் படுத்துதல்;* to invigorate, strengthen. *2. உறுதிப்படுத்துதல்;* to rectify, sanction, corroborate.

**திடப்பொருள்** பெ. (n.) *கெட்டியான பொருள்;* body (or) substance which is solid, not a liquid or gas.

**திடம்** பெ. (n.) *1. வலிமை;* strength, vigour, power. *2. மன உறுதி;* firmness. *3. மனத் துணிவு;* courage, boldness, intrepidity.

**திடமனம்** பெ. (n.) *1. உறுதியான மனம்;* firm mind. *2. அலைபாயாத மனம்;* unagitated mind, unweaving mind.

**திடல்** பெ. (n.) *வெளியிடம்;* openspace.

**திடீரெனல்** பெ. (n.) *1. விரைவு எதிர் பாராத நிலை இவற்றை உணர்த்தற் குறிப்பு;* expr. signifying suddeness, unexpectedness. *2. பொருள் விழும் போது உண்டாகும் ஒலிக் குறிப்பு;*

onom, expr. signifying sound of falling, etc.,

**திடுக்கிடுதல்** வி. (v.) *அச்சமுறுதல்;* to be startled, alarmed, frightened.

**திண்டாடுதல்** வி. (v.) *1. அலைக்கழிதல்;* to wander about restlessly. *2. மனங் கலங்கித் தடுமாறுதல்;* to suffer trouble, mental agony.

**திண்டுமுண்டாடுதல்** வி. (v.) *1. மூச்சுக் கட்டுதல்;* to be choked, stifled, strangled. *2. துன்பத்திற்கு உள்ளாதல்;* to be in great distress; to be caught in inextricable difficulties.

**திண்ணை** பெ. (n.) *வீட்டின் முன்புற வாசலருகே உட்காருவதற்கான மேடைக் கட்டுமானம்;* pial.

**திண்ணைப் பள்ளிக்கூடம்** பெ. (n.) *வீட்டின் முன்பகுதியாகிய திண்ணையில் நடத்தும் பள்ளிக்கூடம்;* pial school.

**திண்மை** பெ. (n.) *1. வலிமை;* strength, power, robustnes. *2. உறுதி;* hardness, compactness, firmness.

**திணறுதல்** வி. (v.) *மூச்சுத் தடுமாறுதல்;* to be choked, stifled, saffocated.

**திணித்தல்** வி. (v.) *செறிய உட்புகுத்துதல்;* to cram, stuff.

**திணை** பெ. (n.) *தமிழ் நூல்களிற் கூறப்படும் அகமும் புறமுமாகிய ஒழுக்கம்;* convetional rules of conduct laid down in the Tamil works, of two classes, *viz.aka-t-tinai* and *pura-t-tinai,*

**தித்திப்பு** பெ. (n.) *1. இனிப்பு;* sweetness. *2. இனிப்புள்ள பண்டம்;* any sweet eatable.

**தித்திப்புக்கொடிமுந்திரி** பெ. (n.) *இனிப்புக் கொடி முந்திரி;* sweet grapes as opposed sour grapes.

**தித்திப்புப்பண்டம்** பெ. (n.) *1. இனிப் புணவுப் பொருள்;* sweet meat. *2. தித்திப்புப் பண்ணியம்;* confection. *3. சக்கரைப் பாகில் போட்டெடுத்த பண்டம்;* that which is preserved by means of sugar or syrup.

**தித்திப்புப்புளி** பெ. (n.) *இனிப்புப் புளியம்பழம்;* tamarind that is sweet.

**தித்திப்புமா** பெ. (n.) *இனிப்பு மாங்காய்;* graft mango.

**தித்திப்பெலுமிச்சை** பெ. (n.) *எலுமிச்சை வகை;* sweet lime.

**தித்திப்புமுந்திரி** பெ. (n.) *இனிப்புக் கொட்டை முந்திரிகை;* sweet grapes with seeds.

**திமிதிமியெனல்** பெ. (n.) *கூட்டத்தொலிக் குறிப்பு;* bustle of agreat crowed.

**திமிர்ப்பிடித்தல்** வி. (v.) *1. கொழுத்தல்;* to become corpulent, as the body. *2. செருக்குறுதல்;* to become haughty.

**திமிர்விடுதல்** வி. (v.) *சோம்பல் முறித்தல்;* to stretch and yawn from sleepiness.

**திமிராயிருத்தல்** வி. (v.) *உணர்ச்சியற்று இருத்தல்;* being deprived of feeling or affected with palsy.

**திமிறியடித்தல்** வி. (v.) *1. ஒருவனின் பிடிப்பினின்றும் விடுவித்துக் கொள் ளுதல்;* to wrench oneself from another's grip. *2. குளிர்காற்றால் நடுக்கமிகுதல்;* to be violent as the quaking due to ague.

**திமிறுதல்** வி. (v.) *வலிந்து தன்னைப் பிறரிடமிருந்து விடுவித்தல்;* to wriggle out of another's grip.

**திரட்சி** பெ. (n.) *சதைப்பற்று உருண்டு திரண்டிருக்கும் வடிவம்;* globularity, rotundity.

**திரட்டுதல்** வி. (v.) *ஒன்று கூட்டுதல்; ஒன்றாகச் சேர்த்தல்;* to collect, as taxes; to bring together, muster, gather as men, troops.

**திரட்டுப்பால்** பெ. (n.) *சக்கரையிட்டு இறுகக் காய்ச்சின பால்;* milk thickened by boiling with sugar.

**திரண்டகல்** பெ. (n.) *1. உருளைக்கல்;* cylindrical stone-roller. *2. குண்டுக்கல்;* globular stone.

**திரண்டகழுத்து** பெ. (n.) *உருண்டையாகவும் அழகாகவுமுள்ள கழுத்து;* round beautiful heck.

**திரண்டகூட்டம்** பெ. (n.) *மக்கள் கூட்டம்;* crowd of people.

**திரண்டபெண்** பெ. (n.) *பருவமடைந்தவள்;* matured girl.

**திரண்டமுகம்** பெ. (n.) *உருண்டையான முகம்;* round face.

**திரண்டவடிவு** பெ. (n.) *உருண்டை வடிவு;* round shape or figure.

**திரண்டவீக்கம்** பெ. (n.) *ஒரு பக்கத்திற் காணும் வீக்கம்;* swelling in one part of the body.

**திரணை** பெ. (n.) *வைக்கோற் புரிக் கற்றை;* load on a bullock's back.

**திரள்** பெ. (n.) *1. உருண்டை;* ball, round mass, globe. *2. கூட்டம்;* crowed, assembly, multitude, flock, herd, shoal, aggregation. *3. குலை;* cluster, clump, tuft. *4. படை;* army.

**திரளுதல்** பெ. (n.) *1. உருட்சியாதல்;* ball, round mass, globe. *2. பூப்பெய்தல்;* attaining puberty.

**திரளை** பெ. (n.) *நூலின் உருண்டை;* skein of thread.

**திராணி** பெ. (n.) *வலிமை;* strength.

**திரி** பெ. (n.) *1. விளக்குத்திரி;* roll or twist of cloth or thread for a wick. *2. தீப்பந்தம்;* torch of twisted cloth. *3. வெடிக் குழாயின் திரி;* fuse. *4. மெழுகுத்திரி;* candle.

**திரிக்குழாய்** பெ. (n.) *தீப்பந்தத்திற்கு எண்ணெய் வார்க்குங் கருவி;* oil can with a long narrow spout for feeding a torch.

**திரிகல்** பெ. (n.) *எந்திரம்;* handmill.

**திரிகை** பெ. (n.) *குயவன் சக்கரம்;* potter's wheel.

**திரித்தல்[1]** வி. (v.) *1. துணியைக் கயிறு போல் உருட்டல்;* rolling up a piece of cloth - linen in the shape of a wick. *2. ஒரு செய்தியை இட்டுக்கட்டிக் கூறுதல்;* concoct.

**திரித்தல்[2]** வி. (v.) *1. சுழற்றுதல்;* to turn, whirl. *2. முறுக்குதல்;* twist. *3. மாவரைத்தல்;* to grind as flour.

**திரிதல்** வி. (v.) *அலைதல்;* to walk about, wander.

**திரிமணை** பெ. (n.) *புரிமணை;* plaited ring of straw or fibre for setting a pot on.

**திரியூசி** பெ. (n.) *அறுவை மருத்துவம் செய்யும்போது பயன்படுத்தும் ஊசி;* needle used at the time of surgery.

**திரியெடுத்தாடுதல்** வி. (v.) *திருவிழாக் காலங்களில் நேர்த்திக் கடன் பொருட்டுத் தீப்பந்தம் பிடித் தாடுதல்;* to dance with a burning torch on festive occasion in fulfilment of a vow.

**திரில்** பெ. (n.) *குயவன் சக்கரம்;* potter's wheel.

**திருகாணி** பெ. (n.) *பெண்கள் காதிலும் மூக்கிலும் அணியும் அணி வகைகளை இணைக்கும் நுண் துளைக் கருவி;* small ornament like a tack, worn by girls and women in the upper helix of the ear or in the nostril.

**திருகுகம்மல்** பெ. (n.) *மகளிரணியும் திருகோடு கூடிய காதணி வகை;* a kind of ear - ornament for women fastened with a screw.

**திருகுகொம்பு** பெ. (n.) *விலங்கின் முறுக் குண்ட கொம்பு;* twisted or crumpled horn.

**திருகுகோல்** பெ. (n.) *வண்டிச் சக்கர இருசினைத் தூக்குவதற்கான திருகு நிலை உதைகோலமைவுப் பொறி;* screw jack.

**திருகுசக்கரம்** பெ. (n.) *குயவன் பானை வனையப் பயன்படும் சக்கரம்;* a whirling table machine exhibiting the effect of centripetal and centrifugal forces used by potters.

**திருகுப்பூ** பெ. (n.) *செவ்வந்தி வடிவிலான மகளிர் தலையணி வகை;* girl's hair - ornament in the shape of a dry chamomile.

**திருகுமணை** பெ. (n.) *தேங்காய் துருவும் மணை;* coconut - scraper.

**திருகுமரை** பெ. (n.) *1. திருகாணி;* screw, as in ornaments. *3. திருகாணியின் தலை;* nut for securing bolt.

**திருகுவட்டம்** பெ. (n.) *நூல் சுற்றுங் கருவி வகை;* small wedge shaped reel with a handle for winding yarn.

**திருகுளி** பெ. (n.) *1. உளிவகை;* carpenter's plane. *2. திருப்புளி;* turnscrew, screw driver.

**திருச்சுற்றுமாளிகை** பெ. (n.) *கோயில் திருச்சுற்று மதிலின் உட்புறம் தொடர்ந்தாற் போல் கட்டப்பெறும் நெடு மண்டபம்;* porches surrounding the inner shrine of a temple; mandabam enclosing a temple.

**திருட்டு** பெ. (n.) *தனக்குச் சொந்தம் இல்லாத ஒன்றை உரியோர் அறியாத படி எடுக்கும் முறையற்ற செய்கை; களவு;* theft, robbery.

**திருட்டுத்தனம்** பெ. (n.) *1. கள்ளம்;* thieving, stealthiness. *2. நேர்மையின்மை;* dishonesty.

**திருட்டுப்பிள்ளை** பெ. (n.) *கூடாவொழுக்கத்தால் பிறந்த பிள்ளை;* natural child.

**திருட்டுப்போதல்** வி. (v.) *களவுபோதல்;* to be stolen.

**திருட்டுவழி** பெ. (n.) *கள்ளவழி;* secret or falseway.

**திருட்டுவாசல்** பெ. (n.) *கமுக்க வழி;* sally port, secret gate.

**திருடன்** பெ. (n.) *திருட்டுத்தொழில் செய்பவன்;கள்வன்;* male thief.

**திருடி** பெ. (n.) *திருடுபவள்;* female thief.

**திருடுதல்** வி. (v.) *களவாடுதல்;* to steal, rob, pilfor.

**திருத்தம்** பெ. (n.) *1. எழுதப்பட்டவற்றில் அல்லது அச்சிடப்பட்டவற்றில் உள்ள தவறுகளை நீக்கி ஒழுங்குபடுத்தித் தரும் முறை, பிழை திருத்துகை;* correction. *2. கட்டடம் முதலியவற்றைச் செப்பம் செய்கை;* repair; improvement as of a building. *3. சட்டம் தீர்மானம் முதலியவற்றில் செய்யப் படும் மாற்றம்;* amendment, as of law.

**திருத்தல்** பெ. (n.) *திருத்தம்;* correction, as of writing.

**திருத்தற்குறிப்பு** பெ. (n.) *திருத்தங்கள் கொண்ட குறிப்பு;* memo or note of corrections.

**திருத்துதல்** வி. (v.) *பேச்சு, எழுத்து ஆகியவற்றில் உள்ள தவறுகளை நீக்கிச் சரி செய்தல், செவ்விய தாக்குதல்;* to correct, rectify, reform.

**திருநீறு** பெ. (n.) *தெய்வத் தன்மை கொண்ட சாம்பல்;* sacred ashes, used for saivaite mark.

**திருப்பட்டம்** பெ. (n.) *நெற்றியில் அணிவிக்கும் பொற்பட்டை. இதனை வீரபட்டம் என்றும் கூறுவர்;* thin plate of metal (gold) worn on the forehead, as an ornamental badge of distinction.

**திருப்படி** பெ. (n.) *கோயிலின் வாயிற்படி;* step at the entrance of a temple.

**திருப்பணி** பெ. (n.) *1. கோயிற்பணி;* service in a temple. *2. கோயில்*

கட்டுதல், புதுப்பித்தல்களாகிய வேலை; work of a temple building, repairing, etc.,

**திருப்பம்** பெ. (n.) *திரும்புகை;* turning, averting.

**திருப்புதல்** வி. (v.) *1. திரும்பச் செய்தல்;* to cause to return to send back. *2. இருக்கும் அல்லது செல்லும் திசையிலிருந்து மாற்றுதல்;* to turn, deflect, cause to turn in a different direction.

**திருப்புமுனை** பெ. (n.) *குறிப்பிடத் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்துவது;* turning point.

**திரும்பத்திரும்ப** பெ. (n.) *அடிக்கடி; மறுபடியும்;* again and again, often, times.

**திரும்புதல்** வி. (v.) *புறப்பட்ட இடத்திற்கோ பழைய நிலைக்கோ வருதல் அல்லது மீளுதல்;* to turn, turn back, return.

**திருமடைப்பள்ளி** பெ. (n.) *கோயில் சமையலறை;* temple kitchen.

**திருமணம்** பெ. (n.) *ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாகும் நிகழ்ச்சி அல்லது சடங்கு செய்யும் விழா;* marriage.

**திருமுளைப்பாலிகை** பெ. (n.) *1. மணவிழா முதலிய சிறப்பு நாள்களில் தவசங்களை முளை விட்டு வளர்க்கப் பெறும் மண்பாலிகை;* pots of sprouting seeds kept on important occasions like marriage. *2. மழை வேண்டி சிற்றூர் தெய்வங்களுக்குப் பாலிகையிட்டு வழிபடல்;* on the worship of village God the ritual of immersing pot containing seeds.

**திருவாக்கு** பெ. (n.) *தெய்வம் மற்றும் பெரியோர்களின் வாய்மொழி;* sacred word, utterance or order, as of a deity, guru, king.

**திருவிழா** பெ. (n.) *கோயிலில் நிகழ்த்தும் விழா;* festival in a temple.

**திருவிளக்கு** பெ. (n.) *1. கோயில் திரு விளக்கு;* light burnt in the presence of a deity. *2. மங்கல விளக்கு;* lighted lamp in a house, regarded as auspicious.

**திருவிளையாடல்** பெ. (n.) *தெய்வ விளையாட்டு;* sacred sports of a deity.

**திருவுள்ளம்** பெ. (n.) *அரசன், குரு முதலிய பெரியோரது உள்ளக் கருத்து;* will or pleasure of God, King, Guru or other great person.

**திருவுளச்சீட்டு** பெ. (n.) *குலுக்கிப் போட்டெடுத்தல் முதலிய வகையால் தெய்வச் சித்தமறியுஞ் சீட்டு;* lot cost or drawn, believed to the disclose the divine will.

**திருவுளச்செயல்** பெ. (n.) *தெய்வச்செயல்;* God's will, providence, providential occurrence.

**திருவோடு** பெ. (n.) *இரந்துண்பார் கலம்;* shell of coco-de-mer, used as begging bowl by religious mendicants.

**திருவோலை** பெ. (n.) *திருமுகம்;* royal letter.

**திரை** பெ. (n.) *1. உடற்றோலின் சுருங்கல்;* wrinkle, as in the skin through age. *2. திரைச்சீலை;* curtain, as rolled up.

**திரையரங்கம்** பெ. (n.) *திரைப்படக் காட்சிகள் நடத்துதற்கேற்ற இடம்;* theatre.

**திரையுறி** பெ. (n.) *1. பெரிய உறி;* net work of rope for keeping big pots suspended. *2. பின்னல் உறி;* plaited network of rope.

**திரைவிழுதல்** பெ. (n.) *தோல் சுருக்கும் விழுதல்;* to become wrinkled, as skin by age.

**தில்லுமுல்லு** பெ. (n.) *பொய் புரட்டு;* deceit, trick, deceiful words, ties.

**திலகம்** பெ. (n.) *நெற்றிப்பொட்டு;* tilakam, a small circular mark on forehead.

**திறந்தமனம்** பெ. (n.) *வெளிப்படையான மனம்;* open heart.

**திறந்தவெளி** பெ. (n.) *வெளியான இடம்;* open place, plain.

**திறந்தவெளிப் பல்கலைக்கழகம்** பெ. (n.) *முழு நேர உயர் கல்வி நிறுவனங்களில் சேர்ந்து படிக்கத் தேவையான முன் தகுதிகள், அகவை வரம்பு போன்றவை தளர்த்தப்பட்டு, உயர்கல்வி பெற உதவும் கல்வி நிறுவனம்;* open university.

**திறந்தவெளிப் பள்ளி** பெ. (n.) *(ஒருவர்) வீட்டில் இருந்தபடியே பள்ளிக் கல்வியைக் கற்க வழி செய்யும் கல்வி முறை;* open education.

**திறந்துகாட்டுதல்** வி. (v.) *1. வெளிப் படையாக்குதல்;* to lay open, divulge, disclose fully, as one's mind. *2. தெளிவாக விளக்குதல்;* to explain fully, illustrate clearly.

**திறந்துபேசுதல்** வி. (v.) *மனம் விட்டுச் சொல்லுதல்;* to speak, frankly or openly.

**திறப்பு** பெ. (n.) *திறவுகோல் பார்க்க.*

**திறப்புவிழா** பெ. (n.) *(கடை, தொழிலகம் போன்றவற்றை) திறந்துவைப்பதற் கான நிகழ்ச்சி;* inauguration; opening ceremony (for a shop, etc.,)

**திறமை** பெ. (n.) *1. அறிவுத்திறம்;* ability, cleverness. *2. வலிமை;* strength, vigour, power.

**திறமைக்காரன்** பெ. (n.) *ஆற்றல் மிக்கோன்;* able man.

**திறமைசாலி** பெ. (n.) *ஆற்றல் பொருந் தியவன்;* able man.

**திறவு** பெ. (n.) *1. திறக்கை;* opening unveiling. *2. வாயில்;* gate-way. *3. வழி;* way.

**திறவுகோல்** பெ. (n.) *பூட்டைத் திறக்க உதவுங்கருவி;* key.

**திறனாய்வு** பெ. (n.) *(புத்தகங்கள், கட்டுரை போன்றவற்றின்) குறை நிறைகளை ஆராய்ந்து செய்யும் மதிப்பீடு;* evaluation.

**திறாணி** பெ. (n.) *திறமை, வலிமை;* ability.

**தின்னுதல்** வி. (v.) *1. உண்ணுதல்;* to eat, feed. *2. மெல்லுதல்;* to chew. *3. கடித்தல்;* to bite, gnash, as one's teeth.

**தின்பண்டம்** பெ. (n.) *1. உணவுப் பொருள்;* eatables. *2. பண்ணிகாரம்;* sweetmeat, confection.

**தின்றுபார்த்தல்** வி. (v.) *சுவைபார்த்தல்;* to taste.

**தினை** பெ. (n.) *1. சிறு தவச வகை;* Indian millet, cereal. *2. தினைவகை;* wild bermuda grass.

**தினைப்புனம்** பெ. (n.) *தினைவிளையும் புலம்;* millet field.

**தினைப்பொரி** பெ. (n.) *தினையை வறுத்த பொறி;* parched millet.

**தினையரிசி** பெ. (n.) *தினையின் அரிசி;* husket millet.

**தினையளவு** பெ. (n.) *மிகச்சிறிய அளவு;* very small quantity, as much as a grain of millet.

# தீ

**தீ** பெ. (n.) *1. நெருப்பு;* fire. *2. வேள்வித்தீ;* sacrificial.

**தீக்கட்டை** பெ. (n.) *எரிகட்டை;* fire wood.

**தீக்கடவுள்** பெ. (n.) *நெருப்புக்கடவுள்;* fire God.

**தீக்கடைதல்** வி. (v.) *கடைந்து நெருப்பு உண்டாக்குவது;* to produce fire by fire drill.

**தீக்கண்** பெ. (n.) *சினம் கொண்ட கண்;* fire - eye.

**தீக்கரண்டி** பெ. (n.) *தீயெடுக்குங் கருவி;* small ladle for taking the charcoal.

**தீக்காய்தல்** வி. (v.) *குளிர்காய்தல்;* to warm oneself at the fire.

**தீக்காலம்** பெ. (n.) *கேடு விளைக்குங் காலம்;* evil times.

**தீக்காற்று** பெ. (n.) *நெருப்புக்காற்று;* scorching wind.

**தீக்குச்சி** பெ. (n.) *தேய்த்தால் தீயுண்டாக்கும் மருந்தை நுனியிற் கொண்ட குச்சி;* match stick.

**தீக்குண்டம்** பெ. (n.) *வேள்வித் தீ வளர்க்கும் குழி;* sacrificial pit.

**தீக்குளித்தல்** வி. (v.) *உடம்பில் தீயிட்டுக்கொள்ளுதல்;* to plunge into flames, as in an ordeal.

**தீக்கொள்ளி** பெ. (n.) *கொள்ளிக்கட்டை;* fire wood.

**தீங்கனி** பெ. (n.) *இனிய பழம்;* delicious fruit.

**தீங்கு** பெ. (n.) *தீமை;* evil, injury, harm; crime.

**தீச்சட்டி** பெ. (n.) *நேர்த்திக்கடனாக மாரியம்மனுக்கு எடுக்கும் தீச்சட்டி;* fire pet carried in fulfilment of a vow.

**தீஞ்சொல்** பெ. (n.) *இன்மொழி;* sweet words.

**தீட்டரிசி** பெ. (n.) *தவிடு நீக்கிய அரிசி;* cleansed, polished rice.

**தீட்டாதல்** வி. (v.) *1. தூய்மையின்மை அடைதல்;* to be defiled, polluted. *2. மாதவிடாயாதல்;* to be in one's periods, as a woman.

**தீட்டு** பெ. (n.) *மகப்பேறு, சாவு முதலியவற்றால் உண்டாவதாகக் கருதப்படும் கெடுதல்;* defilement, pollution, as from catanvin child birth, death of a relation.

**தீட்டுக்கழித்தல்** பெ. (n.) *இறப்பு, மாதவிடாய் பிள்ளைப்பேறு காலங்களில் ஏற்படும் தூய்மைக்கேட்டைத் தலை முழுக்கு, வீட்டைத் துப்புரவு படுத்துதல் முதலிய முறையால் தூய்மையாக்குதல்;* removing the pollution caused by child birth, death, puberty, etc., ceremonically by bathing, cleaning, etc.,

**தீட்டுக்காரி** பெ. (n.) *1. மாதவிடாய் கொண்டவள்;* a woman in her periods. *2. தொற்றுள்ளவள்;* a woman in pollution.

**தீட்டுப்பலகை** பெ. (n.) *கத்தி முதலியன தீட்டும் பலகை;* a board of plap for sharpening drive or other instruments.

**தீட்டுவீடு** பெ. (n.) *பிள்ளைப் பிறப்பால் அல்லது இறப்பால் தூய்மையிழந்த வருந்தந் தோய்ந்த வீடு;* house considered polluted from child birth - death.

**தீண்டுதல்** வி. (v.) *1. பாம்பு, நச்சுப்பூச்சி போன்றவை கடித்தல்;* of snakes, poisonous insects, etc., bite. *2. தொடுதல்;* to touch, feet, come in contact with.

**தீது** பெ. (n.) *1. தீமை;* evil, vice. *2. குற்றம்;* fault, blemish, defeat.

**தீநாற்றம்** பெ. (n.) *முடை நாற்றம்;* bad smell.

**தீப்பற்றுதல்** வி. (v.) *நெருப்புப் பற்றுதல்;* to catch fire, as a house.

**தீப்பாய்தல்** வி. (v.) *தீயிற்பாய்தல்;* to pluge into flarres, as a wife on the funeral pure of her husband.

**தீப்புண்** பெ. (n.) *தீயாற் சுட்ட புண்;* burn; scald.

**தீப்பெட்டி** பெ. (n.) *தீக்குச்சியடைத்த பெட்டி;* match box.

**தீப்பொறி** பெ. (n.) *அனற்பொறி;* spark of fire.

**தீப்போடுதல்** வி. (v.) *நெருப்பிற் சுடுதல்;* to burn.

**தீம்பண்டம்** பெ. (n.) *இனிய தின்பண்டம்;* sweets, eatables.

**தீம்புகை** பெ. (n.) *நறும்புகை;* sweet - smell.

**தீமிதி** பெ. (n.) *வேண்டுதலின் பொருட்டுத் தழல் பரப்பிய நெருப்புக் குழியில் நடக்கை;* walking on a fire-pit, performed in fulfilment of a vow.

**தீமூட்டு** பெ. (n.) *தீயை வளர்த்தல்;* lighting for the fire.

**தீமூட்டுதல்** வி. (v.) *1. தீயுண்டாக்குதல்;* to kindle fire. *2. கலகமூட்டுதல்;* to stir up a quarrel.

**தீமை** பெ. (n.) *1. தீய செயல்;* sinful deed. *2. குற்றம்;* fault, guilt.

**தீய்ந்துபோதல்** வி. (v.) *1. எரிந்துபோதல்;* to be burnt. *2. பயிர் முதலியன கருகுதல்;* to be withered or blighted, an growing crops in times of drought. *3. சோறு முதலியன காந்துதல்;* to be charred or burnt, as food in cooking.

**தீயணைப்பு நிலையம்** பெ. (n.) *தீயணைப்பு நிறுவனம்;* fire - station.

**தீயணைப்புவண்டி** பெ. (n.) *தீயணைப்புச் சீருந்து;* fire - van.

**தீயணைப்புவீரர்** பெ. (n.) *தீயணைப் பாளர்;* fire - man.

**தீயல்** பெ. (n.) *1. சமையலிற் கருகினது;* that which is burnt in cooking, or over - cooked. *2. பொரிக்கறி;* a thick dry curry.

**தீயவை** பெ. (n.) *1. தீச்செயல்;* evil deeds, sin. *2. துன்பம்;* tribulation, suffering.

**தீயோர்** பெ. (n.) *1. கொடியோர்;* wicked persons. *2. கீழ்மக்கள்;* vulgar persons.

**தீர்த்தல்** வி. (v.) *1. அழித்தல்;* to destroy. *2. கொல்லுதல்;* to kill. *3. இல்லாமல் செய்தல்;* exhaust.

**தீர்ப்பாணை** பெ. (n.) *வழக்கில் பிறப்பிக் கப்படும் தீர்ப்புக்குப் பிறகு தீர்ப்பின் சாற்றுப் பகுதி இரு தரப்பினருக்கும் உள்ள உரிமைகளையும் விளக்கும் உத்தரவு;* decree.

**தீர்ப்பு** பெ. (n.) *1. முடிவு;* completion, finality. *2. வழக்கின் தீர்ப்பு;* judgement, decree.

**தீர்மானம்** பெ. (n.) *1. இசையில் தாள முடிவு கொடுக்கை;* flourish of drum at the close of a talam. *2. மாநாடு, கருத்தரங்கின் இறுதியில் எடுக்கப் படும் முடிவுகள்;* conclusion, decision.

**தீர்மானித்தல்** வி. (v.) *1. உறுதிசெய்தல்;* to determine. *2. முடித்தல்;* finish, settle.

**தீர்வு** பெ. (n.) *1. முடிவு;* completion, finality. *2. நீக்குகை;* removal.

**தீர்வை** பெ. (n.) *கைம்மாறு;* expiation.

**தீராநோய்** பெ. (n.) *தீர்க்க இயலாத நோய்;* incurable disease.

**தீராவழக்கு** பெ. (n.) *எளிதில் முடிவுறாத வழக்கு;* intricate law suit, dispute which cannot be easily settled.

**தீவட்டி** பெ. (n.) *தீப்பந்தம்;* flamball; torch.

**தீவட்டிக்காரன்** பெ. (n.) *தீவட்டி பிடிப் போன்;* torch - bearer.

**தீவளர்த்தல்** வி. (v.) *நோன்புத் தீ வளர்த்தல்;* to tend the sacred fire.

**தீவனம்** பெ. (n.) *கால்நடைகளின் உணவு;* food for animals, foder, as straw for cattle.

**தீவினை** பெ. (n.) *1. கொடுஞ்செயல்;* sinful deed. *2. பாவம்;* sin.

**தீவு** பெ. (n.) *நான்கு பக்கமும் நீர் சூழ்ந்த நிலம்;* island.

**தீவேள்வி** பெ. (n.) *தீ சாட்சியாகச் செய்யும் திருமணம்;* wedding as accompanied with fire - rite.

# து

**துடித்தல்** வி. (v.) *1. படபடவெனச் சலித்தல்;* to quiver, tremble.

**துடிதுடித்தல்** வி. (v.) *1. மனம் பதைபதைத்தல்;* to be in a great flurry. *2. கடுகடுத்தல்;* to fret and fume.

**துடிப்பு** பெ. (n.) *நாடியடிக்கை;* palpitation.

**துடுக்கு** பெ. (n.) *1. குறும்புத்தனம்;* insolence, surliness. *2. சுறுசுறுப்பு;* activity, quickness. *3. குறும்புச்செயல்;* wicked act, mischief.

**துடுப்பு** பெ. (n.) *1. அகப்பை;* ladle. *2. படகுத்துடுப்பு;* oar.

**துடைத்தல்** வி. (v.) *துவட்டுதல்;* to dry by wiping, as wet hair.

**துடைப்பம்** பெ. (n.) *விளக்குமாறு;* broom, beson.

**துண்டித்தல்** வி. (v.) *1. வெட்டுதல்;* to cut, sever. *2. கிழித்தல்;* to tear up. *3. பிரித்தல்;* to divide, separate.

**துண்டு** பெ. (n.) *சிறுதுணி;* small piece of cloth; towel.

**துண்டுவிழுதல்** வி. (v.) *வேண்டிய அளவுக்குக் குறைபடுதல்;பற்றாக்குறை ஏற்படுதல்* to be deficient.

**துணி** பெ. (n.) *ஆடை;* cloth for wear.

**துணிக்காகிதம்** பெ. (n.) *துணி போன்று இருக்கத்தக்க முறையில் உருவாக்கப் பெற்ற தாள் அல்லது அட்டை;* linen finish, paper like cloth.

**துணிச்சல்** பெ. (n.) *1. துணிவு;* daring, boldness, self - confidence. *2. துடுக்கு;* venturesomeness, presumption, rashness, temerity.

**துணிதல்** வி. (v.) *துணிவுகொள்ளல்;* to dare, venture.

**துணிந்தவன்** பெ. (n.) *எதற்கும் அஞ்சாதவன்;* dare devil.

**துணிப்பந்தம்** பெ. (n.) *கிழிச்சீலையாலாகிய தீப்பந்தம்;* a torch made of rags.

**துணிவு** பெ. (n.) *1. மனத்திட்பம்;* strength of mind. *2. துணிச்சல்;* presumption, temerity, audacity. *3. உறுதி;* ascertainment, certainty. *4. தெளிந்த அறிவு;* determination, decision.

**துணை** பெ. (n.) *1. கூட்டு;* association, company. *2. உதவி;* help, assistance, aid, succor, support.

**துணைக்கருவி** பெ. (n.) *உதவிக்கருவி;* implement, tool, instrument.

**துணைக்கோள்** பெ. (n.) *ஒரு கோளைச் சுற்றிச் சுழலும் சார்புக்கோள்;* satellite.

**துணைநிலை ஆளுநர்** பெ. (n.) *(இந்தியாவில்) தனி மாநிலமாக இல்லாமல் நடுவண் அரசின் நேரடி நிருவாகத்தில் உள்ள பகுதிகளுக்கு அமர்த்தப்படும் ஆளுநர்;* lieutenant Governor (of Union Territories in India).

**துணைநூற்பட்டியல்** பெ. (n.) *(ஆய்வுக் கட்டுரை, புத்தகம் முதலியவை உருவாவதற்கு) உதவி புரிந்த நூல், கட்டுரை முதலியவற்றின் அகர வரிசைப்படுத்தப்பட்ட விவரத் தொகுப்பு;* bibliography.

**துணைமின்நிலையம்** பெ. (n.) *மின் நிலையத்திலிருந்து வரும் மின் சாரத்தைப் பெற்று பிற பகுதிகளுக்கு பகிர்ந்தளிக்கும் நிலையம்;* substation.

**துணைவன்** பெ. (n.) *1. கணவன்;* husband. *2. தோழன்;* friend.

**துணைவி** பெ. (n.) *1. மனைவி;* wife, as a helpmate. *2. உடன்பிறந்தாள்;* sister.

**துணைவேந்தர்** பெ. (n.) *(பல்கலைக் கழகத்தின்) நிருவாகப் பொறுப்*

பையும் கல்விப் பொறுப்பையும் ஏற்றுத் தலைவராகச் செயல்பட ஆளுநரால் அமர்த்தப்படுபவர்; vice - chancellor (of a university).

**துப்பறிதல்** வி. (v.) *உளவறிதல்;* to spy out, detect.

**துப்புக்கெட்டவள்** பெ. (n.) *திறனிலாள்;* inefficient woman.

**துப்புக்கெட்டவன்** பெ. (n.) *அறிவற்றவன்;* fool, stupid person.

**துப்புத்துருவிவிசாரித்தல்** வி. (v.) *1. உளவு கண்டுபிடித்தல்;* to spy, detect, trace. *2. தெளிவான புலனாய்வு செய்தல்;* to investigate, enquire closely.

**துப்புதல்** வி. (v.) *உமிழ்தல்;* to spit.

**தும்மல்** பெ. (n.) *தும்முகை;* sneezing.

**தும்முதல்** வி. (v.) *சளி முதலியவற்றால் மூச்சுக்காற்றுத் தடைப்பட்டு வாய் வழியாக, மூக்கு ஒலியுடன் வெளியேறுதல்;* to sneeze.

**துயர்** பெ. (n.) *துன்பம்;* sorrow, grief.

**துயரம்** பெ. (n.) *1. மனவருத்தம்;* sorrow. *2. இரக்கம்;* pity.

**துயில்** பெ. (n.) *தூக்கம்;* to sleep.

**துயிலிடம்** பெ. (n.) *படுக்கும் இடம்;* sleeping place.

**துரும்பு** பெ. (n.) *1. கூளம்;* bits of straws. *2. சக்கை;* refuse, as of sugarcane.

**துருவல்** பெ. (n.) *தேங்காய் முதலிய வற்றின் துருவுத் திரள்;* scrapings, as of coconut - pulp.

**துருவுகோல்** பெ. (n.) *தேங்காய் முதலியன துருவுங் கருவி;* scraping instrument.

**துருவுதல்** வி. (v.) *தேங்காய் முதலியன கடைந்து சீவுதல்;* to scrape, as the pulp of a coconut.

**துல்லியம்** பெ. (n.) *மிகச் சரியானது;* accuracy, exactness.

**துலாக்கட்டை** பெ. (n.) *வண்டியச்சுக் கட்டை;* cross-beam of a cart containing the axle.

**துலாக்கோல்** பெ. (n.) *நிறைகோல்;* balance, steelyard.

**துவக்கம்** பெ. (n.) *தொடக்கம்;* beginning, commencement.

**துவட்டுதல்** வி. (v.) *நீரைத் துடைத்தல்;* to wipe off, moisture, as after bathing.

**துவர்காய்** பெ. (n.) *பாக்கு;* arecanut as astringent.

**துவைத்தல்** வி. (v.) *ஆடைகளை அலசித் தூய்மையாக்கல்;* to beat, as clothes in washing.

**துவையல்** பெ. (n.) *தேங்காய், இஞ்சி, மிளகாய் சேர்த்து அரைத்துத் திரட்டிய தொடுகறி;* chutny, a kind of strong relish, made of a number of condiments and fruits as coconut's, onions, chillies.

**துழாவுதல்** வி. (v.) *1. கையாலளைதல்;* to stir with the hand. *2. கிளறுதல்; நாக்கால் புரட்டுதல்;* to stir with the ladle; to turn over, as paddy spread in the sun.

**துள்ளத்துடித்தல்** வி. (v.) *மிகு துயரால் வருந்துதல்;* to suffer from extreme anguish.

**துள்ளல்** பெ. (n.) *துள்ளுகை;* frishing, leaping.

**துள்ளாட்டம்** பெ. (n.) *களிப்பு;* sprightliness.

**துள்ளுக்காளை** பெ. (n.) *அடங்காதவன்; முரட்டுக்காளை;* ungovernable person, as an untamed bullock.

**துள்ளுக்குட்டி** பெ. (n.) *1. இளங்கன்று;* calf; frolicsome young animal. *2. விளை யாட்டுப் பையன்;* playful, lively boy.

**துள்ளுதல்** வி. (v.) *குதித்தல்;* to leap, frisk, spring up, jump up, to be restive.

**துளசிமாலை** பெ. (n.) *துளசி இலைக் கொத்து அல்லது துளசிமணியாற் செய்யப்பட்ட மாலை;* garland of tulaci leaves or beads.

**துளிர்த்தல்** வி. (v.) *1. தளிர்த்தல்;* to bud, sprout, shoot, put forth leaves. *2. செழித்தல்;* to prosper, thrive.

**துளை** பெ. (n.) *1. புழை;* hole, orifice, aperture, perforation. *2. உட்டொளை;* hollow, as of a tube.

**துளைக்கருவி** பெ. (n.) *இசைக்குரிய கருவி ஐந்தனுள் உட்டொளையுள்ள வாச்சியம்;* wind instrument, one as five karuvi.

**துளைத்தல்** வி. (v.) *1. துளையிடுதல்;* to make hole, bore, drill, punch. *2. ஊடுருவுதல்;* to pierce, as with an arrow.

**துளைப்பு** பெ. (n.) *துளைக்கை;* drilling, perforating.

**துறத்தல்** பெ. (n.) *பற்றற்றுத் துறவு பூணுதல்;* to renounce wordly pleasures; to become an ascetic.

**துறவறம்** பெ. (n.) *1. பற்றறுநிலை;* ascetic life, opp. to illaram (family life). *2. துறவிகளுக்கு வகுக்கப்பட்டுள்ள நெறிமுறை;* the duties, enjoined on ascetics.

**துறுதுறுத்தவன்** பெ. (n.) *வேண்டாவினை அல்லது குறும்பு செய்து கொண்டே யிருப்பவன்;* mischieve boy.

**துறை** பெ. (n.) *1. இடம்;* place, location, situation, space, position. *2. வழி;* way, path, as of virtue or justice. *3. பகுதி;* branch, section, category. *4. அரசின் பல பிரிவுகளின் ஒரு பிரிவைக் கவனிக்கும் பிரிவு;* department.

**துறைக்காவல்** பெ. (n.) *துறைமுக முதலியவற்றிற் காவல்;* watch or guard of a port; excise officer; military guard.

**துறைமாறுதல்** வி. (v.) *1. வழிதவறுதல்;* to mistake the proper course. *2. முன் பயின்றதனைவிட்டு வேறு தொழிலிற் புகுதல்;* to change an occupation or employment.

**துன்புறுத்துதல்** வி. (v.) *வருத்துதல்;* to cause suffering; to afflict.

# தூ

**தூ** இடை (int.) *இழிவையும் அருவருப்பையும் வெளிப்படுத்தும் சொல்;* an exclamation expressing one's dissapproval and disgust.

**தூக்கக்கலக்கம்** பெ. (n.) *தூக்கத்திலிருந்து விடுபடாத அல்லது தூக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாத நிலை;* state of being not fully awake.

**தூக்கங்கொள்ளாமை** பெ. (n.) *தூக்கம் பிடியாமை;* sleeplessness.

**தூக்கணக்கயிறு** பெ. (n.) *ஆழமான நீருள் முக்குளிப்பவனை முக்குளிக்குங் காலத்து மேலே கட்டியிழுக்குங் கயிறு;* rope that holds a driver while he is under water.

**தூக்கணம்** பெ. (n.) *உறி;* suspended network of rope for supporting a pot.

**தூக்கந்தெளிதல்** வி. (v.) *தூக்கத்தினின்று விழித்தல்;* waking from sleep.

**தூக்கம்** பெ. (n.) *மெய் மறந்து, மனத்தின் செயலற்று இறந்தவனைப் போல் கிடக்கச் செய்யும் ஒரு நிலைமை, உறக்கம்;* sleep, drowsiness, sleeping.

**தூக்கம் பிடித்தல்** வி. (v.) *உறக்கங் காணுதல்;* to feel sleepy.

**தூக்கம்விடுதல்** வி. (v.) *தூக்கம் தெளிதல்;* to wake from sleep.

**தூக்கமயக்கம்** பெ. (n.) *தூக்கத்திற்கு முன்பாக அடிக்கடி கொட்டாவி விட்டு, சோம்பல் கொள்ளும்*

*நிலைமை;* yawning frequently and feeling drowsy indicative of sleep.

**தூக்கல்** பெ. (n.) *1. விலை முதலிய வற்றின் ஏற்றம்;* rise, increase, as in price. *2. உயரம்;* height. *3. நிறுக்கை;* weighing. *4. தூக்குகை;* lifting. *5. நேராகத் தூக்குகை;* carrying straight.

**தூக்கிக்கொடுத்தல்** வி. (v.) *கேள்வி கேட்காமல், தயக்கம் இல்லாமல் கேட்டதை உடனடியாகத் தருதல்;* give without any hesitation.

**தூக்கித்தூக்கிப்போடுதல்** வி. (v.) *1. மேடு பள்ளத்தில் வண்டி ஏறி இறங்கும் போது அமர்ந்து செல்பவரை இருக்கையில் உட்கார விடாமல் ஆட்டுதல்;* jolt while travelling on a bad road. *2. குளிர்காய்ச்சலால் உடம்பு துள்ளி மேலெழுதல்;* shiver severly due to fever.

**தூக்கிநிறுத்துதல்** வி. (v.) *வணிகம், அரசியல், குடும்பம் முதலியவற்றில் சரிவு நிலையைத் தடுத்து ஒரு நிலைக்குக் கொண்டு வருதல்;* bolster; baleout.

**தூக்கிப்பிடித்தல்** வி. (v.) *1. எடுத்து நிறுத்துதல்;* to uphold, set erect, as a person. *2. எழுப்பிப் பிடித்துக் கொள்ளுதல்;* lifting and holding up as a sickman.

**தூக்கிப்போடுதல்** வி. (v.) *1. திடுக்கிடு மாறு செய்தல்;* to startle, upset; to alarm. *2. வெளியில் எடுத்துவிடுதல்;* to take out, extract.

**தூக்கியடித்தல்** வி. (v.) *தான் மேம்பட்டுப் பிறனைப் பின்வாங்கச் செய்தல்;* to get the better of, excel.

**தூக்கியெறிதல்** வி. (v.) *விலக்குதல்;* to refuse to accept.

**தூக்கில்போடுதல்** வி. (v.) *தூக்கு (சுருக்கு)க் கயிற்றைக் கழுத்தி லிறுக்கி இறக்கச் செய்தல்;* hang to death.

**தூக்கிவாரிப்போடுதல்** வி. (v.) *ஒரு நிகழ்வின் அல்லது செய்தியின் எதிர் பாராத கடுமையான தன்மையால் அதிர்ச்சி அடைதல்;* be startled.

**தூக்கிவிடுதல்** வி. (v.) *1. மேலுயர்த் துதல்;* to lift up; to clevate. *2. உதவி புரிந்து காத்தல்;* to save from danger of ruin, help in emergency.

**தூக்கு** பெ. (n.) *1. தொங்கற்பொருள்;* pendant, anything suspended. *2. உறி;* suspended network of rope supporting a pot. *3. மேற்புறம் வளைவான பிடியுள்ள உருண்டை வடிவச் சிறுவாளி;* a vessel with an arch shaped handle. *4. அரசு அல்லது நீதிமன்றம் கொடுக்கும் மரண தண்டனை;* sentence of death by hanging.

**தூக்குக் கயிறு** பெ. (n.) *கழுத்தை இறுக்கிக் கொல்லும் சுருக்குப் போடப்பட்ட கயிறு;* rope with a sling; noose for hanging.

**தூக்குக்குண்டு** பெ. (n.) *நூற்குண்டு;* plumb line.

**தூக்குக்கோல்** பெ. (n.) *நிறுக்குந்துலைக் கோல் வகை;* steelyard.

**தூக்குத்தண்டனை** பெ. (n.) *தூக்கிலிட்டுக் கொல்லுமாறு முறைமன்றம் வழங்கும் தண்டனை;* sentence of death by hanging.

**தூக்குத்தலரிசி** பெ. (n.) *நன்றாகக் குத்தித் தூய்மை செய்த அரிசி;* well polished rice.

**தூக்குதல்** வி. (v.) *1. உயர்த்துதல்;* to lift, lift up, raise, take up, hold up; to hoist, as a flag. *2. நிறுத்துதல்;* to weigh, balance.

**தூக்குநூல்** பெ. (n.) *சுவரின் ஒழுங்கறியும் நூற்கயிறு;* plumb line.

**தூக்குப்பாலம்** பெ. (n.) *படகு முதலியவற்றிற்கு வழிவிடுவதற் காகப் பிரிந்து உயரே எழும்பி, பின் இணையக்கூடிய பாலம்;* draw bridge.

**தூக்குப்போடுதல்** வி. (v.) *தூக்குக் கயிற்றில் தொங்குதல்;* hang.

**தூக்குமரம்** பெ. (n.) *தூக்குத் தண்டனை நிறைவேற்றுவதற்காக அமைந்த மரம்;* gallows.

**தூக்குமேடை** பெ. (n.) *தூக்குத் தண்டனை நிறைவேற்றும் மேடை;* platform with gallows.

**தூக்குவாளி** பெ. (n.) *உணவுப் பொருள் களைப் பகிர்ந்தளிக்கப் பயன்படும் வாளி போன்ற சிறிய ஏனம்;* small bucket (for serving sauce, food items at feasts, etc.,)

**தூக்குவிளக்கு** பெ. (n.) *தொங்குவிளக்கு;* hanging lamp.

**தூங்கிவிழுதல்** வி. (v.) *1. தூக்க மயக் கத்தாற் சாய்ந்துவிழுதல்;* to be unsteady through drowsiness. *2. சுறுசுறுப்பின்றிச் சோம்பியிருத்தல்;* to be lazy.

**தூங்குகட்டில்** பெ. (n.) *தொங்கியாடுங் கட்டில்;* swinging cot.

**தூங்குதல்** வி. (v.) *துயிலுதல்;* to sleep, slumber.

**தூங்குமூஞ்சி** பெ. (n.) *மிகுதியாகத் தூங்குபவன், மந்தன்;* dull, sleepy fellow.

**தூசி** பெ. (n.) *1. காற்றில் பறந்து வரும் சிறு துகள்;* small particle. *2. புழுதி;* dust.

**தூசிதுரும்பு** பெ. (n.) *தூசியும் தூசி போன்ற பிறவும்;* dust and the like.

**தூண்** பெ. (n.) *கட்டடம், பாலம் முதலியவற்றின் மேல் பகுதியைத் தாங்கி நிற்கும் செங்குத்தான அமைப்பு;* pillar.

**தூண்டில்** பெ. (n.) *மீன் பிடிக்கப் பயன்படும், கொக்கியுடன் நரம்பு இணைக்கப்பட்ட கோல்;* fishing tackle.

**தூண்டிற்காரன்** பெ. (n.) *மீன் பிடிப் போன்;* angler.

**தூண்டுகோல்** பெ. (n.) *விளக்குத்திரி தூண்டும் ஈர்க்கு;* stick for trimming lamp or wick.

**தூண்டுதல்** வி. (v.) *கிளப்பிவிடுதல்;* to excite, stir up.

**தூதன்** பெ. (n.) *1. செய்தியறிவிப்பவன்;* messenger. *2. அரசுத் தூதன்;* ambassador. *3. ஏவலாளன்;* servant.

**தூது** பெ. (n.) *1. தூதுமொழி;* purport of an embassy. *2. தூது செல்வோன்;* ambassador. *3. காதலர்களுக்கிடையே செய்திப் போக்குவரத்து ஏற்பாடு;* negotiation in between lovers.

**தூதுக்குழு** பெ. (n.) *அரசியல், பொருளியல், பண்பாடு ஆகிய வற்றின் அடிப்படையில் அரசின் சார்பில் மற்றொரு நாட்டிற்குச் செல்லும் குழு;* delegation of politicians, economists, artistes visiting other countries on behalf of the government.

**தூதூவெனல்** பெ. (n.) *உமிழ்தற் குறிப்பு;* onom, expr. of the sound of spitting.

**தூய்மை** பெ. (n.) *துப்புரவு, அழுக்கு இல்லா நிலைமை;* purity, cleanness.

**தூய்மைக்கேடு** பெ. (n.) *கழிவுகள் காற்று, நீர் முதலியவற்றில் சேர்வதால் மூச்சுவிடுவதற்கோ பயன்படுத்து வதற்கோ ஏற்றதாக இல்லாமல் போகும் நிலை;* pollution.

**தூர்கட்டுதல்** வி. (v.) *1. மரஞ்செடி முதலியன அடி பருத்தெழுதல்;* to grow with a big stump, as a young tree. *2. கொத்தாய் முளைத்தெழுதல்;* to grow in clusters.

**தூர்த்தல்** வி. (v.) *அடைத்தல்;* to fill up, close up, as a well.

**தூர்வாரி** பெ. (n.) *கிணறுகளில் தூரெடுப் பவன்;* cleaner of wells.

**தூர்வாருதல்** வி. (v.) *கிணற்று வண்டல்களை வாரி எடுத்தல்;* to clean out, as a well.

**தூரப்பார்வை** பெ. (n.) *தொலைப் பார்வை;* distant sight, hyperopia.

**தூரம்** பெ. (n.) *சேய்மை;* remoteness, distance.

**தூரவுறவு** பெ. (n.) *விலகிய உறவு முறை;* distant relation.

**தூரிகை** பெ. (n.) *ஓவியம் தீட்ட, பெயர்ப்பலகை எழுதப் பயன்படும் எழுதுகோல்; விலங்கின் மயிர் ஒரு முனையில் செருகப்பட்ட நீண்ட குச்சி;* painting reed or pencil, painter's brush.

**தூவல்** பெ. (n.) *1. இறகு;* feather. *2. எழுதுகோல்;* pen.

**தூவானம்** பெ. (n.) *1. மழைக்குப் பின் காற்று அடித்துக் கொண்டு வரும் மழைத்துளிகள், சிதறல், சிதறும் மழை;* drizzle, rain driven in or sclattered about in fine drops by stroing wind.

**தூவிவிடுதல்** வி. (v.) *1. கறிப்பொடி தூவுதல்;* to strew curry powder. *2. செய்தி பரப்புதல்;* to spread a rumour.

**தூவுகை** பெ. (n.) *பொடி தூவுகை;* the act as sprinkling as with a powder.

**தூவுதல்** வி. (v.) *1. தெளித்தல்;* to sprinkle, strew. *2. இறைத்தல்;* to scatter, spread out, as grain for fowls. *3. மழை பெய்தல்;* to rain.

**தூள்** பெ. (n.) *1. எந்தக் கடினமான பொருளையும் உலக்கை அல்லது குழவிகொண்டு இடித்தோ அல்லது அரைத்தோ எடுத்த பொடி, துகள்;* dust, powder, particle. *2. மருந்துப் பொடி;* medicinal powder. *3. மூக்குப் பொடி;* snuff.

**தூள்படுத்துதல்** வி. (v.) *தூளாக்குதல்;* to pulverise, reduce to powder.

**தூள்பறத்தல்** வி. (v.) *பலரும் அறியும்படி அதிகாரம் வெளிப்படுதல் அல்லது பணம் செலவழித்தல்;* to be loudly displayed.

**தூளாக்குதல்** வி. (v.) *பொடி செய்தல்;* pulversing, reducing to dust.

**தூளாதல்** வி. (v.) *1. தானே பொடியாதல்;* falling into pieces. *2. அரைப்பதினால் பொடியாதல்;* becoming reduced to powder by grinding or pounding.

**தூளி** பெ. (n.) *குழந்தையைத் தூங்க வைக்க நீண்ட துணியின் இரு முனை யையும் கட்டி ஒன்றில் தொங்க விட்டிருக்கும் அமைப்பு;* cradle made with a long piece of cloth.

**தூற்று** பெ. (n.) *ஒருவரைப் பேச்சாலோ எழுத்தாலோ பழிக்கை; பழிப்பு;* slandering, spreading a slanderous report.

**தூற்றுக்கூடை** பெ. (n.) *1. பொலி தூற்று வதற்கு உதவுந் தட்டுக் கூடை;* winnowing basket. *2. பொலி தூற்று தற்கு உதவும் முறம்;* winnowing pan.

**தூற்றுதல்** வி. (v.) *1. தூசி போகுமாறு நெல்லைத் தூவுதல்;* to winnow. *2. பேச்சால் பிறரைப் பழித்தல்;* blaming; abuse; scolting.

**தூற்றுமுறம்** பெ. (n.) *நெற்பொலி தூற்றுதற்கு உதவும் முறம்;* winnowing pan.

**தூறல்** பெ. (n.) *1. சிறு மழை;* drizzle; not a heavy rain. *2. மழைத்துளி;* drop of rain.

**தூறல்போடுதல்** வி. (v.) *தூறல் விழுதல்;* drizzle.

**தூறுதல்** வி. (v.) *சிறு சிறு துளிகளாக மழை பெய்தல்;* drizzle.

# தெ

**தெப்பக்கட்டை** பெ. (n.) *மிதக்கப் பயன் படுத்தும் கட்டை;* floating block of timber.

**தெப்பத்திருவிழா** பெ. (n.) *கோயில் திருக் குளத்தில் தெப்பத்தில் இறைவனை வைத்துக் கொண்டாடும் திருவிழா;* floating festival in which a deity of a temple is taken on rafts in a tank.

**தெம்பு** பெ. (n.) *உடல் வலிமை;* physical strength. *'தெம்பு கெட்ட பயலிடம் தும்பைக் கொடுக்காதே (பழ.)'.*

**தெய்தெய்யெனல்** பெ. (n.) *சினத்தால் ஆடுதற்குறிப்பு;* expr. of dancing in rage. *'தெய்தெய்யென்று குதிக்கிறான்'.*

**தெய்வக்குற்றம்** பெ. (n.) *பூசை முதலியன செய்யாமையால் வரும் இன்னல்;* sacrilege.

**தெய்வச்சாட்சியாய்** பெ.எ. (adj.) *உறுதி கூறும்போது வழங்குவதும் கடவுள் சாட்சியாக என்று பொருள் படுவதுமாகிய தொடர்;* a term of swearing, meaning before God, with God to witness.

**தெய்வமேறி ஆடல்** பெ. (n.) *தன்னுள் தெய்வமேறிய நிலையில் ஒருவன் ஆடுகின்ற ஆடல்;* dancing of a person possessed by a diety.

**தெரியாத்தனமாக** வி.எ. (adv.) *ஒரு செயலின் தன்மை பற்றியோ அதன் பின்விளைவுகளைப் பற்றியோ ஒன்றும் அறியாமல்;* inadvertently.

**தெருக்கூத்து** பெ. (n.) *தெருவெளியில் நடக்கும் நாடகம்;* dramatic performance or folk dance in a street.

**தெருச்சண்டை** பெ. (n.) *ஒன்றுக்கும் உதவாதவற்றுக்கு முரண்பட்டுத் தெருவில் போடும் (செய்யும்) சண்டை;* quarrel at street due to insignificant matter.

**தெற்றுப்பல்லன்** பெ. (n.) *முன்புறம் நீட்டிக்கொண்டிருக்கும் பல்லை உடையவன்;* a person with snagged teath. *'பல் முன்பக்கமாக நீட்டிக் கொண்டிருக்கிறது'.*

**தெறித்துப்போதல்** வி. (v.) *ஒளியாற் கண்கூசி மழுங்குதல்;* to be dazzled by excess of light.

**தென்படுதல்** வி. (v.) *புலப்படுதல்;* to meet, appear, strike one's eyes.

**தென்னங்கள்** பெ. (n.) *தென்னம் பாளை யிலிருந்து வடிக்குங் கள்;* coconut toddy.

**தென்னங்கீற்று** பெ. (n.) *தென்னை ஓலையால் பின்னப்பட்ட கீற்று;* plaiting of coconut leaves.

**தென்னம்பன்னாடை** பெ. (n.) *தென்னை மட்டைக்கும், மரத்திற்கும் இடையே மட்டை பிரியுமிடத்தில் காணப்படும் வலை போன்ற பொருள்;* a coarse net like fibrous matting found at the trunk where the foot stalks branch out.

**தென்னம்பாளை** பெ. (n.) *தென்னம்பூ உள்ளடங்கிய உறை;* coconut flower with the integument covering it.

**தென்னம்பிள்ளை** பெ. (n.) *தென்னை மரக்கன்று;* coconut sapling.

**தென்னமட்டை** பெ. (n.) *தென்னை ஓலையின் நடுவிலுள்ள மட்டை;* coconut leaf stalk.

**தென்னைவெல்லம்** பெ. (n.) *தென்னை மரத்திலிருந்து எடுக்கும் வெல்லம்;* coconut jaggery.

# தே

**தேங்காய்க்கண்** பெ. (n.) *தேங்காயின் மேலிடத்துள்ள முக்கண்;* the three eyes of the coconut.

**தேங்காய்க்கண்திறத்தல்** பெ. (n.) *தேங்காய்க்குள் மருந்தைப் புகட்டுவதற்காக அதன் கண்ணைத் துளைத்தல்;* to make a hole through one of three eyelets on the top of the shell in order to insert medicine or other drugs into it after clearing the water contained it.

**தேங்காய்ச்சுடு–தல்** வி. (v.) *தேங்காயைக் கண் வழியாகத் துளைத்து வெல்லம், கடலை, அரிசி, வறுத்த எள் முதலான வற்றை உள்ளே நிறைத்தடைத்து நிலத்தில் புதைத்து அவ்விடத்தில் தீமூட்டி வேகவைத்தல்;* to cook the coconut by kiln method with some edibles.

**தேங்காய்த்தண்ணீர்** பெ. (n.) *முற்றிய தேங்காயின் தண்ணீர்;* sweet water of the riped coconut.

**தேங்காய்த்தும்பு** பெ. (n.) *தேங்காய் நார்க்கயிறு;* thread made by fibres of the coconut husk.

**தேங்காய்த் துருவி** பெ. (n.) *தேங்காய்ப் பருப்பைத் துருவுங் கருவி;* coconut scraper.

**தேங்காய்த்துவையல்** பெ. (n.) *தேங்காய்ப் பருப்பும் உசிலையும் கலந்தரைக்கப் படும் தொடுகறி வகை;* chutny, as side dish, made of coconut kernal and spices.

**தேங்காய்ப்பத்தை** பெ. (n.) *தேங்காய்த் துண்டு; தேங்காய் வகிர்;* coconut kernal sliced into several pieces. *'கடைக்குப் போய் தேங்காய்ப்பத்தை வாங்கிட்டு வா'.*

**தேங்காய்ப்பால்** பெ. (n.) *தேங்காய்த் துருவலினின்று பிழிந்தபால்;* coconut juice pressed from the sacraped kernal.

**தேங்காய்ப்பிண்ணாக்கு** பெ. (n.) *தேங்காயினின்றும் எண்ணெய் எடுத்த பிறகு எஞ்சிய சக்கை;* the resdue or refuse or coconut oil cake left after extracting the oil from the kernal by mill.

**தேங்காய்மண்டி** பெ. (n.) *தேங்காய்கள் சேமிக்கும் இடம்;* a shed where coconuts are stored.

**தேங்காய்முளை** பெ. (n.) *தேங்காய்ப் பருப்பின் முளைப்பகுதி;* the almond like substance.

**தேங்காய்மூடி** பெ. (n.) *உடைத்த தேங்காயின் பாதி;* half of a coconut.

**தேங்காய் வழுக்கை** பெ. (n.) *தேங்காயின் முற்றாத உள்ளீடு;* soft kernal or albumen of an immature coconut.

**தேடியோடித்திரிதல்** வி. (v.) *பெருமுயற்சி செய்தல்;* to make great efforts.

**தேத்துக்காலி** பெ. (n.) *அடங்காதவன்;* vegabond, loafer. *'பெரியோர் சொல் கேட்காத தேத்துக்காலி'.*

**தேம்பியழுதல்** வி. (v.) *விம்மியழுதல்;* to sob violently.

**தேய்ந்துமாய்ந்துபோதல்** வி. (v.) *துன்பத்தால் உடல் மெலிவுறுதல்;* to become emaciated with care; to pine.

**தேவாங்கு** பெ. (n.) *தட்டையான முகத்தில் பெரிய கண்களையுடைய, வால் இல்லாத, சிறிய விலங்கு (குரங்கு இனத்தைச் சேர்ந்த);* slender loris.

**தேறுதல்** பெ. (n.) *வருத்தத்திலிருந்து, துக்கத்திலிருந்து மீளும் வகையில் பிறர் சொல்லும் ஆறுதல்;* consolation.

**தேன்கூடு** பெ. (n.) *1. தேனீக்கள் தேன் வைக்கக் கட்டும் கூடு;* honey comb. *2. தேன்கூட்டின் உள்ளறை;* cells in a bee hive. *3. தேனீத் தங்கும் கூடு;* bee hive.

**தேன்பாகு** பெ. (n.) *தேனைப் போன்ற வெல்லப்பாகு;* an artificial honey like syrup prepared from sugar or jaggery.

**தேன்மிட்டாய்** பெ. (n.) *சிவப்பு நிறத்தில் சக்கரைப்பாகு நிறைந்த உருண்டை வடிவில் இருக்கும் ஒருவகை*

தேங்கட்டி; candy with sugar syrup as filling.

## தை

**தைத்தல்** வி. (v.) *1.* *தையலிடுதல்;* to sew, stitch. *2.* *இலை முதலியன குத்தி யிணைத்தல்;* to plait or stitch, as leaves into plate. *3.* *கோத்தல்;* to string, as beads.

**தைப்பொங்கல்** பெ. (n.) *சுறவத் திங்களன்று பொங்கலிட்டுக் கொண் டாடப்படும் தமிழர்த் திருவிழா;* Tamizhar festival on the first day of tai, celebrated with *poṅgal*.

**தொகைக்காரன்** பெ. (n.) *செல்வன்;* moneyed man; richman.

## தொ

**தொங்கட்டான்** பெ. (n.) *தோட்டோடு சேர்ந்துத் தொங்கவிடும் காதணி;* ornament attached to and suspended from an ear stud.

**தொங்கல்** பெ. (n.) *அடிமுந்தி;* border.

**தொங்கலில் விடுதல்** வி. (v.) *தவிக்க விடுதல், ஒருவரை சிக்கலில் மாட்டி விடுதல்;* leave one in a state of distress.

**தொங்குக்கட்டில்** பெ. (n.) *நோயாளிகளை எடுத்துச் செல்லப் பயன்படும் ஒரு நீண்ட மூங்கிலின் நடுவில் தொங்கும் கட்டிலை உடைய ஒரு கருவி;* a swinging lifter for carrying sick person, a cot, or frams suspended by the four corners from a bamboo pole.

**தொட்டாற்சிணுங்கி** பெ. (n.) *1.* *சிறு குறையைக் கூடத் தாங்கிக்கொள்ள முடியாதவர்;* whimpers at the slightest provocation. '*அவள் ஒரு தொட்டால் சிணுங்கி அவளிடம் கவனமாகப் பேச வேண்டும்*'. *2.* *ஒருவகைச் செடி வகை;* a kind of plant.

**தொட்டிலிடு–தல்** வி. (v.) *முதன்முறை யாகக் குழந்தையைத் தொட்டிலில் ஏற்றுவித்தல்;* to cradle for the first time, as a child.

**தொடுகறி** பெ. (n.) *உணவுடன் சேர்த்துச் சாப்பிடுவதற்காக உருவாக்கப்படும் உணவுப்பொருள்; வெஞ்சணம்;* side dish.

**தொண்டிக்கட்டை** பெ. (n.) *மாடுகள் ஓடி விடாமல் தடுப்பதற்காக, ஓடினால் காலில் இடிக்கும் வகையில் அவற்றின் கழுத்தில் கட்டப்படும் கட்டை;* a piece of wood hung from the neck of a bullock or cow to prevent it from running away.

**தொண்டுநிறுவனம்** பெ. (n.) *ஒன்றின் நன்மைக்காக (அ) வளர்ச்சிக்காகப் பணியாற்றும் அமைப்பு;* service organization or society, voluntary agency.

**தொண்டைக்கிழிய** வி.எ. (adv.) *உரத்த குரலில் பேசுதல்;* at the top of one's voice. '*நீ எதற்கு தொண்டைக்கிழிய கத்துகிறாய்?*'.

**தொண்டைநோவு** பெ. (n.) *1.* *தொண் டைக்கட்டு;* sore throat, pharyngitis. *2.* *உள்நாக்கு நோய்;* tansilitis.

**தொண்டையடைப்பான்** பெ. (n.) *தொண்டை முழுவதும் வீங்கி விழுங்க முடியாமலும், உள்காற்று தொடர்பால் வாய், குரல்வளை முதலிய இடங்களில் மூச்சுவிட முடியாமல் கோழை, சளி, கோளா றினால் ஏற்படும் அடைப்பான் நோய்;* diphtheria. a serious bacterial disease with high fever causing inflammation of the mucous membranes and formation of a false membrane in the throat which hinders, breathing and swallowing.

**தொணதொணப்பு** பெ. (n.) *எரிச்சலை ஏற்படுத்தும் தொடர் பேச்சு;* nagging. '*வீட்டில் எந்த நேரமும் தொண தொணவென்று பேசாதே*'.

**தொத்தல்** பெ. (n.) *சதைப்பிடிப்பு இல்லாமல் மிகவும் ஒல்லியாக இருப்பது;* condition of being skinny. '*தொத்தல் மாடு*'.

**தொத்துக்குட்டி** பெ. (n.) *உடன்பற்றித் திரிபவன்;* a dependent, satellite.

**தொந்தரவு** பெ. (n.) *துன்பம்;* trouble, vexation, difficulty.

**தொந்தி** பெ. (n.) *1. வயிற்றுதசை மடிப்பு;* fold or callop of fat. *2. பெருவயிறு;* large belly, abdomen.

**தொப்புள்கொடி** பெ. (n.) *தாய்க்கும், கருவிலிருக்கும் குழந்தைக்கும் தொடர்புடையதாயிருக்கும் நஞ்சுக் கொடி;* the navel string or umbilical cord.

**தொப்பென்றுவிழுதல்** வி. (v.) *நிலம் (அ) நீருக்குள் பொருட்கள் ஓசையுடன் கீழே விழுதல்;* falling of a heavy body on the ground or into the water with sound.

**தொய்வு** பெ. (n.) *1. இளைப்பு;* fatigue. *2. மூச்சு முட்டல்;* hard breathing.

**தொல்லை** பெ. (n.) *1. தொந்தரவு;* annoyance; vexation. *2. பிறருக்கு எரிச்சலை ஏற்படுத்தும் வகையில் அமையும் செயல்;* nuisance, inconvenience.

**தொலி** பெ. (n.) *1. மேற்றோல்;* the natural outer coating of an animal separated from the body. *2. தோல்;* skin, rind. *3. உமி;* husk.

**தொலைத்தல்** வி. (v.) *1. அழித்தல்;* to destroy. *2. முற்றுப்பெறச் செய்தல்;* to bring to an end settle. *3. முடித்தல்;* to finish.

**தொலைத்துத் தலைமுழுகு** வி. (v.) *மிகுந்த தொல்லை தருவதால் இனி வைத் திருக்கத் தேவையில்லையென்று தூக்கியெறிதல்;* get rid of (sth.).

**தொலைந்துபோதல்** வி. (v.) *காணாமற் போதல்;* to loss.

**தொழிமரம்** பெ. (n.) *சேற்றுக்காலாக உழுத நிலத்தைச் சமன் செய்யப் பயன் படுத்தும் பரம்புப் பலகை;* board used to smoothened the ploughed surface of a wet land for cerru-k-kal cultivation.

**தொழிலாளி** பெ. (n.) *1. வேலைக்காரன்;* labourer. *2. வினைத்திறனுள்ளவன்;* a capable worker. *3. குடிமகன் (அ) ஊர்ப்பிள்ளை;* barber.

**தொழுகை** பெ. (n.) *1. வணங்குகை;* worshipping, adoration. *2. தெய்வ விண்ணப்பம்;* prayer.

**தொழுவம்** பெ. (n.) *மாட்டுக்கொட்டில்;* cattle stall, manger.

**தொள்ளைக்காது** பெ. (n.) *பெருந்துளை யுள்ள காது;* ear with a big perforation in the lobe. '*பாட்டியின்காது தொள்ளைக் காது*'.

**தொள்ளைவிழுதல்** வி. (v.) *பெருச்சாளி முதலியவற்றால் கட்டடத் தரையில் விழும் குழிவு;* depression or hollow in the saved floor, caused by bondcoot.

**தொளதொளவென்று** வி.அ. (adv.) *உடலில் ஆடைப்பொருந்தாமல் பெரியதாக இருப்பது;* hanging loosely.

**தொளியடி–த்தல்** வி. (v.) *வயலிற் சேறு கலக்குதல்;* to plough a flooded field. '*நாற்றுநடுவதற்கு தொளி யடித்தனர்*'.

**தொளை** பெ. (n.) *1. ஓட்டை;* opening, hole. *2. உட்டுளை;* a cavity in a sore or an ulcers.

**தொளைத்தல்** வி. (v.) *1. துளையிடுதல்;* to perforate. *2. தொந்தரவு செய்தல்;* to tease. *3. செய்தி தெரிதற்பொருட்டு ஆழம்பார்த்தல்;* to probe.

**தொன்றுதொட்டு** வி. (v.) *மிக நீண்ட காலமாக பழங்காலத்திலிருந்தே;* from time immemorial.

**தொன்னை** பெ. (n.) *மந்தாரக்கொடியின் காய்ந்த இலைகளை ஈர்க்குச்சிகள் கொண்டு இணைத்து தட்டுப் போன்று செய்யப்படுவது;* leaf cup.

## தோ

**தோசக்காய்** பெ. (n.) *வெள்ளரிக்காய்;* common cucumber. *'தோட்டத்தில் தோசக்காய் காய்த்துள்ளன'.*

**தோட்டக்காரன்** பெ. (n.) *தோட்டத்தில் வேலை செய்பவன்;* gardener. *'தோட்டக்காரன் வாழ்வு காற்றடித்தால் போச்சு (பழ.)'.*

**தோட்டக்கீரை** பெ. (n.) *அரைக்கீரை, சிறுகீரை, தண்டுக்கீரை முதலிய தோட்டத்தில் பயிராகும் கீரை வகைகள்;* garden greens or spinach cultivated in garden and fields especially those belonging to amaranthus family.

**தோட்டந்துரவு** பெ. (n.) *தோட்டமும் அது போன்ற பிறவும்; நிலபுலன்;* landed property. *'அவருக்குத் தோட்டந் துரவெல்லாம் இருக்கிறது'.*

**தோட்டி** பெ. (n.) *கீழ்நிலைப் பணியாளர் (ஊர் வேலை செய்பவர் இறப்பு நிகழ்வுகளை உறவினர் மற்றும் பிறருக்கு அறிவிப்பவர்);* mean labour.

**தோண்டி** பெ. (n.) *தண்ணீர் எடுப்பதற்கு பயன்படும் சிறிய, மண் (அ) மாழையால் ஆன கலம்;* pot (earthen or metal, for drawing and carrying water).

**தோண்டித்துருவு** வி. (v.) *ஒன்றைப் பற்றி அறிய மேலும் மேலும் நுணுக்கமான செய்திகளை அறிய வினாக்களைக் கேட்டல்;* pester (s.o) probe. *'தோண்டித் துருவி அவனிடமிருந்து உண்மையை வரவழைத்துட்டேன்'.*

**தோத்தாங்குழி** பெ. (n.) *பல்லாங்குழி ஆட்டத்தில் தோற்ற வெற்றுக் குழி;* empty square in a play board.

**தோய்த்தல்** வி. (v.) *1. ஆடை துவைத்தல்;* to wash, clothes. *2. நனைத்தல்;* to dip, soak. *3. உறையச் செய்தல்;* to thicken, curdle.

**தோரணம்** பெ. (n.) *தெருவில் குறுக்காகக் கட்டும் ஒப்பனைத் தொங்கல்;* festoons of leaves and flowers suspended across streets and entrances an auspicious occasions.

**தோராயம்** பெ. (n.) *ஏறக்குறைய;* approximate.

**தோல்முட்டை** பெ. (n.) *சுண்ணாம்புச் சத்து பற்றாக் குறைவினால் மேல் ஓடு இல்லாமல் கோழி வைக்கும் முட்டை;* the egg without white shell by deficiency of calcium.

**தோள்தட்டுதல்** பெ. (n.) *ஒருவரை ஊக்கப்படுத்துவதற்காகத் தோளில் தட்டிக்கொடுத்தல்;* to pat one, on shoulder to encourage. *'ஆசிரியர் மாணவனை நல்ல மதிப்பெண் வாங்க தோள்தட்டினார்'.*

**தோள்மாற்றுதல்** வி. (v.) *சுமையை ஒரு தோளினின்று மற்றொரு தோளுக்கு மாற்றுதல்;* to change one shoulder to another, as a load. *'அப்பாவுக்கு சுமை மிகுதியாக இருப்பதால் மகன் வாங்கிக் கொண்டார்'.*

## ந

**நக்கல்** பெ. (n.) *1. நாவால் பருகல்;* licking; eletuary which is taken by the tongue. *2. சிரிப்பு;* laughing. *3. ஏளனம்; பகடி;* mockery.

**நகக்கண்** பெ. (n.) *விரல் நுனிக்கும் உகிருக்கும் இடைப்பட்ட பகுதி;* the part between the tip of the finger and the nail.

**நகச்சுற்றி** பெ. (n.) *நுனி விரலிற்காணும் புண்;* a common name for several forms of whitlow.

**நகர்த்துதல்** வி. (v.) *1. விரும்பியேற்றுச் சிறிது தள்ளுதல்;* to push with difficulty. *2. சிறுகச் சிறுகக் களவாடுதல்;* to pilfer steal little by little.

**நகரத்தார்** பெ. (n.) *1. நகரவாசிகள்;* townsmen. *2. நாட்டுக்கோட்டை செட்டியார்கள்;* a cost belongs to *Nattukkottai* regions.

**நகராட்சி** பெ. (n.) *நகரத்துக்கான உள்ளாட்சி அமைப்பு;* municipality.

**நகரும் படிக்கட்டு** பெ. (n.) *தொடர்வண்டி நிலையங்கள், வானூர்தி நிலையங்கள் போன்ற இடங்களில் மின் விசையால் நகரும் படிகளைக் கொண்ட கருவி;* escalator.

**நகுதல்** வி. (v.) *1. சிரித்தல்;* to laugh; smile. *2. மகிழ்தல்;* to rejoice. *3. இழிவாகக் கருதுதல்;* to despise. *4. தாழ்த்துதல்;* to surpass.

**நகைச்சுவை** பெ. (n.) *சிரிப்பும், மகிழ்ச்சியும் மிளிரும் வண்ணம் உள்ள பேச்சு-செயல்;* humour, comic.

**நகைநட்டு** பெ. (n.) *நகை முதலான பொருள்கள்;* jewel and other valuables.

**நகைப்பெட்டி** பெ. (n.) *அணிகலன்களைப் பாதுகாப்பாக வைக்கும் பெட்டி;* jewel box.

**நச்சரித்தல்** வி. (v.) *ஒருவரிடம் ஒன்றை வேண்டி, எரிச்சலைத்தரும் வகையில் தொடர்ந்து வற்புறுத்துதல்;* pester.

**நச்சரிப்பு** பெ. (n.) *வெறுப்புண் டாகும் வண்ணம் பிதற்றிப் பேசுகை;* chattering babbling.

**நச்சுப்பல்** பெ. (n.) *தீப்பயன் விளைவிக்கும் பல்;* venomous tooth, as of one whose imprecations are belived to take effect.

**நசுக்கிப்பிழிதல்** வி. (v.) *பச்சை மூலிகைகளை இடித்துச் சாறு பிழிதல்;* to squeeze out juice by bruise the green herbaceous leaves.

**நசுக்குதல்** வி. (v.) *1. ஒன்றை அழுத்தி அதன் உருவம் சிதையும் வகையில் தேய்த்தல்;* to crush. *2. இரு பக்கங்களிலிருந்தும் விசையுடன் அழுத்துதல் (அ) நெருக்குதல்;* crush.

**நசுநசெனல்** பெ. (n.) *1. ஈரக்குறிப்பு;* dampness. *2. தொல்லை செய்தற் குறிப்பு;* troubling, teasing.

**நஞ்சுக்கொடி** பெ. (n.) *குழந்தை பிறந்ததைத் தொடர்ந்து கருப்பையிலிருந்து வெளியாகும் சவ்வுப் படலம்;* plecenta.

**நட்டாற்றில் விடுதல்** வி. (v.) *தன்னை நம்பியிருப்பவரை இக்கட்டான நிலையில் கைவிடுதல்;* leave in the lurch; let(s.o.) down.

**நட்டுக்கொள்ளல்** பெ. (n.) *கயிற்றில் கழுத்தைக் கட்டித் தொங்கித் தற்கொலை செய்து கொள்ளுதல்;* to commit suicide by hanging.

**நட்டுவைத்தல்** வி. (v.) *1. மரக்கன்று முதலியவற்றை நடுதல்;* to plant, as saplings. *2. குடும்பம் முதலியவற்றை நிலைநிறுத்துதல்;* to establish as a family.

**நட்பாராய்தல்** வி. (v.) *நட்புக்குரியரைத் தெரிவு செய்யும் திறம்;* scrutiny in the choice of friends.

**நட்பு** பெ. (n.) *அன்பு, ஒத்தகருத்து, நலன், அக்கறை முதலியவற்றின் அடிப்படையில் உறவினர் அல்லாதவருடன் கொள்ளும் உறவு;* friendship.

**நட்புறவு** பெ. (n.) *மாந்தர் (அ) நாடுகளுக்கு இடையிலான நெருக்க உறவு;* amity or friendship.

**நடத்தை** பெ. (n.) *ஒருவர் நடந்து கொள்ளும் முறை; பழகும் முறை;* behaviour, conduct, character.

**நடப்பு ஆண்டு** பெ. (n.) *1. நிகழும் ஆண்டு;* current year. *2. நிகழ்காலம்;* present time.

**நடப்புக்கணக்கு** பெ. (n.) *சேமிப்புக்காக அல்லது நடப்புச் செலவுகளுக்காக வைப்பகத்தில் உள்ள இருப்புக் கணக்கு;* current account.

**நடப்பு** பெ. (n.) *1. உயிர் நீத்தார் இறுதிக் கடனுக்கு முந்தைய நாள் இரவில் நடக்கும் சடங்கு;* ceremony conducted on the eve of the final obsequies. *2. நடந்து கொண்டிருக்கிற;* current (year., season etc).

**நடமாட்டம்** பெ. (n.) *மாந்தர், விலங்குகள், ஊர்தி முதலியவற்றைக் குறித்து வருதல் போன்ற, செயல்பாடு (அ) இயக்கம்;* movement.

**நடமாடுதல்** வி. (v.) *மாந்தர் தொடர்பாகக் கூறும்போது நடக்க இயலும் தன்மை, உலவுதல்;* (of persons) walk.

**நடமாடும் அங்காடி** பெ. (n.) *மக்கள் வாழிடத்திற்குச் சென்று விற்பனை செய்யும் காய்கறி வண்டி;* mobile vegetable shop.

**நடமாடும் அஞ்சலகம்** பெ. (n.) *பயனாளர் பரிமாற்றம் செய்யும் வகையில் செயல்படும் அஞ்சலகம்;* mobile post office.

**நடமாடும் உணவகம்** பெ. (n.) *மக்கள் இல்லங்களுக்குச் சென்று வழங்கப் படும் உணவு விற்பனை;* mobile hotel.

**நடமாடும் குருதிவைப்பகம்** பெ. (n.) *வழங்குவோர் வாழிடம் சென்று குருதி பெற்றுச் சேமிக்கும் வைப்பகம்;* mobile blood bank.

**நடமாடும் தேய்ப்புவண்டி** பெ. (n.) *இல்லங்கள்தோறும் சென்று ஆடை களை சுருக்கமின்றி தேய்க்கும் வண்டி;* mobile ironing cart.

**நடமாடும் நயன்மன்றம்** பெ. (n.) *மக்கள் கூடுமிடத்தில் குற்றமிழைப்போர்க்கு அன்றே வழங்கும் நயன்மன்றம்;* mobile court.

**நடமாடும் நூலகம்** பெ. (n.) *நூல் விரும்பியின் வாழிடத்திற்கு சென்று நூல்களை வழங்கும் நூலக ஊர்தி;* mobile library.

**நடமாடும் பல்கலைக்கழகம்** பெ. (n.) *நூல் பலகற்ற மேதைமையுடையோரைக் குறிப்பிடும் புகழ்ச்சொல்;* an honourable little given to the intellectual genius.

**நடமாடும் மருத்துவம்** பெ. (n.) *மக்கள் வாழிடமெல்லாம் செல்லும் மருத்துவ ஊர்தி;* mobile dispensary.

**நடமாடும் வைப்பகம்** பெ. (n.) *பயனாளர் வாழிடத்திலேயே பணம் வழங்கும் பொறியையுடைய உந்தம்;* mobile ATM.

**நடவு** பெ. (n.) *நாற்றை (அ) இளம் நாற்றைப் பிடுங்கி பண்படுத்தப் பட்ட நிலத்தில் நடுவது;* trans-plantation.

**நடவுபோடுதல்** வி. (v.) *நாற்று நடுதல்;* to transplant seedlings.

**நடிகை** பெ. (n.) *நாடகமேடையிலும் திரைப்படத்திலும் நடிப்பவள்;* actress.

**நடித்தல்** வி. (v.) *திரைப்படம், நாடகம், தொலைக்காட்சி ஆகியவற்றில் வேடம் ஏற்று அவ்வேடத்தின் இயல்புகளை, உணர்வுகளை வெளிப்படுத்துதல்;* act (in a film, drama, etc).

**நடுக்கம்** பெ. (n.) *1. உடலில் (அ) உடலின் ஒரு பகுதியில் ஏற்படும் கட்டுப் பாடற்ற அசைவு;* trembling, shivering. *2. ஒன்றால் (அ) ஒருவரால் ஏற்படும் அச்சம்;* fear.

**நடுங்குதல்** வி. (v.) *1. இயல்பாக இல்லாமல் நடுக்கம் வெளிப்படுதல்;* tremble, shiver. *2. கண்ணுக்குத் தெரியாத வகையில் ஆனால், உணரக்கூடிய வகையில் குலுங்குதல்; அதிர்தல்;* shake, vibrate.

**நடுத்தெருவில் நிற்றல்** பெ. (n.) *துணையற்ற (அ) ஆதரவற்ற நிலைக்கு உள்ளாதல்;* be left in the lurch.

**நடுத்தெருவில் நிறுத்துதல்** பெ. (n.) *துணையற்ற நிலைக்கு உள்ளாக்குதல்;* leave in the lurch.

**நடுதல்** வி. (v.) *நாற்று, கன்று, செடி போன்றவற்றை நிலத்தில் ஊன்றுதல்;* a seedling, plant.

**நடுநடுங்குதல்** வி. (v.) *அச்சத்தால் மிகவும் நடுக்கமடைதல்;* tremble, greatly.

**நடுநிலைக்கல்வி** பெ. (n.) *எட்டாம் வகுப்பு வரை உள்ள பள்ளிக் கல்வி முறை;* school education up to VIII standard.

**நடுநிலைப்பள்ளி** பெ. (n.) *எட்டாம் வகுப்பு வரை உள்ள பள்ளி;* school where classes up to VIII standard are conducted, middle school.

**நடுவர்** பெ. (n.) *பேச்சுப்போட்டி, பட்டி மன்றம் போன்றவற்றில் வெற்றி பெறுபவரைத் தேர்ந்தெடுப்பவர்;* judge; jury(in a competition).

**நடுவர்மன்றம்** பெ. (n.) *குறிப்பிட்ட சில சிக்கல்களை ஆய்ந்தறிந்து தீர்ப்பு வழங்கும் அதிகாரத்தைப் பெற்றிருக்கும் குழு;* tribunal.

**நடை** பெ. (n.) *1. வீட்டின் வெளி வாசலிலிருந்து மற்ற பகுதிகளுக்குச் செல்வதற்குரிய பாதை;* the passage leading to the central hall. *2. நடந்து செல்லும் செயல்;* walk, gail.

**நடைப்பயணம்** பெ. (n.) *கால்நடையாகவே செல்லும் செலவு (பயணம்);* travel on foot.

**நடைப்பயிற்சி** பெ. (n.) *உடல்நலத்திற்காக விரைவாகவும், சீராகவும் குறிப்பிட்ட தூரம் நடந்து செல்லும் பயிற்சி;* walking (as an exercise).

**நடைப்பிணம்** பெ. (n.) *இழப்பு, துயரம் போன்றவற்றால் இயல்பானதுடிப்பை இழந்தவர்;* person weary of life.

**நடைப்போட்டி** பெ. (n.) *ஒரு குறிப்பிட்ட தூரத்தை மிக விரைவாக நடந்து கடக்கும் வகையில் நடத்தப்படும் தடகளப் போட்டி;* athletic event of marathon.

**நடைபாதை** பெ. (n.) *தெருவின் இரு ஓரங்களிலும் நடந்து செல்வதற்கான சற்று உயரமாக இருக்கும் பாதை;* pavement.

**நடைபாலம்** பெ. (n.) *நடப்போர் கடந்து செல்வதற்குப் போடப்பட்டிருக்கும் குறுகலான பாலம்;* foot bridge.

**நடைபாவாடை** பெ. (n.) *சில சடங்குகளில் நடந்து செல்வதற்காகப் பாதையில் விரிக்கும் துணி;* cloth spread on the path.

**நடைமுறை** பெ. (n.) *1. அன்றாட வாழ்க்கை நிலைமைகளைச் சார்ந்திருப்பது;* practice. *2. பழக்கத்தில் கடைபிடிக்கும் முறை;* method; practice.

**நடைமுறைப்படுத்துதல்** வி. (v.) *ஆட்சி, திட்டம், சட்டம் போன்றவற்றை நடைமுறைக்குக் கொண்டு வருதல்;* bring into force, put into practice, implement.

**நடைமேடை** பெ. (n.) *பேருந்து, தொடர் வண்டி நிலையங்களில் பயணிகள் காத் திருப்பதற்குக் கட்டப்பட் டிருக்கும் சற்று உயரமான மேடை;* platform.

**நடையைக் கட்டுதல்** வி. (v.) *ஓர் இடத்தை விட்டு நீங்குதல் (அ) புறப்படுதல்;* buzz off, clear off.

**நடைவண்டி** பெ. (n.) *குழந்தை நடை பழகுவதற்காக நின்று பிடிப்பதற்கு ஏதுவாக மரச்சட்டத்தையுடைய, மூன்று சிறிய சக்கரங்களைக் கொண்ட*

*நடைபயிற்சி ஊர்தி;* wooden frame with three wheels walker.

**நண்பர்** பெ. (n.) *அன்பால் நெருங்கியவர்; நட்பு கொண்டிருப்பவர்;* friend.

**நத்தம் புறம்போக்கு** பெ. (n.) *குடியிருப்பு இடமாக அரசால் வகைப்படுத்தப் பட்ட புறம்போக்கு நிலம்;* land that belongs to the government, classified as house site.

**நந்தாவிளக்கு** பெ. (n.) *கோயில் கருவறையில் எப்போதும் எரிந்து கொண்டிருக்கும் விளக்கு;* lamb that burns ceaselessly.

**நப்பாசை** பெ. (n.) *ஒன்று எப்படியாவது நிகழாதா என்ற எதிர்பார்ப்பு;* fond hope.

**நம்பிக்கை** பெ. (n.) *தனக்கும் மற்றவர்களுக்கும் நன்மை தரும் என்பதால் குறிப்பிட்ட சிந்தனை, கருத்து, நோக்கம் போன்றவற்றில் ஒருவர் கொண்டிருக்கும் பிடிப்பு;* faith, belief.

**நம்பிக்கைத் துரோகம்** பெ. (n.) *ஒருவர் கொண்டுள்ள நம்பிக்கை பொய்யாகும் வகையில் அமையும் மற்றவரின் நடவடிக்கை;* betrayal.

**நம்பிக்கைத் துரோகி** பெ. (n.) *தன்னை நம்பும் ஒருவரின் நம்பிக்கைக்கும் நலனுக்கும் மாறாக (அ) எதிராக நடந்துகொள்பவர்;* traitor.

**நம்புதல்** வி. (v.) *1. தான் விரும்புவது போல் ஒன்று நடக்கும் (அ) ஒருவர் செயல்படுவார் என்று உறுதியான எண்ணம் கொள்ளுதல்;* believe, trust rely upon. *2. உண்மை என்று உறுதியாக நினைத்தல்;* believe. *3. ஒன்று இப்படி நடக்கும் (அ) நடந்திருக்கும் என்று கருதுதல்;* believe.

**நமட்டுச்சிரிப்பு** பெ. (n.) *தனக்கும் தெரியும் என்பது எதிராளிக்குத் தெரியாது என்ற முறையில் (அ) கேலியை வெளிப் படுத்தும் அமர்த்தலான சிரிப்பு;* sly smile.

**நமடுகடித்தல்** வி. (v.) *குழந்தைகள் உதட்டைக் கடித்தல்;* to bite the lips, as children.

**நமத்துப்போதல்** வி. (v.) *ஈரமேறுதல்;* to become damp moist.

**நமைச்சல்** பெ. (n.) *உடலில் ஏற்படும் சொறியத் தூண்டும் உணர்வு; அரிப்பு;* itch.

**நயவஞ்சகம்** பெ. (n.) *இனிமையாகப் பழகித் தீங்கு விளைவிக்கும் குணம், பழகிக் கெடுக்கும் குணம்;* duplicity.

**நயவஞ்சகன்** பெ. (n.) *இனிமையாகப் பழகித் தீங்கு விளைவிப்பவன்;* dishonest man.

**நரம்புக் குடைச்சல்** பெ. (n.) *நரம்பு நோய் வகை;* a kind of neuralgia.

**நரம்புக்குத்துதல்** வி. (v.) *நரம்பிலுண்டாகும் வலி;* to nerves pain.

**நரம்புக் கோளாறு** பெ. (n.) *நரம்புக்கேற்படும் பல்வகை நோய்கள்;* nerves affections or disorder or derangement.

**நரம்புத்தளர்ச்சி** பெ. (n.) *உடலில் பொதுவாக உணரப்படும் வலிமைக் கேடு;* nervous debility.

**நரம்புமுறுக்கேறுதல்** வி. (v.) *நரம்புக்குக் கூடுதல் வலிவு (அ) உறுதி ஏற்படுதல்;* to development of the nervous energy.

**நரம்பூசி** பெ. (n.) *நோய்த்தடுப்பு, ஊட்டச்சத்து போன்றவற்றுக்கான நீர்ம மருந்தைச் சிரை வழியாகச் செலுத்தும் ஊசி;* intravenous injection.

**நரைத்தல்** வி. (v.) *முதுமையின் அறிகுறியாக முடி வெள்ளை நிறமாக மாறுதல்; வெளுத்தல்;* grow grey; become grey haired.

**நரைதிரை** பெ. (n.) *முதுமையின் அறிகுறியாக முடி நரையும் தோல் சுருக்கமும்;* grey hair and wrinkles(as signs of old age).

**நல்லடக்கம்** பெ. (n.) *இறந்தவரை புதைப்பதை மதிப்புடன் குறிப்பிடுதல்;* a formal expression meaning burial.

**நல்லதனம்** பெ. (n.) *1. நட்பு;* friendliness. *2. ஒத்துப்போகும் இயல்பு;* amicable dealing amiability.

**நல்லதுகெட்டது** பெ. (n.) *மங்கல, அமங்கல நிகழ்ச்சிகளைக் குறிக்கும் பொதுச்சொல்;* common term to refer to auspicious and in auspicious occasions.

**நல்லபாம்பு** பெ. (n.) *தலையை உயர்த்திப் படம் எடுத்துச் சீறக்கூடிய நச்சுப் பாம்பு;* cobra.

**நல்லபுத்தி** பெ. (n.) *1. தெளிவான அறிவு;* good state of mind, good sense. *2. பகுத்துணர்வு;* discretion.

**நல்லவார்த்தை** பெ. (n.) *அறிவுரை, புத்திமதி பிறருக்குக் கூறுதல்;* words of advice.

**நல்லுறவு** பெ. (n.) *நாடுகளுக்கு இடையே (அ) அமைப்புகளுக்கு இடையே இணக்கமான தொடர்பு;* friendly and happy relations (between countries etc.).

**நல்லெண்ணம்** பெ. (n.) *அக்கறையும் பரிவும் கலந்த உணர்வு;* good will.

**நல்வரவு** பெ. (n.) *ஒருவரை வரவேற்கும் போது அவருடைய வருகை நன்மையையும் மகிழ்ச்சியையும் தருவதாக அமையட்டும் என்ற பொருளில் பயன்படுத்தப்படும் சொல்;* welcome.

**நல்வழிப்படுத்துதல்** வி. (v.) *ஒழுக்கம், பண்பு, நேர்மை ஆகியவற்றைக் கற்பித்து நல்ல முறையில் நடக்கச் செய்தல்;* counsel.

**நலங்கு** பெ. (n.) *மணவுறுதிப்பாடு, திருமணம், வளைகாப்பு போன்ற மங்கல நிகழ்ச்சிகளின்போது மணப்பெண் (அ) கருவுற்ற பெண்ணுக்குச் சந்தனம் போன்றவற்றைத் தடவி பெரியவர்கள் வாழ்த்தும் சடங்கு;* a ritual of blessing at the time of wedding or during pregnancy, of applying sandalwood paste.

**நலங்குச் சாந்து** பெ. (n.) *குழம்பாக அரைத்த மேற்பூச்சு மருந்து;* a semi solid preparation of triturated medicine intended for external application.

**நன்றியற்றவன்** பெ. (n.) *செய்ந்நன்றி மறந்தவன்;* ungrateful person.

**நன்று** பெ. (n.) *பாராட்டைத் தெரிவிக்கும் வகையில் பயன்படுத்தப்படும் இடைச் சொல்;* particle used to express appreciation.

**நன்னடத்தைச் சான்றிதழ்** பெ. (n.) *பள்ளி, கல்லூரி போன்றவற்றில் படித்தவரின் நடத்தையைக் குறித்து வழங்கும் சான்றிதழ்;* conduct certificate.

**நனைத்தல்** வி. (v.) *ஈரமாக்குதல்;* to wet, moisten.

# நா

**நாக்கில் நரம்பில்லாமல் பேசுதல்** வி. (v.) *சொல்லக் கூடாத கடுமையான சொற்களைச் சற்றும் தயக்கமில்லாமல் பேசுதல்;* intemperater, unabashed speech.

**நாக்கு செத்துப்போதல்** வி. (v.) *நாக்கு உணவின் சுவை அறியும் தன்மையை இழந்ததுபோல் உணர்தல்;* (of tongue) lose sensation.

**நாக்குத்தள்ளுதல்** வி. (v.) *ஒன்றைச் செய்து முடிக்கத் தேவையான முயற்சியின் கடுமையால் திணறுதல்;* get exhausted.

**நாக்குநீள்தல்** வி. (v.) *பேச்சில் வரம்பு மீறுதல்;* speak in an impertinent or disrespectful way.

**நாக்குநீளம்** பெ. (n.) *சுவையான உணவை உண்பதில் அதிக நாட்டம்;* fastidiousness about food.

**நாக்குப்பூச்சி** பெ. (n.) *மாந்தர்களின் குடலிலிருந்துகொண்டு நோயை ஏற்படுத்தும் மெல்லிய புழு;* threadworm.

**நாக்குமூக்குச்சாதல்** பெ. (n.) *நாக்குப் பகுதியும், மூக்குப் பகுதியும் உணர்ச்சி யறுகை;* lose of sensation of taste and smell of the tongue and nose due to sickness.

**நாக்குவழித்தல்** வி. (v.) *நாவில் படியும் அழுக்கை வழித்து நீக்குதல்;* to scrab and clean one's tongue.

**நாக்குவாங்குதல்** வி. (v.) *1. நாக்கை உள்ளிழுத்தல்;* to draw in the tongue. *2. களைத்துப்போதல்;* to be completely exhausted, sorely tried.

**நாக்குவிழுதல்** வி. (v.) *பேச நா எழாமற் போதல்;* inability to speak.

**நாக்குழறுதல்** வி. (v.) *நாத்தழுதழுத்தல்;* to falter or stammer, as in the ecstatic joy or other emotion.

**நாக்குறுதி** பெ. (n.) *சொல் தவறாமை;* being true to one's word.

**நாக்கூசுதல்** வி. (v.) *1. விருப்பத்திற்கு ஒவ்வாத சுவையால் நாக்கில் வெறுப்புணர்ச்சி ஏற்படுதல்;* to feel irritant sensation due to unsuitable taste. *2. விரும்பாதவற்றைச் சொல்ல தயங்குதல்;* to feel bad as of telling unwanted or abusive language.

**நாக்கூறல்** பெ. (n.) *நாவில் தண்ணீர் கசிதல்;* salivation.

**நாக்கைக்கட்டுதல்** வி. (v.) *உண்ணும் உணவு வகைகளிலும் அளவிலும் கட்டுப்பாட்டுடன் இருத்தல்;* exercise control over food; be sparing in food.

**நாக்கைப்பிடுங்கிக்கொள்தல்** வி. (v.) *அவமானம் தாங்காமல் உயிரை விடுதல்;* had better die (uttered when one is faced with humiliation).

**நாக்கை வளர்த்தல்** வி. (v.) *வகை வகையான உணவுகளைச் சாப்பிடுவதிலும் உணவில் சுவை சற்றும் குறையக்கூடாது என்பதிலும் குறியாக இருத்தல்;* indulge one's palate.

**நாசப்படுத்துதல்** வி. (v.) *பேரழிவுக்கு (அ) சேதத்துக்கு உள்ளாக்குதல்;* destroy.

**நாசம்** பெ. (n.) *பேரழிவு, சேதம்;* destruction.

**நாசமாய்ப்போதல்** வி. (v.) *வாழ்க்கையில் உருப்படாமல் போதல்;* to go to rack and ruin.

**நாசவேலை** பெ. (n.) *யாரும் அறியாது செய்யும் தீய நோக்கமுடைய செயல்;* sabotage.

**நாட்குறிப்பு** பெ. (n.) *ஒருவர் தன்னுடைய அன்றாட நிகழ்ச்சிகளைக் குறித்து வைத்துக்கொள்ள மாதம், நாள், கிழமை முதலியவை குறிக்கப்பட்ட பக்கங்களையுடைய ஏடு;* dairy.

**நாட்கூலி** பெ. (n.) *ஒவ்வொரு நாளும் செய்யும் பணிக்குக் கூலி வாங்கும் அற்றைக்கூலி;* daily wages.

**நாட்டம்** பெ. (n.) *ஒருவர் மேல் (அ) ஒன்றின் மேல் விருப்பம்;* keen desire, inclination.

**நாட்டியக்காரி** பெ. (n.) *நாட்டியம் ஆடுபவள்;* dancing girl.

**நாட்டு ஓடு** பெ. (n.) *சிறியதாகவும் பிளக்கப்பட்ட மூங்கில் துண்டு போலவும் இருக்கும் வளைவான ஓடு;* country tile.

**நாட்டுக்கட்டை** பெ. (n.) *உழைத்து உரமேறிய கட்டுடல் வாய்க்கப் பெற்ற சிற்றூரைச் சார்ந்த ஆண் (அ) பெண்;* sturdy man or women of the country side.

**நாட்டுச்சக்கரை** பெ. (n.) *வெல்லம் உருவாக்கும் முறையில் சில மாற்றங்கள் செய்து தூளாகப் பெறும் பழுப்பு நிற இனிப்புப் பொருள்;* sweet

powder obtained in the process of making jaggery.

**நாட்டுச்சரக்கு** பெ. (n.) *1. வெறிநீர்;* arrack. *2. சிற்றூர்ப் புறத்தே உருவாக்கும் பழக்கலவைக் காடி;* a local fruit beverage imitating the foreign wire.

**நாட்டுப்பற்று** பெ. (n.) *ஒருவர் தன் நாட்டு நலனிலும், வளர்ச்சியிலும் கடமை உணர்வோடு இருக்கும் ஈடுபாடு;* patriotism, love for one's country.

**நாட்டுமருந்து** பெ. (n.) *சிற்றூர்களில் இயற்கையாகக் காணப்படும் பச்சிலை மூலிகை;* native herbal medicine.

**நாட்டுவைத்தியம்** பெ. (n.) *உள்நாட்டிலேயே கிடைக்கும் மூலிகை, வேர் போன்றவற்றைப் பயன்படுத்திச் செய்யப்படும் மருத்துவம்;* indigenous system of medicine.

**நாட்பட்டநோய்** பெ. (n.) *தீராதநோய்;* chronic disease.

**நாடகமடித்தல்** வி. (v.) *1. பாசாங்கு செய்தல்;* to play the hypocrite. *2. புறத்தே மாற்றுருக்காட்டுதல்;* to make an outward show. *3. வீணே, பகட்டாரவாரங் காட்டுதல்;* to be showy, ostentatious.

**நாடகமாடுதல்** வி. (v.) *பிறரை நம்பச் செய்யும் பொருட்டு நடித்தல்;* feign innocence, play the innocent.

**நாடிக்குறிப்பு** பெ. (n.) *குருதியோட்ட நிலைமை;* the state of blood in the arteries.

**நாடித்துடிப்பு** பெ. (n.) *1. குருதியோட்டத்தினால் உடம்பில் பலவிடங்களில் காணும் படபடப்பு;* the beating of the pulse felt at several parts of the body owing to the circulation of blood. *2. நாடி விரைவாய் அடித்தல்;* rapid pulsation.

**நாடியொடுங்குதல்** வி. (n.) *1.நாடித் துடிப்பின் ஒடுக்கம்;* sinking of the pulse. *2. துணிவிழக்கை; மன உறுதி குறைகை;* losing courage and hope. become down hearted.

**நாடுகடத்துதல்** வி. (v.) *நாட்டிற்கு இரண்டகம் செய்தல், கமுக்கச் செய்திகளை வெளியிட்டுக் காட்டிக் கொடுத்தல் போன்ற சட்டத்திற்குப் புறம்பான செயல்களுக்கு நாட்டை விட்டு வெளியேற்றுதல்;* to exile; to banish.

**நாடோடி** பெ. (n.) *ஓர் இடத்திலும் நிலையாக இல்லாமல் பல்வேறு இடங்களுக்குச் சென்று பிழைப்பு நடத்தி வாழ்பவர்;* nomad, wanderer.

**நாடோடி இனம்** பெ. (n.) *நிலைத்து வாழாது ஊர் சுற்றித் திரிந்து தொழில் புரியும் இனம்;* nomads; vagabond.

**நாடோடிக் கதை** பெ. (n.) *நாடோடிகளின் வாழ்வியல் கதை;* nomad stories.

**நாடோடிக்கூட்டம்** பெ. (n.) *கூட்டங் கூட்டமாக வாழும் நாடோடிக் குழுமம்;* nomad's group.

**நாணிக்கோணுதல்** வி. (v.) *வெட்கத்தால் உடலை வளைத்தல்;* feel shy.

**நாத்தனார்** பெ. (n.) *கணவனின் உடன்பிறந்தாள்;* one's husband's sister.

**நாமக்கட்டி** பெ. (n.) *நாமம் போட்டுக் கொள்ளப் பயன்படுத்தும் வெள்ளைக் களிமண் கட்டி;* pipe clay.

**நாமம்போடுதல்** வி. (v.) *ஒருவரை வல்லமையாக ஏமாற்றுதல்;* beguile, trick.

**நாய்ப்பிழைப்பு** பெ. (n.) *வருந்தி நொந்து கொள்ளக்கூடிய அளவுக்கு அமைந்திருக்கும் வாழ்க்கை நிலை;* wretched life; a dog's life.

**நாய்வண்டி** பெ. (n.) *தெரு நாய்களைப் பிடித்து ஏற்றிச் செல்லும் கூண்டுஊர்தி;* van for transporting stray dogs caught in the street.

**நாயாய் அலைதல்** வி. (v.) *ஒரு வேலையை முன்னிட்டுப் பல இடங்களுக்கும், ஓய்வில்லாமலும் தொடர்ந்தும் பல முறை சென்று வருதல்;* go after.

**நார்க்கயிறு** பெ. (n.) *தேங்காய், பனைமட்டை இவற்றின் நாரிலிருந்து திரிக்கப்படும் கயிறு; கொச்சுக்கயிறு;* coir rope.

**நார்ச்சத்து** பெ. (n.) *நாம் உண்ணும் உணவில் இருக்கும் செரிக்கப்பட முடியாததும், மலத்தை எளிதில் வெளியேற்ற உதவுவதுமான பொருள்;* fibrous matter.

**நார்நாராகக் கிழித்தல்** வி. (v.) *ஒருவரை (அ) ஒன்றை மிகக் கடுமையாகத் திட்டுதல்;* criticize harshly.

**நார்ப்பட்டு** பெ. (n.) *பட்டாடை போன்றதும் நாராற் செய்ததுமான ஆடை வகை;* cloth made of fibres.

**நாரதர்வேலை** பெ. (n.) *ஆட்களிடையே கலகம் மூட்டும் செயல்;* act that causes discord.

**நாலு எழுத்து** பெ. (n.) *பிறர் மதிக்கத்தக்க அளவிலான கல்வியறிவு;* a little education.

**நாலுகாசு** பெ. (n.) *பிறர் தன்னை மதிக்கிற அளவுக்கு (அ) ஒன்றைத் தனித்து நின்று செய்கிற அளவுக்குப் போதிய பணம்;* money necessary.

**நாலும் தெரிந்தவர்** பெ. (n.) *உலக நடப்பை நன்கு அறிந்தவர்;* person of worldly knowledge, worldly wise person.

**நாவடக்குதல்** பெ. (n.) *உணவின் சுவையை நாக்கு அடக்கிவைத்தல்;* to suppress the sense of taste.

**நாவடைத்துப்போதல்** வி. (v.) *பேச முடியாமற்போதல்;* to become speechless.

**நாவுதல்** வி. (v.) *கொழித்தல்;* to winnow and clear grain from stones.

**நாள்காட்டி** பெ. (n.) *குறிப்பிடும் ஆண்டுக்கு உரிய மாதம், நாள், கிழமை முதலியவற்றைக் காட்டும் அச்சடிக்கப்பட்ட தாள்;* calendar.

**நாள்குறித்தல்** வி. (v.) *நற்செயல்களுக்கு உரிய நாளைத் தேர்ந்தெடுத்தல்;* to select on auspicious day for good events.

**நாள்போக்குதல்** வி. (v.) *வீணே, பொழுது போக்குதல் (அ) யாதொரு பயனுமின்றிக் காலத்தைக் கழித்தல்;* to spend time vainly.

**நாள்வைத்தல்** வி. (v.) *மங்கல நாள் குறித்து உறுதி செய்தல்;* to fix an auspicious day.

**நாளடைவில்** வி. (v.) *நாள் செல்லச் செல்ல;* incourse of time.

**நாளும் கிழமையுமாக** வி. (v.) *வீட்டில் மங்கல நிகழ்ச்சி நடக்கும்போது மகிழ்ச்சியாக இருக்க வேண்டிய சிறப்பு சூழலில் சொல்வது;* days of celebration.

**நாளும் நினைத்தல்** வி. (v.) *ஒவ்வொரு நாளும் இடைவிடாது எண்ணுதல்;* to think everyday without break.

**நாளை எண்ணிக்கொண்டிருத்தல்** வி. (v.) *ஒரு நிகழ்வு நடக்கப்போகும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்து எண்ணிக் கொண்டிருத்தல்;* count the days.

**நாளோட்டுதல்** வி. (v.) *1. காலங்கழித்தல்;* to pans one's days. *2. காலத்தாழ்வு செய்தல்;* to delay.

**நாற்சந்தி** பெ. (n.) *நான்கு தெருக்கள் சந்திக்கும் இடம்;* junction of four streets.

**நாற்றங்கால்** பெ. (n.) *நாற்றுகளை வளர்க்கும் இடம்;* seedbed.

**நாற்றம்** பெ. (n.) *அருவருப்பான மணம், துர்நாற்றம்;* offensive smell.

**நாற்றம்வீசுதல்** வி. (v.) *தீயநாற்ற மடித்தல்;* to emit a bad smell.

**நாற்றமாற்றி** பெ. (n.) *தீயமணத்தைத் தடுக்கும் பொருட்களான கரித்துகள், சாம்பல் மண், அரம்பத்தூள் முதலியன;* deodorising powders such as charcoal dust.

**நாற்று** பெ. (n.) *பிடுங்கி வேறு இடத்தில் நடுவதற்கான இளம் பயிர்;* seedlings reard for transplantation.

**நாற்றுக்கட்டு** பெ. (n.) *நாற்று முடிகளின் தொகுதி;* a bundle of seedling.

**நாற்றுப்பறித்தல்** வி. (v.) *நாற்றங்காலிலிருந்து நெல் நாற்றுகளைப் பெயர்த்து எடுத்தல்;* to transplant as of paddy nursery.

**நாற்றுப்பாத்தி** பெ. (n.) *நாற்று உண்டாக்கும் செய்;* seed bed, nursery.

**நாற்றுப்பாவுதல்** வி. (v.) *1. வித்தூன்றுதல் (அ) விதை விதைத்தல்;* to sow seeds. *2. இளஞ்செடி பதியம் வைத்தல்;* to transplant seedlings.

**நாற்றுமுடி** பெ. (n.) *ஒரு சேரக்கட்டிய நாற்றின் முடிப்பு;* a small bundle of seedling for transplantation.

**நாற்றுவிடுதல்** வி. (v.) *நாற்று உண்டாக்க விதை விதைத்தல்;* to grow seedlings.

**நாறடித்தல்** வி. (v.) *தரக்குறைவாக நடந்து மதிப்பின்மையை உருவாக்குதல்;* to talk or behave in an extremely brazen manner.

**நாறல்** பெ. (n.) *1. முடை நாற்றம்;* stench, bad smell. *2. நாற்றமுடையது;* stinking objects.

**நாறுதல்** வி. (v.) *கெட்ட நாற்றம் வீசுதல்;* to stink.

# நி

**நிகழ்ச்சி** பெ. (n.) *1. நேர்ச்சி;* incident. *2. நிலைமை;* situation. *3. இக்காலம்;* present moment. *4. தொலைக்காட்சி, வானொலி முதலியவற்றில் நடத்திக் காட்டப்படுவது;* programme.

**நிச்சயத்தாம்பூலம்** பெ. (n.) *திருமணத்தை உறுதிப்படுத்த மணமகனின் தகப்பன் மணமகளின் தகப்பனுக்குத் தாம்பூலம் அளிக்கை;* presentation of betel.

**நிச்சயித்தல்** வி. (v.) *உறுதிப்படுத்துதல்;* to ascertain, confirm

**நிந்தித்தல்** வி. (v.) *இகழ்தல், பொருட்படுத்தாதிருத்தல், பழிப்பு;* vilifi- cation, disrespect.

**நிப்பாட்டுதல்** வி. (v.) *1. நிறுத்துதல்;* to leave, as an employment; to stop. *2. காலந்தாழ்த்துதல்;* to delay

**நிம்மதி** பெ. (n.) *1. கவலை இல்லாத நிலை; மன அமைதி;* state of relief. *2. இடையூறு இல்லாமை;* rest.

**நிமிண்டுதல்** வி. (v.) *கிள்ளுதல்;* to pinch, nip off, with the fingers.

**நிமிர்த்துதல்** வி. (v.) *1. நேராக நிற்கச் செய்தல்;* to straighten up. *2. வளைவு நீக்குதல்;* to unfold.

**நிரப்பிவிடுதல்** வி. (v.) *1. நிறைவு செய்தல்;* to complete. *2. நிறைகுடத்தடியில் நெற்பரப்புதல்;* to strew paddy round a niraikudam.

**நிரம்பாத்தூக்கம்** பெ. (n.) *அரைத்தூக்கம்;* unsound sleep.

**நிரம்பிவழிதல்** வி. (v.) *அளவுக்கதிகமாக நிறைந்து காணுதல்;* over flow, spill over.

**நிரவுதல்** வி. (v.) *1. சமனாக்குதல்;* to level. *2. குறைதீர்த்தல்;* to make up a deficiency. *3. சரிமன் படுத்துதல்;* to equalise.

**நிலக்கடலை** பெ. (n.) *வேர்க்கடலை, எண்ணெய் எடுக்கப் பயன்படுவதும் உணவுப் பொருளாகப் பயன்படுவதுமான பருப்பு;* ground nut.

**நிலக்கிழார்** பெ. (n.) *பேரளவிலான விளை நிலத்தைச் சொத்தாக வைத்திருப்பவர்; பெரும் நில உடைமையாளர்;* land owner, land lord.

**நிலச்சரிவு** பெ. (n.) *மேடான இடத்திலிருந்து மண், மலையிலிருந்து பாறை, கல் முதலியவை திடுமெனப் பெயர்ந்துவிழுதல்;* landslide.

**நிலத்தடிநீர்** பெ. (n.) *நிலத்தின் அடியில் இருக்கும் நீர்;* ground water.

**நிலநடுக்கம்** பெ. (n.) *நிலத்தின் மேற்பரப்பு அடையும் அதிர்வு;* earthquake.

**நிலபுலம்** பெ. (n.) *புன்செய், நன்செய் நிலம்;* dry and wet lands.

**நிலவரம்** பெ. (n.) *1. நடப்பு நிலை, சூழ்நிலை (நாடு, வீடு முதலியவற்றின்)* condition. *2. (விற்பனை, அளவு முதலியவற்றின்) நிலைமை;* report.

**நிலவரி** பெ. (n.) *விளைநிலத்துக்காக அரசு தண்டும் ஆண்டு வரி;* land revenue.

**நிலாச்சோறு** பெ. (n.) *நிலவொளியில் உண்ணும் உணவு;* moonlight dinner.

**நிலுவை** பெ. (n.) *1. வரவேண்டிய தொகையின் மீதித்தொகை;* arrears. *2. வழக்கு, திட்டம் போன்றவற்றில் நடவடிக்கை எடுக்கப்படாத நிலை;* pending.

**நிலைக்கண்ணாடி** பெ. (n.) *உடல் முழுவதும் பார்க்கும்படி ஓரிடத்து நாட்டப்பட்ட பெரிய கண்ணாடி;* a large fixed mirror.

**நிலைகுலைதல்** வி. (v.) *1. நிலைமை தவறுதல்;* to be ruined in circumstances. *2. நெறிவழுவுதல்;* to swerve from the path of virtue. *3. சீர் குலைதல், சீர் கெடுதல்;* get disrupted.

**நிலைநாட்டுதல்** வி (v.) *நிலை கொள்ளும்படிச் செய்தல், நிலைக்கச் செய்தல், நிறுவுதல்;* enforce (peace, law and order, establish rights, facts, etc.,).

**நிலைமாறுதல்** வி. (v.) *1. இடம் முதலியன நிலை மாறுதல்;* to change in place, principles or circumstances; change of state. *2. சொல்லில் எழுத்துகள் இடம் பிறழ்தல்;* to be transposed as letters in words.

**நிலைமை** பெ. (n.) *ஓர் இடம் அல்லது ஒருவர் இருக்கும் நல்ல அல்லது இக்கட்டான சூழ்நிலை;* situtation, environment.

**நிலையழிதல்** வி. (v.) *தன்னிலையில் தாழ்தல், இழிதல், தோற்றுப் போதல்;* to defeat.

**நிலையறிதல்** வி. (v.) *1.எண்ணம் அறிதல்;* to know the idea. *2. நிலைவரமறிதல்;* to know the condition.

**நிலையாமை** பெ. (n.) *1. உறுதியிராமை, நிலையில்லாமை;* instability, as of riches; transitoriness. *2. உறுதியின்மை;* fickleness, wavering.

**நிலையூன்றுதல்** வி. (v.) *1. உறுதிப்படுதல்;* to obtain a firm footing, become firmly settled in a place. *2. மர முதலிய வேரூன்றுதல்;* to become firmly, rooted as a tree.

**நிழலாடுதல்** வி. (v.) *எந்த ஓர் உணர்வும் மெல்லியதாகத் தெளிவின்றித் தோன்றுதல்;* (of emotions) to appear vaguely; to be overshadowed by something.

**நிழலுலர்த்தல்** பெ. (n.) *நிழலில் மருந்து முதலியவைகளை உலரவைக்கை;* drying in the shade, as medicines.

**நிழற்குடை** பெ. (n.) *(போக்குவரத்தை ஒழுங்குபடுத்தும் காவலர்க்கும். பேருந்துக்காகக் காத்திருக்கும் மக்களுக்கும்) நிழல் தருவதற்காக வட்டமான (அ) நீள் செவ்வகக் கூரையுடைய அமைப்பு;* shelter.

**நிழற்கூத்து** பெ. (n.) *பாவையின் நிழலைத் திரையில் விழச் செய்து நிகழ்த்தும் ஆட்டவகை;* shadow puppet play.

**நிற்றல் (நில்தல்)** வி. (v.) *1. கால்கள் ஊன்றி உடம்பு முழுவதும் நெடிதாக நிமிர்ந்திருத்தல்;* to stand. *2. காலந் தாழ்த்துதல்;* to wait. *3. நிலைத் திருத்தல்;* to be permanent.

**நிறுத்திச்சொல்லுதல்** வி. (v.) *வேக மின்றித் தெளிவாய்ச் சொல்லுதல்;* to pronounce slowly and distinctly with proper pauses.

**நிறுத்தியெழுதுதல்** வி. (v.) *1. செவ்வை யாயிருக்கும்படி மெதுவாய் எழுதுதல்;* to write legibly and slowly. *2. இடம் விட்டு எழுதுதல்;* to leave proper spaces in writing.

**நிறுத்திவிடுதல்** வி. (v.) *தொடர்ந்து நிகழ்ந்துக் கொண்டிருக்கும் ஒரு செயலை நிறுத்துதல்;* to stop the continous process.

**நிறுத்திவைத்தல்** வி. (v.) *தொடர்ந்து நிகழ்ந்துக் கொண்டிருக்கும் ஒரு செயலை இடைக்காலமாக நிறுத் துதல்;* to stop temporarily the continuous process.

**நிறுத்துதல்** வி. (v.) *1. மேற்செல்லா திருக்கச் செய்தல்;* to stop as a person; to arrest progress. *2. தள்ளிவைத்தல்;* to put off. *3. படிக்கும்போதும், பாடும் போதும் உரியவிடங்களில் நிறுத் துதல்;* to make proper pauses, as in reading or singing.

**நிறுவனர்** பெ. (n.) *ஓர் அமைப்பைத் தொடங்கியவர்;* founder.

**நிறைதல்** வி. (v.) *1. நிரம்புதல்;* to become full to be replete. *2. மிகுதல்;* to abound. *3. எங்கும் நிறைந்திருத்தல்;* to be everywhere.

**நிறைமாதம்** பெ. (n.) *முழுவளர்ச்சி அடைந்த குழந்தையைப் பெற்றெடுக் கும் பத்தாவது மாதம்;* the last month of pregnancy.

**நிறைவுவிழா** பெ. (n.) *ஒன்று முடிவு பெறும் நாளில் நிகழ்த்தப்படும் விழா;* concluding function.

**நிறைவேற்றுதல்** வி. (v.) *முடிவு பெறும் படி (அ) பயன்கிடைக்கும்படி நடவடிக்கை மேற்கொள்ளுதல்; செயற்படுத்துதல்;* to carry out, to fulfil, to implement. *2. நடத்துதல்;* to perform.

**நின்றுபோதல்** வி. (v.) *வேலை முதலியன நடவாதுபோதல்;* to stop, cease as work.

**நின்னாங்கூலி** பெ. (n.) *வேலை செய்யாமல் நின்றுகொண்டு கூலி பெறுதல்;* getting wages without doing any work.

**நினைத்தல்** பெ. (n.) *1. கருதுதல்;* to think. *2. நினைவிற்கொணர்தல்;* be remember. *3. நோக்கமாகக் கொள்ளுதல்;* to intend design, have in view. *4. கற்பனை செய்தல்;* to imagine.

**நினைப்பாயிருத்தல்** செ.கு.வி. (v.i.) *ஒரு செயலின் மீதே மனத்தை நிலைப் படுத்துதல்;* to concentrate one's thoughts.

**நினைப்பூட்டுதல்** வி (v.) *1. நினைவு படுத்துதல்;* to put in mind. *2. அறிவுறுத்துதல்;* to suggest, indicate.

**நினைவஞ்சலி** பெ. (n.) *ஒருவர் இறந்த நாளில் அவரை நினைத்துச் செலுத்தும் நினைவேந்தல், இரங்கல்;* homage, someones death anniversary.

**நினைவுச்சின்னம்** பெ. (n.) *நினைவில் நிறுத்துவதற்காகவும், நன்றியைத் தெரிவிப்பதற்காகவும் அடையாள மாக நிறுவப்படுவது;* memorial, monument.

**நினைவுமறதி** பெ. (n.) *மறந்துவிடுதல், நினைவின்மை;* loss of memory.

**நீக்குதல்** வி. (v.) *1. ஒருவரைப் பதவியிலிருந்து வெளியேற்றுதல்.* remove, dismiss *2. ஒதுக்குதல்;* draw aside. *3.விடுவித்தல்;* to extricate. *4. அழித்தல்;* to kill, despatch.

**நீக்குப்போக்கு** பெ. (n.) *சூழ்நிலைக் கேற்றாற் போல் (நெளிவு சுளிவாக நடந்துக்கொள்ளல்) ஒத்துப் போதல்;* adaptability; flexibility.

**நீச்சத்தண்ணி** பெ. (n.) *பழைய சோற்றில் கலந்துள்ள நீர்;* cooked rice mixed with water and kept overnight.

**நீச்சல் உடை** பெ. (n.) *நீந்துவதற்கு ஏந்தாக உடலோடு ஒட்டியதுபோல் வடிவமைக்கப்பட்ட உடை;* swim wear.

**நீச்சல்குளம்** பெ. (n.) *நீந்துவதற்காகச் செயற்கையாக அமைக்கப்பட்ட குளம்;* swimming pool.

**நீச்சல்போட்டி** பெ. (n.) *குறிப்பிட்ட தூரத்தை விரைவாக நீந்திக்கடக்கும் வகையில் நடத்தப்படும் போட்டி;* swimming competition.

**நீட்டாய்ப்போதல்** வி. (v.) *1. நேராய்ப் போதல்;* to go straight. *2. நேராய் நடத்தல்;* to walk straight.

**நீட்டிப்பு** பெ. (n.) *வரையறுக்கப்பட்ட காலம்; முடிந்த பிறகு தொடரும் கால அதிகரிப்பு;* extension.

**நீர்க்கட்டுதல்** வி. (n.) *1. சிறுநீர் தடைப் பட்டிருக்கும் நோய்;* retention or stoppage of urine. *2. நீரால் உண்டாகும் உடல் வீக்கம்;* dropsy.

**நீர்க்கடுப்பு** பெ. (n.) *சிறுநீர் கழிக்கும் போது ஏற்படும் எரிச்சலும் வலியும்;* feeling irritation while passing urine.

**நீர்ச்சத்து** பெ. (n.) *சுரைக்காய், பூசணிக் காய் போன்ற காய்கறிகளிலும் மிகுந்து காணப்படும் சத்து மிகுந்த நீர்த்தன்மை;* the quality of being succulent.

**நீர்ச்சறுக்கு விளையாட்டு** பெ. (n.) *சிறப்பியல்பாக வடிவமைக்கப்பட்ட பலகையின் உதவியால் கடல் அலைகளின் மேல் சறுக்கி விளையாடும் விளையாட்டு;* surfing.

**நீர்த்துப்போதல்** வி. (v.) *உணவின் பதம் கெடுதல், நீரின் தன்மையடைதல்;* to become watery.

**நீர்தெளித்தல்** வி. (v.) *தூய்மை செய்வதற்காக நீர் தெளித்தல்;* to sprinkle water for purification.

**நீர்நாய்** பெ. (n.) *ஏரி, ஆறு போன்ற நீர் நிலைகளில் காணப்படும் நாயைப் போன்ற முக அமைப்புக் கொண்ட ஒரு விலங்கு;* otter.

**நீர்நிலவாழ்வன** பெ. (n.) *நீரிலும் நிலத்திலும் வாழ்வதற்கு ஏற்ற உடல் அமைப்பைப் பெற்றுள்ள விலங்கினம்;* amphibians.

**நீர்நிலை** பெ. (n.) *ஆறு, ஏரி, குளம் முதலியவற்றைக் குறிக்கும் பொதுப் பெயர்;* common name for water sources.

**நீர்மட்டம்** பெ. (n.) *அணை, ஏரி முதலியவற்றில் தேக்கப்பட்டிருக்கும் நீரின் உயரம்;* level of water.

**நீர்மாலை** பெ. (n.) *உயிர் நீங்கிய உடலைக் குளிப்பாட்ட நீர் கொண்டுவருஞ் சடங்கு;* ceremony of bringing water for bathing a corpse before cremation or burial.

**நீர்மோர்** பெ. (n.) *மோருடன் நீர் நிறைய விட்டு கறிவேப்பிலை, உப்பு, சீரகம், காயமிட்டு தாளிதம் செய்து பருகுதல்;* buttermilk diluted and mixed with certain ingredients, used as a drink.

**நீர்விளாவுதல்** வி. (v.) *1. சரியான சூட்டிற்காக வெந்நீரோடு தண்ணீர் கலத்தல்;* adding or mixing cold water with hot water. *2. படையல் முடிகையில் புனித நீரிட்டு வணங்குதல்;* at the end of worship sprinkle the holy water.

**நீராகாரம்** பெ. (n.) *முதல் நாள் இரவு வடித்த சோற்றில் நீர் ஊற்றிவைக்கப் பட்டதால் சற்றே புளித்த நீர்;* water in which cooked rice is kept overnight.

**நீராடுதல்** வி. (v.) *1. எண்ணெய்க் குளியல்;* oil bath. *2. குளித்தல்;* to bath.

**நீருட்டபானம்** பெ. (n.) *உடலிலிருந்து நீரிழப்பினால் வெளியேறும் நீர்ச் சத்தை ஈடுகட்ட உட்கொள்ளப்படும் பானம்;* rehydration drink.

**நீரேற்றுநிலையம்** பெ. (n.) *குழாய் வழி யாக நீர் எல்லா இடங்களுக்கும் சீராகச் செல்வதற்கான அழுத்தத்தைத் தரும் எந்திரம் உள்ள நிலையம்;* water pumping station.

**நீலிக்கண்ணீர்** பெ. (n.) *உண்மையான வருத்தமின்றிப் பொய்யாக வடிக்கும் கண்ணீர்;* insincere tears.

**நீவுதல்** வி. (v.) *1. தடவிக்கொடுத்தல்;* to stroke, handle softly. *2. தாள், துணி போன்றவற்றைச் சுருக்கமின்றி அழுத்தி இழுத்தல்;* smooth out, to press.

**நீற்றுருண்டை** பெ. (n.) *திருநீற்றுக்காக உருட்டிவைக்கும் சாணவுருண்டை;* cow dung ball for preparing sacred ashes.

**நீறுபூத்தல்** பெ. (n.) *1. சாம்பல்நிறம் பிடித்தல்;* to be covered with dirt, ashy coating. *2. உடலில் அழுக்குப்படிதல்;* to be covered with dirt, as the body.

# நு

**நுங்கு** பெ. (n.) *இளம்பனங்காய்க்குள் அமைந்துள்ள இனிப்புச் சுவை யுடைய வழவழப்பான சதைப்பகுதி;* pulpy kernal of a tender palmyra fruit.

**நுங்குந்நுரையுமாக** வி.எ. (adv.) *நீர்மப் பொருளின் மேலெழும் நுரை;* foamy. *'ஆற்றில் வெள்ளம் நுங்கும் நுரையு மாக கரைபுரண்டு ஓடியது'.*

**நுணுக்கெழுத்து** பெ. (n.) *பொடியாக எழுதும் எழுத்து;* letter written in a very small hand. *'அவள் மிகவும் நுணுக் கெழுத்தில் எழுதுவாள்'.*

**நுணுகி** வி.எ. (adj.) *1. கூர்ந்து;* with a sharp focus. *'பாட்டின் பொருளை நுணுகி ஆராய்ந்து பார்க்க வேண்டும்'.* *2. மெலிந்து;* lean. *'இசைக்கலையை நுணுகி ஆராய்ந்து படித்திருக்கிறார் என்பது அவரின் பேச்சில் இருந்து தெரிகிறது'.*

**நுரைத்தல்** வி. (v.) *1. நீர் முதலியன கொப்புளங்கொள்ளுதல்;* to froth, foam, effervescence. *'மாட்டின் வாய் நுரை தள்ளுகிறது'.* *2. நுரைவரும் படிச் செய்தல்;* to work up a lather. *'வழலைக் கட்டியை நுரைக்கக் குழைத்து முகத்தில் பூசு'.*

**நுரைத்தெழுதல்** வி. (v.) *பொங்குதல்;* effervescence. *'சர்க்கரைப்பாகு நுரைத் தெழுகிறது, பார்த்து இறக்கு'.*

**நுரைதள்ளுதல்** வி. (v.) *நுரையை வாயி லிருந்து வெளியிடுதல்;* to foam at the mouth. *'விரைவாக ஓடிவந்த காளை யின் வாயில் நுரை தள்ளுகிறது'.*

**நுழை** பெ. (n.) *சிறுவழி;* narrow way.

**நுழைதல்** வி. (v.) *1. இடுக்கலான இடைவழியுட்செல்லுதல்;* to creep through a narrow passage; to penetrate. *'திருடன் பலகணி வழியாய் வீட்டிற்குள் நுழைந்துவிட்டான்'.* *2. நுண்ணிதாக விளக்குதல்;* to be impressed in one's mind. *'அது அவன் அறிவில் நுழையவில்லை'.*

**நுழைவாசல்** பெ. (n.) *திட்டிவாசல்;* low or small gate, wicket. *'இந்தியாவின் நுழைவாயில் மும்பை'.*

**நுழைவாயில்** பெ. (n.) *கட்டடம், திடல் முதலியவற்றினுள் செல்வதற்கு வெளி*

எல்லையில் உள்ள திறப்பு; entrance. *'விளையாட்டுத்திடலின் நுழை வாயிலில் தோரணங்கள் கட்டப் பட்டுள்ளன'.*

**நுழைவுச்சீட்டு** பெ. (n.) ஒன்றில் நுழை வதற்கு அல்லது இடம் பெறுவதற் குரிய இசைவுச் சீட்டு; entrance ticket. *'நுழைவுச்சீட்டு இல்லாமல் தேர்வு எழுத முடியாது'.*

**நுழைவுத்தேர்வு** பெ. (n.) வேலைக்கோ, படிப்புக்கோ இசைவு பெறும் முன் நடத்தப்பெறும் தேர்வு; entrance examination.

**நுனிப்புல் மேய்தல்** வி. (v.) கற்றல். ஆய்தல் போன்றவற்றை மேலோட்டமாகச் செய்தல்; (read, research, etc.,) do something superficially.

## நூ

**நூற்குண்டு** பெ. (n.) *(கட்டட வேலையில் சுவர் செங்குத்தாக இருக்கிறதா என்பதைச் சரிபார்க்கப் பயன் படுத்தும்) நீண்ட உறுதியான நூலின் ஒரு நுனியில் மாழை (உலோக)க் குண்டையும் உடையக்கருவி (சாதனம்);* plumb - line.

**நூற்றுக்கு நூறு** பெ.அ. (adj.) *முழுவதும்; முற்றிலும்;* entirely; one hundred percent. *'நான் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை'.*

## நெ

**நெசவாலை** பெ. (n.) *துணி நெய்யும் தொழிற்சாலை;* weaving mill or factory.

**நெசவுக்காரன்** பெ. (n.) *நெய்வோன்;* weaver.

**நெசவுக்கூலி** பெ. (n.) *நெய்த நூலிற்கு, துணிக்குக் கிடைக்கும் கூலி;* wage for the weaved thread or cloth.

**நெஞ்சடைத்தல்** வி. (v.) *1. மூச்சுத் திணறுதல்;* to suffocate. *2. தொண்டை அடைத்தல்;* obstruction of throat as bronchitis. *'அந்தச் செய்தியைக் கேட்டதும் அவனுக்கு நெஞ் சடைப்பது போலாயிற்று'.*

**நெஞ்சடைப்பு** பெ. (n.) *மாரடைப்பு;* obstruction in the chest. *'அவருக்கு திடீரென நெஞ்சடைப்பு வந்து விட்டது'.*

**நெஞ்சழுத்தம்** பெ. (n.) *1. மன இறுக்கம்;* hard heartedness. *'அவனுக்கு நெஞ் சழுத்தம் அதிகம்'. 2. நெஞ்சுறுதி;* firmness of mind. *'எவ்வளவு நெஞ் சழுத்தம் இருந்தால் இச்செயலைச் செய்வாய்'.*

**நெஞ்சுக்கரகரப்பு** பெ. (n.) *1. மார்பில் ஏற்படும் ஓர் உணர்ச்சி;* feeling of a peculiar stimulating or inflammatory sensation in the chest. *2. தொண்டை கரகரப்பு;* irritation of the throat. *'காலையில் இருந்து நெஞ்சு கரகரத்துக் கொண்டேயிருக்கிறது'.*

**நெஞ்சுக்குழி** பெ. (n.) *குவடு;* depression (seen in the middle of the chest).

**நெஞ்சுகரித்தல்** பெ. (n.) *1. செரியாமை போன்றவற்றால் புளிமம் (அமிலம்) சுரந்து நெஞ்சில் ஏற்படும் ஒருவகை எரிச்சல்;* nausea, as from eating to excess or from eating acids or sweets. *'காலையில் பொங்கல் சாப்பிட்ட திலிருந்து நெஞ்சுகரிக்கிறது'. 2. பொறாமை கொள்ளுகை;* enviousness.

**நெஞ்சுபதறுதல்** வி. (v.) *மனம் நடுக் குறுதல்;* to be agitated in mind. *'அவன் செய்த செயலைப் பார்த்ததும் நெஞ்சு பதறுகிறது'.*

**நெஞ்சுருகுதல்** வி. (v.) *மனமிளகுதல்;* to melt, as heart. *'தேர்வில் வெற்றி பெற வேண்டும் என இறைவனை நெஞ்சுருகி வேண்டிக்கொண்டான்'.*

**நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு** வி.அ. (adv.) *கர்வம் கலந்த பெருமிதத்துடன்;* proudly.

**நெஞ்சைப்பிசைதல்** வி. (v.) *(துயரம், ஏக்கம் போன்ற உணர்வுகள் ஒரு வருடைய) உள்ளத்தை உருக்குதல்; மனத்தை வருத்துதல்;* overwhelm (with sorrow); wring one's heart.

**நெஞ்செரிச்சல்** பெ. (n.) *1.* *செரியாமை போன்றவற்றால் ஏற்படும் மார்பெரிச்சல்;* burning sensation in the chest as from disease. *2.* *நெஞ்சாங் குலை எரிச்சல்;* heart burn. *'நெஞ் செரிச்சல் மிகவும் அதிகமாக யிருக்கிறது'.*

**நெட்டித்தள்ளுதல்** வி. (v.) *ஒருவரை அல்லது ஒன்றினை விசையோடு கைகளால் தள்ளுதல்;* to push violently. *'திருடனைக் காவலாளி நெட்டித் தள்ளினான்'.*

**நெட்டிமுறித்தல்** வி. (v.) *1.* *சோம்பல் முறித்தல்;* to stretch onself. *'படுக் கையில் இருந்து நெட்டி முறித்துக் கொண்டே எழுந்தான்'.* *2.* *மடக்கிய அல்லது நீட்டிய விரல்களை அழுத்தி ஒலியுண்டாகுமாறு செய்தல், சொடுக் குப் போடுதல்;* make a sharp crackling sound by pressing finger. *'விளக்கு வைத்த நேரத்தில் நெட்டி முறிக்காதே என்று பாட்டி திட்டினாள்'.*

**நெட்டியெடுத்தல்** வி. (v.) *1.* *விரல்களில் சொடுக் கெடுத்தல்;* to crack the fingers, knuckles or toes. *2.* *வருத்துதல்;* to oppress, exact heavy work. *'வேலை இன்று நெட்டி யெடுத்துவிட்டது'.*

**நெட்டுக்குத்தலாக** பெ.எ. (adj.) *நெட்டுக் குத்து பார்க்க.*

**நெட்டுக்குத்து** பெ. (n.) *செங்குத்து;* perpendicularity. *'விழுந்தவன் நெட்டுக்குத்தாக எழுந்து நின்றான்'.*

**நெட்டுடைத்தல்** வி. (v.) *செருக்கை யடக்குதல்;* to put down or break one's pride. *'அந்தச் சண்டையில் அவன் நெட்டுடைந்தது'.*

**நெட்டை** பெ. (n.) *நெடுமை, மிக்கவுயரம்;* tallness. *'நெட்டை நெடுமரம்'.*

**நெடி** பெ. (n.) *மிளகாய் முதலியவற்றின் கமறல் நாற்றம்;* pungent odour causing a choking sensation as of fried chillies. *'மிளகாய் நெடி மிகுதி'.*

**நெடுங்கணக்கு** பெ. (n.) *தமிழில் உயி ரெழுத்துகளும் மெய்யெழுத்துகளும் அமைந்திருக்கும் வரிசை முறை;* the order of the tamil alphabet.

**நெடுங்கயிறு** பெ. (n.) *நீளமான கயிறு;* long rope. *'கிணற்றுக்கு நெடுங்கயிறு ஒன்று வாங்கிவா'.*

**நெடுசாண்கிடையாக** வி.அ. (adv.) *(வணங்கும்போது) உடம்பு முழு வதும் தரையில் படும்படியாக;* prostrating at full length.

**நெடுநெடு என்று** வி.அ. (adv.) *குறிப் பிடத்தக்க அளவுக்கு உயரமாக;* very tall. *'இரண்டு வருடத்தில் நெடுநெடு என்று வளர்ந்துவிட்டான்'.*

**நெத்தியடி** பெ. (n.) *செயலிழக்கச் செய்யும் தாக்குதல்;* crushing blow.

**நெம்புதல்** வி. (v.) *(கனமான பொருள் அசையும் வகையில் அதன் அடியில் கடப்பாரை, நீளமான கழி போன்ற வற்றைக் கொடுத்து) விசையுடன் அழுத்துதல்; உரிய நிலைக்கு வருமாறு அழுத்துதல்;* lever.

**நெய்** பெ. (n.) *1.* *ஆவின் அல்லது எருமையின் வெண்ணெயை உருக்கி உண்டாக்கும் பொருள்;* ghee, clarified butter. *2.* *வெண்ணெய்;* butter.

**நெய்தல்** வி. (v.) *துணி, பாய் முதலிய வற்றை உருவாக்குவதற்காகத் தறியில் நீளவாட்டில் நூலையோ, கோரை யையோ செலுத்திக் குறுக்குவாட்டில் கோத்துப் பின்னுதல்; நூலை ஆடை யாகச் செய்தல்;* to weave, as clothes.

**நெய்ப்பந்தம்** பெ. (n.) *1.* *நெய்யூற்றி எரிக்கும் பந்தம்;* torch fed with ghee. *2.* *இறந்தவரின் உடலைச் சுற்றி பெயரன், பெயர்த்திகள் பிடிக்கும் நெய்யில் நனைத்த பந்தம்;* torch fed with ghee holding grand son and grand daughter at the time of funeral. *'தாத்தாவின் மரணத்தில் பேரன் பேரத்திகள் நெய்ப்பந்தம் பிடித்தல் மரபு'.*

**நெய்விளக்கு** பெ. (n.) *1.* *கோயில்களில் நெய்யூற்றியெரிக்கும் விளக்கு;* lamp fed with ghee. *2.* *தெய்வத்துக்கு முன் ஏற்றும் மாவிளக்கு;* lamp of dough burnt with ghee before an idol.

**நெரிகட்டி** பெ. (n.) *நெறிக்கட்டி பார்க்க;* see neṟi-k-kaṭṭi.

**நெரிசல்** பெ. (n.) *1.* *நெரிந்தது;* anything broken or cracked. *2.* *நெருக்கமாக இருக்கும் கூட்டம்;* the state of being overcrowed, as of a place. *'கடற்கரைக் கூட்டத்தில் நெரிசல் மிகுதி'.* *3.* *மனவேறுபாடு;* misunderstanding.

**நெரித்தல்** வி. (v.) *1.* *நொறுக்குதல்;* to break to pieces. *2.* *நசுக்குதல்;* to crush, press, squeeze. *'பொதுகூட்ட நெரிசலில் சிக்கிக் காலை இழந்து விட்டான்'.* *3.* *கையால் கூலம் முதலியவற்றை நிமிண்டுதல்;* to rub or crush with the hand, as ears of grain. *4.* *கைவிரல்களைச் சுடக்குதல்;* to crack, as the fingers. *'கால் விரல்களைக் கொஞ்சம் நெரித்துவிடு'.*

**நெருக்கடி** பெ. (n.) *1.* *நெருக்கம்;* emergency; pressurizing; pressure. *'நெருக்கடியில் வந்து பணம் கேட்டான்'.* *2.* *இக்கட்டான நேரம்;* busy time, time of preoccupation critical time. *'இந்தியாவுக்கு இது நெருக் கடியான நேரம்'.* *3.* *போக்குவரவு, ஊர்திகள், மக்கள் போக வர இயங்க இடம் போதாத நிலை;* want of space. *4.* *தேவையான பொருள்கள் கிடைக் காத நிலை, பற்றாக்குறை;* financial squeeze or straits. *'பணநெருக்கடி'.* *5.* *கடுந்துன்ப நிலை;* difficulty.

**நெருக்கடி நிலை** பெ. (n.) *உள்நாட்டுப் போர், கலகம் முதலானவை ஏற்படுகின்ற, நேரத்தில் அரசு கூடுதல் அதிகாரங்களை மேற்கொண்டு செயல்பட வேண்டிய நிலை;* state of emergency in a country.

**நெருக்கம்** பெ. (n.) *1.* *இடைவெளி யில்லாத செறிவு;* denseness, crowded state. *2.* *ஒழுக்கம்;* narrowness, straitness, tightness. *'நெருக்கமான பாதை'.* *3.* *வேலைக்கடினம், வேலையினால் ஏற்படும் துன்பம்;* pressure of business, closeness of application. *4.* *விரைவு;* urgency. *5.* *குறைந்த வேறுபாடு, மிகுந்த ஒற்றுமை;* affinity, closeness. *'நாட்டியத்திற்கும் இசைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு'.*

**நெருக்கமான** பெ. (n.) *1.* *செறிவான;* dense. *2.* *இறுக்கமாக இணைக்கப் பட்ட;* compact.

**நெருக்கித்தள்ளுதல்** வி. (v.) *முட்டி மோதுதல்;* to knock against.

**நெருக்கித்தாக்குதல்** வி. (v.) *சூழ்ந்து கொண்டு தாக்குதல்;* to beset.

**நெருக்கிப்பார்த்தல்** வி. (v.) *1.* *வற்புறுத் துதல்;* to press. *2.* *முயற்சி யெடுத்தல்;* to try, take pains. *'தேர்வுக்கு எவ்வளவோ நெருக்கிப் பார்த்தேன். இருந்தாலும் மதிப்பெண் குறைவு தான்'.*

**நெருக்குதல்** வி. (v.) *1.* *செறியச் செய்தல்;* to put close, to set thick. *2.* *சுருக்குதல்;* to circumscribe, contract. *3.* *தாக்குதல்;* to attack, assail, assault.

**நெருங்குதல்** வி. (v.) *அண்மையாதல்;* to be near, approximate. *'பேருந்து நெருங்கி வந்துவிட்டது'.*

**நெருடல்** பெ. (n.) *ஒத்துக்கொள்ளத் தயங்கும் நிலையை உண்டாக்கும் சிறு வேறுபாடு;* an uneasy feeling caused by unevenness.

**நெருடுதல்** வி. (v.) *1. நிமிண்டுதல்;* to roll in the hand; to rub gently with the fingers. *'முள்ளை நெருடிக்கொண்டே இருக்காதே குத்தி விடும்'. 2. ஏய்த்தல்;* to deceive, cheat.

**நெருப்புக்குச்சி** பெ. (n.) *தீக்குச்சி;* match. *'நெருப்புக் குச்சியைக் கொளுத்து'.*

**நெருப்புக்கொளுத்துதல்** வி. (v.) *1. தீ மூட்டுதல்;* to kindle of fire, as in an oven. *'அடுப்பில் தீ மூட்டுதல்'*. 2. *கடு வெயிலெரித்தல்;* to be hot, scorching, as the sun. *3. கலகமூட்டுதல்;* to foment or instigate a quarrel.

**நெருப்புக்கோழி** பெ. (n.) *நீண்ட காலும், கழுத்தும் சிறிய தலையும் பறக்கப் பயன்படாத பெரிய சிறகுகளும் கொண்ட தீத்தணலை விழுங்கும் கோழிவகை;* ostrich.

**நெருப்புப்படுதல்** வி. (v.) *1. நெருப்பால் அழிதல்;* to be consumed by fire. *'நெருப்புப்பட்டு துணி ஓட்டையாகி விட்டது'. 2. கடுங்கோடையால் வருந்துதல்;* to be consumed with drought.

**நெருப்புப்பிடித்தல்** வி. (v.) *தீப்பற்றி யெரிதல்;* to catch fire. *'உடையில் நெருப்புப் பிடித்தெரிகிறது'.*

**நெருப்புப்பெட்டி** பெ. (n.) *தீப்பெட்டி;* match box. *'நெருப்புப் பெட்டி ஒன்று வாங்கி வா'.*

**நெருப்புப்பொறி** பெ. (n.) *தீப்பொறி;* sparks of fire.

**நெருப்புமூட்டுதல்** வி. (v.) *1. தீப்பற்ற வைத்தல்;* to kindle fire. *'நெருப்பு மூட்டிக் குளிர் காய்ந்தான்'*. 2. *கலகம் உண்டாக்குதல்;* to arouse a disturbance to instigate a quarrel. *'வீட்டில் நெருப்பு மூட்டிவிட்டான். இனி அமைதியைக் காண முடியாது'.*

**நெருப்புவிழுதல்** பெ. (n.) *1. தீப்பொறி பறக்கை;* flying of sparks as from fire wood, flint or grindstone. 2. *கூரைமேல் தீத்திரள் விழுகை;* falling of balls of fire over roofs.

**நெல்குத்துதல்** வி. (v.) *நெல்லை உரலிலிட்டு உலக்கையால் குத்தி அரிசியாக்குதல்;* to pound paddy in a mortar.

**நெல்லுப்பிடித்தல்** வி. (v.) *நெல்லைக் கட்டி வைத்தல்;* to lay up paddy in store. *'மூட்டையில் நெல்லைப் பிடித்து அடுக்கிவைக்க வேண்டும்'.*

**நெளிதல்** வி. (v.) *1. புழு, பாம்பு முதலியவை வளைந்து நகர்தல்;* to crawl. *'பாம்பு நெளிந்து நெளிந்து சென்றது'*. 2. *சுருளுதல்;* to bend, roll in. *'அவனுக்கு நெளி மயிர்'.*

**நெளிவுசுளிவு** பெ. (n.) *1. பேச்சிலும், செயலிலும் பிறர் ஏற்கும்வண்ணம் நடந்துகொள்ளும் நுணுக்கங்கள்;* intricacies. *'நெளிவு சுளிவோடு பேச வேண்டும்'. 2. ஏற்றத்தாழ்வு;* excess and deficiency.

**நெற்பொரியுருண்டை** பெ. (n.) *நெற்பொரியை வெல்லப்பாகிலிட்டுப் பிடித்தவுருண்டை;* ball of a expanded rice of fried paddy mixed with jaggery syrup.

**நெற்றிச்சுட்டி** பெ. (n.) *1. மகளிரும் குழந்தைகளும் அணியும் நுதலணி வகை;* an ornament worn on the forehead by women and children. *2. விலங்கின் நெற்றி வெள்ளை;* blaze on the forehead of an animal. *'நெற்றிச்சுட்டி உள்ள மாட்டை வாங்கி வா'.*

**நெற்றிப்பட்டம்** பெ. (n.) *திருமணத்தின் போது பெண்ணுக்குத் தாய்மாமன் முறையினர் நெற்றியில் கட்டும் தங்கத்தினாலான சிறிய தகடு;* a thin gold plate worn on the forehead by maternal uncle.

**நெற்றிப்பற்று** பெ. (n.) *தலைவலி, மண்டைக்குத்தல் முதலிய நோய்களுக்கு நெற்றியில் போடும் மருந்துப்பற்று;* an ointment, or liniment or paste applied to forehead in cases of headache cold, neuralgia and other nervous effections.

**நெற்று** பெ. (n.) *தேங்காய் முதலிய வற்றின் முதிர்ந்து காய்ந்த காய்;* a dried, mature seed or nut. *'தேங்காய், நெற்றுக்காயாகப் பார்த்து வாங்கி வா'.*

**நெறிக்கட்டிக்காய்ச்சல்** பெ. (n.) *புண் அல்லது கட்டி அல்லது யானைக்கால் நோய் அல்லது இரண்டு அக்குள் அல்லது இரண்டு தொடைச்சந்திலும் கட்டி ஏற்படுவதால் உண்டாகும் காய்ச்சல்;* filarial fever; fever accomanying the swelling of the lymphatic glands.

**நெறிக்கட்டுதல்** பெ. (n.) *புண் கட்டிக்காக உடற்சந்துகளிலுண்டாகும் புடைப்பு;* inflammation of the lymphatic gland.

**நெறிதவறிநடத்தல்** வி. (v.) *முறை தவறி நடத்தல்;* to behave badly. *'நெறி தவறி நடந்தால் வாழ்வில் முன்னேற முடியாது'.*

**நெறிப்படுதல்** வி. (v.) *ஒழுங்குபடுதல்;* to be put in order; to be kept with in bounds.

**நெறுநெறுத்தல்** வி. (v.) *பல்லைக் கடித்தல்;* to crash one's teeth. *'அச்ச மிகுதியால் நெறு நெறுவென்று பல்லைக் கடித்தான்'.*

**நெறுநெறெனல்** பெ. (n.) *1. ஓசைக் குறிப்பு;* crashing sound. *'சினத்தால் நெறுநெறென்று பல்லைக் கடித்தான்'. 2. முறிதற் குறிப்பு;* breaking. *'முருங்கை மரம் நெறுநெறு வென்று முறிந்து விழுந்தது'.*

# நே

**நேயர்** பெ. (n.) *வானொலி, தொலைக் காட்சி நிகழ்ச்சிகளை விரும்புபவர்;* (radio) listeners, (television) viewer. *'நேயர் விருப்பம் கேட்டால் மனத்துக்கு ஆறுதல் கிடைக்கும்'.*

**நேர்த்தி** பெ. (n.) *சிறப்பு;* excellence, elegance. *'அவர் கதை சொல்லும் நேர்த்தி சிறந்தது'.*

**நேர்ந்துகட்டுதல்** வி. (v.) *வேண்டுதலுக் காகக் காப்புக் கட்டுதல்;* to make a vow and tie a thread in token of it on the thing vowed.

**நேர்ந்துகொள்ளுதல்** வி. (v.) *தான் விரும்பியது நடந்தால் காணிக்கை யாக இதைச் செய்வேன் என்று கடவுளிடம் வேண்டுதல் செய்து கொள்ளுதல்;* to take vow.

**நேர்ந்துநிரவிப்போதல்** வி. (v.) *சற்று ஏறக்குறைய இருந்தாலும் சரிக் கட்டிக்கொண்டு போதல்;* to rectify, correct, redress, to adjust, reimburse.

**நேர்ந்துவிடுதல்** வி. (v.) *தெய்வத்துக்கு வேண்டுதல் செய்வதற்காக விலங்கு முதலியவற்றைக் கோயிலுக்கென விட்டு விடுதல்;* to offer or consecrate to a deity by a vow, as an animal.

**நேர்மாறு** பெ. (n.) *சொல்லுவதற்கு முற்றும் எதிரானது;* just opposite. *'குணத்தில் அவன் மனைவி அவனுக்கு நேர்மாறு'.*

**நேர்முகத் தேர்வு** பெ. (n.) *வேலைக்கோ, படிப்புக்கோ விண்ணப்பம் செய்த வரின் தகுதியை வாய்மொழியாகக் கேள்விகள் கேட்டு அறியும் தேர்வு;* interview.

**நேர்முகவண்ணனை** பெ. (n.) *விழா, விளையாட்டு போன்றவற்றினை நேரிடையாகப் பார்த்து வானொலி, தொலைக்காட்சியில் உடனுக்குடன்*

*தருகின்ற விளக்கம்;* live, running commentary.

**நேர் வகிடு** பெ. (n.) *தலைப் பகுதியின் உச்சியில் சரியாக நடுவில் பிரித்து எடுக்கும் வகிடு;* straight parting of one's hair.

**நேர்வழி** பெ. (n.) *1. (ஓர் இடத்திலிருந்து இன்னொரு இடத்தை அடைவதற்கு) சுற்றிக்கொண்டு (அ) குறுக்கு வழியில் செல்லாமல் நேராகச் சென்றடையும் வழி;* direct route. *2. நேர்மையான வழி;* just and straight forward way; fair means.

**நேர்வாக்கில்** வி.அ. (adv.) *1. நேராக;* straight. *2. நேராகப் பார்த்தபடி;* from a fronted view.

**நேரக்காப்பாளர்** பெ. (n.) *நேரப்படி வண்டிகளை புறப்படுவதையும் வந்து சேர்வதையும் கண்காணித்து நெறிப் படுத்தும் பணியைச் செய்பவர்;* time keeper.

**நேரகாலம்** பெ. (n.) *1. ஏற்ற காலம்;* right time. *2. பிறப்பியத்தின் (சாதகத்தின்) படி கெடுதியான காலம்;* dangerous or critical time, as determined from one's horoscope. *3. ஊழ்காலம்;* special time when fate exercises its influence, commonly evil. *4. தற்காலம்;* present time.

**நேரங்கடத்துதல்** வி. (v.) *1. காலம் போக்குதல்;* to while away one's time. *'தூங்குவது போல் நடித்து நேரங் கடத்திக் கொண்டிருக்கிறான்'.* *2. வேலையில் மந்தமாயிருத்தல்;* to be slow in work.

**நேரங்கெட்ட நேரம்** பெ. (n.) *1. தகுதியற்ற காலம்;* unseasonable hour, as for visiting or eating. *2.காலமல்லாக் காலம்;* unpropitious time, as midday or dusk, when demons are supposed to be abroad.

**நேரஞ்சாய்தல்** வி. (v.) *பொழு திறங்குதல்;* to draw towards evening, decline, as the day. *'நேரம் சாயும் பொழுது வீட்டுக்கு வா'.*

**நேரந்தப்புதல்** வி. (v.) *காலந்தவறுதல்;* to be untimely or out of time. *'நேரந்தப்பி விதைத்ததால் பயிர் சரியாக விளைய வில்லை'.*

**நேராக** கு.வி.எ. (adv.) *1. பிறர் மூலமாக வன்றித் தானே;* directly in person. *2. உண்மையாய்;* honestly, straight for wardly. *3. புறப்பட்ட விடத்திலிருந்து வேறு எங்கும் செல்லாமல்;* straight from. *4. வளையாமல்; திரும்பாமல் காட்டிய வழியிலேயே;* straight a head.

**நேரில்** வி.எ. (adv.) *1. மற்றொருவரின் மூலமாகவோ கடிதத்தின் மூல மாகவோ இல்லாமல் குறிப்பிட்ட வரிடம் அல்லது குறிப்பிட்ட இடத்தில் தானே;* in person. *'இந்தத் திட்டத்தில் சேர விரும்புவோர் அலுவலகத்துக்கு நேரில் வரவும்'.* *2. பார்த்தல், கேட்டல் குறித்து வருகையில் தன் கண்களால் அல்லது காதால்; தானே சான்றாக;* with one's own eyes or ears personally.

**நேருக்கு நேராய் நிற்றல்** வி. (v.) *1. சரி நேராதல்;* to be exactly straight or direct. *2. நேரெதிராயிருத்தல்;* to be exactly opposite. *3. பிறனொருவன் தன்னிடம் நடந்துகொள்வதுபோலத் தானும் நடந்துகொள்ளுதல்;* to behave or conduct oneself towards a person exactly in conformity with his behaviour.

**நேருக்குவருதல்** வி. (v.) *இணங்கிவருதல்;* to come to terms, yield.

**நேற்று** வி.எ. (adv.) *1. நிகழும் நாளுக்கு முதனாள்;* yesterday. *2. சற்று முன் காலத்தில்;* lately, recently.

**நேற்றுமுந்தாநாள்** வி.எ. (adv.) *1. அண்மைக் காலத்தில் (நெல்லை);* during the recent past. *2. நேற்றைக்கு முந்திய நாள்;* day before yesterday.

**நேற்றையதினம்** பெ. (n.) & வி.எ. (adv.) *நெருநல்;* yesterday.

# நை

**நைநையெனல்** பெ. (n.) *1. இகழ்ச்சிக் குறிப்பு;* expr. signifying contempt. *2. குழந்தைவிடாது அழுது தொந்தரவு செய்தல் குறிப்பு;* expr. signifying fretting cry, pulling as of children. *'வயிற்று வலியால் குழந்தை நைநையென அழுதுகொண்டே இருக்கிறது'.*

**நையத்தட்டுதல்** வி. (v.) *தூளாகும்படி தட்டுதல்;* striking to make into powder.

**நையநருக்குதல்** வி. (v.) *பொடியாக் குதல்;* to pulverise comminute.

**நையப்பாடுதல்** வி. (v.) *பல்லைக்காட்டிக் கெஞ்சுதல்;* to cringe.

**நையப்புடைத்தல்** வி. (v.) *உடம்பு தளர நன்றாக அடித்தல்;* to be labour thrash soundly.

**நையமசிதல்** பெ. (n.) *நன்றாய் அரை படுகை;* grinding to oneness.

**நையாண்டி** பெ. (n.) *1. பகடி(கேலி);* scoff, ridicule, mockery, sarcasm. *2. சிரிப்புச் சொல்;* jest drollery. *'யாரையும் நையாண்டி செய்யாதே'.*

# நொ

**நொசநொசத்தல்** வி. (v.) *சோறுங் கஞ்சியும் கெட்டுவிட்டு நொந்து போதல்;* to spoil, as of boiled rice, etc.,

**நொசநொசவெனல்** தொ.பெ. (vbl.n.) *சோறு நொந்துபோன நிலை யடைகை;* mashed rice.

**நொட்டக்கை** பெ. (n.) *நொட்டாங்கை பார்க்க;* see noṭṭāṅgai.

**நொட்டாங்கை** பெ. (n.) *இடது கை;* left hand. *'நொட்டாங்கையால் செய்யும் வேலை சிறக்காது'.*

**நொட்டைச்சொல்** பெ. (n.) *குறைச்சொல்;* fault finding words. *'நொட்டைச்சொல் சொல்லாதே'.*

**நொடி** பெ. (n.) *1. நோய் என்பதோடு இணைந்து வரும் சொல்;* word, phrase, language, speech. *2. முது மொழி;* wise saying. *3. புதிர்;* riddle, enigma. *4. கதை;* story. *5. செய்யுள்;* stanza. *6. சிறுபொழுது வினாடி;* second.

**நொடித்தல்** பெ. (n.) *வணிகத்தில் இழப்படைதல் (நட்டமடைதல்);* to break down completely, as a concern. *'வணிகம் நொடித்துப் போயிற்று'.*

**நொடித்துப்போதல்** வி. (v.) *நிலை குலைதல்;* to become straitened in circumstances; to become a bankrupt. *'நல்லா வாழ்ந்தார், இப்போது நொடிந்துப் போனார்'.*

**நொடுக்குநொடுக்கெனல்** பெ. (n.) *1. தட்டுதலால் உண்டாகும் ஒலிக் குறிப்பு;* onom, expr. signifying, slight tapping or knocking noise. *2. நடக்கும் போது பாதக்குறட்டில் உண்டாகும் ஒலிக் குறிப்பு;* clacking, as of wooden sandals in walking.

**நொண்டி**[1] பெ. (n.) *1. முடமான ஆள் (அ) விலங்கு;* lame person or creature. *2. முடம்;* crippled condition, as of the leg or arm. *3. பொய்க்காலால் நடிப்போன்;* person who dances on stilts.

**நொண்டி**[2] பெ. (n.) *நொண்டியடித்துக் கொண்டு சென்று எதிர் அணி யினரைத் தொடும் விளையாட்டு வகை;* the game of hopping with folded leg.

**நொண்டிச்சாக்கு** பெ. (n.) *நடை பெறாமல் போன நிகழ்வு ஒன்றுக்குக் காட்டப்படும் வலுவில்லாத கரணியம்;* a lame excuse.

**நொணநொணவெனல்** பெ. (n.) *1.* *மூக்காற் பேசுதற்குறிப்பு;* expr. signifying the sound of speaking through the nose. *2.* *தொந்தரவு செய்தற் குறிப்பு;* expr. signifying teasing.

**நொதித்தல்** வி. (v.) *புளித்த மாவு முதலியன பொங்குதல்;* to ferment effervesce, turn sour, as liquid food to bubble up slowly, as water over a gentle fire.

**நொந்துகொள்ளுதல்** வி. (v.) *1.* *வருத்தப் படுதல்;* regret one self. *2.* *குறை பட்டுக்கொள்ளுதல்;* curse one self. *3.* *குறை கூறுதல்;* charge blame. *'என்ன படித்து என்ன பயன் வேலை கிடைக்கவில்லையே என்று நொந்து கொண்டான்'.*

**நொந்துபோதல்** வி. (v.) *1.* *நிலை கெடுதல்;* to be impoverished to be reduced in circumstances. *2.* *பதனழிதல்;* to become spoiled.

**நொப்புநுரை** பெ. (n.) *காய்ச்சும்போதும் புளிப்பேறும்போதும் ஏற்படும் நுரை;* the impurities arising on the top surface when boiling a solution.

**நொய்** பெ. (n.) *1.* *குறுநொய்;* grits, groats. *2.* *இலேசு;* brittleness, fragility, delicateness. *3.* *மென்மை;* softness, lightness. *4.* *நுண்மை;* smallness, minuteness. *5.* *பன்னீர்;* rose water. *6.* *தவிடு;* bran.

**நொருக்குதல்** வி. (v.) *நொறுக்குதல் பார்க்க.*

**நொருகை** பெ. (n.) *நொறுவை பார்க்க.*

**நொருவல்** பெ. (n.) *நொறுவல் பார்க்க.*

**நொள்ளை** பெ. (n.) *குருடு;* blindness.

**நொள்ளைக்கண்** பெ. (n.) *பார்வை மாறிய கண்;* blind eyes.

**நொளநொளத்தல்** வி. (v.) *1.* *குழைதல்;* to become soft from over ripeness; to be mashy. *2.* *வழுவழுப்பாதல்;* to be sleek and smooth, as a snake or a leech.

**நொறுக்கரிசி** பெ. (n.) *1.* *உரலிலிட்டு நெல்லைக் குத்தும்போது நொறுங் கும் அரிசி;* rice broken in pounding. *2.* *அரைவேக்காட்டுச் சோறு;* half boiled rice.

**நொறுக்கித்தள்ளுதல்** வி. (v.) *1.* *நன்றா யடித்தல்;* to beat soundly. *2.* *மிகத் திட்டுதல்;* to abuse roundly. *3.* *செய்வ தருமை என்ற செயலைச் சிறப்பாகச் செய்தல்;* to well with apparent case smash.

**நொறுக்குதல்** வி. (v.) *1.* *சிறு சிறு பகுதிகள் ஆகுமாறு உடைத்தல்; பொடி யாக்குதல்;* to break, crack, crush, smash to pieces. *2.* *நையப் புடைத்தல்;* to beat soundly. *'சண்டை யில் வீரரை நொறுக்கிவிட்டான்'.* *3.* *மிகுதியாய் உண்ணுதல்;* to eat in large quantities. *'பந்தியில் ஒரு நொறுக்கு நொறுக்கி விட்டான்'.*

**நொறுக்குத்தீனி** பெ. (n.) *உணவாக அல்லாமல் அவ்வப்போது தின்னும் முறுக்கு, சீடை, கடலை போன்ற தின்பண்டம்;* small eats.

**நொறுவை** பெ. (n.) *பல்லால் நொறுக்கித் தின்னும் சிற்றுண்டி;* dainties, things of luxury.

**நொறுவல்** பெ. (n.) *நொறுவை பார்க்க.*

# நோ

**நோக்குதல்** வி. (v.) *1.* *கூர்ந்து பார்த்தல்;* to see, look at, behold view. *2.* *கண் காணித்தல்;* to supervise. *3.* *ஒப்பிட் டுப் பார்த்தல்;* to compare.

**நோகாமல்** வி.எ. (adv.) *வேலை செய்யாமல், வலிக்காமல்;* without pain. *'கை, கால், நோகாமல் பொருளீட்ட முடியுமா?'.*

**நோகுதல்** வி. (v.) *வருந்துதல்; மனம் புண்படுதல்;* get hurt of feelings, distressed in mind. *'அவன் மனம் நோகும்படி நடந்துகொள்ளாதே'.*

**நோஞ்சான்** பெ. (n.) *நோய் முதலிய வற்றால் மெலிந்தவன் (நெல்லை);* feeble, invalid person. *'சத்துணவு இல்லாத நோஞ்சான் குழந்தைகள்'.*

**நோஞ்சி** பெ. (n.) *நோஞ்சான் பார்க்க.*

**நோட்டம்** பெ. (n.) *1. தட்டிப்பார்த்தல், உரசிப் பார்த்தல் முதலிய முறை களைக் கொண்டு பொன் வெள்ளிக் காசுப் பண ஆய்வு;* examination of coins, assaying. *2. விலைமதிப்பு;* value. *'அதன் நோட்ட மறியான்'. 3. மதிப்பு;* criticism. *4. மதிப்பிடும் அல்லது தெரிந்துகொள்ளும் நோக்கம் கொண்ட பார்வை;* searching glance. *'தலைவர் மேடை ஏறியவுடன் கூட்டத்தை ஒரு நோட்டம்விட்டார்'.*

**நோட்டம் பார்த்தல்** வி. (v.) *1. தகுதியறிதல்;* to consider the fitness of. *2. வேவு பார்த்தல்;* to spy. *3. மிகக் கண்டிப்பா யிருத்தல்;* to be too strict in dealings.

**நோண்டுதல்** வி. (v.) *1. விரல், குச்சி போன்றவற்றால் கிளறுதல்;* to stir, dig up, grub up, root out. *'நிலத்தை நோண்டிக் கொண்டிருக்கிறான்'. 2. குடைந்தெடுத்தல்;* to pick off, as a scab of an ulcer; to pick out as wax from the ear. *3. துருவி வினவுதல்;* to enquire minutely, endeavour to draw out by repeated questions, pump one. *4. தேவையற்ற ஒன்றைச் செய்தல்;* complaining of silly things. *5. தோண்டுதல்;* to dig. *'கிழங்கைத் தோண்டியெடுத்து விட்டான்'.*

**நோணாவட்டம்** பெ. (n.) *1. பொருட் படுத்தத்தகாத மிகச் சிறு குற்றங் களைக் கூறுந்தன்மை;* maticulosity, over - scruplousness. *2. துப்புரவு, சுவை, ஒழுக்கம் முதலியவற்றில் அளவிற்கு மிஞ்சிக் கவனஞ் செலுத்துகை;* to take too much of purity flavour and behaviour.

**நோணாவட்டியம்** வி.எ. (adv.) *நன்றாய் (தூத்துக்குடி வழக்கு);* well, prudently, wisely.

**நோதல்** வி. (v.) *1. நோவுண்டாதல்;* to feel pain ache, suffer smart. *2. வருந்துதல்;* to be grieved, distressed in mind; to feel. *3. சமைத்த உண்டி பதனழிதல்;* to be injured bruished, as a plant, fruit; to be spoiled, as boiled rice. *'சோறு நொந்துபோய்விட்டது'.*

**நோப்படுதல்** வி. (v.) *1. காயப்படுதல்;* sustaining injury, being injured. *2. நோயினால் துன்பப்படுதல்;* suffering from pain or disease.

**நோம்புதல்** வி. (v.) *கொழித்துப் பிரித்தல்;* to separate by winnowing, as stones from rice.

**நோம்பு** பெ. (n.) *நோன்பு பார்க்க.*

**நோம்புக்கடன்** பெ. (n.) *நேர்ச்சிக் கடன்;* vow.

**நோய்** பெ. (n.) *1. மாந்தனின், விலங்கின், பயிரின் உடல் நல பாதிப்பு; பிணி;* malady, distemper, aliment, sickness. *2. குற்றம்;* fault. *3. அச்சம்;* dread fear. *4. நோவு;* ache pain, smart.

**நோய்ஞ்சல்** பெ. (n.) *நோய்ஞ்சான் பார்க்க.*

**நோய்ஞ்சான்** பெ. (n.) *மெலிந்தவன்;* person emaciated by disease.

**நோய்த்தொற்று** பெ. (n.) *நுண்ணுயிரி களால் (பாக்டீரியா) உண்டாவதும், நுண்ணுயிரிகள் உண்டாக்கும் நஞ்சு களால் உண்டாவதுமான நோய்;* infection.

**நோய்நொடி** பெ. (n.) *1. பிணியும் துன்பமும்;* disease with its sufferings. *2. நோயும் நோயின் பாதிப்பும்;* illness

and its effect. *'நோய்நொடி இல்லா உடம்பொடு வாழ வேண்டும்'.*

**நோய்யெதிர் ஆற்றல்** பெ. (n.) *நோயை உண்டாக்கும் நுண்ணுயிரிகளால் நோய் உண்டாகாதவாறு உடலில் உள்ள எதிர்க்கும் ஆற்றல்;* immunity.

**நோய்வாய்ப்படுதல்** வி. (v.) *நோயினால் தாக்கப்படுதல்;* to fall ill. *'நோய் வாய்ப்பட்ட உடம்பு'.*

**நோய்விழுதல்** பெ. (n.) *செடிகளில் நோய்பிடிக்கை;* infection as of plants.

**நோயறை** பெ. (n.) *நோயாளிகள் இருக்கும் அறை;* patient's room. *'நோயறை பக்கம் ஒலியை அதிகப் படுத்தாதே'.*

**நோயாளி** பெ. (n.) *நோயால் தாக்கப் பட்டவன்;* sick person, patient invalid.

**நோவாளி** பெ. (n.) *1. நோயாளி பார்க்க. 2. ஏழை;* poor man.

**நோவு** பெ. (n.) *1. வலி;* pain, hurt, anguish. *'உடல் நோவு குறைய வெந்நீரில் குளிக்க வேண்டும்'. 2. துன்பம்;* mental anguish. *3. நோய்;* disease. *4. மகப் பேற்று நோய்;* labour pains. *5. இரக்கம்;* pity.

**நோவுநொடி** பெ. (n.) *நோய்நொடி பார்க்க.*

**நோன்பிருத்தல்** வி. (v.) *உணவு உட் கொள்ளாதிருத்தல்;* to observe ceremonial fasting.

**நோன்பு** பெ. (n.) *1. ஆவியின் (ஆன்மா) தூய்மைக்காக ஓரிருவேளை அல்லது நாள் முழுமையும் உண்ணாதிருக்கை;* ceremonial fasting abstinence from food. *2. தவம்;* penance, religious austerity.

**நோன்புக் கயிறு** பெ. (n.) *காப்பு நாண்;* a sacred string.

**நோன்பு முடி** பெ. (n.) *நோன்பு முடிச்சு பார்க்க.*

**நோன்புமுடிச்சு** பெ. (n.) *தாலிச்சரட்டில் கோக்கப்பட்ட குழாய் போன்ற பொன்னுருக்கல்;* a pair of cylindrical pieces of gold worn on the string containing the marriage badge.

**நோன்புதுறத்தல்** பெ. (n.) *உண்ணா நோன்பை துறத்தல்;* to end the ceremonial fasting.

**நோன்பு பிடித்தல்** பெ. (n.) *உண்ணாதிருக் கையை மேற்கொள்ளல்;* to observe a fast.

## ப

**பக்கபலம்** பெ. (n.) *(ஒருவருக்கு அல்லது ஓர் அமைப்புக்கு) துணையாக இருந்து ஊக்குவிக்கும் வகையில் அல்லது சிறப்பாகச் செயல்படும் வகையில் அமையும் துணைதரவு (ஆதரவு);* support; strength; mainstay.

**பக்கவாட்டுத்தோற்றம்** பெ. (n.) *ஒன்றின் அல்லது ஒருவரின் இடது அல்லது வலது பக்கத்தோற்றம்;* profile.

**பக்கவாத்தியம்** பெ. (n.) *இசை அரங்கத்தில் முகாமையான இசைக் கலைஞருக்குத் துணையாக வாசிக்கப்படும் இசைக் கருவி;* accompaniment (in a concert).

**பக்கவாதம்** பெ. (n.) *நேர்ச்சி (விபத்து) அல்லது நோயின் கரணியமாக மூளையும் நரம்பு மண்டலமும் தாக்கப்பட்டு உடலின் ஒரு பகுதி அசைக்க முடியாதபடி செயலிழந்து விடும் நிலை;* paralysis.

**பக்கவிளைவு** பெ. (n.) *மருத்துவமும் மருந்தும் நோய் தீர்க்கும்போது ஏற்படுத்தும் பக்க விளைவு;* side effect (of a treatment medicine).

**பக்கவேர்** பெ. (n.) *ஆணி வேரிலிருந்து கிளைத்துச் செல்லும், சல்லி வேரை விடப் பெரிய வேர்;* secondary root of a tree.

**பக்குப்பக்கெனல்** பெ. (n.) *1. அச்சக் குறிப்பு;* onom expr. of throbbing rapidly as the heart through fear. *2. வெடிக்கச் சிரித்தற் குறிப்பு;* bursting laughter.

**பக்குவஞ்சொல்லுதல்** வி. (v.) *1. பொருத் தருள்வது;* to tender apology. *2. செய்வகை;* any work or business.

**பக்குவப்படுத்துதல்** வி. (v.) *பதப்படுத் துதல்;* preserve.

**பக்குவம்** பெ. (n.) *1. (-ஆக, -ஆன) (குறிப்பிட்ட உணவுக்கே உரிய) திண்ம (அ) நீர்ம நிலையோ சுவையோ மாறிவிடாமல் இருக்க வேண்டிய அளவாம் தன்மை;* (the right) proportion; consistency. *2. நிலைத் திணைகளில் காய்த்தல், பூத்தல் முதலியவற்றிற்கான பருவம்;* stage or season (for an event in the growth of a plant).

**பக்கெனல்** பெ. (n.) *1. சிரிப்பின் ஒலிக்குறிப்பு;* bursting, as with sudden laughter. *2. விரைவுக் குறிப்பு;* being sudden.

**பக்கோடா** பெ. (n.) *நீர் ஊற்றிப் பிசைந்த கடலை மாவில் வெங்காயம், பச்சை மிளகாய் முதலியவற்றைச் சேர்த்துச் சிறு சிறு பிசிறுகளாக எண்ணெயில் போட்டுப் பொரித்து எடுக்கும் ஒரு திண்பண்டம், பகுவடை, முறுவடம், முறுவு;* a spicy savoury prepared with chickpea paste fried in oil.

**பகட்டுதல்** வி. (v.) *1. போலி வெளிச்சம் காட்டுதல்;* to shine with a false glitter, as plated articles. *2. தற்புகழ்ச்சி செய்தல்;* to brag. *3. போலிப்பெருமை காட்டுதல்;* to make a vain show; to be foppish.

**பகடக்காரன்** பெ. (n.) *சூழ்ச்சிக்காரன்;* artful person.

**பகடைக்காய்** பெ. (n.) *(காய்களைப் பயன்படுத்தி) விளையாடும் விளையாட்டுகளில் விளையாடுபவர்கள் இருவரும் ஒருவர் மாற்றி ஒருவராக உருட்டும் புள்ளிகள் குறிக்கப்பட்ட ஆறு பக்கங்கள் உடைய மாழையா (உலோகத்தா)ல் அல்லது மரத்தால் ஆன சிறு துண்டு; தாயக்கட்டை;* a dice.

**பகபகவெனல்** பெ. (n.) *1. தீ எரியும்போது உண்டாகும் ஒலிக்குறிப்பு;* onom, expr. of cracking of fire. *2. வயிறு பசியால் எரிதற் குறிப்பு;* expr. signifying burning or smarting sensation of hunger.

**பகல் கனவு** பெ. (n.) *நிறைவேறும் வாய்ப்பு சிறிதும் இல்லாத கற்பனை;* fantasy; daydream.

**பகல்(ற்)கொள்ளை** பெ. (n.) *(ஒன்றுக்காகக் கொடுக்கும் பணத்திற்குக் கூடுதலாக) நயனின்மை (அநியாயம்) என்று கூறும் அளவுக்கு அதிகமாக இருக்கும் நிலை;* day light robbery.

**பகல்வெளிச்சம் போடுதல்** வி. (v.) *பகலில் ஏமாற்ற முயலுதல்;* to attempt to deceive in broad day light.

**பகல்வேடக்காரன்** பெ. (n.) *1. பகற் காலத்தில் பலவேடம் பூண்டு பிழைப்போன்;* a person who lives by amusing people with his disguises during day time. *2. வெளிவேடக்காரன்;* hypocrite.

**பகல்வேடம்** பெ. (n.) *நல்லவர் போன்ற நடிப்பு; வெளிவேடம்;* one's mask of innocence; dissemblance.

**பகிர்** வி. (v.) *(இருப்பதைத் தேவையின் அடிப்படையில்) பிரித்தல்; பங் கிடுதல்;* share; divide and distribute.

**பகிர்ந்துகொள்ளுதல்** வி. (v.) *(பட்டறிவு, மகிழ்ச்சி, துயரம் முதலியவற்றைப் பிறருடன்) பரிமாறிக் கொள்ளுதல்;* share (one's) experience, happiness, sorrow, etc., with another.

**பகிர்வு** பெ. (n.) *பங்கீடு;* sharing, distribution as of power etc.

**பகீரெனல்** பெ. (n.) *1. அச்சக்குறிப்பு;* expr. signifying the state of being greatly terrifed. *2. திடீரென மனக்கலக்க முறுதற் குறிப்பு;* the state of being perturbed suddenly.

**பகுத்துண்ணுதல்** வி. (v.) *ஏழைகள் முதலி யோர்க்குப் பங்கிட்டுக் கொடுத்து எஞ்சியதை உண்ணுதல்;* to eat food after feeding the poor, etc.,

**பகுத்துப்பார்த்தல்** வி. (v.) *ஒரு பொருளைச் செவ்வையாக ஆய்வு செய்து பார்த்தல்;* to survey in detail; to scrutinise.

**பகைத்தல்** வி. (v.) *1. மாறுபாடு கொள்ளுதல்;* to hate, oppose. *2. அடித்தல்;* to beat, strole.

**பங்களிப்பு** பெ. (n.) *ஒன்றிற்குத் தன் பங்காகத் தரப்படுவது;* contribution.

**பங்காளி** பெ. (n.) *1. சொத்துக்குப் பங்குங்குரிமையானவன்;* share holder, partner, Copartener. *2. தந்தைவழி உறவின் முறையர்;* agnate, kinsman.

**பங்காளிச்சி** பெ. (n.) *பங்காளியின் மனைவி;* wife of an agnate.

**பங்கிடுதல்** வி. (v.) *1. பகுத்துக் கொடுத்தல்;* to divide parcel out, distribute, apportion, allot. *2. ஏற்படுத் துதல்;* to destine.

**பங்கு** பெ. (n.) *1. பாகம்;* share; portion; part. *2. பாதி;* moiety, half. *3. பக்கம்;* side.

**பங்குபாகம்** பெ. (n.) *1. பங்கு;* share portion. *2. பாகப்பிரிவினை;* partition.

**பச்சடி** பெ. (n.) *பச்சையாகவே அல்லது அவித்தோ பாகம் பண்ணிய துவையற்கறி;* a culinary preparation from raw vegetables like coconut, chilly, garlic, corriander leaves.

**பச்சரிசி** பெ. (n.) *நெல்லை அவிக்காமல் காயவைத்துக் குத்தியெடுத்த அரிசி;* rice hulled without boiling opp. to *puḻuṅgai.*

**பச்சுடம்பு** பெ. (n.) *1. பிள்ளைப் பேற்றால் மெலிந்த தாயின் உடல்;* tender body of a woman after childbirth. *2. குழந்தையின் தளிருடல்;* tender body of an infant. *3. அம்மைப்புண் காயாத உடம்பு;* body still having sore from small pox.

**பச்சை** பெ. (n.) *1. பசுமை நிறம்;* green colour; greenness. *2. காயாத அல்லது வேகாத பொருள்:* raw and not roasted or boiled thing. *3. பயறு;* pulse or cereals. *4. பச்சைக்குத்திய அடையாளம்;* tattoo. *5. வெளிப்படையானது;* that which is frank, open.

**பச்சைக்கடலை** பெ. (n.) *வேக வைக்காத, வறுக்கப்படாத கொண்டைக் கடலை;* raw bengal gram that is not roasted or boiled.

**பச்சைக்கரி** பெ. (n.) *ஈரமான கரி;* wet or moist charcoal.

**பச்சைக்கல்** பெ. (n.) *1. சுடாத செங்கல்;* unburnt brick. *2. பச்சைமணி;* emerald.

**பச்சைக்குதிரை** பெ. (n.) *விளையாட்டு வகை;* leap frog- game.

**பச்சைக்குழந்தை** பெ. (n.) *1. இளங்குழவி;* tender, new born infant. *2. வளரிளங் குழந்தை;* baby, young child.

**பச்சைக் குத்துதல்** வி. (v.) *உடலிற் பச்சைக் கோலம் பதித்தல்;* to tattoo.

**பச்சைச் சார்த்துதல்** பெ. (n.) *தெய்வத் திருமேனிகளுக்கு அணிகலன் முதல் ஆடை வரை அனைத்தும் பச்சை வண்ணமாகக் குறிப்பிட்ட நாளில் அணிவித்தல்;* adorn to idols having green ornaments and clothes in a particular day.

**பச்சைத்தண்ணீர்** பெ. (n.) *குளிர்ந்த நீர்;* cold water.

**பச்சைத்தாள்** பெ. (n.) *தவசமணி முற்றாத தாள்;* green stalks showing immaturity in the grain.

**பச்சைத்தோல்** பெ. (n.) *1. பதனிடாத் தோல்;* raw, untanned skin, pelt. *2. புண் ஆறின பின்பு தோன்றும் புதுத்தோல்;* new skin formed on a healing sore.

**பச்சைநரம்பு** பெ. (n.) *உடலில் தூய்மையற்ற குருதி ஓடும் அரத்த நாளம்;* vein.

**பச்சைநெல்** பெ. (n.) *1. ஈரநெல்;* undried paddy. *2. அவிக்காத நெல்;* unboiled paddy, raw paddy. *3. பசுமை நிறமான நெல்;* green or yellow paddy. *4. முதிராத நெல்;* not fully matured paddy.

**பச்சைப்பசேரெனல்** பெ. (n.) *மிகுபசுமை யாயிருத்தற் குறிப்பு;* expr. signifying deep green colour.

**பச்சைப் பாண்டம்** பெ. (n.) *சூளையில் வைத்துச் சுட்டெடுக்காத மண் பாண்டம்;* unburnt earthen vessel.

**பச்சைப் பாம்பு** பெ. (n.) *நீண்ட கோடு களையும் மெல்லிய உடலையும் உடைய பச்சை நிறப் பாம்புவகை;* common green whip snake.

**பச்சைப்பால்** பெ. (n.) *காய்ச்சாத பால்;* fresh unboiled milk.

**பச்சைப்பிடித்தல்** வி. (v.) *ஊன்றிய பயிர் ஊட்டமாக வளர்வதற்கு அறிகுறி யாகப் பச்சை நிறம் தோன்றுதல்;* of crops, turn rich green.

**பச்சைப்பிள்ளை** பெ. (n.) *1. பிறந்த குழந்தை;* new born infant. *2. அறியாப் பிள்ளை;* innocent, little child.

**பச்சைப்பிள்ளைத் தாய்ச்சி** பெ. (n.) *கைக்குழந்தையையுடைய இளந்தாய்;* a woman having a babe - in - arms.

**பச்சைப்புண்** பெ. (n.) *1. ஆறாப்புண்;* green wound. *2. உலராத புண்;* undried wound. *3. புதுப்புண்;* fresh wound. *4. மருந் திடப்படாத புண்;* untreated wound, raw wound.

**பச்சைப்புல்** பெ. (n.) *பசும்புல்;* green grass as opposed to dry grass.

**பச்சைப்புழு** பெ. (n.) *மொச்சை, அவரை முதலியவற்றில் காணப்படும் பச்சை நிறமான புழுவகை;* palmer worm, hairy caterpillar.

**பச்சைப்புளி** பெ. (n.) *1. புளியங்காய்;* unriped tamarid fruit. *2. பொங்க விடாத குழம்பு வகை;* a kind of unboiled sauce or relish mainly consisting of seasoned tamarind.

**பச்சை புளிப்பு** பெ. (n.) *கடும் புளிப்பு;* excessive sourness.

**பச்சைப்புளுகன்** பெ. (n.) *1. வீணாக வீண் பெருமை பேசுவோன்;* great boaster. *2. பெரும்பொய்யன்;* veritable down right tiar.

**பச்சைப்பொட்டு** பெ. (n.) *நெற்றியிற் பச்சை குத்தியமைத்த பொட்டு;* a round mark totooed on the forehead.

**பச்சைப்பொய்** பெ. (n.) *முழுப்பொய்;* gross, downright lie.

**பச்சைபச்சையாய்ப் பேசுதல்** வி. (v.) *1. இடக்கர்ச் சொற்களை வெளிப் படை யாகச் சொல்லுதல்;* to speak grossly vulgar and indecent language. *2. இடக்கர்ச் சொற்களைச் சொல்லித் திட்டுதல்;* to insult by uttering abusive or obscene words.

**பச்சைபிடித்தல்** வி. (v.) *1. செழிக்கத் தொடங்குதல்;* to begin to flourish. *2. திருமண வீட்டிற்கு வந்த காய் கறிகளை ஊழியர்கள் முதலியோர் கைப் பற்றுதல்;* to seize on some of the fruits brought to a wedding house.

**பச்சை மஞ்சள்** பெ. (n.) *உலர வைத்துப் பதப்படுத்தாத மஞ்சள்;* undried and unseasoned turmeric.

**பச்சைமண்** பெ. (n.) *1. ஈரமுள்ள மண்;* moist earth. *2. மட்பாண்டங்களுக்காகப் பிசைந்த மண்;* tempered clay, as for pots, opp to *sutta-man*. *3. இளங் குழந்தை;* young infant tender child. *4. வேகாத மண்;* unburnt mud.

**பச்சை மரம்** பெ. (n.) *உயிருள்ள மரம்;* living tree.

**பச்சைமாப்பொடி** பெ. (n.) *1. குழம்பு செய்வதற்கு உதவும் அரிசி மாப் பொடி;* rice flour used in preparing sauce. *2. தெய்வத் திருமேனிகளுக்குத் திருமுழுக்காட்டுச் செய்யப் பயன் படும் பொடி;* rice flour used for the divine both of idols.

**பச்சை மிளகாய்** பெ. (n.) *பழுக்காத மிளகாய், பச்சை நிறமுள்ள மிளகாய்;* green chilli.

**பச்சை மூங்கில்** பெ. (n.) *ஈர மூங்கில்;* wet bamboo which is green in colour as opposed to dried bamboo.

**பச்சையரிசி** பெ. (n.) *நெல்லை வேக வைக்காது குத்தியெடுத்த அரிசி;* raw rice.

**பச்சையாய்த் தின்றல்** பெ. (n.) *காய்கறி களையோ, ஊனையோ பச்சையாய்த் தின்னுதல்;* eating green vegetables and raw meat without boiling or cooking them.

**பச்சையாய்ப் பேசுதல்** வி. (v.) *1. வெளிப் படையாய்ப் பேசுதல்;* to be out spoken. *2. பச்சைபச்சையாய்ப் பேசுதல் பார்க்க.*

**பச்சையுடம்பு** பெ. (n.) *1. பிள்ளை பெற்றவளின் மெல்லியவுடம்பு;* the delicate body of a woman after parturition. *2. பச்சை நிறவுடம்பு;* green pallor of the skin. *3. நோயாளியின் மெலிந்த உடம்பு;* emaciated body of a convalescent.

**பச்சை வயிறு** பெ. (n.) *1. பிள்ளை பெற்ற வயிறு;* painful abdomen after parturition. *2. வெந்த வயிறு;* inflamed abdomen. *3. வெறும் வயிறு;* empty stomach.

**பச்சைவாழை** பெ. (n.) *1. வாழை வகை;* dwarf banana. *2. சமைக்காத வாழைக் காய்;* raw plantain which is not cooked.

**பச்சை வீடு** பெ. (n.) *பருவமெய்திய பெண்ணை மறைவாய் இருத்தி வைத்ததற்குரிய பசுந்தழையாலான குடில்;* green olai hut which is used for a age attend.

**பச்சைவெண்ணெய்** பெ. (n.) *காய்ச்சாத பாலிலிருந்து எடுக்கும் வெண்ணெய்;* butter churned from unboiled milk.

**பச்சோந்தி** பெ. (n.) *1. இருக்கும் இடத்தின் சூழலுக்கு ஏற்பத் தன் தோலின் நிறத்தை மாற்றிக் கொள்ளும் தன்மையை இயற்கையாகப் பெற்ற ஒரு வகை ஓணான்;* chameleon. *2. நிலையான தன்மை இல்லாதவன்; சூழ்நிலைக்குத் தகுந்தபடி மாறுபவன்;* opportunist.

**பச்சோலை** பெ. (n.) *காயாத ஓலை;* green olai.

**பசப்புதல்** வி. (v.) *1. இன்முகங்காட்டி ஏய்த்தல்;* to deceive, allure, fascinate, gain the affection. *2. அலப்புதல்;* to chatter, talk too much.

**பசலை** பெ. (n.) *1. அழகுத்தேமல்;* beauty spots on the skin of a woman. *2. பொன்னிறம்;* gold colour. *3. இளமை;* infancy, tenderness. *4. கவலையின்மை;* carelessness indiffernce. *5. மனக்கவலை;* restlessness of mind. *6. வருத்தம்;* affliction.

**பசிக்கொட்டாவி** பெ. (n.) *பசியால் உண்டாகும் கொட்டாவி;* yawning from hunger.

**பசிக்கொடுமை** பெ. (n.) *பசியால் ஏற்படும் கொடுமை;* severity of hunger.

**பசிச்சோர்வு** பெ. (n.) *பசியால் ஏற்படும் சோர்வு;* withering through hunger.

**பசித்தல்** வி. (v.) *1. பசிகொள்ளுதல்;* to be hungry. *2. உயிர்த்துன்பம் பன்னிரண்டனுள் ஒன்றாகிய உணவு வேட்கை;* hunger, appetite craving for food, one of *uyir-t-tuṉbam*. *3. வறுமை;* poverty.

**பசிதாகம்** பெ. (n.) *சோறும் தண்ணீரும் வேண்டல்;* hunger and thirst; craving for food and water.

**பசிதாளல்** பெ. (n.) *பசி பொறுத்தல்;* to endure or put up with hunger, to tolerate hunger, keeping wolf from the door.

**பசிபட்டினி** பெ. (n.) *உண்ணாது வருந்துகை;* hunger and starvation.

**பசிபொறாதவன்** பெ. (n.) *பசியைப் பொறுக்கமாட்டாதவன்;* one who cannot endure hunger.

**பசியாற்றுதல்** வி. (v.) *உண்டு பசியைத் தணித்தல்;* to appease hunger, eat, take food.

**பசியாறுதல்** வி. (v.) *பசிதணிய உணவு உண்ணுதல்;* to appease hunger.

**பசியெடுத்தல்** பெ. (n.) *பசியுண்டாகை;* feeling hungry.

**பசியேப்பம்** பெ. (n.) *பசி மிகுதியால் உண்டாகும் தேக்கெறிவு;* balching due to excessive hunger.

**பசுந்தாள்உரம்** பெ. (n.) *1. தழைக்காக வளர்க்கப்பட்ட பயிரை அந்த நிலத்திலேயே உழுது சேர்க்கும் உரம்;* green manure. *2. நாற்று நடுவதற்கு முன்னால் சேற்று நிலத்தில் பல்வேறு இலைதழைகளைப் போட்டு உரமாக்குதல்;* to make green manure before the transplantation in the field.

**பசுந்தாளெரு** பெ. (n.) *தழையுரம்;* green leaves, used as manure.

**பசுநெய்** பெ. (n.) *ஆவின் (பசுவின்) நெய்;* ghee from cow milk.

**பசுமைப்புரட்சி** பெ. (n.) *புதுமை முறைகளால் குறுகிய காலத்தில் அதிக விளைச்சல் ஏற்படும் வகையில் வேளாண்மையில் நடக்கின்ற பெரும் மாற்றம்;* great change that took place with in a short period in agriculture resulting in large yields; green revolution.

**பசை** பெ. (n.) *1. ஒட்டுநிலை;* stickiness, tenacity, adhesiveness. *2. பிசின்;* glue paste, cement.

**பஞ்சங்கூறுதல்** வி. (v.) *ஏழை போல நடித்தல்;* to pretend to be poor, profess poverty.

**பஞ்சணை** பெ. (n.) *பஞ்சுமெத்தை;* mattress stuffed with cotton.

**பஞ்சப்படி** பெ. (n.) *அகவிலைப்படி;* dearness allowance.

**பஞ்சப்பாட்டு** பெ. (n.) *ஓயாது தனது வறுமையைக் கூறுங் கூற்று;* poverty, as the burden of one's song.

**பஞ்சரம்** பெ. (n.) *1. பறவையடைக்குங் கூடு;* bird - cage nest. *2. உடம்பு;* human body. *3. மட்கலம் வனையுங் கூடம்;* pottery. *4. இடம்;* place, location, place of abode.

**பஞ்சாய்ப்பறத்தல்** வி. (v.) *1. ஆலாய்ப் பறத்தல்; விரைவாய்; அலைதல்;* to move fast. *2. நிலைகுலைந்திருத்தல்;* to struggle with great difficulties.

**பஞ்சுத்துணி** பெ. (n.) *புண்களுக்கு இடும் பஞ்சாலாகிய துணி;* cotton cloth used for dressing and cleaning wounds and sores.

**பஞ்சுப்பொதி** பெ. (n.) *பஞ்சடைந்த மூட்டை;* cotton bale.

**பஞ்சுபோல்வெளுத்தல்** வி. (v.) *பஞ்சு போல் தூய வெண்மையாதல்;* to become as white as cotton.

**பஞ்சுமிட்டாய்** பெ. (n.) *குச்சியில் பந்து போல் சுற்றியிருக்கும், வண்ணப் பஞ்சு போன்ற சருக்கரைப்பாகினால் செய்யப் பட்ட தின்பண்டம்;* candy - floss; cotton candy.

**பஞ்சைக்கோலம்** பெ. (n.) *ஏழ்மைக் கோலம்;* mean attire, beggarly dress.

**பஞ்சைப்பனாதி** பெ. (n.) *ஏதிலி;* useless; person; vagabond.

**பட்டங்கட்டுதல்** வி. (v.) *1. பட்டப்பெயர் சூட்டுதல்;* to confer a title. *2. அரசு முதலிய பதவியளித்தல்;* to invest with office dignity authority to install crown. *3. திருமணத்தில் மணமக்கள் நெற்றியிற் பொற்பட்டம் கட்டுதல்;* to fasten a gold band on the forehead of the bridal pair in a marriage.

**பட்டஞ்சூட்டுதல்** வி. (v.) *அரசத் தகுதியுரிமை பெற்றவருக்கு முடிசூட்டல்;* coronation.

**பட்டடைமரம்** பெ. (n.) *ஊன் (இறைச்சி) வைத்துக் கொத்தும் மரக்கட்டை;* butcher's block.

**பட்டணப் பிரவேசம்** பெ. (n.) *ஊர்வலம்;* procession through a town.

**பட்டணம்** பெ. (n.) *நகரம்; (குறிப்பாக) சென்னை நகரம்;* city, town (esp.) chennai. *'பட்டணத்து நாகரிகம்'.*

**பட்டணம்படி** பெ. (n.) *அளவுவகை;* a dry standard measure.

**பட்டத்துயானை** பெ. (n.) *அரசுச் சின்னங் களுடன் அரசன் ஏறிவரும் யானை;* royal elephant.

**பட்டதாரி** பெ. (n.) *சிறப்புப் பட்டம் பெற்றவன்;* a title holder; degree holder.

**பட்டப்பகல்** பெ. (n.) *நடுப்பகல்;* broad day light.

**பட்டப்பெயர்** பெ. (n.) *1. சிறப்புப் பெயர்;* title, honorific name. *2. புனைந்து வழங்கும் பெயர்;* tittle nick name.

**பட்டப்பாடு** பெ. (n.) *நுகர்ந்த துன்பம்;* suffering, trials endured.

**பட்டம் பிடித்தல்** வி. (v.) *பெட்டி முதலிய வற்றின் மூலையை இணைக்கத் தகடு தைத்தல்;* to fasten metal clasps on the corners of a box, etc.,.

**பட்டமரம்** பெ. (n.) *உலர்ந்து போன மரம்;* dead tree.

**பட்டயம்** பெ. (n.) *1. வாள்;* sword. *2. செப்புப் பட்டயம்;* royal grant inscribed on a copper plate.

**பட்டரை** பெ. (n.) *பட்டறை பார்க்க.*

**பட்டறை** பெ. (n.) *1. கொல்லன் களரி;* smithy, forge. *2. குவியல்;* stock, heap, pile as of straw fire wood or timber.

**பட்டாக்கத்தி** பெ. (n.) *1. வாள்;* sword. *2. புற்செதுக்குங் கருவி;* flat blade for cutting grass.

**பட்டாக்காரன்** பெ. (n.) *1. குத்தகை உரிமையாளன்;* leaseholder. *2. வில்லைப் பணியாள்;* a peon in livery.

**பட்டாம்பூச்சி** பெ. (n.) *1. வண்ணத்துப் பூச்சி;* butterfly. *2. தட்டாரப் பூச்சி;* dragon fly.

**பட்டி** பெ. (n.) *1. ஆக்கொட்டில்;* cow stall. *2. ஆட்டுக்கிடை;* sheep fold. *3. கொண்டித் தொழு;* cattle pound. *4. தெப்பம்;* float, raft.

**பட்டிக்கடா** பெ. (n.) *1. பொலியெருது;* covering bull. *2. எருமைக்கடா;* he buffelo.

**பட்டிக்காட்டான்** பெ. (n.) *நாட்டுப்புறத் தான்;* rustic, boor.

**பட்டிக்காடு** பெ. (n.) *சிற்றூர்;* hamlet, petty village.

**பட்டிகட்டுதல்** பெ. (n.) *மெல்லிய துணித் துண்டை மருந்து நீரில் நனைத்துப் புண், வீக்கம், வலியுள்ள இடங்களில் கட்டுதல்;* bandaging wounds sores, swellings or steeped in medicinal oil or other solutions.

**பட்டிநோன்பு** பெ. (n.) *மாட்டுப் பொங்கல்;* the festival or cermonial boiling of rice on the *māṭṭu-p-poṅgal day.*

**பட்டிப்படி** பெ. (n.) *கால்நடை காக்கும் கூலி;* allowance for herding cattle.

**பட்டிப்பொங்கல்** பெ. (n.) *மாட்டு மந்தையிலிடும் பொங்கல்;* pongal ceremony performed in the pen for cattle.

**பட்டி பார்த்தல்** வி. (v.) *1. தச்சு வேலையில் மரப்பலகை மற்றும் நிலைப்பேழை, வாசற்கால் முதலியவற்றில் வண்ணம் பூசுமுன் துளைகளோ ஒழுங்கற்ற பகுதிகளோ இருப்பின் அவற்றைச் சமப்படுத்துவதற்கு 'மக்கு' என்னும் மெழுகுப் பொருள் கொண்டு சரி செய்தல்;* in carpentary fill the holes crevices in a surface with wax before painting. *2. அனைத்து எந்திர ஊர்திகளிலும் அவற்றின் புற அமைப்பில் நசுங்கல், புடைப்பு, கீறல் முதலியன ஏற்படின் அவற்றை இரும்புத்தகடு கொண்டு பற்ற வைத்தும் சரி செய்தல்;* tinkering.

**பட்டிமண்டபம்** பெ. (n.) *1. கலைபயிற் கூடம்;* hall for the meeting of scholars. *2. ஓலக்க மண்டபம்;* hall of royal audience.

**பட்டிமன்றம்** பெ. (n.) *அணியினராகப் பிரிந்து, கொடுக்கப்பட்ட தலைப்புப் பொருளை ஏற்றும் எதிர்த்தும் பேசும் மேடைச் சொற்போர் நிகழ்ச்சி;* a forum of opposing teams debating a given subject.

**பட்டிமாடு** பெ. (n.) *கொண்டி மாடு;* straying cattle.

**பட்டிமாறித் திரிதல்** வி. (v.) *ஊரூராய்த் திரிதல்;* to go from place to place.

**பட்டிமேய்தல்** வி. (v.) *1. கால்நடை முதலியன பயிரை அழித்தல்;* to stray into a field and damage crops as cattle or wild beasts. *2. கண்டபடி திரிதல்;* to loiter about.

**பட்டியல்** பெ. (n.) *விளத்தங்களை ஏதேனும் ஓர் அடிப்படையில் ஒன்றின் கீழ் ஒன்றாகத் தரும் வரிசை முறை;* list; inventory.

**பட்டியெடுத்தல்** வி. (v.) *கொண்டித் தண்டம் வாங்குதல்;* to collect poundage.

**பட்டினி** பெ. (n.) *உணவு கொள்ளாமை;* fating, abstinence, starvation. *'வேலை யில்லாமல் பலர் பட்டினி கிடப்பது உண்டு'.*

**பட்டினிகாத்தல்** வி. (v.) *சாவு வீட்டில் உண்ணாதிருத்தல்;* to go with out food at a house of mourning.

**பட்டினிச்சாவு** பெ. (n.) *உணவு கிடைக்காத தால் ஏற்படும் இறப்பு;* death caused by starvation.

**பட்டினிபொறுத்தல்** பெ. (n.) *பசியால் வருந்துதல்;* to suffer from hunger.

**பட்டினிபோடுதல்** பெ. (n.) *உணவு உண்ணாதிருத்தல்;* to abstain from food. *'இன்று பட்டினி போடு; நாளைவயிறு சரியாகிவிடும்'.*

**பட்டுக்கத்தரித்தல்** வி. (v.) *பிசிரின்றி வெட்டுதல்;* cutting with out fray as in silk cloth.

**பட்டுக்கருப்பட்டி** பெ. (n.) *ஒருவகைக் கருப்புக் கருப்பட்டி;* a kind of black palmyra jaggery.

**பட்டுக்கரை** பெ. (n.) *ஆடையில் பட்டா லியன்ற கரை;* silk stripe or border in a cloth, opp. to *paluk ka-k-karai.*

**பட்டுக்குஞ்சம்** பெ. (n.) *பட்டின் கற்றைத் தொங்கல்;* silk tessel.

**பட்டுநூல்** பெ. (n.) *பட்டாலாகிய மெல்லிய நூல்;* fine silk thread.

**பட்டுப்புடைவை** பெ. (n.) *பட்டுச்சீலை;* silk saree.

**பட்டுப்பூச்சி** பெ. (n.) *பட்டு நூலை உண்டாக்கும் பூச்சி வகை;* silk worm.

**பட்டுப்போதல்** வி. (v.) *1. உலர்ந்து போதல்;* to wither, fade. *'இது பட்டுப் போன மரம்'. 2. சாதல்;* to die.

**பட்டை** பெ. (n.) *1. மரத்தோல்;* bark of a tree. *2. வாழைப்பட்டை;* outer rind of the plantain tree. *3. மரவுரி;* bark tree.

**பட்டைக்கம்பி** பெ. (n.) *1. ஆடையின் விளிம்பிலமைந்த அகன்ற வண்ணக் கோடு;* broad stripe in cloth. *2. சிலம்பம் பழகுவோர் கைத்தடி;* quarter - staffs, used by fencers.

**பட்டைக்கருப்பட்டி** பெ. (n.) *கருப்புக் கட்டி வகை;* a kind of jaggery.

**பட்டைக்காறு** பெ. (n.) *கொல்லன் பற்றுக்குறடு;* tongs, large pincers.

**பட்டைக்கொலுசு** பெ. (n.) *மகளிர், சிறுவர் காலில் அணிவதும் வெள்ளியாற் செய்யப்பட்டதும், பட்டையானது மாகிய அணிவகை;* a flat anklet of silver worn by children and women.

**பட்டைச்சாதம்** பெ. (n.) *இறைவனுக்குப் படைக்கப்படும் சோற்றுக் கட்டி;* offering of rice boiled and set in a cuplike form.

**பட்டைத்தையல்** பெ. (n.) *ஆடை முதலிய வற்றை மடித்துப் பட்டையாய்த் தைக்குந் தையல்;* flat seam.

**பட்டைதீர்தல்** வி. (v.) *1. சுண்ணம் முதலியவற்றால் பட்டையடிக்கப் படுதல்;* to be coated with stripe of red and white colour, as a temple wall. *2. கெம்பு முதலியவற்றை வெட்டிப் பட்டையாக்குதல்;* to give sides in cutting or polishing a gem, timber, etc., *3. வயிரம் முதலியவற்றைச் செதுக்கி வேலை செய்தல்;* to cut the faces, as of diamonds.

**பட்டைநாமம்** பெ. (n.) *1. பெரிய அளவிலான திருமண்குறி;* big sized vaisnavaite mark. *2. வஞ்சனை, ஏமாற்றுதல்;* Guile, cheating. *'அவனை நம்பினேன் அவன் எனக்குப் பட்டை நாமம் சாத்தி விட்டான்'.*

**பட்டைநூல்** பெ. (n.) *தாள் அட்டையிற் சுற்றப்பட்ட தையல் நூல்;* sewing thread wound on cards.

**பட்டையடித்தல்** வி. (v.) *கோயிற்சுவர், வீட்டுச் சுவர்களிலும் மரம் முதலிய வற்றிலும் சுண்ணாம்பு செம்மண் ஆகியவற்றால் பட்டையான நீண்ட கோடுகள் வரைதல்;* to mark the walls of houses, temples, etc., with stripes of red and white.

**பட்டையுரித்தல்** வி. (v.) *மர முதலியவற்றி லிருந்து மேற்பட்டையை நீக்குதல்;* to strip off bark.

**படக்குப்படக்கெனல்** பெ. (n.) *1. அச்சக் குறிப்பு;* onom, expr. signifying throbbing as the heart through fear or guilt. *2. நாடி முதலியன விரைந்து அடித்தற் குறிப்பு;* quick beating as the pulse from fever.

**படகு** பெ. (n.) *1. சிற்றோடம்;* small boat. *2. பாய் கட்டிய தோணி; dhoney,* large boat. *3. மீன்பிடி போன்ற போக்கு வரத்துக்கான நீர் ஊர்தி;* transporting boat.

**படகோட்டி** பெ. (n.) *படகைச் செலுத்து பவன்;* boatman.

**படபடத்தல்** வி. (v.) *1. பேச்சு முதலிய வற்றில் விரைதல்;* to be over hasty, as in speech. *2. குளிர் முதலியவற்றில் நடுங்குதல்;* to tremble through fear, to

shiver, as from cold water fever or ague. *3. சினத்தால் மனங்கலங்குதல்;* to be agitated rage.

**படபடப்பு** பெ. (n.) *1. துடிப்பு;* precipitancy, agitation, as through fear of anger. *2. பேச்சு முதலியவற்றில் விரைவு;* over hastiness, as in speech. *3. நடுக்கம்;* shivering quivering as from cold or ague.

**படபடெனல்** பெ. (n.) *1. துடித்தற் குறிப்பு;* onom; expr. signifying, throbbing, quivering. *2. விரைந்து பேசுதற் குறிப்பு;* speaking in haste as through fear anger. *3. அசைதற் குறிப்பு;* shaking quaking tottering. *4. வெடித்தற் குறிப்பு;* bursting breaking falling with a rattling noise.

**படம்பிடித்தல்** வி. (v.) *ஒளியின் உதவியால் கருவி கொண்டு ஒளிப்படம் பிடித்தல்;* to photograph.

**படமெடுத்தல்**[1] பெ. (n.) *படம் பிடித்தல் பார்க்க.*

**படமெடுத்தல்**[2] பெ. (n.) *1. பாம்பு தன் படத்தை விரித்து நிற்றல்;* to spread hood as a cobra. *2. புகைப்படக் கருவியால் படம் எடுத்தல்;* to shoot a photo with a still camara.

**படர்தல்** பெ. (n.) *1. ஓடுதல்;* to run. *2. கிளைத்தோடுதல்;* to spread as a creeper; to ramify branch out in different directions. *3. பரவுதல்;* to overspread, as spots or eruptions on the skin to spread as light fire rumour epidemic.

**படர்தாமரை** பெ. (n.) *1. தோல் மேற் படரும் நோய்வகை;* ringworm, tinea. *2. தேமல்வகை;* tetter, herpes.

**படர்தேமல்** பெ. (n.) *1. படர்தாமரை பார்க்க. 2. தேமல்;* spreading spots on the skin.

**படல்** பெ. (n.) *1. பனையோலையாலேனும் ,முள்ளாலேனும் செய்யப் பட்ட அடைப்பு;* small shutter of braided palm leaves or thurns. *2. மறைப்புத் தட்டி;* a kind of hurdle or wattled frame for sheltering cattle; sun shade.

**படவுத்தொழில்** பெ. (n.) *படகு கட்டுந் தொழில்;* occupation of boat making.

**படாதுபடுதல்** வி. (v.) *மிகத் துன்புறுதல்;* to suffer extreme misery.

**படார்** பெ. (n.) *சிறுதூறு;* low bush, low thicket of creepers.

**படார் படாரெனல்** பெ. (n.) *வெடித்த லொலிக் குறிப்பு;* onom, expr. signifying cracking, bursting with a sudden noise, report or explosion.

**படாரிடுதல்** வி. (v.) *படாரென வெடித்தல்;* to burst, crack with a sudden noise, report or explosion.

**படி**[1] பெ. (n.) *1. ஏணிப்படி;* step, stair; rung of a ladder. *2. நிலை;* grade, rank, class, order, sphere. *3. தன்மை;* nature. *4. அச்சுப்பிரதி;* copy. *5. பயணச் செலவு;* allowance. *6. 8 ஆழாக்கு அளவு;* a measure of 8 Azhakku (1.6 Kg.) *7. வினையடையாக்கும் இடைச்சொல்;* particle used after a noun or pronoun, in the sense of ‘as per’, according to.

**படி**[2] வி. (v.) *1. எழுதப்பட்ட வாசகத்தை வாசித்தல்;* (a letter or lesson). *2. (பள்ளி முதலியவற்றில்) கல்வி கற்றல்;* study (in school, etc.,). *3. தேர்ச்சி பெறுகிற அளவில் பயிலுதல்;* learn (a trade).

**படிக்கட்டி** பெ. (n.) *தடைகட்டுங்கல்;* counterpoise, equipoise.

**படிக்கட்டு** பெ. (n.) *மாடிப் படிக்கட்டு;* steps, stairs. flight of steps, stairs of masonry.

**படிக்கல்** பெ. (n.) *எடைக்கல்;* weighing stone.

**படிக்காசு** பெ. (n.) *நாட்செலவுக்குக் கொடுக்கும் பணம்;* subsistence allowance for a day.

**படிக்காரன்** பெ. (n.) *1. நாளுணவுக்காக வேலை செய்வோன்;* one who works

for his daily food. *2. படி கொடுப்போன்;* one who grants batta.

**படிக்குப்படி** பெ. (n.) *ஒவ்வொரு படியாக முன்னேறுதல்;* step by step; in an ascending series.

**படிக்குப்பாதி** பெ. (n.) *சரிபாதி;* exactly half.

**படிக்கூண்டு** பெ. (n.) *மெத்தைப் படிக் கட்டுக்கு மேல்முகடாகக் கட்டப் படும் கட்டடம்;* stairhead, masonry hood covering the top of a flight of stairs leading to a flat roof.

**படிகட்டுதல்** வி. (v.) *1. உணவுக்கு வேண்டிய பணத்தைச் செலுத்துதல்;* to pay daily allowance. *2. நிறைத் தடை கட்டுதல்;* to put allowance weight in the scale of a balance. *3. மாடிப்படி கட்டுதல்;* to construct steps or stairs.

**படிகமணி** பெ. (n.) *கடைந்த படிகக் கற்களால் அமைந்த கழுத்தணி;* a necklace made of crystals.

**படிகொடுத்தல்** வி. (v.) *படியளித்தல்;* giving stated allowance.

**படிச்செலவு** பெ. (n.) *நாட்செலவு;* daily expense.

**படித்துறை** பெ. (n.) *படிக்கட்டுக் களமைந்த நீர்த்துறை;* bathing ghat; a flight of steps leading down to a river with steps.

**படிதல்** வி. (v.) *1. அடியிற்றங்குதல்;* to settle as dust or sediment. *2. தங்குதல்;* to rest. *3. கீழ்ப்படிதல்;* to obey. *4. வணக்கக் குறியாகக் கீழே விழுதல்;* to fall prostrate.

**படிப்படியாய்** வி.எ. (adv.) *சிறுகச் சிறுக;* step by step, gradually.

**படிப்பணம்** பெ. (n.) *நாள் செலவுக்குக் கொடுக்கும் பணம்;* some amount given for daily expenses.

**படிப்பாளி** பெ. (n.) *கற்றோன்; கல்வி வல்லவன்;* a man of learning.

**படிப்பு** பெ. (n.) *1. கல்வி;* learning, study. *2. படித்தல்;* reading, recitation. *3. பாடுகை;* chanting, singing. *4. கற்பித்தல்;* instruction teaching. *5. ஒரு துறைத்தேர்ச்சி;* a course of study discipline.

**படிப்புக்காரன்** பெ. (n.) *1. ஒரு துறையில் நிறையப் படித்துத் தேர்ச்சிப் பெற்றவர்;* well read person, scholar. *2. கோயிலில் தொன்மம் கேட் போன்;* person who attends a temple to hear the purana chanted *3. நுண்ணுத் திக்காரன்; சூழ்ச்சிக்காரன்;* cunning, scheming.

**படிமானம்** பெ. (n.) *1. அமைவு;* tractable; docility. *2. தணிவு;* alleviation. *3. சட்டப் பலகைகளின் இணைப்புப் பொருத்தம்;* close fitting of planks in carpentry.

**படிமுடிச்சு** பெ. (n.) *மிகவும் இறுக்கமான முடிச்சு;* a tight knot.

**படிமேடை** பெ. (n.) *படிப்படியாயுயர்ந் தமைந்த இருக்கை வரிசை;* gallery.

**படியரிசி** பெ. (n.) *உணவுக்காகக் கொடுக்கும் அரிசி;* rice given as subsistance allowance.

**படியவைத்தல்** வி. (v.) *1. படியும்படி வைத்தல்;* to flatten or straighten olai or warped boards by placing weights over them. *2. ஊன்றுதல்;* to plant firmly, as one's feet in walking. *3. அடங்கச் செய்தல்;* to subdue as a country.

**படியளத்தல்** வி. (v.) *1. உயிர்வாழ்வதற் குரியனவற்றை அளித்தல்;* to supply for subsistance. *2. உயிர் வாழ்வதற்குப் படி கொடுத்தல்;* to measure out grain on account of wages, to make or pay allowances for one's maintenance.

**படியாள்** பெ. (n.) *1. படி வாங்கிப் பயிரிடும் குடியானவன்;* hired servant one whose

wages are paid in grain; farm labourer who receives his wages in kind. *2. மேல் வாரத்துக் குரியராய் கொடி வழியாக வாழ்விக்கப்படும் ஒரு வகுப்பினர்;* a division among a cast hereditarily attached as servents to some land holding family which must support them in times of drough and famine.

**படியெடுத்தல்** வி. (v.) *1. ஒன்றைப் போல மற்றொன்று செய்தல்;* to copy or duplicate. *2. ஒப்புமையாகக் கொள்ளுதல்;* to cite an instance for comparison.

**படீரெனல்** பெ. (n.) *ஒலிக்குறிப்பு;* onom, expr. signifying a sudden crash or explosion.

**படு**[1] வி. (v.) *1. அமைதல், விழுதல்;* to form or fall on a surface. *2. (ஒன்றின் மீது) விழுதல்; பதிதல்;* be strunk by something. *3. சிக்குதல்;* get caught. *4. நுகர்தல்;* experience. *5. ஓய்வெடு;* to take rest; go to bed.

**படு**[2] பெ. (n.) *பெயரடை மிகுதியை காட்ட பயன்படும்;* extreme of something. *'அவன் படு கோழை'.*

**படு**[3] இடை. (int.) *'மிகவும்'* என்ற *பொருளில் பயன்படுத்தப்படும் இடைச்சொல்;* particle used an intensifier in the sense of extreme of something. *'படுமோசமான படம்', 'படு வேகமாக ஓடினான்'.*

**படுக்கவைத்தல்** வி. (v.) *1. கிடக்கும்படி செய்தல்;* to lay down, as a child to sleep. *2. தோற்கடித்தல்;* to overthrow defeat. *3. அழித்தல்;* to ruin.

**படுக்காளிப்பயல்** பெ. (n.) *1. போக்கிலி;* rascal. *2. பொய்யன்;* liar.

**படுக்கை** பெ. (n.) *1. படுத்தல்;* lying down. *2. சரக்கு மூட்டை மேல் மூடி வைக்கப் பயன்படும் ஓலை;* straw or olas or boards placed in a boat to protect goods from the bilge water. *3. தவசம் முதலியன வைத்தற்கு உதவுமாறு அடியிற் பரப்பிய பொருள்;* ola is or straw laid down as a bed on which to place grain tobacco palmyra fruit, earthen ware, etc.,

**படுக்கையறை** பெ. (n.) *பள்ளியறை;* bed room.

**படுகட்டை** பெ. (n.) *1. உலர்ந்த மரத் துண்டு;* dead stump of tree, dry log. *2. பயனில்லாத கிழவன் அல்லது கிழவி;* old person, fit for nothing.

**படுகள்ளம்** பெ. (n.) *பெருமோசம்;* gross fraud.

**படுகளம்** பெ. (n.) *1. போர்க்களம்;* battle field. *2. தொந்தரவு;* trouble; mischief.

**படுகாடு** பெ. (n.) *மரங்கள் ஒரு சேர அடர்ந்த காடு;* thick forest with trees.

**படுகாயம்** பெ. (n.) *இறப்பை விளை விக்கும் காயம்;* fatal wound; serious injury.

**படுகிடை** பெ. (n.) *1. நோய் மிகுதியால் எழுந்திருக்க முடியாத நிலை;* being bed ridden. *2. தன் எண்ணம் நிறைவேற ஒட்டாரமாகப் படுத்துக் கிடக்கை;* sitting protest.

**படுகிழவன்** பெ. (n.) *தொண்டு கிழவன்;* very old man.

**படுகுடி** பெ. (n.) *கெடுகுடி;* ruined.

**படுகுழி** பெ. (n.) *பெருங்குழி;* pit fall, kheda, as for catching elephants.

**படுகுறவன்** பெ. (n.) *பெரும்பாசாங்குக் காரன்;* knavish, trichy fellow.

**படுகொலை** பெ. (n.) *கொடுங்கொலை;* cruel murder.

**படுகொலைக்காரன்** பெ. (n.) *கொடுங் கொலை செய்வோன்;* cold blooded murderer, assassin.

**படுசுட்டி** பெ. (n.) *1. மிகுந்த அறிவுக் கூர்மையுள்ளவ-ன்-ள்;* a very smart or

highly intelligent fellow. *2. மிகுந்த குறும்புத்தனமுள்ள-வ-ன்-ள்;* a very mischievous youth.

**படுத்துதல்** வி. (v.) *1. துன்பஞ்செய்தல்;* to cause to suffer, to put in to trouble, to put under pressure. *2. அடையச் செய்தல்;* to cause to get. *3. உண்டாகுதல்;* to effect, bring into existence.

**படுதண்டம்** பெ. (n.) *மிகு வணக்கம்;* profound reverence.

**படுபழி** பெ. (n.) *கொடிய தீச்செயல்;* heinous crime, great offence, flagrant wrong.

**படுபாவி** பெ. (n.) *1. மிகக் கொடியவன்;* heinous sinner. *2. கொலைக்குமஞ்சாத கொடியன்;* murderer who never hesitates to kill.

**படுபொய்** பெ. (n.) *முழுவதுமான பொய்;* an audacious lie.

**படுமுடிச்சு** பெ. (n.) *1. கெட்டி முடிச்சு; இறுக்கமான முடிச்சு;* hard knot. *2. மிகுநுண்ணுத்தி;* intricate plot or scheme.

**படுமோசம்** பெ. (n.) *1. முழுமோசம்;* grass fraud. *2. பெருங்கேடு;* extreme danger. *3. பெருந்தவறு;* grievous mistake.

**படைத்தல்** வி. (v.) *1. உண்டாக்குதல்;* to create, form, produce. *2. பரிமாறுதல்;* to serve or distribute, as food to guests. *3. தெய்வங்களுக்குப் படைத்தல்;* to offer, as boiled rice, to gods or manes. *4. பொருளீட்டுதல்;* to acquire, secure. *5. கலத்தல்;* to mix. *6. அடித்தல்;* to thrash.

**படை** பெ. (n.) *1. தானை;* army. *2. பரிவாரம்;* relation and attendants. *3. படைக்கலம்;* weapons, arms of any kind. *4. கருவி;* instrument, implement, tool. *5. உறக்கம்;* sleep.

**படைக்கப்பல்** பெ. (n.) *போர்க்கப்பல்;* man of war, frigate.

**படைக்கலம்** பெ. (n.) *1. போர்க்கருவி;* weapons, arms. *2. எறிபடை;* missile. *3. எஃகு;* steel.

**படைப்பு** பெ. (n.) *1. படைப்புத்தொழில்;* creation. *2. படைக்கப்பட்டது;* that which is created. *3. பெறுகை;* acquiring possessing. *4. காணிக்கையாகப் படைத்தல்;* offering of food as to a god.

**படையல்** பெ. (n.) *1. காணிக்கையாக்கும் உணவு;* offering. *2. அடிக்கும் அடி;* beating, used in burlesque.

**படையெடுத்தல்** வி. (v.) *தன் படையுடன் பகைப்புலத்தின்மேற் செல்லுதல்;* to invade, lead a military expedition.

**படையோலை** பெ. (n.) *தோலுரிக்காத பனம்பழங்களை வைக்க உதவும் பனையோலை;* palmyra leaf or leaves on which the fruits of the palmyra are kept when they are unhusked.

**படைவீரன்** பெ. (n.) *போர்வீரன்;* warrior, soldier.

**பண்டக்காரன்** பெ. (n.) *1. செல்வ முள்ளவன்;* rich man. *2. பண்டத்துக் குரியவன்;* owner of goods.

**பண்டபாத்திரம்** பெ. (n.) *பொருள், ஏனம் முதலியவை;* household things or articles.

**பண்டம்** பெ. (n.) *1. பொருள்;* substance, article, store, provision. *2. ஏனம் முதலியன;* materials, utensils. *3. பணியாரம்;* cake. *4. பயன்;* profit, advantage. *5. செல்வம்;* wealth, riches. *6. உண்மை;* truth certainly.

**பண்டமாற்று** பெ. (n.) *ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளைப் பெறுதல்;* exchange of goods for goods; barter.

**பண்டாரத்தெரு** பெ. (n.) *அரசவீதி;* kings high road.

**பண்டாரத்தோப்பு** பெ. (n.) *அரசுத் தோட்டம்;* government garden.

**பண்டாரம்** பெ. (n.) *1. கருவூலம்;* stores, wares, treasury. *2. கருவூலச்சாலை;* public treasury. *3. களஞ்சியம்;* granary om. *4. அரசு;* government. *5. இனிய தின்பண்டம்;* varied and delicious food. *6. பல்பண்டம்;* articles of food. *7. சமயக் கடைப்பிடியாளன்;* religious mendicant.

**பண்டாரி** பெ. (n.) *கருவூலக்காரன்;* treasurer of a religious establishment.

**பண்டிகை** பெ. (n.) *திருநாள்;* festival; periodical festival.

**பண்டிதர்** பெ. (n.) *மொழி கற்பிக்கும் ஆசிரியர்;* teacher.

**பண்டிதன்** பெ. (n.) *1. புலவன்;* man of learning and erudition. *2. மருத்துவன்;* doctor, physician, medical man. *3. அறிவன்;* the planet mercury.

**பண்டுவம்** பெ. (n.) *மருத்துவம்;* medical treatment.

**பண்டை** பெ. (n.) *1. பழமை;* oldness. *2. முற்காலம்;* former time, previous time.

**பண்டைநாள்** பெ. (n.) *முன்னாள்;* former days, antiquity.

**பண்ணியம்** பெ. (n.) *1. பண்டம்;* stores, provisons. *2. பணியாரம்;* cakes, pastry, confectinery. *3. விற்கப்படும் பொருள்;* merchandise.

**பண்ணிவைத்தல்** பெ. (n.) *ஆசிரியரா யிருந்து சடங்கு நடத்திவைத்தல்;* to officiate as priest.

**பண்ணுதல்** வி. (v.) *1. செய்தல்;* to make, effect, produce, accomplish. *2. அணியப் படுத்துதல்;* to fit out make suitable. *3. ஒப்பனை செய்தல்;* to adorn. *4. சமைத்தல்;* to cook.

**பண்ணை** பெ. (n.) *1. மருத நிலம்;* agricultural tract. *2. வயல்;* paddy field. *3. தோட்டம்;* garden, cultivated plot of ground. *4. நீர்நிலை;* tank, pond. *5. சொந்த வேளாண்மை;* direct cultivation. *6. வாரக்குடி;* establishment of farm labourers.

**பண்ணைக்காரன்** பெ. (n.) *1. உழவன்;* husbandman, cultivator. *2. சிற்றூர் உதவிமணியகாரன்;* assistant headman of a village. *3. நிலக்கிழார்;* rich landlord farm owner.

**பண்ணைக்கிருத்தல்** பெ. (n.) *பண்ணை யில் ஊழியஞ் செய்தல்;* to serve as labourer on a farm.

**பண்ணைக்கீரை** பெ. (n.) *சேவற் பண்ணைக்கீரை;* cocks comb greens.

**பண்ணைநிலம்** பெ. (n.) *சொந்த வேளாண் நிலம்;* lands directly cultivated by the owner, home farm lands.

**பண்ணை பார்த்தல்** வி. (v.) *1. வேளாண் நிலங்களைக் கண்காணித்தல்;* to manage lands; to attend to one's farm. *2. பெருங்குடும்பத்தை ஆளுமைச் செய்தல்;* to manage a large farmily.

**பண்ணையரிவாள்** பெ. (n.) *கதிரறுக்கும் அரிவாள்;* sickle.

**பண்ணையார்** பெ. (n.) *பெருநிலக்கிழார்;* land lord.

**பண்ணையாள்** பெ. (n.) *பண்ணை வேலைக்காரன்;* permanent farm servant.

**பண்ணைவீடு** பெ. (n.) *1. பெரிய நிலக் கிழாரின் வீடு;* house of a big landlord. *2. மடைப்பள்ளி;* kitchen. *3. பண்டகச் சாலை;* store house. *4. நகரச் செல்வந்தரின் ஓய்விற்கான வசதி மிகு வயல்வெளி வீடு;* towns man's comfortable and large country side house.

**பண்ணைவைத்தல்** வி. (v.) *தானே வேளாண்மை செய்ய ஆள் முதலியன அமர்த்துதல்;* to engage farm labourers.

**பண்பட்டவன்** பெ. (n.) *கல்வியறிவும் பட்டறிவும் உள்ளவன்;* educated and experienced man.

**பண்பட்டுத்திரிதல்** வி. (v.) *ஊழியஞ் செய்து வருதல்;* to attend courteously on one; to continue in a course of service.

**பண்படுதல்** வி. (v.) *1. சீர்திருந்துதல்;* to become refined or reformed. *2. நிலம் முதலியன செப்பமாதல்;* to be suitable for tillage, as land. *3. அமைதல்;* to be obedient, submissive. *4. உதவுதல்;* to help, save.

**பண்படுத்துதல்** பெ. (n.) *பண்படுதல் பார்க்க.*

**பண்பாடு** பெ. (n.) *திருந்திய ஒழுக்கம்; உள்ளத்தின் செம்மை;* culture.

**பண்பாளர்** பெ. (n.) *நல்ல பண்பு களுள்ளவன்;* person of good qualities.

**பண்பு** பெ. (n.) *1. வண்ணம், வடிவு, அளவு, சுவையென்னும் நாற்குணம்;* quality of four kinds, viz., vannam, vadivu, alavu, suvai. *2. இயல்பு;* nature, property. *3. மனத்தன்மை;* disposition, temper. *4. பிறரியல்பையறிந்து நடக்கும் நற்குணம்;* good quality courtesy. *5. அழகு;* beauty.

**பண்புகாட்டுதல்** வி. (v.) *இயற்கைக் குணத்தை வெளிப்படுத்துதல்;* to betray one's true nature.

**பண்புடையார்** பெ. (n.) *பண்பாளர் பார்க்க.*

**பண அஞ்சல்** பெ. (n.) *(ஒருவர் மற்றொரு வருக்கு) பணத்தை அஞ்சல் அலுவலகத்தின் மூலமாகக் கட்டணம் செலுத்தி அனுப்பும் முறை;* arrange- ment for sending money to s.o. by paying the sum at a post office (in India) money order.

**பணக்காரன்** பெ. (n.) *செல்வன்;* rich man.

**பணக்காரி** பெ. (n.) *செல்வமுள்ளவள்;* rich woman.

**பணக்கொழுப்பு** பெ. (n.) *செல்வச் செருக்கு;* haughtyness due to wealth, insolence of wealth.

**பணப்பயிர்** பெ. (n.) *தவசம் அல்லாத வருமானத்தை மிகுதியாகத் தரக்கூடிய கரும்பு, பருத்தி போன்ற பயிர்கள்;* commercial crop; cash crop.

**பணப்பித்து** பெ. (n.) *பணப்பேராசை;* greed of money, avarice.

**பணப்பேய்** பெ. (n.) *பணத்தில் மிக்க ஆசை;* extreme avarice.

**பணம்** பெ. (n.) *1. பொருட்செல்வம்;* wealth. *2. பொற்காசு;* coin, money, gold coin. *3. பழைய அளவை முறை கொண்ட வெள்ளி மற்றும் பொற்காசு வகை;* fanam. *4. விலை;* price.

**பணம்பண்ணுதல்** பெ. (n.) *பணம் ஈட்டுதல்;* make or earn money.

**பணம் பறித்தல்** வி. (v.) *பொருளைக் கவர்தல்;* to extort money by dishonourable means.

**பணம்வைத்தல்** வி. (v.) *1. பொருட் பந்தயம் வைத்தல்;* to bet money, as in gambling. *2. திருமணம் முதலான நிகழ்ச்சிகளில் அன்பளிப்பாகப் பணம் வழங்குதல்;* to present money for the couple.

**பணமடித்தல்** பெ. (n.) *மாழைகளிலும் தாளிலும் அரசு பணம் அச்சிட்டு வெளியிடுதல்;* to mint coins and currency by the government.

**பணமிதப்பு** பெ. (n.) *செல்வ மிகுதியால் செருக்கு;* abundane of money.

**பணமுட்டு** பெ. (n.) *1. பணமில்லாக் குறைவு;* want to money. *2. பணத்துடன் கூடிய தட்டு;* a plate with full of money.

**பணமுடக்கம்** பெ. (n.) *பணம் வட்டியின்றி வீணாகத் தங்குகை;* money lying idle without interest.

**பணமுடிச்சு** பெ. (n.) *பணத்தைத் துணியில் கட்டிவைக்கும் முடிப்பு;* money tied in a little piece of cloth or, at the end of a garment.

**பணமுடிப்பு** பெ. (n.) *ஒருவரைப் பாராட்டிச் சிறப்பிக்கும் முறையில் அல்லது ஒரு நோக்கத்துக்காகச் செலவிடும் பொருட்டுத் திரட்டி வழங்கப்படும் பெரும் தொகை;* sum of money collected and given as a gift; purse.

**பணமுடை** பெ. (n.) *பணமில்லாக்குறைவு;* want of money; need of finance.

**பணயக்கைதி** பெ. (n.) *தங்கள் கோரிக்கைகளுக்கு இணங்கும்படி கடத்தல்காரர்கள் முனைப்பாளர்கள் போன்றோர் எதிர்த்தரப்பினரை மிரட்டிப் பணிய வைக்கும் நோக்கத்துடன் பிடித்து வைக்கப்பட்டிருப்பவர்;* hostage; person head for ranson.

**பணயம்** பெ. (n.) *1. ஈடாக வைக்கும் பொருள்;* pledge, pawn. *2. பந்தயப் பொருள்;* stake in gambling.

**பணவஞ்சல்** பெ. (n.) *பணவிடை ஒருவர் மற்றொருவருக்குப் பணத்தை அஞ்சல் அலுவலகத்தின் மூலமாகக் கட்டணம் செலுத்தி அனுப்பும் முறை;* money order.

**பணவீக்கம்** பெ. (n.) *ஒரு நாட்டில் பணப்புழக்கம் அதிகமாவதால் பணத்தின் மதிப்புக் குறைந்து அகவிலை அதிகமாகும் நிலை;* inflation.

**பணம் வெட்டுதல்** வி. (v.) *1. பொருளைப் பிடுங்கிக் கொள்ளல்;* to extort money by dishonourable means. *2. பணங் கொடுத்தல்;* to give money for something. *3. கையூட்டுக் கொடுத்தல்;* to give bribe.

**பணி** பெ. (n.) *1. செயல்;* act, action, performance. *2. தொழில்;* work service. *3. தொண்டு;* services to a deity. *4. பணிகை;* bowing, reverencing. *5. கடினமான வேலை;* difficult task. *6. நுகர்ச்சிப்பொருள்;* object of enjoyment. *7. அணிகலன்;* jewel; ornament. *8. பட்டாடை;* silk cloth. *9. தோற்கருவி;* drum. *10. வேலைப்பாடு;* workmanship. *11. வகுப்பு;* row, class, order. *12. செயலை நிறைவேற்றும்படி ஆணையிடுதல், கட்டளையிடுதல்;* to order, cause to carry out can orders.

**பணிக்காரன்** பெ. (n.) *வேலையாள்;* servant.

**பணிக்கொடை** பெ. (n.) *(பெரும்பாலும் அலுவலக வழக்கில்) குறிப்பிட்ட ஆண்டுகளுக்குக் குறையாமல் பணி புரிந்த ஊழியர் ஓய்வுபெறும் பொழுது அல்லது பணியில் இருக்கும் காலத்தில் இறக்க நேரிடும் போது வரையறுக்கப் பட்ட முறைப் படி வழங்கப்படும் ஓய்வுக் காலச் சலுகை வகையைச் சேர்ந்த தொகை;* gratuity.

**பணிதல்** வி. (v.) *1. தாழ்தல்;* to be low in height, as a house. *2. பெருமிதமின்றி யடங்குதல்;* to be humble; to be submissive, as in speech. *3. வணங்குதல்;* to bow to, make obeisance. *4. ஆணையிடுதல்;* to order command, direct. *5. கொடுத்தல்;* to give bestow.

**பணிப்பூட்டு** பெ. (n.) *அணிகலக் கொக்கிப் பூட்டு;* lock of a clasp in an ornament.

**பணிப்பெண்** பெ. (n.) *1. மருத்துவமனை, தொழிற்சாலை போன்றவற்றில் சிறுசிறு வேலைகளைக் கவனிக்கும் கடைநிலைப்பெண் ஊழியர்;* last grade woman worker. *2. பெரும்பாலும் அரண்மனையில் ஊழியம் செய்யும் பெண்;* maid servents.

**பணிபுரிதல்** வி. (v.) *1. வேலை பார்த்தல்;* work. *2. தொண்டு செய்தல்; பொது நலனுக்காகப் பாடுபடுதல்;* serve.

**பணிமனை** பெ. (n.) *பேருந்துகளைப் பழுது பார்க்கவும் நிறுத்தி வைக்கவும் பயன்படுத்தப்படும் இடம்;* shed (for buses either for repairs or for parking) workshop, depot.

**பணிமாறுதல்** வி. (n.) *1. தொண்டு செய்தல்;* to render service to a deity or a superior person, as by waving a fan carrying incense. blowing. a trumpet, etc., *2. பணி செய்வோர் இடம் மாறுதல்;* to transfer.

**பணி முடக்கம்** பெ. (n.) *வேலை நிறுத்தம்;* labourer's strike.

**பணிமூப்பு** பெ. (n.) *பெரும்பாலும் அலுவலக வழக்கில் ஒரே நிலையில் பணிபுரியும் பலருள் ஒருவர் மற்றவரைவிட எவ்வளவு காலம் மிகுதியாகப் பணியாற்றி உள்ளார் என்பதைக் கணக்கிடும் கால அளவு;* seniority (of an employee) in the service).

**பணியாரக்குடம்** பெ. (n.) *மணமகள் வீட்டாரால் மணமகன் வீட்டுக்குச் சீர்வரிசையாக அனுப்பப்படும் பணியாரம் நிறைந்த குடம்;* a pot full of cakes, being one of the marriage presents commonly given by the bride's party.

**பணியாரச்சட்டி** பெ. (n.) *பணியாரஞ்சுடும் சட்டி;* pot for preparing cakes.

**பணியாரம்** பெ. (n.) *குழிப்பணியாரம், ஒருவகைத் தின்பண்டம்;* cakes, pastry, fritters.

**பணியாள்** பெ. (n.) *1. ஊழியம் செய்பவர்;* servent. *2. (அலுவலகத்தில்) கடைநிலை ஊழியர்;* last srafe employee (in an office).

**பணியாளர்** பெ. (n.) *(அலுவலகத்தில்) பணிபுரிபவர்; பணிக்கு அமர்த்தப் பட்டவர்;* employee.

**பணியாற்றுதல்** வி. (v.) *1. வேலை பார்த்தல்;* work (in an office). *2. தொண்டு செய்தல்; பொது நலனுக்காகப் பாடுபடுதல்;* serve.

**பணியிடம்** பெ. (n.) *அலுவலகத்தில் பதவிக்கான இடம்;* post.

**பணிவிடை** பெ. (n.) *1. குற்றேவல்;* service. *2. திருப்பணி;* temple service; temple construction. *3. தொழில்;* work, business, occupation office, work of an artist. *4. கட்டளை;* commission, order command.

**பணிவிடைக்காரன்** பெ. (n.) *1. வேலையாள்;* servant, house servant. *2. தொழிலாளி;* artisan, workman. *3. கோயிற்பிள்ளை;* sexton church - attendant.

**பணிவு** பெ. (n.) *1. கீழ்ப்படிகை;* submission, subordination. *2. வணக்கம்;* humility, veneration. *3. குறை;* defect, demerit. *4. தாழ்விடம்;* low place depression.

**பணையம்** பெ. (n.) *1. ஈடு;* pawn, pledge. *2. பந்தயப்பொருள்;* state in gambling.

**பத்தடி** பெ. (n.) *இடம்;* place, location.

**பத்தரைமாற்றுத்தங்கம்** பெ. (n.) *உயர்ந்த தங்கம்;* unalloyed gold of standard fineness.

**பத்தாம்பசலி** பெ. (n.) *1. பழையபோக்கு;* tendency of cling to old ways or methods. *2. பழமையாளி; பழைமைமுறை;* old fashioned persons.

**பத்தாம்பிறப்பு** பெ. (n.) *பத்தாவது குழந்தை;* the tenth child born to a woman.

**பத்தாயம்** பெ. (n.) *1. நெல் முதலிய தவசம் இட்டு வைக்கும் களஞ்சியம்;* receptable for grain, etc., grain bin. *2. பெரும் பெட்டகம்;* a very large box.

*3. விலங்கு முதலியன அடைக்குங் கூடு;* cage for keeping animals. *4. எலி முதலியன பிடிக்கும் பொறி;* trap for catching animals rats, etc.,

**பத்திநெறி** பெ. (n.) *பத்தியால் வீடு பேறடையும் முறை;* path of salvation through devotion.

**பத்திபாய்தல்** வி. (v.) *1. ஒளி வீசுதல்;* to stream out, as pencils of rays. *2. எதிரொளி செய்தல்;* to be reflected.

**பத்தியக்கட்டுப்பாடு** பெ. (n.) *மருந்து சாப்பிடும்போது பத்தியத்தில் உணவுக் கட்டுப்பாடாக இருத்தல்;* restriction of diet.

**பத்தியக்கறி** பெ. (n.) *பத்தியத்திற்குப் பயன்படும் காய்கனிகள்;* vegetables and fruits useful for those on diet.

**பத்தியக்குற்றம்** பெ. (n.) *பத்தியக் குறைவினால் ஏற்படும் குற்றம்;* faults or disorders arising fron non - observance of diet.

**பத்தியக்குறைவு** பெ. (n.) *பத்திய முறைக்கு எதிராகப் பல பொருள்களையும் உண்ணல்;* contrary to principles of diet.

**பத்தியங்காத்தல்** வி. (v.) *கொடுக்கப் பட்ட மருந்துக்கேற்ற மாற்று உணவெடுத்தல்;* to observe a prescribed diet.

**பத்தியம்** பெ. (n.) *1. மருந்துக்கிசைந்த மாற்று உணவு;* prescribed diet for a patient. *2. நலம்;* that which is good or agreeable. *3. உன்னிப்பு;* seriousness, earnestness, attention. *4. படிப்பணம்;* subsistance allowance. *5. கையூட்டு;* bribe.

**பத்தியம் பிடித்தல்** வி. (v.) *பத்தியமாக உண்ணுதல்;* to be under prescribed diet.

**பத்தியம்போடுதல்** வி. (v.) *1. பத்தியமாக உணவு சமைத்தல்;* to prepare a prescribed diet. *2. நோயாளிக்கு மருந்துக்கேற்ற உணவு கொடுத்தல்;* to put a patient under diet. to diet one. *3. மகவு உயிர்த்தவளுக்கு மூன்றாம் நாள் பத்திய உணவு கொடுத்தல்;* to give food to a woman inconfinement on the third day of the delivery.

**பத்தியமுறித்தல்** வி. (v.) *1. மருந்துப் பத்தியத்தை முடித்தல்;* to violate the dietary prescription. *2. குறித்த காலத்திற்கப்பால் பத்தியவுணவை நீக்கிக்கொள்ளுதல்;* to take regular meals after completing the period of dietary regulation.

**பத்தியிறக்குதல்** வி. (v.) *தாழ்வாரம் இறக்குதல்;* to make a sloping veranda - roof.

**பத்தும் பத்தாக** து.வி. (adv.) *முழுமையாக;* wholly, fully.

**பத்தெட்டுக்குத்தல்** பெ. (n.) *நன்றாகக் குத்தித் தீட்டிய அரிசி;* well cleaned rice.

**பத்தை** பெ. (n.) *1. கீற்று;* slice. *2. சிறு துண்டு;* thin piece, as of bamboo; slice of coconut. *3. மண்ணோடு கூடிய பசும் புல்துண்டு;* turf.

**பத்தைகட்டுதல்** வி. (v.) *முறிந்த எலும்புக்கு மூங்கிற்பத்தை வைத்துக் கட்டல்;* bandaging with bamboo splint for broken or fractured bone.

**பத்தொடு எட்டுக்கொள்ளல்** பெ. (n.) *மூச்சுப் பழக்கத்தைக் குறிக்கும் பத்தொடு எட்டு சேர்த்தல்;* adding eight to ten probably referring to the scientific breathing of yogis.

**பதத்தல்** வி. (v.) *ஈரமாதல்;* to become moist, soft, marshy.

**பதக்கம்** பெ. (n.) *1. மங்கல நாண் முதலியவற்றிற் கோக்கப்படும் கல்லிழைத்த தொங்கற் கழுத்தணி;* a pendant set with gems and suspended from the necklace. *2. உருவம் எழுத்து போன்றவை பொறிக்கப்பட்ட மதிப்புடைய மாழைப் பட்டை;* medal.

**பதக்கு** பெ. (n.) *இரண்டு குறுணி கொண்டதோர் அளவு;* a measure of capacity = 2 kuṟuṇi.

**பதக்குப் பதக்கெனல்** பெ. (n.) *அச்சத்தால் நெஞ்சு துடித்தற் குறிப்பு;* expr. signifying throbbing of the heart through fear.

**பதங்கமேற்றுதல்** வி. (v.) *எரித்துப் பதங்கம் எடுத்தல்;* to extract essence of drugs by sublimation.

**பதங்கமேறுதல்** வி. (v.) *எரிப்பதனால் ஆவியாகப் படிதல்;* being deposited after heating into vapour.

**பதஞ்செய்தல்** வி. (v.) *1. பதப்படுத்துதல்;* to temper. *2. மென்மையாக்குதல்;* to soften.

**பதட்டம்** பெ. (n.) *பதற்றம் பார்க்க.*

**பதடி** பெ. (n.) *1. பதர்;* chaff, blighted grain. *2. உமி;* husk. *3. பயனின்மை;* futility. *4. வில்;* bow.

**பதந்தவறுதல்** வி. (v.) *நிலையினின்று பக்குவம் நழுவுதல்;* to slip down, as from one's position.

**பதநீர்** பெ. (n.) *புளிப்பேறாதபடி, சுண்ணாம்பிடப்பட்ட கலசத் தூளிறக்கிய இனிப்பு தேறல் (கள்);* sweet toddy drawn in a pot lined with lime to prevent fermentation.

**பதப்படுத்துதல்** வி. (v.) *1. பயன் படும்படிச் செய்தல்;* to make a thing fit for use. *2. இணக்குதல்;* to reconcile.

**பதப்படுதல்** வி. (v.) *1. பக்குவப்படுதல்;* to be seasoned. *2. பழுத்தல்;* to ripen.

**பதபதத்தல்** பெ. (n.) *மனம் பரிதவித் தற்குறிப்பு;* expr. signifying, trembling of the heart.

**பதபதெனல்** பெ. (n.) *1. ஈரடுக்கொலிக் குறிப்பு;* expr. signifying the sound of water in swift motion or of a storm. *2. நெஞ்சடித்தற்குறிப்பு;* the trembling of the heart.

**பதம்** பெ. (n.) *1. பக்குவம்;* proper consistency, quality of fitness. *2. உணவு;* cooked food. *3. சோறு;* boiled rice. *4. இன்பம்;* joy, delight. *5. அடையாளம்;* sign, indication. *6. பொருள்;* thing substance. *7. மாறுகோலம்;* disguise.

**பதம் செய்தல்** பெ. (n.) *இளகச் செய்தல்;* to make soft.

**பதம் பார்த்தல்** வி. (v.) *1. ஆய்வு செய்தல்;* test. *2. காயப்படுத்துதல்;* hurt inadvertently. *3. சுவையறிதல்;* to try the taste or consistency of boiling rice. *4. விதையிட நிலத்தின் பக்குவம் அறிதல்;* to examine the moistness of land in order to ascertain its fitness for sowing.

**பதமாக்கல்** பெ. (n.) *1. பக்குவப்படுத்தல்;* making fit. *2. பயன்படும்படிச்செய்தல்;* to make use. *3. பக்குவ நிலைக்குக் கொண்டு வருதல்;* bringing to perfection.

**பதமாய்க் கிளறல்** பெ. (n.) *இளகியம் முதலிய மருந்துகளைப் பக்குவப் படும்படித் தீயிட்டுக் கிளறுதல்;* stirring medicine on fire during preparation till it reaches perfection.

**பதமாயெரித்தல்** பெ. (n.) *1. பக்குவப்படும் படியெரித்தல்;* burning or heating so as bring to perfection. *2. அளவுப்படி யெரித்தல்;* heating as per prescribed degree.

**பதமிடல்** பெ. (n.) *1. மருந்து பூசுதல்;* rubbing medicine. *2. எண்ணெய்ப் பூசுதல்;* anointing with medicated oil to soften the affected part. *3. மெதுவாகும் படிச் செய்தல்;* to softer.

**பதர்** பெ. (n.) *1. உள்ளீடற்ற நெல்;* chalf, husk, empty ears of grain. *2. பயனின்மை;* unsubstantiality; emptiness; worthlessness. *3. பயனற்றவன்;* worthless person. *4. குற்றம்;* fault, defect. *5. அறிவிலி;* stupid.

**பதர்த்தல்** வி. (v.) *பதராய்ப்போதல்;* to become useless.

**பதவி** பெ. (n.) *1. நிலை;* position, rank. *2. அதிகாரமுள்ள பொறுப்பு; பணியிடம்;* post. *3. புண்ணிய உலகம்;* eternal world.

**பதவி இறக்கம்** பெ. (n.) *ஒருவரை அவர் இருக்கும் பதவியைக் காட்டிலும் அதிகாரத்திலும் மதிப்பிலும் குறைந்த பதவிக்கு மாற்றுதல்;* demotion.

**பதவி உயர்வு** பெ. (n.) *ஒருவர் இருக்கும் பதவிக்கு அடுத்த மேல்நிலைப் பதவி அளித்தல்;* promotion.

**பதவி நீக்கம்** பெ. (n.) *1. பணிநீக்கம்;* dismissal. *'அலுவலகப் பணத்தைக் கையாடல் செய்ததற்காக அவர் பதவி நீக்கம் செய்யப்பட்டார்'. 2. (குடியாட்சி முறையில்) தேர்ந்தெடுக்கப் பட்ட அரசை அதிகாரம் இழக்கச் செய்தல்;* dismissal (of an elected government).

**பதவியேற்பு** பெ. (n.) *அமைச்சர், சட்டமன்ற உறுப்பினர், நடுவர் முதலியோர் பதவி ஏற்கும்போது அதிகாரமுறைப்படி எடுத்துக் கொள்ளும் உறுதிமொழி;* swearing in (ceremony).

**பதவியேற்றல்** வி. (v.) *உறுதிமொழி கூறிப் பதவியை ஒப்புக்கொள்ளுதல்;* be sworn in, take office.

**பதற்றம்** பெ. (n.) *1. முன்பின் திட்டமின்றிப் பரபரப்புக் கொள்ளுதல்;* rushness; hurry. *2. செயல்படுவதில் இயல்பு நிலை இழந்து காட்டும் பரபரப்பு;* excitement. *3. அடுத்து என்ன நடக்கும் என்று கூற முடியாத படி அச்சம் நிறைந்திருப்பது;* tension.

**பதறிடல்** பெ. (n.) *1. விரைதல்;* being restless. *2. திடுக்கிடல்;* being taken by surprise.

**பதறியடித்துக்கொண்டு** வி.அ. (adv.) *கலக்கத்துடன் விரைவாக;* in disorderly haste (due to panic).

**பதறுதல்** வி. (v.) *1. கலங்குதல்;* to be fluried, confused agitated. *2. முன்பின் திட்டமின்றிப் பரபரப்புக் கொள்ளுதல்;* to be impatient, over hasty; to hurry.

**பதனபாண்டம்** பெ. (n.) *பக்குவமாக விழிப்போடு பாதுகாக்க வேண்டிய ஏனங்கள்;* frail vessels (pots, bottles or articles) which are to be kept safely.

**பதனம்** பெ. (n.) *1. மிகுவிழிப்பு;* care, cause, attention circumspection. *2. பாதுகாப்பு;* safety, security, protection. *3. இறக்கம்;* descending, falling down. *4. தாழ்மை;* humility. *5. அமைதி;* mildness, gentleness.

**பதனழிதல்** வி. (v.) *பக்குவநிலை தவறுதல்;* to become over-ripe as fruit.

**பதனிட்டதோல்** பெ. (n.) *பதப்படுத்திய தோல்;* tanned leather.

**பதனிடுதல்** வி. (v.) *தோல் முதலியவற்றைப் பயன்பாட்டுக்கு ஏதுவாகப் பக்குவப்படுத்தல்;* to tan the leather for usage.

**பதாகை** பெ. (n.) *1. விருதுக்கொடி;* ensign, banner, standard. *2. பெருங்கொடி;* large flag.

**பதி** பெ. (n.) *1. பதிகை;* penetration, transfixion, thrust. *2. நாற்று;* sapling for transplantation. *3. உறைவிடம்;* abode, residence. *4. வீடு;* home, house. *5. கோயில்;* temple. *6. குறி சொல்லுமிடம்;* an oracular shrine. *7. ஊர்;* town,

city, village. *8. நிலம்;* the earth. *9. குதிரை;* horse. *10. நாள்;* day, time.

**பதித்தல்** வி. (v.) *1. அழுத்துதல்;* to imprint, impress, stamp engrave, as in mind, to plunge. *2. மணி முதலியன இழைத்தல்;* to infix, insert, ingraft. *3. குழியாக்குதல்;* to excavate, sink. *4. தாழ்த்துதல்;* to lower height price, etc. *5. பதியம் போடுதல்;* to plant a shoot, runner or creeper. *6. எழுதுதல்;* to enter in a register. *7. அதிகாரங்கொடுத்தல்;* to invest with power, authority or prerogative.

**பதிதல்** வி. (v.) *1. முத்திரை எழுத்தச்சு முதலியன அழுந்துதல்;* to be inprinted, impressed, marked, stamped. *2. அதிகாரம் பெறுதல்;* to be invested with power, authority. *3. பதிவேட்டில் எழுதுதல்;* to register, enter in writing. *4. பாவுதல்;* to pave, as floor. *5. பெயர் பட்டியலில் சேர்த்தல்;* to take on the roll.

**பதித்தெழுதுதல்** வி. (v.) *1. அழுந்த எழுதுதல்;* to write forming a deep impression. *2. மேலே இடம் விட்டுக் கீழேயெழுதுதல்;* to write in the lower half of a page leaving space at the top.

**பதிப்பகம்** பெ. (n.) *பொத்தகம் முதலியவற்றை அச்சிட்டு வெளியிடும் நிறுவனம்;* publishing house.

**பதிப்பாசிரியர்** பெ. (n.) *பிறரின் கட்டுரைகளையோ நூலையோ தொகுத்து அல்லது முறைப்படுத்தித் தரும் பொறுப்பை ஏற்பவர்;* editor (of a work).

**பதிப்பாளர்** பெ. (n.) *பொத்தகம் முதலியவற்றை வெளியிடும் பணியைச் செய்பவர்;* publisher.

**பதிப்பித்தல்** வி. (v.) *பொத்தகம் முதலியவற்றை ஒழுங்குபடுத்தி அச்சிட்டு வெளிவிடுதல்;* edit (a book, etc.,); publish.

**பதிப்பு** பெ. (n.) *1. பதிய அழுத்துகை;* imprinting, indentation. *2. நூல் அச்சிடுகை;* editing, printing, as a work. *3. அச்சிடப்பட்ட நூல்;* that which is edited.

**பதிப்புரிமை** பெ. (n.) *பொத்தகம், திரைப் படம் முதலியவற்றின் பயன்பாடு, வெளியீடு முதலியவற்றை உருவாக் கியவர் ஒப்புதல் இல்லாமல் மற்றொருவர் பயன்படுத்த முடியாத வகையில் அளிக்கப்படும் காப் புரிமை;* copy right.

**பதிப்பெயர்தல்** வி. (v.) *விட்டு நீங்குதல்;* to relinquish.

**பதிபோடுதல்** வி. (v.) *1. நாற்றுநடுதல்;* to transplant. *2. பதியம் போடுதல்;* to plant, as slips. to insert, as grafts. *3. பதுங்குதல்;* to crouch.

**பதியம்** பெ. (n.) *1. நாற்று;* sapling or cluster of saplings planted, layer, grafting or runner inserted. *2. நாற்று முடியை இரண்டொரு நாட்களுக்குச் சேற்றில் பதித்து வைக்கை;* temporary planting of a cluster or saplings in mud. *4. இலைப்பாசி;* species of duckweed. *5. ஊன்றி நடுஞ்செடி; கொடி, கிளை முதலியன;* slip, shoot, graft.

**பதியம் போடுதல்** வி. (v.) *மல்லிகை, பனிநீர்ப்பூ அல்லது முள்ளலரி முதலிய செடியின் கிளையை வளைத்து மண்ணில் புதைத்து அந்தக் கிளை, வேர்விட்ட பின் முதல் செடியிலிருந்து வெட்டி விடுதல்;* graft a plant.

**பதிவாக மூடுதல்** வி. (v.) *வெளிக்காற்றுப் புகாதபடியும் உள்ளாவி வெளியே போகாதபடியும் பொருத்தமாக மூடுதல்;* covering with a vessel closely so that air may not enter into vapour cannot escape out through the opening between the lids.

**பதிவாளர்** பெ. (n.) *1. சில அரசுத்துறைகளில் குறிப்பிட்ட விளத்தங்களை அதிகார முறைப்படி ஆவணங்களில் பதிவு செய்வதற்கு உரிய பொறுப்பில் உள்ள அதிகாரி;* official responsible for registering and maintaining records as relating to land records, births and deaths, etc., registrar. *2. (உயர்கல்வி நிறுவனங்களில்) கல்விப்பணி அல்லாத ஆள்வினைப் பொறுப்புகளுக்கு உரிய உயர் அதிகாரி;* registrar (of a University, etc.,)

**பதிவு** பெ. (n.) *1. அழுந்துகை;* impression, identation. *2. பள்ளம்;* lowness of a surface, depression. *3. பதுக்கம்;* stooping, crouching, lurking, as a thief or a beast ready to spring on its pray; ambush. *4. நிலவரம்;* permanence. *5. தீர்மானிக்கப்பட்ட செலவு;* allotment, as in a budjet. *6. வழக்கம்;* custom, habit. *7. கணக்குப் பதிகை;* registering, entering, as in account. *8. பதியப்பட்டது;* registry, entry. *9. அமைதி;* submission obedience, humility. *10. பதியம்;* sapling, layer of a plant.

**பதிவு அஞ்சல்** பெ. (n.) *முகவரியில் உள்ளவருக்குச் சேர்ப்பிக்கப்படும் என்பதை உறுதி செய்வதற்காகக் கூடுதல் கட்டணம் செலுத்திச் சான்று பெற்று அனுப்பும் அஞ்சல்;* registered post.

**பதிவேடு** பெ. (n.) *அலுவலகங்களில் நடவடிக்கைகளை முறையாக எழுதி வைக்கும் சுவடி;* register (as in an office).

**பதிவுவைத்தல்** வி. (v.) *1. கணக்கிற் பதிதல்;* to enter in an account. *2. வாடிக்கை வைத்தல்;* to become a customer of a shop..

**பரிசம்** பெ. (n.) *மணமகள் வீட்டார் மணமகன் வீட்டாருக்கு அளிக்கும் பொருட்கொடை;* dowry.

**பரிசு** பெ. (n.) *1. அன்பளிப்பு;* gift. *2. வெற்றி பெற்றதற்கான பணம் அல்லது பொருள்;* prize, award.

**பரிசுச்சீட்டு** பெ. (n.) *குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்துப் பணம் பரிசாகத் தருவதற்கு விற்கப்படும் வரிசை எண் அச்சிட்ட தாள்;* lottery ticket.

**பரிதவிப்பு** பெ. (n.) *வருத்தத்துடன் கூடிய தவிப்பு;* suffering; despair.

**பரிந்துபேசுதல்** வி. (v.) *ஒருவருக்குச் சார்பாகப் பேசுதல்;* to plead intercede, vindicate advocate ones.

**பரிமாற்றம்** பெ. (n.) *மாற்றிக் கொள்ளுகை;* exchanging inter changing.

**பரிமாறுதல்** வி. (v.) *உணவு படைத்தல்;* to distribute, serve as food to guests.

**பரிவட்டம்** பெ. (n.) *கோயில் மதிப்புரவாக வணங்குவோர் தலையைச் சுற்றிக் கட்டும் கடவுளாடை;* vestment of a deity tied round the head of its devotee as a mark of honour.

**பரிவாரம்** பெ. (n.) *உடன் வரும் கூட்டம்;* retinue, attendānts followers.

**பருக்கை** பெ. (n.) *உதிரியான சோற்றில் ஒன்று;* a grain of cooked rice.

**பருகுதல்** வி. (v.) *குடித்தல்;* to drink.

**பருத்தல்** வி. (v.) *பெருத்தல்;* to become, large, bulky.

**பருமன்** பெ. (n.) *(ஒருவரின் உடலைக் குறிக்கையில்) சரிக்குச் சரியைவிடச் சதைப்பற்று மிகுந்த நிலை;* (of ones body) bulkiness, plumpness.

**பருவகாலம்** பெ. (n.) *ஏற்றகாலம்;* proper season.

**பருவமழை** பெ. (n.) *உரிய காலத்திற் பெய்யும் மழை;* seasonal rain.

**பல்காலும்** வி.அ. (adv.) *பல சமையம். அடிக்கடி;* manytimes, frequently.

**பல்முளைத்தல்** பெ. (n.) *கடைவாய்ப்பல் முளைக்கை;* cutting of the wisdom tooth.

**பல்லக்கு** பெ. (n.) *ஆட்கள் தூக்கிச் செல்லும் ஊர்திவகை;* palanquin.

**பல்லாங்குழி** பெ. (n.) *நெற்குத்தும் பண்ணை போல் எதிரெதிர் வரிசையில் 14 வட்டமான பள்ளம் அல்லது குழிதோண்டி அதில் சிறு கற்களையிட்டு ஆடும் ஆட்டம்;* 14 hollows used in a particular kind of game.

**பல்லாண்டு** பெ. (n.) *பல ஆண்டு;* many years.

**பல்லிகொட்டுதல்** பெ. (n.) *பல்லி ஒலி எழுப்புதல்;* chirping of a lizard.

**பல்லியாடு** பெ. (n.) *வலுவில்லாத ஆடு;* goat without strength.

**பல்லிளித்தல்** வி. (v.) *1. பல்லை வெளிக் காட்டுதல்;* to grim, show the teeth. *2. புடவை சாயம் போதல்;* to lose colour, as a saree.

**பல்லுக்கட்டுதல்** வி. (v.) *செயற்கைப்பல் வைத்தல்;* to insert artificial teeth.

**பல்லுக்காட்டுதல்** வி. (v.) *வெளிப்படச் சிரித்தல்;* to laugh out right.

**பல்லுக்குச்சி** பெ. (n.) *பல் துலக்க உதவுங்குச்சி;* small twig used as a brush to clean the teeth.

**பல்லுக்குத்துதல்** வி. (v.) *பல்லிடுக்கிற் சிக்கிய பொருளைக் குத்தியெடுத்தல்;* to remove the food particles settled in between the gap of teeth by tooth pick.

**பல்லுப்படுதல்** பெ. (n.) *கால்நடைக்குக் கடைவாய்ப்பல் முளைக்கை;* sprouting of molar tooth in cattle.

**பல்லைக்கடி–த்தல்** வி. (v.) *சினம் முதலிய வற்றால் பல்லை நெரு நெருத்தல்;* to grind the teeth, gnash the teeth, as in anger.

**பலகணி** பெ. (n.) *சாளரம்;* lattice window.

**பலசரக்கு** பெ. (n.) *பலவகைப் பண்டம்;* groceries, goods of various kinds food stuffs.

**பலதரப்பட்ட** பெ.அ. (adj.) *பலவகையான;* of all sarts; different kinds of.

**பலிகடா** பெ. (n.) *பழி, தண்டனை போன்றவற்றிலிருந்து ஒருவர் தப்பித்துக்கொள்வதற்காக தண்டிக்கப்படும் மற்றொருவர்;* scape goat.

**பலுகுக்கட்டை** பெ. (n.) *வயலில் மண் கட்டிகளை உடைத்துச் சமப்பரப் பாக்குவதற்கான பல கொழுத்தட்டு;* harrow.

**பவளவிழா** பெ. (n.) *எழுபத்தைந்தாம் ஆண்டின் நிறைவை ஒட்டிக் கொண் டாடப்படும் விழா;* celebration marking the completion of 75th year (in India) Platinum Jubilee.

**பழக்கம்** பெ. (n.) *1. பயிற்சி;* training, exercise, use. *2. வழக்கம்;* habit, practice, custom.

**பழங்கணக்கு** பெ. (n.) *சென்று கழிந்த செய்தி;* something obsolete.

**பழங்கதை** பெ. (n.) *முன் வரலாறு;* story of ancient time.

**பழங்கந்தை** பெ. (n.) *கிழிந்த துணி;* worn out rags, tatters.

**பழசு** பெ. (n.) *நாட்பட்டது;* that which is old or damaged by time.

**பழஞ்சோறு** பெ. (n.) *பழைய சோறு;* boiled rice preserved in water and kept overnight.

**பழந்தண்ணீர்** பெ. (n.) *சோற்று நீர் (நீராகாரம்);* water allowed to stand overnight on cooked rice.

**பழம்பகை** பெ. (n.) *நெடுங்காலப் பகைமை;* inveterate enmity.

**பழம்பஞ்சாங்கம்** பெ. (n.) *1. பழங்கதை;* old tale. *2. பழைமை விரும்பி; பிற்போக்காளர்;* conservator.

**பழம்பெருச்சாளி** பெ. (n.) *அழுந்தியறிந்த நுண்ணுத்திக்காரன்;* man of much experience and artfulness used in contempt.

**பழமை** பெ. (n.) *1. தொன்மை;* antiquity. *2. முந்தையதையே பின்பற்றல்;* following the traditional ways; conservation.

**பழமைவாதி** பெ. (n.) *பழமையானது சிறந்தது என்ற கொள்கை உடையர்;* conservative.

**பழித்தல்** வி. (v.) *இகழ்தல்;* to blame, censure.

**பழிக்குப்பழி** பெ. (n.) *ஒருவர் செய்த தீமைக்குப் பகரமாகத் திரும்பச் செய்யும் தீமை;* an eye for an eye, revenge.

**பழிகூறல்** பெ. (n.) *தூற்றல்;* to cast aspersion upon; to caluminate.

**பழிசுமத்துதல்** வி. (v.) *முறையில்லாது குற்றஞ்சாட்டுதல்;* to accuse falsely.

**பழிதீர்த்தல்** வி. (v.) *பழிவாங்குதல்;* to take revenge.

**பழிதூற்றுதல்** வி. (v.) *அலர் பரப்புதல்;* to cast asperison upon; to calumniate.

**பழிபாதகம்** பெ. (n.) *பெருந்தீவினை;* heinous crime.

**பழிவாங்குதல்** வி. (v.) *தீமைக்குத் தீமை செய்தல்;* to wreak vengeance avenge.

**பழுக்காய்** பெ. (n.) *மஞ்சள் கலந்த செந்நிறக்காய்;* yellowish, orange or gold colour, as of ripe fruit.

**பழுதடைதல்** வி. (v.) *சீர்கெடுதல்; கோளாறு அடைதல்;* (of machines) - breakdown (of buildings, etc.,) fall into (a state of disrepair).

**பழுதுபார்த்தல்** வி. (v.) *செப்பனிடுதல்;* to repair, mend.

**பழுதை** பெ. (n.) *வைக்கோற்புரி;* thick twist of straw used as a rope.

**பழுப்பேறுதல்** வி. (v.) *செம்பட்டை நிறமாதல்;* to become salmon colour as cloth.

**பள்ளக்கால்** பெ. (n.) *தாழ்ந்த நன்செய் நிலம்;* low lying wet land.

**பள்ளக்கை** பெ. (n.) *தாழ்ந்த நிலம்;* low land.

**பள்ளிமாடம்** பெ. (n.) *துயிலிடம்;* sleeping room, especially of gods or kings.

**பள்ளியாண்டுவிழா** பெ. (n.) *பள்ளிக் கூடத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் கல்வியாண்டு நிறைவு விழா;* school annual day.

**பள்ளிவாசல்** பெ. (n.) *இசுலாமியர் இறைவனை வழிபடுகிற இடம்;* mosque.

**பள்ளையம்** பெ. (n.) *சிறுதெய்வத்துக்குப் படைக்கும் படையல்;* offering to demons or inferior deities.

**பள்ளையம் போடுதல்** வி. (v.) *தெய்வத்திற்கு முன் சோறு கறி முதலியவற்றைப் படைத்தல்;* to spread before a deity offerings of rice, vegetables, etc.,

**பள்ளையாடு** பெ. (n.) *குள்ளமான ஆட்டுவகை;* a species of dwarf goat.

**பளபளத்தல்** வி. (v.) *ஒளிவிடுதல்;* to glitter shine as hair well oiled as a surface well polished.

**பளார்என்று** வி.அ. (adv.) *அடி, அறை போன்றவை சுரீரென்று வலிக்கும்படி ஓசையோடு;* (of slap, etc.,) with a sharp sound.

**பளிங்குப் பாத்திரம்** பெ. (n.) *கண்ணாடி ஏனங்கள்;* glassware.

**பளிச்சிடுதல்** வி. (v.) *கண்ணைப் பறிக்கும் வகையில் மின்னுதல்; ஒளி வீசுதல்;* flash, shine brightly gleam.

**பளுதூக்கி** பெ. (n.) *தடித்த கம்பிகளைப் பயன்படுத்திக் கனமான பொருள் களைத் தூக்கும் ஒருவகைப் பொறி;* crane.

**பற்கட்டுதல்** பெ. (n.) *விழுந்த பற்களுக்குப் பகரமாகச் செயற்கைப் பற்கள் கட்டுதல்;* setting of artificial teeth.

**பற்குச்சி** பெ. (n.) *பல் விளக்கும் சிறு தும்பு;* fibrous stick used as a tooth brush.

**பற்சொத்தை** பெ. (n.) *பல்லில் பூச்சியரிக்கும் நோய்;* caries of the teeth.

**பற்பசை** பெ. (n.) *பல் துலக்குவதற்குப் பயன்படுத்தும் வேதிப்பொருள் களால் செய்யப்பட்ட வழுவழுப்புத் தன்மை உடைய பசைப்பொருள்;* tooth paste.

**பற்றடைப்பு** பெ. (n.) *வேளாண்மைக்காக நிலத்தைக் குடிகளிடம் விடுங் குத்தகை;* lease for cultivation.

**பற்றவைத்தல்** வி. (v.) *1. நெருப்பு மூட்டுதல்;* to kindle as fire. *2. பகை விளைத்தல்;* to make enemies, to sow discord.

**பற்றாக்குறை** பெ. (n.) *தேவைக்கும் குறைவாக உள்ள நிலை;* scarcity, shartage.

**பற்றியிழுத்தல்** வி. (v.) *மூச்சு வாங்குதல்;* to take hard breaths when dying.

**பற்றியெரிதல்** வி. (v.) *1. தீ மூண் டெரிதல்;* to catch fire. *2. சினம் மூளுதல்;* to get enraged, to become angry.

**பற்று** பெ. (n.) *1. உலக வாழ்க்கை மீது ஒருவர் கொண்டிருக்கும் பிடிப்பு;* attachment, bondage. *2. திருப்பித்தர வேண்டிய பணத்தைப் பற்றிய விளக்கக் குறிப்பு;* debit particulars.

**பற்றுக்குறடு** பெ. (n.) *கம்மக்கருவி வகை;* tongs, black smiths pincers.

**பற்றுச்சீட்டு** பெ. (n.) *1. ஒப்புதல் சீட்டு;* receipt. *2. வேளாண்மைக் குத்தகை ஆவணம்;* lease deed of cultivation.

**பற்றுதல்** வி. (v.) *1. ஆடு, மாடு முதலிய வற்றை ஓர் இடத்திலிருந்து போகும் படி ஓட்டுதல்; விரட்டுதல்;* chaseaway (stray cattle). *2. போ, வா என்னும் வினையோடு கூட்டிப் போதல்; கூட்டி வருதல்;* take or lead the cattle to some place. *3. நோய் முதலியன தொற்றுதல்;* catch, infect.

**பற்றுவரவு** பெ. (n.) *கணக்கின் வரவு செலவுக் குறிப்பு;* debit and credit.

**பறக்கும்படை** பெ. (n.) *உடனடியாக விரைந்து சென்று நடவடிக்கை எடுப்பதற்காக அணிய நிலையில் இருக்கும் ஆய்வாளர்;* flying squard.

**பறட்டைத்தலை** பெ. (n.) *தூறடர்ந்த மயிர்த்தலை;* head with shaggy untidy hair.

**பறண்டுதல்** வி. (v.) *உகிர் முதலிய வற்றால் சுரண்டுதல்;* to scratch, as with nails.

**பறபறத்தல்** வி. (v.) *மிக விரைதல்;* to hasten, hurry.

**பறவாதி** பெ. (n.) *பேராசைக்காரன்;* greedy man.

**பறிகொடுத்தல்** வி. (v.) *1. களவு கொடுத்தல்;* to be robbed of. *2. சாகக் கொடுத்தல்;* to lose, as children.

**பறிபோடுதல்** வி. (v.) *மீன் பிடிக்கப் பறி வைத்தல்;* to set the pari in water for fishing.

**பறிமுதல்செய்தல்** வி. (v.) *அரசு சட்ட முரணாக வைத்திருப்பதை அல்லது சட்ட நடவடிக்கையாக ஒன்றைக் கைப்பற்றுதல்;* confiscate.

**பறையறைதல்** வி. (v.) *செய்தி தெரிவிக்கு மாறு பறையடித்தல்;* to proclaim by beating of drum.

**பன்முக** பெ.அ. (adj.) *பல வகையான வேறுபட்ட;* multifaceted, varied.

**பன்முறை** பெ. (n.) *பல தடவை;* many times.

**பன்றிக்கிடை** பெ. (n.) *பன்றிகள் அடையுமிடம்;* pig stay.

**பன்றிப்பறை** பெ. (n.) *காட்டுப் பன்றி களை வெருட்டக் கொட்டும் பறை;* pot shaped drum for frightning away wildhogs.

**பன்னரிவாள்** பெ. (n.) *கருக்கரிவாள்;* sickle.

**பன்னீர்ச்செம்பு** பெ. (n.) *பன்னீர் நிரப்பி மூடித் தெளிக்குங் கருவி;* bottle containing rose water.

**பனங்கற்கண்டு** பெ. (n.) *பனஞ்சாற்றைக் காய்ச்சிச் செய்யப்படும் கற்கண்டு வகை;* rock candy made of palmyra sap.

**பனிக்குல்லா** பெ. (n.) *பனிக்காலத்தில் அணியுங் கவிப்பு வகை;* a cap worn during the dewy season.

**பனிப்பயறு** பெ. (n.) *பனிக்காலத்தில் விளையும் பயறுவகை;* a sort of green gram grown in dew season.

**பனிப்போர்** பெ. (n.) *நேரடியான மோதலாக வெளிப்படாத உட்பகை;* cold war.

**பனிவெடிப்பு** பெ. (n.) *பனியால் கை கால்களில் உண்டாகும் புண்;* chilblain.

**பனைநார்** பெ. (n.) *பனை மட்டை யிலிருந்து எடுக்கப்படும் நார்;* fibre of the stern of the palmyra leaf.

**பனைமடல்** பெ. (n.) *பனங்குருத்து;* young stem of the palmyra leaf.

**பனைவெல்லம்** பெ. (n.) *பனஞ்சாற்றைக் காய்ச்சியெடுக்கும் வெல்லம்;* jaggery coarse sugar made of palmyra sap.

# பா

**பாக்கட்டுதல்** வி. (v.) *நெசவுப்பாவில் அற்ற இழையை இணைத்தல்;* to join the broken threads of the warp (weav).

**பாக்கம்** பெ. (n.) *சிறுமூட்டை;* small bundle.

**பாக்களவு** பெ. (n.) *சிற்றளவு;* an insignificant quantity.

**பாக்கு** பெ. (n.) *1. அடைக்காய்;* areca-nut. *2. கமுகு;* areca palm. *'பாக்குத் தோப்பு'.*

**பாக்குக்கட்டுதல்** வி. (v.) *பாக்கை வைத்து விளையாடுதல்;* to play with areca-nuts.

**பாக்குப்பனை** பெ. (n.) *பாக்குமரம்;* areca-palm.

**பாக்குப்பாளை** பெ. (n.) *பாக்குமரத்தில் பூவைக் கொண்டிருக்கும் மடல்;* flower sheath or spathe of the areca-palm.

**பாக்குப்பிளவு** பெ. (n.) *1. பாக்குத்துண்டு;* slice of areca-nut. *2. பாதியாக வெட்டப்பட்ட பாக்கு;* sized areca-nut.

**பாக்குப்பை** பெ. (n.) *வெற்றிலை பாக்கு இடும் பை;* betel pouch.

**பாக்குமட்டை** பெ. (n.) *பாக்கு மரத்தில் உண்டாகும் மட்டை;* the leaf stalk of the areca-palm.

**பாக்குரல்** பெ. (n.) *தம்பலமிடிக்கும் கையுரல்;* small mortar in which betel and areca-nut are mashed.

**பாக்குவெட்டி** பெ. (n.) *பாக்குச் சீவுங்கருவி;* nut-crackers for slicing areca-nuts. *'ஆலங்குடி பாக்குவெட்டி' பெயர் பெற்றது.*

**பாக்குவெற்றிலை** பெ. (n.) *வெற்றிலை யுடன் கூடிய தாம்பலம்;* areca nut and betel.

**பாக்குவைத்தல்** வி. (v.) *நெருங்கிய உறவினர்களாகிய மாமன், மைத்துனன் போன்றவர்களுக்கு வெற்றிலை பாக்கு வைத்துத் திருமணத்திற்கு அழைத்தல்;* to invite close relatives persons to a wedding, presenting areca nut and betel.

**பாகப்பிரிவினை** பெ. (n.) *உரிமை யாளர்கள் தங்கள் பொதுவான சொத்தைப் பிரித்துக் கொள்ளும் முறை;* partition (of jointly owened property).

**பாகபடை** பெ. (n.) *விளைச்சலுக்குத் தக்கவாறு தீர்வையைத் தவசமாகத் தண்டல் செய்யும் முறை;* a system of land revenue in which a fixed share of the produce is collected.

**பாகம்** பெ. (n.) *1. பகுதி, உறுப்பு;* part. *2. (சொத்தில்) உரிமைப் பங்கு;* share (in a property). *3. (நூலின்) தொகுதி;* volume (of a novel, etc.,). *4. நடிப்புப் பகுதி, புனைவு;* role, part. *5. இடம்;* place, sport, region.

**பாகம் பகிர்தல்** வி. (v.) *உறவினர் களுக்கிடையில் சொத்துக்களைப் பிரித்து எடுத்துக்கொள்ளுதல்;* to divide an estate, as a kinsman.

**பாகம்போடுதல்** வி. (v.) *கைப் பாகத்தால் அளவிடுதல்;* to measure by the arm.

**பாகன்** பெ. (n.) *1. யானையைத் தன் கட்டளைப்படி செயல்பட பழக்கி வைத்திருப்பவர்;* mahout. *2. (முற் காலத்தில்) தேர் ஓட்டுபவன்; (சாரதி);* (in former times) charioteer.

**பாகு** பெ. (n.) *காய்ச்சிய கரும்புச்சாறு, பதநீர், சருக்கரை அல்லது வெல்லக் கரைசல்;* treacle; molasses; sugar syrup. *'வெல்லப் பாகில் தோய்த்துச் செய்த பண்டம்'.*

**பாகுபடுத்துதல்** வி. (v.) *வேறுபாடு தெரியும் வகையில் பிரித்தல்;* classify, sort out, defferentiate.

**பாகுபாடு** பெ. (n.) *1. பிரிவுபடுகை;* division, sub division, class. *2. வேற்றுமை;* difference; classification.

**பாகை** பெ. (n.) *கோணத்தை அளக்கப் பயன்படும் அலகு. வட்டத்தின் 360 சமபாகத்தில் ஒரு பாகம்;* degree (to measure angles).

**பாகைமானி** பெ. (n.) *பாகைகள் குறிக்கப்பட்டு அரைவட்ட வடிவில் இருக்கும் கருவி;* protractor.

**பாங்கு** பெ. (n.) *1. (செயலைச் செய்யும்) முறை;* way; manner (of doing something). *2. பக்குவம்; நயம்;* grace; tact. *3. (முன் குறிப்பிடப்படும்) தன்மை நிறைந்தது;* being of the nature specified.

**பாச்சாங்குள்ளி** பெ. (n.) *விளையாட்டில் முறையின்றி தருக்கஞ் செய்பவன்-ள்;* one who makes unjust claims in a game.

**பாச்சி** பெ. (n.) *1. தாய்ப்பால்;* milk, mother's milk. *2. அலைவாய்க்கரை நோக்கி வரும் இருவேறு அலை களுக்கு இடையே உள்ள நீர்பரப்பு;* water surface between two sea tides.

**பாசக்கட்டு** பெ. (n.) *பிறப்பிற்குக் காரணியமான (காரணமான) உயிர்த் தொடர்பு;* the bondage of the soul resulting in births.

**பாசக்கயிறு** பெ. (n.) *கூற்றுவனின் கையில் வைத்திருப்பதாகக் கூறப்படும் சுருக்குக் கயிறு;* the so called rope with a noose in the hands of yaman the god of death.

**பாசம்** பெ. (n.) *1. குருதி (அரத்த) தொடர்புடைய உறவினருக்கிடையே ஏற்படும் இயற்கையான பிணைப்பு; அன்பு;* affection, attachment. . *2. பற்று;* attachment; attachment.

**பாசவுணர்வு** பெ. (n.) *1. மூவகை நுண்ணறிவுகளுள் (பதி, பசு, பாசம்) ஒன்று;* feeling of affection. *2. மெய், வாய், கண், மூக்கு, செவிவழிவரும் அறிவு;* knowledge acquired through the fine sensor (body, mouth, eye, nose and ear).

**பாசறை** பெ. (n.) *1. போர்மேற் சென்ற படை தங்குமிடம்;* encampment or tent of an invading army. *2. பசிய இலையாற் செறிந்த முழை;* bushy cave cavern. *3. மரவகை;* a kind of tree.

**பாசனக்கால்** பெ. (n.) *நிலங்களுக்குப் பாயும் நீர்க்கால்;* irrigation,channel.

**பாசனம்** பெ. (n.) *1. வெள்ளம்;* flood. *2. நீர்ப்பாய்ச்சல்;* irrigation. *'எங்கள் ஊரில் கிணற்றுப் பாசனம்'. 3. வயிற்றுப்போக்கு;* diarrhoea.

**பாசாங்கு** பெ. (n.) *1. போலி நடிப்பு;* dissimulation, hypocrisy, pretence, humbug. *2. வஞ்சகம்;* trickery deception.

**பாசி** பெ. (n.) *1. பசுமையுடையது;* that which is green. *2. நீர்ப்பாசி;* moss, lichen, duckweed. *3. கடற்பாசி;* seaweed. *4. பூஞ்சாளம்;* saprophyte, mouldiness due to dampness. *6. குழந்தைகளின் கழுத்தணிக்கு உதவும் மணிவகை;* variegated glass beads of green earthen beads for children's necklaces.*7. ஒருவகைத் நிலத்திணை (தாவரம்);* moss.

**பாசிக்கல்** பெ. (n.) *கடலடியிற் கிடைக்கும் பாசி படர்ந்த கல்;* sea bed stone which is spreading with moss.

**பாசிநீர்** பெ. (n.) *பாசிபடர்ந்த நீர்;* water covered by moss.

**பாசிப்பயறு** பெ. (n.) *பச்சைப் பயறு;* green gram.

**பாசிப்பருப்பு** பெ. (n.) *உடைத்த பாசிப் பயறு;* broken green gram.

**பாசிப்பல்** பெ. (n.) *பாசி பற்றிய பல்;* foul tooth.

**பாசிபடர்தல்** வி. (v.) *1. பாசி வளர்தல்;* moss growing. *2. பல்லில் ஊத்தை பிடித்தல்;* dirt collected on the teeth. *3. கண்ணில் பீளை சேர்தல்;* muco purulence in the eye.

**பாசிபற்றினபல்** பெ. (n.) *ஊத்தையும் பசுமை நிறமும் பிடித்த பல்;* foul tooth.

**பாசிமணி** பெ. (n.) *ஒருவகை மண்ணால் செய்யப்பட்ட வெண்களிமண் (பீங்கான்) போன்ற பளபளப்பான மணி;* beads made of clay (for making necklace). *'அவள் கழுத்தில் பாசிமணி மாலை' அணிந்துள்ளாள்.*

**பாசுரம்** பெ. (n.) *திருமாலின் மேல் ஆழ்வார்கள் பாடிய பக்திப் பாடல்கள்;* hymn on (Thirumal composed by the Alwars). *'ஆண்டாள் பாசுரம்'.*

**பாட்டன்** பெ. (n.) *பெற்றோரின் தந்தை; தாத்தா;* grand father. *'பாட்டன் வீடு'.*

**பாட்டாளி** பெ. (n.) *உடல் உழைப்பை அடிப்படையாகக் கொண்டு வாழ்க்கை நடத்துபவர்; உழைப் பாளி;* worker industrious person.

**பாட்டி** பெ. (n.) *1. பெற்றோரின் தாய்;* grand mother. *'தந்தை தாயே பாட்டன் பாட்டியே'. 2. கிழவி;* aged women.

**பாட்டிமருத்துவம்** பெ. (n.) *சிற்றூர்ப் பகுதிகளில் நோய்களுக்குப் பட்டறி வின் வாயிலாகத் தெரிந்து கைப் பக்குவமாகச் செய்யும் மருத்துவம்;* house hold remedy.

**பாட்டு** பெ. (n.) *1. அராகத்தில் அல்லது மெட்டில் அமைந்திருப்பது;* music. *2. பாடல்;* song. *3. (படிப்பதற்காக எழுதப்பட்ட) பா; செய்யுள்;* text of a

song; poem. *4. வசை, திட்டு;* shower of abuse, lengthy scolding.

**பாட்டுடைத்தலைவன்** பெ. (n.) *இலக்கியத்தலைவன்;* hero of a poem.

**பாட்டுப்படித்தல்** வி. (v.) *1. இசைப் பாட்டுப் பாடுதல்;* to sing. *2. செய்யு ளியற்றுதல்;* to compose verses.

**பாடக்குறிப்பு** பெ. (n.) *ஆசிரியர், வகுப்பில் மாணாக்கர்க்குப் பாடங் கற்பிக்க முறைப்படுத்தி எழுதி அமைத்துக் கொள்ளும் குறிப்புகள்;* notes of lesson.

**பாடகன்** பெ. (n.) *பாடுவதைத் தொழி லாகக் கொண்டவன்;* male singer.

**பாடசாலை** பெ. (n.) *கல்விக்கூடம்;* school or college for learning. *'இரவுப் பாடசாலை'.*

**பாடஞ்சொல்(லு)தல்** வி. (v.) *1. கற்பித்தல்;* to explain lessons; to teach. *2. பாடம் ஒப்பித்தல்;* to recite lessons.

**பாடத்திட்டக்குழு** பெ. (n.) *பள்ளி, கல்லூரி ஆகியவற்றில் பாடத்திட்டத்தை உருவாக்கும் அறிஞர் குழு;* expert committee for syllabus.

**பாடத்திட்டம்** பெ. (n.) *கல்வி நிறுவனங் களில் குறிப்பிட்ட துறைப் படிப்பைப் பயிற்றுவிக்கும் நோக் கத்தில் கற்பிக்கப்பட வேண்டியவை. அதற்கு உரிய நூல்கள் முதலியவற்றை உரியவர்கள் முடிவு செய்து வகுக்கும் திட்டம்;* syllabus or curriculam for a course.

**பாடநூல்** பெ. (n.) *மாணவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட பாடத்தைக் கற்றுக் கொடுப்பதற்காக உருவாக்கப்பட்ட புத்தகம்;* text book.

**பாடம்** பெ. (n.) *1. சுமைவைத்து அழுத்துகை;* compression, as of a heap of tobacco, olais or skins by a weight placed on it. *2. பதப்படுத்துகை;* tanning. *3. ஒன்பான்மணி முதலிய வற்றின் ஒளி;* as leather, curing; as tobacco lustre of precious stones and metals. *4. முடி மாலை;* a garland for the head chaplet. *5. (மாந்த உடல் விலங்கின் தோல், புகையிலை முலியவை) கெட்டுப் போகாமல் நீண்ட நாள் நிலைக்கும் படி மேற்கொள்ளப்படும் முறை;* (of body) embalming (of leather tobacco, etc.,) tanning, curing, etc.,). *6. மாணவர் பயிலும் பாடக்குறிப்பு;* lesson.

**பாடம் எடுத்தல்** வி. (v.) *(கல்விக் கூடத்தில்) பாடத்தை விளக்கிச் சொல்வதன் மூலம் கற்பித்தல்;பாடம் நடத்துதல்;* take a class (in an educational institution).

**பாடம் கற்பித்தல்** வி. (v.) *(தவறாகவோ முறையற்ற வகையிலோ நடந்து கொள்பவருக்கு ஒன்று அல்லது ஒருவர்) படிப்பினையைத் தருதல்;* to teach someone a lesson.

**பாடம் கற்றுக்கொள்ளுதல்** வி. (v.) *(ஒரு நிகழ்விலிருந்தோ செயலிலிருந்தோ) ஒரு படிப்பினையைப் பெறுதல்;* learn one's lesson.

**பாடம் புகட்டுதல்** வி. (v.) *பாடம் கற்பித்தல்;* to teach a lesson.

**பாடல்** பெ. (n.) *1. பாடுகை;* singing; verisifying. *2. இசைப்பா;* song, lyric. *3. செய்யுள்;* poem, poetry. *4. புகழ்;* fame, renown. *5. படிக்கை;* reading.

**பாடவேளை** பெ. (n.) *பள்ளிகளில் பாடப் பிரிவினை செய்து நடத்தும் காலக்கூறு;* period.

**பாடவேறுபாடு** பெ. (n.) *ஒரு நூலின் எழுத்து, சொல், தொடர் முதலியவை அதன் பல படிகளில் வெவ்வேறாகக் காணப்படும் நிலை;* variant reading of a text.

**பாடிக்கொடுத்தல்** வி. (v.) *1. பிறனுக் காகச் செய்யுள் இயற்றித்தருதல்;* to compose a poem and give it to another. *2. பாடலியற்றுதல்;* to compose a poem.

**பாடிகாப்பார்** பெ. (n.) *ஊர்க்காவலர்;* village watchmen; those - responsible for the safety of property in a village.

**பாடிபரதேசி** பெ. (n.) *1. பாடிக்கொண்டு அலைந்து திரிபவன்;* wandering ballad - singer. *2. ஊருராய்த் திரியும் இரவலன்;* wandering beggar.

**பாடுதல்** வி. (v.) *1. (பாடலை) இசை யோடு குரல் மூலம் வெளிப்படுத் துதல்;* sing. *2. (பா, செய்யுள் போன்றவை) படைத்தல்; எழுதுதல்;* compose a poem or verse.

**பாடு** பெ. (n.) *1. பொறுப்பு;* (one's) responsibility; business. *2. நிலைமை;* (one's) lot; condition. *3. (சிரமமான) வாழ்க்கை;* one's lot in life.

**பாடுகிடத்தல்** வி. (v.) *ஓர் இடத்தில் இருந்தபடியே கடுமையாகப் பாடு படுதல்;* work hard. *'இந்த நாலு மூட்டை நெல்லை வீட்டுக்குச் கொண்டுவரப் பாடு கிடக்க வேண்டியிருக்கிறது'.*

**பாடுபடுதல்** வி. (v.) *1. (உடலை வருத்தி) உழைத்தல்;* toil; work hard; take pains. *'நாட்டின் விடுதலைக்காகப் பாடு பட்ட தலைவர்கள்'. 2. (மனம்) துன்பமடைதல்; துடித்தல்;* be pained.

**பாடுபொருள்** பெ. (n.) *கருவாக அமையும் பொருள்;* subject matter (of a poem, etc.,) *'சமுதாய அவலங்களே இவர் கவிதையின் பாடுபொருள்'.*

**பாடை** பெ. (n.) *1. பருத்தி;* cotton. *2. பிணத்தைத் தூக்கும் பாடை மரம், அதாவது பிணக்கட்டில்;* bier.

**பாடை கட்டுதல்** வி. (v.) *பாடை அமைத்தல்;* make the funeral bier. *'இழவு வீட்டுக்கு முன்னால் இரண்டு பேர் பாடை கட்டிக் கொண் டிருந்தனர்'.*

**பாணம்** பெ. (n.) *அம்பு;* arrow. *'அவர் என் மேல் தன் கடைசி பாணத்தைத் தொடுத்தார்'.*

**பாணன்** பெ. (n.) *(முற்காலத்தில்) யாழ் முதலிய இசைக்கருவிகளை இசைத் துப் பாடும் கலைஞர்;* ministrel of ancient times using stringed instruments.

**பாணி** பெ. (n.) *1. இசைப்பாட்டு;* song, melody. *2. இசை;* music. *3. ஒலி;* sound. *4. அழகு;* beauty. *5. கூத்து;* dramatic entertainment with dancing. *6. காலம்;* time, occasion.

**பாத்தி** பெ. (n.) *பாய்ச்சும் நீர் தேங்கி யிருப்பதற்காகச் சிறு வரப்புகளால் பிரித்த அமைப்பு;* garden plot; bed; (salt) pan. *'கீரைப் பாத்தி / உப்புப் பாத்தி'.*

**பாத்திகட்டுதல்** வி. (v.) *கீரை விதை முதலியன தெளிக்க வரப்பு கட்டுதல்;* to back up or make garden beds, salt pans, etc.,

**பாத்தியம்** பெ. (n.) *உரிமை;* right of possession, claim. *'கணவன் இறந்து விட்டால் அவனுக்குரிய குடும்பச் சொத்துக்களில் மனைவிக்குப் பாத்தியம் உண்டு'.*

**பாதக்காப்பு** பெ. (n.) *காலணி;* chappals.

**பாதக்குறடு** பெ. (n.) *துறவியரால் (அணியப்படுவதும்) முதல் இரு கால் விரல்களின் இடைவெளியில் நுழைத்துக் கொள்வதற்கு ஏற்றவாறு கட்டையால் செய்த குமிழுடையது மான காலணி;* wooden sandals with a toe - grip.

**பாதகாணிக்கை** பெ. (n.) *ஆசிரியர், திருமடத்தலைவர் (மடாதிபதி) போன்றோரைப் பார்க்கச் செல்*

*பவர்கள் மரியாதைக்காக அளிக்கும் காணிக்கை;* offering made to a teacher or head of a math by a visitor by way of respect.

**பாதச்சிலை** பெ. (n.) *தூணைத் தாங்கும் அடிக்கல்;* base stone of a pillar.

**பாதசாரி** பெ. (n.) *(சாலையில்) நடந்து செல்பவர்;* pedestrian.

**பாதபூசை** பெ. (n.) *பெரியோர், பெற்றோர் முதலியோரின் பாதங் களைத் தூய்மை செய்து மலர் வைத்து வணங்கும் சடங்கு;* the ritual of washing the feet (of the teacher, saint or of one's parents out of respect).

**பாதம்** பெ. (n.) *1. (கணுக்காலுக்குக் கீழே உள்ள) காலின் கீழ்ப்பகுதி;* foot. *2. உள்ளங்கால்;* sole (of the foot). *3. கால் போன்ற பகுதி;* a rest fastened to certain household vessels, implements, etc.,

**பாதயாத்திரை** பெ. (n.) *வேண்டுதலை முன்னிட்டுக் கோயில்களுக்கு அல்லது குறிப்பிட்ட நோக்கத்துடன் ஓர் இடத்திற்கு நடந்தே செல்லுகை;* pilgrimage on foot (undertaken in fulfilment of a vow; march). *2. நடைபயணம்;* march.

**பாதி** பெ. (n.) *1. இரண்டு சமமாகப் பகுக்கப்பட்ட பொருட்பகுதி;* half, moiety. *2. நடு;* middle. *3. பகுக்கை;* dividing, sharing. *4. துண்டு;* a piece.

**பாதிராத்திரி** பெ. (n.) *நள்ளிரவு;* midnight.

**பாதிப்பு** பெ. (n.) *1. இயல்பான தன்மைக்கு ஏற்படும் கேடு;* damage; suffering. *'வெள்ளத்தால் பாதிப்பு'. 2. தாக்கம்;* impact; influence.

**பாதுகாத்தல்** வி. (v.) *1. தீங்கு, அழிவு முதலியவை நேராமல் காப்பாற்றுதல்; காத்தல்;* protect. *2. குடும்பம் முதலியவற்றை அல்லது கலைகளைப் பேணுதல்; பராமரித்தல்;* provide for (a family); support; preserve (arts).

**பாதுகாப்பாளர்** பெ. (n.) *பாதுகாக்கும் பணி செய்பவர்; பாதுகாவலர்;* guard (employed to protect a place, person).

**பாதுகாப்பு** பெ. (n.) *1. தீங்கு, அழிவு, நேராமல் தடுக்கும் காவல் அல்லது கண்காணிப்பு;* protection, defence; security. *2. (ஒருவர் உணரும்) காப்பான நிலை;* security; safety.

**பாதுகாப்புப் பெட்டகம்** பெ. (n.) *வைப்பகம் போன்றவற்றில் விலை உயர்ந்த பொருள்களை வைத்துக்கொள்ள ஏற்படுத்தப்பட்டிருக்கும் பாது காப்பான முறையில் உள்ள பெட்டி போன்ற அமைப்பு;* safety locker (in a bank, etc.,).

**பாதை** பெ. (n.) *(ஓர் இடத்துக்கு) செல்வதற்கு உரிய வழி;* way; path.

**பாந்தம்** பெ. (n.) *பொருத்தம், இணக்கம்;* something seemly or proper. *'உன் வயதுக்கு இப்படிப் பிடிவாதமாக இருப்பது எனக்குப் பாந்தமாகப் படவில்லை'.*

**பாந்து** பெ. (n.) *1. பொந்து;* cavity, hollow, deep hole. *2. வளைவுக்கும் சுவருக்கும் இடையிலுள்ள பாகம்;* spandrel. *3. சுவர்க் கற்களின் இடையிலுள்ள சந்து;* interstices between bricks in a wall.

**பாப்பா** பெ. (n.) *1. சிறு குழந்தை;* little child. *2. பாவை;* doll. *3. கண்ணின் கருவிழி;* iris of the eye.

**பாம்படம்** பெ. (n.) *பெண்கள் அணியும் ஒருவகைக் காதணி;* a heavy ornament, for the ears (worn by rural woman). *'கிராமங்களில் கூடப் பாம்படம் அணிவது தற்போது குறைந்து வருகிறது'.*

**பாம்பணை** பெ. (n.) *திருமாலின் பாம்புப் படுக்கை;* serpent bed of Thirumal .

**பாம்பாட்டி** பெ. (n.) *1. பாம்பைப் பிடித்துப் பழக்கி ஆட்டுபவன்;* snake - charmer. *2. வரிக்கூத்துவகை;* a kind of dance.

**பாம்பாட்டுதல்** வி. (v.) *பாம்பைப் படமெடுத்தாடச் செய்தல்;* to make a cobra dance with its hood outspread.

**பாம்பு** பெ. (n.) *ஊர்ந்து செல்லும் உயிரிவகை;* snake, serpent. *'பாம் பறியும் பாம்பின் கால்'.*

**பாம்புக்கடி** பெ. (n.) *பாம்பு தீண்டுகை;* snake bite.

**பாம்புக்கல்** பெ. (n.) *பாம்பின் நஞ்சை நீக்குவதாக நம்பப்படும் ஒருவகைக் கல்;* snake stone which is believed to be an absorbent substance regarded as efficacious in curing snake bite.

**பாம்புக்காது** பெ. (n.) *மிகக் கூர்மையாக கேட்கும் திறன்;* keen sense of hearing; sharp ears; sharpeness.

**பாம்புச்சட்டை** பெ. (n.) *பாம்பு கழற்றும் தோல் உறை;* snake's slough.

**பாம்புச் செவி** பெ. (n.) *கூர்மையான செவியுணர்வு;* sharp ear, acute hearing.

**பாம்பு விரல்** பெ. (n.) *(கையில்) நடுவிரல்;* middle finger.

**பாய்தல்** வி. (v.) *1. விரைவாகச் செல்லுதல்; தரையிலிருந்து கிளம்பி ஓர் இலக்கு நோக்கி விரைந்து விழுதல்;* spring leap; bounch. *2. ஒன்றின் ஊடாக விரைவாகச் செல்லுதல்;* (of water, electricity, light, etc.,) flow; rush.

**பாய்** பெ. (n.) *1. கோரை, ஓலை முதலிய வற்றால் பின்னப்பட்ட பொருள்;* mat. *2. காற்றின் விசையால் செலுத்தப்படும் கப்பல்களில் அல்லது படகுகளில் கட்டப்பட்டிருக்கும் உறுதியானதுணி;* sail.

**பாய்ச்சல்** பெ. (n.) *விரைவாகச் செல்லும் செயல்;* leap; gallop; bound. *'மாடு ஒரே பாய்ச்சலில் வேலியைத் தாண்டியது'.*

**பாய்ச்சுதல்** வி. (v.) *1. (பயிர், செடி போன்றவற்றிற்கு) நீர் செல்லும்படி செய்தல்; இறைத்தல்;* (of water) cause to be supplied, (to the fields); irrigate. *2. (நாளங்களின் வழியே குருதி (இரத்தம்) இதயம்) செலுத்துதல்;* pump force blood to go through vessels.

**பாய்மரக் கப்பல்** பெ. (n.) *காற்றின் விசையால் செல்வதற்கு ஏற்ற வகையில் பாய்கள் கட்டப்பட்ட (பழங்கால) கப்பல்;* sailing ship.

**பாய்மரப்படகு** பெ. (n.) *காற்றின் விசையால் செல்வதற்கு ஏற்ற வகையில் பாய்கள் கட்டப்பட்ட படகு;* sailing boat.

**பாய்மரம்** பெ. (n.) *(காற்றின் விசையால் செலுத்தப்படும் கப்பலில் அல்லது படகில்) விரிக்கவும் சுருட்டி இறக்கவும் கூடிய வகையில் பாய் கட்டப்பட்டிருக்கும், இரும்பால் அல்லது மரத்தால் ஆன கம்பம்;* mast.

**பாயிரம்** பெ. (n.) *செய்யுள் வடிவ முன்னுரை;* perfare in verse.

**பார்த்தல்** வி. (v.) *1. கண்கள் மூலம் அறிதல் அல்லது உணர்தல்; காணுதல்;* see; look at. *2. திரைப்படம், திருவிழா போன்றவை நடக்கும் (இடத்துக்குச் சென்று) காணுதல்;* watch; see. *3. சுற்றிப் பார்த்தல் (பார்க்கச் செல்லுதுல்);* visit.

**பார்த்துக்கொள்ளுதல்** வி. (v.) *1. பொறுப் போடு கவனித்துக்கொள்ளுதல்;* look after; take care of. *2. ஒன்று நிறை வேறுவதற்கான பொறுப்பை ஏற்றுக் கொள்ளுதல்; சிக்கல் ஏற்படுத்தும் ஒன்றை அல்லது ஒருவரைப் பேணுதல்;* see to it that something (does or does not happen, etc.,).

**பார்த்துவிடுதல்** வி. (v.) *(குறிப்பிட்ட) நிலையை மாற்ற உறுதி மேற் கொள்ளுதல்;* word used by a person to challenge something to do something specified. *'என் தயவு இல்லாமல்*

*உனக்கு வேலை கிடைத்துவிடுமா என்று பார்த்து விடுகிறேன்'.*

**பார்வை** பெ. (n.) *1. பார்க்கும் செயல்; பார்த்தல்;* glance; view; look. *2. பார்க்குந் திறன்;* (eye) sight, vision. *3. பொதுவிடத்தில் மக்கள் வந்து வணக்கம் செலுத்துதல்;* public viewing (for paying homage to important people when they die). *4. தோற்றம்/ எடுப்பான தோற்றம்;* appearance / good looks; attractive appearance. *4. மேற்பார்வை; கவனம்;* supervision; perusal.

**பார்வை நேரம்** பெ. (n.) *ஒரு அலுவலகத்தில் பொதுமக்கள் அதிகாரிகளைப் பார்க்க அல்லது உறவினர்களோ நண்பர்களோ நோயாளியை மருத்துவமனையில் சந்திக்க அல்லது மருத்துவர்கள் நோயாளிகளைப் பார்க்க ஒதுக்கப்படும் நேரம்;* visiting hours; consulting hours.

**பார்வையற்ற** பெ.அ. (adv.) *பார்க்கும் திறன் இல்லாத;* visually handicapped.

**பார்வையிடுதல்** வி. (v.) *1. காணுதல்;* inspect; watch. *2. மேற்பார்வை யிடுதல்;* supervisery visit (for checking).

**பார்வை விழுதல்** வி. (v.) *ஒருவரின் கவனம் ஒன்றின்மேல் அல்லது ஒருவரின் மேல் பதிதல்;* (of attention) fall on someone or something; have eyes for something; be attracted by.

**பாராட்டுதல்** வி. (v.) *1. உயர்வாகக் கூறுதல்; புகழ்தல்;* praise; applaud; commend. *2. பொருட்படுத்துதல்;* view something in terms of status, prestige, etc., *3. (உறவு, உரிமை) கொண்டாடுதல்;* claim (relationship right, etc.,).

**பாராட்டு** பெ. (n.) *1. பாராட்டும் செயல்; புகழ்ச்சி;* praise commendation; appreciation. *2. வாழ்த்து;* (always in the plural) congratulations.

**பாராமுகம்** பெ. (n.) *1. (ஒருவரை) பார்த்தும் பார்க்காதது போல் இருப்பது;* deliberate inattention; ignoring; *2. வேண்டுமென்றே புறக் கணிக்கும் போக்கு; கண்டு கொள்ளாத நிலை; பொருட் படுத்தாமை;* indifference; neglect.

**பாராளுமன்றம்** பெ. (n.) *இந்தியக் குடியரசு நாட்டில் சட்டம் இயற்றும் அதிகாரம் கொண்ட மன்றமாகும்; இது மாநிலங்களவை (மற்றும்) மக்களவை என்று இரு பகுதிகளைக் கொண்டுள்ளது;* the parliament of India is the Supreme legislative body of the Republic of India. It is a bicameral legislature composed of the president of India. (The Rajya Saba Counsil of State) and the Lok Shaba (house of the people).

**பாரை** பெ. (n.) *கவை போன்று நன்கு பிளவுபட்ட வாலையும் அகலமான உடலையும் கொண்ட (உணவாகும்) சில வகைக் கடல்மீன்களைக் குறிக்கும் பொதுப்பெயர்;* common term for horse mockerel.

**பால்[1]** பெ. (n.) *1. (பெண் மார்பிலிருந்து குழந்தைக்காகவும், விலங்கின் மடியிலிருந்து குட்டிக்காகவும் சுரக்கும்) உணவுப் பொருளாகும் வெள்ளை நிற நீருணவு;* milk. *'தாய்ப்பால் 2. (கள்ளி, அழிப்பான் முதலியவற்றினுள் உள்ள) பிசு பிசுப்பான வெள்ளை நிற நீர்மம்;* milky juice (of certain plants, such as rubber tree). *3. தேங்காய்த் துருவல் போன்றவற்றை பிழிந்தெடுப்பதன் மூலம் பெறும் வெள்ளை நிற நீர்மம்;* the milk extracted from coconut.

**பால்²** பெ. (n.) *1. ஆண், பெண் என்ற பகுப்பு;* sex. *2. (இலக்.) ஆண், பெண், பலர், ஒன்றன், பலவின்பால் என ஐந்து வகையாகப் பிரிக்கும் பிரிவு;* gender classification (five genders viz., masculine, feminine, human plural, neuter, singular and neuter plural).

**பால்கட்டுதல்** வி. (v.) *குடிக்கப்படா பால் வலியுடன் இறுகிப்போதல்;* painful swelling of the breasts of mamals caused by not suckling.

**பால்காய்ச்சுதல்** வி. (v.) *புதிதாக ஒரு வீட்டில் குடியேறும்போது சடங்காகப் பாலைக் காய்ச்சுதல்;* cook milk ceremonially when moving to a new house.

**பால்குடம்** பெ. (n.) *முருகன் கோயில், மாரியம்மன் கோயில் முதலிய ஆலயங்களுக்குப் பக்தர்கள் நேர்த்திக் கடனாகப் பால் நிரம்பிய குடங்களைத் தலையில் தூக்கிச் செல்லும் சடங்கு;* a ritual in which devotees carry pots filled with milk to temples of Murugan, Mariyamman, etc., in fulfilment of a vow.

**பால்குடி மறத்தல்** வி. (v.) *தாய்ப்பால் குடிக்கும் பழக்கத்தை விடுதல்;* (of a baby or young animal) be weaned.

**பால்குளம்** பெ. (n.) *தீ மிதித்துவிட்டு வருபவர்கள் காலை நனைப்பதற்காகப் பால் நிறைக்கப்பட்டிருக்கும் சதுர வடிவிலான குழி;* pit filled with milk for cooling one's feet after fire walking.

**பால்பல்** பெ. (n.) *குழந்தைப் பருவத்தில் தோன்றிப் பிறகு சிறிய காலத்திலேயே விழுந்துவிடும் பல்;* milk tooth.

**பால்பிடித்தல்** வி. (v.) *(நெல், கம்பு, சோளம் போன்ற பயிர்களின்) தவச மணிகளில் பயிர் உருவாவதற்கு முன் தவசம் (பால்) வடிவில் உண்டாதல்;* (of cereal crops) form milky juice in tender kernels.

**பால் மணம் மாறாத** பெ.அ. (adj.) *மிகச் சிறிய அகவையுடைய; குழந்தைப் பருவத்திலிருக்கும்;* of tender age.

**பால்மாறுதல்** வி. (v.) *1. வேலை செய்யச் சுணங்குதல்; சோம்பல்படுதல்;* shirk (work). *'சின்ன வேலைதானே, பால் மாறாமல் செய்து முடித்துவிடலாம்'. 2. (செய்வதாகச் சொல்லிவிட்டு) செய்யாமல் பின்வாங்குதல்; பேச்சு மாறுதல்;* go back on one's word. *'பணம் தருவதாகச் சொன்னவன் கொஞ்ச நேரத்தில் பால்மாறி விட்டான்.'*

**பால்வினை நோய்** பெ. (n.) *தொற்று நோய்;* sexually transmitted disease. *'தொடக்க நிலையிலேயே கண்டறிந்தால் சில பால்வினை நோய்களைக் குணப் படுத்திவிட முடியும்'.*

**பாலாடை** பெ. (n.) *(குழந்தைக்குப் பால் அல்லது மருந்து புகட்டப் பயன் படுத்தும்) சாய்த்தால் உட்குழிவான தடத்தின் வழியாகப் பால் வரும் வகையில் உள்ள (சங்கு வடிவ) சிறு கிண்ணம்;* conch - like small cup for feeding babies.

**பாலம்** பெ. (n.) *(ஆறு முதலியவற்றின் மேல் போக்குவரத்துக்காக) இரு பகுதிகளை இணைத்துக் கட்டப்படும் அமைப்பு;* bridge. *'இந்தப் பாலத்தில் திண்ணூர்திகள் போவதற்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது'.*

**பாலர்** பெ. (n.) *சிறுவயதுக் குழந்தைகள்;* young children. *'வானொலியில் சிறார்களுக்கான நிகழ்ச்சி'.*

**பாலர்பள்ளி** பெ. (n.) *சிறு குழந்தைகளுக்காக நடத்தப்படும் மழலையர் பள்ளி;* nursery school.

**பாலாடைக்கட்டி** பெ. (n.) *பாலைக் காய்ச்சிக் குளிர வைத்து உருவாக்கப்*

படும் மிருதுவான, வெளிர் மஞ்சள் நிறத்தில் இருக்கும் புரதச்சத்து நிறைந்த உணவுப் பொருள்; cheese.

**பாலியல்** பெ. (n.) உடலுறவு தொடர்பானது; sex; being sexual. '*பாலியல் கல்வி மூலம் எய்ட்ஸ் நோயைப் பற்றிய விழிப்புணர்வை இளைஞர்களிடையே ஏற்படுத்தலாம்*'.

**பாலியல் குறும்பு** பெ. (n.) பாலியல் நோக்கத்துடன் எதிர்பாலாரைச் சீண்டும் செயல்; sexual harassment. '*பாலியல் குறும்பு செய்வோரைத் தண்டிக்க அரசு கடுமையான சட்டம் இயற்றியுள்ளது*'.

**பாலியல் தொழிலாளர்** பெ. (n.) பணத்திற்காக உடலுறவு தொழில் செய்பவர்; commercial sex worker.

**பாலினம்** பெ. (n.) ஆண் அல்லது பெண் என்ற பிரிவு; பால்; gender. '*கருவில் உள்ள குழந்தையின் பாலினத்தைக் கருவிகள் மூலம் கண்டறிவது குற்றம்*'.

**பாலுறவுத் தொற்று** பெ. (n.) பாதுகாப்பற்ற உடலுறவின் மூலம் பரவும் தொற்று; infection caused through sexual intercourse.

**பாலூட்டி** பெ. (n.) குட்டிகளை ஈன்று அவற்றுக்குப் பால் கொடுத்து வளர்க்கும் உயிரினம்; mammal. '*திமிங்கிலம் ஒரு பாலூட்டி*'.

**பாலை** பெ. (n.) *1.* வறண்ட நிலப்பகுதி; arid land. *2.* பாலைவனம்; desert.

**பாலைவனச்சோலை** பெ. (n.) பாலைவனத்தில் அருந்தோற்றமாகக் காணப்படும் மரங்களும் நீரும் நிறைந்த பசுமை யான இடம்; oasis.

**பாலைவனம்** பெ. (n.) கடும் வெப்பம் நிறைந்த, மிக மிகக் குறைந்த அளவே நீரும் தாவரங்களும் காணப்படும் பரந்த மணல்வெளி; desert.

**பாவலர்** பெ. (n.) பாக்கள் இயற்றும் திறன் உள்ளவர்; கவிஞர்; poet.

**பாவாடை** பெ. (n.) இடுப்பிலிருந்து கணுக்கால் வரை தொங்கும்படியான உடை (பெண்கள்); a kind of skirt down to the ankle (as inner garment by women).

**பாவுதல்** வி. (v.) *1.* பதித்தல்; அல்லது பரப்புதல்; pave (the floor with slabs, etc.,). '*கருங்கல் பாவிய முற்றம்*'. *2.* (தரையில் கால்) படுதல் அல்லது பதிதல்; touch (the ground).

**பாவு** பெ. (n.) (*தரையிலோ துணியிலோ*) நீளவாட்டில் செல்லும் இழை; warp.

**பாவு உருளை** பெ. (n.) (*தறியில்*) பாவு சுற்றப்பட்டிருக்கும் உருளை வடிவ மரத்துண்டு; beam (in which the warp is kept).

**பாவை** பெ. (n.) *1.* (*மாந்த அல்லது விலங்கு உருவ*) பொம்மை; puppet; doll '*மரப்பாவை*'. *2.* (*அழகிய*) பெண்; charming girl. *3.* கண்மணி; pupil of the eye.

**பாவைக்கூத்து** பெ. (n.) திரை மறைவில் இருந்து கொண்டு பொம்மைகளின் உறுப்புகளில் இணைக்கப்பட்டிருக்கும் நூலை இழுப்பதன் மூலம் அவற்றை இயக்கி நிகழ்த்தும் கலை; பொம்மலாட்டம்; puppetry.

**பாவை விளக்கு** பெ. (n.) அகல் விளக்கு ஏந்திய பெண் நிற்பதைப் போன்ற அமைப்பைக் கொண்ட, எண்ணெயில் எரியும் விளக்கு; the statuette of a woman bearing an oil lamp in her hands.

**பாழ்** பெ. (n.) *1.* (*ஒன்று*) பயனற்றதான நிலை; வீண்; waste; loss; ruin. *2.* நாசம்; damage. *3.* பயன்படுத்தப் பட முடியாத நிலையில் இருப்பது; something laid waste or is in ruins. *4.* வெறுமையானது; barren; empty.

**பாழ்படுதல்** வி. (v.) (*சீராக்க முடியாதபடி*) மோசமாதல்; be damaged. '*இவருக்குச்*

*சிறுநீரகங்கள் இரண்டுமே பாழ்பட்டிருப்பதால் மாற்றுச் சிறுநீரகம்தான் பொறுத்த வேண்டும்'.*

**பாழாக்குதல்** வி. (v.) *1. (பணத்தை) பயனற்ற வழியில் செல வழித்தல்; (ஒரு பொருளை) வீணாக்குதல்; வீணடித்தல்;* fritter away (money, etc.,); waste. **2.** *(ஒன்றின்) நல்ல தன்மையை இழக்கச் செய்தல்; கெடுத்தல்;* cause damage to; destroy; spoil.

**பாழாகுதல்** வி. (v.) *(எதற்கும் பயன் படாமல் ஒன்று) வீணாதல்;* go waste. *'இந்த அரைகுறைத் திட்டத்தினால் பாழான பணம் இலக்கக்கணக்கில் இருக்கும்'.*

**பாழுங்கிணற்றில் தள்ளுதல்** வி. (v.) *(பொருந்தாத் திருமணத்தின் மூலம் ஒரு பெண்ணின்) வாழ்க்கையைப் பாழாக்குதல்;* ruin a girl's life (through mismatched marriage); condemn a girl to a life of sorrow.

**பாளம்** பெ. (n.) *(மண், பனி, மாழை போன்றவற்றின்) கனத்த தகடு போன்ற கட்டி;* lump of the caked up earth; thick slab.

**பாளை** பெ. (n.) *(பனை, தென்னை போன்றவற்றில் பூங்கொத்துகளை உள்ளடக்கியபடி) மட்டையின் அடியிலிருந்து பருத்த குழல் போன்று வெளிவரும் பாகம்;* spathe of palms.

**பாளையம்** பெ. (n.) *(தெலுங்கு நாயக்க அரசர்களுக்காக வரி தண்டவும் போரில் உதவவும்) ஒரு தலைவனின் பொறுப்பில் விடப்பட்ட சிற்றூர்களின் தொகுதி;* Group of villages granted to a local chieftain who would be the tax farmer and provide soldiers when required by the Telugu Nayakar kings.

**பாளையரிவாள்** பெ. (n.) *(கள்ளிறக்க, பனம்பாளையைச் (சீவப் பயன் படுத்தும்) சற்றுப் பட்டையாகவும் கனமாகவும் இருக்கும் ஒருவகை அரிவாள்;* knife with a broad blade used by those tapping toddy.

**பாற்கடல்** பெ. (n.) *(புராணங்களில் திருமால் குடிகொண்டிருக்கும் இடமாகக் கூறப்படும்) பாலால் அமைந்துள்ள கடல்;* (in the puranas) the ocean of milk which is the abode of vishnu.

**பாறாங்கல்** பெ. (n.) *தனித்துண்டாகக் காணப்படும், மலையிலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட பெரிய கல்;* block of granite stone; large piece of rock; boulder.

**பாறை** பெ. (n.) *1. பல அளவுகளில் உள்ள பெரிய கருங்கல் துண்டுகள்;* rock. *'இந்தக் கடற்கரையில் பாறைகள் அதிகம்'.* **2.** *பாறாங்கல்;* block of rock. *'மலையிலிருந்து பாறைகள் உருண்டோடி வந்தன'.*

**பாறை உப்பு** பெ. (n.) *பாறைகளிலிருந்து கிடைக்கும் சமையல் உப்பு;* rock salt.

**பான்மை** பெ. (n.) *பாங்கு; தன்மை;* manner; capacity.

**பானை** பெ. (n.) *அரைக்கோள வடிவ அடிப்பகுதியும் அகன்ற வாயும் உடைய மட்கலம்;* pot; vessel.

**பானைக் குடுவை** பெ. (n.) *சிறுகலம்;* small pot.

**பானைமூடி** பெ. (n.) *பானையை மூட உதவும் மண்தட்டு;* a lid used to cover an earthen pot.

## பி

**பிக்கல்பிடுங்கல்** பெ. (n.) *தொந்தரவு;* vexatious, claims or wants or dues (which one subject to).

**பிகு** பெ. (n.) *கெஞ்சிக் கேட்கவைக்கும் இயல்பு;* haughtiness, being unresponsive to request; stiff.

**பிகுபண்ணுதல்** வி. (v.) *தன்னையருமைப் படுத்திக்கொள்ளுதல்;* to make oneself to clear.

**பிச்சுவா** பெ. (n.) *கூர் கைப்பிடிக் கத்தி;* dagger with a curved point. *'அவன் பிச்சுவா கத்தியை எடுத்து வந்தான்'.*

**பிச்சைக்காசு** பெ. (n.) *குறைந்தளவுப் பணம்;* pittance.

**பிசகு** பெ. (n.) *1. எலும்பு மூட்டு விலகி விடுதல்;* get sprained; be dislocated. *2. தவறு;* mistake. *'மின் இணைப்பில் சிறிது பிசகு ஏற்பட்டுவிட்டது.*

**பிசறு** வி. (v.) *கிளறுதல், பிசைதல்;* mix.

**பிசிர்** பெ. (n.) *(துணி, மரத்துண்டு இவற்றின் ஓரத்தில்) திரியாக நீண்டிருக்கும் மெல்லிய பகுதி;* rough edge; frayed end.

**பிசினாறி** பெ. (n.) *இவறன் (உலோபி); கருமி;* miser. *'அந்தப் பிசினாறியிடம் பணம் கேட்காதே'.*

**பிசுக்கு** பெ. (n.) *எண்ணெய் படிவதால் ஏற்படும் பிசுபிசுப்புத் தன்மை;* grease.

**பிசுபிசுப்பு** பெ. (n.) *ஒட்டுந்தன்மையாதல்;* stickiness; greasiness.

**பிஞ்சில்பழுத்தல்** வி. (v.) *அகவை வயதுக்கு மீறிய ஒவ்வாச் செயல் (அ) நடத்தை;* precocity.

**பிஞ்சு** பெ. (n.) *இளங்காய்;* tender unripe fruit. *'பிஞ்சும் காயுமாக இருந்த மாமரம்'.*

**பிட்டுக்கருப்பட்டி** பெ. (n.) *பனங் கருப்பட்டி;* palm sugar.

**பிடரி** பெ. (n.) *(மாந்தரின்) பின்தலையின் கீழ்ப் பகுதி;* nape.

**பிடிகடா** பெ. (n.) *காயடிக்கப்பட்ட கடா;* castrated bull.

**பிடிகயிறு** பெ. (n.) *மாடு கட்டுங் கழுத்துக் கயிறு;* rope used in tethering cattle.

**பிடிகுவளை** பெ. (n.) *கைப்பிடி வைத்த சிறிய குவளை;* small mug or cup with a handle. *'அந்தப் பிடிகுவளையை எடுத்து வா!'.*

**பிடிசெம்பு** பெ. (n.) *கைப்பிடியோடு கூடிய செப்பு ஏனம்;* a kind of copper vessel with a handle.

**பிடிசோறு** பெ. (n.) *கைப்பிடியளவுள்ள சோறு;* a handful of cooked rice.

**பிடிமானம்** பெ. (n.) *பிடிப்பு;* hold; support. *'கூரை பிடிமானம் இல்லாமல் சாய்ந்தது'.*

**பிடிவாதம்** பெ. (n.) *கொண்டது விடாமை; தன் முரண்டு;* adamance; obstinacy.

**பிணக்கம்** பெ. (n.) *மாறுபாடு;* disagreement.

**பிணக்கு** பெ. (n.) *1. உறவில் மாறுபாடு கொள்ளல்;* strife. *2. ஊடல்;* sulkiness.

**பிணத்தூக்கம்** பெ. (n.) *கடுந்துயில்;* dead sleep.

**பிணிப்பு** பெ. (n.) *கட்டுகை;* binding.

**பிணைப்பு** பெ. (n.) *நெருக்கம்;* closeness. *'பக்கத்து வீட்டுக்காரரிடம் அதிக பிணைப்பு வைக்காதே'.*

**பிணைமாடு** பெ. (n.) *இணைக்கப்பட்ட எருதுகள்;* a pair of oxen yoked together.

**பிணையம்** பெ. (n.) *பொறுப்பாண்மை;* bail security, guarantee, pledge.

**பித்தக்கிறுகிறுப்பு** பெ. (n.) *பித்தத்தினால் வரும் தலைச்சுற்று;* dizziness arising from biliousness.

**பித்தநரை** பெ. (n.) *இளம் அகவையில் தோன்றும் வெள்ளை முடி;* greyness of the hair in young age; premature grey.

**பித்தப்பைக்கல்** பெ. (n.) *பித்தப்பையில் விளையுங் கல் போன்ற கடும் பொருள்;* gall stone.

**பித்துக்குளி** பெ. (n.) *கோட்டிக்காரன் (ரி); பித்தம் பிடித்தவன் (ள்);* mad person.

**பித்தம்** பெ. (n.) *ஈரலினின்று தோன்றும் நீர்வகை;* bile, gall. *'பித்தம்பத்து விதம்'.*

**பித்தல்** பெ. (n.) *நினைவு மாறுபட்டுக் குழறுகை;* babbling incoherently in delirium.

**பித்தலாட்டம்** பெ. (n.) *ஏமாற்றுகை;* trickery, defrauding.

**பித்தவுடம்பு** பெ. (n.) *அளவிறந்த பித்தநீர் சுரக்கும் உடம்பு;* a body in which bile humour in the system supervence.

**பித்தவெடிப்பு** பெ. (n.) *பித்தத்தினால் காலில் உண்டாகும் பிளப்பு;* cracks in the skin of the feet fissures.

**பித்தன்** பெ. (n.) *மனக்கோளாறுடையவன்;* crazy man; mad man.

**பிதற்றல்** பெ. (n.) *1. வாய்த் திக்கல்;* blabbering as a result of delirium. *2. உளறல்;* meaningless talk. *'அவன் ஏன் தனியாக உட்கார்ந்து பிதற்றித் திரிகிறான்'.*

**பிதிர்** பெ. (n.) *முன்னோர், தென்புலத்தார்;* ancestor.

**பிதுக்கம்** பெ. (n.) *பிதுங்குகை;* protruding, projecting.

**பிந்திய காலம்** பெ. (n.) *முதுமைக் காலம்;* old age.

**பிந்தி** பெ. (n.) *நேரங் கழித்து;* late.

**பிய்த்தல்** வி. (v.) *கிழித்தல்;* tear off.

**பிரம்பு** பெ. (n.) *கூடை, நாற்காலி முதலியவை பின்னப்படும் எளிதில் வளையும் தன்மையுடைய கொடி வகை;* rattan. *'பிரம்பு நாற்காலி'.*

**பிராட்டி** பெ. (n.) *தலைவி;* lady mistress.

**பிரான்** பெ. (n.) *தலைவன்;* lord.

**பிரி** பெ. (n.) *முறுக்கப்பட்ட வைக்கோல்;* twisted hay. *'அந்த பிரியை எடுத்து வை'.*

**பிரிமணை** பெ. (n.) *பாண்டம் வைக்கும் மணை;* a circular ring made of straw for keeping pots on.

**பிரியாவிடை** பெ. (n.) *பிரிய மனம் இல்லாமல் வழியனுப்புதல்;* emotional send - off.

**பிரிவினை** பெ. (n.) *கூறுகளாகப் பிரிகை;* partition. *'நாட்டுப் பிரிவினை'.*

**பிரிவுத்துயர்** பெ. (n.) *பிரிவால் ஏற்படும் துன்பம்;* agony caused by separation.

**பிரிவுவிழா** பெ. (n.) *பிரிந்து செல்லும் நேரம் வாழ்த்தி வழியனுப்பும் வழி;* farewell. *'எங்கள் அலுவலகத்தில் பணிபுரிந்தவர்க்குப் பிரிவுவிழா நடைபெற்றது'.*

**பில்லி** பெ. (n.) *செய்வினை, சூனியக் கலை;* sorcery.

**பிலுக்கன்** பெ. (n.) *பகட்டுக்காரன்;* fop cox comb; dandy.

**பிழம்பு** பெ. (n.) *தீயின் பெருஞ்சுடர்;* mass or column of fire, light, etc.,

**பிழிதல்** பெ. (n.) *கையால் இறுக்கிச் சாறு பிழிதல்;* to squeeze, express press out with the hands.

**பிழைகேடு** பெ. (n.) *தவறு;* mistake.

**பிள்ளைகுட்டிக்காரன்** பெ. (n.) *பெருங் குடும்பி;* a man with a large family.

**பிள்ளைத்தாய்ச்சி** பெ. (n.) *கருவுற்ற பெண்;* pregnant woman.

**பிள்ளைபிடிப்பவன்** பெ. (n.) *குழந்தைகளைக் கடத்துபவன்;* kidnapper of children.

**பிள்ளைப் பெட்டி** பெ. (n.) *சிறு பெட்டி;* a small box.

**பிள்ளையாண்டான்** பெ. (n.) *1. இளையோன்;* young man, youth. *2. தம்பி;* younger brother.

**பிள்ளையார்சுழி** பெ. (n.) *எழுதத் தொடங்கும்போது முதலில் வரையப்*

படும் 'உ' என்ற குறி; a propitiatory mark.

**பிளந்துகட்டுதல்** வி. (v.) *சிறப்பாகச் செய்தல்;* to do extremely well.

**பிளவு** பெ. (n.) *பிரிந்து போகும் நிலை;* split.

**பிளவை** பெ. (n.) *பிளக்கப்பட்ட துண்டு;* piece, slice.

**பிளிற்றுதல்** பெ. (n.) *ஆரவாரித்தல்;* to make a roaring noise.

**பிற்பகல்** பெ. (n.) *நண்பகலுக்கும் மாலைக்கும் இடைப்பட்ட பொழுது;* afternoon *'பிற்பகல் இரண்டு மணிக்குத் தேர்வு நடக்கும்'.*

**பிறந்தமேனி** பெ. (n.) *உடை எதுவும் அணியாத நிலை;* state of being nude; nakedness. *'சிறுவர்கள் பிறந்த மேனியாகத் திரிகிறார்கள்'.*

**பிறந்தவீடு** பெ. (n.) *பிறந்தகம்;* house or family in which one is born.

**பிறப்புரிமை** பெ. (n.) *தான் பிறந்த நாட்டில் இருக்கும் உரிமை;* birth right.

**பிறவி** பெ. (n.) *உடன் பிறந்தவள்;* sister.

**பிறன்மனை** பெ. (n.) *1. அயலான் வீடு;* another's house. *2. பிறன் மனைவி;* another's wife.

**பிறாண்டு** பெ. (n.) *கீறல், கீறுதடம்;* scratch.

**பின்னேரம்** வி. (n.) *பிற்பகல்;* afternoon.

**பின்கதவு** பெ. (n.) *கொல்லைக்கதவு;* back door.

**பின்குடுமி** பெ. (n.) *பின்பக்கமாக முடியுங் குடுமி;* tuft of knoted hair at the back of a men's head.

**பின்பாட்டு** பெ. (n.) *(பாடகருக்கு) பின்னால் இருந்து உடன்பாடும் பாட்டு;* vocal support (to a singer). *'நாட்டுப்புறப்பாடல்களில் பின் பாட்டுக்காரர் பாடுவதில்லை'.*

**பின்புத்தி** பெ. (n.) *அறிவுக்குறை;* want of foresight.

**பின்னடைதல்** வி. (v.) *பின்தங்குதல்;* to log behind.

**பின்னந்தலை** பெ. (n.) *பின்புறம்;* back of head.

**பின்னாடி** வி.அ. (adv.) *பின்பக்கமாக, தள்ளி, தொலைவில்;* after.

**பின்னிகழ்வு** பெ. (n.) *ஒரு செயலின் விளைவு;* result of an action.

**பின்னிப் பிணைதல்** பெ. (n.) *ஒன்று மற்றொன்றோடு நெருங்கி இருத்தல்;* to be interlinked.

## பீ

**பீடை** பெ. (n.) *துன்பமிகுந்த நிலை;* state of misery. *'உன்னைப் பற்றியிருந்த பீடை ஒழிந்தது'.*

**பீத்தல்** பெ. (n.) *தற்பெருமைப் பேச்சு;* swagger, boastful talk. *'அவன் பீத்தல் பேர்வழி'.*

**பீளை** பெ. (n.) *கண்ணழுக்கு;*forming of rheum about the eyes.

## பு

**புகலிடம்** பெ. (n.) *அடைக்கலம்;* place of refuge. *'என் தாய் வீடே எனக்குப் புகலிடம்'.*

**புகைச்சல்** பெ. (n.) *(தொண்டையில் ஏற்படும்) கரகரப்புடன் கூடிய எரிச்சல்;* cough, throat irritation.

**புசுபுசு என்று** வி.அ. (adv.) *மென்மையாக;* furry; fluffy. *(குல்லா) 'கவிப்பு புசுபுசு என்று இருந்தது'.*

**புடைப்பு** பெ. (n.) *வீங்கியிருக்கும் அல்லது தடித்திருக்கும் நிலை;* swelling. *'தொடை புடைப்பாய் இருக்கிறது'.*

**புத்துயிர்** பெ. (n.) *ஏற்றம் மிக்க நிலை;* revival.

**புதுக்குடித்தனம்** பெ. (n.) *புதியதாய் திருமணமாகி வந்து புதிய வாழ்க்கை தொடங்குபவர்கள்;* home set up by the newly weds as a seperate household.

**புயல்** பெ. (n.) *கொடுங்காற்று;* gale, storm, gust.

**புயல் சின்னம்** பெ. (n.) *புயல் தோன்றுதற் குரிய அறிகுறி;* sign of storm.

**புயல்மையம்** பெ. (n.) *புயற்காற்று நிலை கொண்டிருக்கும் இடம்;* the centre place of storm, cyclone.

**புரசை** பெ. (n.) *யானைக் கழுத்திலிடும் கயிறு;* halter on head - stall of an elephant.

**புரட்சி** பெ. (n.) *குறுகிய காலத்தில் நிலைமை முற்றிலும் மாறும் தன்மை; மக்கள் எழுச்சி;* revolution.

**புரட்சியாளர்** பெ. (n.) *நிலைமையை முற்றும் மாற்ற பணிபுரிந்தவர்;* revolutionary.

**புரட்டல்** பெ. (n.) *ஏமாற்றுதல்;* cheating.

**புரட்டன்** பெ. (n.) *உண்மையை மறைத்தும் திரித்தும் கூறுபவன்;* twister. '*அந்தப் புரட்டனிடம் என்ன தொடர்பு?*'.

**புரவலன்** பெ. (n.) *காத்துதவுவோன்; துணை செய்பவர்;* protector.

**புரளி** பெ. (n.) *பொய்யலர்(வதந்தி);* false alarm. '*வெடி குண்டுப் புரளி*'.

**புரிமணை** பெ. (n.) *பாண்டம் வைத்தற்கு வைக்கோலைச் சுற்றியமைத்த அடிமணை;* ring shaped pad of twisted straw etc.

**புரை** பெ. (n.) *கண்புரை;* cataract. '*எனது வலது கண்ணில் புரை விழுந்து விட்டது*'.

**புரைக்கல்** பெ. (n.) *மருந்தரைக்கும் குழியம்மி;* small stone slab for grinding drugs.

**புரையேறுதல்** வி. (n.) *உணவுப்பொருள் தனக்குரிய வழியிற் செல்லாது மூச்சுக்குழலிற் சென்றதால் வெளி வருதல்;* to be suffocated by food passing into the wind pipe.

**புல்லுமாறு** பெ. (n.) *அருகம்புல்லில் செய்யப்படும் துடைப்பம்;* broom made of a kind of grass.

**புலம்புதல்** வி. (v.) *பிதற்றுதல்;* to speak foolishly.

**புலனம்** பெ. (n.) *இணையத்தின் உதவி யுடன் திறன்பேசியின் வழியே ஒளிப் படம், காணொலி, கருத்துரைகள் ஆகியவற்றைப் பரிமாறிக்கொள்ள உதவும் செய்திப் பரிமாற்றச் செயலி;* the app which helps to share the news, photos and vedios with others.

**புழக்கடை** பெ. (n.) *வீட்டின் பின் வாயில்;* backyard. '*புழக்கடைப் பக்கம் போகாதே!*'.

**புழுங்கலரிசி** பெ. (n.) *அவித்துக் காய்ந்த நெல்லை அரைத்துப் பெற்ற அரிசி;* rice obtained from proboiled.

**புழங்குதல்** வி. (v.) *கையாளுதல்;* to practice.

**புழுதி** பெ. (n.) *மண் தூள்;* dust, dried earth.

**புழுதி உழவு** பெ. (n.) *மானாவாரி நிலத்தில் உழுவது;* ploughing in dryland.

**புழுதி மழை** பெ. (n.) *மண்காற்று;* dust storm.

**புள்ளக்காரி** பெ. (n.) *கைக்குழந்தை வைத் திருப்பவள்;* mother with a suckling baby.

**புள்ளையாண்டன்** பெ. (n.) *இளம் பருவத்தினன்;* youngster. '*உம் புள்ளை யாண்டன் எங்கே காணோம்?*'.

**புளிக்கவைத்தல்** வி. (v.) *நுரைகொள்ள வைத்தல்;* to ferment.

**புளிங்கறி** பெ. (n.) *புளிச்சாறிட்டுச் சமைத்த கறி;* curry containing tamarind juice.

**புளிச்சரக்கு** பெ. (n.) *புளிப்பைச் சமமாக்கும் காரப்பொருள்;* alkali.

**புளிச்சதண்ணீர்** பெ. (n.) *புளிப்பேறிய பழஞ்சோற்று நீர்;* water allowed to stand over cooked rice and get sour.

**புளிச்சேப்பம்** பெ. (n.) *உண்டது செரியாமையால் வரும் புளித்த ஏப்பம்;* belching on account of indigestion.

**புளிச்சோறு** பெ. (n.) *புளியிட்டு அட்ட சோறு;* boiled rice dressed with tamarind sauce.

**புளித்த கஞ்சி** பெ. (n.) *நுரைத்து மிகு வூட்டம் பொதிந்த சோற்று நீர்;* yeast.

**புளித்த கள்** பெ. (n.) *புளிப்பேறிய கள்;* sour toddy.

**புளித்தநாற்றம்** பெ. (n.) *நுரைத்துக்கெட்ட மணம்;* sour smell.

**புளித்தமோர்** பெ. (n.) *நுரைத்துக் காடிச் சுவையேறிய மோர்;* sour butter milk.

**புளிமூட்டை** பெ. (n.) *புளியை மொத்தமாக வைத்து ஓலைப் பாயால் சுற்றிய கட்டு;* roll of tamarind packed in a basket.

**புளியேப்பம்** பெ. (n.) *சாப்பிட்ட உணவு செரிக்காததால் வரும் ஏப்பம்;* belching due to indigestion.

**புளுகன்** பெ. (n.) *கூசாமல் பொய் சொல்பவன்;* barefaced liar. *'அவன் ஒரு அண்டப்புளுகன்'.*

**புளுகுணி** பெ. (n.) *அதிகமாகப் பொய் பேசும் ஆள்;* lier.

**புற்செதுக்கி** பெ. (n.) *புல்லைச் செதுக்க உதவுங்கருவி;* grass hoe.

**புற்றீசல்** பெ. (n.) *(பெரும்பாலும் உவமையாக) புற்றிலிருந்து பெருமளவில் புறப்படும் ஈசல்;* (often used as a simile) swarm of moths.

**புறக்கடை** பெ. (n.) *வீட்டின் பின்புறம்;* backyard, as of a house.

**புறக்கணித்தல்** பெ. (n.) *மதியாதிருத்தல்; சேராதிருத்தல்;* disregard.

**புறக்கணிப்பு** பெ. (n.) *கலந்துகொள்ள மறுத்து ஒதுங்குவது;* boycott.

**புறக்காப்பு** பெ. (n.) *புறத்தே அமைக்கப் படும் காவல்;* outer guard of sentry.

**புறக்காவல்** பெ. (n.) *வெளிச்சுற்று;* out post police.

**புறங்கடை** பெ. (n.) *வீட்டின் வெளிப் புறம்;* outside of a house.

**புறங்காண்(ணு)தல்** வி. (v.) *முறியடித்தல்;* to defeat, put to flight.

**புறங்கூறுதல்** வி. (v.) *காணாவிடத்துப் பிறர் மேல் அலர் தூற்றுதல்;* to backbite, slander.

**புறங்கொடுத்தல்** வி. (v.) *பின்புறங் காட்டுதல்;* to turn one's back.

**புறஞ்சாய்தல்** வி. (v.) *தோற்றல்;* to be defeated, routed.

**புறஞ்சிறை** பெ. (n.) *மாளிகை முதலியவற்றிக்கு அருகில் உள்ள இடம்;* premises in the neighbourhood of a palace or castle.

**புறஞ்சேரி** பெ. (n.) *நகர்க்குப் புறம்பே மக்கள் வாழும் இடம்;* outskirts of a city, suburb.

**புறணி** பெ. (n.) *(ஒருவர் இல்லாதபோது அவரைப் பற்றிக் கூறும்) குற்றம் குறை;* backbiting.

**புறத்திண்ணை** பெ. (n.) *வீட்டு வெளித் திண்ணை;* pial.

**புறத்தோற்றம்** பெ. (n.) *வெளிப்புறத் தோற்றம்;* exterior.

**புறந்தள்ளுதல்** வி. (v.) *சேர்த்துக் கொள்ளாமல் ஒதுக்கிவைத்தல்;* exclude.

**புறநகர்** பெ. (n.) *நகரின் புறப்பகுதி;* outlying part of a city, suburb.

**புறநிலை** பெ. (n.) *வெளிப்புறம்;* outside.

**புறநோயாளி** பெ. (n.) *வெளியிலிருந்து மருத்துவமனைக்கு வந்து மருத்துவம் பெற்றுச் செல்பவர்;* out patient.

**புறப்பகுதி** பெ. (n.) *வெளிப்பக்கம்;* exterior.

**புறப்புண்** பெ. (n.) *முதுகில் பட்ட புண்;* wound on the back of a person.

**புறம்பேசுதல்** வி. (v.) *(ஒருவர் இல்லாத போது அவரைப் பற்றி) குற்றங்குறை சொல்லுதல்;* to backbite.

**புறம்போக்கு** பெ. (n.) *வேளாண்மைக்குத் தகுதியின்மை காரணத்தால் குடிகள் வசம் விடப்படாததும், தீர்வைக்கு உள்படாததுமாகிய புறக்கணிக்கப் பட்ட நிலம்;* land exempt from assessment, either because it is set a side for communal purposes or because it is uncultivable.

**புறம்போக்குநிலம்** பெ. (n.) *பயன்படா அரசு நிலம்;* waste land belongs to the government.

**புறவழிச்சாலை** பெ. (n.) *நகரம், ஊர் இவைகளுக்குள் நுழையாமலே செல்லும் வெளி எல்லையை ஒட்டி அமைக்கப்பட்டிருக்கும் நெடுஞ் சாலை;* by pass road.

**புறவாசல்** பெ. (n.) *வீட்டின் பின்பக்க வாயில்;* back door (of the house). *'புறவாசலைப் பெருக்கி விடணும்'.*

**புறவீதி** பெ. (n.) *நகரின் வெளிவீதி;* street outskirting a town.

**புறா** பெ. (n.) *வீட்டுப் பறவையாக வளர்ப்பதற்கும் ஏற்றதான காட்டுப் பறவை வகை;* dove, pigeon.

**புன்சிரிப்பு** பெ. (n.) *இளமுறுவல்;* gentle smile.

**புன்னிலம்** பெ. (n.) *பயனற்ற நிலம்;* barren land.

**புன்னெறி** பெ. (n.) *தீயவழி;* bad ways.

**புனல்வாயில்** பெ. (n.) *மதகு;* sluice of a channel or tank.

**புனைந்துரை** பெ. (n.) *மிகைப்படுத்திக் கற்பனையாகச் சொல்லப்படுவது;* rhetoric mere embelishment.

# பூ

**பூக்குஞ்சு** பெ. (n.) *இறகு முளைக்காத பறவைக்குஞ்சு;* unfledged young bird.

**பூக்குடலை** பெ. (n.) *உருளை வடிவப் பூக்கூடைவகை;* cylindrical palm leaf basket for flowers.

**பூக்குறடு** பெ. (n.) *பூமாலை தொடுப் போருக்கான மேடான இடம்;* raised platform for garland makers.

**பூக்குழி** பெ. (n.) *தீ மிதிப்பதற்கான தீக்குழி;* fire pit with live coals (for fire walking).

**பூக்கூடை** பெ. (n.) *பூ வைக்கும் கூடை;* flower basket.

**பூகம்பம்** பெ. (n.) *நிலவதிர்ச்சி;* Earth quake.

**பூகோளம்** பெ. (n.) *நிலவுலக உருண்டை;* the terrestrial globe.

**பூங்கதிர்** பெ. (n.) *வெண்கதிர்;* white ray.

**பூங்கா** பெ. (n.) *பூஞ்சோலை;* flower garden.

**பூங்காடு** பெ. (n.) *இளங்காடு;* young forest.

**பூங்காம்பு** பெ. (n.) *செடியுடன் பூ பொருந்தியிருக்கும் உறுப்பு;* flower or stalk.

**பூங்காவனம்** பெ. (n.) *பூந்தோட்டம்;* flower garden.

**பூங்குடம்** பெ. (n.) *ஒப்பனை செய்யப்பட்ட நீர்க்கலம்;* decorated waterpot.

**பூங்கொத்து** பெ. (n.) *பூக்களின் தொகுதி;* a bunch of flowers.

**பூங்கொம்பு** பெ. (n.) *மலர்களையுடைய கிளை;* flowered branch.

**பூச்சக்கரம்** பெ. (n.) *வாணவெடிவகை;* a kind of fire works.

**பூச்சரம்** பெ. (n.) *மலர்மாலை;* a garland or chaplet of flowers.

**பூச்சாண்டி** பெ. (n.) *குழந்தைகளுக்கு அச்சமுண்டாக்கும் உருவம்;* an imaginary being, invoked to frighten children; bugbear, hobgoblin.

**பூச்சிகாட்டுதல்** வி. (v.) *அச்சங்காட்டுதல்;* frighten others by distortions of face on grimaces.

**பூச்சிப்பல்** பெ. (n.) *சொத்தைப் பல்;* carious tooth.

**பூச்சிபிடித்தல்** வி. (v.) *புழுவுண்டாகிப் பண்டம் கெட்டுப் போதல்;* to infested with worms to become wormy.

**பூச்சிமருந்து** பெ. (n.) *பூச்சிக்கொல்லி மருந்து;* pesticide; insecticide.

**பூச்சிமிரட்டு** பெ. (n.) *பொய்யாக அச்சங்காட்டுகை;* false or feigned threat.

**பூச்சிவெட்டு** பெ. (n.) *தலைவழுக்கை;* baldness, loss of hair.

**பூச்சுவேலை** பெ. (n.) *சுவர்களில் சுதை மவைப் பூசும் வேலை;* plastering.

**பூச்செண்டு** பெ. (n.) *பூவினாலமைந்த பூங்கொத்து;* bouquet of flowers.

**பூச்சொக்காய்** பெ. (n.) *பூ வேலையுள்ள துணியில் தைத்த சட்டை;* a shirt embroiderd with floral designs.

**பூசணம்** பெ. (n.) *நேர்த்திக்கடனாக முடித்துவைக்கும் காசு முதலியன;* coin tied in a piece of cloth and set apart as a votive offering.

**பூசல்** பெ. (n.) *போர்;* battle.

**பூசாரி** பெ. (n.) *சிற்றூர்த் தெய்வங் களுக்குப் பூசை நடத்திவைப்பவர்;* priest in a temple for village deity. *'மாரியம்மன் கோயில் பூசாரி'.*

**பூசிமெழுகுதல்** வி. (v.) *குற்றம் நடந்ததை ஒப்புக் கொள்ளாமல் ஏதேதோ கூறி மறைத்தல்;* to slur over a fault crime or defect, gloss over.

**பூசுதல்** வி. (v.) *தடவுதல்;* to besmear.

**பூசுமஞ்சள்** பெ. (n.) *பெண்கள் முகத்தில் பூச உதவும் மஞ்சள் கிழங்கு;* raw turmeric.

**பூசை** பெ. (n.) *வழிபாடு;* worship.

**பூசைக்காலம்** பெ. (n.) *பூசைக்குரிய வேளை;* time of worship.

**பூசைமணி** பெ. (n.) *வழிபாடு செய்யும் போது அடிக்கும் கைமணி;* hand bell using during the performance of pūja.

**பூசையறை** பெ. (n.) *பூசை செய்வதற்காக ஒதுக்கப்பட்ட அறை;* prayer room.

**பூஞ்சிட்டு** பெ. (n.) *குருவி வகை;* a small bird.

**பூஞ்சீப்பு** பெ. (n.) *வாழைக்குலையின் நுனிச்சீப்பு;* small plantains at the bottom of a fruit bearing stalk.

**பூட்டகக்காரன்** பெ. (n.) *வீண்பெருமை பாராட்டுபவன்;* vain boaster.

**பூட்டன்** பெ. (n.) *பாட்டனுக்குத் தகப்பன்;* great grand father.

**பூட்டுக்குச்சி** பெ. (n.) *திறவுகோல்;* key.

**பூட்டூசி** பெ. (n.) *பெண்கள் சட்டையில் குத்திக்கொள்ளப் பயன்படுத்தும் காப்பூசி;* safety pin.

**பூடு** பெ. (n.) *வெள்ளைப்பூண்டு;* garlic.

**பூண்கட்டுதல்** பெ. (n.) *உலக்கை முதலியவற்றுக்குப் பூண்பொருத்துதல்;* to fasten a ferrule on.

**பூண்டுப்பல்** பெ. (n.) *பூண்டின் சுளை;* a tooth of garlic.

**பூண்டோடு** பெ.எ. (adj.) *அடியோடு;* totally; to the root.

**பூணூல்** பெ. (n.) *(சில சாதிகளில்) தோள்பட்டையிலிருந்து உடம்பைச் சுற்றிப் போடப்பட்டிருக்கும் முப்புரிநூல்;* cotton thread of three strands worn running over the left shoulder and down to the hip on the right by men of certain castes.

**பூணூற்கலியாணம்** பெ. (n.) *முதன் முறையாக முப்புரி நூல் அணியும் சடங்கு;* investitute of the cotton thread.

**பூத்தொழில்** பெ. (n.) *பூ வேலைப்பாடு;* embroidery.

**பூதக்கண்ணாடி** பெ. (n.) *உருப் பெருக்காடி;* magnifying glass.

**பூதக்கால்** பெ. (n.) *யானைக்கால் நோயுடையவரின் கால்;* elephantiasis.

**பூதம்** பெ. (n.) *இறந்தவரின் பேயுருவம்;* ghost of a deceased person.

**பூந்தட்டு** பெ. (n.) *பூ வைப்பதற்குரிய தட்டு;* flower salver.

**பூந்தொட்டி** பெ. (n.) *பூச்செடி வளர்க்கும் சிறுதொட்டி;* flowerpot.

**பூப்பல்லக்கு** பெ. (n.) *பூவினால் ஒப்பனை செய்யப்பட்ட பல்லக்கு;* palanquin decorated with flowers.

**பூ முடிதல்** வி. (v.) *பூச்சூடிக் கொள்ளுதல்;* to wear flowers.

**பூராவும்** பெ.எ. (adj.) *எல்லாவற்றையும்;* all things. *'பூரா கேட்காதே கொடுக்க மாட்டான்'.*

**பூரிப்பு** பெ. (n.) *நிறைவு;* filling.

**பூருதல்** வி. (v.) *துளைத்தல்;* to pierce.

**பூவன்பழம்** பெ. (n.) *இளமஞ்சள் நிறத்தோலைக் கொண்ட ஒருவகை சிறிய வாழைப்பழம்;* a kind of plantain with light yellow skin.

**பூவாதல்** வி. (v.) *மலர்தல்;* to blossom.

**பூவிதழ்** பெ. (n.) *மலரேடு;* flower petal.

**பூவிழுதல்** பெ. (n.) *கண்ணின் கருவிழியில் வெள்ளை விழுகை;* formation of cataract in the eye.

**பூனைவணங்கி** பெ. (n.) *குப்பைமேனி;* Indian acalypha.

## பெ

**பெட்டை** பெ. (n.) *பறவை, விலங்கு இவற்றின் பெண்ணினம்;* female of animals and birds. *'பெட்டைக் கோழியை அடைத்து வை'.*

**பெட்டைக் கண்** பெ. (n.) *ஊனமுள்ள கண்;* defective eye.

**பெண்டு** பெ. (n.) *பெண்;* woman. *'பெண்டு பிள்ளைகள் எல்லாம் அந்தப் பக்கம் போங்கள்'.*

**பெண்ணாள்** பெ. (n.) *வேளாண் தொழில்புரியும் உழத்தியர்கள்;* female farm - labourer. *'பெண்ணாளை நடவு செய்ய கூட்டி வா'.*

**பெண்பனை** பெ. (n.) *காய்க்கும் பனை;* palmyra as bearing nut. *'பெண்பனை கிட்டி போட்டுள்ளது'.*

**பெத்தவயிறு** பெ. (n.) *பெற்ற வயிறு பார்க்க.*

**பெய்கலம்** பெ. (n.) *ஏனம்;* pot or vessel.

**பெயரன்** பெ. (n.) *பேரன்;* grandson.

**பெரியபடி** பெ. (n.) *நிலைத்த கொள்ளள வுள்ள படி;* a standard measure of capacity.

**பெரிய புள்ளி** பெ. (n.) *செல்வாக்கு உள்ளவர்;* big shot.

**பெருக்குமாறு** பெ. (n.) *துடைப்பம்;* broom.

**பெருங்கட்டி** பெ. (n.) *பெரிய கட்டி, பிளவை;* abscess.

**பெருங்கலக்கம்** பெ. (n.) *மன உலைவு;* lack of peace.

**பெருங்கடை** பெ. (n.) *பெரிய கடை வீதி;* big bazaar street.

**பெருங்காடு** பெ. (n.) *1. பெரிய புதர்க் காடு;* extensive jungle. *2. சுடுகாடு;* burial ground.

**பெருங்குவியல்** பெ. (n.) *குப்பைமேடு;* large heap. '*குப்பையைக் கூட்டி பெருங்குவியலாகக் கிடக்கிறது*'.

**பெருங்குறைபாடு** பெ. (n.) *பெருந்தீங்கு;* big drawback.

**பெருங் கைகாரன்** பெ. (n.) *பெருஞ் செல்வம் படைத்தவன்;* wealthly person.

**பெருங்கோபம்** பெ. (n.) *கடுஞ்சினம்;* violent anger.

**பெருஞ்சச்சரவு** பெ. (n.) *பெரும்பூசல்;* big contention.

**பெருந்தவறு** பெ. (n.) *பெருங்குற்றம்;* great offence.

**பெருந்திட்டம்** பெ. (n.) *அனைத்தையும் உள்ளடக்கியத் திட்டம்;* great plan.

**பெருந்தீனிக்காரன்** பெ. (n.) *பேருண்டி யாளன்;* glutton.

**பெருந்தொல்லை** பெ. (n.) *பெருந்துன்பம்;* great nuisance.

**பெருநகர்** பெ. (n.) *பலவகை மக்கள் தொகை மிக்க மாநகரம்;* Metropolitan city.

**பெருநாட்டம்** பெ. (n.) *பெருவிருப்பம்;* aspiration.

**பெருநோக்காடு** பெ. (n.) *தொழுநோய்;* leprosy.

**பெரும்பாடு** பெ. (n.) *பேருழைப்பு;* great effort, great suffering strain.

**பெரும்பாலார்** பெ. (n.) *மிகுதியான எண்ணிக்கையினர்;* the majority.

**பெரும்பிடி** பெ. (n.) *1. கட்டாயப்படுத்திப் பெறுகை;* exaction. *2. ஒட்டாரம் (பிடிவாதம்);* obstinacy.

**பெரும்பொய்** பெ. (n.) *கட்டுக்கதை;* untruth.

**பெரும்போகம்** பெ. (n.) *மிகு விளைச்சல்;* bumper crop.

**பெருமடை** பெ. (n.) *தெய்வங்களுக்கிடும் சோற்றுப்படையல்;* food offering to a deity.

**பெருமாள்மாடு** பெ. (n.) *ஊர் ஊராய்த் திரியும் இரப்பாளிகள் தெருவில் ஆட்டங்காட்டப் பழக்கியதும் புனைவு செய்யப் பெற்றதுமான எருது; பூம்பூம் மாடு;* performing bull adorned with cowries, etc., belonging to wandering mendicants.

**பெருமூச்சு** பெ. (n.) *நெட்டுயிர்ப்பு;* sigh - long breath.

**பெருவாரி** பெ. (n.) *1. பரவல் நோய்;* epidemic, pestilence. *2. கொள்ளை நோய் வகை;* bubonic plague.

**பெருவாழ்வு** பெ. (n.) *நல்வாழ்வு;* well being.

**பெருவிழா** பெ. (n.) *பெரிய திருவிழா;* great festival.

**பெருவெள்ளம்** பெ. (n.) *பெருமழையால் உண்டாகும் வெள்ளப்பெருக்கு;* flood of a river caused by heavy rains.

**பெற்றவயிறு** பெ. (n.) *குழந்தை ஈன்ற வயிறு;* delivered stomach.

## பே

**பேச்சடைப்பு** பெ. (n.) *பேச முடியாமற் செய்யும் நோய்;* loss of voice, aphonia disease.

**பேச்சாளி** பெ. (n.) *1. சொல்வன்மை யுள்ளவன்;* good speaker. *2. சொல் லுறுதியுள்ளவன்;* a man who keeps his word.

**பேச்சுவாயன்** பெ. (n.) *வாயாடி;* talkative person.

**பேச்சுத்தடித்தல்** பெ. (n.) *சொல் கடுமையாதல்;* (of a conversation) become a heated exchange.

**பேச்சுமூச்சு** பெ. (n.) *உயிருள்ள தென்பதைக் காட்டும் பேச்சும் மூச்சும்;* signs of life, as speech and breath.

**பேச்சுவார்த்தை** பெ. (n.) *1. உரையாடல்;* talk. *2. நட்பு;* amicable terms or speaking terms.

**பேசாதபேச்சு** பெ. (n.) *1. தகுதியற்ற சொல்;* improper talk. *2. வெறுப்பூட்டும் சொல்;* indecent or obscene talk.

**பேசாமடந்தை** பெ. (n.) *வாய் வாளாமை பூண்ட பெண்;* taciturn woman who is mute; silent woman.

**பேணிவளர்த்தல்** பெ. (n.) *பாதுகாத்து வளர்த்தல்;* help to grow.

**பேதைப்பருவம்** பெ. (n.) *அறியாப் பருவம்;* age of innocence.

**பேந்தவிழித்தல்** வி. (v.) *மருண்டு விழித்தல்;* to stare, roll the eyes in bewilderment.

**பேய்க்கரும்பு** பெ. (n.) *நாணல்வகை;* kaus, a large and coarse grass.

**பேய்க்காற்று** பெ. (n.) *சுழல் காற்று;* whirlwind.

**பேய்க்குணம்** பெ. (n.) *அருவருக்கத்தக்க தீக்குணம்;* bad, unsociable, peevish (irritable) disposition.

**பேய்ச்சத்தம்** பெ. (n.) *பேரொலி;* hideous noise, as of a devil.

**பேய்த்தனம்** பெ. (n.) *1. கொடுஞ் செயற்குணம்;* fiendishness. *2. பித்து;* madness. *3. புல்லறிவு;* foolishness.

**பேய்ப்பிடி** பெ. (n.) *விடாப்பிடி;* vice-like grip.

**பேய்ப்பிள்ளை** பெ. (n.) *1. அடங்காப் பையன்;* disobedient son. *2. அறிவிலாத பிள்ளை;* foolish child.

**பேய்மழை** பெ. (n.) *பெருமழை;* heaviest rain.

**பேய்முகம்** பெ. (n.) *ஒழுங்கற்ற முகம்;* hideous face.

**பேயாட்டம்** பெ. (n.) *பேய்க்கூத்து;* devil dance.

**பேயாடுதல்** வி. (v.) *பேய்பிடித்தாடுதல்;* to whirl the head through demoniac possession.

**பேர்கெட்டவன்** பெ. (n.) *கயவன்;* rogue, scoundral.

**பேர் சொல்லாதது** பெ. (n.) *இரவில் பேர் வழங்கத்தகாத வசம்பு, ஊசி முதலிய பொருள்கள்;* particular thing not named at night, as sweet flag, needle.

**பேர் சொல்லாதவன்** பெ. (n.) *முடி திருத்துவோன்;* barber, as not to be named at night.

**பேர்பாதி** பெ. (n.) *சரிபாதி;* exactly half, just half.

**பேர்வைத்தல்** பெ. (n.) *பெயரிடுதல்;* to charisten, to name.

**பேரச்சம்** பெ. (n.) *பெருந்திகில்;* extreme fear.

**பேரடிபடுதல்** பெ. (n.) *எங்கும் பேசப் படுகை;* being talked about everywhere.

**பேரணி** பெ. (n.) *ஒருங்கு திரண்ட கூட்டம்;* assembly of an organisation.

**பேரதிர்ச்சி** பெ. (n.) *பெருந்திகில்;* great shock.

**பேரம்** பெ. (n.) *ஒப்பந்தத்திற்கு முன் பேசும் விலைப்பேச்சு;* bargaining before contract.

**பேரலை** பெ. (n.) *கடலில் தோன்றும் பெரிய அலை;* giant wave.

**பேரழிவு** பெ. (n.) *பேரிடர்;* disaster.

**பேரளவு** பெ. (n.) *பெருமளவு;* large quantity.

**பேரறிவாளன்** பெ. (n.) *உயர்ந்த அறிவுடையவன்;* person of mature understanding, wise man.

**பேராசை** பெ. (n.) *பெருவிருப்பம்;* intense desire.

**பேராண்டி** பெ. (n.) *பேரன்;* grandson.

**பேராபத்து** பெ. (n.) *பேரிடர்;* great misfortune.

**பேரார்வம்** பெ. (n.) *மிகு விருப்பம்;* burning desire.

**பேராவல்** பெ. (n.) *வேணவா;* earnest desire.

**பேராற்றல்** பெ. (n.) *போரிடும் ஆற்றல்;* superior skill, great power.

**பேரானந்தம்** பெ. (n.) *மேலான மகிழ்ச்சி;* supreme bliss.

**பேரிடர்** பெ. (n.) *பெருந்துன்பம்;* great trouble.

**பேரிரவல்** பெ. (n.) *மாற்றுப் பெயரில் இலங்குதல்;* benami transaction.

**பேரிரைச்சல்** பெ. (n.) *பெருங்கூச்சல்;* uproar.

**பேரிழப்பு** பெ. (n.) *மிகுந்த இழப்பு;* great loss better loose.

**பேருதவி** பெ. (n.) *பெருநன்றி;* help in dire distress, great farour.

**பேருழைப்பு** பெ. (n.) *பெரும்பாடு;* great effort.

**பேருள்ளம்** பெ. (n.) *பெருந்தகைப் பண்பு;* charity mind.

**பேரொலி** பெ. (n.) *பெருங்கூச்சல்;* loud noice.

**பேறுகாலம்** பெ. (n.) *மகப்பேற்றுக் காலம்;* time of parturition or delivery.

**பேன்** பெ. (n.) *தலைமுடியிலுண்டாகும் சிற்றுயிரி;* louse, pediculi.

# பை

**பைய** கு.வி.எ. (adv.) *மெல்ல;* by degrees slowly softly, gently.

# பொ

**பொக்கிப் பயல்** பெ. (n.) *தறுதலை;* vagabond.

**பொக்கு** பெ. (n.) *பதர், முற்றாத, உள்ளீடற்ற மணி;* hollow. *'எல்லாமே பொக்கு கடலையாய்ப் போச்சு'.*

**பொக்குதல்** வி. (v.) *கொப்புளங் கொள்ளுதல்;* to be blistered.

**பொக்குளிப்பான்** பெ. (n.) *அம்மைநோய் வகை;* measles.

**பொக்கைவாய்** பெ. (n.) *பல்லில்லா வாய்;* toothless mouth.

**பொங்கல்வைத்தல்** வி. (v.) *தெய்வத் துக்குப் பொங்கற் சோறு சமைத்தல்;* to boil rice for offering to a deity.

**பொங்கலாள்** பெ. (n.) *1. சமையற்காரன்;* cook. *2. தானே சமைத்துத் தனியே உண்போன்;* one who cooks his own food and lives by himself.

**பொங்கற்படி** பெ. (n.) *பொங்கலன்று கொடுக்கும் அன்பளிப்பு;* gift given on the pongal day.

**பொங்கிவழிதல்** வி. (v.) *சோறு முதலியன கொதித்துப் புறத்து வடிதல்;* to boil over as rice or milk.

**பொங்குங்காலம்** பெ. (n.) *செழிப்புக் காலம்;* period of waxing prosperity.

**பொச்செரிப்பு** பெ. (n.) *பொறாமை;* jealousy.

**பொச்சை** பெ. (n.) *குற்றம்;* fault.

**பொசுக்குதல்** வி. (v.) *சாம்பலாக எரித்தல்;* to burn into ashes.

**பொசுங்கல்** பெ. (n.) *கருகிப்போதல்;* burnt. *'அடுப்படியில் பொசுங்கல் மணம் வருகிறது'.*

**பொட்டணம்** பெ. (n.) *சிறுமூட்டை, பொதி மடிப்பு;* small bundle, parcel.

**பொட்டல்** பெ. (n.) *1. பாழிடம்;* barren or aride tract, waste land. *2. திறந்த வெளியிடம்;* open space. *3. தலை வழுக்கை;* baldness.

**பொட்டு**[1] பெ. (n.) *உளுந்து முதலிய தவசங்களின் தோலோடு கூடிய சிறு துகள்;* chaff husk with particles of grass.

**பொட்டு**[2] பெ. (n.) *நெற்றியிலிடும் குறி;* mark, red, white or black worn on the forehead.

**பொட்டுப்பொடி** பெ. (n.) *சிறுபண்டம்;* knick-knack.

**பொட்டுவெடி** பெ. (n.) *பொட்டுப்போன்ற வடிவமைப்புக் கொண்ட சிறு பட்டாசுவகை;* a small round shaped crackers.

**பொட்டையன்** பெ. (n.) *திருநங்கை;* trans gender.

**பொடிக்காசு** பெ. (n.) *1. சில்லரைக் காசு;* (of money) coin. 2. *கைக்கூலி;* bribe.

**பொடிச்சல்லி** பெ. (n.) *கட்டட வேலைக்காக உடைத்த கருங்கல் அல்லது செங்கற் சிறு துண்டு;* small bits of brick or stone used for concrete.

**பொடிசு** பெ. (n.) *1. வடிவத்தில் பொடியாக இருப்பது; மிகச் சிறிய அளவு;* being tiny or small. *'வெண்டைக்காயைப் பொடிசாக நறுக்கு'.* 2. *(பொதுவாக) குழந்தைகள்;* children. *'பொடிசுகளெல்லாம் தூங்கியாச்சா?'.*

**பொடிபொட்டு** பெ. (n.) *1. சிறியது;* anything small. *2. பதரானது;* that which is like chaff.

**பொடிப்பண்ணுதல்** வி. (v.) *1. தூளாக்குதல்;* to pulverise. *2. துண்டித்தல்;* to cut in two.

**பொடித்தூவுதல்** பெ. (n.) *ஒருவகை மரக்கறியுணவு;* a kind of vegetable curry.

**பொடிமட்டை** பெ. (n.) *மூக்குப்பொடி வைக்கும் வாழை மட்டை;* plantain bark folded for keeping snuff. *'தாத்தாவின் பொடி மட்டையைக் காணவில்லை'.*

**பொடியல்** பெ. (n.) *இரும்பில் துளை போடுங் கம்மக் கருவி;* punching pin.

**பொடியன்** பெ. (n.) *1. சிறுவன்;* boy. *2. புல்லன்;* insignificant person.

**பொடிவிளக்கம்** பெ. (n.) *பொன் நகையில் அதிகப்பொடி சேர்த்து இணைக்கை;* soldering an ornament with a large quantity of alloy.

**பொடிவு** பெ. (n.) *1. சிதைவு;* anything broken. *2. வசைவு;* cursing.

**பொத்தல்** பெ. (n.) *1. துளை;* hole. *2. கடன்;* debt. *3. குற்றம்;* fault, defect. *4. கிழிசல்;* tear.

**பொத்தற்சுரை** பெ. (n.) *ஒன்றுக்கும் உதவாதவன்;* useless person.

**பொத்தாம்பொதுவாக** பெ. (n.) *பொதுப் படையாக;* not particularly or specifically.

**பொத்தியாட்டம்** பெ. (n.) *கண் பொத்தி விளையாட்டு;* game where blind folded person tries to catch others.

**பொத்திவைத்தல்** வி. (v.) *1. மறைத்தல்;* to conceal. *2. பாதுகாப்புப்படுத்துதல்;* to keep safe.

**பொத்தை** பெ. (n.) *பருமனானது;* anything large or bulky.

**பொத்தைக்கால்** பெ. (n.) *யானைக்கால் நோய்;* elephantiasis.

**பொதிமாடு** பெ. (n.) *வண்டி இழுக்கும் எருது;* loaded cart drawn by bullocks.

**பொதுக்கருத்து** பெ. (n.) *பொதுநலக் கருத்து;* comman welfare idea.

**பொந்து** பெ. (n.) *மரம், சுவர், நிலம் முதலியவற்றில் தானாக ஏற்பட் டிருக்கும் குழிவு;* hole, in tree or in the ground. *'பொந்து மாதிரி வீடு!'*.

**பொய்ச்சாக்கு** பெ. (n.) *நொண்டிச்சாக்கு;* lame excuse.

**பொரியரிசி** பெ. (n.) *வறுத்த அரிசி;* parched rice.

**பொல்லாக்காலம்** பெ. (n.) *கெட்ட காலம்;* evil bad period, worst time.

**பொல்லாப்பு** பெ. (n.) *பழி ஏற்றல்;* displeasure of a person.

**பொலி** பெ. (n.) *களத்தில் குவித்து வைக்கப்பட்டிருக்கும் தூற்றாத நெல்;* heap of paddy. *'நெல்லையெல்லாம் பொலியாக குவித்துவை'*.

**பொளிதல்** வி. (v.) *அம்மி, ஆட்டுக்கல் போன்றவற்றைச் சொரசொரப்பாக இருக்க கொத்துதல்;* make the surface of the stone for grinding rough using a pointed chisel. *'அம்மியை நல்லா பொளித்துக்கொடு'*.

**பொறுப்பாளி** பெ. (n.) *பொறுப்பானவன்;* responsible person.

**பொறுப்புடைமை** பெ. (n.) *கடமைப் பொறுப்பு;* oblication.

**பொறுமை** பெ. (n.) *அடக்கம்;* patience, tolerance, meekness.

**பொறை** பெ. (n.) *சிறுகுன்று;* small hill.

**பொறை நோய்** பெ. (n.) *பேற்றுவலி;* pain of pregnancy.

**பொறையிலான்** பெ. (n.) *பொறுமை யில்லாதவன்;* impatient person.

**பொன்செய்தல்** வி. (v.) *நல்ல செயல் செய்தல்;* to do a good deed.

**பொன்புனைதல்** வி. (v.) *மங்கல நாண்பூட்டி மணத்தல்;* to marry as tying the tali.

**பொன்மணை** பெ. (n.) *பொற்பலகை;* golden plank used as a seat fixed with knobs.

**பொன்வணிகர்** பெ. (n.) *பொன் நகை விற்கும் வணிகர்கள்;* dealers in gold.

**பொன்வறுவல்** பெ. (n.) *பொன்னிறமாக வறுத்தல்;* to fry till it attains gold colour or red colour.

**பொன்விலை** பெ. (n.) *ஏற்றமான விலை;* very high price, as of gold.

**பொன்விழா** பெ. (n.) *ஐம்பதாம் ஆண்டுக் கொண்டாட்டம்;* golden jubilee. *'எங்கள் நிறுவனம் பொன்விழாக் கண்டது'*.

**பொன்னத்துப்பெட்டி** பெ. (n.) *திருமணத் தில் தாலி கூறைப் புடைவைகள் எடுத்துச் செல்லும் பெட்டி;* a basket in which the tāli and wedding sarees are carried in marriage.

**பொன்னுக்குவீங்கி** பெ. (n.) *அம்மைக் கட்டு;* mumps.

**போக்கிடம்** பெ. (n.) *ஒதுக்கிடம், புகலிடம்;* way of escape or refuge. *'உனக்கு இங்கே விட்டால் போக்கிடம் ஏது'.*

**போக்கிலி** பெ. (n.) *போக்கிடம் அற்றவன்;* one who has no refuge.

**போக்கு** பெ. (n.) *நடத்தை;* conduct. *'உன் போக்கு சரியில்லை மாற்றிக்கொள்'.*

**போண்டி** பெ. (n.) *பணம் அனைத்தையும் இழந்து விட்ட நிலை;* bankruptcy. *'இப்படிச் செலவு செய்தால் கடைசியில் போண்டியாகி விடுவாய்'.*

**போதாக்காலம்** பெ. (n.) *தீக்காலம்;* time of misfortune. *'என் போதாக்காலம் இங்கே வந்து மாட்டிக் கொண்டேன்'.*

**போர்** பெ. (n.) *1. கதிர் வைக்கோற் படப்பு;* heap of unthreshed grain, straw, stalk. *2. (இரு நாடுகளுக்கிடையே நடக்கும்) சண்டை;* fight, battle war.

**போர்க்கடா** பெ. (n.) *சண்டைக்காக வளர்க்கப்படும் ஆட்டுக்கடா;* fighting ram.

**போர்க்கதவு** பெ. (n.) *இரட்டைக் கதவு;* folding doors, as joined.

**போர்க்காலநடவடிக்கை** பெ. (n.) *விரைவான தீர்வு;* on a war footing.

**போர்க்காளை** பெ. (n.) *சாம்பல் அல்லது வெண்மை கலந்த கருநிறக் காளை;* bullock with white and black or grey colour.

**போர்க்கோலம்** பெ. (n.) *போரணி பூணுகை;* military accoutrements martial constume.

**போர்ச்சேவல்** பெ. (n.) *சண்டைக்கோழி;* game - cock, fighting cock.

**போர்த்தல்** வி. (v.) *மூடுதல்;* to cloak, to hide.

**போர்வை** பெ. (n.) *உறங்கும்போது மேலே மூடும் விரிப்பு ;* upper garment cloack blanket, rug, mantle.

**போரடித்தல்** வி. (v.) *கதிரைப் போராகக்கட்டி மாடு விட்டு நெல்மணிகளைப் பிரித்தல்;* do the second round of threshing by making oxen tread the sheaves.

**போரிடுதல்** பெ. (n.) *பொருதல்;* one engaged in fight.

**போரிழப்பு** பெ. (n.) *போரினால் உண்டாகும் இழப்பு;* loss of war.

**போருணர்ச்சி** பெ. (n.) *போரிடும் மனப்பான்மை;* fighting spirit.

**போருதவி** பெ. (n.) *போர்வீரனுக்கு உதவி செய்கை;* succour rendered to a warrior.

**போரூக்கம்** பெ. (n.) *போரிடும் மன எழுச்சி;* instinct of pugnacity.

**போரெதிர்தல்** வி. (v.) *போர்செய்தலை மேற்கொள்ளுதல்;* to set out to fight.

**போரேறு** பெ. (n.) *போர் செய்யவல்ல காளை;* fighting bull.

**போலி இரக்கம்** பெ. (n.) *பொய் இரக்கம்;* lips sympathy.

**போலிக்குரல்** பெ. (n.) *மாற்றுக்குரல்;* false roar.

**போலிக்கையொப்பம்** பெ. (n.) *பொய்க்கையொப்பம்;* forgery signature.

**போலிச்சரக்கு** பெ. (n.) *பொய்ச்சரக்கு;* imitation goods or commodity, as not genuine.

**போலிச் செய்தி** பெ. (n.) *பொய்ச் செய்தி;* false news.

**போலித்தனம்** பெ. (n.) *உண்மையல்லாத வெளித்தோற்றம்;* imitation, disguise, show.

**போலித்திரை** பெ. (n.) *பொய்த்திரை;* fake curtain.

**போலிநடிப்பு** பெ. (n.) *பாசாங்கு செய்தல்;* hypocrisy. *'உன் போலி நடிப்பு இங்கு எடுபடாது'.*

**போலிநடை** பெ. (n.) *போலியான நடத்தை;* trick of style.

**போலி நியாயம்** பெ. (n.) *பொய்க் கரணியம்;* false reasoning.

**போலிப்பாசம்** பெ. (n.) *பொய்யாகக் காட்டும் அன்பு;* sophism; false attachment; untrue affection.

**போலிப்பேச்சு** பெ. (n.) *பசப்புப் பேச்சு;* hypocritical speech. *'உன் போலிப் பேச்சு இங்கு எடுபடாது'.*

**போலி வேடம்** பெ. (n.) *போலி நடிப்பு;* hypocrisy. *'உன் போலிவேடம் அதிக நாள் எடுபடாது'.*

**போலிவேலை** பெ. (n.) *கள்ளத்தனமான வேலை;* shoddy work.

**போற்றுதல்** வி. (v.) *வழிபடுதல்;* to praise, applaud.

**போற்று** பெ. (n.) *பாராட்டு, வழிபடு;* praise, invocation.

## ம

**மக்கல்** பெ. (n.) *கெட்டுப்போன பொருள்;* anything spoiled. *'அரிசி மக்கலா யிருக்கிறது'.*

**மக்களித்தல்** வி. (v.) *சதை பிறழ்தல்;* get sprained. *'கால் மக்களித்துக் கொண்ட தால் நடக்க முடியவில்லை'.*

**மக்கு** பெ. (n.) *1. மந்தகுணம்;* sluggisheness, dullness. *2. அறிவிலி;* ignorant person, dullard.

**மங்கல்** பெ. (n.) *1. ஒளி மழுக்கம்;* dimness, obscurity, growing dim. *2. இருள் கலந்த நேரம்;* darkness, dusk.

**மங்காத்தா** பெ. (n.) *(சீட்டு விளை யாட்டில்) மூன்று சீட்டுகள் வைத்து ஆடும் விளையாட்டு;* a card game. *'ஒரு கும்பல் ஆலமரத்தடியில் உட்கார்ந்து மங்காத்தா ஆடிக் கொண்டிருந்தது'.*

**மங்கிணி** பெ. (n.) *1. மந்த அறிவுள்ளவன்-ள்;* extremely dull person. *'அவன் ஒரு மந்தப் புத்திக்காரன்'. 2. பயனற்ற வன்-ள்;* worthless person.

**மச்சம்** பெ. (n.) *தோலில் உண்டாகும் இயற்கைக் கரும்புள்ளி;* mole on the skin. *'அவனுக்குக் கன்னத்தில் மச்சம் எடுப்பாய் உள்ளது'.*

**மச்சான்** பெ. (n.) *மனைவியின் உடன் பிறந்தவன்; (ஒருவனுடைய) உடன் பிறந்தவளின் கணவன்; மாமா அல்லது அத்தையின் மகன்;* wife's brother or sister's husband; the son of one's maternal uncle or paternal aunt.

**மச்சினன்** பெ. (n.) *மைத்துனன்;* wife's brother. *'மனைவியின் உடன் பிறந்தோன்'.*

**மச்சினி** பெ. (n.) *மனைவியின் தங்கை;* younger sister of one's wife.

**மசக்கை** பெ. (n.) *கருவுற்ற பெண்ணுக்கு உண்டாகும் மயக்கம்;* morbid longings of a pregnant woman. *'அந்தப் பெண்ணை வேலை ஏவாதே அவள் மசக்கையாய் இருக்கிறாள்'.*

**மசமசத்தல்** வி. (v.) *ஒரு செயலை முடிக்க காலந்தாழ்த்தல்;* to be slow and indecisive. *'வேலை செய்யாமல் மசமசனு நிற்கிறான்'.*

**மஞ்சள் அட்டை** பெ. (n.) *(கால்பந்து, வணரிப் பந்தாட்டம் (ஹாக்கி) போன்ற விளையாட்டுகளில் ஆட்டத்தின் விதியை மீறிய ஆட்டக் காரருக்கு முதல்கட்ட எச்சரிக்கை யாகக் காட்டப்படும் மஞ்சள் நிற அட்டைத் துண்டு;* (in football, hockey, etc.,) yellow card.

**மஞ்சள் கடுதாசி** பெ. (n.) *ஒருவர் தனது கடனைவிடச் சொத்து குறைவாக இருப்பதால் கடன் தந்தவர்களுக்குத் தனது சொத்தை விழுக்காட்டின் அடிப்படையில் நயன்மன்றம் மூலம் பிரித்துத் தந்து கடன் தொல்லை யிலிருந்து காத்துக் கொள்ள*

*நயன்மன்றத்தில் பதிவு செய்யும் மனு;* petition given by a debtor unable to pay his debts; notice of bankruptcy.

**மஞ்சள்காப்பு** பெ. (n.) *கோயில்களில் திருவிழா நாட்களில் மூலவருக்கு மஞ்சள் அப்பிச் செய்யும் ஒப்பனை(அலங்காரம்);* turmeric paste with which an idol is covered on special occasions.

**மஞ்சள் நீராட்டு** பெ. (n.) *பூப்பெய்திய பெண்ணை மஞ்சள் நீரால் குளிப்பாட்டி நடத்தப்படும் சடங்கு;* ritual bath in turmeric mixed water for a girl who has attained puberty.

**மஞ்சுவிரட்டு** பெ. (n.) *ஏறுதழுவல்;* a kind of bull fight. *'பொங்கல் திருவிழாவின் போது மஞ்சு விரட்டு நடக்கும்'.*

**மட்டக்கோல்** பெ. (n.) *கொத்து வேலைக் கருவிகளுளொன்று;* rule, ruler, mason's smoothing rule.

**மட்டப்பலகை** பெ. (n.) *சமநிலை காட்டுங் கொத்துக் கருவி;* mason's level frame with plumb line.

**மட்டற்ற மகிழ்ச்சி** பெ. (n.) *அளவு கடந்த மகிழ்ச்சி; எல்லையற்ற மகிழ்ச்சி;* overwhelming; happiness, limitless, joy. *'குழந்தை பிறந்த செய்தியைக் கேட்டதும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன்'.*

**மட்டு** பெ. (n.) *பொதுவாக உள்ளதைவிட அல்லது இணைக்கிணை உள்ளதை விடக் குறைவு;* (of something) a little less (than the average or normal) *'உயரம் கொஞ்சம் மட்டு தான்'.*

**மட்டை** பெ. (n.) *1. (தென்னை, பனை முதலியவற்றில்) ஓலையைத் தாங்கிய பட்டைப் பகுதி;* long flat stalk in palm and coconut trees. *2. தேங்காயை மூடிய நார் பகுதி;* fibrous cores. *2. மது மயக்கத்தால் நினைவற்று கிடத்தல்;* a drunkard in un consessicence. *'அவன் அளவுக்கு அதிகமாக குடித்துவிட்டு மட்டையா யிட்டான்'.*

**மட்பாண்டம்** பெ. (n.) *மண்ணாற் செய்த ஏனம்;* earthern ware.

**மடசாம்பிராணி** பெ. (n.) *திட்டும் சொல் (சிறிதும் அறிவற்றவன்-ள்);* scolding word (a very stupid person).

**மடத்தனம்** பெ. (n.) *அறிவைப் பயன் படுத்தாத அல்லது சிந்திக்காத தன்மை;* stupidity. *'மடத்தனமாகப் பேசாதே'.*

**மடல்** பெ. (n.) *திருநீறு, சந்தனம் போன்றவற்றை வைப்பதற்கான சற்று நீண்டு குழிந்திருக்கும் மரப்பெட்டி அல்லது சிறிய ஏனம்;* receptacle (for keeping sacred ash etc.,) made of wood or metal.

**மடாதிபதி** பெ. (n.) *மடத்தின் தலைமைப் பொறுப்பேற்றிருக்கும் துறவி;* head of a (chiefly Hindu) religious institution.

**மடிப்பிச்சை** பெ. (n.) *நேர்த்திக்கடனுக் காக இடுப்புத் துணியை விரித்து ஏந்திப் பெறும் பிச்சை;* alms received in the part of the cloth worn around the waist (as part of a vow made to a deity). *'குழந்தை குணம் அடைந்தால் மடிப்பிச்சை எடுப்பதாக நேர்ந்து கொண்டாள்'.*

**மடு** பெ. (n.) *1. சுனை; பொய்கை;* water hole. *'மான்கள் மடுவில் நீர் குடித்துக் கொண்டிருந்தன'. 2. பெரும் பள்ளம்;* deep gorge. *'ஆற்றின் கரையோர மடுவில் கொஞ்சம் தண்ணீர் தேங்கியிருந்தது'. 3. குழி;* pit. *'செத்துக் கிடந்த நாயை மடுதோண்டிப் புதைக்க வேண்டும்'.*

**மடை** பெ. (n.) *(வயலில், தோட்டத்தில், வீட்டில்) நீர் செல்வதற்கு ஏற்ற வகையில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சிறு வழி;* narrow channel for water. *'வரப்பில் நடந்து கொண்டிருந்தவன்*

*கால் தவறி மடையில் விழுந்து விட்டான்*.

**மடைமாற்றுதல்** வி. (v.) *குறிப்பிட்ட தேவைக்காக உள்ளதை மாற்றிப் பயன்படுத்தல்;* divert something (for a different use). '*பொதுநலத்துறைக்காக ஒதுக்கப்பட்ட நிதியில் பாதி போக்கு வரத்துத் துறைக்கு மடைமாற்றுதல் செய்வது முறையன்று*'.

**மடைவாய்** பெ. (n.) *நீர்நிலையை ஒட்டி அமைந்திருக்கும் மடையின் முனை;* the end of the channel that is joined to the water source. '*தண்ணீர் பாய்ந்த வுடன் மடைவாயைக் கட்டிவிட்டு வா*'.

**மண்டகப்படி** பெ. (n.) *திருவிழாக் காலத்தில் ஊர்வலரை (உற்சவ மூர்த்தியை) மண்டபத்தில் எழுந் தருளச் செய்வதற்காக ஒருவர் அல்லது ஒரு பிரிவினர் ஏற்கும் பொறுப்பு;* responsibility for the ceremony of receiving the deity at a hall during festival. '*இன்றைக்குக் கோயில் திருவிழாவில் எங்கள் மண்டகப்படி*'.

**மண்டலம்** பெ. (n.) *நாற்பதிலிருந்து நாற்பத்தைந்து நாட்கள் கொண்ட கால அளவு;* period of forty to forty five days (for a puja, treatment, etc.,). '*ஒரு மண்டலம் நோன்பு இருக்க வேண்டும்*'. 2. *நகரத்தின் உட்பிரிவு;* division.

**மண்டலமுழுக்காட்டு** பெ. (n.) *கோவிலில் குடமுழுக்கு முடிந்த நாளிலிருந்து ஒரு மண்டலம் வரை நாள்தோறும் செய்யப்படும் திருமுழுக்கு;* ceremony of anointing idols for a period (48 days) after consecration.

**மண்டுகம்** பெ. (n.) *புரிந்துகொள்ளவும் புரிந்து கொண்டதைச் சரிவர வெளிப்படுத்தவும் தெரியாத ஆள்;* nincompoop.

**மண்டைக்கர்வம்** பெ. (n.) *தலைக்கனம்;* swollen head; haughtiness. '*நாலு எழுத்து படித்துவிட்டாலே பலருக்கு மண்டைக்கர்வம் வந்துவிடுகிறது*'.

**மண்டைக்கனம்** பெ. (n.) *செருக்கு, திமிர்;* arrogance.

**மண்டைகாய்தல்** வி. (v.) *(அதிகமாக சிந்தித்து மேலும்) சிந்திக்க முடியாமல் போதல்;* become unable to think (as a result of thinking intensely).

**மண்டையிடி** பெ. (n.) *தலைவலி;* head ache.

**மண்டையை உடைத்துக்கொள்ளுதல்** வி. (v.) *ஒரு சிக்கலை எப்படித் தீர்ப்பது என்று கடினமாகச் சிந்தித்தல்;* think hard to find a solution to a problem.

**மண்டையைப் பிளத்தல்** வி. (v.) *தலைவலி, வெயில் போன்றவைப் பொறுத்துக் கொள்ள முடியாத அளவுக்குக் கடுமையாக வருத்துதல்;* (of headache) split; (of sun) scorch.

**மண்டையைப் போடுதல்** வி. (v.) *இறத்தலைக் குறிக்கும் வழக்கு;* (said unsympathetically) die.

**மண்டையோடு** பெ. (n.) *தலையின் எலும்புப் பகுதி;* skull.

**மண்டை வீங்குதல்** வி. (v.) *செருக்கு அதிகரித்தல்;* be swollen headed.

**மண்ணை அள்ளிப்போடுதல்** வி. (v.) *மண்ணைப் போடுதல் பார்க்க.*

**மண்ணைக் கவ்வுதல்** வி. (v.) *போட்டி, தேர்தல் போன்றவற்றில் அவமானப் படும் வகையில் தோற்றுப்போதல்;* suffer a humiliating defeat.

**மண்ணைப்போடுதல்** வி. (v.) *1.* *ஒருவ னுடைய வேலையில் இழப்பு அல்லது தடை ஏற்படும்படி செய்தல்;* cause something loss of (something). '*வேலையை விட்டுப் போகச் சொல்லி, என் பிழைப்பில் மண்ணைப் போட்டுவிடாதீர்கள்*

*என்று கதறினான்'. 2. ஒருவரின் ஆசை, எண்ணம் போன்றவை நிறைவேற விடாமல் செய்தல்;* shatter (hopes or expectations, etc.,)

**மண்ணைவாரி இறைத்தல்** வி. (v.) *தனக்குக் கொடுமை விளைவித்தவர் அழிந்துபோகும்படி சாவிப்பு கொடுத்தல்; சவித்தல்;* utter a curse.

**மண்ணோடு மண்ணாக்குதல்** வி. (v.) *இருந்த இடமே தெரியாதவாறு அடியோடு அழிந்துபோதல்;* disappear without trace.

**மண்பாண்டம்** பெ. (n.) *மட்பாண்டம் பார்க்க.*

**மண்வாசனை** பெ. (n.) *இயல்பு மாறா பேச்சு, செயல்;* the culture (of a particular place); regional milieu. *'அவன் பேச்சில் மண்வாசனை தெரிகிறது'.*

**மண்விழுதல்** வி. (v.) *ஆசை நிறைவேறாமல் போதல்;* (of plans, etc.,) go unfulfilled.

**மணப்பொருத்தம்** பெ. (n.) *மணமக்கள் பிறப்பியப் பொருத்தம்;* Astrological matching of bride and bridegroom.

**மணம்** பெ. (n.) *ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாகும் நிகழ்ச்சி அல்லது சடங்கு;* marriage; wedding.

**மணமேடை** பெ. (n.) *மணமக்கள் தாலி கட்ட அமரும் இடம்;* decorated platform for wedding ceremony.

**மணமுடித்தல்** வி. (v.) *திருமணம் செய்தல்;* wed; marry.

**மணிமேடை** பெ. (n.) *கடிகாரம் பொருத்தப்பட்ட உயர்ந்த தூண் அல்லது கோபுரம் போன்ற அமைப்பு;* clock tower.

**மதமதப்பு** பெ. (n.) *1. செழிப்பு;* the luxuriance (of youth). *2. சுறுசுறுப்பற்ற மந்த நிலை;* lethargy.

**மதிப்பளித்தல்** வி. (v.) *ஒருவருக்கு மதிப்பு தருதல்;* respect.

**மதிப்பிடுதல்** வி. (v.) *விலை முதலியவற்றின் மதிப்பைக் கண்டறிதல்;* estimate; make an estimate.

**மதிப்பீடு** பெ. (n.) *1. தேர்வுத்தாளைத் திருத்தி உரிய மதிப்பெண் இடும் நடைமுறை;* valuation. *2. ஒன்றை அல்லது ஒருவரைப் பற்றிய கண்ணோட்டம் அல்லது கருத்து. திறனாய்வு பார்வை;* judgement, evaluation.

**மப்பும் மந்தாரமுமாக** வி.அ. (adv.) *மழை வருவதற்கு அறிகுறியாக வானம் இருட்டிக்கொண்டு முகில் மூட்டத்துடன்;* overcast.

**மயக்குதல்** வி. (v.) *1. கவர்ச்சியால் வயப்படுத்துதல்;* charm (something); bring (something) under a spell. *2. தன்னையே மறக்கும்படியாக்குதல்;* make one) forget (about everything) charm.

**மரப்பாச்சி** பெ. (n.) *குழந்தைகளுக்கான மாந்த உருவ மரப்பொம்மை;* wooden doll (for little girls).

**மரமண்டை** பெ. (n.) *1. அறிவு இல்லாத ஆள்;* blockhead. *'எது சொன்னாலும் அந்த மரமண்டைக்குப் புரியாது'. 2. விரைவாகச் சிந்திக்கவோ அல்லது நடந்ததை நினைவு கூரவோ முடியாத மூளை;* stupidity.

**மரவை** பெ. (n.) *திருநீற்று மடல்;* receptacle (for sacred ash).

**மரித்தல்** வி. (v.) *சாதல், இறத்தல்;* die.

**மரியாதை செய்தல்** வி. (v.) *ஊர்ப் பெரியவருக்கு அல்லது ஊர்ப் பொது தொண்டுக்கு உதவி செய்பவருக்கு மாலை (அ) பொன்னாடை அணிவித்து மதிப்பு செய்தல்;* honour someone.

**மருக்கொழுந்து** பெ. (n.) *நறுமணம் மிகுந்த இலைகளைக் கொண்ட ஒருவகைக் குத்துச்செடியின் இலை;* southern wood; its aromatic leaves.

**மருட்டுதல்** வி. (v.) *அச்சமூட்டுதல்; கலவரப்படுத்துதல்;* frighten; disturb.

**மருத்துவச்சி** பெ. (n.) *ஊர்ப்புறங்களில் பட்டறிவின் அடிப்படையில் மகப் பேறு பார்க்கும் பெண்மணி;* (traditionally trained) midwife (in rural areas).

**மருதாணி** பெ. (n.) *உள்ளங்கை, உகிர் முதலியவற்றில் அரைத்து இட்டுக் கொண்டால் சிவப்பு நிறம் தரும் ஒருவகை இலை;* leaves of the plant henna crushed and used as dye (applied on the palms and nails) (the plant) henna.

**மருந்துக்கடை** பெ. (n.) *மருந்துகள் விற்கும் கடை;* medical shop; pharmacy.

**மருந்துக்குக்கூட** வி.அ. (adv.) *(எதிர் மறைச் சொற்களோடு மட்டும்) எதிர்பார்க்கப்படும் குறைந்த அள விலும் கூட இல்லாத நிலை;* even a little, even the bare minimum of (something).

**மருந்துச்சீட்டு** பெ. (n.) *நோயாளியை நன்கு ஆய்வு செய்து பின்பற்ற வேண்டிய பண்டுவ முறை, சாப்பிட வேண்டிய மருந்து போன்றவற்றைப் பரிந்துரைத்து மருத்துவர் எழுதித் தரும் தாள்;* doctor's prescription.

**மருந்து மாயம்** பெ. (n.) *தன் செயலை நிறைவேற்றிக் கொள்வதற்காக திறமையாக மேற்கொள்ளும் வழி வகை;* uncanny means.

**மருந்துவைத்தல்** வி. (v.) *வசியம் செய்யக் கூடியது அல்லது நோய் ஏற்படுத்தக் கூடியது என்று நம்பப்படும் பொருளை உணவில் கலந்து ஒருவரை உண்ணச் செய்தல்;* mix a poison in one's food which supposedly acts as a magic charm and causes illness.

**மரை** பெ. (n.) *1. திருகாணி ஒரு பரப்பின் உள்ளே செல்வதற்காக நுனியிலிருந்து மேல்நோக்கிச் சுற்றிச்சுற்றி செல்லும் குழிந்த கோடு;* thread (of a bolt or nut). *2. திருகாணியை அது பொருத்தப் பட்ட பரப்பின் மறுபக்கத்தில் உறுதியாகப் பற்றியிருக்கும் சிறு வளையம்;* nut of the bolt.

**மல்குதல்** வி. (v.) *கண்ணில் கண்ணீர் நிறைதல்; ததும்புதல்;* (of tears) well up.

**மல்யுத்தம்** பெ. (n.) *முதுகு தரையில் படும்படி பிடிபோட்டுத் தள்ளி, எதிராளியை விழச் செய்யும் விளையாட்டு;* wrestling.

**மல்லாக்க** பெ. (n.) *முதுகு கீழாகவும் முகம் மேல் நோக்கியும் இருத்தல்;* lie on (one's) back; be supine.

**மல்லாடுதல்** வி. (v.) *ஒன்றைச் செய்து முடிக்கவும், நிறைவேற்றவும் களைப் படைதல்; அல்லாடுதல்;* struggle (to do something); carry on with difficulty.

**மல்லாத்துதல்** வி. (v.) *மல்லாந்து இருக்கும் படி செய்தல்;* make (someone) lie on (their) back.

**மல்லாந்து** பெ. (n.) *நிமிர்ந்து படுத்தல்;* lie on (one's) back; be supine.

**மல்லுக்கட்டுதல்** வி. (v.) *1. மற்போர் செய்தல்;* wrestle. *2. பேச்சில் சிக்கல் செய்தல், தேவையில்லாமல் ஒருவருடன் வாய்ச்சொல்லில் ஈடு படுதல்;* engage in a wrangle.

**மல்லுக்கு நிற்றல்** வி. (v.) *எதிர்த்துப் பேசி சண்டைபோடுதல், எதிர்க்கும் ஆளோடு போராடுதல்;* contend with (someone) struggle, wrestle (with).

**மலங்கமலங்க** வி.அ. (adv.) *குழப்பத்தோடு ஒன்றும் புரியாமல்;* puzzled; bewildered.

**மலர்ச்செண்டு** பெ. (n.) *பூச்செண்டு;* bouquet.

**மலர்வளையம்** பெ. (n.) *இறந்தவர்களுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் வைக்கும் மலர்களையும் இலைகளையும் வைத்துக் கட்டிய வளையம்;* wreath.

**மலைப்பழம்** பெ. (n.) *மலைப்பகுதியில் தடித்த தோலைக் கொண்ட, மிகவும் இனிப்பான சிறிய வாழைப்பழம்;* a kind of banana which has thick skin and is very sweet (cultivated in hilly areas).

**மலைப்பு** பெ. (n.) *1. விளங்கிக்கொள்ள முடியாமல் வியப்புற்ற நிலை;* astonishment; amazement; surprise. *2. செயலற்ற நிலை;* state of perplexity, dismay.

**மலையேற்றம்** பெ. (n.) *பொழுதுபோக்காகவோ அல்லது திறவினையாகவோ கடினமான பாறைகள் நிறைந்த மலைகளில் முறையான பயிற்சி, கருவிகள் ஆகியவற்றின் உதவியோடு ஏறுதல்;* mountaineering.

**மலையேறுதல்** வி. (v.) *1. ஒருவரைப் பிடித்திருக்கும் மருள் அவரை விட்டு நீங்குதல்;* (of a state of trance) pass. *2. பெரும்பாலும் இறந்த கால மற்றும் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் போன்றவை நடைமுறையில் இல்லாது போதல்;* become a thing of the past. *'எது சொன்னாலும் மக்கள் நம்பிவிடுவார்கள் என்ற காலம் மலையேறிவிட்டது'.*

**மலைவாசி** பெ. (n.) *மலைப் பகுதியில் வசிக்கும் பழங்குடியினர்;* people of tribal community living on the hills.

**மழமழப்பு** பெ. (n.) *உராய்வு ஏற்படுத்தக் கூடியதாக இல்லாமல் இருக்கும் வழவழப்பு;* smoothness.

**மழுக்குதல்** வி. (v.) *கூர்மை இழக்கச் செய்தல்;* make blunt.

**மழுங்கல்** பெ. (n.) *1. ஒன்றின் முனை, பரப்பு போன்றவை கூர்மையாக இல்லாத தன்மை;* bluntness. *'மழுங்கலான பாறை'. 2. அறிவு, மூளை போன்றவற்றைக் குறித்து வரும் போது நுட்பமாக அல்லது தெளிவாக ஆய்ந்தறிய இயலாத தன்மை; கூர்மையின்மை;* inability to think clearly. *'அவனுக்கு புத்தி மழுங்கலாகி விட்டது'.*

**மழுங்குதல்** வி. (v.) *1. கத்தி போன்றவற்றில் கூரிய முனை தேய்ந்து கூர்மை இழத்தல்;* become blunt or dull. *'முனை மழுங்கிப்போன கத்தி'. 2. இயல்பான, நல்ல நிலையிலிருந்து கெட்டுப்போதல்;* be blunted.

**மழுப்புதல்** வி. (v.) *உரிய விளக்கம் தராமல் நழுவுதல்;* be evasive.

**மழைக்காலம்** பெ. (n.) *வடகிழக்குப் பருவக்காற்று வீசும் ஐப்பசி, கார்த்திகை மாதங்கள்;* the Tamil months of Aippasi, Karthigai.

**மழையுடை** பெ. (n.) *உடல் முழுவதும் மழையில் நனையாமல் இருக்க அணிந்துகொள்ளும், செயற்கை இழையால் தயாரிக்கப்பட்ட நீளுடை;* rain coat.

**மளமள என்று** வி.அ. (adv.) *மடமட வென்ற பொருள்;* in a swift and brisk manner; quickly.

**மளிகை** பெ. (n.) *பலசரக்கு;* grocery.

**மற்றவர்** பெ. (n.) *குறிப்பிடப்படும் ஆளைத் தவிர்த்து இன்னொருவர்; குறிப்பிட்ட ஒன்றில் தொடர்பில்லாத ஒருவர்; பிறர்;* the other one.

**மறந்துபோய்க்கூட** வி.அ. (adv.) *தற்செயலாகக் கூட; தவறுதலாகக்கூட;* even inadvertently; even by mistake.

**மறித்தல்** வி. (v.) *ஒருவர் அல்லது ஒன்று மேற்கொண்டு போக முடியாதபடி*

தடுத்தல்; intercept; block (someone or a way).

**மறு ஒலிப்பதிவு** பெ. (n.) *திரைப்படம், தொலைக்காட்சித் தொடர் போன்ற வற்றில் படத்தொகுப்புக்குப் பிறகு, நடித்தவர்களின் குரல்களைப் பதிவு செய்யும் பணி;* re-recording.

**மறுதலித்தல்** வி. (v.) *1. நோய் முதலியவைத் திரும்ப வருதல்;* relapse. *2. தான் சொன்ன சொல்லையே மறுத்தல்;* turn down.

**மறுபடி** வி.அ. (adv.) இன்னொரு முறை; *திரும்ப;* again.

**மறுபிறவி** பெ. (n.) *1. அடுத்த பிறவி;* rebirth. *2. இறப்பில் இருந்து மீண்டு வரும் நிலை;* new life. *3. எழுச்சி மிக்க அல்லது ஏற்றம் மிக்க நிலை; புத்துயிர்;* rebirth.

**மறுபேச்சு** பெ. (n.) *1. ஒருவர் கூறியதற்கு மாறாகப் பேசும் பேச்சு;* argument. *2. மறுத்துப் பேசும் பேச்சு; எதிர்ப்பேச்சு;* talking back.

**மறுவாழ்வு** பெ. (n.) *இயல்பான வாழ்க்கையை இழந்தவர்களுக்குத் திரும்ப அமைத்துத் தரப்படும் வாழ்க்கை;* rehabilitation; resettlement.

**மறுவாழ்வுமையம்** பெ. (n.) *கைம் பெண்கள், குடிப்பழக்கத்துக்கு அடிமையானவர்கள், குமுகத்தில் நலிவடைந்தோர் போன்றோர்க்குச் சீரான வாழ்க்கையை அமைத்துக் கொள்ள உதவும் அமைப்பு;* rehabilitation centre. *'விதவைகள் மறுவாழ்வு மையம்'.*

**மறுவீடு** பெ. (n.) *மாப்பிள்ளை வீட்டில் நடக்கும் திருமணத்துக்குப் பிறகு பெண் வீட்டுக்கு முதல் முறையாக அழைத்துச் செல்லுதல்;* the custom of taking a married couple to the groom's or bride's place soon after the wedding.

**மறைப்பு** பெ. (n.) *ஒரு பக்கத்திலிருப்பதை மறு பக்கத்திலிருந்து பார்க்க முடியாதபடி அல்லது வெயில் நேரே அடிக்காதபடி ஏற்படுத்தும் தடுப்பு;* screen.

**மறைமுகம்** பெ. (n.) *நேரடியானதாகவோ வெளிப்படையானதாகவோ அல்லாமல் இருப்பது;* indirect.

**மறைவிடம்** பெ. (n.) *1. மறைந்திருப்பதற்குப் பயன்படும் இடம்;* hiding place. *2. கழிப்பறை;* lavatory.

**மன்றம்** பெ. (n.) *விழா, நிகழ்ச்சி போன்றவை நடத்துவதற்கு உரிய மண்டபம்;* hall or auditorium.

**மன்றாடுதல்** வி. (v.) *1. கெஞ்சி வேண்டுதல்; இறைஞ்சுதல்;* implore. *2. இறைவனிடம் வேண்டிக் கொள்ளுதல்;* prayer.

**மன்னாதிமன்னன்** பெ. (n.) *1. மன்னர்களுக்கு எல்லாம் மன்னன்;* king of kings. *2. மிகுந்த வல்லமையும் திறமையும் உடையவன்;* past master.

**மனஇறுக்கம்** பெ. (n.) *(சோகம். இழப்பு போன்ற) அதிர்ச்சி தரக்கூடிய நிகழ்ச்சிகளினால் ஏற்படும் பதற்றமான மனநிலை;* depression.

**மனஉளைச்சல்** பெ. (n.) *விரும்பத்தகாத பாதிப்பினால் ஒருவருக்கு மனத்தில் ஏற்படும் மனவமைதியற்ற இறுக்கமான நிலை;* mental agony.

**மனக்கசப்பு** பெ. (n.) *ஒன்றின் மேல் அல்லது ஒருவரின் மேல் வெறுப்புக் கலந்த மனக்குறை; மனத்தாங்கல்;* bitterness.

**மனக்கண்** பெ. (n.) *ஒரு காட்சியை அல்லது நிகழ்வை ஒருவர் கண்களால் அல்லாமல் தனது மனத்தினால் பார்ப்பதாக நம்பப்படுவது;* mind's eye.

**மனக்கணக்கு** பெ. (n.) *எழுதிப்பார்க்காமல் மனத்திற்குள் கணக்கிடும்*

*முறை;* ability to do basic arithmetical operations, mentally; mental arithmetic.

**மனக்குறை** பெ. (n.) *ஒருவரின் மீது அல்லது ஒன்றின் மீது ஒருவருக்கு உள்ள வருத்தம்; மனத்தாங்கல்;* grievance.

**மனக்கோட்டை** பெ. (n.) *எதிர்காலத்தைக் குறித்து மனத்தில் வளர்க்கும் கற்பனை;* daydream.

**மனச்சிதைவு** பெ. (n.) *ஒருவருடைய எண்ணமும் செயலும் இயல்பு நிலையிலிருந்து விலகி இருப்பதால் உண்டாகும் மனநோய்;* schizophrenia.

**மனச்சோர்வு** பெ. (n.) *ஊக்கமும் முயற்சியும் இழந்து எதிலும் முழு மனத்தோடு ஈடுபட முடியாத வெறுமையுணர்வு மிகுந்த நிலை;* boredom; ennui.

**மனசாட்சி** பெ. (n.) *சரி அல்லது தவறு என்று சுட்டிக்காட்டுவதும் தவறு செய்தால் குற்ற உணர்வை எழுப்புவதுமான உள்ளுணர்வு;* conscience.

**மனத்தாங்கல்** பெ. (n.) *ஒருவர் மீது ஒருவர் மனத்தில் கொள்ளும் குறை; ஒருவர் அடையும் வருத்தம்;* grievance; misunderstanding.

**மனத்தில் போட்டுக்கொள்ளுதல்** வி. (v.) *1. ஒருவர் தன்னிடம் கூறும் செய்தி, தரவல், விளக்கம் போன்றவற்றைப் பிறருக்குத் தெரிவிக்காமல் தன்னளவில் மட்டும் வைத்துக் கொண்டிருத்தல்;* keep to oneself; keep in mind. *2. பெரும்பாலும் எதிர்மறையில் முன்பு நடந்த நிகழ்ச்சியை நினைத்து வருந்துதல்;* feel offended; take something to heart.

**மனத்துணிவு** பெ. (n.) *ஒன்றைச் செய்வதற்கு மனத்திற் கொள்ளும் துணிவு;* courage.

**மனத்தைக் கல்லாக்கிக்கொள்ளுதல்** வி. (v.) *துயரம், அதிர்ச்சி போன்றவை ஏற்படுத்தும் சூழலின் வருத்தத்திற்கு உள்ளாகாதவாறு மனத்தைத் திடப்படுத்திக்கொள்ளுதல்; உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளுதல்;* harden one's heart.

**மனதறிய** வி.அ. (adv.) *தான் என்ன செய்கிறோம் என்பது குறித்த தன் உணர்வுடன் முழு உணர்வறிகை;* knowingly.

**மனதார** வி.அ. (adv.) *முழு மனத்தோடு; நிறைவாக;* whole heartedly.

**மனநலம் குன்றிய** பெ.அ. (adj.) *மனநலம் பிறழ்ந்த;* mentally ill.

**மனநிலை** பெ. (n.) *மனத்தில் உணர்வுகள் குறிப்பிட்ட வகையில் இருக்கும் நிலை;* state or frame of mind.

**மனநோய்** பெ. (n.) *மனநலம் குன்றிய நிலை;* mental illness.

**மனநோயாளி** பெ. (n.) *மனநலம் குன்றியவர்;* mental patient.

**மனப்பக்குவம்** பெ. (n.) *ஒருவருக்கு வாழ்க்கையில் ஏற்பட்ட பட்டறிவின் காரணமாக எதையும் மிகுந்த வருத்தத்திற்கு உள்ளாகாமல் எதிர் கொள்ளும் மனத்தின் தன்மை;* maturity.

**மனப்பாங்கு** பெ. (n.) *மனப்பான்மை;* attitude.

**மனப்பால் குடித்தல்** வி. (v.) *தான் விரும்பியபடி ஒன்று நடக்கும் என்று வீணாக நம்பிக்கையை அல்லது ஆசையை வளர்த்துக் கொள்ளுதல்;* be under an illusion; entertain (false hope).

**மனப்பான்மை** பெ. (n.) *ஒருவரிடம் குறிப்பிட்ட உணர்வு, எண்ணப் போக்கு போன்றவை குறிப்பிட்ட சூழலில் மேலோங்கியிருக்கும் நிலை;* mental attitude; spirit.

**மனப்பூர்வமான** பெ.அ. (adv.) *முழு மனத்தோடு கூடிய;* whole hearted.

**மனப்போக்கு** பெ. (n.) *மனம் செயல்படும் வகை;* attitude.

**மனம் அடித்துக்கொள்ளுதல்** வி. (v.) *இனம் புரியாத உணர்வினால் மனம் நிலை கொள்ளாமல் இருத்தல்; தவித்தல்;* be restless.

**மனம் குவிதல்** வி. (v.) *ஒருவர் தன் முழுக் கவனத்தையும் ஒருமுகப்படுத்துதல்;* concentrate.

**மனம் கோணுதல்** வி. (v.) *ஒருவருடைய செயலால் மற்றவருடைய மனம் வருந்துதல்;* be displeased.

**மனம் திரும்புதல்** வி. (v.) *ஒரு நிலையிலிருந்து வேறு நிலைக்கு மனம் மாறுதல்;* coming back to the fold.

**மனம் திறந்து** வி.அ. (adv.) *1. எதையும் மறைக்காமல் வெளிப்படையாக;* without reservation. *2. ஒளிவுமறைவு இல்லாமல்;* open heartedly.

**மனம் துணிதல்** வி. (v.) *மனதில் துணிவை ஏற்படுத்திக்கொண்டு விரும்பத் தகாத அல்லது கடினமான ஒன்றைச் செய்வதற்கு முயலுதல்;* have the heart (to do something); muster up courage.

**மனம்போல்** வி.அ. (adv.) *ஒருவர் விரும்பியபடியே; விருப்பம் போல் நினைத்தபடியே;* according to one's wishes; as (one) pleases; on impulse.

**மனம்போனபடி** வி.அ. (adv.) *1. பேச்சு, செயல் போன்றவை எந்தவகைக் கட்டுப்பாடும் இல்லாமல்;* without restraint. *2. விருப்பம் போல்;* without self control. '

**மனம்வாடுதல்** வி. (v.) *விரும்பத்தகாத ஒன்றைச் செய்வதற்கு ஒருவருடைய மனம் இடம் கொடுத்தல்;* have the heart to do on say (something) be willing to do.

**மனம்விட்டு** வி.அ. (adv.) *மனம் திறந்து பார்க்க.*

**மனம்வைத்தல்** வி. (v.) *ஒன்றைச் செய்வதற்கு அவற்றின் மீது அக்கறை அல்லது ஈடுபாடு காட்டுதல்;* give one's mind to (something).

**மனமார** வி.அ. (adv.) *முழு மனத்தோடு, மன நிறைவாக;* whole heartedly.

**மனமாற்றம்** பெ. (n.) *மனத்தில் கொண்டிருக்கும் கருத்து! எண்ணம் முதலியவற்றில் ஏற்படும் மாற்றம்;* changing one's mind, a change of heart.

**மனமுடைதல்** வி. (v.) *மன உறுதி இழத்தல்;* be heart broken, lose heart.

**மனமுவந்து** வி.அ. (adv.) *விரும்பி; மகிழ்ச்சியுடன்;* willingly; with pleasure; heartily.

**மனமொத்த** பெ.அ. (adj.) *ஒருவரை யொருவர் நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிற;* harmonious.

**மனவளர்ச்சி குன்றிய** பெ. (n.) *பிறவியிலிருந்தே மூளையின் இயல்பான செயல்பாடு குன்றிய;* mentally challenged.

**மனு** பெ. (n.) *1. வேலை முதலியவற்றுக்காக விண்ணப்பிக்கும் படிவம்;* application (entry) form. **2.** *குறை, முறையீடு போன்றவற்றைத் தெரிவித்து எழுதும் கடிதம்;* petition.

**மனுச்சொத்து** பெ. (n.) *வழக்கில் தொடர்புடைய சொத்து;* peoperty under litigation.

**மனுசெய்தல்** வி. (v.) *வேலை முதலியவற்றுக்கு மனு எழுதி அனுப்புதல் அல்லது தருதல்; விண்ணப்பித்தல்;* make an application, petition.

**மனுதாரர்** பெ. (n.) *விண்ணப்பம் அளிப்பவர்;* applicant, petitioner.

**மனுப்போடுதல்** வி. (v.) *மனு செய்தல் பார்க்க.*

**மனை** பெ. (n.) *வீடு கட்டுவதற்காக அளந்து பிரிக்கப்பட்டிருக்கும் நிலம்;* site (for a house).

**மனைபூசை** பெ. (n.) *மனையில் கட்டடம் கட்டும் வேலை தொடங்குவதற்கு நல்ல நாளைத் தேர்ந்தெடுத்து அந்த நாளில் இறைவனை வேண்டிச் செய்யும் பூசை;* inaugurating the construction work of a building with poojai invoking the blessings of god for successful completion.

**மனைமுகூர்த்தம்** பெ. (n.) *மனைபூசை பார்க்க.*

**மனையாள்** பெ. (n.) *மனைவி;* wife.

**மனையியல்** பெ. (n.) *வீட்டை நடத்துதல், குடும்பத்தினருக்குத் தேவையான ஊட்டச்சத்து உள்ள உணவு உருவாக்கல் முதலியவற்றை அறிவியல் முறையில் கற்றுத்தரும் படிப்பு;* home science.

**மனைவி** பெ. (n.) *திருமணம் புரிந்த இல்லாள்;* wife.

## மா

**மாக்கோலம்** பெ. (n.) *அரிசி மாவை நீரில் கரைத்து வரையும் கோலம்;* kolam drawn using the paste of rice flour.

**மாசமாய் இருத்தல்** வி. (v.) *கருவுற்று இருத்தல்;* be pregnant.

**மாட்டல்** பெ. (n.) *காதில் அணிந்திருக்கும் அணிகலனோடு இணைந்த, தலை முடியில் செருகிக் கொள்ளக்கூடிய தொடரி (சங்கிலி);* chain attached to the ear-stud to be hocked to the hair above.

**மாட்டுத்தாவணி** பெ. (n.) *மாடுகள் வாங்குவதற்கும் விற்பதற்குமான சந்தை;* cattle fair.

**மாட்டுதல்** வி. (v.) *1. செருகுதல், நுழைத்தல். திருகுதல் முதலியவற்றின் மூலமாக ஒன்றை மற்றொன்றில் பொருத்துதல்;* hand (on a peg, etc., fix, put something) on. *2. ஒன்றில் இருந்து வெளிவர இயலாத நிலைக்கு உள்ளாதல்; சிக்குதல்;* get stuck. *3. இக்கட்டான சூழலில் விடுபட முடியாதபடி ஆதல்; அகப் படுதல்;* get caught, get involved or entangled.

**மாட்டு வண்டி** பெ. (n.) *ஒரு மாடு அல்லது இரு மாடுகள் இழுத்துச் செல்லும், மரத்தால் செய்த வண்டி;* bullock cart.

**மாடக்குழி** பெ. (n.) *மாடம் பார்க்க.*

**மாடப்புறா** பெ. (n.) *சாம்பல் நிற உடலையும், பச்சையும், நீலமும் கலந்த பளப்பளப்பான கழுத்துப் பகுதியையும் கொண்ட ஒருவகைப் புறா;* blue rock pigeon.

**மாடம்** பெ. (n.) *1. விளக்கை வைப்பதற்கு ஏந்தாக சுவரில் உள்ள குழிவான சிறிய அமைப்பு;* small niche in the wall of a house to keep an oil lamp. *2. அரண்மனை, மாளிகை போன்ற வற்றில் பலகணிகளுடன் கூடிய மாடிப்பகுதி;* upper storey of a (palace) with (lattice) windows.

**மாடமாளிகை** பெ. (n.) *அரண்மனை போன்ற பெரிய வீடு;* stately house; mansion.

**மாடாக உழைத்தல்** வி. (v.) *தகுந்த பலன் இல்லாதபோதும் துன்பப்பட்டுக் கடுமையாக உழைத்தல்;* work hard (used when one does not get due recognition for one's work); toil and moil.

**மாடி** பெ. (n.) *தரை மட்டத்தில் அமைந்திருக்கிற தளத்துக்குமேல் இருக்கும் தளம்;* upper floor; storey; upstairs.

**மாடு** பெ. (n.) *1. உழுதல், வண்டி இழுத்தல் போன்றவற்றுக்குப் பயன் படும் ஆணினத்தையும், பால்*

*தரக்கூடிய பெண்ணினத்தையும் உள்ளடக்கிய கொம்புடைய வீட்டு விலங்கின் பொதுப்பெயர்;* common name for cow, ox and buffalo. *2. சற்றுப் பெரிய அளவில் இருக்கும் சோழி;* large shell.

**மாத்திரத்தில்** இ.சொ. (part.) *(பெயரெச்சத்தை அடுத்து வரும்போது ஒரு செயல் நிகழ்ந்த மறுகணத்தில்) என்ற பொருளில் பயன்படுத்தும் இடைச்சொல்; உடன்;* particle used in the sense of "no sooner than" 'at onece'.

**மாத்திரம்** பெ. (n.) *எம்மாத்திரம், எந்த மாத்திரம் என்ற தொடர்களில் ஒன்றுடனோ ஒருவனுடனோ ஒப்பிடும்போது குறிப்பிடப்படுவதன் அல்லது குறிப்பிடப்படுபவரின் நிலை. அளவு போன்றவை மிகவும் எளிமை என்ற பொருளில் பயன்படுத்தப்படும் இடைச்சொல்; (எந்த) மூலைக்கு;* 'particle used in the sense of (of what) consequence'.

**மாதாந்தர** பெ.அ. (adj.) *மாதாந்திர பார்க்க.*

**மாதாந்திர** பெ. (n.) *ஒவ்வொரு மாதத்திற்கும் உரிய;* monthly. '*மாதாந்திரச் செலவு*'.

**மாநகரம்** பெ. (n.) *பத்து இலட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் தொகை கொண்ட நகரம்;* city. '*மாநகரக் காவல்*'.

**மாநகராட்சி** பெ. (n.) *மாநகரத்தைப் பேணும் உள்ளாட்சி அமைப்பு;* corporation of a city. '*சென்னை மாநகராட்சி*'.

**மாநாடு** பெ. (n.) *உறுப்பினர்களும் பார்வையாளர்களும் பெருமளவில் கலந்துகொள்ளும் கூட்டம்;* conference. '*உலகத் தமிழ் மாநாடு*'.

**மாநிலங்களவை** பெ. (n.) *சட்டமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களோடு குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்டவர்களையும் உறுப்பினர்களாகக் கொண்ட, இந்தியப் பாராளுமன்றத்தின் இரு அவைகளில் ஒன்று;* council of states (upper house of the Indian Parliament); (in India) Rajya sabha.

**மாநிலம்** பெ. (n.) *இந்தியாவில் மொழி அடிப்படையில் பிரிக்கப்பட்ட நிலப்பகுதி;* (in India) state (organized on the basis of the language predominately spoken there).

**மாநிறம்** பெ. (n.) *மாந்தர்களின் உடல் நிறத்தைக் குறிப்பிடும்போது சிவப்பு என்றோ கறுப்பு என்றோ சொல்ல முடியாத, இரண்டுக்கும் இடைப்பட்ட நிறம்;* complexion that is neither fair nor dark.

**மாப்பிள்ளை** பெ. (n.) *1. மணமகன்;* bridegroom. *2. மருமகன்;* son-in-law. *3. அத்தையின் அல்லது மாமாவின் மகளையோ மனைவியின் தம்பியையோ உடன்பிறந்தவளின் கணவனையே குறிப்பிடும் சொல்;* a term referring to the son of one's paternal aunt or of maternal uncle or to the younger brother of one's wife.

**மாப்பிள்ளை அழைப்பு** பெ. (n.) *திருமணம் நடக்கும் இடத்துக்கு மாப்பிள்ளையை உரிய மதிப்புடன் ஊர்வலமாக அழைத்து வரும் சடங்கு;* the ceremony of receiving and taking the bridegroom in procession to the wedding.

**மாப்பிள்ளை எடுத்தல்** வி. (v.) *பெரும்பாலும் தன் உறவுக்குள் அல்லது சாதிக்குள் மணமகனைத் தேர்ந்தெடுத்தல்;* choose a bride groom (mostly within one's circle of relations or community).

**மாப்பிள்ளைத் தோழன்** பெ. (n.) *திருமணத்தின்போது மாப்பிள்ளைக்குத் துணையாக இருக்கும். மணமகளின் உடன்பிறந்தோன் அல்லது மண*

*மகளின் நண்பன்;* best man.

**மாப்பிள்ளை முறுக்கு** பெ. (n.) *மற்றவர் தம்மைப் பற்றி உயர்வாகக் கருத வேண்டும் என்பதற்காக ஒருவர் பழகுவதில் காட்டும் இறுக்கம்;* affected airs of superiority.

**மாம்பழக்கட்டு** பெ. (n.) *புடவை இடுப்பில் இறுக்கமாக நிற்பதற்காகக் கொசுவங்களை மடித்துச் செருகிக் கட்டும் முறை;* the manner of wearing a saree by rolling the pleats at the waist.

**மாமன்** பெ. (n.) *மாமா;* uncle. *'இது என் மாமா வீடு'.*

**மாமனார்** பெ. (n.) *கணவனுடைய அல்லது மனைவியுடைய தந்தை;* father in law.

**மாய்ச்சல்** பெ. (n.) *சோம்பல்;* laziness. *'ஒரே மாய்ச்சலாக இருக்கிறது'.*

**மாய்தல்** வி. (v.) *1. நேர்ச்சி, போர் முதலியவை காரணமாக இறத்தல்; உயிர்விடுதல்;* perish, die (in an accident, etc.). *2. ஒன்றைப் பற்றிய தனது வியப்பு, குறை போன்றவற்றைத் திரும்பத் திரும்பச் சொல்லி அசந்துபோதல்;* wallow in regret, surprise, etc. *3. அழித்தல்;* destroy, devastate.

**மாய்ந்து மாய்ந்து** வி.அ. (adv.) *மிகவும் களைப்படைந்து ஆற்றல் முழுவதையும் செலவழித்து, விரைவாக;* using all one's strength and energy.

**மாய்மாலம்** பெ. (n.) *1. பிறர் இரக்கத்தைப் பெறுவதற்காக உண்மை நிலையை மறைத்துச் செய்யும் நடிப்பு (பாசாங்கு);* pretension, deceit. *2. ஏமாற்று வேலை;* deceit.

**மாயமந்திரம்** பெ. (n.) *நம்ப முடியாததையோ எளிதின்மை செயல்களையோ நிகழ்த்தும் நுண்ணுத்தி;* magic, sorcery.

**மாயமாகுதல்** வி. (v.) *காணாமல் போதல்;* disappear.

**மார்தட்டுதல்** வி. (v.) *1. பிறரிடம் இல்லாதது தன்னிடம் இருக்கிறது என்றோ பிறர் செய்ய முடியாததைத் தன்னால் செய்ய முடியும் என்றோ மற்றவர் முன்னிலையில் பெருமையுடன் கூறிக்கொள்ளுதல்;* boast, brag. *2. ஆரவாரமாகப் பேசுதல்;* indluge in rhetoric.

**மாரடித்தல்** வி. (v.) *1. துக்கத்தை வெளிப்படுத்தும் வகையில் மார்பில் கைகளால் பலமாக அடித்துக் கொள்ளுதல்;* beat (one's) breast (by way of mourning the dead). *2. தொல்லை தருவதாகக் கருதும் ஒன்றை அல்லது ஒருவரை வைத்துக் கொண்டு அல்லது விருப்பம் இல்லாத வேலையைச் செய்து கொண்டு மிகவும் துன்பப்படுதல்;* be obliged to stick it out.

**மாராப்பு** பெ. (n.) *மார்பை மறைக்கும் புடைவையின் ஒரு பகுதி;* the portion of a saree that is drawn over the breast.

**மாலை சூட்டுதல்;** வி. (v.) *மாலையிடுதல் பார்க்க.*

**மாலை சூடுதல்** வி. (v.) *திருமணம் செய்துகொள்ளுதல்;* marry (by garlanding).

**மாலைநேரக் கல்லூரி** பெ. (n.) *நண்பகல் (மதியம்) தொடங்கி மாலை வரை இயங்கும் கல்லூரி;* (of an educational institution such as a) college functioning between noon and early evening (in India) evening college.

**மாலைபோடுதல்** வி. (v.) *கழுத்தில் மணி மாலை அல்லது துளசி மாலை அணிந்து குறிப்பிட்ட காலம் வரை நோன்பு (விரதம்) மேற்கொள்ளுதல்;* observe a period of strict austerities prior

to going on a pilgrimage, wearing a garland as a token of this.

**மாலை மரியாதை** பெ. (n.) *ஒருவரை வரவேற்கும்போது மாலையிடுதல் போன்ற மதிப்பின் பொருட்டு செய்யும் மரபு வழக்கம்;* the custom of honouring something (especially by garlanding).

**மாலை மாலையாக** வி.அ. (adv.) *கண்ணீர் பெருமளவில் தொடர்ந்து;* (of tears) copiously.

**மாலை மாற்றுதல்** வி. (v.) *திருமணத்தின்போது மணமகனும் மணமகளும் ஒருவருக்கொருவர் மாலையை மாற்றி அணிவித்துக் கொள்தல்;* (of the bride and the groom) exchange garlands (as a wedding ritual).

**மாலையிடுதல்** வி. (v.) *(மாலை போட்டு) திருமணம் செய்து கொள்ளுதல்;* marry.

**மாலையும் கழுத்துமாக** வி.அ. (adv.) *திருமணக் கோலத்தில்;* in the bridal constume (i.e., as a bride).

**மாவட்டம்** பெ. (n.) *ஒரு மாநிலத்தில் நிர்வாக ஏந்துக்காக மக்கள்தொகை அடிப்படையில் பிரிக்கப்பட்டிருக்கும் பல வட்டங்கள் கொண்ட பிரிவு;* (administrative) district.

**மாவடு** பெ. (n.) *1. ஊறுகாய் செய்வதற்காகப் பயன்படுத்தும் பிஞ்சு மாங்காய்;* very small tender mango (used as pickle). *2. மாம்பிஞ்சுகளை உப்பு நீரில் ஊற வைத்துத் தயாரிக்கும் ஊறுகாய்;* pickle of māvaḍu.

**மாவரி** பெ. (n.) *மாவு அரிக்கும் சல்லடை;* sieve.

**மாவிளக்கு** பெ. (n.) *வெல்லம் சேர்த்துப் பிசைந்த அரிசி மாவில் நெய் ஊற்றித் திரியிட்டு ஏற்றும் இறைவிளக்கு;* lamp shaped from a dough of rice powder and raw sugar and lighted in worship.

**மாவு** பெ. (n.) *1. அரிசி, கோதுமை, கேழ்வரகு போன்ற தவசங்களைக் காயவைத்து அரைப்பதால் கிடைக்கும் தூள்;* flour (of some grains). *'கோதுமை மாவு'. 2. ஊற வைத்து அரைக்கப்பட்ட அரிசி, உளுந்து முதலியவை;* dough of wheat, etc., (to prepare chapathi, etc.,). *'தோசை மாவு நன்றாகப் பொங்கி யிருக்கிறது'.*

**மாவுக்கட்டு** பெ. (n.) *எலும்பு முறிந்த இடத்தில் மருந்து கலந்த மாவைப் பூசிப் போடப்படும் கெட்டியான வெள்ளை நிறக் கட்டு;* cast.

**மாவுச்சத்து** பெ. (n.) *அரிசி, கோதுமை, சோளம், உருளைக்கிழங்கு முதலியவற்றில் உள்ள உடல் உழைப்புக்குத் தேவையான ஆற்றலைத் தரும் சத்துப்பொருள்;* carbohydrate; starch.

**மாவுப்பூச்சி** பெ. (n.) *இலைகளில் உள்ள சாற்றை உறிஞ்சிப் பயிர் வளர்ச்சிக்கு இடையூறு ஏற்படுத்துவதும் தடிமனாகவும் உருண்டையாகவும் இருப்பதுமான ஒருவகை வெள்ளை நிறப் பூச்சி;* mealy bug.

**மாள்தல்** வி. (v.) *1. இறத்தல்; சாதல்;* die. *'காவலர்களின் துப்பாக்கிச் சூட்டில் நான்கு பேர் மாண்டனர். 2. நீங்குதல்;* (in the negative) end. *'மாளாத் துயர்'.*

**மாளிகை** பெ. (n.) *பெரிய பரப்பளவில் நிறைய அறைகளைக் கொண்ட பெரிய இல்லம்;* palace; mansion. *'குடியரசுத் தலைவர் மாளிகை'.*

**மாற்றம்** பெ. (n.) *1. ஒரு தன்மை, கூறு, வடிவம், நிலைமை முதலியவை முற்றிலுமாகவோ குறிப்பிடும் அளவுக்கோ மாறும் அல்லது மாற்றப்படும் நிலை;* change. *2. மாற்றல்;* transfer.

**மாற்றல்** பெ. (n.) *ஒரு பணியிடத்திலிருந்து மற்றொரு பணியிடத்துக்கு அல்லது ஒரு அலுவலகத்திலிருந்து மற்றொரு அலுவலகத்துக்குச் செல்லும் அல்லது செல்லவைக்கும் நிர்வாக ஏற்பாடு;* transfer (of an employee to another place or post).

**மாற்றாந்தாய்** பெ. (n.) *தந்தை இரண்டாவது திருமணம் செய்து கொள்வதன் மூலம் தாயின் இடத்துக்கு வரும் பெண் ;* step mother.

**மாற்றாந்தாய் மனப்பான்மை** பெ. (n.) *சமமாகக் கருதி நடத்தப்பட வேண்டியவர்களில் தான் விரும்பிய வருக்கு மட்டும் எல்லா உரிமைகளும் அளித்து, விரும்பாதவரை முற்றாக ஒதுக்கும் போக்கு ; ஒருதலைச்சார்பு நடத்தை;* stepmotherly attitude, partiality.

**மாற்றான்** பெ. (n.) *1. பகைவன்; எதிரி;* foe. *2. மற்றவர், பிறர்;* neighbour; other person.

**மாற்றிமாற்றி** வி.அ. (adv.) *அடுத்தடுத்து, தொடர்ந்து;* one after the other, continuously.

**மாற்றுதல்** வி. (v.) *1. திருத்துதல், நீக்குதல், சேர்த்தல் முதலிய செயல்களின் மூலம் ஒன்றையோ ஒருவரையோ புதிய நிலைக்கு வருமாறு செய்தல்;* change. *2. ஒரு பொருள் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்கு அல்லது ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு கொண்டு வருதல்;* displace, exchange, transfer. *3. காசோலையை வங்கியில் கொடுத்துப் பணம் பெறுதல்;* encash (a cheque).

**மாற்று** பெ. (n.) *1. ஒருவருக்கு அல்லது ஒன்றிற்கு ஈடு, வேறு;* replacement, alternative, substitute. *'மாற்றுப் பேருந்து'*. *2. தங்கம், வெள்ளி ஆகிய மாழைகளின் கலப்பற்ற தூய்மை நிலை;* (of gold, etc.,) degree of fineness.

**மாற்று அறுவைச் சிகிச்சை** பெ. (n.) *உறுப்பு மாற்று அறுவை மருத்துவம்;* organ transplantation.

**மாற்று ஒற்றையர் ஆட்டம்** பெ. (n.) *முதல் ஆட்டத்தில் ஆடியவர் மற்றொரு ஆட்டத்தின் எதிரணி ஆட்டக்கார ரோடும் மற்றொரு ஆட்டத்தில் ஆடியவர் முதல் ஆட்டத்தின் எதிரணி ஆட்டக்காரரோடும் விளையாடும் ஏற்பாடு;* (in games) reverse singles.

**மாற்றுச் சான்றிதழ்** பெ. (n.) *பள்ளி, கல்லூரி போன்ற கல்வி நிறுவனங் களை விட்டுச் செல்லும்போது ஒரு மாணவரின் பிறந்த தேதி, படிப்பு, தாய் தந்தையின் பெயர், மதம் முதலிய தரவல்களைத் தரும் சான்றிதழ்;* certificate given to a student at the time of leaving school or college (in India) transfer certificate.

**மாற்று மதிப்பு** பெ. (n.) *ஒரு நாட்டின் பணத்துக்கு ஈடாக மற்றொரு நாட்டின் பண மதிப்பு;* exchange value.

**மாற்றுமுறை** பெ. (n.) *வழக்கமான முறை களிலிருந்து மாறுபட்டு இருக்கும் முறை;* alternative. *'மாற்று முறை மருத்துவம்'*.

**மாறாக** வி.அ. (adv.) *ஒன்றுக்கு எதிரான அல்லது முரணான வகையில்;* on the contrary. *'நான் நினைத்ததற்கு மாறாக நடந்திருக்கிறது'*.

**மாறான** பெ.அ. (adj.) *ஒன்றுக்கு எதிரான அல்லது முரணான;* contrary to. *'எதிர்பார்க்கும் ஒழுங்குக்கு மாறான நடத்தை'*.

**மாறி** பெ. (n.) *கணக்கிலோ சமன்பாட்டிலோ மாறக்கூடிய மதிப்பைக் கொண்ட உறுப்பு;* (in mathematics) a variable.

**மாறிமாறி** வி.அ. (adv.) *1. முதலில் ஒன்று, பிறகு மற்றொன்று என்ற முறையில்*

தொடர்ந்து; அடுத்தடுத்து; one and then the other, alternately. *2.* *மீண்டும் மீண்டும், திரும்பத்திரும்ப;* again and again, repeatedly.

**மாறுகண்** பெ. (n.) *பார்வை சற்று விலகி உள்ள நிலை;* squint.

**மாறுதல்** வி. (v.) *1.* *இருக்கும் நிலையில் இருந்து புதிய நிலைக்கு வருதல்;* change, adapt (to new conditions, etc.,) *2.* *ஓர் இடத்திலிருந்து நீங்கி வேறோர் இடத்துக்கு வருதல்;* move out, exchange. *3.* *மாற்றம், வேறுபாடு;* difference (due to some change).

**மாறுபடுதல்** வி. (v.) *1.* *மாற்றம் தெரியும் படி காணப்படுதல்;* be different, differ. *2.* *மாற்றம் பெறுதல்;* be altered, change.

**மாறுபாடு** பெ. (n.) *1.* *மாற்றம், மாறுதல்;* change. *2.* *வேறுபட்ட தன்மை, வேறுபாடு;* difference.

**மாறுவேடப் போட்டி** பெ. (n.) *மாறு வேடத்தில் வந்து நடித்துக்காட்டும் பலரில் சிறப்பாகச் செய்தவரைத் தேர்ந்தெடுக்கும் போட்டி;* fancy dress competition.

**மாறுவேடம்** பெ. (n.) *தான் யார் என்று பிறர் கண்டுபிடிக்க முடியாத வகையில் உண்மையான தோற்றத்தை மறைத்துப் போட்டுக்கொள்ளும் வேடம்;* disguise (to conceal one's identity).

**மானத்தைக் கப்பலேற்றுதல்** வி. (v.) *ஒருவரின் மதிப்பையும் உயர்வையும் கெடுத்தல்;* bring disgrace upon.

**மானத்தை வாங்குதல்** வி. (v.) *ஒருவருடைய மதிப்பையும் புகழையும் இழக்கச் செய்தல்;* cause (someone) to lose his reputation.

**மானபங்கம்** பெ. (n.) *1.* *மதிப்புக்கும் புகழுக்கும் ஏற்படும் குறைவு;* disgrace, dishonour. *2.* *ஒரு பெண்ணின் மானத்துக்கு இடையூறு ஏற்படுத்தும் வகையிலான செயல்;* molestation.

**மானம்** பெ. (n.) *தன் மதிப்பின் அடிப்படையில் ஒருவர் தன் மீது கொண்டிருக்கும் அல்லது பிறரிடத்தில் தனக்கு ஏற்படுத்திக் கொண் டிருக்கும் மதிப்பும் புகழும்;* honour, dignity. '*மானமுள்ள எவனும் இப்படியொரு செயலைச் செய்ய மாட்டான்*'.

**மானம் கப்பலேறுதல்** பெ. (n.) *ஒருவருடைய புகழும் மதிப்பும் குமுகாயத்தில் கெடுதல் அல்லது குறைந்துபோதல்;* be disgraced.

**மானாவாரி** பெ. (n.) *வேளாண்மைக்கு மழை நீரை மட்டுமே நம்பியிருப்பது, மழை பெய்து விளையும் விளைச்சல்;* dependent on rain.

# மி

**மிகுதல்** வி. (v.) *1.* *அளவில், எண்ணிக்கையில் அதிகமாதல், அதிகரித்தல்;* increase (in size, number). '*வீட்டில் கரப்பான் பூச்சிகள் மிகுந்துவிட்டன*'. *2.* *குறிப்பிட்ட அளவைத் தாண்டிச் செல்லுதல் அல்லது கடந்து செல்லுதல்;* exceed. *3.* *எழுத்து இரட்டித்தல்;* (of a letter) be doubled or germinated.

**மிகுதி** பெ. (n.) *எண்ணிக்கை, தன்மை, அளவு முதலியவற்றில் கூடுதலாக இருக்கும் நிலை;* a considerable number, a large number, excess, more.

**மிகுந்த** பெ.அ. (adj.) *அதிக அளவிலான, அதிக;* a word used to express the excess of something, extreme, much.

**மிகுவித்தல்** வி. (v.) *அதிகப்படுத்துதல்;* increase.

**மிகை** பெ. (n.) *1.* *உண்மையாக அல்லது இயல்பாக உள்ளதைவிட அதிகமாக உள்ள தன்மை;* exaggeration, excess, too

much that which is overdone. *2.* *கூடுதல், மிகுதி;* excess, surplus.

**மிகைப்படுத்துதல்** வி. (v.) *இயல்பாகவோ உண்மையாகவோ இருக்கும் தன்மை, அளவு முதலியவற்றை அதிகமாக ஆக்குதல்;* exaggerate.

**மிச்சப்படுத்துதல்** வி. (v.) *நேரம், மின்ஆற்றல், பணம், எரிபொருள் போன்றவற்றைத் தேவையில்லாமல் செலவு செய்வதைத் தவிர்ப்பதன் மூலம் சேமித்தல்;* save.

**மிச்சம்** பெ. (n.) *1. எஞ்சியிருப்பது, மீதி;* (what is) left over. *2. விடப்பட்டது, நிலுவை;* remainder. *3. நிறைய;* many.

**மிச்சம்பிடித்தல்** வி. (v.) *மிச்சப்படுத்துதல்;* save (money).

**மிச்சம் மீதி** பெ. (n.) *மிகக் குறைந்த அளவில் எஞ்சியிருப்பது;* left overs. remains (of something).

**மிஞ்சி** பெ. (n.) *மெட்டி பார்க்க.*

**மிஞ்சிப் போனால்** வி.அ. (adv.) *கணிக்கும் போது அதிக வரம்பாக வைத்துக் கொண்டால்;* at the most.

**மிஞ்சுதல்** வி. (v.) *1. தேவை பயன்பாடு முதலியவை போக அதிகமாகவோ மீதமாகவோ இருத்தல்;* be left over, remain. *2. ஒன்றின் விளைவாக எதிர்பாராததோ விரும்பத் தகாததோ கிடைத்தல்;* be the net result. *3. கட்டுப்படுத்த முடியாத அளவுக்குப் போதல், மீறுதல்;* go out of control, defy.

**மிட்டாய்** பெ. (n.) *சருக்கரைப் பாகை அல்லது வெல்லப் பாகைக் கட்டியாக்கிச் செய்யும் மணமும் சுவையும் மிகுந்த தின்பண்டம்;* sweetmeat made of treacle, confectionery.

**மிட்டாய்க்கடை** பெ. (n.) *இன்னுருண்டை (லட்டு), இன்குழலி (ஜாங்கிரி) போன்ற இனிப்புப் பண்டங்களையும் காரத் தின்பண்டங்களையும் விற்பனை செய்யும் கடை;* sweet stall.

**மிடறு** பெ. (n.) *1. மடக்கு;* a mouthful. *2. தொண்டைப் பகுதி, கண்டம்;* larynx; throat.

**மிடா** பெ. (n.) *தண்ணீர் வைக்கப் பயன்படும் பெரிய மண் பானை;* large earthen pot.

**மிடுக்கு** பெ. (n.) *1. உடல்வாகு கரணியமாக அமையும் தோற்றம்;* smart (in appearance or bearing). *2. இளமைத் துடிப்பு;* (youthful) vitality.

**மிதத்தல்** வி. (v.) *1. நீர்மத்தின் மேற்பரப்பில் ஒன்று அல்லது ஒருவர் மூழ்காமல் இருத்தல் அல்லது கிடத்தல்;* float. *2. கீழ் இறங்காமல் காற்றின் அல்லது விண்வெளியில் இருத்தல்;* be borne (in the air).

**மிதப்பு** பெ. (n.) *வெற்றி, செல்வம், அதிகாரம் போன்றவற்றால் ஒருவரது செயல்களில் காணப்படும் திமிரும் மதியாமை கலந்த போக்கும்;* eruphoria, elation.

**மிதமிஞ்சுதல்** வி. (v.) *அளவுக்கு அதிகமாதல், அளவு கடந்து போதல்;* be immoderate, go beyond reasonable limits, be in excess.

**மிதவை** பெ. (n.) *1. நீரில் மிதந்து செல்லக் கூடிய தெப்பம் போன்ற அமைப்பு;* raft or raft like structure which floats on water, float. *2. பேரிடர் இடங்களைச் சுட்டிக்காட்டுவதற்காக மிதக்க விடப்படும் பொருள்;* buoy.

**மிதித்தல்** வி. (v.) *பாதத்தின் அடிப்பகுதி படும் வகையில் ஒன்றின் மீது விரைவுடன் காலை இறக்குதல்;* step on, tread on, stamp on.

**மிதியடி** பெ. (n.) *1. கயிறு, நார் போன்ற வற்றான சொர சொரப்பான*

*பரப்புடைய சிறு விரிப்பு;* doormat. *2. செருப்பு, காலணி;* sandal, footwear.

**மிதிவண்டி** பெ. (n.) *கால்களால் மிதித்து இயக்கப்படும் ஈருருளி (சைக்கிள்);* bicycle.

**மிதிவெடி** பெ. (n.) *கண்ணிவெடி;* landmine.

**மிரட்டல்** பெ. (n.) *செய்கையால், பேச்சால் அச்சமுறுத்தும் அல்லது எச்சரிக்கும் செயல்;* threat, intimidation.

**மிரட்டுதல்** வி. (v.) *அச்சப்பட வைத்தல், அச்சுறுத்துதல், எச்சரித்தல்;* threaten (by word or act) intimidate.

**மிரள்தல்** வி. (v.) *அச்சத்தால் கலக்க மடைதல், கட்டுப்பாடு இழத்தல்;* get frightened or scared.

**மிரளமிரள** வி.அ. (adv.) *மிரட்சியோடு இங்குமங்கும் பார்த்தபடி;* (to look at something or someone) in perplexity.

**மிருகக்காட்சிசாலை** பெ. (n.) *உயிரியல் பூங்கா;* zoo.

**மிழற்றுதல்** வி. (v.) *மழலையாகப் பேசுதல்;* to prattle.

**மிளகாய்** பெ. (n.) *1. பச்சைமிளகாய்;* green chilli. *2. மிளகாய் காய்க்கும் செடி;* the plant that bears chilli. *3. காய்ந்த மிளகாய்;* dried chilli.

**மிளகாய்த் தூள்** பெ. (n.) *1. காய்ந்த மிளகாயை அரைத்த பொடி;* powder made of red chilli. *2. சாம்பார்ப்பொடி;* a powder made of red chilli, coriander seeds, etc., used in preparing some food items.

**மிளகாய்ப்பொடி** பெ. (n.) *மிளகாய் வற்றலை வறுத்து இடித்துப் பெருங் காயம், கடலைப் பருப்பு போன் றவை சேர்த்து உருவாக்கும் தூள்;* chilli powder with other ingredients.

**மிளகாய் வற்றல்** பெ. (n.) *காய்ந்த மிளகாய்;* dried chilli.

**மிளகுக் குழம்பு** பெ. (n.) *மிளகையும் வறுத்த பருப்பையும் அரைத்துத் தயாரிக்கப்படும் குழம்பு;* a sauce for food made with pepper and fried dhal.

**மிளகு ரசம்** பெ. (n.) *பருப்பைச் சேர்க் காமல் புளிக்கரைசலில் மிளகையும், சீரகத்தையும் பொடித்துப் போட்டு உருவாக்கும் ஒருவகைக் காரமான சாறு (ரசம்);* a kind of soup prepared by adding powdered pepper, cumin seeds, etc.,

**மிளிர்தல்** வி. (v.) *1. ஒளிர்தல்;* glitter. *2. சிறப்பாக வெளிப்படுதல், பளிச் சிடுதல்;* sparkle.

**மின் அழுத்தம்** பெ. (n.) *மின் கம்பிகளில் பாயும் மின்சக்தியின் ஆற்றல்;* voltage.

**மின் ஆளுமை** பெ. (n.) *ஒரு அமைப்பின் அனைத்துப் பிரிவுகள், கிளைகள் ஆகியவற்றைக் கணிப்பொறி மூலம் இணைத்து, எல்லாச் செயல்பாடு களையும் இணையத்தின் வழியாக நடத்தும் நிர்வாகம்;* e-governance.

**மின் எரியூட்டி** பெ. (n.) *திடக் கழிவுகள் அல்லது பிணம் போன்றவற்றை எரிக்கப் பயன்படும் மின்கருவி;* incinerator.

**மின் கம்பி** பெ. (n.) *மின்சாரத்தைக் கடத்தும் கம்பி;* wire to carry electric current.

**மின் கலம்** பெ. (n.) *வேதியியல் முறையில் மின்சாரம் உருவாகும் அமைப்பு;* dry cell, battery.

**மின் தடை** பெ. (n.) *தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் மின்னோட்டம் இடையே நின்றுவிடுதல்;* power failure.

**மின்திருட்டு** பெ. (n.) *முறையான மின் இணைப்பைப் பெறாமல் மின்சாரத்தைப் பயன்படுத்தும் சட்ட முரண் செயல்;* power - theft.

**மின் நிலையம்** பெ. (n.) *மின்சாரத்தை உருவாக்கும் இடம்;* power plant.

**மின் மயானம்** பெ. (n.) *மின் எரியூட்டி பிணங்களை எரிக்கும் மயானம்;* electric crematorium.

**மின் மாற்றி** பெ. (n.) *மின்னோட்டத்தின் அளவைக் குறைக்கவோ அதிகரிக்கவோ பயன்படும் மின்கருவி;* transformer.

**மின்மினிப்பூச்சி** பெ. (n.) *இருட்டில் பறக்கும்போது ஒளிவிட்டு மின்னும் உறுப்பை வால் பகுதியில் கொண்ட ஒரு சிறு பூச்சி;* glow - worm, firefly.

**மின்விசிறி** பெ. (n.) *மின்ஆற்றலின் மூலம் இறக்கைகளைச் சுழல வைத்துக் காற்று வீசச் செய்யும் கருவி;* electric fan.

**மின்விளக்கு** பெ. (n.) *மின்னாற்றலால் ஒளிரும் விளக்கு;* electric light.

**மின்வெட்டு** பெ. (n.) *மின்சாரம் குறையும் காலத்தில் குறிப்பிட்ட நேரத்துக்கு மின்சார வழங்கீடு நிறுத்தும் செயல்;* power cut (as a means at regulating the supply of electricity when there is shortage).

**மின்வேலி** பெ. (n.) *மின்சாரம் பாயும் முள் கம்பி வேலி;* wire fence charged with electricity. '*மின்வேலி அமைப்பது சட்டப்படி குற்றம் ஆகும்*'.

**மின்னஞ்சல்** பெ. (n.) *இணையத்தின் மூலம் ஒரு கணிப்பொறியிலிருந்து மற்றொரு கணிப்பொறிக்குத் செய்தி அனுப்பும் முறை;* e-mail. '*மின்னஞ்சல் மூலம் உங்கள் விண்ணப்பத்தை எங்களுக்கு அனுப்புங்கள்*'.

**மின்னல்** பெ. (n.) *வானில் நொடிப் பொழுதில் மிகுந்த விரைவுடன் பரவி மறையும், இடியுடன் கூடிய ஒளிப் பிழம்பு;* lightning.

**மின்னழுத்தம்** பெ. (n.) *மின்னோட்டத்தின் இரு முனைகளுக்கு இடையே காணப்படும் மின் வேறுபாடு;* potential.

**மின்னாக்கி** பெ. (n.) *மின்சாரத்தை உருவாக்கும் கருவி;* generator.

**மின்னிதழ்** பெ. (n.) *இணையத்தில் வெளியிடப்படும் இதழ்;* e-magazine, e-journal. '*அகரமுதலியின் 'சொல்வயல்' எனும் மின்னிதழ் திங்கள்தொரும் வந்து கொண்டிருக்கின்றது*'.

**மின்னுதல்** வி. (v.) *1. மின்னல் பளீரெனத் தோன்றுதல்;* (of lightning) flash. '*மின்னுகிறதே மழை வரும் போலிருக்கிறது*'. *2. ஒளிபட்டுப் பளபளத்தல், விட்டுவிட்டு ஒளிர்தல்;* shine, glitter, dazzle. *3. ஒளிர்தல்;* shine.

**மின்னொளி** பெ. (n.) *மிகு ஆற்றல் வாய்ந்த மின்விளக்குகளால் உண்டாக்கப்படும் ஒளி;* flood light.

**மினுக்கம்** பெ. (n.) *பளபளப்பு, ஒளிர்தல்;* shine.

**மினுக்குதல்** வி. (v.) *1. ஒளியால் ஒரு பொருள் பளபளப்பாகத் தெரிதல், விட்டுவிட்டு ஒளிர்தல்;* shine, glitter. *2. பகட்டு காட்டுதல், ஆடம்பரத்துடன் காட்சி தருதல்;* cause to glitter, display. *3. தேய்த்தல்;* press (clothes).

**மினுக்மினுக்கென்று** வி.அ. (adv.) *விட்டு விட்டு எரிகிற;* glow faintly and intermittently. '*கோயில் விளக்கு மினுக்கு மினுக்கென்று எரிந்து கொண்டிருந்தது*'.

**மினுங்குதல்** வி. (v.) *ஒளிர்தல், மினுமினுத்தல்;* glitter, glimmer, shine. '*விளக்கொளியில் மூக்குத்தி மினுங்கின*'.

**மினுமினுத்தல்** வி. (v.) *ஒளியுடன் ஒளிர்தல்;* shine brightly but intermittently.

**மினுமினுப்பு** பெ. (n.) *1. பளபளப்பு;* glitter, shining. *2. முகப்பொலிவு;* (healthy) glow.

# மீ

**மீசை** பெ. (n.) *1. பருவ அகவை எட்டியவுடன் மேல் உதட்டிற்கு மேல் வளரும் முடி;* moustache. *'என் மாமா பெரிய மீசை வைத்திருப்பார்'.* *2. விறைப்பான நீண்ட முடி போன்ற உணர்வு உறுப்பு;* antenna.

**மீசையை முறுக்குதல்** வி. (v.) *வீரத்தோடு சண்டையிட அணியம் என்ற தோரணை காட்டுதல்;* challenge to a fight. *'நான் யார் என்று தெரியாமல் என்னிடமே மீசையை முறுக்கு கிறான்'.*

**மீட்டுதல்** வி. (v.) *1. வீணை, நரம் பொத்தியம் (தம்பூரா) போன்ற இசைக் கருவிகளின் கம்பியை மென்மையாக அதிரச் செய்தல்;* pluck the strings. *'தம்பூராவை மீட்டிக் கொண்டு பாடத் தொடங்கினார்'.* *2. அடகு வைத்ததைத் திரும்பப் பெறுதல்;* get back, redeem. *3. நினைவு கூர்தல்;* recall.

**மீட்டுருவாக்கம்** பெ. (n.) *வழக்கிலிருந்து மறைந்து போனவற்றுக்குப் புத்துயிர் கொடுத்தல்;* revival. *'நாட்டுப்புறக் கலைகள் இப்போது மீட்டுருவாக்கம் செய்யப்படுகின்றன'.*

**மீட்டெடுத்தல்** வி. (v.) *பழைய கருத் தாக்கத்தைத் தற்காலச் சூழலுடன் பொருத்திப் புத்துயிர் பெறச் செய்தல்;* revive.

**மீட்பு** பெ. (n.) *1. வெள்ளம், நிலநடுக்கம் போன்றவற்றால் துன்பப்பட்டவர் களைக் காப்பாற்றும் நடவடிக்கை;* rescue. *2. ஒருவர் சட்ட முரணாக வைத்திருக்கும் பொருட்களை கைப் பற்றப்படும் நடவடிக்கை;* confiscation, recovery.

**மீண்டும்** வி.அ. (adv.) *மறுபடியும், திரும்பவும், மேலும்;* again. *'நேற்று மீண்டும் மழை பெய்தது'.*

**மீண்டுவிடுதல்** வி. (v.) *பழைய நிலையை அடைதல்;* recovered.

**மீதம்** பெ. (n.) *மீதி, மிச்சம்;* unused portion; remainder. *'மீதம் வைக்காமல் சாப்பிட வேண்டும்'.*

**மீதி** பெ. (n.) *ஒரு எண்ணிலிருந்து மற்றொரு எண்ணைக் கழித்த பின் எஞ்சியிருக்கும்; நிலுவை;* remainder. *'ஐந்தில் இரண்டு போனால் மீதி மூன்று'.*

**மீள்தல்** வி. (v.) *1. முன்பு இருந்த இடத்திற்குத் திரும்புதல்;* return, come back. *2. நோய், நேர்ச்சி போன்ற வற்றிலிருந்து பிழைத்தல்;* escape. *3. விடுபடுதல் அல்லது நீங்குதல்;* recover from; get over. *'அந்த அதிர்ச்சியிலிருந்து அவர் இன்னும் மீளவில்லை'.*

**மீளவும்** வி.அ. (adv.) *மீண்டும், திரும்பவும்;* again. *'இந்நூல் மீளவும் பதிப்பிக்கப் படப்படுமானால் தமிழுலகம் பெரும் பயனடையும்'.*

**மீறல்** பெ. (n.) *சட்டம், உரிமை முதலிய வற்றை மீறும் செயல்;* violation (of rules, rights, etc.,).

**மீறுதல்** வி. (v.) *1. ஒன்றை பின்பற்றாமல் அல்லது மதிக்காத முறையில் நடந்து கொள்ளுதல்; புறக்கணித்தல்;* transgress; violate break. *2. ஒன்றுக்கு உட்படாதபடி அல்லது கட்டுப்படாத படி ஆதல்;* go beyond, overcome. *3. தடுக்கப்பட்ட நிலையைக் கடத்தல்; தாண்டி முன் செல்லுதல்;* go past.

**மீன்காட்சியகம்** பெ. (n.) *நீர்வாழ் உயிரினங்கள் காட்சிக்கு வைக்கப்பட் டிருக்கும் இடம்;* aquarium.

**மீன்படுதல்** வி. (v.) *நீர் நிலைகளில் மீன்கள் அதிக அளவில் காணப் படுதல்;* (of fish) be abundantly available.

**மீனவக்குப்பம்** பெ. (n.) *மீனவர்களின் வாழிடம்;* a village of fisher man cast.

# மு

**முக்காடு** பெ. (n.) *தலையையும் முகத்தின் பெரும் பகுதியையும் மறைத்துக் கொள்வதற்காகத் தலைமேல் போட்டு இழுத்துவிடப்பட்ட துணி;* cloth spread over the head. *'வெயிலுக்காகத் துண்டை எடுத்து முக்காடு போட்டுக் கொண்டார்'.*

**முக்காடு போட்டுக்கொள்ளுதல்** வி. (v.) *மற்றவர் பார்வையைத் தவிர்த்து ஒளிந்து கொள்ளுதல்;* hide one's head.

**முக்கால்** பெ. (n.) *நான்கில் மூன்று பகுதி;* three quarters. *'மணி ஒன்றே முக்கால்'.*

**முக்கால்புள்ளி** பெ. (n.) *எழுதும்போதோ அச்சிடும்போதோ சொற்றொடரில் விளக்கம், எடுத்துக்காட்டு முதலியவை தரப்படுவதற்கு முன் பயன்படுத்தும் குறி;* colon.

**முக்காலி** பெ. (n.) *மூன்று கால்கள் கொண்ட சிறிய இருக்கை;* stool with three legs.

**முக்காலும்** பெ. (n.) *பெரும்பாலும்; முழுவதும்; முற்றிலும்;* mostly. *'நீ சொல்வது முக்காலும் சரி'.*

**முக்காலே மூன்று வீசம்** பெ. (n.) *கிட்டத் தட்ட முழுவதும்;* mostly. *'அவன் சொல்வதில் முக்காலே மூன்று வீசம் பொய்'.*

**முக்கிமுனகி** வி.அ. (adv.) *மிகவும் முயற்சித்து;* with much great difficulty, groaning. *'முக்கி முனகி எப்படியோ வீட்டுக்கான முன்பணத்தைக் கொடுத்துவிட்டேன்'.*

**முக்கியத்துவம்** பெ. (n.) *சிறப்பு நிறைந்த தன்மை;* importance.

**முக்குதல்** வி. (v.) *1. ஒன்றைச் செய்வதற்கு மிகவும் போராடுதல்;* struggle. *2. மூச்சைப் பிடித்துக்கொண்டு அதிக அளவில் ஆற்றலை செலுத்துதல்;* strain (in order to do something) groan.

**முக்கு** பெ. (n.) *சாலை, தெரு முதலிய வற்றின் முனை;* corner (of a street, etc.,). *'தெரு முக்கில் என்ன கூட்டம்?'.*

**முக்குளித்தல்** வி. (v.) *நீரில் மூழ்குதல்;* dive, drown.

**முகடு** பெ. (n.) *1. மலை உச்சி;* top of a mountain. *'மலைமுகட்டில் தவழும் வெண் மேகங்கள்'. 2. கூரையின் உச்சிப்பகுதி;* ridge of a ceiling. *'விடை சொல்லாமல் முகட்டைப் பார்த்தால் என்ன பொருள்'. 3. நெற்றியின் புடைத்த மேல்பகுதி;* upper part of the forehead.

**முகத்தல்** வி. (v.) *கையால் அல்லது கொள்கலனால் நிறையுமளவு எடுத்தல்;* take (mater, grain,etc., with one's hands or a container). *'பானையிலிருந்து முகந்து ஒரு செம்புத் தண்ணீர் குடித்தேன்'.*

**முகத்திரை** பெ. (n.) *முகத்தை மறைக்கும் வகையில் போட்டுக்கொள்ளும் மெல்லிய உறை;* veil.

**முகத்தில் அடித்தாற்போல்** வி.அ. (adv.) *பேசும்போது நயமாகச் சொல்லாமல் அப்பட்டமாகவும் கடுமையாகவும்;* bluntly.

**முகத்தில் விட்டெறிதல்** வி. (v.) *எரிச்ச லோடு கூறும்போது தருதல்;* fling something at someone.

**முகத்தில் விழித்தல்** வி. (v.) *1. ஒருவரின் உருவத்தை அல்லது முகத்தைக்*

*கண்விழித்ததும் காலையில் பார்த்தல்;* (wake up to) see someone's face first thing in the morning (in the belief that the particular person brings good or bad luck). *2. நேருக்கு நேர் பார்த்தல்;* look someone in the face (with negative, expressed or implied), dare show one's face. *'சொந்தக் காரர்கள் முகத்தில் விழிக்கவே எனக்குப் பிடிக்க வில்லை'.*

**முகத்தில் விளக்கெண்ணெய் வடிதல்** வி. (v.) *அசட்டுத்தனம் வெளிப்படை யாகத் தெரிதல்; அசடுவழிதல்;* look sheepish.

**முகத்துக்கு நேரே** வி.அ. (adv.) *நேருக்கு நேராக; நேரடியாக;* to one's face, openly and directly.

**முகத்துவாரம்** பெ. (n.) *கழிமுகம்;* mouth of a river; estuary *'ஆற்றின் முகத்துவாரத்தில் மணல் எளிதாகப் படிகிறது'.*

**முகத்தைத் திருப்பிக்கொள்ளுதல்** வி. (v.) *ஒருவரை நேரடியாகப் பார்த்தும் பார்க்காமால் செல்லுதல்; பேசாமல் தவிர்த்தல்; வேண்டு மென்றே புறக்கணித்தல்;* deliberately ignore.

**முகத்தைத் தொங்கப்போடுதல்** வி. (v.) *முகத்தை இறுக்கமாக வைத் திருத்தல்;* put on a long face.

**முகத்தை முறித்தல்** வி. (v.) *தொடர்பைத் துண்டித்துக் கொள்ளுதல்;* sever (put an end to) one's relationship (with another by showing rudeness).

**முகநூல்** பெ. (n.) *இணையத்தின் உதவியுடன் ஒளிப்படம், காணொலி, கருத்துரைகள் ஆகியவற்றைப் பரிமாறிக் கொள்ள உதவும் செய்திப் பரிமாற்றச் செயலி;* the app which helps to share the news, photos and vedios with others; the face book.

**முகப்பரு** பெ. (n.) *முகத்தில் தோன்றும் சிறு கட்டி;* pimple.

**முகப்பு** பெ. (n.) *1. வீடு, கட்டடம் முதலியவற்றின் வாசலும் வாசலை ஒட்டிய பகுதியும்;* front part (of a house, etc.,) facade. *2. பார்வைக்கு முதலில் படும்படியாக அமைந்திருக்கும் பகுதி;* face.

**முகப்பூச்சு** பெ. (n.) *ஒப்பனைக்காக முகத்தில் பூசிக்கொள்ளும் மாவுப் பொருள்;* paint or powder for the face.

**முகபாவம்** பெ. (n.) *உணர்ச்சியைக் காட்டும் முகத்தோற்றம்;* facial expression, look. *'பரதநாட்டியத்தில் முகபாவம் முக்கியமானது'.*

**முகம்** பெ. (n.) *1. கண், மூக்கு, வாய் முதலியவை அமைந்திருக்கிற பகுதி;* (of human beings) face; (of animals) head. *'முகம் பார்க்கும் கண்ணாடி'. 2. பட்டையாகவோ சதுரமாகவோ இருக்கும் பரப்பு;* face, side. *'தாயக் கட்டைக்கு நான்கு முகங்கள்'.*

**முகம் காட்டுதல்** வி. (v.) *1. ஓர் இடத்துக்குச் சென்று மிகக் குறைந்த நேரமே செலவிடுதல்; தலை காட்டுதல்;* make a flying visit; look in. *2. சிறிய வேடத்தில் மட்டுமே தோன்றுதல்;* have a minor role (in a film, etc.,). *3. எரிச்சலுடன் கடுமையாக நடந்து கொள்ளுதல்; எரிந்துவிழுதல்;* behave rudely.

**முகம் கொடுத்தல்** வி. (v.) *1. இன்முகம் காட்டி மதிப்பைத் தெரிவித்தல்;* have a friendly demeanour. *2. சிக்கல் போன்றவற்றை எதிர்கொண்டு நிறைவேற்றல்;* face (a problem, etc.,).

**முகம் கோணுதல்** வி. (v.) *1. எரிச்சலையோ மனநிறைவின்மை யையோ முகத்தில் வெளிக் காட்டுதல்;* grudge. *2. மனம் வருந்துதல்;* make someone unhappy.

**முகம் சுண்டுதல்** வி. (v.) *முகத்தில் இயல்பான மலர்ச்சி மறைந்து*

இறுக்கம் தோன்றுதல்; (of face) become tense.

**முகம் சுளித்தல்** வி. (v.) *முகத்தைச் சுருக்கி விருப்பமின்மையை வெளிப் படுத்துதல்;* screw up one's face (as an expression of dislike, disapproval, etc.,).

**முகம் செத்துப்போதல்** வி. (v.) *அவமதிப்பு முதலியவற்றால் முகம் பொலிவு இழத்தல்;* fall.

**முகம் தெரியாத** பெ.அ. (adj.) *அறிமுகம் இல்லாத; பழக்கம் இல்லாத;* unaquainted.

**முகம் தொங்குதல்** வி. (v.) *ஏமாற்றத்தால் (அ) அவமானத்தால் முகம் சோர்வடைந்து களை இழத்தல்; முகம் செத்துப்போதல்;* be visibly upset.

**முகம் விழுதல்** வி. (v.) *முகம் இயல்பான களையிழந்து இறுக்கமடைதல்;* show disappointment, etc., one's face falls.

**முகமதிப்பு** பெ. (n.) *பங்கு, ஆவணம் போன்றவற்றில் குறிப்பிடப்பட் டிருக்கும் மதிப்பு;* face value (of shares, bonds, etc.,).

**முகமன்** பெ. (n.) *1. ஒருவரை புகழ்ந்து அவரிடமே கூறும் சொற்கள்;* flattery. *2. தொடக் கத்தில் அதன் நோக்கம் மற்றும் பயன்பாடு பற்றிச் சுருக்கமாக அளிக்கும் முன்னுரை;* preamble.

**முகமூடி** பெ. (n.) *முகத்தை மறைக்கும் படியாக ஆனால் பார்ப்பதற்கு ஏதுவாக இரண்டு துளைகளை மட்டும் கொண்டிருக்கும்படி துணி போன்ற வற்றால் செய்யப்பட்ட அமைப்பு;* mask.

**முகர்தல்** வி. (v.) *மூச்சை இழுத்து மணத்தை உணர்தல்;* smell.

**முகராசி** பெ. (n.) *நன்மையைத் தருவ தாகவும் நம்பப்படும் ஒருவரின் முகத் தோற்றம்;* looks (of a person which is believed to bring one good luck).

**முகவாய்** பெ. (n.) *கீழ்த்தாடை; நாடி;* chin.

**முகவாய்க்கட்டை** பெ. (n.) *முகவாய் பார்க்க.*

**முகவிலாசம்** பெ. (n.) *அடையாளம்;* recognizable feature.

**முகவுரை** பெ. (n.) *உரிய விளக்கங்களைத் தந்து நூலை அறிமுகப்படுத்தி நூலாசிரியரே எழுதும் கட்டுரை; நூலாசிரியரின் முன்னுரை;* preface, introduction.

**முகவெட்டு** பெ. (n.) *முகத்தோற்றம்;* facial features.

**முகுளம்** பெ. (n.) *உயிர்ப்பு, நெஞ்சகத் துடிப்பு போன்ற முகாமைச் செயல்களைக் கட்டுப்படுத்தும் மூளையின் கீழ்ப்பாகம்;* medulla oblongata.

**முகூர்த்தக்கால்** பெ. (n.) *நல்ல நேரம் பார்த்துத் திருமணப் பந்தலுக்காக நடும் கழி;* first post fixed at an auspicious moment for erecting a pandal for a marriage.

**முகை** பெ. (n.) *அரும்பு;* bud.

**முங்குதல்** வி. (v.) *ஒன்று அல்லது ஒருவர் நீர்மத்தினுள் அமிழ்தல்; மூழ்குதல்;* dip, sink (into the water, etc.,).

**முச்சந்தி** பெ. (n.) *மூன்று சாலைகள் கூடும் இடம்;* junction of three streets.

**முச்சை** பெ. (n.) *பட்டத்தின் சூத்திரக் கயிறு;* string attached to a kite to keep it flying in balance. *'இவ்வளவு நீளமாக முச்சை வைக்கத் தேவையில்லை'.*

**முசுடு** பெ. (n.) *1. சிடுமூஞ்சி, முன்கோபி;* irritable person. *2. சிடுமூஞ்சித்தனம்;* petulance. *3. மரங்களில் அதிகமாக இருக்கும் பழுப்பு நிறப் பெரிய எறும்பு;* a kind of big brown ant.

**முசுப்பாத்தி** பெ. (n.) *வேடிக்கை, வியப்பு, பொழுதுபோக்கு;* amusement, good fun.

**முசுறு** பெ. (n.) *முசுடு பார்க்க.*

**முட்ட** வி.அ. (adv.) *1. முழுவதும், நிறைய;* filling up the entire available space; all over. *2. மூக்கு முட்ட பார்க்க.*

**முட்டாள்** பெ. (n.) *அறிவில் குறைந்த அல்லது அறிவுத்தனமாகவோ ஒரு சூழலுக்கு ஏற்ற முறையிலோ நடந்துகொள்ளத் தெரியாத ஆள்;* fool, stupid person. *'இது முட்டாள் தனமான யோசனை'.*

**முட்டிக்கால்** பெ. (n.) *முழங்கால்;* knee.

**முட்டிக்கால் போடுதல்** வி. (v.) *முட்டி போடுதல் பார்க்க.*

**முட்டிக்கொண்டு வருதல்** வி. (v.) *அழுகை, சினம் போன்ற உணர்ச்சிகள் அடக்க முடியாமல் வெளிப்படும் நிலையை அடைதல்;* (of tears, anger, urine, etc.,) be pressing.

**முட்டிக்கொள்ளுதல்** வி. (v.) *ஒருவர் ஒன்றைச் செய்ய வேண்டும் என்றோ செய்ய வேண்டாம் என்றோ மனப்பொருமலுடன் அல்லது அக்கறையுடன் திருப்பித் திருப்பி வற்புறுத்திச் சொல்லுதல்;* make strong and repeated (but futile) pleas.

**முட்டிபோடுதல்** வி. (v.) *தண்டனையாக கால்களை மடக்கி மண்டி போடுதல்;* kneel down (as punishment).

**முட்டிமோதுதல்** வி. (v.) *1. கூட்டமாக ஒரு இடத்துக்கு திரண்டு செல்லுதல்; அலைமோதுதல்;* surge up. *2. துன்புறுதல், கடினப்படுதல்;* face difficulties.

**முட்டுக்கட்டை** பெ. (n.) *1. முட்டாக வைக்கும் கட்டை அல்லது கம்பு;* post used as a prop, piece of wood for blocking. *2. மேற்கொண்டு செயல்பட முடியாத வாறு தடுப்பது; தடை; தடங்கல்;* stumbling block, hindrance.

**முட்டுக்கப்பல்** பெ. (n.) *துறைமுகத்தின் முகப்புக்கும் துறைக்கும் இடையில் கப்பல்களை இழுத்துச்செல்லும் விசைப் படகு;* tug boat.

**முட்டுக்காய்** பெ. (n.) *ஓரளவுக்கு அடர்த்தியும் மென்மையும் கொண்ட தேங்காய்ப் பருப்பு;* the kernel of a coconut which is moderately dense and soft.

**முட்டுச்சந்து** பெ. (n.) *மேற்கொண்டு செல்லவியலாமல் முடிந்துவிடுகிற சந்து;* blind alley, dead end.

**முட்டுதல்** வி. (v.) *தலையால் ஒன்றை மோதுதல்; ஊர்திகள் போன்றவை ஒன்றில் மோதுதல்;* knock (one's head against something); bump one's head against, butt).

**முட்டு** பெ. (n.) *1. ஒன்றை விழாமல் தாங்கும் அல்லது தடுக்கும் கட்டை முதலியவை;* prop, chock. *2. மூட்டு;* (bone) joing. *3. சாலை சந்தி;* (road) junction. *'போக வர இடையூறாக முட்டில் நிற்காதே!'.*

**முட்டுப்படுதல்** வி. (v.) *ஒன்று இல்லாமல் அல்லது ஒன்றைச் செய்ய முடியாமல் துன்பப்படுதல்;* suffer.

**முட்டுப்பாடு** பெ. (n.) *தடை; இடையூறு;* obstacle, hindrance. *'முன்னேறுவதற்கு எத்தனையோ முட்டுப்பாடுகள்'.*

**முட்டை** பெ. (n.) *1. பெண் பறவைகள் இடும் (கருவைக் கொண்ட) நீள்வடிவப்பொருள்/கோழிமுட்டை;* egg of hen. *2. சுழியம்;* zero. *3. வறட்டி;* dried cow dung cake (used as fuel).

**முட்டைத் தோசை** பெ. (n.) *தோசைக் கல்லில் ஊற்றும் மாவின் மேல் முட்டையை உடைத்து ஊற்றித் தயாரிக்கும் தோசை;* with egg on top of crepe.

**முட்டை பரோட்டா** பெ. (n.) *புரியடையைப் (பரோட்டாவை) பிய்த்துப் போட்டு அதில் முட்டையை உடைத்து ஊற்றித் தயாரிக்கும் உணவு வகை;* round cake prepared from wheat flour and egg.

**முட்டை போண்டா** பெ. (n.) *அவித்த முட்டையை உள்ளே வைத்துத் தயாரிக்கும் ஒருவகைத் தின்பண்டம்;* a kind of bonda prepared by using boiled egg as filling.

**முடக்கம்** பெ. (n.) *செயல்பட முடியாத அல்லது தடை ஏற்பட்ட நிலை;* stoppage.

**முடக்குதல்** வி. (v.) *1. ஒன்றை அல்லது ஒருவரை செயல்பட விடாமல் செய்தல் அல்லது செயலிழக்கச் செய்தல்;* halt, prevent functioning. *2. வைப்பகத்தில் ஒருவரின் கணக்கில் உள்ள பணத்தை அவர் பயன்படுத்த முடியாதவாறு தடுத்தல்;* freeze (an account). *3. ஒருவரின் நடவடிக்கை களைக் குறிப்பிட்ட இடத்துக்குள் இருக்கும் வகையில் ஒடுக்குதல்;* confine (one's activities). *'இவ்வளவு படித்தவளை வீட்டிற்குள் முடக்கி வைப்பது மடமை'.*

**முடக்குவாதம்** பெ. (n.) *முடக்குநோய்; பக்கவலிப்பு;* paralysis.

**முடங்குதல்** வி. (v.) *1. கை, கால்களை சேர்த்து படுத்திருத்தல்;* lie with knees drawn up and arms close to the body. *2. செயல், திட்டம் போன்றவைத் தடைபடுதல்;* (of work) be kindered, be crippled. *3. கை, கால் செயல் இழத்தல்;* (of limbs) be crippled, be paralysed. *'அவருக்கு நேர்ச்சிக்குப் பின் கால் முடங்கிவிட்டது'.*

**முடநீக்கியல்** பெ. (n.) *எலும்பு மற்றும் தசை தொடர்பான நோய்களைப் பற்றிய மருத்துவப் பிரிவு;* orthopaedics.

**முடம்** பெ. (n.) *கை அல்லது கால் செயல்பட முடியாத நிலை;* crippled condition of leg or arm.

**முடவன்** பெ. (n.) *காலில் குறைபாடு உள்ளவன்; கால் இல்லாதவன்;* lame (person).

**முடிதல்** வி. (v.) *1. நிகழ்ச்சி இறுதி நிலையை அடைதல், முற்றுப் பெறுதல், முடிவுக்கு வருதல்;* (of an act, an event) come to an end, come to a close. *'விழா இனிதே முடிந்தது'. 2. உடல் நிலை நலமாக இருத்தல்;* have energy or health, feel fit.

**முடி** பெ. (n.) *1. முடிச்சு;* knot. *'கயிற்றில் எத்தனை முடி போடப்பட்டிருக்கிறது பார்'. 2. நிறையச் சேர்த்துக் கட்டிய தொகுப்பு;* sheaf. *'இன்னும் இரண்டு முடி நாற்று தேவை'.*

**முடிக்கயிறு** பெ. (n.) *கையில் அல்லது கழுத்தில் கட்டிக்கொள்ள மந்திரித்துத் தரும் முடிச்சுகள் போட்ட கயிறு;* amulet in the form of a knotted cord.

**முடிச்சு** பெ. (n.) *1. எளிதில் அவிழ்ந்து விடாதபடி கயிறு,துணி போன்றவை ஒன்றோடு ஒன்றைச் சேர்த்துக் கட்டப் பட்டிருப்பது;* knot. *2. கயிறு, சணல் ஆகியவற்றின் நீளத்தைக் குறிக்கும் போது ஏறக்குறைய பத்து மீட்டர் கொண்ட அளவு;* approximately a measure of ten metres in length (as of rope, etc.,). *'ஐந்து முடிச்சுக் கயிறு வாங்கிக்கொண்டு வா'.*

**முடிச்சுப் போடுதல்** வி. (v.) *1. உறுதியாகத் தெரியாத, தொடர்பற்ற இரண்டு செய்திகளைத் தொடர்புபடுத்துதல்;* link (two events, etc., not necessarily with justification). *2. ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் திருமண உறவுக்கான முறையைப் பற்றி அல்லது வேறு வகையில் உறவு*

இருப்பதற்கான வாய்ப்பைப் பற்றிப் பேசுதல்; fancy a marriage between two people, imagine an affair.

**முடிசூட்டுவிழா** பெ. (n.) *மன்னராட்சியில் ஆட்சிப் பொறுப்பு ஏற்பதற்கு அடையாளமாக அவருக்கு மணிமுடி சூட்டும் நிகழ்ச்சி;* coronation.

**முடிசூடுதல்** வி. (n.) *அரசாட்சியை ஏற்றல்;* crown. *'தந்தைக்குப் பின் மகன் அரசனாக முடிசூடுவதே மரபாக இருந்திருக்கிறது'.*

**முடிதிருத்தகம்** பெ. (n.) *முடியைக் குறைத்து அல்லது திருத்தி அழகு படுத்தும் கடை;* hair dressing salon.

**முடிதிருத்துதல்** வி. (v.) *முடியைக் குறைத்து அல்லது திருத்தி அழகு படுத்துதல்;* cut or trim the hair.

**முடிதிருத்துநர்** பெ. (n.) *முடிதிருத்துதல், முகமழிப்பு செய்துவிடுதல் போன்ற வற்றைத் தொழில்முறையாகச் செய்பவர்;* barber.

**முடிப்பு** பெ. (n.) *பணம், நகை முதலிய வற்றைத் தொகுத்துத் துணி போன்ற வற்றில் கட்டி வைத்திருப்பது;* (money, articles of jewellery) wrapped (in a cloth) or tied up.

**முடிமயிர்** பெ. (n.) *பெண்கள் முடியோடு சேர்த்துப் பின்னிக்கொள்ளும் பொய்முடி;* false hair. *'முடிமயிர் வைத்து முடிந்ததனால் கொண்டை இவ்வளவு பெரிதாக இருக்கிறது'.*

**முடியிறக்குதல்** வி. (v.) *வேண்டுதல் கரணியமாக கோயிலில் தலை முடியை மழிக்கும் சடங்கை நிறை வேற்றுதல்;* have one's head shaved or tonsured in fulfilment of a wow. *'குழந்தைக்கு முடியிறக்கிக் காது குத்த வேண்டும்'.*

**முடியைப் பிய்த்துக்கொள்ளுதல்** வி. (v.) *ஒரு சிக்கலுக்குத் தீர்வு காண முடியாமல் துன்பப்படுதல்;* rack one's brains (to solve a problem); be driven mad.

**முடிவு** பெ. (n.) *1. ஒரு நிகழ்ச்சி, செயல், கதை முதலியவை நிறைவடையும் நிலை; இறுதி; கடைசி;* end (of something). *'இவன் அட்டூழியத்துக்கு ஒரு முடிவு வராதா?'. 2. வெற்றி தோல்விகளைப் பற்றி இறுதியாகக் கொடுக்கப்படும் செய்தி;* result (of a competition examination). *3. ஆராய்ச்சி, உசாவல் போன்றவை இறுதியாக வெளியிடும் செய்தி;* result (of an investigation, test, etc.,). *4. தீர்மானம்;* decision. *5. தீர்ப்பு;* verdict.

**முடிவு கட்டுதல்** வி. (v.) *1. ஒன்றைக் குறித்துத் தீர்மானமான முடிவை எடுத்தல்;* decide. *2. ஒரு செயலை மேலும் தொடர முடியாத நிலையை அடையச் செய்தல்;* put an end to something.

**முடிவெட்டுதல்** வி. (v.) *தலைமுடியைக் கத்தரித்துச் சீர் செய்தல்;* have or give a hair cut.

**முடுக்கம்** பெ. (n.) *குறிப்பிட்ட விசையில் குறிப்பிட்ட திசையில் சென்று கொண் டிருக்கும் ஒரு பொருளின் விசையில் ஏற்படும் மாற்றம்;* acceleration.

**முடுக்கிவிடுதல்** வி. (v.) *திறமையாக அல்லது விரைவாகச் செயல்படும்படி தூண்டுதல்;* step up; accelerate.

**முடுக்குதல்** வி. (v.) *1. பொம்மை, பொறி போன்றவை இயக்கு வதற்காக விசை, திறவுகோல் போன்றவற்றைத் திருகுதல்;* set in motion; wind. *2. திருகாணி முதலியவற்றை உட்செலுத்துதல்;* screw (something). *3. வண்டியில் பூட்டியிருக்கும் மாடு, குதிரை போன்றவற்றை விரைந் தோட்டுதல்;* goad. *'மாட்டை முடுக்கி விட்டதும் விரைவு அதிகரித்தது'.*

**முடுக்கு** பெ. (n.) *1. அகலக் குறைவான சந்து;* lane. *2. மூலை;* (street) corner. *'தெரு முடுக்கில் ஒரு பெட்டிக்கடை'.*

**முடுக்குத் தெரு** பெ. (n.) *வளைந்து வளைந்து செல்லும், அகலம் குறைந்த தெரு;* winding, narrow lane.

**முடைதல்** வி. (v.) *பாய், கூடை முதலியவை பின்னுதல்;* plait (a basket); (weave a mat). *'எங்கள் பள்ளியில் பாய்முடையக் கற்றுக் கொடுக்கிறார்கள்'.*

**முடை** பெ. (n.) *பணம், பொருள் போன்றவற்றுக்குத் தட்டுப்பாடு;* lack shortage. *'விதை நெல்லுக்கு இப்போது சற்று முடை'.*

**முடைநாற்றம்** பெ. (n.) *ஒருவகை அழுகல் நாற்றம்;* foul smell (of rotten meat, sour milk, etc.,).

**முண்டக்கட்டை** பெ. (n.) *அம்மணம்;* nakedness.

**முண்டம்** பெ. (n.) *1. தலையில்லாத மாந்த உடல்;* headless (human) body, trunk. *2. அம்மண உடல்;* naked body.

**முண்டியடித்தல்** வி. (v.) *கூட்டத்தில் முன்னே போக ஒருவரையொருவர் நெருக்கித்தள்ளுதல்;* Jostle against, push around.

**முண்டுதல்** வி. (v.) *முட்டுதல், நெருக்குதல் போன்ற செயல்களைச் செய்தல்;* jostle.

**முண்டு** பெ. (n.) *1. முடிச்சுப் போன்றது;* knot. *2. வேட்டி;* unstitched piece of cloth for men worn from waist to ankle (in India) dhoti.

**முண்டுகொடுத்தல்** வி. (v.) *முட்டுக் கொடுத்தல்;* give a support or prop.

**முணுக்கென்றால்** வி.அ. (adv.) *எடுத்ததற் கெல்லாம்;* at the slightest provocation.

**முணுமுணுத்தல்** வி. (v.) *1. வெறுப்பு, மனக்குறை முதலியவற்றை வெளிப்படுத்தும் வகையில் தாழ்ந்த குரலில் தனக்குத் தானே பேசிக்கொள்ளுதல்; தாழ்ந்த குரலில் ஒருவரிடம் கமுக்கமாகப் பேசுதல்;* mutter, talk in whispers. *2. வெளிப்படையாக இல்லாமல் தனது மனக்குறையை அல்லது திறனாய்வை ஒருவர் வெளிப்படுத்துதல்;* grumbling secretly. *3. வாய்க்குள்ளாக உச்சரித்தல் அல்லது பாடுதல்;* mumble (mantras, prayers softly).

**முணுமுணுப்பு** பெ. (n.) *வெறுப்பு, மனக்குறை முதலியவற்றை வெளிப்படுத்தும்வகையில் முணுமுணுக்கும் செயல்;* grumbling.

**முத்தடுப்பு ஊசி** பெ. (n.) *தொண்டை அடைப்பான், கக்குவான் இருமல், தசை விறைப்பு நளிர்நோய் ஆகிய மூன்று நோய்களுக்குமான தடுப்பு மருந்து;* triple antigen.

**முத்தமிடுதல்** வி. (v.) *முத்தம் கொடுத்தல்;* kiss. *'மகனை நெற்றியில் முத்தமிட்டு வழியனுப்பினான்'.*

**முத்தாய்ப்பு** பெ. (n.) *பேச்சு, படைப்பு அல்லது ஒரு நிகழ்ச்சியின் சிறப்பான முடிவு;* effective or precise end.

**முத்தாரம்** பெ. (n.) *முத்துமாலை;* pearl garland.

**முத்திரைகுத்துதல்** வி. (v.) *ஒன்றின் மீது அல்லது ஒருவர் மீது குறிப்பிட்ட அடையாளத்தை இடுதல்;* label.

**முத்திரை பதிதல்** வி. (v.) *தன்னுடைய தனித்தன்மையை விளங்கச் செய்தல் அல்லது நிலைநாட்டுதல்;* make a mark.

**முத்து** பெ. (n.) *நித்திலம்;* pearl.

**முத்துக்குளித்தல்** வி. (v.) *கடலில் ஆழத்திற்குச் சென்று முத்துகளைச் சேகரித்தல்;* dive for pearl oysters.

**முத்துச்சரம்** பெ. (n.) *முத்துத் தொங்கல்;* string of pearls.

**முத்துமாலை** பெ. (n.) *முத்தாரம் பார்க்க.*

**முத்துமுத்தாக** வி.அ. (adv.) *1. வியர்வைத் துளிகள், பனித்துளிகள் போன்றவற்றைக் குறிக்கும்போது ஒரு பரப்பின் மேல் திவலைதிவலையாக;* as droplets. *'அவருக்கு முகமெல்லாம் முத்து முத்தாக வியர்த்திருந்தது'.* **2.** *கையெழுத்தைக் குறித்து வரும் போது தெளிவாகவும் அழகாகவும்;* (of handwriting) legibly and beautifully. *'என் தம்பி முத்து முத்தாக எழுதுவான்'.*

**முத்துமுத்தான** பெ.அ. (adj.) *1. கையெழுத்தைக் குறித்து வரும் போது தெளிவாகவும் அழகாகவும் இருக்கிற;* (of handwriting) legible and beautiful. *2. சிறப்பான, அருமையான;* excellent, rare.

**முத்துவிழா** பெ. (n.) *ஒருவரின் அல்லது ஒரு அமைப்பின் எண்பதாம் ஆண்டின் நிறைவை ஒட்டிக் கொண்டாடப்படும் விழா;* celebration marking the completion of 80th year.

**முதல் ஆட்டம்** பெ. (n.) *திரையரங்கில் ஆறுமணி அளவில் காட்டப்படும் காட்சி;* (in India) first show of the day in a cinema, commencing at 6 in the evening.

**முதல் தகவல் அறிக்கை** பெ. (n.) *ஒரு குற்ற நிகழ்ச்சியைப் பற்றிய விளக்கங்களைக் காவல்துறையினருக்குத் தெரியப்படுத்தியதின் அடிப்படையில் உசாவுகைக்கு முன்பு காவல்துறையினர் பதிவு செய்யும் அறிக்கை;* (in India) information of an offence first received and recorded by the police (abbreviated to F.I.R.).

**முதல் நூல்** பெ. (n.) *ஒரு நூலுக்கு மூலமாக அமைந்த வேறு ஒரு நூல்;* a work that is the basis of other works source.

**முதல் மரியாதை** பெ. (n.) *கோயில் திருவிழா போன்றவை தொடங்கும் போது ஊரில் முகாமையானவராகக் கருதப்படுபவருக்கு அளிக்கப்படும் மதிப்பு;* symbolic show of respect to one considered the most important person in the local community at the beginning of a temple function.

**முதலாளி** பெ. (n.) *ஆட்களை வேலைக்கு அமர்த்திச் சொந்தத் தொழிலோ வணிகமோ செய்பவர், ஊர்தி, நிலம் போன்றவற்றின் உரிமையாளர்;* one who invests in and runs a business, industry, etc., proprietor, owner.

**முதலாளித்துவம்** பெ. (n.) *ஒரு நாட்டின் உற்பத்திக் கருவிகள் பெருமளவில் தனியார் உடைமையாக இருக்கும் பொருளாதார அமைப்பு;* capitalism.

**முதலாளியம்** பெ. (n.) *முதலாளித்துவம் பார்க்க.*

**முதலீட்டாளர்** பெ. (n.) *ஒரு தொழில், நிறுவனம், பங்குச் சந்தை போன்றவற்றில் பணத்தை முதலீடு செய்பவர்;* investor.

**முதலீடு** பெ. (n.) *வருவாய் ஈட்டுவதற்காகத் தொழில், வணிகம் முதலியவற்றில் தொடக்க நிலையிலும் வைப்பகம் போன்றவற்றில் சேமிப்பாகவும் போடப்படும் பணம்; மூலதனம்;* capital, investment.

**முதலுதவி** பெ. (n.) *நேர்ச்சிக்குள்ளானவருக்கு அல்லது திடீரென்று உடல் நலம் குன்றியவருக்கு அளிக்கப்படும் உடனடி மருத்துவம்;* first aid.

**முதலைக் கண்ணீர்** பெ. (n.) *இரக்கத்திற்கு உரிய செய்தியில் காட்டும் போலியான வருத்தம்;* crocodile tears.

**முதன்முதலாக** வி.அ. (adv.) *முதல் முறையாக; முதல் தடவையாக;* for the first time.

**முதன்மை** பெ. (n.) *இருப்பவற்றில் முதலிடம் வகிக்கக்கூடியதாகவும்*

*மிகவும் முதன்மையானதாகவும் அமைவது;* primary importance. *2. பதவி நிலையில் தலைமை;* (of officials) chief, (of office) main, head.

**முதன்மைத் தேர்வு** பெ. (n.) *ஒருவரின் திறனை தேர்வு செய்யும் வகையில் நடத்தப்படும் எழுத்துத் தேர்வு;* preliminary examination.

**முதன்மைப்படுத்துதல்** வி. (v.) *முன்னிலைப்படுத்துதல்;* give someone or something the prime place.

**முதன்மை வினை** பெ. (n.) *தொடர் நிலையிலும் பொருள் நிலையிலும் தனித்து இயங்குவதும், வினையடையையும் துணை வினையையும் ஏற்பதுமான வினைச்சொல்;* main verb.

**முதிர்ச்சி** பெ. (n.) *ஒருவர் பட்டறிவாலும், அறிவுத்திறத்தாலும் பக்குவப்பட்ட நிலை;* maturity, ripeness.

**முதிர்தல்** வி. (v.) *மிகு வளர்ச்சியை அடைதல், முற்றுதல்;* (of trees, fruits, etc.,) become ripe or full - grown.

**முதிர்ந்த** பெ.அ. (adj.) *1. பட்டறிவு, அறிவு போன்றவற்றால் தகுதிப்படுத்தப் பட்ட;* veteran, seasoned. *2. அகவை அதிக மான;* elderly.

**முதுகலை** பெ. (n.) *இளங்கலைப் பட்டம் பெற்றவர்கள் படிக்கும் மேல் பட்டப்படிப்பு;* post graduate (course).

**முதுகில் குத்துதல்** வி. (v.) *நயவஞ்சமாக இரண்டகம் செய்தல்;* to stab someone in the back.

**முதுகுக்குப் பின்னால்** வி.அ. (adv.) *ஒருவர் இல்லாதபோது அவரைப் பற்றி குறை கூறுதல்;* without a person's knowledge; behind someone's back. *'யாரைப் பற்றியும் முதுகுக்குப் பின்னால் பேசக்கூடாது'.*

**முதுகு காட்டுதல்** வி. (v.) *போட்டியிடுபவர் அல்லது எதிர்ப்பவர் வலுவானவர் என்பதால் எதிர்க் காமல் பின்வாங்குதல்;* retreat back down, turn tail.

**முதுகு சொறிதல்** வி. (v.) *தன் தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக மற்றொருவருக்கு வேண்டியதையெல்லாம் செய்து அவரை மகிழ் வித்தல்;* suck up (to s.o.).

**முதுநிலை** பெ. (n.) *பல நிலைகளைக் கொண்ட பதவி வரிசையில் உயர் நிலை;* senior grade.

**முதுமக்கள் தாழி** பெ. (n.) *முற்காலத்தில் இறந்தவரை அடக்கம் செய்யப் பயன்படுத்திய பெரிய மட்பாண்டம்;* burial urn.

**முதுமொழி** பெ. (n.) *பெரியோர் வாய்ச்சொல்; பழமொழி;* words of wisdom, proverb, saying.

**முந்தாநாள்** பெ. (n.) *முந்தைய நாள் பார்க்க.*

**முந்தானை** பெ. (n.) *புடவையில் மார்பு வழியாக வந்து தோள் மீது படிந்து பின்புறம் தொங்கும் பகுதி;* free end (of a saree), (in India) pallu. *'சேலை முந்தானையால் கண்களைத் துடைத் துக் கொண்டாள்'.*

**முந்தானையைப் பிடித்துக்கொண்டு** வி.அ. (adv.) *அன்பு மிகுதியால் அல்லது சார்ந்திருக்கும் தன்மையால் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல்;* dependent on or tied to (a woman).

**முந்தி[1]** பெ. (n.) *சேலை போன்றவற்றின் தலைப்பு;* border (of a saree).

**முந்தி[2]** வி.அ. (adv.) *1. காலத்தில் முன்பு, முன்னால்;* (of time) earlier. *2. விரைவாக;* faster.

**முந்திய** பெ.அ. (adj.) *முந்தைய பார்க்க.*

**முந்திரிக்கொட்டை** பெ. (n.) *எந்த ஒரு செயலிலும் தேவையில்லாமல் முந்திக்கொள்பவர்;* one talks or acts presumptuously.

**முந்துதல்** வி. (v.) *1. தனக்கு முன்னால் சென்று கொண்டிருக்கும் ஒன்றை அல்லது ஒருவரைக் கடந்து செல்லுதல்; கடந்து முன் செல்லுதல்;* go past, overtake. *2. ஒன்றைப் பெறவோ செய்யவோ பிறரைக் காட்டிலும் விரைதல்;* overtake, rush. *3.வெற்றிப்பேறு, சிறப்பு போன்ற வற்றில் ஒருவரை மிஞ்சுதல்;* surpass.

**முந்தைய** பெ.அ. (adj.) *காலத்தால் முற்பட்ட, முன் இருந்த அல்லது நிகழ்ந்த;* previous, pre.

**முந்தையநாள்** பெ. (n.) *நேற்று என்ற நாளுக்கு முந்திய நாள்;* day before yesterday.

**முப்பரிமாணம்** பெ. (n.) *நீளம், அகலம், உயரம் ஆகிய மூன்று அளவுகள்;* the three dimensions. *'இது கட்டடத்தின் முப்பரிமாணப் படம்'.*

**முப்பரிமாண வில்லை** பெ. (n.) *முப் பரிமாணத்தில் தோற்றம் அளிக்கும் வகையில் ஊடொளி (லேசர்) தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தித் தயாரிக்கும் எளிதாக நகல் செய்ய முடியாத, வில்லை வடிவிலான படம்;* hologram.

**முப்பாட்டன்** பெ. (n.) *தாத்தாவின் தந்தை அல்லது தாத்தாவின் தாத்தா;* great grand father or grand father's grand father. *'இது எங்கள் முப்பாட்டன் காலத்து வீடு'.*

**மும்முரம்** பெ. (n.) *செயற்பாட்டில் கவனத்துடன் கூடிய விரைவு;* intensity.

**முயங்குதல்** வி. (v.) *புணர்தல்;* copulate.

**முயல்தல்** வி. (v.) *ஊக்கத்தோடு; முயற்சி செய்தல்;* try hard, strive. *'எல்லோருடைய ஆதரவையும் பெற முயல்வோம்'.*

**முயற்சித்தல்** வி. (v.) *முயலுதல், முயற்சி செய்தல்;* try.

**முயற்சி** பெ. (n.) *1. ஒன்றுக்காக மேற் கொள்ளும் உழைப்பும், செயற் பாடும்;* effort. *2. முனைப்புடன் மேற்கொள்ளப்படும் செயல்;* attempt.

**முரட்டுத்தனம்** பெ. (n.) *குணம், செயல் போன்றவற்றில் மிகவும் கடுமை;* harshness.

**முரடன்** பெ. (n.) *முரட்டுக் குணத்தவன்;* a rough and tough male, ruffian.

**முரடு** பெ. (n.) *1. மிகக் கடுமையானவர்;* rough person. *2. உறுதியும் கடினத் தன்மையும் கொண்டது;* roughness, coarseness. *3. பெரியதாக இருப்பது;* large in size.

**முரண்** பெ. (n.) *எதிரானதாகவோ மாறுபட்டதாகவோ அமைவது, முரண்பாடு;* contradiction, variance.

**முரண்டுதல்** வி. (v.) *முரண்டு செய்தல், முரண்டு பிடித்தல்;* give stiff resistance, be obstinate.

**முரண்டு** பெ. (n.) *பிறர் கூறுவனவற்றிற்கு எதிர்ப்புக் காட்டுவது; ஒட்டாரம்;* stubbornness, obstinacy. *'வீட்டில் பையனுடைய முரண்டும் ரகளையும் அதிகமாகி விட்டன'.*

**முரண்படுதல்** வி. (v.) *எதிர்நிலைப்பாடு, மாறுபடுதல்;* be at variance with. *'நூலில் தெரிவித்திருக்கும் கருத்து களோடு முரண்படுகிறேன்'.*

**முரண்டுபிடித்தல்** வி. (v.) *பிறர் கூறும் அல்லது எதிர்பார்க்கும் ஒன்றைச் செய்ய எதிர்ப்புக் காட்டுதல்; ஒட்டாரமாக இருத்தல்;* be adamant. *'தீவனத்தைத் தின்னாமல் மாடு முரண்டுபிடிக்கிறது'.*

**முரண்பாடு** பெ. (n.) *ஒன்று அல்லது ஒருவருடன் மாறுபடும் நிலை;* contradiction, difference.

**முழக்குதல்** வி. (v.) *1. இன்னியங்களாலோ (இசைக்கருவிகளாலோ) வாயாலோ பேரொலி எழுப்புதல்;* roar. *'தூரத்தில் பறைகளை முழக்கும் ஒலி கேட்டது'. 2. முழக்கமிடுதல்;* shout (slogans); thunder.

**முழங்கால்** பெ. (n.) *தொடைக்குக் கீழே காலை மடக்கி நீட்டக்கூடிய, மூட்டு அமைந்திருக்கும் பகுதி;* knee. *'முழங்காலில் சரியான அடி!'.*

**முழங்காலிடுதல்** வி. (v.) *மண்டியிடுதல்;* kneel down.

**முழங்குதல்** வி. (v.) *1. உரக்கக் கூறுதல், மேடையில் ஆரவாரத்துடன் பேசுதல்;* shout (slogans), speak boisterously. *2. இடி, தகரி போன்றவை அல்லது இன்னியங்கள் பேரொலி எழுப்புதல்;* (of thunder, cannon, etc.,) roar, rumble (of an ensemble) sound loudly. *'மேள தாளம் முழங்க ஊர்வலம் நடைபெற்றது'.*

**முழம்** பெ. (n.) *உள்ளங்கையை விரித்த நிலையில் நடுவிரலின் நுனியிலிருந்து முழங்கையின் முட்டிவரையிலான அளவு;* the length from the elbow to the tip of the middle finger, cubit. *'நாலு முழம் மல்லிகைப் பூ கொடு'.*

**முழம்போடுதல்** வி. (v.) *கை முழ அளவில் அளத்தல்;* measure with muzham.

**முழவு** பெ. (n.) *முரசு;* drum.

**முழித்தல்** வி. (v.) *1. உறக்கம், மயக்கம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டு கண்களைத் திறத்தல்;* wake up (from sleep), regain consciousness (as from fainting). *'சட்டென்று விழித்துக் கொண்டேன்'. 2. தூங்காமல் இருத்தல்;* be awake. *'பயத்தில் இரவு முழுவதும் தூங்காமல் விழித்தவாறு இருந்தான்'.*

**முழி** பெ. (n.) *1. கண்;* eye. *2. பார்வை;* look. *'திருட்டு முழி, ஆந்தை முழி'.*

**முழிப்பு** பெ. (n.) *1. தூக்கம் நீங்கிய நிலை;* state of being awake. *2. மயக்கம் நீங்கிய நிலை, சுய உணர்வுடன் இருக்கும் நிலை;* conscious state. *3. எச்சரிக்கை உணர்வு;* caution. *4. விழிப்புணர்ச்சி;* awareness, vigilance.

**முழு அடைப்பு** பெ. (n.) *எதிர்ப்பு தெரிவிக்கும் நோக்கத்தோடு அனைத்து நிறுவனங்களும் மூடப் பட்டும் போக்குவரத்து நிறுத்தப் பட்டும் நடக்கும் போராட்டம்;* (in India) bandh.

**முழுக்கமுழுக்க** வி.அ. (adv.) *முழு அளவில், முழுமையாக, முழுவதும்;* entirely.

**முழுக்காட்டுதல்** வி. (v.) *குளிக்கச் செய்தல்;* bathe. *'குழந்தைக்கு எண்ணெய் தேய்த்து முழுக்காட்டினேன்'.*

**முழுக்கு** பெ. (n.) *1. நீரில் தலை அமிழும் படி முங்கிக் குளித்தல்;* bathing in a river, etc., *2. தொடர்பு, செயல் போன்றவற்றுக்கு முழுக்குப்போடும் நிலை;* bidding farewell to.

**முழுக்குப்போடுதல்** வி. (v.) *ஒருவருடன் இதுவரை கொண்டிருந்த தொடர்பு, ஈடுபாடு போன்றவற்றை மேற்கொண்டு தொடராமல் நிறுத்திக் கொள்ளுதல்;* sever one's connection, bid farewell, leave once and for all.

**முழுக வார்தல்** வி. (v.) *தலையை நனைத்துக் குளிப்பாட்டுதல்;* bath (including the head). *'பிள்ளைக்கு நேற்று முழுக வார்த்தேன்'.*

**முழுகாமல் இருத்தல்** வி. (v.) *கருத்தரித்த நிலையில் இருத்தல்;* be pregnant; conceive.

**முழுகுதல்** வி. (v.) *1. நீர்ப்பரப்பின் உட் செல்லுதல்; மூழ்குதல்;* go in; sink drown. *2. குளித்தல்;* bathe. *'ஆற்றில் முழுகிவிட்டு வா'. 3. மீட்க முடியாத*

*நிலைக்கு உள்ளாதல்;* (of an undertaking) be sunk; be past redeeming. *'வீடு கடனில் முழுகிவிட்டது'.*

**முழுங்குதல்** வி. (v.) *1. உணவுப்பொருள், மருந்து முதலியவற்றை வாயின் வழியாகச் செல்லவிடுதல்;* swallow; gulp down. *'உணவை நன்றாக மென்ற பிறகே விழுங்குதல் வேண்டும்'. 2. சொற்களைத் தெளிவாகவோ முழுமையாகவோ கேட்க முடியாத படி வெளிப்படுத்துதல்;* suppress (what one to say); gulp down. *'சொற்களை விழுங்காமல் பாடு'.*

**முழுது** பெ. (n.) *முழுமை;* entirely; totally. *'அவனை நான் முழுதாக நம்பினேன்'.*

**முழு நேரம்** பெ. (n.) *1. வேலை, படிப்பு போன்றவற்றில் அவற்றுக்கு உரிய முழுக்கால அளவு;* full time. *2. அரசியல், கலை, இலக்கியம், தொண்டு போன்றவைத் தொடர் பாக வரும் போது வேறு ஒரு பணியில் இல்லாமல் குறிப்பிடப்படு வதையே தனது முகாமைப் பணியாகச் செய்யும் நிலை;* full time.

**முழுப்பரீட்சை** பெ. (n.) *ஆண்டு இறுதித் தேர்வு;* annual examination.

**முழுமனத்தோடு** வி.அ. (adv.) *தயக்கமோ மனக்குறையோ இல்லாமல் முழு விருப்பத்தோடு;* whole heartedly. *'இந்தத் திட்டத்தை முழு மனத்தோடு வரவேற்கிறோம்'.*

**முழுமனதாக** வி.அ. (adv.) *மன நிறைவாக;* whole heartedly. *'இந்த வேலையில் முழு மனதாக ஈடுபட முடிய வில்லை'.*

**முழுமனதான** பெ.அ. (adj.) *நிறைவான;* whole hearted. *'முழு மனதான ஒத்துழைப்பு'.*

**முழுமூச்சு** பெ. (n.) *ஒருவர் தனது முழுத்திறமையையும், ஆற்றலையும் ஒரு செயலில் விரைவாக ஈடு படுத்தும் தன்மை;* full vigour.

**முழுமை** பெ. (n.) *குறைபாடு, குறைவு, விடுபாடு முதலியவை இல்லாத நிலை அல்லது தன்மை, நிறைவு;* completion, wholeness. *'நூல் முழுமை பெறவில்லை'.*

**முழுவதும்** பெ. (n.) *எல்லாம், அனைத்தும்;* all, entire, full. *'நேற்று முழுவதும் மின்சாரம் வரவில்லை'.*

**முழுவீச்சில்** வி.அ. (adv.) *ஒரு செயலில் செய்யப்பட வேண்டியதைத் தீவிரை வாகவும்;* in full swing.

**முள்** பெ. (n.) *1. மீனின் எலும்பு;* bone (of fish). *'மீன் முள் தொண்டையில் சிக்கிக் கொண்டுவிட்டது'. 2. தூண் டில் முனையில் இணைக்கப் படும் சிறிய கொக்கி;* fish hook.

**முள் கம்பி** பெ. (n.) *குத்தும் வகையில் சிறுசிறு கம்பிகளை முறுக்கிப் பின்னி வேலி அமைக்கப் பயன்படும் நீண்ட கம்பி;* barbed wire. *'முள் கம்பியில் ஒரு ஆடு சிக்கிக்கொண்டுவிட்டது'.*

**முள் கரண்டி** பெ. (n.) *முன் பகுதியில் கூரிய முனைகளை உடைய கருவி;* fork.

**முள்வாங்கி** பெ. (n.) *தைத்த முள்ளை பிடித்து இழுப்பதற்கான இரண்டு கூரிய முனைகளை உடைய கருவி;* pincers.

**முள்வேலி** பெ. (n.) *முள் நிறைந்த கிளைகளால் அல்லது முள்கம்பியால் ஆன வேலி;* fence made of thorny branches of trees, barbed wire fencing.

**முள்ளந்தண்டு** பெ. (n.) *முதுகெலும்பு;* back bone, vertebral column. *'முள்ளந்தண்டுள்ள விலங்குகள்'.*

**முளைகட்டுதல்** வி. (v.) *ஊற வைத்த விதையை மூடிவைத்து முளை*

முளைக்கச் செய்தல்; sprout. *'இந்த நெல்லை மூட்டை கட்டித் தொட்டியில் போட்டு முளை கட்டலாம்'.*

**முளைப்பாரி** பெ. (n.) *முளைப்பாலிகை பார்க்க.*

**முளைப்பாலிகை** பெ. (n.) *1. திருமணம் போன்ற சடங்குகளில் வைக்கப்படும் முளைவிட்ட ஒன்பது தவசங்கள் நிறைந்த சிறு மட்பாண்டம்;* pot containing nine kinds of sprouted cereals and millets (used in rituals). *2. முளைவிட்ட ஒன்பது தவசங்கள் நிறைந்த மட்பாண்டங்களை எடுத்துச் சென்று நீர்நிலைகளில் விடும் திருவிழா;* the ritual of immersing pots containing seeds nine varieties of cereals and millets in a river tank, etc.,

**முளைப்பு** பெ. (n.) *விதை முளைத்தல்;* (of plants, seeds) germination.

**முளைவிடுதல்** வி. (v.) *1. விதையில் இருந்து முளை கிளம்புதல்;* germinate put forth shoots. *'அவரைவிதை முளைவிட்டுள்ளது'. 2. குறிப்பிட்ட சூழலில் ஓர் எண்ணம், உணர்வு, நிலை போன்றவை தோன்றுதல், உருவாதல்;* begin to appear.

**முற்காலம்** பெ. (n.) *நிகழ்கிற காலத்துக்கு அல்லது குறிப்பிடப்படும் காலத்துக்கு முந்தைய காலம்;* earlier times. *'முற்காலத்தில் கட்டப்பட்ட சிவன் கோயில்'.*

**முற்பகல்** பெ. (n.) *காலைப் பொழுதுக்கும் நண்பகலுக்கும் இடைப்பட்ட காலம்;* forenoon.

**முற்பட்ட** பெ.அ. (adj.) *காலத்தில் முந்தைய;* prior (in time) earlier, par. *'சிலப் பதிகாரம் கம்பராமா யணத்துக்கு முற்பட்ட நூல் ஆகும்'.*

**முற்பட்ட வகுப்பு** பெ. (n.) *கல்வியிலும் பொருளாதார நிலையிலும் வளர்ச்சி அடைந்ததாகக் கருதப்படுவதும், அரசின் இட ஒதுக்கீடுகளில் இடம் பெறாததுமான இனங்களைக் குறிப்பிடும் சொல்;* the communities not included in the list of backward communities, scheduled castes, and tribes; (in India) other communities.

**முற்படுதல்** வி. (v.) *ஒரு செயலைச் செய்ய முயலுதல் அல்லது தொடங்குதல்;* attempt or begin (to do something).

**முற்பிறப்பு** பெ. (n.) *முற்பிறவி பார்க்க.*

**முற்பிறவி** பெ. (n.) *தற்போதைய பிறவிக்கு முந்தையதாகக் கருதப் படும் பிறவி;* previous birth.

**முற்போக்கு** பெ. (n.) *1. முன்னேற்றத் திற்குத் தேவையான மாற்றங்களைக் காத்தும் காலத்துக்கு ஒவ்வாத மரபான நடைமுறைகளை விலக்கி யும் செயற்படும் போக்கு;* sth. conducive to progress. *2. இடதுசாரி சிந்தனை களைக் கொண்ட அல்லது அவற்றை காக்கும் போக்கு;* leftist out look.

**முற்றம்** பெ. (n.) *1. வீட்டின் முன் பகுதியில் வாசலை ஒட்டிய திறந்த வெளிப்பகுதி;* open courtyard (inside the house). *'முற்றத்தில் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருந்தனர்'. 2. வீட்டைச் சுற்றியுள்ள நிலப் பகுதி;* open space surrounding a house.

**முற்றல்** பெ. (n.) *முதிர விளைந்தது;* (of vegetables) over ripe.

**முற்றிலும்** வி.அ. (adv.) *முழுமையான அளவில், முழுவதும்;* entirely, fully, totally. *'நான் சொல்வது முற்றிலும் உண்மை'.*

**முற்றுதல்** வி. (v.) *1. மிகையான வளர்ச்சியை அடைதல்;* (of certain vegetables) become over ripe, (of coconut) become ripe. *2. நோய் குணப்படுத்த முடியாத நிலையை அடைதல்;* (of illness) get to an advanced

state. *3.* இருவருக்கும் சண்டை முற்றுதல்; (of issues problems, etc.,) get aggravated, reach a critical stage.

**முற்றுகை** பெ. (n.) எதிரிகள் அல்லது குற்றவாளிகள் இருப்பதாக நம்பப் படும் ஓர் இடத்தைச் சுற்றிவளைக்கும் செயல்; siege.

**முற்றுகையிடுதல்** வி. (v.) *1.* போர்ப்படை ஓர் இடத்தைச் சுற்றி வளைத்தல்; siege. *'சேரனின் படைகள் தகடூரை முற்றுகையிட்டன'*. 2. மக்கள் பெருமளவில் ஓரிடத்தில் கூடுதல்; gather (in large numbers).

**முற்றுப்புள்ளி** பெ. (n.) *1.* பொருள் முழுமை பெற்ற தொடரின் இறுதியில் இடப்படும் குறி; (in punctuation) full stop. 2. ஒன்றிலிருந்து மேற்கொண்டு தொடராத நிலை; end. *'இந்தச் சிக்கலுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்'*.

**முற்றுப்பெறுதல்** வி. (v.) ஒரு நிகழ்வு, பணி, திட்டம் முதலியவை முடிவடைதல்; be completed, come to an end. *'வாக்காளர் பட்டியல் பணி இன்னும் முற்றுப் பெறவில்லை'*.

**முறம்** பெ. (n.) தவசங்களைப் புடைப் பதற்குப் பயன்படும் நுனிப் பகுதி சற்று அகலமாக இருக்கும்படி மெல்லிய மூங்கில் பிளாச்சுகளால் பின்னப்பட்ட தடித்த விளிம்புடைய கருவி ; wide - mouthed winnowing pan. *'கடலையை முறத்தில் கொட்டி வை'*.

**முறித்தல்** வி. (v.) *1.* மரம், குச்சி, எலும்பு முதலியவை ஒடிந்து, துண்டாதல்; break, snap, fracture. *'புயலில் மரம் முறிந்து சாய்ந்தது'*. *2.* பேச்சு, உறவு போன்றவை மேற்கொண்டு தொடர முடியாத நிலையை அடைதல்; break down. *3.* பால், பாகு போன்றவை தன்மை மாறிப் பதம் கெடுதல்; change, be spoiled. *4.* சளி, நச்சுப் போன்ற குறைபாடு நீங்குதல்; lose virulence. *5.* வெறி மயக்கம் தெளிதல்; become sober.

**முறி** பெ. (n.) மீனைத் துண்டாக வெட்டிய பகுதி, துண்டு; piece (of fish cut into pieces). *'நடு முறியைக் குழம்பு வை'*.

**முறிகுளம்** பெ. (n.) உடைப்புக்கு உள்ளான கரையை உடைய குளம்; tank with a broken bund.

**முறியடித்தல்** வி. (v.) *1.* செயல் வெற்றி பெறுவதைத் தடுத்தல்; outmanoeuvre, break, crush. 2. ஒருவரால் ஏற்கெனவே நிகழ்த்தப்பட்ட வெற்றியைப் பின்னுக்குத் தள்ளி முந்துதல்; break (an old record).

**முறுக்கு** பெ. (n.) *1.* முறுக்கப்பட்ட நிலை; twisted state. *'மீசை முறுக்கு'*. 2. உடல் வலிமைக்கு உரிய உறுதி; robustness (of body). *3.* மிடுக்கு; (youthful) vitality. *'வாலிப முறுக்கில் பேசுகிறான்'*. 2. நொறுக்குத் தீனியில் ஒருவகை; snacks.

**முறுக்குதல்** வி. (v.) *1.* மீசையின் முனையைத் திருகுதல், துணி முதலிய வற்றை சுருட்டித் திருகுதல்; wring (clothes) twist. *'மீசையை முறுக்கிக் கொண்டே பேசினார்'*. 2. திருகாணி போன்றவற்றை திருகுதல்; turn (a screw so as to fix something in place). *3.* நார் முதலியவற்றைத் திரித்துக் கயிறு தயாரித்தல்; make (rope, etc.,) by twisting, (fibres, etc.,).

**முறுகல்** பெ. (n.) தோசை போன்ற சில உணவுப் பொருள்களின் மொரமொரப்பான நிலை; crisp. *'அம்மா எனக்கு முறுகலாகத் தோசை சுட்டுப் போட்டாள்'*.

**முறுகுதல்** வி. (v.) தசை முறுக்கேறி வலிமையாகக் காணப்படுதல்; (of muscles) be taut. *'அவனுடைய கைகள் முறுகியிருந்தன'*.

**முறைத்தல்** வி. (v.) *சினம், எரிச்சல் முதலியவற்றால் முகத்தைக் கடுமை யாக்கிப் பார்த்தல்;* glower.

**முறை** பெ. (n.) *1. குறிப்பிட்ட தன்மையில் இருக்க வேண்டும் என்ற ஒழுங்கு அல்லது வரையறை;* propriety, proper way. *2. இருவருக்கும் இடையில் இருக்கும் உறவுமுறை;* realationship. *'அவர் எனக்கு மாமா முறை'.*

**முறைகேடு** பெ. (n.) *சட்டம், நெறிமுறை, மரபு போன்றவற்றுக்குப் புறம்பான செயல்;* act contrary to rules and regulations, irreguarity, impropriety.

**முறைத்துக்கொள்ளுதல்** வி. (v.) *ஒருவரைப் பகைத்துக்கொள்ளுதல்;* make an enemy of, antagonize. *'நீ எல்லோரையும் முறைத்துக் கொண்டு வாழ முடியாது'.*

**முறைப்படுத்துதல்** வி. (v.) *1. வரிசைப் படுத்துதல், ஒழுங்குபடுத்துதல்;* arrange, put in order. *'நடந்த நிகழ்வுகளை முறைப்படுத்தி எழுதிக் கொடுங்கள்'. 2. நெறிமுறைக்கு உட்பட்டதாக ஆக்குதல்;* systematize, regulate.

**முறைப்பாடு** பெ. (n.) *முறையீடு;* complaint.

**முறைப்பு** பெ. (n.) *கடுமையான பார்வை;* stern look, glowering look. *'உன் முறைப்பை வேறு யாரிடமாவது வைத்துக் கொள்!'.*

**முறைப்பெண்** பெ. (n.) *திருமணம் செய்துகொள்வதற்கு உரிமை உள்ள பெண்;* woman whom a man has customary claim to marry.

**முறைப்பையன்** பெ. (n.) *திருமணம் செய்து கொள்வதற்கு உரிமை உள்ள ஆண்;* man whom a girl has customary claim to marry.

**முறை மாமன்** பெ. (n.) *ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் உரிமையுடைய தாயின் தம்பி;* younger brother of a girl's mother who has a customary claim to marry her.

**முறைமை** பெ. (n.) *முறை;* system, procedure.

**முறையிடுதல்** வி. (v.) *மனக்குறை, வேண்டுகோள், கோரிக்கை போன்ற வற்றைச் சொல்லுதல்;* appeal (to the authorities); petition.

**முறையீடு** பெ. (n.) *தேவை, குறை போன்றவற்றைக் குறித்த கோரிக்கை;* appeal, petition, prayer.

**முறையே** வி.அ. (adv.) *குறிப்பிடப் பட்டுள்ள வரிசையில்;* respectively.

**முறைவாசல்** பெ. (n.) *பல குடித்தனங்கள் இருக்கும் ஒரு வீட்டில் பொது வாசலை முறை வைத்துப் பெருக்குதல்;* the turn (duty) of each resident to keep the common area clean.

**முன்கட்டு** பெ. (n.) *வீட்டின் முன்பகுதி;* front portion of a house.

**முன்கூட்டியே** வி.அ. (adv.) *முன்பே அல்லது முன்னரே;* in advance, early. *'அவர் யார் என்பது முன்கூட்டியே உனக்குத் தெரியுமா?'.*

**முன்கோபம்** பெ. (n.) *எண்ணிப் பாராமல் சட்டென்று எழும் சினம்;* short temper. *'தன்னுடைய முன்கோபத்தினால் பல நல்ல வேலைகளை இழந்திருக் கிறார்'.*

**முன்கோபி** பெ. (n.) *சட்டென்று சினப் படக்கூடியவர்;* person with a short temper.

**முன்தள்ளுதல்** வி. (v.) *ஒரு வரிசை யிலிருந்து முன்பக்கமாக நீண் டிருத்தல் அல்லது வெளியே தள்ளி அமைதல்;* stick out, project. *'அவளுக்குச் சற்று முன் தள்ளிய பல்'.*

**முன்தேதியிடுதல்** வி. (v.) *கடந்த காலத் தேதி குறிப்பிடப்படுதல்;* backdate.

**முன் நிபந்தனை** பெ. (n.) *முன்கூட்டியே விதிக்கும் கட்டுப்பாடு;* precondition.

**முன்நில்தல்** வி. (v.) *பொறுப்பை ஏற்க முன் வருதல்;* take the initiative.

**முன்நிறுத்துதல்** வி. (v.) *ஒருவரை அல்லது ஒரு கருத்தை அல்லது ஒரு செய்தியை முதன்மைப்படுத்துதல்;* bring to the fore, project some one, keep something in focus.

**முன்பகை** பெ. (n.) *கடந்த காலப் பகை அல்லது மனக்கசப்பு;* enmity. *'முன்பகையை மனத்தில் வைத்துக் கொண்டு அவர் உனக்கு இடையூறு செய்யலாம்'.*

**முன்பணம்** பெ. (n.) *முடிவு செய்யப்பட்ட தொகையில் முன் கூட்டியே தரப்படும் சிறுதொகை;* advance payment. *'அவர் முன்பணம் வாங்கிக் கொண்டு போயிருக்கிறார்'.*

**முன்பதிவு செய்தல்** வி. (v.) *திரையரங்கு, தொடரி, பேருந்து போன்றவற்றில் முன்கூட்டியே இருக்கைகளைப் பதிவு செய்தல்;* reserve (seats, etc.,) in a cinema, train, bus, etc.,).

**முன்பிணை** பெ. (n.) *எதிர்பார்ப்புப் பிணையல் (ஜாமீன்);* anticipatory bail.

**முன்பின் தெரியாத** பெ.அ. (adj.) *பழக்கம் இல்லாத, அறிமுகம் இல்லாத;* unfamiliar, unacquainted, unknown, strange. *'என் அண்ணன் முன்பின் தெரியாத ஆட்களிடம் கூட இயல்பாகப் பேசுவார்'.*

**முன்பின் யோசிக்காமல்** வி.அ. (adv.) *விளைவுகளை எண்ணிப்பார்க்காமல்;* thoughtlessly, without forethought. *'முன்பின் யோசிக்காமல் இந்தச் செயலில் இறங்கிவிடாதே'.*

**முன்புறம்** பெ. (n.) *ஒன்றின் முன்னுள்ள இடம், முன்பக்கம்;* the area in front, the front part. *'கோயிலின் முன்புறம் கடைகள் கட்டப்பட்டுள்ளன'.*

**முன்மாதிரி** பெ. (n.) *1. கட்டடம், சிலை, எந்திரம் போன்றவற்றை எப்படி உருவாக்குவது அல்லது அமைப்பது என்பதற்காகச் சிறு அளவில் முதலில் உருவாக்கப்படுவது;* model, miniature. **2.** *ஒரு செயலைப் பின்பற்றும் வகையில் எடுத்துக்காட்டாக அமையும் ஒருவர்;* examplery, worth following, model. *'இளம் அறிவியலாளர்களுக்கு அவர் நல்ல முன் மாதிரி'.*

**முன்மொழிதல்** வி. (v.) *நெறிமுறைகளுக்கு உட்பட்டு நடக்கும் கூட்டத்தில் ஒரு பதவிக்கு ஒருவரின் பெயரை முன்னெடுத்தல்;* propose (someone's name, a resolution, etc., for consideration at a formal meeting).

**முன்யோசனை** பெ. (n.) *ஒன்றின் விளைவு குறித்து அல்லது நடக்கப்போவது குறித்து அணியமாக இருப்பதற்கு ஏற்ற வகையில் முன்னரே செய்யும் சிந்தனை;* forethought, thoughtfulness.

**முன்விரோதம்** பெ. (n.) *முன்பகை பார்க்க.*

**முன்வைத்தல்** வி. (v.) *1. கேள்வி, கோரிக்கை போன்றவற்றை ஒருவருடைய கவனத்திற்குக் கொண்டு வருதல்;* propose, put forward (resolution, demand, etc.,). **2.** *சான்றாகவோ ஆராய்வதற்கு அடிப்படையாகவோ ஒன்றை எடுத்துக் கொள்ளுதல்;* have something as a theme.

**முன்னங்கால்** பெ. (n.) *விலங்குக்குக் கழுத்தையொட்டி அமைந்திருக்கும் கால்;* (of animals) foreleg.

**முன்னங்கை** பெ. (n.) *மணிக்கட்டுக்கும், கைமூட்டுக்கும் இடைப்பட்ட பகுதி, முழங்கை;* forearm.

**முன்னணி** பெ. (n.) *விளையாட்டு, தேர்தல் போன்றவற்றில் வெற்றிக்கான வாய்ப்பு நிலை;* position ahead (of others), leading position.

**முன்னதாக** வி.அ. (adv.) *குறிப்பிடப்படும் நேரத்திற்கு அல்லது குறிப்பிடப்படுவதற்கு முன்பு;* before, previously.

**முன்னாடி** வி.அ. (adv.) *முன்னால் பார்க்க.*

**முன்னால்** வி.அ. (adv.) *முன்பக்கமாக;* forward, to the front. *'கதவை முன்னால் தள்ளு!'.*

**முன்னிலைப்படுத்துதல்** வி. (v.) *பலருக்கு இடையில் ஒருவருக்குச் சிறப்பளித்தல்;* give prominence to. *'கட்சியில் தன்னை முன்னிலைப் படுத்திக் கொள்வதில் அவர் மிகுந்த முனைப்புடன் இருந்தார்'.*

**முன்னுக்கு** வி.அ. (adv.) *முன்பாக;* forward. *'நாற்காலியைச் சற்று முன்னுக்கு இழுத்துப்போடு'.*

**முன்னுக்குக் கொண்டுவருதல்** வி. (v.) *ஒன்றை அல்லது ஒருவரை முன்னேற்றுதல்;* cause to come up, help (someone rise in the world). *'நீ நன்றாக படித்துக் குடும்பத்தை முன்னுக்குக் கொண்டு வர வேண்டும்'.*

**முன்னுக்குவருதல்** வி. (v.) *ஒருவர் வாழ்க்கையில் உயர்ந்த நிலைக்கு வருதல் அல்லது முன்னேறுதல்;* come up, progress or advance in life.

**முன்னுரிமை** பெ. (n.) *சிறப்பு, தேவை முதலியவற்றைக் கருதி அளிக்கப்படும் அதிகமான சிறப்பு அல்லது உரிமை;* priority. *'அரசின் திட்டங்களில் வேளாண்மைக்கு முன்னுரிமை தரப்படுகிறது'.*

**முன்னெச்சரிக்கை** பெ. (n.) *இயற்கைப் பேரழிவு, கலவரம், நேர்ச்சி போன்றவை நிகழாதவாறு செய்யும் ஏற்பாடு;* precaution.

**முன்னெடுத்தல்** வி. (v.) *ஒன்றுக்கு மட்டும் மிகுந்த சிறப்பளித்து உயர்நிலை அடையச் செய்வதற்காகத் விரைவாகச் செயல்படுதல்;* advance (a cause, etc.,). *'பின்தங்கிய மக்களின் உரிமைகளுக்கான போராட்டங்களை நாம் முன்னெடுப் போம்'.*

**முன்னே** வி.அ. (adv.) *முன்னால், முன்னர்;* ago, earlier, ahead. *'முன்னே பார்த்ததற்கும் இதற்கும் நிறைய வேறுபாடு உள்ளது'.*

**முன்னே பின்னே** வி.அ. (adv.) *1.* *ஒருவருடைய எதிர்பார்ப்பின்படி துல்லியமாக இல்லாமல் சிறிது கூடவோ குறைந்தோ;* not exactly what one might expect. *'விலை கொஞ்சம் முன்னே பின்னே இருந்தாலும் சரி நிலத்தை வாங்கிவிடலாம்'.* 2. *குறிப்பிடப் படும் சூழலில் இதற்கு முன்னால்;* at any time earlier, previously. *'முன்னே பின்னே தெரியாதவனோடு நீ பேச வேண்டாம்'.*

**முன்னேற்பாடு** பெ. (n.) *நடவடிக்கை செயல் போன்றவற்றிற்காக முன் கூட்டியே செய்யும் ஆயத்தப் பணி;* preparatory, work, preliminaries. *'ஊருக்குச் செல்வதற்கான முன்னேற்பாடுகளைச் செய்யத் தொடங்கினாள்'.*

**முன்னேற்றம்** பெ. (n.) *இருக்கும் நிலையை விட உயர்ந்த நிலை அல்லது வளர்ச்சியடைந்த நிலை; மேம்பாடு;* progress, betterment, improvement. *'பையனுடைய படிப்பில் எந்தவித முன்னேற்றமும் இல்லை என்று அவர் வருத்தப் பட்டார்'.*

**முன்னேற்றுதல்** வி. (v.) *உயர்நிலையை அடையச் செய்தல் மேம்படச் செய்தல்;* to make advance. *'பொருளியல்துறையில் நாட்டை முன்னேற்றத் திட்டங்கள் போடப் பட்டுள்ளன'.*

**முன்னேறுதல்** வி. (v.) *1. தடையைக் கடந்து முன் செல்லுதல்;* make headway against. *2. விளையாட்டுப் போட்டிகளில் அடுத்த சுற்றில் நுழைதல் அல்லது அடுத்த சுற்றுக்குத் தகுதி பெறுதல்;* move on to the next stage.

**முன்னைய** பெ.அ. (adj.) *முந்திய;* previous. *'முன்னைய ஆண்டுகளைவிட இந்த ஆண்டு நல்ல மழை பெய்துள்ளது'.*

**முன்னோக்கி** வி.அ. (adv.) *1. முன் பக்கத்தை நோக்கிச் செல்வதாக;* thrusting forward. *'முன்னோக்கிய செயல்; பாய்ச்சல்'. 2. வருங் காலத்தைக் கருத்தில் கொண்டு;* looking forward. *'முன்னோக்கிய பார்வையே முன்னேற்றத்திற்கு வழிவகுக்கும்'.*

**முன்னோட்டம்** பெ. (n.) *பின்னர் பெரிய அளவில் நடக்கவிருப்பது எப்படியிருக்கும் என்பதை உணர்த்தும் வகையில் மாதிரி நிகழ்வாகச் செய்யப்படுவது, ஒன்றின் செயல்பாடு முதலியவற்றைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு நிகழ்த்தப்படும் மாதிரி;* trial, preview, trial run.

**முன்னோடி** பெ. (n.) *1. ஒருவரின் அல்லது ஒன்றின் வளர்ச்சிக்கு அடிப்படையாகக் கடந்த காலத்தில் இருந்த ஒன்று அல்லது ஒருவர்;* pioneer, precursor. *'நாடகத்தின் முன்னோடி தெருக்கூத்து என்று அவர் குறிப்பிடுகிறார்'. 2. முன் மாதிரியாக உள்ள ஒன்று அல்லது ஒருவர் பின்பற்றக்கூடியது;* worth following, model. *'அப்துல்கலாம் அவர்கள் இன்றைய இளைய தலைமுறைக்கு ஒரு முன்னோடியாக விளங்குகிறார்'.*

**முன்னோர்** பெ. (n.) *மாந்த இனத்தின் முந்தைய காலத்தில் வாழ்ந்தவர்கள்; ஒரு மரபின் மூதாதையர்;* forefathers, ancestors. *'என்னுடைய முன்னோர்களைப் பற்றி விசாரித்த போது பல சுவையான தரவல்கள் கிடைத்தன'.*

**முனகல்** பெ. (n.) *வலி, காய்ச்சல் போன்றவற்றால் எழுப்பும் மெல்லிய ஓசை;* groan. *'குழந்தையின் முனகலைக் கேட்டு விழித்துக் கொண்டாள்'.*

**முனகுதல்** வி. (v.) *1. விருப்பமின்மை, எதிர்ப்பு, சலிப்பு முதலியவற்றை வெளிப்படுத்தும் வகையாக தெளிவற்ற வகையில் மெல்லிய குரலில் பேசுதல்;* mutter (as a protest, etc.,). *'வாய்க்குள்ளேயே முனங்காதே, சத்தமாகப் பேசு'. 2. பாட்டு, மெட்டு போன்றவற்றை வாய்க்குள்ளே முணுமுணுத்தல்;* hum. *'ஏதோ ஒரு பழைய பாட்டை முனகிக்கொண்டு வந்தான்'.*

**முனங்குதல்** வி. (v.) *முனகுதல் பார்க்க.*

**முனி** பெ. (n.) *1. முனிவர்;* sage, ascetic. *'அகத்திய முனி'. 2. பேய்;* ghost, evil, spirit. *'அந்த ஆலமரத்தில் முனி இருக்கிறதாமே?'.*

**முனைதல்** வி. (v.) *1. செயலில் கவனத்துடன் ஈடுபடுதல்;* be busy doing, be engaged. *'நான் செலவிற் (பயணத்துக்)கான ஏற்பாடுகளில் முனைந்திருந்தேன்'. 2. ஒன்றுக்காக முயற்சி மேற்கொள்ளுதல் அல்லது முயலுதல்;* take efforts, attempt. *'ஒன்றைப் பற்றிச் சிந்திக்க முனையும் போதுதான் அதில் உள்ள சிக்கல்கள் புரியும்'.*

**முனை** பெ. (n.) *1. முள், ஊசி முதலியவற்றின் கூர்மை;* tip, edge. *'கத்தியின் முனை மழுங்கியிருக்கிறது'. 2. ஓரம், கோடி, விளிம்பு;* corner. *'மிசையின் (மேஜையின்) முனை இடித்து விட்டது'. 3. நீளமோ, உயரமோ கொண்ட ஒரு பொருளின் அல்லது*

இணைக்கப்பட்ட ஒன்றின் தொடங்கும் இடம் அல்லது முடியும் இடம்; beginning or end part (of a rope, street, etc.,). *4.* தலைமையான பல தெருக்கள் சேரும் சந்திப்பு; corner, junction. *'பாரிமுனை'.* *5.* பரந்த நிலப்பரப்பு குவிந்து கடலில் முடியும் இடம்; cape.

**முனைப்பு** பெ. (n.) ஒரு செயல், பணி போன்றவற்றில் காட்டும் ஆர்வம், கவனம், மும்முரம்; determination, drive. *'நம் அணியினர் இன்னும் சற்று முனைப்பாக விளையாடியிருந்தால் வெற்றி பெற்றிருக்கலாம்'.*

**முனையம்** பெ. (n.) *1.* வானூர்தி நிலையத்தைக் குறிப்பிடும்போது ஒரே சமயத்தில் பல ஊர்திகள் இறங்கத் தளஏந்து கொண்ட நிலையம்; (airport) terminal. *2.* துறைமுகத்தில் குறிப்பிட்ட வகைக் கப்பல்கள் வரும் துறை; terminal.

**முனைவர்** பெ. (n.) குறிப்பிட்ட துறையில் ஆராய்ச்சி செய்து பல்கலைக் கழகத்துக்கு ஆய்வேடு அளித்துப் பெறும் உயரிய பட்டம்; Doctor of Philosophy.

## மூ

**மூக்கடைப்பு** பெ. (n.) நீர்க் கோவையினால் மூக்கில் சளி அடைத்துக் கொண்டு மூச்சுவிடத் துன்பப்படும் நிலை; congestion of the nose. *'மூக்கடைப்பைப் போக்குவதற்காக ஆவிபிடித்துக் கொண்டிருந்தாள்'.*

**மூக்கணாங்கயிறு** பெ. (n.) மாட்டின் மூக்கில் நுழைத்துத் தலையைச் சுற்றிக் கட்டியிருக்கும் கயிறு; rope or string drawn through the bridge of the nose of a bullock (as a bridle). *'மூக்கணாங் கயிற்றைப் பிடித்து இழுத்ததும் மாடு நின்றது'.*

**மூக்கறுத்தல்** வி. (v.) ஒருவரை அவமானப்படுத்துதல்; humiliate, snub. *'தேவையில்லாமல் அவனிடம் சண்டைக்குப் போனதால் எல்லோர் முன்னிலையிலும் உன்னை மூக்கறுத்துவிட்டான்'.*

**மூக்கறுபடுதல்** வி. (v.) அவமானப் படுதல்; be snubbed. *'பக்கத்து வீட்டுக்காரருக்காக முறைமை (ஞாயம்) பேசப் போய் மூக்கறு பட்டுப் போனேன்'.*

**மூக்கால் அழுதல்** வி. (v.) *1.* ஒருவர் தன் குறையைக் கூறிப் புலம்புதல்; whine. *'எப்போது பார்த்தாலும் கையில் காசு இல்லை என்று மூக்கால் அழுகிறான்'.* *2.* ஒன்றைச் செய்யவோ பிறருக்குத் தரவோ மனமில்லாமல் இருத்தல் அல்லது தயங்குதல்; grudge, grumble. *'இந்தச் சின்ன வேலையைச் செய்வதற்குக்கூட மூக்கால் அழுகிறாயே'.*

**மூக்கால் ஓடுதல்** வி. (v.) அதிகக் காரம் சாப்பிடுவதால் மூக்கிலிருந்து நீர் வடிதல்; have a running nose (caused by hot food).

**மூக்கில் வியர்த்தல்** வி. (v.) ஒருவர் பிறருக்குத் தெரிந்திருக்காது என்று நினைக்கிற செய்தியை மற்றொருவர் எப்படியோ தெரிந்துவைத்திருத்தல்; get to know in an uncanny way, sniff something out.

**மூக்கில் விரலை வைத்தல்** வி. (v.) ஒன்றை அல்லது ஒருவரைப் பார்த்து வியந்து போதல்; be impressed. *'ஆசிரியரே மூக்கில் விரலை வைக்கும் அளவுக்குச் சிறுவன் விடையளித்தான்'.*

**மூக்குக்கண்ணாடி** பெ. (n.) பார்வைக் குறையை ஈடு செய்வதற்காக அணியும் கண்ணாடி; pair of spectacles.

**மூக்குடைபடுதல்** வி. (v.) மூக்கறுபடுதல் பார்க்க.

**மூக்குத்தி** பெ. (n.) பெண்கள் மூக்கு நுனியின் பக்கவாட்டுப் பகுதியில்

துளையிட்டு அணிந்து கொள்ளும் அணிகலன்; small ornament worn on the nose by women.

**மூக்குப்பிடிக்க** வி.அ. (adv.) அளவுக்கு அதிகமாக உண்ணுதல், குடித்தல் ; (eat) to one's fill. '*கல்யாண வீட்டில் மூக்குப்பிடிக்கச் சாப்பிட்டு விட்டு இப்போது திணறுகிறாய்*'.

**மூக்குப்பொட்டு** பெ. (n.) சிறிய மூக்குத்தி; small ornament worn on the nose.

**மூக்குப்பொடி** பெ. (n.) நரம்புகளைக் கிளர்ச்சியுறச் செய்யும் பொருட்டு மூக்கில் போட்டுக்கொள்ளும் வறுத்துப் பொடித்த புகையிலைத் தூள்; snuff. '*அவர் புகைபிடிக்க மாட்டார். ஆனால் மூக்குப்பொடி போடுவார்*'.

**மூக்குப்போணி** பெ. (n.) மூக்கு வைத்த குவளை ; metal glass with a spout.

**மூக்கும்முழியுமாக** வி.அ. (adv.) பொருந்திய எழில் முக அழகோடு; with well formed features. '*உனக்குப் பார்த்திருக்கும் பெண் மூக்கும் முழியுமாக இருக்கிறாள்*'.

**மூக்குமுட்ட** வி.அ. (adv.) மூக்குப்பிடிக்க பார்க்க.

**மூக்கை உடைத்தல்** வி. (v.) ஒருவருடைய குறையைப் பிறர் அறியுமாறு சுட்டிக் காட்டி அவமானப்படுத்துதல்; to make shame. '*ரொம்ப நல்லவன் மாதிரி பேசிக் கொண்டிருந்தான். ஊர்க் கூட்டத்தில் அவன் மூக்கை உடைத்து விட்டேன்*'.

**மூக்கைச் சிந்துதல்** வி. (v.) *1. சளி அடைத்திருக்கும் மூக்கிலிருந்து காற்றை விரைவாக வெளியேற்றிக் கையால் மூக்கை அழுத்திச் சளியை அகற்றுதல்;* blow the nose. '*குழந்தைக்கு மூக்கைச் சிந்தி விடு*'. *2. (பெண்களைக் குறித்து வரும்போது) நினைத்த மாத்திரத்தில் கண்ணீர் விடுதல்; அழுதல்;* (said of women) shed tears (at the slightest provocation).

**மூக்கைத் துளைத்தல்** வி. (v.) நறுமணம், நாற்றம் முதலியவை மிகுதியாக வீசுதல்; (of fragrance or flavour) excite the sense of smell (of stench) be nauseating. '*மூக்கைத் துளைக்கும் சாக்கடை நாற்றம்*'.

**மூக்கை நுழைத்தல்** வி. (v.) மற்றவர் செயலில் தலையிடுதல்; poke one's nose into. '*அடுத்தவர் செயற்பாட்டில் மூக்கை நுழைக்காதே என்று எத்தனை தடவை உன்னிடம் சொல்லியிருக்கிறேன்*'.

**மூச்சடைத்தல்** வி. (v.) மூச்சுத்திணறுதல்; suffocate, breathe with difficulty. '*அகவையாகிவிட்டதால் படியில் வேகமாக ஏற முடியவில்லை. எனக்கு மூச்சடைக்கிறது*'.

**மூச்சிரைப்பு** பெ. (n.) இயல்பைவிட அதிக விரைவோடு வெளிப்படும் மூச்சுக் காற்று; pant. '*மாடி ஏறும்போது அந்தப் பெரியவருக்கு இரைப்பு வந்துவிட்டது*'.

**மூச்சுத்திணறல்** பெ. (n.) சீராக மூச்சுவிட முடியாத அளவில் மூச்சுத் தடைப் படும் நிலை; suffocation in breathing.

**மூச்சுத்திணறுதல்** வி. (v.) சீராக மூச்சுவிட முடியாத அளவு மூச்சுத் தடைபடுதல்; suffocate.

**மூச்சுப்பிடித்துக்கொள்(ளு)தல்** வி. (v.) மூச்சுவிடும்போது வலிக்கும் அளவுக்கு மார்பு, முதுகு, இடுப்பு போன்ற பகுதிகளில் உள்ள தசை இறுகுதல்; have sprained muscles, pull a muscle. '*மூச்சுப்பிடித்துக் கொண்டதால் நேராக உட்கார முடிய வில்லை*'.

**மூச்சுப்பிடிப்பு** பெ. (n.) இயல்பாக மூச்சு விட முடியாத அளவிற்கு மார்பு, முதுகு, இடுப்பு போன்ற பகுதிகளில் உள்ள தசை இறுக்கம்; sprained muscles, pull a muscle, spasm.

**மூச்சுப்பேச்சு** பெ. (n.) *உயிருடன் அல்லது தன் நினைவுடன் இருப்பதற்கு அடையாளமான பேசுதலும் மூச்சு விடுதலும்;* signs of life, consciousness. *'அதிர்ச்சியில் அவருக்குப் பேச்சுமூச்சு இல்லை'.*

**மூச்சுமுட்டுதல்** வி. (v.) *மூச்சுத் தடை பட்டுத் திணறுதல்;* suffocate, breathe hard. *'அறையில் புகை மண்ட மண்ட மூச்சுமுட்டத் தொடங்கியது'.*

**மூச்சுவாங்குதல்** வி. (v.) *மூச்சு இரைத்தல்;* gasp for breath, pant. *'பத்து அடி நடப் பதற்குள் உனக்கு மூச்சுவாங்கு கிறதே!'.*

**மூச்சுவிடாமல்** வி.அ. (adv.) *ஒரு செய்தியைப் பற்றி பேசும்போது நிறுத் தாமல் பேசுதல் அல்லது இடை விடாமல் பேசுதல்;* (while talking) without pausing for breath.

**மூச்சுவிடுதல்** வி. (v.) *1. இளைப்பாறுதல்;* take or have a breather. *2. எதிர்மறையில் அல்லது எதிர்மறைத் தொனியில் ஒன்றைப் பற்றி ஒருவரிடம் தெரி வித்தல்;* make even a mention of.

**மூச்சைப் பிடித்துக்கொண்டு** வி.அ. (adv.) *ஒருவருக்கு ஏற்படும் தொந்தரவு, சிக்கல், வலி போன்றவற்றைக் கடுமையாகத் தாங்கிக்கொண்டு;* putting up with inconvenience.

**மூஞ்சி** பெ. (n.) *முகம்;* face.

**மூட்டம்** பெ. (n.) *முகில், புகை போன் றவை பெருமளவில் திரண்டிருக்கும் நிலை;* thick mass (of clouds, smoke, etc.,). *'மேக மூட்டம் சூரிய ஒளியை மறைத்திருந்தது'.*

**மூட்டம் போடுதல்** வி. (v.) *வைக்கோல், விறகு போன்றவற்றைக் கொளுத்தி குளிர்காயப் புகை போடுதல்;* make a fire in open air. *'குளிருக்கு இதமாக மூட்டம் போட்டுக் கொண்டிருந் தார்கள்'.*

**மூட்டுதல்** வி. (v.) *1. தீ உண்டாக்குதல்;* make (fire). *2. அடுப்பில் நெருப்பு பற்ற வைத்தல்;* kindle (fire in the hearth). *3. சிரிப்பு, சினம் போன்றவற்றை உண்டாக்குதல்;* make (laugh or angry), create (mischief). *4. சாக்கு, துணி போன்றவற்றைச் சேர்த்துத் தைத்தல்;* bring closer, sew together.

**மூட்டுவலி** பெ. (n.) *கை, கால் மூட்டில் இறுக்கத்தையும் வலியையும் ஏற் படுத்தும் ஒருவகை நோய்;* rheumatism.

**மூட்டை** பெ. (n.) *தவசம், மணல், உரம் போன்றவை நிரப்பப்பட்டு கட்டப் பட்ட அல்லது தைக்கப்பட்ட சாக்குப் பை;* sack (holding grain, etc.,). *'கூடத்தில் நெல் மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன'.*

**மூட்டை கட்டிவைத்தல்** வி. (v.) *ஒன்றை வேண்டாம் என்றோ அல்லது இடைக்காலமாகவோ ஒதுக்கி வைத்தல்;* put aside. *'கதை எழுதுவதை மூட்டை கட்டிவைத்து நீண்ட நாள் ஆகிறது'.*

**மூட்டை கட்டுதல்** வி. (v.) *ஓரிடத்தை விட்டு நீங்குதல் அல்லது வெளி யேறுதல்;* quit, leave, vacate. *'இனிமேல் இங்கு உனக்கு வேலை இல்லை, மூட்டையைக் கட்டு'.*

**மூட்டை தூக்குதல்** வி. (v.) *சுமை தூக்கும் தொழிலைச் செய்தல்;* earn a living by carrying heavy loads.

**மூட்டைமுடிச்சு** பெ. (n.) *செலவிற்குத் (பயணத்திற்குத்) தேவையான துணி மணிகளும் பிற பொருட்களும்;* bag and baggage.

**மூட** பெ.அ. (adj.) *அறிவுக்கு ஒவ்வாத, முட்டாள்தனமான;* absurd, foolish. *'மூடப்பழக்கம்'.*

**மூடத்தனம்** பெ.அ. (adj.) *முட்டாள்தனம், மடத்தனம்;* foolishness. ‘*பணம்தான் வாழ்க்கை என்று நினைப்பது மூடத் தனம்*’.

**மூடநம்பிக்கை** பெ. (n.) *பகுத்தறிவுக்கு ஒவ்வாத நம்பிக்கை;* superstitious belief.

**மூடன்** பெ. (n.) *அறிவில்லாதவன், முட்டாள்;* stupid man.

**மூடாக்கு** பெ. (n.) *1. முக்காடு;* cloth covering the head. ‘*திண்ணையில் மூடாக்குப் போட்டுக்கொண்டு தூங்குவது யார்?*’. *2. மூடப்பட்ட அல்லது மூடியிருக்கும் நிலை;* the state of being closed or blocked.

**மூடாக்கு முறை** பெ. (n.) *மண்ணி லிருக்கும் ஈரப்பதத்தைத் தக்கவைப் பதற்காகப் பயிரைச் சுற்றியுள்ள மண்ணை இலை, தழை, வைக்கோல் போன்றவற்றால் மூடும் முறை;* mulching.

**மூடி** பெ. (n.) *எழுதுகோல் போன்ற வற்றில் மேல் பகுதியைப் பாதுகாக்கச் செருகி மூடும் அமைப்பு;* cap (of a pen, etc.,). ‘*தூவலின் மூடியைக் கழற்றி வைத்துவிட்டு எழுதத் தொடங் கினான்*’.

**மூடி மறைத்தல்** வி. (v.) *நடந்து விட்டதைப் பிறர் அறிந்துவிடாத வாறு செய்தல்;* cover up. ‘*எவ்வளவு மூடி மறைத்தாலும் உண்மை ஒரு நாள் தெரியாமலா போகும்?*’.

**மூடுதல்** வி. (v.) *1. திறந்திருக்கும் கதவு, சாளரம் முதலியவற்றை உள்ளே அல்லது வெளியே பார்க்க முடியாத அல்லது ஏதும் செல்ல முடியாத நிலைக்கு நகர்த்துதல்;* (of door, etc.,) close (shut a door, etc.,). ‘*இந்தப் பொத்தானை அமுக்கினால் கதவு மூடும்*’. *2. பெட்டி, பை, ஏனம் போன்றவற்றின் வாய்ப்பகுதி, முன்பகுதி அல்லது மேல் பகுதியை அடைத்தல்;* (of a case box, etc.,) be in a closed condition, close (a case, box, etc.,). ‘*நான் பார்த்தபோது பெட்டி மூடித்தான் இருந்தது*’.

**மூடுபனி** பெ. (n.) *தெளிவாகப் பார்க்க முடியாதபடி அடர்த்தியாகக் காற்றில் நிறைந்திருக்கும் பனி;* fog. ‘*மூடுபனி காரணமாகப் பாதை தெரியாததால் வண்டிகள் மெதுவாகச் சென்றன*’.

**மூடுபெட்டி** பெ. (n.) *பனையோலையால் பின்னப்பட்ட மூடியுள்ள சிறிய பெட்டி போன்ற கூடை;* box like basket with a lid made of dried palmyra leaf.

**மூடு மந்திரம்** பெ. (n.) *ஒன்று வெளிப் படையாக இல்லாமல் கமுக்கமாக (ரகசியமாக) இருக்கும் நிலை;* veiled activity, secrecy.

**மூத்தவர்** பெ. (n.) *அகவையானவர்;* senior (one's) elder. ‘*மூத்தவர்களை மதித்து நடப்பது நல்லது அல்லவா?*’.

**மூத்தாள்** பெ. (n.) *முதல் மனைவி;* first wife. ‘*மூத்தாளின் பிள்ளைகளை இளையாள் அன்புடன் நடத்தியது அவருக்கு ஆறுதலாக இருந்தது*’.

**மூத்தோர்** பெ. (n.) *அகவை முதிர்ந்த வர்கள்;* the elderly. ‘*மூத்தோரிடம் பணிவாக நடந்துகொள்பவன் நான்*’.

**மூதாட்டி** பெ. (n.) *அகவை முதிர்ந்த பெண்;* old woman. ‘*எண்பது வயது மதிக்கத் தக்க மூதாட்டி*’.

**மூதேவி** பெ. (n.) *1. போகூழ் (துரதிர்ஷ் டத்தை) விளைவிப்பதாகக் கருதப் படும் பெண் தெய்வம்;* female deity who is believed to cause misfortune. *2. ஒருவரைத் திட்டுவதற்குப் பயன் படுத்தும் சொல்;* a term of abuse. ‘*அந்த மூதேவி வந்துவிட்டானா?*’.

**மூர்ச்சித்தல்** வி. (v.) *நினைவிழத்தல் அல்லது மயக்கமடைதல்;* faint.

*'அதிர்ச்சியால் மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள்'.*

**மூர்ச்சை** பெ. (n.) *நினைவிழப்பு;* fainting. *'வெயில் தாளாமல் கிழவர் மூர்ச்சையாகிவிட்டார்'.*

**மூலகர்த்தா** பெ. (n.) *ஒரு செயல், நிகழ்வு போன்றவற்றுக்கு மூலகாரணமாக இருப்பவர்;* person responsible (for an event).

**மூலதனம்** பெ. (n.) *தொழில் துவங்கத் தேவைப்படும் அல்லது பயன்படுத் தப்படும் பணம்;* capital, investment.

**மூலப்பொருள்** பெ. (n.) *ஒரு பொருள் தயாரிப்பதற்குத் தேவையான தனித் தனியான அடிப்படைப் பொருள்;* raw material.

**மூலம்** பெ. (n.) *1. மலவாய் ஓரத்திலோ உட்பகுதியிலோ ஏற்படும் மிகுந்த வலியை உண்டாக்கும் சிறு புடைப் புகள்;* haemorrhoids, piles. *2. ஒன்று தோன்றுவதற்கு அடிப்படை மூலம்;* source, origin.

**மூலவர்** பெ. (n.) *கோயிலில் மறை நெறிகளின்படி திருநிலை நிறுவல் செய்யப்பட்ட முதற்றெய்வம்;* principal deity in a temple.

**மூலிகை** பெ. (n.) *மருந்தாகப் பயன்படும் இலை, வேர், போன்ற பகுதி;* medicinal plant or herb. *'இது பதினைந்து வகையான மூலிகை களைக் கொண்டு உருவாக்கப்பட்ட மருந்து'.*

**மூலை** பெ. (n.) *1. இரு பக்கங்களோ கோடுகளோ சந்திக்கும் கோணத்தில் அமைந்திருக்கும் பரப்பு அல்லது இடம், முனை;* corner (where two sides or lines meet). *'சதுரத்துக்கு நான்கு மூலைகள்'. 2. ஒருவருடைய தேவையோடு ஒப்பிடும்போது இருப்பது மிகவும் குறைவு;* too insignificant (in comparison with someone), nowhere near enough.

**மூலை மட்டம்** பெ. (n.) *கட்டடத்தின் மூலை செங்கோணத்தில் இருக் கிறதா என்பதைக் கண்டறியப் பயன்படும் 'ட' வடிவில் இரண்டு தகடுகள் பொருத்தப்பட்ட கருவி;* mason's set square.

**மூலைமுடுக்கு** பெ. (n.) *1. வீடு, கட்டடம் போன்றவற்றில் உள்ள சிறுசிறு இடைவெளி அல்லது இடுக்கு;* small gaps (between things). *2. ஓர் ஊர், நாடு போன்ற வற்றில் எளிதில் சென்றடைய முடியாத இடம்;* (unreachable) corner (of a country, etc.,) every nook and cranny.

**மூலைவிட்டம்** பெ. (n.) *சதுரம், செவ்வகம் போன்றவற்றில் நேரெதிர் மூலைக்கு இடையில் செல்வதும் மேற்குறிப் பிட்ட வடிவங்களைச் சமமாகப் பிரிப் பதுமான கோடு அல்லது அந்தக் கோட்டின் நீளம்;* diagonal.

**மூழ்குதல்** வி. (v.) *1. நீரின் மேற்பரப்பி லிருந்து கீழே செல்லுதல்; முழுகுதல்;* submerge, be drowned, sink. *'பயிர்கள் நீரில் மூழ்கியுள்ளன'. 2. உணர்ச்சி, நினைவு, வேலை முதலியவற்றில் ஒருவர் தன்னையே உட்படுத்திக் கொள்ளுதல் அல்லது ஆழ்தல், அமிழ்தல்;* be buried (in thought, etc.,), be immersed (in grief, etc.,).

**மூள்தல்** வி. (v.) *1. தீ பற்றுதல்;* (of fire) catch, break out. *2. உறழ்வுரையாடல், கலவரம் போன்றவை ஏற்படுதல்;* (of dispute, war, etc.,) break out.

**மூளி** பெ. (n.) *பெண்கள் நகை, செஞ்சாந்து முதலியவை இல்லாமல் வெறுமையாகத் தோற்றமளிக்கும் நிலை;* (of women) bareness (i.e. without wearing ornaments and other auspicious signs such as kungumam).

**மூளைக்காய்ச்சல்** பெ. (n.)*அழற்சியினால் மூளையில் உண்டாகும் காய்ச்சல் கூடிய நோய்;* brain fever.

**மூளைச்சலவை செய்தல்** வி. (v.) *தானாகச் சிந்தித்து முடிவுக்கு வர விடாமல் ஒன்றைத் திரும்பத் திரும்பச் சொல்லி அதை ஏற்கச் செய்தல்;* brain wash.

**மூளைச்சாவு** பெ. (n.) *நெஞ்சகம் வேலை செய்தாலும் குணப்படுத்தவே முடியாத அளவுக்கு மூளை செயலிழந்து, உயிர்காப்புக் கருவிகளைக் கொண்டு மட்டுமே ஒருவர் உயிருடன் இருக்கும் நிலை;* brain death.

**மூளையைக் கசக்குதல்** வி. (v.) *தீர்வு கண்டறிவதற்காகவோ எப்படி நிகழ்ந்தது என்பதை அறிவதற்காகவோ ஒன்றைப் பற்றி மிக ஆழமாகச் சிந்தித்தல்;* think hard, rack one's brains.

**மூன்று சக்கர வண்டி** பெ. (n.) *மாற்றுத்திறனாளிகள் பயன்படுத்தும் பின்புறம் இரண்டு சக்கரங்களையும், முன்புறம் ஒரு சக்கரத்தையும் கொண்ட வண்டி;* tricycle for the physically challenged and the injured, operated with hands.

**மூன்று முடிச்சுப்போடுதல்** வி. (v.) *பெண்ணைத் தாலி கட்டித் திருமணம் செய்துகொள்ளுதல்;* marry (a woman according to tradition).

**மூன்று முடிச்சு விழுதல்** வி. (v.) *பெண்ணுக்குத் திருமணமாதல்;* (of a woman) get married. *'என் பெண் கழுத்தில் மூன்று முடிச்சு விழுந்து விட்டால் எனக்கு மனஅமைதியாக இருக்கும்'.*

# மெ

**மெச்சுதல்** வி. (v.) *1. புகழ்தல், பாராட்டுதல்;* to praise, extol. *2. மதித்தல்;* to esteem. *3. வியத்தல்;* to admire greatly, wonder.

**மெட்டி** பெ. (n.) *பெண்கள் கால் பெருவிரலுக்கு அடுத்த விரலில் அணிந்துகொள்ளும் வெள்ளி வளையம்;* silver ring worn on the second toe.

**மெட்டு** பெ. (n.) *பாடலின் இசை வடிவம்;* tune or melody.

**மெத்தப்படித்தவன்** பெ. (n.) *மிகுதியாகப் படித்தவர்;* voracious reader.

**மெத்தனம்** பெ. (n.) *உரிய நேரத்தில் ஒரு செயலைச் செய்யப் போதிய அக்கறையும் ஈடுபாடும் காட்டாதத் தன்மை;* lake of seriousness; slackness.

**மெத்துதல்** வி. (v.) *1. மிகுதல்;* to abound, increase. *2. நிரம்புதல்;* to be filled.

**மெத்துப்பூசுதல்** வி. (v.) *கனத்தப்பூச்சு மேன்மேலும் பூசுதல்;* to give thick coating.

**மெத்தெனல்** பெ. (n.) *1. மென்மைக் குறிப்பு;* expr. signifying being smooth or soft. *2. அமைதிக்குறிப்பு;* being gentle. *3. காலத்தாழ்ச்சிக்குறிப்பு;* being slow.

**மெத்தை** பெ. (n.) *மென்மையான பொருளை உள்ளே வைத்துத் தைத்த படுக்கை;* mattress stuffed with cotton.

**மெத்தைக்கட்டில்** பெ. (n.) *பஞ்சாலான மெத்தையை விரித்த கட்டில்;* cot which spreaded with soft bed.

**மெத்தைச்சட்டை** பெ. (n.) *பஞ்சு உள் வைத்துத் தைத்த சட்டை;* bush shirt or bush jacket.

**மெத்தைப்பாய்** பெ. (n.) *மெத்தைமேல் விரிக்கும் பாய்;* mat for spreading on a mattress.

**மெதுக்கிடுதல்** வி. (v.) *மெதுவாயிருத்தல்;* to be soft.

**மெதுபக்கோடா** பெ. (n.) *கடலை மாவை பொடிக்கீற்று வெங்காயத்தோடு பிசறி, எண்ணெயில் பொரித்துச் செய்யப்படும் ஒரு தின்பண்டம்;* savoury made of chickpea paste by cooking it soft in oil.

**மெதுமெதுத்தல்** வி. (v.) *மென்மையாயிருத்தல்;* to be so soft.

**மெதுமெதுப்பு** பெ. (n.) *மென்மைத் தன்மை;* softness.

**மெதுவடை** பெ. (n.) *உளுந்து மாவால் செய்த வடை;* a kind of vadai made of black gram paste.

**மெதுவாக** வி. (v.) *1. விரைவோ, முடுக்கமோ இல்லாமல் குறைவாக;* slowly, unhurriedly. *2. ஒலி அதிகம் இல்லாத;* softly.

**மெய்க்கடுப்பு** பெ. (n.) *உடல் முழுவதும் தோன்றும் வலி;* pain all over the body.

**மெய்கவசம்** பெ. (n.) *உடலிலிடும் காப்புச்சட்டை;* coat of mail, armour.

**மெய்காட்டுதல்** வி. (v.) *நேரில் வந்து தோன்றுதல்;* to mark one's presence, to attend personally, to appear.

**மெய்காவல்** பெ. (n.) *கோயிற்காவலர்;* temple guard.

**மெய்காவலர்** பெ. (n.) *முகாமையான மாந்தரின் பாதுகாப்புக்காக அமர்த் தப்படும் காவலர்;* body guard.

**மெய்கீர்த்தி** பெ. (n.) *அரசனுடைய கொடிவழி, அடைந்த வெற்றி, ஆட்சிக்காலம் முதலியவற்றைப் பாடல் வடிவில் கல்லில் பொறித்த வரலாற்றுச் செய்தி;* the details relating to the genealogy, victories, etc., of a king in the form of verse inscribed on stone.

**மெய்சிலிர்த்தல்** வி. (v.) *வியப்பு, மகிழ்ச்சி முதலியவற்றால் கிளர்ச்சி அடைதல்;* be enthralled.

**மெய்(ஞ்)ஞானம்** பெ. (n.) *மெய்ப் பொருளைப் பற்றிய அறிவு; உண்மை யான அறிவு;* true knowledge.

**மெய்(ஞ்)ஞானி** பெ. (n.) *மெய்ப்பொருள் கொள்கைகளை உருவாக்குபவர்;* philosopher.

**மெய்ப்பாடு** பெ. (n.) *1. உடல் வழியான வெளிப்பாடு;* physical manifestations of emotions. *2. உண்மை;* truth.

**மெய்ப்பித்தல்** வி. (v.) *எண்பித்தல், நிறுவுதல்;* to prove, substantiate.

**மெய்ப்பு** பெ. (n.) *திருத்தங்களை மேற்கொள்வதற்காக, இறுதி அச்சு வடிவம் பெறுவதற்கு முந்தைய அச்சுப்படி;* proofs.

**மெய்ப்புப்பணி** பெ. (n.) *அச்சுப்படிகளை ஒப்பிட்டுப் பார்க்கும் பணி;* proof reading work.

**மெய்ப்பூச்சு** பெ. (n.) *உடலின் மேல்பூசும் கலவைச் சாந்து முதலியன;* fragrant paste.

**மெய்ம்மறத்தல்** வி. (v.) *1. அறிவு நீங்குதல்;* to swoon, lose consciousness. *2. மயக்கமடைதல்;* faint.

**மெருகு** பெ. (n.) *ஒரு பொருள் புதிதாக இருக்கும்போது காணப்படும் பளபளப்பு; பொலிவு;* brightness.

**மெல்லுதல்** வி. (v.) *உணவுப்பொருள் முதலியவற்றைப் பற்களால் கடித்து அரைத்தல்;* masticate.

**மெழுகு** பெ. (n.) *கொழுப்பிலிருந்து (அ) எண்ணெயிலிருந்து உருவாக்கப்படு வதும் வெப்பத்தில் உருகுவதுமான பொருள்;* wax.

**மென்பொருள்** பெ. (n.) *கணிப்பொறியை இயக்குவதற்கான கட்டளை நிரல் களின் தொகுப்பு;* software.

**மென்மை** பெ. (n.) *தொடுவதற்குப் பஞ்சு போல இருக்கும் தன்மை;* softness, tenderness.

**மென்னீர்** பெ. (n.) *சுண்ணாம்புச் சத்து குறைவாக இருப்பதால் வழலை நுரைக்கும் தன்மையுடைய நீர்;* soft water.

## மே

**மேடிடுதல்** வி. (n.) *மண்ணால் பள்ளம் நிரப்பப்படுதல்;* silt up.

**மேடு** பெ. (n.) *1. நிலத்தில் சுற்றி இருக்கும் பரப்பை விட உயரமான பகுதி;* rised ground. *2. உள்ளங்கையில் புடைப்பாக இருக் கும் பகுதி;* mount.

**மேடையேறுதல்** வி. (v.) *1. நாடகம், நாட்டியம் முதலியன மேடையில் நிகழ்த்தப்படுதல்;* (of drama, dance, etc.,) be staged. *2. இசைப்பாட்டு, பேச்சு முதலியவற்றை நிகழ்த்துவதற் காக மேடையில் ஏறுதல்;* be on the stage.

**மேதகு** பெ. (n.) *பெரும்பாலும் மாநில ஆளுநரைக் குறிப்பிடுவதற்குப் பயன் படுத்தப்படும் மதிப்புச் சொல்;* form of address for the Governor of a state.

**மேம்படுத்துதல்** வி. (v.) *இருக்கும் நிலையை விட உயர்வான (அ) சிறப்பான நிலையை அடையச் செய்தல்;* uplift, better, develop.

**மேம்படுதல்** வி. (v.) *இருக்கும் நிலையை விட உயர்ந்த நிலையை அடைதல்;* reach a better state.

**மேய்த்தல்** வி. (v.) *கால்நடைகளை மேய்ச்சல் நிலங்களில் மேயச் செய்தல்;* to craze the cattle in the posture to feed.

**மேய்தல்** வி. (v.) *கால்நடைகள் நிலத்தில் முளைத்திருக்கும் புற்களை அலைந்து திரிந்து தேடித் தின்னுதல்;* mostly of cattle graze in the fields.

**மேல்தாடை** பெ. (n.) *கீழ்த்தாடைக்கு மேலாக அமைந்த தாடை;* the upper jaw.

**மேல்வரிசை** பெ. (n.) *1. மேலிடமாக அமைந்துள்ள வரிசை;* upper row. *2. செங்கற் கட்டடத்தில் எழுதகத் துக்கு மேலுள்ள படைச்சுவர்;* blocking course, upper layer in masonry.

**மேல்விசாரணை** பெ. (n.) *1. கண் காணிப்பு;* superintendence, inspection. *2. மேற்கொண்டு செய்யும் புல னாய்வு;* further enquiry or trial, retrial, rehearing.

**மேல்விரிப்பு** பெ. (n.) *மழைக்காகவோ, சூரிய ஒளி மறைப்புக்காகவோ மேலாகக் கட்டும் துணி;* an awning.

**மேல்வீடு** பெ. (n.) *1. தரையில் அமைந்த அறைகளுக்கு மேல் அறைகள் அமையுமாறு கட்டப்பட்ட வீடு, மெத்தை வீடு;* storeyed house.

**மேலாண்மை** பெ. (n.) *பிறரைக் கட்டுப் படுத்தக்கூடிய வலு, மேலாளுமை, மேலோங்கிய நிலை;* dominance, suzerainty.

**மேலாதிக்கம்** பெ. (n.) *முறையற்ற அதிகாரம், கட்டுப்படுத்தி ஆளும் அதிகாரம்;* hegemony, domination.

**மேலிடம்** பெ. (n.) *செயற்பாடுகளை ஆய்வு செய்யும் உயர்மட்ட அமைப்பு அல்லது குழு;* decision making body, high level authority.

**மேலுரம்** பெ. (n.) *பயிர் நட்ட பிறகு இடப்படும் உரம்;* (of application of fertilizer) top dressing.

**மேலெழுதல்** வி. (v.) *1. மேற்கிளம்புதல்;* to rise up. *2. மிதத்தல்;* to float. *3. மேம்படுதல்;* to be superior.

**மேலேழுந்தவாரி** பெ. (n.) *ஊன்றிக் கவனியாமை;* superficially.

**மேழி** பெ. (n.) *1. கலப்பை;* plough. *2. கலப்பையின் கைப்பிடி;* plough tail, handle of a plough.

**மேழிச்செல்வம்** பெ. (n.) *வேளாண்மை யால் வருஞ் செல்வம் ;* wealth derived from husbandry.

**மேழித்தோரணம்** பெ. (n.) *தென்னங் குருத்தோலையில் ஏர்க்கலப்பை வடிவில் கீறி, பின்னலிட்டு வரிசை யாகக் கட்டப்படும் தோரணம் (கல்வெட்டு);* festoons made with tender palm leaf, like plough shape and hang in a row.

**மேளக்கச்சேரி** பெ. (n.) *அரங்கில் மேளத்துடன் கூடிய இசை நிகழ்ச்சி ;* entertainment given by drum beater.

**மேளக்காரன்** பெ. (n.) *1. மேளம் வாசிப்போன்;* piper, drummer. *2. இசை செய்விக்கும் குலத்தவர்;* person belonging to a caste of musician.

**மேளமடித்தல்** வி. (v.) *1. தவில் அடித்தல்;* to beat the drum. *2. ஒத்துப்பேசுதல்;* to play second fiddle, to endorse slavishly.

**மேனாமினுக்கி** பெ. (n.) *எப்போதும் அழகுபடுத்திக்கொண்டு திரிபவ-ன்-ள்;* person gaudily dressed, fop.

## மை

**மை** பெ. (n.) *1. இருள்;* darkness. *2. பெரும்பாலும் பெண்கள் கண்ணில் தீட்டிக்கொள்ளப் பயன்படுத்தும் ஒட்டும் தன்மையுடைய கருப்பு நிற அழகுப் பொருள்;* black pigment.

**மைக்கூடு** பெ. (n.) *1. எழுதும் மை வைக்குங் கூடு;* ink bottle, ink pot. *2. கண்மைச் சிமிழ்;* small casket for keeping black pigment.

**மையிருட்டு** பெ. (n.) *காரிருள்;* pitch darkness.

## மொ

**மொக்கைபோடுதல்** வி. (v.) *தேவையற்ற பேச்சு;* useless talk.

**மொக்கையன்** பெ. (n.) *1. மிகப்பருத் தவன்; தடியன்;* stout man. *2. அறிவு மழுங்கியவன்;* dullard.

**மொச்சடித்தல்** வி. (v.) *தீய நாற்றம் வீசுதல்;* to emit a foul smell, as goats.

**மொச்சையடித்தல்** வி. (v.) *தயிர் முதலியன தீய நாற்றம் வீசுதல்;* to emit a bad odour, as rencid curd, etc.,

**மொசிதல்** வி. (v.) *மொய்த்தல்;* to swarm.

**மொசுமொசுத்தல்** வி. (v.) *1. தின வெடுத்தல்;* to feel an itching sensation.

**மொசுமொசெனல்** பெ. (n.) *1. வண்டு முதலியன மொய்த்தற் குறிப்பு;* onom. expr. of swarming, as of bees.

**மொட்டை** பெ. (n.) *1. (தலையில்) முடி முழுவதுமாக மழிக்கப்பட்ட நிலை;* shaved or hairless state. *2. மொட்டை யடித்திருக்கும் ஆள்;* man with tonsured head. *3. மரம், செடி அல்லது பரப்பிடம், பொருள்கள் முதலிய வற்றில் அவற்றிற்குரிய குறிப்பிட்ட பொருளே இல்லாதிருத்தல்;* barrenness, incompletion, baldness. *4. கேள்வி, விடை போன்றவற்றில் குறிப்பிட்ட தேவையான விளக்கம் இல்லாதிருத்தல்;* want of necessary debils.

**மொட்டைப்பையன்** பெ. (n.) *மணமாகாத இளைஞன்;* unmarried man, used in contempt.

**மொட்டையடித்தல்** பெ. (n.) *1. மரம் முதலியவற்றில் கிளை மற்றும் இலைகளை முழுவதுமாக நீக்கிய நிலை;* removed branches and leaves state. *2. ஒருவரின் பொருள், பணம் முதலியவற்றை மற்றர் முழுவதுமாக இல்லாமல் செய்தல்;* make someone bankrupt.

**மொடமொடப்பு** பெ. (n.) *1. விறைப்புத் தன்மை;* stiffness. *2. உலர்ந்த தோல் முதலியவற்றின் குறிப்பு;* rustling sound as of dried skin, starched cloth.

**மொண்டிக்காரன்** பெ. (n.) *1. முரண்டு செய்வோன்;* refractory man.

*2. தொந்தரவு செய்பவன்;* trouble some person.

**மொண்ணை** பெ. (n.) *1. வழுக்கை;* baldness. *2. கூர்மையின்மை;* bluntness.

**மொத்தன்** பெ. (n.) *1. தடித்தவன்;* stout man. *2. சோம்பேறி;* lazy person.

**மொத்தை** பெ. (n.) *1. உருண்டை;* ball, round lump. *2. பருமன்;* bulkiness, stoutness.

**மொத்தைப் பிண்டம்** பெ. (n.) *உருத்திரிந்து தசைத் திரட்சியாகத் தோலால் மூடிக் காணப்படும் கரு;* foetus reduced to a shapeless mass of flesh covered with skin.

**மொதுமொதுவெனல்** பெ. (n.) *1. திரளுதற் குறிப்பு;* onom. expr. signifying crowding together. *2. கொழுத்து வளர்தற் குறிப்பு;* onom. expr. signifying luxuriance in growth.

**மொந்தன் வாழை** பெ. (n.) *தடித்த தோலையுடைய ஒருவகை வாழைப் பழம்;* thick skinned plantain fruit, banana.

**மொரமொரப்பு** பெ. (n.) *உண்ணும்போது ஈரப்பதம் இல்லாமல் நொருங்கக் கூடியதாக இருத்தல்;* crispness.

**மொழுக்கெனல்** பெ. (n.) *1. சடக்கென ஒடிகைக் குறிப்பு;* breaking suddenly, as a dry branch. *2. எண்ணெய்ப் பசையாயிருத்தற் குறிப்பு;* being greasy.

**மொழுமொழுத்தல்** வி. (v.) *கொழு கொழு என்றிருத்தல்;* to be flabby.

# மோ

**மோசடி** பெ. (n.) *தன் வருமான ஈட்டத்திற்குச் சட்டத்திற்குப் புறம்பாகச் செய்யும் ஏமாற்றுச் செயல்;* defrauding, cheating.

**மோசம்** பெ. (n.) *(தரம், அளவு, நிலைமை) முதலியவற்றில் மிகவும் குறைந்த (அ) தாழ்ந்த நிலை;* disagreeable, harmfully or bad.

**மோசம்போதல்** பெ. (n.) *ஒருவரை அல்லது ஒன்றையோ நம்பி ஏமாந்து போதல் அல்லது பாதிப்புக்குள்ளாதல்;* be cheated, be taken for a ride.

**மோசிகை** பெ. (n.) *உச்சிமுடி (யாழ்ப்.);* tuft of hair on top of head.

**மோட்டை** பெ. (n.) *நீர் கசிந்து வெளி யேறும்படி வயல் வரப்புத் துளைப் பட்டிருக்கை;* porosity of the ridge of a field.

**மோட்டோடு** பெ. (n.) *வீட்டு முகட்டிலிடும் வளைவோடு;* ridge tile.

**மோடிக்காரன்** பெ. (n.) *ஏய்ப்போன்;* deceitful person.

**மோடிவித்தை** பெ. (n.) *மந்திரத்தால் பொருளை மறைத்தலும், அதனைக் கண்டெடுத்தலுமாகிய போட்டி (மந்திரம் செய்வோர்களுக்கிடையே)* trial of magical powers between two enchanters, in which one hides some treasure from the other and challenges him to discover it by mantram.

**மோத்தை** பெ. (n.) *வாழை, தாழை முதலியவற்றின் மடல் விரியாத பூ;* spathe or unblown flower, as of plantain, fragrant screw pine, etc.,

**மோதல்** பெ. (n.) *கைகலப்பு, சண்டை;* clash.

**மோர்க்குழம்பு** பெ. (n.) *மோர் சேர்த்துச் செய்யுங் குழம்பு வகை;* a kind of sauce made in buttermilk.

# வ

**வக்கணை** பெ. (n.) *1. விரும்பி உண்ணும் வகையில் சுவையாக இருப்பது;* tasty. *2. ஏளனம்;* derision, jeering.

**வக்கணைப்பேச்சு** பெ. (n.) *1. தனித்திறனை வெளிப்படுத்தும் ஆற்றல் மிக்க*

*பேச்சு;* flowery or skilful talk. *2. பிறரைக் குத்திக்காட்டும் பேச்சு;* malicious talk.

**வக்கரித்தல்** வி. (v.) *கோணியிருத்தல், முரண்பாடாயிருத்தல்;* to be crooked, to be contradictory.

**வக்கற்றவள்** பெ. (n.) *1.வாழ்க்கைக்குரிய செல்வம், பொருள் முதலியன இல்லாதவள்;* lacking wealth materials, etc, *2. பிழைக்கத் தெரியாதவள்;* woman who has no knack of living.

**வக்காளித்தல்** வி. (v.) *வானம் வெளி வாங்குதல்;* to clear as the sky.

**வக்கிரப்பார்வை** பெ. (n.) *1. பொறாமை யுடன்கூடிய தீய பார்வை;* jealousy and evil look. *2. கடுஞ்சினப்பார்வை;* fury look.

**வக்கிரப்புத்தி** பெ. (n.) *குமுகாய நெறி, ஒழுங்கு, நேர்மை முதலியவற் றிலிருந்து மாறுபட்ட நோக்கு, மனம்;* perverted mind.

**வக்கிரன்** பெ. (n.) *மாறுபாடுள்ளவன்;* perverse, cross-grained person.

**வகிர்தல்** வி. (v.) *1. துண்டாக அறுத்தல்;* to slice, to cut in slips. *2. பிளத்தல்;* to split. *3. கீறுதல்;* to cleave.

**வகிரெடுத்தல்** வி. (v.) *உச்சியினின்றும் நெற்றியின் நடுப்பகுதி வரை மயிரை ஒழுங்குபடப் பிரித்தல்;* to part the hair from the crown to the forehead.

**வகுப்புவாரி** பெ. (n.) *1. இனப்பாகுபாடு;* communal division. *2. பிரிவுவாரிப் பகுப்பு;* sectional division. *3. கிளை வாரித் தேர்வு;* divisional election.

**வகைகெட்டவன்** பெ. (n.) *1. ஒழுக்கங் கெட்டவன்;* a man lacking discipline. *2.தரமறியாதவன்;* the man who does not know the dignity of value.

**வகையற்றவள்** பெ. (n.) *1. வாழும் வழி தெரியாதவள்;* a woman who does not know, how to live. *2. நெறி பிறழ்ந் தவள்;* woman gone astray. *3. கொள்கைப் பிடிப்பின்றி வாழ் பவள்;* woman lacking principles in life.

**வகையறிதல்** வி. (v.) *1. செய்யும் முறை தெரிதல்;* to know the way to follow the proper course of action. *2. கூறு பாடறிதல்;* to understand the bearings.

**வகையறுத்தல்** வி. (v.) *1. தெளிவாகப் பகுத்தறிதல்;* to discern. *2. நுணுக் கத்தை வேறுபடுத்தி விளக்குதல்;* to distinguish. *3. சிக்கலறுத்தல், முடிச்ச விழ்த்தல்;* to unravel.

**வகையறுதல்** வி. (v.) *1. அடிப்படைப் பொருளை இழத்தல்;* to lose the wherewithal. *2. தாங்களின்றிப் போதல்;* to become helpless.

**வங்கி** பெ. (n.) *1. மங்கையர் தோளணியுளொன்று;* a kind of armlet, worn by women. *2. வளைந்த கத்தி;* a kind of curved sword.

**வங்கிவளையல்** பெ. (n.) *வளையல் வகை;* a kind of bangle.

**வசக்கட்டு** பெ. (n.) *1. செலவுக் கென்று முன்னதாகக் கொடுத்த பணம்;* impress money. *2. வணிகக் கூட்டாளி மூலமாகக் கொடுத்த தொகை;* payment made to a partner.

**வசக்கட்டுக்கணக்கு** பெ. (n.) *கணக்கர் (அ) நிருவாகப் பணியாளரிடம் நிருவாகச் செலவுக்காகக் கொடுத்து வைக்கப் பட்ட பணத்தின் கணக்கு;* account in respect of monies left in charge of a accountant or an agent.

**வசக்குதல்** வி. (v.) *1. வயப்படுத்துதல், பழக்குதல்;* to break in, tame, train. *2. வளையப் பண்ணுதல்;* to bend. *3. நிலத்தைப் பண்படுத்துதல்;* to reclaim or improve land.

**வசங்கண்டவன்** பெ. (n.) *1. உண்மை யறிந்தவன்;* one who is aware to the

state of things. *2. ஏதாவதொரு பழக்கத்திற்கு அடிமையானவன்;* man addicted to a habit.

**வசங்கெட்டவன்** பெ. (n.) *1. செயலற்றவன், ஆண்மையற்றவன்;* impotent man. *2. நிலைமை கெட்டவன்;* man in reduced circumstances.

**வசப்படுத்துதல்** வி. (v.) *தனது உரிமையின் (அ) பொறுப்பின் கீழ்க் கொண்டு வருதல்;* bring under one's control.

**வசப்படுதல்** வி. (v.) *குறிப்பிட்ட உணர்ச்சிக்கு (அ) மனநிலைக்கு ஆட்படுதல்;* be in the grip of, be possessed by.

**வசம்** பெ. (n.) *ஒருவரின் பொறுப்பு, கட்டுப்பாடு;* castody, possession.

**வசம்பு** பெ. (n.) *செரியாமையால் ஏற்படும் வயிற்றுக் கோளாறுகளுக்குப் பயன் படுவது;* used as medicine.

**வசமாக** பெ. (n.) *தப்பிக்க எந்த வாய்ப்பும் இல்லாத வகையில் சிக்கிக் கொள்ளுதல்;* inescapably.

**வசவு** பெ. (n.) *திட்டு, வசை;* abuse, scolding.

**வசை** பெ. (n.) *இழிவுபடுத்தும் பேச்சு, திட்டு;* abuse, slanderous talk.

**வசைபாடுதல்** வி. (v.) *இழிவுபடுத்தும் வகையில் பேசுதல், திட்டுதல்;* abuse.

**வஞ்சகம்** பெ. (n.) *ஒருவரை நம்பச் செய்து, தீங்கு விளைவித்துப் பயனடையச் செய்யும் (தந்திரம்) நுண்ணுத்தி;* deceit.

**வஞ்சகன்** பெ. (n.) *வஞ்சக எண்ணம் கொண்டவன் (அ) வஞ்சகமான செயல்களைச் செய்பவன்;* dishonest man.

**வஞ்சப்புகழ்ச்சி** பெ. (n.) *ஒருவரைப் புகழ்வதுபோல் இகழும் செயல்;* an ironic praise.

**வஞ்சம்** பெ. (n.) *பழி தீர்த்துக் கொள்ளும் எண்ணம் (அ) செயல்;* revenge.

**வஞ்சம் தீர்த்தல்** வி. (v.) *பழி தீர்த்தல்;* take revenge.

**வஞ்சனை** பெ. (n.) *வஞ்சகம், கபடம்;* deceit, cunning.

**வஞ்சித்தல்** வி. (v.) *நம்பச் செய்து கைவிடுதல் ஏமாற்றுதல்;* betray, cheat cruelly.

**வட்டம்** பெ. (n.) *பந்து போன்ற வடிவமைப்பு;* circle.

**வட்டத்தலைப்பாகை** பெ. (n.) *வட்ட வடிவிலமைந்த தலைப்பாகை;* a kind of head-dress, round turban.

**வட்டத்தொப்பி** பெ. (n.) *வட்டவடிவில் அமைந்த தொப்பி;* a kind of round hat.

**வட்டமிடுதல்[1]** வி. (v.) *1. பறவை, வானூர்தி முதலியன ஒரு இடத்தைச் சுற்றிவருதல்;* hover, circle. *2. ஒருவரைத் தொடர்ந்து சுற்றிக் கொண்டிருத்தல்;* hang around.

**வட்டமிடுதல்[2]** வி. (v.) *1. பறவை, வானூர்தி முதலியன ஒரு இடத்தைச் சுற்றிவருதல்;* hover, circle. *2. ஒருவரைத் தொடர்ந்து சுற்றிக் கொண்டிருத்தல்;* hang around.

**வட்டமிடுதல்[3]** வி. (v.) *1. பறவை முதலியன சுற்றி வருதல்;* to hover about, as a hawk. *2. உருண்டையாதல்;* to be round or globular. *3. நோக்கங் கொண்டு சுற்றுதல்;* to hang about in order to gain an object, to round about with a view to gain something.

**வட்டமேசைமாநாடு** பெ. (n.) *தனிப்படக் கூட்டிய ஆய்வுக் கூட்டம்;* round table conference for specific purpose.

**வட்டாட்சியர்** பெ. (n.) *ஒருவட்டத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருக்கும் வருவாய்த்துறை அதிகாரி;* tahsildar.

**வட்டாரம்** பெ. (n.) *குறிப்பிடப்படும் இடமும் அதைச் சுற்றிய பகுதியும்;* region.

**வட்டார மொழி** பெ. (n.) *அந்தந்த மாநிலங்களில் பேசப்பட்டு வரும் மொழி;* regional language.

**வட்டார வழக்கு** பெ. (n.) *ஒலிப்பு முறை, சொற்கள் பொது மொழியிலிருந்து வேறுபடுவதும் ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சார்ந்தவர்களால் மட்டும் பேசப்படுவதுமான மொழி வழக்கு;* usage in a language variety or dialect.

**வட்டி** பெ. (n.) *கடன் தொகைக்குக் கூடுதலாகச் செலுத்த வேண்டிய தொகை;* interest.

**வட்டியில்லாக்கடன்** பெ. (n.) *வட்டியின்றிக் கொடுக்குங் கடன் தொகை;* interrest free loan debt not carrying interest.

**வட்டு எறிதல்** பெ. (n.) *மாழையால் செய்த தட்டு போன்ற வட்டவடிவ கனமான கருவியை அதிக தொலைவு எறியும் விளையாட்டு;* the discus.

**வட்டை** பெ. (n.) *வண்டிச் சக்கரத்தின் ஆரம் இணைக்கப்பட்டிருக்கும், மரத் தாலான தட்டையான வெளிப்பகுதி;* wooden rim of the wheel.

**வடக்கயிறு** பெ. (n.) *தேர் முதலியவற்றை இழுக்கப் பயன்படும் தடித்த கயிறு;* large, stout rope or cable as for drawing a temple-car.

**வடம்** பெ. (n.) *கோயில் தேரை இழுக்கப் பயன்படுத்தப்படும் தடிமனான முறுக்குக் கயிறு;* thick, twisted rope.

**வடம் பிடித்தல்** வி. (v.) *தேரின் வடத்தைப் பிடித்து இழுத்தல்;* pulling the ropes.

**வடிகட்டி** பெ. (n.) *நீர்மம் மட்டும் வடியும் வகையில் நுண்ணிய துளைகளை யுடைய (கண்கள்) வலை அமைத்துத் உருவாக்கப்பட்ட கருவி;* strainer.

**வடிகால்** பெ. (n.) *நீர் ஒரு பரப்பில் தேங்கி நிற்காமல் செல்வதற்காக அமைக்கப் படும் கால்வாய்;* outlet, drainage.

**வடித்தண்ணீர்** பெ. (n.) *நாற்றங்காலில் நீர் கட்டி பின் வடிக்கட்டப்பட்ட தண்ணீர்;* drained water from seed-bed after properly irrigateing for a while.

**வடித்திறுத்தல்** வி. (v.) *தெளியவைத்து இறுத்தல்;* to decant.

**வடித்துக் கொட்டுதல்** வி. (v.) *சமைத்துப் போடுதல்;* slave over a hot stove.

**வடிதட்டு** பெ. (n.) *சோற்றிலிருந்து கஞ்சியை வடித்தெடுப்பதற்கு உதவும் முறையில் பாதிப்பரப்பில் மட்டும் துளைகளைக் கொண்ட மாழைத் தட்டு;* a shallow metal plate with perforation used as strainer.

**வடிதல்** பெ. (n.) *நீர்மம் தொடர்ந்தோ (அ) சொட்டுச் சொட்டாகவோ சிறிய அளவில் வெளியேறுதல்;* drip.

**வடிதாள்** பெ. (n.) *வேதி நீர்மங்களை வடிகட்டுவதற்குப் பயன்படுத்தப் படும் நுண்ணிய துளைகள் கொண்ட தாள்;* filter paper.

**வடிநிலம்** பெ. (n.) *ஓர் ஆற்றின் கிளை ஆறுகளும் துணை ஆறுகளும் பாயும் பரப்புகளை உள்ளடக்கி இருக்கும் நிலப்பகுதி;* basin, delta.

**வடிப்பான்** பெ. (n.) *நீர்மங்களிலிருந்து கசடுகளை வடித்தெடுக்கும் கருவி;* filter.

**வடிபாத்திரம்** பெ. (n.) *மருந்தெண்ணெய் வடிப்பதற்குப் பயன்படுத்தும் வாயகன்ற மட்பாண்டம்;* wide mouthed eartheren ware to hold or collect the medicated oil to be filtered.

**வடிபானை** பெ. (n.) *சோறாக்குவதற்கான மட்கலம்;* earthen vessel for cooking rice.

**வடியெண்ணெய்** பெ. (n.) *வடித்தெடுத்த மருந்தெண்ணெய்;* clarified medicinal oil.

**வடிவமைத்தல்** வி. (v.) *கட்டடம் போன்ற வற்றுக்குக் குறிப்பிட்ட வடிவம் கிடைக்கும்படிச் செய்தல்; உருவாக்குதல்;* design, model.

**வடிவமைப்பு** பெ. (n.) *உருவாக்கப்பட்ட வடிவம் (அ) தோற்றம்;* design.

**வடு** பெ. (n.) *1. புண் ஆறியபின் (அ) அடிப்பட்ட இடத்தில் நிலைத்து விடும் அடையாளம், தழும்பு;* scar, cicatrice. *2. மாவடு;* tender mangoes.

**வடுச்சொல்** பெ. (n.) *பழஞ்சொல், பழிமொழி;* reproach.

**வடுப்படுத்துதல்** வி. (v.) *வெட்டு, குத்து முதலியவற்றால் காயப்படுத்துகை;* wounding.

**வடுப்பிஞ்சு** பெ. (n.) *இளம்பிஞ்சு;* tender, unriped fruit.

**வடை** பெ. (n.) *கெட்டியாக அரைத்த உளுத்தம் பருப்பை (அ) கடலைப் பருப்பை வட்டமாகத் தட்டி எண்ணெயில் வேகவைத்து எடுக்கப் படும் தின்பண்டம்;* cutlet-like snack made of lentil or chick-pea paste and fried in oil.

**வடைகறி** பெ. (n.) *ஊறவைத்து அரைத்த கடலைப் பருப்புடன் உசிலைச் சேர்த்துத் தாளித்து ஆவியில் வேக வைத்து அதைக் குழம்பாகச் செய்யும் ஒரு வகைத் தொடுகறி;* a kind of side dish for idli, etc, using chickpea paste as in the preparatin of vadai.

**வடைகுத்தி** பெ. (n.) *வடைகள் நன்றாக வெந்ததும் ஒவ்வொன்றாகக் குத்தி எடுக்கப்பயன்படும் நீளமான கம்பி;* pick to take out from the hot oil.

**வடைமாலை** பெ. (n.) *வேண்டுதலின் பொருட்டு வடைகளைக் கோத்து தெய்வங்கட்கு இடும் மாலை;* garland of vadai offered in vow to deities.

**வடைவாரி** பெ. (n.) *துளைகள் கொண் டதும் வாணலியிலிருந்து வடையை எடுப்பதற்குப் பயன்படுத்துவதுமான கரண்டி;* perforated ladle to take out vadai, ect. from the hot oil.

**வண்டப்புரட்டன்** பெ. (n.) *ஏமாற்றுக் காரன்;* cheat.

**வண்டரிசி** பெ. (n.) *உளுத்த அரிசி, குருவண்டுக் குள்ளிருக்கும் அரிசி;* pest eaten rice.

**வண்டல் மண்** பெ. (n.) *ஆறு, வெள்ளம் முதலியவை அடித்துக் கொண்டு வந்து ஒதுக்கும் வளமான மண்;* silt.

**வண்டலடித்தல்** வி. (v.) *வயலுக்கு உரமாக வண்டல் மண்ணைப் பரப்புதல்;* to spread, alluvial deposit in fields, as manure.

**வண்டவாளம்** பெ. (n.) *பிறருக்குத் தெரியாத வகையில் ஒருவர் மறைக்க விரும்புவதாகக் கருதப்படும் தில்லு முல்லு, ஊழல், மோசமான நடத்தை முதலியன;* unpleasant or discreditable facts which one is thought to be hiding.

**வண்டன்** பெ. (n.) *1. குள்ளன்;* short, dwarfish person. *2. திண்ணியன்;* brave and resolute man.

**வண்டி** பெ. (n.) *மாடு, குதிரை போன்ற விலங்குகளால் இழுத்துச் செல்லப் படும் ஊர்தி. 2. எந்திரத்தால் இயங்கும் சக்கரங்களையுடைய ஊர்தி;* vehicle, bullock-cart or horse-drawn cart.

**வண்டி ஓடுதல்** வி. (v.) *அன்றாட அடிப் படை ஏந்துகளுக்குக் குறைவில் லாமல் உடல்நலத்தோடு வாழ்க்கை நடத்தல்;* carry on.

**வண்டிக்காரன்** பெ. (n.) *1.வண்டியோட்டு பவன்;* cart driver. *2. ஓட்டுநர்;* driver. *3. வண்டிக்கு உரியவன்;* owner of a cart or carriage.

**வண்டிச்சத்தம்** பெ. (n.) *வண்டி வாடகை அல்லது கூலி;* fare (for hired vehicles, esp. cart).

**வண்டியோர்க்கால்** பெ. (n.) *வண்டியின் மத்தியில் மையக் கட்டையின் மேல் நுகத்தடியுடன் பொருத்தப்பட்ட நீண்ட வலுவான மரக்கட்டை;* a long sturdy plank centrally fixed in the bullock easy longitudenally.

**வண்டுகடி** பெ. (n.) *1. வண்டு கொட் டுகை;* sting of wasp or beetle. *2. தோல் மேலுண்டாகும் சொறி வகை;* ring worm.

**வண்டுகாயப்போடுதல்** வி. (v.) *உப்பளப் பாத்தியிலிருந்து வாரியெடுக்கும் உப்பை, பாத்தியின் வரப்பி லேயே குவித்து, ஒரு நாள் முழுவதும் வெயிலில் காய்ச்சலிடுகை;* drying process on the ridges of beds in salt pans by heaping.

**வண்டுகூட்டுதல்** வி. (v.) *பாத்தியிலிருந்து உப்பை அவ்வரப்பிலேயே வாரிக் குவித்தல்;* to heap salt on the ridge itself after collecting from salt beds.

**வண்டுச்சொறி** பெ. (n.) *வண்டு கடிப்ப தினால் உண்டான சொறி;* urticaria caused by sting of beetles.

**வண்டு சுற்றுதல்** வி. (v.) *வைக்கோல் முதலியவற்றைப் புரியாக நெருங்கச் சுற்றிக் கட்டுதல்;* to make twists of straw and pack them.

**வண்டுவிடுதல்** வி. (v.) *வைக்கோல் முதலியவற்றைப் புரியாகத் திரித்தல்;* to twist straw.

**வண்ணம் பூசுதல்** வி. (v.) *வண்ணக் கலவையைப் பூசுதல்;* to rub the colour or paint.

**வண்ணாத்தி** பெ. (n.) *ஆடை வெளுக்கும் பெண் தொழிலாளி;* washer - woman.

**வண்ணான்** பெ. (n.) *ஆடைவெளுக்கும் தொழிலாளி;* washerman.

**வண்ணான்குறி** பெ. (n.) *ஆடைவெளுப் பவர்ஆடையில் இடும் குறி;* mark given by washerman.

**வண்ணானழுக்கு** பெ. (n.) *வண்ணா னிடம் வெளுக்கப் போடும் அழுக்கு ஆடைகள்;* soiled or dirty clothes for washing.

**வண்ணித்தல்** வி. (v.) *1. புனைந் துரைத்தல்;* to depict; describe. *2. போற்றி வணங்கிக் கூறுதல்;* to praise, submissively.

**வணக்கம்** பெ. (n.) *நாள் முதலில் சந்திக்கும் இருவர் ஒருவருக்கொருவர் கூறிக்கொள்ளும் மதிப்பு வாழ்த்துச் சொல்;* verses in praise of guru etc.

**வணங்காமுடி** பெ. (n.) *யாருக்கும் பணிந்து நடக்காதவன்;* recalcitrant person; stiff necked person.

**வணங்குதல்** வி. (v.) *1. (கடவுளை) வழிபடுதல்;* worship, pray. *2. (மதிப்பு கொடுத்தலுக்காக ஒருவரைக் கண்டவுடன்) கை கூப்புதல் அல்லது வணக்கம் தெரிவித்தல்;* greet (someone) with one's palms together). *3. ஒரு வேலையைச் செய்ய உடலளவில் அணியமாக இருத்தல்;* be willing to exert oneself.

**வணிகச் சின்னம்** பெ. (n.) *ஒரு வணிக நிறுவனம் தன் பொருள்களுக்குப் பயன்படுத்துவதற்காகப் பதிவு செய்து கொண்ட பெயர் (அ) சின்னம்;* trade mark.

**வணிகர்** பெ. (n.) *கொண்டுகொடுத்தற் தொழிற்செய்பவர்;* merchant, trader.

**வத்தல்** பெ. (n.) *1. பதப்படுத்திக் காயவைத்த சில வகைக் காய் வற்றல்;* vegetable dried and kept to be used later. *2. அரிசிக் கூழ் முதலியவற்றை அச்சில் இட்டுப் பிழிந்து, உலர்த்தி எடுத்த துண்டுகள்;* rice or sago paste processed by drying.

**வத்தல்குழம்பு** பெ. (n.) *புளிக்கரைசலில் வத்தல் போட்டுச் செய்த குழம்பு;* a sauce of thick tamarind solution with dried vegetable pieces.

**வத்தலும் தொத்தலுமாக** வி. (v.) *உடல் நலிந்தும் மெலிந்துமாக;* in a thin and emaciated condition, being more skin and bones.

**வத்தி வைத்தல்** வி. (v.) *1. வெடி கொளுத்துதல்;* to ignite the fuse. *2. சண்டை மூட்டுதல்;* to stiru trouble. *3. புண்ணிற்குக் காரம் வைத்தல்;* to apply a piece of cloth soaked with caustic to a sore.

**வதக்கிக்கட்டல்** பெ. (n.) *மருந்திலையை நெருப்பில் காட்டி பிறகு புண் புரைக்குக் கட்டுகை;* bandaging after applying scorched medicinal leaves to abscess, wounds etc.

**வதக்குவதக்கெனல்** பெ. (n.) *மொரு மொருப்போடு இல்லாது ஈரப்பசை யோடியிருத்தற் குறிப்பு;* being under-boiled or under-fried as greens.

**வதங்கல்** பெ. (n.) *1. வாடியது;* that which is withered or dried. *2. ஈரப்பசை நீங்காத உணவுப்பண்டம்;* under-boiled or under-fried food stuff.

**வதங்குதல்** வி. (v.) *செடி, கொடி (அ) காய்கறி நீர்த்தன்மை குறைந்து துவளுதல், பசுமை இழத்தல்;* lose freshness.

**வதவதவென்று** பெ. (n.) *ஒன்றையடுத்து ஒன்றென அதிக அளவில் நிறைந்து வழிகை;* over flowing surplusing in brim of a bowl or vessel or any container.

**வதவலரிசி** பெ. (n.) *அரைக்காய்ச்சலான புழுங்கல் அரிசி;* rice husked from boiled paddy before it is fully dried.

**வதறுதல்** வி. (v.) *1. வாயாடுதல்;* to chatter, prate to be talkative. *2. மழலை மொழியாதல்;* to lisp, to babble. *3. திட்டுதல்;* to abuse.

**வதிதல்** வி. (v.) *1. தங்குதல்;* to dwell, abide. *2. துயிலுதல்;* to sleep.

**வம்படித்தல்** வி. (v.) *1. வீண்சொல் பேசுதல்;* indulge in idle talk or unnessary talk. *2. பழித்துப்பேசுதல்;* to talk disparagingly.

**வம்பு** பெ. (n.) *தேவையில்லாத சிக்கல்,சண்டைக்குக் காரணமாகும் உறழ்வு (தகராறு);* unnecessary trouble.

**வம்புச்சண்டை** பெ. (n.) *ஒருவரிடம் வலியச் சென்று போடும் சண்டை;* wantonly quarrel.

**வம்புத்தனம்** பெ. (n.) *1. குறும்பு;* mischief. *2. வீண் பேச்சு;* gossip.

**வம்புதும்பு** பெ. (n.) *வீண்வம்பு;* unnecessary interference.

**வயக்குதல்** வி. (v.) *1. திருத்துதல்;* to improve. reclaim as land. *2. பழக்குதல்;* to tame break in.

**வயல்** பெ. (n.) *பயிரிடப்படும் நிலம்;* field.

**வயல்புல்** பெ. (n.) *நன்செய் பயிர்களி டையே முளைக்கும் களை;* the grass or weed grown between crops in wet-land.

**வயல்வெளி** பெ. (n.) *வயலும், வயல் சார்ந்த இடமும்;* agricultural tract.

**வயிரம்பாய்தல்** வி. (v.) *வலிமை (அ) உரமிகுதல்;* to get strength.

**வயிரவிழா** பெ. (n.) *அறுபதாமாண்டு நிறைவுக் கொண்டாட்டம்;* diamond jubilee.

**வயிற்றிரைச்சல்** பெ. (n.) *வயிற்றி லுண்டாகும் இரைச்சல் ;* gargling or gurgling sound in the abdomen.

**வயிற்றில் பாலைவார்த்தல்** வி. (v.) *மோசமாக ஏதாவது நடந்துவிடும் என்று ஒருவர் அஞ்சும் சூழலில் அவருக்கு மகிழ்ச்சி ஏற்படுத்தும்படி செய்தல்;* get unexpected relief.

**வயிற்றில் புளியைக் கரைத்தல்** வி. (v.) *ஒருவரின் மனத்தில் அச்சம் ஏற்படும் வகையில் ஒரு செய்தியைச் சொல் லுதல்;* feel fear in the pit of one's stomach, make one fearful.

**வயிற்றிலடித்தல்** வி. (v.) *ஒருவரின் பிழைப்பைக் கெடுத்தல்;* deprive of his or her means of livelihood.

**வயிற்றுக்கட்டி** பெ. (n.) *1. வயிற்றுப் புண் கட்டி;* abdominal abscess. *2. ஈரல் முதலியவற்றின் வீக்கம்;* enlargement of the liver or the spleen.

**வயிற்றுக்கடுப்பு** பெ. (n.) *வலியோடு கூடிய வயிற்றுப் போக்கு;* dysentery with pain colic.

**வயிற்றுக்கலக்கல்** பெ. (n.) *வயிறு கலங்கி மலங்கழிகை;* stirring sensation in the

abdomen causing an inclination to go to stools.

**வயிற்றுக்கனப்பு** பெ. (n.) *செரிமான ஆற்றலறியாமல் உண்பதால் வயிறு விம்முகை;* heaviness of stomach as from over eating or excessive eating.

**வயிற்றுக்காந்தல்** பெ. (n.) *கடும்பசியால் வயிறு காந்துகை;* pricking in the stomach due to hunger.

**வயிற்றுக்கிருமி** பெ. (n.) *வயிற்றிலுண்டாகும் கொக்கிப்புழு, நாடாப் புழு;* round-worm, ring-worm, tape-worm.

**வயிற்றுகுமுறல்** பெ. (n.) *வயிற்றுளெழும் அதிரொலி;* quavering or trembling sound.

**வயிற்றுக்கொடுமை** பெ. (n.) *உணவுக்கு வழியின்றிப் பசியால் வாடும் துன்பம்;* the misery of starvation.

**வயிற்றுக்கோளாறு** பெ. (n.) *வயிற்றில் ஏற்படும் பலவகை ஊறுபாடு;* disorder of stomach due to indigestion.

**வயிற்றுத்தொந்தி** பெ. (n.) *வயிற்றின் தசை மடிப்பு;* collop.

**வயிற்றுப்பாடு** பெ. (n.) *அன்றாட வாழ்க்கை;* (one's) daily bread.

**வயிற்றுப்பிழைப்பு** பெ. (n.) *பசியைப் போக்கிக் கொள்ள குறைந்தளவு உணவைப் பெறுவதற்கான வழி முறை;* one's subsistence.

**வயிற்றுப்பிள்ளை** பெ. (n.) *கருப்பையில் இருக்கின்ற பிள்ளை;* child in the womb.

**வயிற்றுப்பிள்ளைக்காரி** பெ. (n.) *கருவுற்றவள்;* pregnant woman.

**வயிற்றுப்புசம்** பெ. (n.) *வயிறு ஊதல், வயிற்றுப் பொருமல்;* a distension of the abdomen attended with incarceration of flatus. and an intense pain and rumbling inside-tympanitis. it arrests the emission of flatus.

**வயிற்றுப்புண்** பெ. (n.) *வயிறு அழளுகை;* unceration of the stomach.

**வயிற்றுப்புரட்டல்** பெ. (n.) *கக்கலுக்கு முன் வயிற்றில் உண்டாகும் வாய்க்குமட்டலுணர்வு;* changes in the stomach or the sensation in the stomach before vomiting.

**வயிற்றுப்புற்று** பெ. (n.) *வயிற்றுப்பரப்பில் ஏற்படும் புற்றுநோய் வகை;* stomach cancer.

**வயிற்றுப்பூச்சி** பெ. (n.) *வயிற்றில் உண்டாகும் புழு;* round-worm, ring-worm, tape worm in stomach.

**வயிற்றுப்போக்கு** பெ. (n.) *அதிக அளவில் நீர்த்தன்மையோடு மலம் கழிதல்;* diarrhoea.

**வயிற்றுமந்தம்** பெ. (n.) *பசியின்மை;* loss of appetite.

**வயிற்றெரிச்சல்** பெ. (n.) *இழப்பு, ஏமாற்றம் முதலியவற்றால் ஏற்படும் எரிச்சல் உணர்வு, மனக்கொதிப்பு;* frustration.

**வயிற்றெரிச்சல் கொள்ளல்** பெ. (n.) *1. இழப்பு, ஏமாற்றம் போன்றவற்றால் மனக்கொதிப்படைதல்;* frustration. *2. பொறாமைப்படல்;* heart burning jealousy.

**வயிற்றெரிச்சற்படுதல்** வி. (v.) *1. பொறாமைப்படுதல்;* to envy, to feel envy. *2. மனவருத்தமடைதல்;* to feel vexation.

**வயிற்றைக்கட்டுதல்** வி. (v.) *1. வயிற்றுப் போக்கை நிறுத்துதல்;* to check diarrhoea. *2. பட்டினிகிடத்தல்;* starving. *3. அளவறிந்து செலவு செய்தல்;* to be thrifty.

**வயிறடித்தல்** வி. (v.) *துயரக்குறியாக வயிற்றிலடித்துக் கொள்ளுதல்;* to beat one's stomach with one's hands.

**வயிறடைத்தல்** வி. (v.) *1. உண்ணும் விருப்பம் இல்லாதிருக்கை;* loathing of food not fond of food. *2. மலடாயிருக்கை;* being barren, sterile. *3. பூப்பு நின்றுபோகை;* being past.

**வயிறார** கு.வி.எ. (adv.) *வயிறுநிரம்ப;* to one's bellyful.

**வயிறுகாய்தல்** பெ. (n.) *பட்டினியா யிருக்கை;* abstinency, starvation, being pinched with hunger fasting.

**வயிறுகிடமுடெனல்** பெ. (n.) *வயிற்றில் உண்டாகும் பேரிரைச்சல்;* warble.

**வயிறுகிள்ளும்பசி** பெ. (n.) *மிகுந்த பசி;* gnawing hunger.

**வயிறுகுளிர்தல்** வி. (v.) *வயிறார உண்ட நிலை;* to be refreshed. as by food. to be satisfied.

**வயிறுதள்ளல்** வி. (v.) *1. தொந்தி விழுகை;* being pot-bellied or large belly. *2. கருப்பமாகை;* conceivability.

**வயிறுநோதல்** வி. (v.) *மகப்பேற்று வலியுண்டாதல்;* to have labour-pains.

**வயிறுப்பசம்** பெ. (n.) *குடலில் தங்கும் வளிமிகுதியால் ஏற்படும் வயிற் றூத்தம்;* distension of the abdomen form a morbid collection of air in the instentines and stomach.

**வயிறுப்புதல்** வி. (v.) *வயிறு பருத்தல்;* distension of the abdomen.

**வயிறுபழுத்தல்** வி. (v.) *மகப்பேறுதலின் பிறகு பெண்களுக்கு உண்டாகும் ஒருவகை நோய்;* a post delivery disease of the stomach attacking woman.

**வயிறுபுடைத்தல்** வி. (v.) *வயிறு பெரிதா தல்;* distension of the abdomen.

**வயிறுவெடித்தல்** பெ. (n.) *பேருண்டி, பெருஞ்சிரிப்பு முதலியவற்றால் வயிறு வெடிப்பது போலாகை;* bursting, as with excessive food, leng laughter.

**வரங்கிடத்தல்** வி. (v.) *வரம் பெறுவதற் காகக் கோயில், கருவறை முன் தவங்கிடந்து வேண்டுகை;* to lie prostrate in the presence of a deity praying for the grant of a boon.

**வரட்டுச்சொறி** பெ. (n.) *மிகுதியான தினவுண்டாவதால், மிகு அரிப்புண் டாக்கும் ஒரு வகைச் சொறி;* a kind of itch causing great scratching sensation.

**வரட்டுச்சோகை** பெ. (n.) *குருதிக் குறைவால் முகம் வெளுத்து ஊதுமாறு செய்யும் நோய்வகை;* anaemia, a disease characterised by pale and bloated face.

**வரட்டுமாடு** பெ. (n.) *கன்று ஈனாத பெண் மாடு;* barren cow. infertile dry cow.

**வரப்பிரசாதம்** பெ. (n.) *கடவுளரின் அருட்கொடை;* grace of gods.

**வரப்பு** பெ. (n.) *வயலைப் பகுதிபகுதி யாகப் பிரிக்கவும் நீரைத் தேக்கி வைக்கவும் அமைக்கப்படும் சிறு கரை; மண்ணால் ஆன தடுப்பு;* ridge of a field baulk.

**வரப்புகழித்தல்** வி. (v.) *வரப்பினைச் சரிசெய்தல்;* shaping or reclaiming the ridges of paddy field.

**வரம்பிறத்தல்** வி. (v.) *1. அளவிலதாதல்;* to be boundless. *2. அளவு கடத்தல்;* to exceed limits.

**வரம்பு** பெ. (n.) *இதற்குள் அமைய வேண்டும் என்றோ இதற்கு மேற் படக்கூடாது என்றோ அமைக்கும் கட்டுப்பாடு, வரையறுக்கும் விதமாக அமையும் எல்லை;* limit bounds.

**வரலாறு** பெ. (n.) *கடந்த காலத்தில் நடைபெற்ற முகாமையான நிகழ்வு களைப் பற்றிய பதிவு;* history.

**வரலாறுகாணாத** பெ. (n.) *முன்பு எப்போதும் இதுபோல் இருந்திருக் காத அளவில்; இதற்கு முன் ஒருமுறை கூட நடந்திருக்காத அளவில்;* unprecedented.

**வரவழைத்தல்**[1] வி. (v.) *வருவித்தல், அழைத்தல்;* to cause, to come, invite.

**வரவழைத்தல்**[2] வி. (v.) *1.* ஒருவரை (அ) ஒன்றை ஓர் இடத்துக்கு வரச் செய்தல் (அ) வந்து சேரச் செய்தல்; send for invite, bring. *2.* உண்மை, செய்தி முதலியவற்றை ஒருவரிடமிருந்து வெளிக் கொணர்தல்; elicit, extract.

**வரவு செலவு** பெ. (n.) வருமானம் பெறுதலும், செலவு செய்தலும்; receipts and expenditure.

**வரவேற்பு** பெ. (n.) எதிர் கொண்டழைக்கை; reception, welcome, receive in person.

**வரவேற்பு அறை** பெ. (n.) வீடு, அலுவலகம் முதலியவற்றில் நுழைவாயிலையடுத்து அமைந்திருக்கும் விருந்தினர் அறை; drawing room, lounge, reception room.

**வரவேற்புமடல்** பெ. (n.) விழாவுக்கு வரும் முகாமை விருந்தினரை வரவேற்கும் முறையில் புகழ்ந்துக் கூறும் வாசகங்கள் அடங்கிய தாள்; scripted address of welcome.

**வரவேற்புரை** பெ. (n.) விழாவிற்கு வந்துள்ளவர்களை வரவேற்று நிகழ்த்தும் உரை; address of welcome.

**வரள்(ளு)தல்** வி. (v.) *1.* வற்றுதல்; to dry up, to evaporate. *2.* உடம்பு மெலிதல்; to become lean or emaciated.

**வரன்** பெ. (n.) திருமணம் செய்து கொள்வதற்காகப் பார்க்கும் ஆண் (அ) பெண்; prospective bridegroom.

**வரன்முறை** பெ. (n.) ஒரு நிறுவனம், அலுவலகம் போன்றவற்றில் விரைவுத் தேவையை ஒட்டி அவ்வப்போது அமர்த்தப்பட்ட பணியாளரை முறைப்படி அமர்த்துதல்; regularization of employees.

**வரன்முறைப்படுத்துதல்** வி. (v.) உரிய நெறிமுறைகளின்படி உடன்பட்டு ஒப்பளித்தல்; regularize.

**வரி** பெ. (n.) *1.* கோடு, பட்டை; line, stripe. *2.* ஒரு கோட்டில் அமைந்திருக்கும் சொல் தொகுப்பு; line (of any written teat). *3.* குடிமக்களிடமிருந்து அரசு தண்டும் கட்டணம்; tax.

**வரிசை** பெ. (n.) ஒருவருக்குப் பின் ஒருவராக (அ) ஒன்றையடுத்து ஒன்றாக அமையும் ஒழுங்குமுறை; line, row.

**வரிசைப்படுத்துதல்** வி. (v.) எண்கள், ஆண்டுகள், செய்திகள் போன்றவற்றை ஓர் ஒழுங்கில் (அ) வரிசையில் அமைத்தல்; list in a specified order.

**வரிசையறிதல்** வி. (v.) ஒருவர்தம் தகுதி அறிந்து சிறப்பித்தல்; to assertain one's ability or speciality.

**வரிந்துகட்டுதல்**[1] வி. (v.) சண்டை, போட்டி போன்றவற்றை எதிர்கொள்வதற்காக (அ) ஒரு செயலைச் செய்வதற்காக விரைவுத் தன்மையோடு தயாராகுதல்; girding up one's loins.

**வரிந்துகட்டுதல்**[2] வி. (v.) *1.* இறுக்கிக் கட்டுதல்; to bind tightly. *2.* விரைவுத் தன்மை காட்டுதல்; to girde up one's loins voluntarily.

**வரிபோடுதல்** வி. (v.) குடியிறை விதித்தல்; to impose or levy a tax.

**வரிவிளம்பரம்** பெ. (n.) செய்தித்தாளில் வகைப்படுத்தப்பட்டு, வெளியாகும், இரண்டொரு வரிகளிலான சிறிய விளம்பரம்; brief classified adveretisement with a few lines.

**வருகை** பெ. (n.) *1.* ஒருவர் ஓரிடத்துக்கு (அ) நிகழ்ச்சிக்கு வருதல், வரவு; arrival. *2.* அறிவியல் கண்டுபிடிப்புகள், புதிய பொருள்கள் போன்றவை முதன் முதலில் அறிமுகம் ஆகும் நிலை; introduction.

**வருகைப்பதிவு** பெ. (n.) மாணவர், ஊழியர் முதலானோர் தங்களின் வருகையைப் பதிவு செய்தல்; marking attendance by students, workers, etc.

**வருகைப்பதிவேடு** பெ. (n.) பணியாளர்; மாணவர்களின் வருகையைப் பதிவு செய்வதற்காக உள்ள ஏடு; attendance register.

**வருங்காலம்** பெ. (n.) *இனி வரப்போகும் காலம், எதிர்காலம்;* future; the time to come.

**வருத்தம்** பெ. (n.) *1. மனதிற்குப் பிடிக்காத நிகழ்ச்சிகளினால் உண்டாகும் துன்பம்;* suffering, pain, grief. *2. இயற்கை எய்தியோர் குறித்து ஏற்படும் மன உணர்வு;* regret.

**வருத்துதல்** வி. (v.) *1. வருந்தச் செய்தல்;* to cause, pain, to afflict vex. *2. துயரங்கொள்ளச் செய்தல்; துன்பப்பட வைத்தல்;* to make one sad; to make one feel sorry.

**வருந்தியழைத்தல்** வி. (v.) *மிகவும் வேண்டிக் கூப்பிடுதல்;* to invite emphaticaly, earnestly.

**வருந்தியேங்குதல்** வி. (v.) *ஒருவர்தம் ஈடுசெய்யவியலா இழப்பை எண்ணியும், புலம்பியும் துன்பவுணர்வு கொள்ளுதல்;* to feel sorry, to bemoan.

**வருந்துதல்** வி. (v.) *1. துன்பமுறுதல்;* to suffer. *2. உடல் மெலிதல்;* to become emaciated. *3. வருந்தி வேண்டிக் கொள்ளுதல்;* to make suplication.

**வரும்படி** பெ. (n.) *வரவு, வருமானம்;* income.

**வருமானம்** பெ. (n.) *1. பணி, தொழில் முதலியவற்றால் கிடைக்கும் பணம்;* professional or salaried income, source of income. *2. வரிகளின் வாயிலாக அரசிற்குக் கிடைக்கும் பணம்;* revenue.

**வருமான வரி** பெ. (n.) *ஒருவருடைய ஆண்டு வருமானம் அரசு வரம்பீட்டு அளவுக்கு மேற்படுமானால் அந்த வருமானத்தின் மீது அரசு விதிக்கும் வரி;* income - tax.

**வருவாய்** பெ. (n.) *வரும்படி, வருமானம்;* income; revenue.

**வரைதல்** வி. (v.) *1. கோடிழுத்தல், எழுதுதல்;* to write, inscribe, to draw a line. *2. ஓவியமெழுதுதல்;* to draw with paint.

**வரைபடம்** பெ. (n.) *கோடுகளால் ஆன வரைபடம், ஓர் இடம், நாடு கட்டம் போன்றவற்றின் தோற்றம், அமைப்பு முதலியவற்றைக் காட்டும் படம்;* map; plan (of a building, etc.,); diagram; graph.

**வரைபலகை** பெ. (n.) *வரைபடம் வரைவதற்காகப் பயன்படுத்தும் செவ்வக வடிவ மரப்பலகை;* drawing board.

**வரையறுத்தல்** வி. (v.) *1. தீர்மானித்தல், அறுதியிடல், உறுதிசெய்தல்;* to settle, decide. *2. எல்லைப்படுத்துதல்;* delimit.

**வரையறை** பெ. (n.) *ஒன்றின் தன்மை, தரம், அளவு, அமைப்பு போன்ற வற்றை வரையறுப்பது;* definition, delimitation.

**வரையாடு** பெ. (n.) *மலைப்பகுதியில் காணப்படும் குறுகிய விறைப்பான காது, மேனோக்கி வளைந்த கொம்புகளைக் கொண்ட ஒரு வகை ஆடு;* jungle sheep.

**வரைவோலை** பெ. (n.) *ஒரு வைப்பகம் மற்றொரு கிளைக்குப் பிறப்பிக்கும் எழுத்து மூலமான பணம் வழங்கும் ஆணை;* a bank draft, demand draft.

**வல்லந்தம்** பெ. (n.) *1. வலுக்கட்டாயம், வலக்காரம்;* compulsion. *2. உரம், வலிமை;* power, energy.

**வல்லரசு** பெ. (n.) *பொருளியலில் (அ) வலிமை மிகு படைத்திறனில் மிக்க நாடு;* country of predominance in economy or in military: super power country.

**வல்லவன்** பெ. (n.) *1. வலிமையுள்ளவன்;* strong or heroic man. *2. திறமைசாலி, ஆற்றலுள்ளவன், பொருத்தமானவன்;* capable man, suitable man, man of ability.

**வல்லுநர்** பெ. (n.) *ஒரு குறிப்பிட்ட துறையில் நுண்திறமையுடையோர்;* expert.

**வலங்கொள்ளுதல்** வி. (v.) *இடவலமாக வருதல்;* circumambulation from left to right.

**வலசைபோதல்** வி. (v.) *குறிப்பிட்ட பருவங்களில் பறவைகள் இடம் பெயர்தல்;* migration.

**வலஞ்சுழித்தல்** வி. (v.) *வலமாகச் சுற்றச் செய்தல்;* to cause to whirl to the right.

**வலதுகை** பெ. (n.) *1. வலது கையால் செய்யும் பழக்கமுடையவர்;* right handedness. *2. ஒருவருக்குப் பக்க பலமாக இருந்து உதவுபவர்;* person who helps.

**வலம்புரிச் சங்கு** பெ. (n.) *வலப்புறமாகச் செல்லும் சுழியை உடைய சங்கு;* conch with clockwise whorls.

**வலம் வருதல்** வி. (v.) *இடவலமாகத் திருக்கோயிலைச் சுற்றி வருதல்;* to go round from left to right, as of a temple.

**வலித்தல்** வி. (v.) *1. கட்டாயப்படுத்துதல்;* to force, compel. *2. பற்றிக் கொள்ளுதல்;* to seize. *3. துடுப்பு, கயிறு முதலியவற்றை இழுத்தல்;* to draw, pull. to attract. *4. உடல் உறுப்புகளில் வலி உணர்தல்;* pain, hurt.

**வலித்துக்கட்டுதல்** வி. (v.) *(கயிற்றை) இறுக்கிக் கட்டுதல்;* to tie after tightening the rope.

**வலித்துக்காட்டுதல்** வி. (v.) *பிறரை நக்கல் செய்யும் வகையில் விரலை ஆட்டுதல்; வாயைக் கோணிப் பேசுதல்;* to make faces at someone.

**வலிந்துகொள்ளுதல்** வி. (v.) *1. வலுக் கட்டாயமாகக் கைப்பற்றுதல்;* to annex by force. *2. இடர்ப்பட்டுப் பொருள் கொள்ளுதல்;* to strain, as in interpretation, to understand with great difficulty.

**வலிந்துவந்து பேசுதல்** வி. (v.) *பிறர் விருப்பமின்றி தானாகவே முன் வந்து பேசுதல்;* to voluntarily to a person who is not willing to talk.

**வலிந்துவலிந்துபேசுதல்** வி. (v.) *ஒரு திட்டத்தை (அ) கருத்தை வற்புறுத்திப் பேசுதல்;* to talk a subject or plan emphaticaly.

**வலிப்பு** பெ. (n.) *திடீரென்று கட்டுப் படுத்த முடியாத அளவுக்குக் கை கால்கள் இழுக்கும் இசிவு;* convulsion, fit.

**வலிபடுதல்** வி. (v.) *1. வலிமையுறுதல்;* to become strong. *2. மாறுபடுதல்;* to compete, rival. *3. பற்றியிழுக்கப் படுதல்;* to be drawn, dragged.

**வலிமைசெய்தல்** வி. (v.) *வலவந்தப் படுத்துதல், கட்டாயப்படுத்துதல்;* to force, compel.

**வலியச் செய்தல்** வி. (v.) *ஒரு செயலை வலுக்கட்டாயமாகச் செய்தல்;* to do an action forcefully.

**வலியச் சென்றுபேசுதல்** வி. (v.) *ஒருவர் பேசாத சூழலிலும் தானாகச் சென்று பேசுதல்;* to speak voluntarily to a person, who is not willing to talk.

**வலியவன்** பெ. (n.) *1. வலிமையுள்ளவன்;* strong and sturdy man. *2. திறமையாளன்;* capable or able man, expert, a dept.

**வலியறிதல்** வி. (v.) *பகைவனுடைய வலிமையைத் தெரிந்து கொள்ளுதல்;* judging or sensing the strength of one's enemy.

**வலியுறுத்துதல்[1]** வி. (v.) *1. உறுதி கூறுதல்;* to affirm, assure. *2. கோரிக்கையை வற்புறுத்துதல்;* to emphasise.

**வலியுறுத்துதல்[2]** வி. (v.) *ஒரு கருத்து, எண்ணம், கோரிக்கை முதலியவற்றை அழுத்தம் தந்தோ மீண்டும் மீண்டும் சொல்லியோ கவனத்திற்கு உட்படுத்துதல்;* stress., affirm.

**வலிவுகொடுத்தல்** வி. (v.) *நோயினால் உடல் வலிமை குன்றிய பொழுது ஆற்றலூட்டும் சொற்களைக் கூறுதல்;* to speak gentle and warm words to reoccupate one's illness.

**வலிவூட்டுதல்** வி. (v.) *கருத்து போன்றவற்றை உறுதிபடுத்துதல், வலியுறுத்துதல்;* support, strengthen.

**வலுக்கட்டாயம்** பெ. (n.) *1. வலியுறுத்தல்;* force, coercion. *2. வல்லந்தம்;* compulsion.

**வலுக்கட்டாயமாக** வி. (v.) *விருப்பமில்லாதவற்றைச் செய்வதற்கு*

ஒருவரை கட்டாயப்படுத்துதல்; against one's will.

**வலுச்சண்டை** பெ. (n.) வேண்டுமென்றே போடும் சண்டை; deliberate or wanton quarrel.

**வலுத்துப்போதல்** வி. (v.) கெட்டியாகுதல்; to grow strong solid.

**வலுப்படுத்துதல்** வி. (v.) வலிமை அடையச் செய்தல்; strengthen.

**வலுப்பெறுதல்** வி. (v.) வலிமை அடைதல், வலுத்தல்; get strengthened.

**வலுவடைதல்** வி. (v.) வலிமை கூடுதல் (அ) ஆற்றலுடைத்தாதல்; to get strength or vigour.

**வலுவாய்ச் செய்தல்** வி. (v.) காற்று புகாதபடி கெட்டியாய்ச் செய்தல்; to lute well so that no air can enter, to make air proof solid statue.

**வலுவிழத்தல்** வி. (v.) வலிமைக் குறைதல் (அ) செயலிழத்தல்; to loose the strengthen or vigour.

**வலுவூட்டுதல்** வி. (v.) நோயினால் வலுவிழந்த (அ) ஆற்றல் குன்றிய உடலுக்கு வலிவூட்டும் ஊக்க மருந்தினைக் கொடுத்தல்; to offer tonic to energize physical condition.

**வலை** பெ. (n.) கயிறு, இழை, கம்பி போன்றவற்றால் ஒரே அளவிலான இடைவெளிவிட்டுப் பின்னப்பட்டு (அ) இடைவெளியோடு உருவாக்கப் பட்ட கருவி; net, anything knitted like a net.

**வலைக்கயிறு** பெ. (n.) விலங்குகளை அகப்படுத்துங்கயிறு; net, trammel.

**வலைப்பந்தாட்டம்** பெ. (n.) பந்தைத் தரையில் தட்டித்தட்டி எடுத்துச் செல்லாமல், தூக்கி எறிந்தும் பிடித்தும் விளையாடும் பெண்கள் விளையாட்டு; net ball.

**வலைபோட்டுத்தேடுதல்** வி. (v.) ஓர் இடம் கூட விடாமல் தேடுதல்; search thoroughly.

**வலையூசி** பெ. (n.) வலை பின்னுவதற்குப் பயன்படும் ஊசி; a needle used of knitting nets.

**வலைவிரித்தல்** வி. (v.) ஒருவர் மாட்டிக் கொள்ளும்படியாகத் தக்க ஏற்பாடுகள் செய்தல்; lay a snare.

**வலைவீசுதல்** வி. (v.) *1.* மீன் முதலியனவற்றை வலைக்க கடற் பரப்பில் வலையை யெறிதல்; to spread the net, as in fishing activities. *2.* வயப்படுத்த முயலுதல்; to try to ensnare or influence a person.

**வழக்கறிஞர்** பெ. (n.) சட்டப்படிப்பைப் படித்து நயன்மன்றத்தில் வழக்கிட்டு ரைப்பதற்காகப் பதிவு செய்து கொண்டு தொழில் செய்பவர்; advocate.

**வழக்கறிதல்** வி. (v.) *1.* பழக்க வழக்கங் களையறிதல்; to have a knowledge of manners and customs. *2.* சட்டமறிதல்; to be versed with law or statute.

**வழக்கறுத்தல்** வி. (v.) *1.* வழக்கமான போக்கைத் தடுத்தல்; to felter or hinder one's movement. *2.* வழக்கைத் தீர்த்து விடுதல்; to decide, as a case, to settle, as a dispute.

**வழக்காடுதல்** வி. (v.) *1.* சொற் போராடுதல்; to dispute, wrangle. *2.* நயன்மைக்காகப் போராடுதல்; to litigate.

**வழக்காடு மன்றம்** பெ. (n.) தொடுக்கப் பட்ட ஒரு சிக்கலைச் சட்ட உதவியோடு ஒரு பிரிவினரும் எதிர்த்து மற்றொரு பிரிவினரும் நயன் மன்றத்தில் வழக்காடும் நடுவம்; a debating forum with scholars as of argument in court.

**வழக்காளி** பெ. (n.) *1.* வழக்குத் தொடுத்தவன்; plaintiff. *2.* சொற்போர் புரிவோன்; disputant, wrangler. *3.* சட்ட நுணுக்கத்தையும், வழக்கின் தன்மை யையும் அறிந்தவன்; one who is well-versed in law and case details.

**வழக்காறு** பெ. (n.) மக்களின் வாழ்க் கையில் காலங்காலமாக எல்லோ

ராலும் பகிர்ந்துக் கொள்ளப்பட்டு நடைமுறையில் வழங்கி வருபவை; custom and usage; lore time.

**வழக்கு** பெ. (n.) *1.* சொத்து போன்றவற்றின் உரிமை குறித்தோ குறிப்பிட்ட குற்றம் செய்தது யார் என்பதைக் குறித்தோ நயன்மன்றத்தில் கொண்டுவரப்படும் சிக்கல்; suit, case. *2.* மக்களால் பின்பற்றப் படுவதாகவும் பயன்படுத்தப்படுவ தாகவும் இருப்பது; that which is current.

**வழக்குத்தீர்த்தல்** வி. (v.) வழக்கினை ஆய்ந்து மெய்ம்மையை முடிவு செய்தல்; to decide, settle, as a law-suit.

**வழக்குத்தொடர்தல்** வி. (v.) *1.* அற மன்றத்திற்கு வழக்கினைப் பதிவு செய்தல்; to avail court of law, to file a law suit in court. *2.* சொற்போரிடுதல்; to carry on a dispute, to aver of argue.

**வழங்குதல்** வி. (v.) *1.* கொடுத்தல், அளித்தல்; distribute. *2.* நிகழ்ச்சி முதலியவற்றை பார்வையாளர் களுக்குத் தருதல்; present.

**வழவழவெனல்** பெ. (n.) *1.* வழுக்குதற் குறிப்பு; expr. signifiying slipperiness. *2.* தெளிவின்றிப் பேசுதற்குறிப்பு; wishy-washy talk, speaking unclearly, infirmity in talking .

**வழி** பெ. (n.) ஓரிடத்திலிருந்து இன்னோ ரிடத்துக்குச் செல்வதற்காக இருக்கும் (அ) அமைக்கப் பட்டிருக்கும் சாலை; way (to a place).

**வழிகாட்டி** பெ. (n.) ஊரைச் சுற்றிப்பார்க்க வந்தவர்களைத் தன்னுடன் அழைத் துச் சென்று விளக்கம் தரும் பணியைச் செய்பவர்; guide (to tourists).

**வழிகாட்டி மரம்** பெ. (n.) ஓர் இடத் திலிருந்து பல சாலைகள் பிரியும் போது அவை எங்கு செல்கின்றன என்பதைத் தெரிவிக்கும் பெயர்ப் பலகைகளை உடைய கம்பம்; sign post at crossroads.

**வழிகாட்டுதல்** வி. (v.) எதைச் செய்யலாம், எப்படிச் செய்யலாம் என்று பின்பற்றத் தகுந்த வகையில் சுட்டிக் காட்டுதல்; give guidance.

**வழிகோலுதல்** பெ. (n.) ஒன்று நிகழ் வதற்கான அடிப்படையை (அ) வழியை அமைத்துத் தருதல்; pave the way.

**வழிச் செலவு** பெ. (n.) செலவின்போது ஏற்படும் சிறு செலவு; sundry expenses travelling expenses.

**வழித்துணை** பெ. (n.) ஒருவர் ஓரிடத் துக்குப் போகும்போது பாதுகாப்புக் காக (அ) பேசிக் கொண்டிருப்பதற் காகக் கூடவே செல்பவர்; fellow traveller companion.

**வழித்தோன்றல்** பெ. (n.) ஒரு குடியில் தோன்றிய பிள்ளை; male descendant.

**வழிதவறுதல்** வி. (v.) ஒழுக்கம் தவறி நடத்தல்; go astray.

**வழிதிகைத்தல்** வி. (v.) *1.* செல்வழி தெரியாது மயங்குதல்; to get puzzled by losing one's way. *2.* செய்வகை தெரியாது கலங்குதல்; to be confused in mind not knowing what to do.

**வழிந்தோடுதல்** வி. (v.) பெய்த மழைநீர் நிலத்தின் மீது புரண்டோடுதல்; to overflow the rain water on the land on the surface as storm or rain water.

**வழிநடத்துதல்** வி. (v.) ஓர் இயக்கம், குழு போன்றவற்றுக்குத் தலைமை தாங்கி நடத்துதல்; ஒருவர் என்ன செய்ய வேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்று வழிகாட்டி நடக்கச் செய்தல்; lead, guide.

**வழிநடைச் சோர்வு** பெ. (n.) வழிநடை யால் ஏற்பட்ட சோர்வு; fatigue due to long journey by walk.

**வழிப்பறித்தல்** பெ. (n.) சாலையில் செல்வோரிடமிருந்து பணம், நகை முதலியவற்றைக் கொள்ளையடிக்கும் செயல்; highway robbery.

**வழிப்போக்கன்** பெ. (n.) கால்நடையாக நடந்து செல்பவன்; traveller, pedestrian.

**வழிபடுதல்** வி. (v.) வணங்குதல், தொழுதல்; pray, worship.

**வழிபாடு** பெ. (n.) *வணங்கும் செயல், நேர்த்திக்கடன்;* prayer, worship.

**வழிமறித்தல்** வி. (v.) *செல்வதைத் தடுத்தல்;* to stop, obstruct, hinder or prevent, as a person from going.

**வழிமுறை** பெ. (n.) *ஒன்றை முறையாகச் செய்வதற்காகவோ பின்பற்றுவதற்காகவோ இருக்கும் வழி;* proper way method (of doing something).

**வழிமொழிதல்** வி. (v.) *ஓரமைப்பின் கூட்டத்தில் ஒருவர் முன் மொழிந்ததற்குத் துணைதருதல் பொருட்டு மற்றொருவர் கூறுதல்;* second (a motion, propasal, etc.,).

**வழியடைத்தல்** வி. (v.) *1. மேலும் செல்லவொட்டாது வழியைத் தடை செய்தல்;* to obstruct or hinder or present or wall the way. *2. தடுத்தல்;* to raise obstacles in the way of; to impede, to felter, to stop, prevent, hinder.

**வழியனுப்புதல்** வி. (v.) *வெளியூர் (அ) வெளிநாடு செல்லும் விருந்தினருக்கு உறவினர், நண்பர் ஆகியோருக்கு விடை கொடுத்து அனுப்புதல்;* see some one off, bid farewell.

**வழிவகை** பெ. (n.) *ஒரு குறிப்பிட்ட ஒன்று நிகழ்வதற்கான ஏற்பாடும், வழி முறையும்;* ways and means, provisions.

**வழிவழியாக** வி. (v.) *பழக்கவழக்கங்கள், தொழில் முதலியவை முதல் தலைமுறையிலிருந்து அடுத்தது என்ற வகையில், கொடிவழியாக;* from generation to generation.

**வழிவிடுதல்** வி. (v.) *ஒன்று (அ) ஒருவர் செல்வதற்குத் தடையாக இல்லாமல், விலகி வழி ஏற்படுத்தித் தருதல்;* make way (for somebody).

**வழுக்கல்** பெ. (n.) *1. சறுக்குகை;* slipperiness. *2. சறுக்கலான தரை;* slippery ground.

**வழுக்கிவிழுதல்** பெ. (n.) *வாழ்க்கை நெறியிலிருந்து பிறழ்ந்து போதல்;* to go away from the correct path or direction.

**வழுக்குதல்** வி. (v.) *பிடிப்பு இல்லாமல் நழுவிச் சரிதல்;* slip by slippery.

**வழுக்குமரம்** பெ. (n.) *மரத்தின் உச்சியில் பரிசாக வைக்கப்பட்டிருக்கும் பொருளைக் கைப்பற்றுவதற்காகப் போட்டியிட்டு ஏறும் எண்ணெய் தடவிய வழவழப்பான மரம்;* greased pole, the competion of climbing on the greased pole.

**வழுக்கை** பெ. (n.) *1. தலைமுடி ஓரளவுக்கோ (அ) முழுவதுமாகவோ உதிர்ந்த பின் மழமழப்பாகக் காணப்படும் தலைப்பகுதி;* baldness. *2. இளம் தேங்காயின் உள்ளீடு;* soft flesh of a tender cocount.

**வழுவுதல்** பெ. (n.) *உரிய ஒழுங்கு, கொள்கை, கடமை முதலியவற்றிலிருந்து தவறுதல்;* fail (in one's duty, responsibility, deviate.

**வள்ளல்** பெ. (n.) *வறியோர்க்கு அவர்களின் தேவை அறிந்து பொருளோ பணமோ கொடுத்து உதவுபவர்;* philanthropist.

**வளர்ப்புபிள்ளை** பெ. (n.) *1. மிகவும் விரும்பி வளர்க்கப்படும் பிள்ளை;* foster- child. *2. தத்துப் பிள்ளை;* adopted child.

**வளர்பிறை** பெ. (n.) *காருவாவிற்கு மறுநாளிலிருந்து வெள்ளுவா வரும் வரை நிலா வளரும் காலம்;* waxing moon.

**வளரும் நாடு** பெ. (n.) *பொருளியல், தொழில் போன்றவற்றில் முன்னேற்றமடைந்துக் கொண்டிருக்கும் நாடு;* developing country.

**வளவளவென்று** வி.அ. (v.) *எழுத்து, பேச்சு போன்றவை சுருக்கமாக இல்லாமல், உரிய அளவை மீறியதாக இருத்தல்;* unendingly, pointlessly.

**வளாகம்** பெ. (n.) *அளவில் பெரிய நிறுவனங்கள், அலுவலகங்கள் முதலியவற்றின் சுற்றுச் சுவர்களுக்கு உள்ளாக அமைந்திருக்கும் பகுதி;* campus.

**வளை** பெ. (n.) *எலி, நண்டு முதலியன தரையில் குடைந்து ஏற்படுத்தும் நீளமான பொந்து;* hole, burrow.

**வளைகாப்பு** பெ. (n.) *முதல் கருவுற்ற பெண்ணுக்கு மகப்பேற்றிற்குமுன் நிகழ்த்தும் சடங்கு;* ceremony of first pregnancy.

**வளைத்தல்** வி. (v.) *1. வளையச் செய்தல்;* to bend or curve. *2. ஒருவரையோ ஒரு கூட்டத்தையோ தப்பமுடியாதபடி சூழ்ந்து மடக்குதல்;* surround, close in.

**வளைத்துக் கட்டுதல்** வி. (v.) *வயிறு நிறையச் சாப்பிடுதல்; அளவுக்கு அதிகமாக உண்ணுதல்;* eat one's fill, devour.

**வளைத்துப்போடுதல்** பெ. (n.) *வயப் படுத்துதல்;* buy up/ bring under one's control or influenee.

**வளைந்து கொடுத்தல்** வி. (v.) *இணக்க மாகப் போதல், ஒத்துப் போதல்;* accommodate.

**வளையல்** பெ. (n.) *மாழை, தங்கம் கண்ணாடி முதலியவற்றாலான, பெண்கள் முன்கையில் அணியும் வளையம் போன்ற அணிகலன்;* bangle.

**வற்புறுத்துதல்** வி. (v.) *திரும்பத்திரும்பக் கூறிக் கட்டாயப்படுத்துதல்;* compel, force put pressure.

**வற்றுதல்** வி. (v.) *1. ஊற்று குறைவதால் (அ) வெயிலின் கடுமையால் நீரின் அளவு குறைதல்;* dry up. *2. பால், கண்ணீர் முதலியவை சுரப்பது நிற்றல்;* dry up.

**வறட்சி** பெ. (n.) *மழை இல்லாததாலோ வெப்ப மிகுதியாலோ தேவையை நிறைவு செய்யும் அளவுக்குக் கூட நீர் இல்லாமல் போகும் நிலை;* drought, dryness.

**வறட்டி** பெ. (n.) *சாணத்தை வைக்கோல் கூளத்துடன் கலந்து, வட்டமாகத் தட்டிக் காயவைத்துப் பயன்படுத்தும் எரிபொருள்;* dried cow dung cake.

**வறட்டு இருமல்** பெ. (n.) *சளியின் காரணமாகத் தொண்டை வறண்டு தொடர்ந்து உண்டாகும் இருமல்;* dry cough.

**வறட்டுப்பசு** பெ. (n.) *பால் கறவாத மாடு;* dry or barren cow.

**வறவறெனல்** பெ. (n.) *உலர்ந்து கடினமாதற் குறிப்பு;* becoming dry and dard.

**வறளுதல்** வி. (v.) *1. வற்றுதல்;* become dry become parched. *2. நாக்கு, தொண்டை, தோல் போன்றவை ஈரத் தன்மையற்றுப்போதல், உலர்தல்;* become dry.

**வறியோன்** பெ. (n.) *வறுமையில் இருப்பவன்; ஏழை;* poor person.

**வறுத்தல்** வி. (v.) *வாணலியில் போட்டு சூட்டில் காயச் செய்து தேவையான பதத்துக்குக் கொண்டுவருதல்;* roast.

**வறுத்தெடுத்தல்** வி. (v.) *1. தொந்தரவு;* torment. *2. வருத்துதல்;* scorch. *3. திரும்ப வலியுறுத்துதல்;* be annoyingly insistent.

**வறுபடுதல்** வி. (v.) *தீயாற் பொரிதல்;* to be fried, parched or grilled.

**வறுமைக்கோடு** பெ. (n.) *நிலவுடைமை, வாழுமிடம், உடை, உட்கொள்ளும் உணவு, வருமானம், எழுத்தறிவு போன்றவற்றின் அடிப்படையில் கீழ்மட்ட வருமான வரம்பு;* poverty line.

**வறுவல்** பெ. (n.) *1. சில காய்கறிகள், மீன் முதலியவற்றைத் துண்டுகளாக்கி எண்ணெயில் போட்டுப் பொரித் தெடுப்பது;* anything fried. *2. பொரியல்;* fried vegetables.

**வறையோடு** பெ. (n.) *1. பொரிக்குஞ் சட்டியோடு;* earth-pan used for parching. *2. பயனற்றவர்;* good for nothing person.

**வன்சொல்** பெ. (n.) *1. கடுஞ்சொல்;* rude or harsh. *2. அறிவில்லாதவனின் மொழி;* barbarious tongue.

**வன்பகை** பெ. (n.) *கடுமையான பகை;* deep enmity, implacable hatred.

**வன்முறை** பெ. (n.) *ஒருவரின் உயிருக்கும் உடைமைக்கும் நேர்ச்சி விளை*

விக்கும் வகையில் செயற்படும் *முறை;* violence.

## வா

**வா** பெ. (n.) *வரவேண்டி அழைத்தல்;* come.

**வாக்கப்படுதல்** வி. (v.) *வாழ்க்கைப் படுதல்; திருமணம் செய்து கொள்ளுதல்;* married some one get married to some one or into some family.

**வாக்களி** வி. (v.) *உறுதிகூறல்;* assurance.

**வாக்கு[1]** பெ. (n.) *உறுதிசொல்லல்;* promising.

**வாக்கு[2]** பெ. (n.) *ஓட்டு, ஒப்போலை;* vote.

**வாக்குக் கண்** பெ. (n.) *மாறுகண்;* squint eye.

**வாக்கு கொடுத்தல்** பெ. (n.) *உறுதி சொல்லல்;* promise.

**வாக்கெடுத்தல்** வி. (v.) *தலைமயிர் வகிர்தல்;* to part the hair down the middle.

**வாக்கெடு** வி. (v.) *தலைமயிரை வகிர்செய்;* to part the hair down the middle.

**வாக்குச்சாவடி** பெ. (n.) *ஒப்போலையைச் செலுத்தும் நடுவம்;* polling booth.

**வாக்குச்சீட்டு** பெ. (n.) *ஒப்போலை;* ballot paper.

**வாக்குப்பதிவு** பெ. (n.) *ஒப்போலையைப் பதிவிடல்;* voting, polling.

**வாக்குமூலம்** பெ. (n.) *உசாவலில் நிகழ்வு விளக்கம் கூறல்;* formal statement (made during an enquiry).

**வாக்குவாதம்** பெ. (n.) *வாய்ச்சண்டை;* (heated) argument; discussion; row.

**வாக்குறுதி** பெ. (n.) *சொல்லுறுதி;* keeping the promise.

**வாகு[1]** பெ. (n.) *1. அழகு;* beauty. *2. ஒளி;* light; brightness. *3. ஒழுங்கு;* niceness, fitness. *4. திறமை;* skill.

**வாகு[2]** பெ. (n.) *ஏற்றதாக அமைதல்; ஏந்தாக, தோதாக உள்ள தன்மை;* being convenient or fitting well.

**வாகைசூடுதல்** வி. (v.) *வெற்றியால் மேல்நிலையடைதல்;* triumph; be crowned with success.

**வாங்கரிவாள்** பெ. (n.) *வளைந்த அரிவாள்;* curved sickle.

**வாங்கற் கழுத்து** பெ. (n.) *கோணற் கழுத்து;* wry - neck.

**வாங்காணி** பெ. (n.) *மரவாணி;* wooden peg.

**வாங்கிக்கட்டிக் கொள்தல்** வி. (v.) தேவையின்றி அடி, உதை, ஏச்சு, பேச்சு பெறும் நிலைக்கு உள்ளாதல்; be receive beating scolding etc.

**வாங்கிக்கட்டுதல்** வி. (v.) *அடி, திட்டு முதலியவற்றைப் பெறுதல்;* to receive beating, scolding etc.

**வாங்கிக்கட்டுதல்** பெ. (n.) *அடி, உதை, குட்டு, ஏச்சு, பேச்சு இவற்றையும் பெற்றுக் கொள்ளுதல்;* receive (beating,scolding,etc).

**வாங்குதல்** வி. (v.) *1.* விலை கொடுத்துப் *பெறல்;* to buy. *2. அடித்தல்;* to strike. *3. வைதல்;* to abuse, reproach.

**வாங்கு[1]** பெ. (n.) *உள்ளே கொள்;* absorb to keep something in mind.

**வாங்கு[2]** பெ. (n.) *துறட்டி;* pole fixed with a hook or crook - like thing (to pluck fruit, etc.,).

**வாங்கு[3]** பெ. (n.) *நீள இருக்கை;* long bench.

**வாங்கு[4]** வி. (v.) *1.அடி, உதை கொடு;* to blow (some body). *2. வசவு;* abuse; rebuke.

**வாங்கு[5]** பெ. (n.) *அலக்கு; தொரட்டி;* poles fixed with a hook or curved sickle.

**வாங்கு[6]** பெ. (n.) *பிச்சுவா (வளைந்த வடிவுடைய குருவாள்);* dagger.

**வாச்சி** பெ. (n.) *1. மரம்செதுக்கும் கருவி;* adze. *2. ஆடாதோடை;* justicia adathoda.

**வாசகசாலை** பெ. (n.) *படிப்பகம்; நூலகம்;* reading room; library.

**வாசக ஞானம்** பெ. (n.) *பட்டறிவின்றி படிப்பு அறிவு;* speculative knowledge.

*2. போலியான அறிவுப் பேச்சு;* lip wisdom.

**வாசகப்பா** பெ. (n.) *1. நாடக இலக்கியம்;* lit. of drama. *2. நகைப்பூட்டும் நாடகம்;* comedy.

**வாசகப்பாங்கு** பெ. (n.) *நல்ல உரைநடை;* good style.

**வாசகப்பதம்** பெ. (n.) *வழக்குச் சொல்;* colloquial word.

**வாசகப் புத்தகம்** பெ. (n.) *உரைநடை நூல்;* prose reader for learners.

**வாசகம்[1]** பெ. (n.) *வாசிக்கும் அல்லது வாசித்தற்குரிய பகுதி; வாசகப் பொத்தகம்;* reader.

**வாசகம்[2]** பெ. (n.) *வாக்கியம்; கூற்று;* message; text.

**வாசகம்[3]** பெ. (n.) *1. பேச்சு;* speech, word of mouth news, message. *2. ஆடாதோடைக் கொடி;* a shurb - adathodavasica.

**வாசகன்** பெ. (n.) *1. பேசுவோன்;* speaker, one who speaks. *2. செய்தித்தாள், புத்தகம் முதலானவற்றை வாசிப்பவன்;* reader.

**வாசகி** பெ. (n.) *செய்தித்தாள், புத்தகம் முதலானவற்றை வாசிப்பவள்;* (female) reader.

**வாசப்படி** பெ. (n.) *வாசலில் அமைந்துள்ள படி;* step at the entrance.

**வாசம்செய்தல்** பெ. (n.) *வதித்தல்; குடியிருத்தல்;* leving; residing.

**வாசல்** பெ. (n.) *1. கட்டடத்தின் முகப்பு வழி;* gateway, portal, entrance. *2. வீட்டினுள் உள்ள முற்றம்;* open courtyard within a house.

**வாசல் தெளித்தல்** வி. (v.) *அதிகாலையில் நீர் தெளித்து வாயிலைத் தூய்மை செய்தல்;* sprinkle water on the floor of the courtyard (as part of house work).

**வாசற்கதவு** பெ. (n.) *வீட்டின் முகப்பு நிலைக் கதவு;* front door, as of a house.

**வாச(ற்)கால்** பெ. (n.) *1. வாயில் நிலை;* door frame. *2. வாசல் நுழைவு;* entrance.

**வாசற்காவல்** பெ. (n.) *வாயிற்காப்போன்;* door keeper; sentry at the gate or entrance.

**வாசற்படி** பெ. (n.) *1. வாயினிலையின் அடிப்பாகம்;* door sill, door-step. *2. வாசல்;* doorway. *3. வாசனிலையின் மேற்பாகம்;* lintel, shelf over the lintel.

**வாசித்தல்** வி. (v.) *1. படித்தல்;* to read. *2. கற்றல்;* to learn. *3. வீணை முதலியன இசைக்க கருவிகளை மீட்டுதல்;* to play on a musical instrument. *4. புல்லாங்குழல் போன்ற துளைக் கருவி இயக்குதல்;* to play.

**வாஞ்சை** பெ. (n.) *அன்பு; பரிவு; அருள்;* fondness, grace, love.

**வாட்குடி** பெ. (n.) *மறக்குடி; மறக்குலம்;* race of warriors.

**வாட்கூத்து** பெ. (n.) *வாளைப்பிடித்துக் கொண்டு ஆடும் கூத்து;* sword dance.

**வாட்டசாட்டம்** பெ. (n.) *நிறைந்த அளவுள்ள முழு அமைவுடைய தோற்றப் பொலிவு;* well built.

**வாட்டப்பொலி** பெ. (n.) *களத்து மேட்டில் அடித்துப்போடப்பட்டுள்ள நீண்ட (பெரிய) நெற்பொலி;* long heap of paddy on the threshing floor.

**வாட்டம்[1]** பெ. (n.) *1. வாகாய் அமைதல்;* flight portion. 2. *அமைவு;* correct formation.

**வாட்டம்[2]** பெ. (n.) *1. வாடுகை;* fading; withering. *2. உலர்ந்த நிலை;* dryness. *3. மெலிவு;* leanness. *4. வருத்தம்;* distress. *5. சோர்வு;* tiredness.

**வாட்டி** பெ. (n.) *தடவை;* time; turn.

**வாட்டுதல்** வி. (v.) *1. உலர்த்துதல்;* to cause to wither of fade; to dry. *2. வதக்குதல்;* to roast. *3. வருத்துதல்;* to vex, afflict, mortify. *4. ஆடை வெளுத்தல்;* to wash as cloth.

**வாட்டு[1]** வி. (v.) *1. உலர்த்து;* to cause to wither or fade; to dry; to scorch. *2. வதக்கு;* to roast. *3. வருத்து;* to vex; afflict; mortify. *4. கெடு;* to destroy; to injure.

**வாட்டு²** வி. (v.) *1. நெருப்பிற் சுடு; தீயில் வேகவை;* roast; grill. *2. வருத்து; கவலைகொள்;* torment.

**வாடகை** பெ. (n.) *பயன்பாட்டிற்குக் கூலியாகத் தரும் பணம்;* rent, hire.

**வாடகைத்தாய்** பெ. (n.) *செயற்கை கருவைச் சுமக்கும் பெண்;* surrogate mother.

**வாடஞ்சம்பா (வாடன் சம்பா)** பெ. (n.) *மட்ட நெல்வகை;* an inferior kind of paddy.

**வாடல்** பெ. (n.) *1. வாடுகை; வாடிய நிலை;* withering; drying. *2. வாடின பொருள்;* that which in faded. *3. உலர்ந்த;* faded.

**வாடல்நோய்** பெ. (n.) *இலையைப் பாதிக்கும் பூஞ்சணைநோய்;* wilt.

**வாடாத்தாமரை** பெ. (n.) *மன்னர்கள் பாணர்க்கு அளிக்கும் பொற்றாமரை;* lotus-shaped ornament of gold, presented, to singers (panars) by ancient kings.

**வாடாப்பூ** பெ. (n.) *வாடாமல்லிகை; தென்னம்பூ; பனம்பூ, பறிக்காத பூ;* unfaded and unplucked flowers.

**வாடாமல்லி** பெ. (n.) *இறுதிவரை உலர்ந்தும் நிறம் மாறா பூவகை;* a kind of flower which does not lose orignial colour in withering.

**வாடாவள்ளி** பெ. (n.) *1. கூத்து;* a kind of dance. *2. ஓவியம்; படம்;* painting; picture.

**வாடாவிளக்கு** பெ. (n.) *நந்தாவிளக்கு;* perpetually burning lamp.

**வாடி¹** பெ. (n.) விறகு, மரம் முதலானவை *விற்கும் இடம்; மரவாடி;* yard, shed, where firewood and timber are stocked and sold.

**வாடி²** பெ. (n.) *குடிசை;* hut.

**வாடி³** பெ. (n.) *1. தொட்டாற் சுருங்கிச் செடி வகை;* touch me not plant a kind of sensitive plant. *2. தோட்டம்;* garden. *3. முற்றம்;* courtyard. *4. வீடு;* house. *5. மீனுலர்த்துமிடம்;* fish-curing yard. *6. பட்டி;* village; hamlet. *7. சாவடி;* rest-house. *8. காணியக்காரரின் புல் வேய்ந்த மூங்கிற்குடிசை;* hunt cottage made of grass and bamboo. *9. அடிப் பீடம்;* enlosure, fenced place. *10. மர வாடி;* timber depo.

**வாடிக்கை** பெ. (n.) *1. வழக்கம்;* habit. *2. வழக்கமாகப் பற்றுவரவு செய்கை;* custom, as in dealing. *3. முறை;* usage. *4. வாடிக்கைக்காரர்-யாளர் வழக்க மான நுகர்வோர்;* customer.

**வாடிக்கைக்காரர்** பெ. (n.) *1. வழக்கமாக ஓரிடத்தில் பற்று வரவு செய்வோர்;* customer. *2. பண்டங்களை வழக்க மாக ஓரிடத்து விலைக்குக் கொடுத்து விடுவோன்;* customary supplier of goods.

**வாடிவாசல்** பெ. (n.) *1. அரண்மனை வாசல்;* entrance hall of a palace or mansion. *2. முல்லை நில மாட்டுத் தொழுவாசல்;* entrance of cowshed in mullai tract. *3. இடையர் குடியிருப்பு வாசல்;* entrance of idaiyar colony. *4. சல்லிக்கட்டுக் காளைகளை அடைத்து வைத்திருக்கும் வாசல்;* small entrance in the narrow passage between the ground and the place where the bulls are kept in the sport of *jallikkattu*. *5. பாசறைவாசல்;* entrance of encampment.

**வாடிவீடு** பெ. (n.) *1. ஓய்வு விடுதி;* rest house. *2. மன்னன் தங்கல் மனை;* royal rest house.

**வாடிவேலி** பெ. (n.) *சிற்றூரின் எல்லைக் குறி;* the boundary line of a village.

**வாடுதல்** வி. (v.) *1. உலர்தல்;* to wither, fade, dry up. *2. மெலிதல்;* to be emaciated; to become weak to become so lean. *3. மனமழிதல்;* to pine away, grieve. *4. பொலிவழிதல்;* to turn pale. *5. தோல்வியடைதல்;* to be defeated. *6. கெடுதல்;* to perish. *7. நீங்குதல்;* to be removed. *8. குறைதல்;* to deminish, decrease. *9. எடைகுறைதல்;* to fall short in weight.

**வாடு** பெ. (n.) *வாடற்பூ;* faded flower.

**வாடூன்** பெ. (n.) *உப்புக்கண்டம்;* dried fish. *'கருவாடு'.*

**வாடைக் கொண்டல்** பெ. (n.) *வடகீழ்க் காற்று;* north east wind.

**வாடைப்பொடி** பெ. (n.) *1. நறுமணத்தூள்;* sweet scented or aromatic powder. *2. வசியப் பொடி (வயப்படுத்தும் பொடி) (அ) ஈர்க்கும் பொடி;* medicated powder that charms a person and keeps him under fascination.

**வாடை வசியம்** பெ. (n.) *ஈர்த்தல்; தன்வயப்படுத்தல்;* enchanting; charming.

**வாடை**[1] பெ. (n.) *1. வடதிசைக் காற்று;* north wind. *2. குளிர்காற்று;* chill wind. *3. காற்று;* wind. *4. மணம்;* scent; perfume. *5. தெருச்சிறகு;* row of houses, as in a street. *6. தெரு;* street. *7. வேடர் (அ) இடையர் வாழும் தெரு;* street where herdsmen or hunters reside. *8. குறுஞ்சிற்றூர்;* village; hamlet. *9. வழி;* direction.

**வாடை**[2] பெ. (n.) *மருந்து;* medicine.

**வாண்முகம்** பெ. (n.) *வாளின் கருக்கு; வாளின் வெட்டும் பகுதி;* the edge of a sword.

**வாண்முட்டி** பெ. (n.) *வாட்பிடி;* handel or hilt of a sword.

**வாண்டு** பெ. (n.) *குறும்புக் குழந்தை சுட்டிக் குழந்தை;* little rogue; mischievous child.

**வாணக்காரன்** பெ. (n.) *வாணவெடிகள் முதலியன செய்து விற்பவன்;* one who manufactures and sells fireworks.

**வாணக்குழாய்** பெ. (n.) *வேட்டுக் காக வெடி மருந்திடும் குழாய்;* metalic tube fixed in a block of wood, used for loading firework with gun powder.

**வாணலி** பெ. (n.) *வறுக்குஞ்சட்டி;* frying fan.

**வாணவெடி** பெ. (n.) *வெடிவகை;* a kind of rocket fire.

**வாணவேடிக்கை** பெ. (n.) *வாணங்களை வெடித்து நிகழ்த்தும் கண்கவர் காட்சி;* display of fireworks.

**வாணிகம்** பெ. (n.) *1. கொண்டு கொடுத்தற் தொழில்;* trade. *2. ஊதியம்;* gain, profit.

**வாணிகன்** பெ. (n.) *1. பல பண்டங்களை விற்பவன்;* merchant, trader. *2. வணிகன்;* man of the trading caste. *3. துலாக்கோல்;* scales; balance.

**வாதனை** பெ. (n.) *தொல்லை; துன்பம்;* trouble.

**வாமூர்த்தம் (வாய் முகூர்த்தம்)** பெ. (n.) *நல்ல சொல்; பலிக்கும் பேச்சு;* casual utterance which proves true.

**வாய்** பெ. (n.) *1. உதடு அல்லது அலகு இவற்றினிடையிலுள்ள உறுப்பு;* mouth. *2. ஏனம் முதலியவற்றின் திறந்த மேற்பாகம்;* mouth of a vessel, etc. *3. உதடு;* lip. *5. விளிம்பு;* edge,rim.

**வாய்க்கசப்பு** பெ. (n.) *1. வாய் கசந்திருக்கை;* bitterness in the mouth. *2. பித்தத்தினால் வாயில் உண்டாகும் கசப்பு;* bitterness of taste owing to biliousness, disorders, fever etc.

**வாய்க்கணக்கு** பெ. (n.) *1. மனக்கணக்கு;* mental arithmetic, working out sums mentally. *2. எழுதாக் கணக்கு;* oral statement of account.

**வாய்க்கயிறு** பெ. (n.) *கடிவாளக் கயிறு;* rein.

**வாய்க்கரிசி** பெ. (n.) *1. எரியூட்டும் முன் உறவு முறையோராற் பிணத்தின் வாயிலிடும் அரிசி;* handful of rice dropped into the mouth of a deceased person by sons and other relations, just before cremation. *2. கையூட்டு;* bribe, tip. *3. மனமில்லாமற் கொடுப்பது;* anything unwillingly parted with.

**வாய்க்கருவி** பெ. (n.) *கடிவாளம்;* bit of a bridle.

**வாய்கட்டல்** பெ. (n.) *1. பத்தியங்காத்தல்;* to be on diet. *2. இதளிய எரியணம் முதலிய மருந்தினால் வாய் வெந்து போதல்;* inflammation of the mouth due to mercurial poisioning. *3. இறந்து*

*போனவர்களின் வாயைக் கட்டுதல்;* if the mouth remains opened after death a bandage is applied over the mandible closing it. *4. வாய் திறவாதபடி செய்தல்;* by witchcraft the mouth is tied and cannot be opened, (in magic).

**வாய்கட்டுதல்** வி. (v.t.) *1. பேசாதிருக்கச் செய்தல்;* to silence. *2. மந்திரத்தால் நச்சுயிரிகளின் வாயைத் திறவாமல் பண்ணுதல்;* to charm as a snake or beast, so as to prevent its opening its mouth. *3. மதிப்புரவுக் குறிப்பாக ஆடையால் வாயை மூடுதல்;* to cover one's mouth with cloth as a mark of respect.

**வாய்க்காசு** பெ. (n.) *1. பிணத்தின் வாயில் வாய்க்கரிசியுடன் வைக்கும் பணம்;* money placed on the mouth of a corpse with vaykkarisi. *2. கையூட்டு;* bribe, tip.

**வாய்காட்டுதல்** வி. (v.) *1. அதிகப் படியாகப் பேசுதல்;* to wag one's tongue. *2. கெஞ்சுதல்;* to cringe.

**வாய்க்காரன்** பெ. (n.) *1. பேச்சில் வல்லவன்;* clever speaker, talkative man. *2. செருக்கால் மிதமிஞ்சிப் பேசுவோன்;* man who is arrogant in speach. *3. பிறரைத் திட்டும் இயல் புள்ளவன்;* man given to scandal mongering.

**வாய்க்காரி** பெ. (n.) *1. பேச்சில் வல்லவள்;* clever speaker, talkative woman. *2. செருக்கால் மிதமிஞ்சிப் பேசுபவள்;* woman who is arrogant in speach. *3. பிறரைத் திட்டும் இயல் புள்ளவள்;* woman given to scandalmongering.

**வாய்க்கால்** பெ. (n.) *கால்வாய்;* course, channel, canal.

**வாய்க்காலுக்குப்போதல்** பெ. (n.) *மலங் கழித்தல்;* lit, to go to a channel, to go to stool.

**வாய்க்குட் பேசுதல்** பெ. (n.) *முணு முணுத்தல்;* to mumble, mutter, murmur.

**வாய்க்கு வந்தபடி** வி.எ. (adv.) *வரன்முறை இல்லாமல் மனம் போனபடி பேசுதல்;* speak without restraint.

**வாய்க்குவாய்** வி.அ. (adv.) *விடைக்கு விடை பேசுதல்;* counter answering frequently.

**வாய்க்குழிப்புண்** பெ. (n.) *வாயின் உட்புறத்தே உண்டாகும் ஒரு வகையான புண்;* perforating, ulcer in mouth

**வாய்க் குளறல்** பெ. (n.) *நோயினால் உளறிப் பேசுதல்; பதற்றத்தில் சொற்றடு மாறுதல்;* blabber, incoherancy of speech through to be checked.

**வாய்க்குற்றம்** பெ. (n.) *1. தன்னையறி யாமற் பேச்சில் நேரும் பிழை;* slip of the tongue, lapsus linguae. *2. பேச்சுக் குற்றம்;* error in speech.

**வாய்கிழிய** வி.எ. (adv.) *அதிகப் பேச்சு;* loudly and over speaking.

**வாய்குளிரப்பேசுதல்** வி. (v.) *இனிமை யாகப் பேசுதல்;* honeyed speech.

**வாய்கூசுதல்** பெ. (n.) *சொற்கள் பேசுவதில் அருவருப்புக் கொள்ளுகை;* being ashamed to use indecent words.

**வாய்க்கூடு** பெ. (n.) *விலங்கின் வாயின் மேலிடுங்கூடு;* small basket or other contrivance for muzzling an animal.

**வாய்க்கூடை** பெ. (n.) *வாய்க்கூடு பார்க்க.*

**வாய்க்கூலி** பெ. (n.) *கையூட்டு;* bribe, hush-money.

**வாய்க்கொப்பளித்தல்** பெ. (n.) *வாயில் நீரூற்றிக் கொப்புளித்தல்;* gargling with water or medicinal liquid.

**வாய்க்கொழுப்பு** பெ. (n.) *திமிர்ப்பேச்சு; செருக்குப் பேச்சு;* arrogance in speach, insolent speech. *'வாய்க் கொழுப்பால் உதை வாங்கினான்'.*

**வாய்க்கோணல்** பெ. (n.) *வாய்க்கோணி யுள்ள நோய்வகை;* a kind of disease.

**வாய்க்கோமாரி** பெ. (n.) *மாட்டுக்கு வாயில் வரும் நோய்வகை;* a mouth disease, in cattle.

**வாய் கொடுத்தல்** வி. (v.) *1. உறுதி மொழி கூறுதல்;* to give word promise.

*2. பேச்சுக் கொடுத்தல்;* to engage one in talk. *3. வாய்ச் சண்டை வளர்த்தல்;* to kindle a quarrel to bandy words. *4. விளைவுகளை எண்ணிப் பார்க்காமல் தாமாகப் போய்ப் பேசுதல்;* enter into a conversation voluntarily.

**வாய்ச்சாலக்கு** பெ. (n.) *சொல்வன்மை;* skill in speech, eloquence, fluency in speech.

**வாய்ச்சுத்தம்** பெ. (n.) *உண்மையுடைமை;* truthfulness.

**வாய்ச்சொல்** பெ. (n.) *1. பேச்சு;* utterance, speech, *2. காணாவொலி;* utterance of an invisible speaker, considered as an omen.

**வாய்சலித்தல்** வி. (v.) *பேசி வாயயர்தல்;* to be tired of speaking.

**வாய்சோர்தல்** வி. (v.) *1. பிதற்றுதல்;* to talk incoherently, as in delirium. *2. வாய்தடுமாறுதல் பார்க்க.*

**வாய்த்துடுக்கு** பெ. (n.) *1. துடுக்கான பேச்சு;* saucy or impertinent talk. *2. பேச்சிற் காட்டும் விரைவு;* rashness in speech. *3. பேச்சிற் காட்டும் செருக்கு;* arrogance in speech.

**வாய்தடுமாறுதல்** வி. (v.) *1. பேச்சுப் பதறுதல்;* stutter. *2. பேசுவதிற் பிழைபடுதல்;* to make a verbal mistake.

**வாய்திறத்தல்** வி. (v.) *1. வாயை அகல விரித்தல்;* to open, as a flower. *2. புண் கட்டி உடைதல்;* to break, as a boil. *3. வெள்ளம் கரையை உடைத்தல்;* to make a breach, as a flood. *4. மலர்தல்;* to blossom; to open, as a flower. *5. பேசுதல்;* to speak.

**வாய் நாற்றம்** பெ. (n.) *வாயிலிருந்து தோன்றுந் தீ நாற்றம்;* bad smell in the mouth.

**வாய்ப்பாட்டு** பெ. (n.) *வாயாற்பாடும் பாட்டு;* vocal music.

**வாய்ப்பாடம்** பெ. (n.) *1. பாராமற் சொல்லும்படி நெட்டுருப் பண்ணிய பாடம்;* lesson learnt by heart. *2. பொத்தகமின்றிக் கேள்வியாற் படித்த பாடம்;* lesson taught orally.

**வாய்ப்பாடு** பெ. (n.) *வாய்பாடு பார்க்க.*

**வாய்ப்பு** பெ. (n.) *1. ஏற்புடை நிலைமை;* favourability, favourable circumstance. *2. நேர்ப்பாடு;* good chance or opportunity. *3. பொருத்தம்;* fitness, suitability. *4. செல்வம்;* wealth. *5. செழிப்பு;* fertility. *6. ஊதியம்;* profit, gain.

**வாய்ப்புண்** பெ. (n.) *1. உள்வாயில் தோன்றும் புண்;* ulcer in the mouth, stomatitis. *2. நாக்குப் புண்;* inflammation of the tongue-glossitis. *3. கடுஞ்சொல்லாலுண்டாகும் மன வருத்தம்;* wound caused by harsh words. *4. வாய்க் கொப்புளம்;* thrush or aphtha.

**வாய்ப்பூட்டு** பெ. (n.) *1. தாடையெலும்பின் பொருத்து;* joint of the jaw bones. *2. வாய்க்கூடு பார்க்க. 3. பேசாமற்றடுக்கை;* prohibition from speaking. *4. கீழ்வாய் முகக் கட்டையில் இரண்டு சுழியுள்ளதான மாட்டுக் குற்றவகை;* a defect of cattle, consisting of two curls on the lower jaw.

**வாய்ப்பேச்சு** பெ. (n.) *1. வாய்ச்சொல்;* utterance, word to mouth. *2. வெறும் பேச்சு;* mere words, words, vain uterence.

**வாய்பாடு** பெ. (n.) *1. குறியீடு;* formula, symbolic expression. *2. பெருக்கல் முதலியன காட்டும் அட்டவணை;* table as of multiplication. *3. மரபுச் சொல்;* idiom cant. *4. வழக்கம்;* practice, custom, usage. *5. சொல் வன்மை;* skill in speech. *6. பேச்சிடையில் பயின்று வரும் தொடரியம்;* mannerism in discourses.

**வாய்பார்த்தல்** பெ. (n.) *பிறருடைய பேச்சைக் கேட்டுக் கொண் டிருத்தல்;* to listen to a talk without taking part in it.

**வாய்பிதற்றுதல்** வி. (v.) *நாக்குழறிப் பேசுதல்;* to speak incoherently.

**வாய்பிளத்தல்** வி. (v.) *1. அங்காத்தல்;* to open one's mouth wide; in gape. *2. திகைத்தல்;* to be non-plussed. *3. முடியாதென்று கை விடுதல்;* to give up. *4. இறத்தல்;* to die, used in contempt.

**வாய்பேசுதல்** வி. (v.) *தற்பெருமை பேசுதல்;* to brag, boast.

**வாய்பொத்துதல்** பெ. (n.) *பெரியோர் முன்னிலையில் மதிப்புரவுக் குறியாக வாயை வலக்கையால் மூடிக் கொள்ளுதல்;* to cover one's mouth with the plam of the right hand, as a mark of respect in the presence of one's superiours.

**வாய்மண்போடுதல்** வி. (v.) *1. பிழைப்பைக் கெடுத்தல்;* to deprive a person of his means of livelihood. *2. கொடுமை செய்தல்;* to do a wicked act.

**வாய்மூடுதல்** வி. (v.) *1. பேச்சு, அழுகை முதலியவற்றை நிறுத்துதல்;* to cease speaking, crying etc., *2. குவிதல்;* to close as a flower.

**வாய்மொழிதல்** வி. (v.) *1. கூறுதல்;* to speak. *2. தூய மந்திரங்களை யோதுதல்;* to consecrate by uttering secred hymns. *3. எழுத்து மூலமின்றி வாயாற் கூறுஞ்சொல்;* unwritten oral declaration.

**வாய்மொழித் தேர்வு** பெ. (n.) *மாணவரை நேரடியாக வினவித் தெரிவு செய்யும் தேர்வு, ஆய்வு மாணவர்க்கான நேரடித் தேர்வு;* viva-voce, oral examination.

**வாய்மோசம்** பெ. (n.) *1. வாய்க்குற்றம் பார்க்க; 2. சொன்ன சொல் தவறுகை;* failing to keep one's word.

**வாய்வட்டமாகப் பேசுதல்** வி. (v.) *திறமையாகப் பேசுதல்;* to speak cleverly.

**வாய்வயிறுகட்டல்** பெ. (n.) *பத்தியமாக இருத்தல், சாப்பிடாமல் பணம் சிக்கனப்படுத்தல்;* to keep on diet.

**வாய்வார்த்தை** பெ. (n.) *1. வாய்ப்பேச்சு;* word of mouth. *2. நயம் பொருந்திய சொல்;* soft and kind words.

**வாய்விட்டு** வி.எ. (adv.) *1. ஒலியெழுப்பி, வெளிப்படையாக;* loudly. *2. மனம் திறந்து;* openly, frankly.

**வாய்விடல்** பெ. (n.) *கொட்டாவி விடல்;* yawning.

**வாய்விடுதல்** வி. (v.) *1. பேசுதல்;* to speak. *2. வெளிப்படையாகச் சொல்லுதல்;* to speak, openly and clearly without any reservation. *3. வெளிப்படுத்துதல்;* to divulge, as secrets. *4. சூளுறுதி;* vow. *5. கடித்த கடிப்பை விடுதல்;* to leave off biting.

**வாய்வேக்காடு** பெ. (n.) *வாய் முழுவதும் நொந்தாற் போலிருக்கும் நோய் வகை;* thrush, a disease of the mouth, aphthae.

**வாய்வேக்காளம்** பெ. (n.) *வாய்ப்புண்;* ulceration of the mouth/ stomatitis.

**வாய்வைத்தல்** வி. (v.) *1. உண்ணுதல்;* to eat. *2. ஊதுதல்;* to blow as a wind -instrument. *3. சுவைத்தல்;* to taste. *4. தலையிடுதல்;* to meddle or interfere. *5. சிறிது பயிலுதல்;* to learn a little, to have a desultory knowledge. *6. கடித்தல்;* to bite. *7. முந்திரிக்கொட்டைத் தனமாக எதிர்மறையாகப் பேசுதல்;* speak negative.

**வாயடி** பெ. (n.) *வாயால் மருட்டுகை;* over - bearing speech brow beating by speech, bluff.

**வாயடித்தல்** பெ. (n.) *1. வாயிலேயடித்துக் கொள்ளுதல்;* to beat one's mouth, as in a grief. *2. அலப்புதல்;* to chat.

**வாயடைத்தல்** வி. (v.) *பேசவொட் டாதபடி செய்தல்;* to silence, as an opponent by arguments.

**வாயலம்புதல்** வி. (v.) *உண்டபின் வாய் கழுவுதல்;* to wash or rinse one's mouth, as after a meal.

**வாயாடுதல்** வி. (v.) *1. சொற்றிறமாய்ப் பேசுதல்;* to speak cleverly or eloquently. *2. வீண்பேச்சுப் பேசுதல்;* to speak frivolously; to fabble. *3. ஓயாது மென்று கொண்டிருத்தல்;* something continuously chewing.

**வாயார** வி.எ (adv.) *1. முழுக் குரலோடு;* with a full voice. *2. முழுமனத்துடன் (பாராட்டுதல்);* (appreciate) whole heartedly.

**வாயால்குதட்டுதல்** பெ. (n.) *வாயிலிட்டு அதக்குதல்;* keep and chew something into the mouth steadily without swallowing.

**வாயாலெடுத்தல்** வி. (v.) *ஒக்காளித்தல்;* to vomit.

**வாயில் மண்போடுதல்** வி. (v.) *(வாழ்க்கைக்குக்) கேடு விளைத்தல்;* to cause ruin.

**வாயில் மண் விழுதல்** பெ. (n.) *(அடிப்படை வாழ்வு) முற்றுங் கேடுறுகை;* being completely ruined.

**வாயில்லாப்பூச்சி** பெ. (n.) *எதிர்த்துக் கேட்கும் திறன் இல்லாதவர்;* people who would not speak up.

**வாயிலடித்தல்** வி. (v.t.) *முற்றுங் கெடுத்தல்;* to ruin.

**வாயிலாக** வி.எ. (adv.) *மூலம்;* through.

**வாயிலெடுக்கல்** பெ. (n.) *கக்கல்;* vomitting.

**வாயிலே போடுதல்** வி. (v.) *1. பேச வொட்டாது குறுக்கிட்டுப் பேசித் தடை செய்தல்;* to interrupt as a person, while speaking. *2. பிறர் பொருளைக் கையாடுதல்;* to misappropriate.

**வாயிழுத்தல்** வி. (v.) *வலிய சண்டைக்கு இழுத்தல்;* to pick a quarrel.

**வாயிற்படி** பெ. (n.) *வீட்டு வாசலின் படி;* door-step; threshold.

**வாயும் வயிறுமாயிருத்தல்** வி. (v.) *கருவுற்று இருத்தல்;* be in the state of pregnancy.

**வாயுள்ளவன்** பெ. (n.) *உசாவி அறிந்து வெற்றி கொள்ளக் கூடியவன்;* man of inquiring sprit, pushful man.

**வாயூறல்** பெ. (n.) *வாயில் நீர் சுரத்தல்;* secretion of saliva on seing food.

**வாயூறுதல்** வி. (v.) *நிறைவைச் சொல்லிச் சொல்லி மகிழ்தல்; சுவையுணவை எண்ணி வாயில் உமிழ்நீர் சுரத்தல்;* to appreciate the good; taste makes secretion of saliva in the mouth.

**வாயெடுத்தல்** வி. (v.) *1. பேசத் தொடங்குதல்;* to begin to speak. *2. குரலெடுத்தல்;* to speak aloud, to raise the voice.

**வாயைக் கட்டுதல்** வி. (v.) *1. உணவிற் கட்டுப்பாடாக இருத்தல்;* to obeserve restrictions of diet. *2. சிக்கனமாக உணவு கொள்ளுதல்;* to stint one self in the matter of food.

**வாயைக் கொடுக்காதே** பெ. (n.) *தேவையின்றி (யாரிடமும்) வலிந்துபோய் பேசாதே;* don't needllessly outer into a conversation.

**வாயைப் பிளத்தல்** வி. (v.) *1. வியப்பை வெளிப்படுத்தும் வகையில் வாயைத் திறத்தல்;* gape at. *2. இறத்தல்;* to die.

**வாயொடுங்குதல்** வி. (v.) *1. நாவடக்குதல்;* be tongue tied. *2. பேச இயலாமை;* cannot speak.

**வாயோடு** பெ. (n.) *1. உடைந்த பானையின் வாய்ச் சில்லு;* nack of a broken pot. *2. குத்தும் அரிசி முதலியன சிதறாதபடி உரலின் மேல் வைக்கும் பானைக் கழுத்துப் போன்ற கருவி;* circular piece like the neck of a broken pot placed at the mouth of a mortar, while pounding paddy. to prevent the grain from scattering.

**வார்க்கட்டு** பெ. (n.) *வாராற் கட்டப் பட்டது;* that which is tied by thongs.

**வார்க்கோல்** பெ. (n.) *விளக்குமாறு;* broom.

**வார்த்தல்** வி. (v.) *1. அச்சில் ஊற்றி வடிவம் உருவாக்கல்;* cast (in a mould). *2. (நீர், பால்) ஊற்றுதல்;* pour. *3. மாவை ஊற்றி தோசை சுடுதல்;* make (pan cake).

**வாரக்குடி** பெ. (n.) *குடி வாரத்துக்குப் பயிரிடும் உழவன்;* tenant or cultivator who receives a fixed share of the produce.

**வாரத்துக்கு வளர்த்தல்** வி. (v.) *விற்பதாற் கிடைக்கும் வரவைச் சொந்தக் காரனோடு பகுத்துக் கொள்வதாக ஒப்புக் கொண்டு கோழி, ஆடு, பன்றி முதலியன வளர்த்தல்;* to raise, as fowls,

pigs, goats etc. on an agreement to share the proceeds of the sale with the owners.

**வாராக்கடன்** பெ. (n.) *(வைப்பகம், நிறுவனம் போன்றவற்றில்) திருப்பிச் செலுத்தத் தவறிய கடன் அல்லது குறிப்பிட்ட காலத்திற்குள் வந்து சேராத கடன்;* loans availed from banks and not repaid.

**வாராக்காலம்** பெ. (n.) *எதிர்காலம்;* future tense.

**வாரிக்கொண்டு போதல்** வி. (v.) *1. ஒருசேர அழித்தல்;* to sweep away to destroy wholesale, as an epidemic. *2. கொள்ளை நோயால் இறத்தல்;* to be caried away in pestilence.

**வாரிச்சுருட்டிக் கொண்டு** வி.அ. (n.) *பதற்றத்துடன் ஓடினான்;* in haste; hurriedly.

**வாரியிறைத்தல்** வி. (v.) *1. சிதறச் செய்தல்;* to scatter. *2. வீணாக்குதல்;* to waste. *3. மிகுதி யாகக் கொடுத்தல்;* to give liberally.

**வாரிவளைத்தல்** வி. (v.) *ஒரு சேரத் திரட்டுதல்;* to encompass to gather to take in a sweep.

**வாரிவிடுதல்** வி. (v.) *1. வாரியிறைத்தல் பார்க்க. 2. மிகுதியாகப் புனைந் துரைத்தல்;* exaggeration.

**வாருதல்** வி. (v.) *1. அள்ளுதல்;* to take by handfuls, to take in a sweep, to scoop. *2. தொகுத்தல்;* to gather. *3. மிகுதி யாகக் கொண்டு செல்லுதல்;* remove, cary off in great numbers, as plague, flood, etc. *4. தோண்டியெடுத்தல்;* to dig and take up.

**வால்** பெ. (n.) *1. இளமை;* youth, tenderness. *2. தூய்மை;* purity. *3. வெண்மை;* whiteness. *4. நன்மை;* goodness. *5. பெருமை;* greatness. *6. மிகுதி;* abundance. *7. விலங்குகளின் பின்புறம் நீண்டு தொங்கும் உறுப்பு;* tail.

**வால்பிடிப்பவன்** பெ. (n.) *தன் செயல் நிறைவேற நயந்து நடப்பவன்;* to do something to someone to get some favour.

**வால்முளைத்தல்** பெ. (n.) *குறும்பு செய்கை;* becoming mischievous, as resembling a monkey.

**வாலாட்டாதே** பெ. (n.) *தொல்லை (அ) வம்புக்கிழுத்தல்;* dont tease.

**வாலாட்டுதல்** வி. (v.) *1. குறும்பு செய்தல்;* to do mischief, as wagging one's tail. *2. வீண்பெருமை காட்டுதல்;* to put on airs. *3. சேட்டை;* mischief. *4. செருக்கான செயல்;* arrogant deed.

**வாழ்வித்தல்** வி. (v.) *1. மோசமான நிலையில் உள்ளவரை உதவி செய்து வாழ வைத்தல்;* to cause or help one to live. *2. முறைமன்றம் மூலமாகச் சொத்தை உரியவனுக்கு ஒப்படைத்தல்;* (legal) to deliver possession through court.

**வாழ்க்கை** பெ. (n.) *1. வாழ்நாள்;* existence, life time. *2. இல்வாழ்க்கை;* married life. *3. மனைவி நல்வாழ்வு நிலை;* happy state. *4. மனைவி;* wife. *5. செல்வ நிலை;* wealth, felicity, prosperity.

**வாழ்க்கைக்குறிப்பு** பெ. (n.) *ஒருவரின் வாழ்க்கையைப் பற்றிய குறிப்பிடத் தக்க விளத்தங்கள்;* biographical details.

**வாழ்க்கைத்துணை** பெ. (n.) *மனையாள்;* wife.

**வாழ்க்கைப்படுதல்** வி. (v.) *திருமணம் செய்து வாழ்தல்;* to get in marriage.

**வாழ்க** வி.மு. (adv.) *வாழ்த்துச் சொல் ;* an optative which means (long) live.

**வாழ்த்துதல்** வி. (v.) *1. பாராட்டுதல்;* to felicitate, congratulate bless. *2. போற்றுதல்;* to praise, appland. *3. மங்கலம் பாடுதல்;* to sing songs of benediction.

**வாழ்த்துரை** பெ. (n.) *பாராட்டுரை;* benediction.

**வாழ்நாள்** பெ. (n.) *வாழ்காலம்;* life time.

**வாழ்விழத்தல்** வி. (v.) *1. கைம் பெண்ணாதல்;* to be widowed. *2. மனைவியை இழத்தல்;* to become a widower.

**வாழ்வுதாழ்வு** பெ. (n.) *ஒருவன் வாழ்க்கையில் ஏற்படும் செல்வ நிலையும் வறுமை நிலையும்;* prosperity and adversity.

**வாழாதவள்** பெ. (n.) *1. வாழாவெட்டி பார்க்க; 2. கைம்பெண்;* widow.

**வாழாவெட்டி** பெ. (n.) *கணவனோடு சேர்ந்து வாழப்பெறாதவள்;* married woman not living with her husband, grass widow.

**வாழைக்கன்று** பெ. (n.) *வாழை மரத்தின் கிழங்கினின்று உண்டாகும் இள வாழை;* plantain sucker or shoot; plantain sapling.

**வாழையடிவாழை** பெ. (n.) *இடையறாது தொடர்ந்து வரும் குலவழி மரபு;* unbroken lineage as plantain suckers from one root.

**வாழை வெட்டிக்கலியாணம்** பெ. (n.) *மூத்த மகனுக்குத் திருமணம் ஆகாதிருக்கும் பொழுது இளையவனுக்கு ஏற்பா டானால் வாழை மரத்தை முதல் மகனுக்குக் கட்டுவிக்கும் திருமணம்;* fictitious marriage of an elder brother with a plantain tree adorned as his bride in order to enable his younger brother to marry.

**வாள்காரன்** பெ. (n.) *வாளால் மரம் அறுப்பவன்;* sawyer.

**வாள்வாளெனல்** பெ. (n.) *அழுது கதறுதற் குறிப்பு;* of howling, as of a dog.

**வாளிப்பு** பெ. (n.) *செழுமை; உருட்சி திரட்சி;* (of one's body) robustness.

**வானம் பார்த்தபயிர்** பெ. (n.) *பாசன வசதி யின்றிப் பருவ மழையினுதவியாற் புன்செய் நிலத்தில் விளையும் தவசம்;* crops grown on dry lands with the help of seasonal rains and without any irrigational facilities.

**வானரம்** பெ. (n.) *குரங்கு;* monkey. '

**வானொலி** பெ. (n.) *ஒலிவாங்கிக் கருவி;* radio.

# வி

**விக்கல்** பெ. (n.) *தொண்டை விக்குகை;* hiccup.

**விக்குதல்** வி. (v.) *1. விக்கலெடுத்தல்;* to hiccup. *2. விம்மி நிறைதல்;* to be super abundant, chokeful. *3. விக்கி வெளித்தள்ளுதல்;* to hiccup,. bring out with interruptions of hiccups.

**விசிறுதல்** பெ. (n.) *1. விசிறியாற் காற் றெழுப்புதல்;* to fan. *2. வாள் முதலிய வற்றை வீசுதல்;* to wave to and fro, brandish. *3. வலை முதலியவற்றை விரித்தெறிதல்;* to fling, hurl cast, as a net. *4. சுழற்றுதல்;* to whirl round. *5. கை முதலியன வீசுதல்;* to swing as the arms in walking.

**விசுக்கிடுதல்** வி. (v.) *1. வெறுப்புக் கொள்ளுதல்;* to become displeased. *2. மன வருத்தங் கொள்ளுதல்;* to be pained at heart.

**விசுக்குதல்** வி. (v.) *விரைந்து கைவீசுதல், விசிறுதல்;* to fan.

**விசும்புதல்** வி. (v.) *1. வெறுப்புடன் விலக்குதல்;* to throw away in contempt, to toss aside, to cast away. *2. கயிறு முதலியவற்றைச் சுண்டி யிழுத்தல்;* to draw tight, as a rope. *3. தேம்பி அழுதல்;* to sob, cry. *4. மீறுதல்;* to transgress. *5. செருக்குக் கொண்டிருத்தல்;* to be proud or haughty.

**விஞ்சுதல்** வி. (v.) *1. மேலாதல்;* to excel, surpass. *2. மிகுதியாதல்;* to be excessive.

**விட்டகுறை** பெ. (n.) *முற்பிறவியில் செய்துவந்த வினையை முற்ற முடியாமல் இடையே விட்டுவிட்ட தால் இப்பிறப்பில் முன்னேற்றத் திற்குக் காரணமெனக் கருதும் வினைப்பயன்;* deeds resulting from acts left incompletely performed in a previous

birth, considered as the cause of progress in the present birth, dist. for totta-kurai.

**விட்டம்** பெ. (n.) *1. தலைக்கு மேலுள்ள முகட்டு உத்தரம்;* beam or cross-beam in a building. *2. வட்டத்தின் குறுக்களவு;* diameter. *3. குறுக்காக இடப்பட்டது;* anything put across. *4. உடல்;* human body.

**விட்டுக் கொடுத்தல்** வி. (v.) *1. சிக்கல் ஏற்படும்போது தனது பிடிவா தத்தைத் தவிர்த்து மற்றவர்க்குச் சார்பாக இணங்கிப்போதல்;* make allowance for others. *2. தனக்குக் கிடைக்க வேண்டியதைப் பிறருக்குக் கிடைக்கவிடுதல்;* give up.

**விட்டுச் சொல்லுதல்** வி. (v.) *மனத்தி லுள்ளதை வெளியிட்டுக் கூறுதல்;* to speak frankly or openly.

**விட்டுப்பிடித்தல்** வி. (v.) *1. ஒரு செயலைச் சிறிது காலம் விட்டுவிட்டு மீண்டுந் தொடங்குதல்;* to abandon a job temporarily and begin again. *2. கண்டிக்காமற் சிறிது இடங் கொடுத் தல்;* to allow some degree of attitude. *3. சற்றுப் பொறுத்து மறுபடியும் தொடர்தல்;* to pause a little and resume, as in reading, etc.,

**விட்டுப்போதல்** வி. (v.) *1. நீங்கி விடுதல்;* to be left, to be abandoned. *2. மிக்க நோவாயிருத்தல்;* to have smarting pain.

**விட்டுவிட்டு மின்னுதல்** வி. (v.) *விண்மீன்போல் ஒளி வீசுதல்;* to twinkle.

**விட்டுவிடுதல்** வி. (v.) *பிடிப்பு விடுதல்;* to lot go, to loose one's hold upon.

**விட்டெறிதல்** வி. (v.) *1. தொலைவில் விழும்படி எறிதல்;* to throw away, to filing. *2. நீக்குதல்;* to leave abandon.

**விட்டை** பெ. (n.) *விலங்குகளின் சாணம்;* dung of animals or cattle.

**விடலை** பெ. (n.) *1. பதின் பருவத்தில் உள்ள இளைஞன்;* youth. *2. திண்ணி யோன்;* strong, powerful man. *3. பெருமையிற் சிறந்தோன்;* great man. *4. வீரன்;* warrior. *5. ஆண்மகன்;* man. *6. இளங்காளை மாடு;* steer, young bull. *7. சூறைத்தேங்காய் (நெல்லை);* coconut smashed on the ground before an idol. *8. இளநீர்;* tender coconut.

**விடாக்கண்டன்** பெ. (n.) *ஒட்டாரமாக நின்று ஒன்றை நிறைவேற்றுபவன்;* pertinacious, stubborn, unyielding man.

**விடாச்சுரம்** பெ. (n.) *தொடர்ந்து வரும் காய்ச்சல்;* continuous fever, pyrexia.

**விடாது பேசுதல்** வி. (v.i.) *பிதற்றுதல்;* to blabber, to chatter interminably.

**விடாப்பிடி** பெ. (n.) *1. உறுதியாகப் பற்றுகை;* firm hold or grasp. *2. உறுதி யாக நிற்கை;* tenacity, pertinacity. *3. தன் முரண்டு;* obstinacy. *4. மாறா மல் ஒரே நிலையிலிருக்கை;* unchangeableness.

**விடாப்பிடியாக** வி.எ. (adv.) *தன்னிலை யிலிருந்து சிறிதும் மாறாமல், சிறிதும் விட்டுக் கொடுக்காமல்;* tenaciously.

**விடாமல்** வி.எ. (adv.) *இடையீடின்றி;* without obstruction.

**விடாமழை** பெ. (n.) *இடையீடின்றிப் பெய்யும் மழை;* continuous rain.

**விடாமுயற்சி** பெ. (n.) *ஒன்றை அடை வதற்குச் செய்யும் தொடர் முயற்சி;* perseverance.

**விடிகாலை** பெ. (n.) *பொழுது விடிகின்ற வேலை; விடியற்காலை ;* day break early morning.

**விடிதல்** வி. (v.) *1. தோற்றமாதல்;* to dawn, to break, as the day. *2. முடிவு பெறுதல்;* to come to an end, to be ended or finished. *3. நற்காலத்தால் துன்பம் நீங்கியின் புறுதல்;* to see better days.

**விடியல்** பெ. (n.) *1. விடியற்காலை, பொழுது விடிகின்ற நேரம்;* break of day, dawn. *2. வெளியிடம்;* open space or place.

**விடியவிடிய** பெ. (n.) *இரவு முழுவதும்;* all through the night.

**விடியற்காலம்** பெ. (n.) *வைகறை;* break of day, dawn.

**விடியாமூஞ்சி** பெ. (n.) *தொடர்ந்து வரும் நல்வினைப்பயன் அற்றவ-ள்-ன்;* unlucky person, one who never sees the end of one's troubles, inherited by bad action or 'Vinai'.

**விடுகதை** பெ. (n.) *புதிர்;* riddle, enigma.

**விடுகாது** பெ. (n.) *வளர்த்துத் தொங்க விடும் தொள்ளைக் காது;* perforated ear-lobe hanging loose without any jewel.

**விடுதலை** பெ. (n.) *1. ஓய்வு;* rest, retirement. *2. தொடர்பு நீக்கம்;* release, deliverance. *3. தன்னுரிமை;* liberty.

**விடுதலைப்பத்திரம்** பெ. (n.) *சொத்திற் பிறர்க்கு உரிமையில்லையென்பதை உறுதிப்படுத்தும் உறுதி ஆவணம்;* release deed, deed of discharge as of mortgage etc.

**விடுதி** பெ. (n.) *1. தங்குமிடம்;* lodging place, place of temporary residence; choultry.

**விடுப்பு** பெ. (n.) *1. நீக்கம்;* separation. *2. துருவியறியுந்தன்மை;* inquisitiveness. *3. புதுமையானது;* that which is strange or curious. *4. விருப்பம்;* desire. *5. தானாக எடுக்கும் விடுப்பு;* leave.

**விடுபடுதல்** வி. (v.) *1. நீக்கப்படுதல்;* to be left, to be abandoned, relinguished. *2. விடுதலையடைதல்;* to be released liberated, as from bondage or prison.

**விடுமுறை** பெ. (n.) *1. அலுவலகம், கல்வி நிறுவனம் முதலியவற்றில் முறையாக அளிக்கும் ஓய்வுநாள்;* holiday, vocation. *2. கோடை விடுமுறை;* summer holiday. *3. கிழமை விடுமுறை;* weekly holiday.

**விடுவித்தல்** வி. (v.) *1. விடுதலை செய்தல்;* to liberate, set free, release. *2. உட்பொருளைக் கண்டு கூறுதல்;* to explain, interpret, to solve, as a riddle.

**விடை** பெ. (n.) *1. மறுமொழி;* answer, reply. *2. இசைவு (அனுமதி);* liberty, leave, licence, permission. *3. அசைவு;* movement, shaking. *4. மிகுதி;* abundance, surplus.

**விடைக்கோழி** பெ. (n.) *தாயைவிட்டுப் பிரியக் கூடிய பருவத்துள்ள கோழிக் குஞ்சு;* chicken old enough to roam about away from its mother hen.

**விடைகொடுத்தல்** வி. (v.) *1. மறுமொழி சொல்லுதல்;* to answer. *2. இசைவு (அனுமதி) கொடுத்தல்;* to grant leave or permission.

**விண்ணப்பக்கடுதாசி** பெ. (n.) *எழுத்து மூல விண்ணப்பம்;* petition or written application.

**விண்ணப்பக்காரன்** பெ. (n.) *1. விண்ணப்பம் செய்வோர்;* petitioner. *2. அரண்மனை முதலியவற்றில் காண வருபவர்களின் வரவைத் தெரிவிக்கும் வாயிலோன்;* usher, as in a court, whose duty is to announce visiters.

**விண்ணப்பதாரர்** பெ. (n.) *விண்ணப்பம் செய்பவர்;* petitioner.

**விண்ணப்பப் பத்திரம்** பெ. (n.) *எழுத்து மூலமான வேண்டுகோள்;* written application or petition.

**விண்ணப்பம்** பெ. (n.) *1. பெரியோர்முன் பணிந்து கூறும் அறிவிப்பு;* supplication respectful, or humble representation. *2. கடவுள் திருமுன்பு செய்யுள் முதலியன ஓதுகை;* recitation of sacred hymns in the presence of the deity. *3. மனு;* petition.

**விண்ணப்பித்தல்** வி. (v.) *பெரியோர்முன் பணிந்தறிவித்தல்;* to suplicate.

**வித்துதல்** வி. (v.) *1. விதைத்தல்;* to sow. *2. பிறர் மனத்துப் பதிய வைத்தல்;* to impress or imprint on one's mind. *3. பரப்புதல்;* to spread, broad cast.

**வித்துத் தெளித்தல்** வி. (v.) *விதையைத் தூவுதல்;* to scatter seeds, to sow.

**வித்தெறிதல்** வி. (v.) *விதை விதைத்தல்;* to sow seeds.

**விதறுதல்** வி. (v.) *1. நடுங்குதல்;* to be agitated to be shaky. *2. பதறுதல்;* to be over hasty.

**விதுக்குவிதுக்கெனல்** பெ. (n.) *அச்சத்தால் நெஞ்சாங்குலை படபடவென்று அடித்தற் குறிப்பு;* onom. expr, of palpitation of heart due to fear or shock.

**விதுவிதுத்தல்** பெ. (n.) *மகிழ்ச்சியுறுதல்;* to rejoice.

**விதுவிதுப்பு** பெ. (n.) *1. விருப்பம்;* longing, desire. *2. உடலின் குத்து நோவு;* throbbing pain. *3. நடுக்கம்;* trembling.

**விதைக்கு விடுதல்** வி. (v.) *விதைக் குதவுமாறு கொடி, மரங்களிற் காய்களை முற்றவிடுதல்;* to allow set apart berries, fruits etc, to ripen on the plant itself for obtaining seeds.

**விதைகட்டுதல்** வி. (v.) *விதைக் கென்று தவசத்தைத் தனியே வைக்கோல் போரில் கட்டி வைத்தல்;* to store seed-grain by bundling it up in straw.

**விதைத்துப்பாழ்** பெ. (n.) *தண்ணீர்த் தட்டால் விதை செவ்வனே முளைக் காமலேனும் கதிர் பிடிக்காமலேனும் கெட்டுப் போகை;* total failure of crop due either to the seeds not sprouting properly or the seedlings not maturing on account of scanty supply of water.

**விதைநெல்** பெ. (n.) *விதைப்பதற்காக வைக்கப்பட்ட நெல்மணி;* seed grain of paddy.

**விதைநெல்லெறிதல்** வி. (v.) *வித்திடு தற்கான நெல்மணிகளை கழனியிற் தூவுதல்;* to sow seeds of paddy.

**விதைப்பு** பெ. (n.) *வித்திடுகை;* sowing.

**விதைப்புக்காலம்** பெ. (n.) *விதைப் பதற்கான பருவம்;* sowing season, seed-time.

**விதைமணி** பெ. (n.) *விதைப்பதற்குரிய தவசம்;* seed-grain.

**விதைமுளைத்தல்** வி. (v.) *முதிர்ந்த விதை அதற்குத் தகவான சூழ் நிலையில் முளைத்தல்;* sprouting.

**விதையடித்தல்** வி. (v.) *ஆடு, மாடு முதலான கால்நடைகளின் விதைப் பையிலுள்ள விதையை நசுக்கிச் செயலிழக்கச் செய்தல்;* to castrate; to emasculate.

**விம்முதல்** பெ. (n.) *1. தேம்பியழுதல்;* to heave a sob, as a child. *2. வருந்துதல்;* to be in distress, agony.

**விருந்தோம்பல்** பெ. (n.) *வீட்டிற்கு வரும் விருந்தினரை வரவேற்று உபசரித்தல்;* welcoming and entertaining guests.

**விருப்புவெறுப்பு** பெ. (n.) *வேண்டுதல் வேண்டாமை;* desire and aversion, like and dislike.

**விருவிருத்தல்** வி. (v.) *1. கடுத்தல்;* to be peppery with pain. *2. உறைப்பா யிருத்தல்;* to be peppery in taste. *3. சினத்தாற் பரபரத்தல்;* to get flurred due to angry mood. *4. விரைதல்;* to be in a hurry.

**விலங்குபோடுதல்** வி. (v.) *கை கால்களில் தளையிடுதல்;* to hand cuff put in chains or fetter.

**விலவிலத்தல்** வி. (v.) *1. மிக நடுங்குதல்;* to tremble excedingly. *2. மிகவும் வலுவிழத்தல்;* to become extremly weak. *3. நெருக்கமின்றியிருத்தல்;* to be sparse, not close.

**விலைக்கழிவு** பெ. (n.) *கொள்முதல் விலையில் தள்ளுபடி;* discount in sale price.

**விலைப்பட்டி** பெ. (n.) *1. பண்டங்களின் விலைக் குறிப்பு;* list of prices; invoice. *2. விற்பனைக் கணக்கு;* sales account.

**விலைபோதல்** பெ. (n.) *1. விற்பனை யாதல்;* to be sold out; get sold. *2. பொருளுக்காக முறை தவறுதல்;* get sold by improper way.

**விலைமதிப்பு** பெ. (n.) *விலை மதிப் பிடுகை;* estimate of price.

**விலைமேவுதல்** வி. (v.i.) *1. விலையை ஒத்துக் கொள்ளுதல்;* to agree the price. *2. எளிதாக விலையாதல்;* to be easily saleable.

**விலையுயர்தல்** வி. (v.) *1. விற்கும் தொகை மிகுதல்;* to raise in price. *2. பெரு மதிப்புடையதாதல்;* to be valuable.

**விலைவாசி** பெ. (n.) *அன்றாடம் தேவைப் படும் (வீட்டு) பொருள்களின் விலை நிலை;* prices of commodities.

**விளாசுதல்** பெ. (n.) *சிறப்பாகச் செய்தல், வலிமையாக அடித்தல்;* do or perform something well or effectively beat severely.

# வீ

**வீக்கம் வாடுதல்** பெ. (n.) *வீக்கநோய் குறைதல்;* resolving the swelling.

**வீக்கமாந்தம்** பெ. (n.) *ஒருவகை வீக்கக் காய்ச்சல் நோய் (குழந்தைகட்கானது) கண், காது வீக்கம் + நாக்குப் புண் + காய்ச்சல் + மாந்தம்;* a digesting disease of children marked by swelling of earn, eyes, inflammations of the tongue with fever.

**வீக்கமிறங்குதல்** பெ. (n.) *பருத்திருந்த தன்மை குறைதல்;* fulsiding of the swelling and it transition from the upper to the lower part of the body.

**வீக்கம்** பெ. (n.) *உடலுறுப்பு வீங்குகை;* enlargement; swelling; inflammation.

**வீங்கல்** பெ. (n.) *1. மிகுதி;* abundance plenty. *2. பொருளுக்காக ஏங்குதல்;* morbid desire. *3. இளைத்திருப்பவன்;* lean fellow emaciated person. *4. உறக்கம்;* sleeping.

**வீங்கிவெடி** பெ. (n.) *ஒன்றன்மீது ஏக்கங்கொண்டு அழுது புலம்புதல்;* weeping for not getting or lossing something.

**வீங்குகரப்பான்** பெ. (n.) *ஒருவகை வீக்கத்தை உண்டாக்கும் கரப்பான் நோய்;* an eczema causing something.

**வீங்கு விதைவாதம்** பெ. (n.) *ஆண்களுக் கான (விரை) விதை வீங்கி நோய்;* orchitis marked by constipation, flatulence, chillness, pain in legs, etc.,

**வீங்குதல்** வி. (v.) *(வலியுடன்) இயல்பான அளவை விடப் பெருத்தல்; உப்புதல்;* swell; get inflamed.

**வீச்சம்** பெ. (n.) *நாற்றம்;* offensive smell.

**வீச்சரிவாள்** பெ. (n.) *கூரிய முனையையும் நீண்ட வெட்டுப் பரப்பையும் கைப்பிடியையும் கொண்ட ஒரு வகை அரிவாள்;* sharp sickle with a small handgrip.

**வீச்சலை** பெ. (n.) *ஆழிப்பேரலை;* tsunami.

**வீச்சுக்காரன்** பெ. (n.) *மிகுதியாகச் செலவு செய்வோன்;* spend thrift.

**வீச்சுக்காரி** பெ. (n.) *1. வரம்புமீறி செலவு செய்பவள்;* extravagant woman. *2. பெருமை பேசுபவள்;* boastful woman.

**வீச்சுக்கொட்டுதல்** வி. (v.) *வெறுப்புக் குறியாக ஒருவகையொலி செய்தல்;* to make a peculiar aversive sound.

**வீச்சுசன்னி** பெ. (n.) *இசிவு நோய்வகை;* lock jaw; tetanus.

**வீச்சுப்புற்று** பெ. (n.) *ஒருவகைப் புண்;* an ulcer.

**வீச்சுலை** பெ. (n.) *காற்று வீசும் உலை;* blast furnace.

**வீச்சு வேணுமாய்** பெ. (n.) *அளவில் மிகுதியாய்;* with a free hand, liberally, as in measuring.

**வீச்சு** பெ. (n.) *1. விரைவுடன் செலுத்தும் செயல்;* stroke; throw; hurl. *2. சீராகவும் நேர்த்தியாகவும் வீசும்முறை;* the graceful way of handling a sword etc.

**வீசம்** பெ. (n.) *பதினாறில் ஒரு பகுதியைக் குறிக்கும் பின்ன அளவு;* the fraction 1/16.

**வீசல்** பெ. (n.) *எறிகை;* throwing.

**வீசித்துக்கட்டுதல்** வி. (v.) *இறுகக் கட்டுதல்;* to bind tightly.

**வீசி நடத்தல்** வி. (v.) *1. ஆடி நடத்தல்;* to walk with a swinging motion. *2. வேகமாக நடத்தல்;* walk fastly.

**வீசியெறிதல்** வி. (v.) *கழற்றி வீசுதல்;* to cast away, to throw away.

**வீசுகோல்காரன்** பெ. (n.) *வில்லுப் பாட்டில் வில்லடிப்போன் (நெல்லை வழக்கு);* one who plays with the music instrument in *villu-p-pattu.*

**வீசுதல்** வி. (v.) *1. விரைவுடன் காற்றின் ஊடாகச் செலுத்துதல்; எறிதல்;* throw (the hands freely) fling. *2. ஆட்டுதல்;* brandish; (a sword, etc.,) wave (the fan) move. *3. உணரக் கூடிய வகையில் பரவுதல்;* blow; waft.

**வீசு** வி. (v.) *கைகளை முன்னும் பின்னும் ஆட்டு;* to swing, as the arm.

**வீசுவில்** பெ. (n.) *துரப்பணமிழுக்கப் பயன்படும் வில்;* drill bow.

**வீசை** பெ. (n.) *ஆயிரத்து நானூறு கிராம் எடை கொண்ட நிறுத்தலளவை;* (a former) measure of weight, about 1400 grams.

**வீட்டார்** பெ. (n.) *வீட்டுமக்கள்;* members of a house hold; family members.

**வீட்டிருப்பு** பெ. (n.) *குடும்பம் உள்ள நிலைமை;* state of the family, family affairs.

**வீட்டிறப்பு** பெ. (n.) *வீட்டு மேற்கூரையின் தாழ்ந்த பக்கம்;* eaves of the roof of a house.

**வீட்டுக்காரர்** பெ. (n.) *1. வீட்டின் உரிமையாளர் ;* the owner of a house; landlord; tenant. *'வீட்டுக்காரர் திடீரென்று வாடகையை உயர்த்தி விட்டார்'. 2. கணவர்;* husband. *'உங்கள் வீட்டுக்காரர் எங்கே வேலை பார்க்கிறார்?'.*

**வீட்டுக்காரி** பெ. (n.) *1. மனைவி; இல்லத் தரசி;* wife. *2. வீட்டின் உரிமை யாளராக அல்லது ஒரு வீட்டில் குடியிருப்பவராக இருக்கும் பெண்;* the owner of a house; land lord; tenant.

**வீட்டுக்காரியம்** பெ. (n.) *இல்லப்பணி; குடும்ப வேலை;* house hold affairs.

**வீட்டுக்காவல்** பெ. (n.) *ஒருவரை அவருடைய வீட்டிலேயே சிறைப் படுத்தி வைக்கும் நடவடிக்கை;* house arrest. *'அந்த அரசியல் கட்சித் தலைவர் வீட்டுக் காவலில் வைக்கப்பட் டிருக்கிறார்'.*

**வீட்டுக்கு வெளியே** பெ. (n.) *வீட்டு விலக்கு பார்க்க.*

**வீட்டுதல்** வி. (v.) *1. கொல்லுதல்;* to kill. *2. அழித்தல்;* to destroy. *3. நீக்குதல்;* to remove. *4. அகற்றுதல்;* to dispose.

**வீட்டுவிலக்கு** பெ. (n.) *மகளிர் மாத விடாய்க் காலம்;* menstural periods

**வீட்டுச்சாமான்** பெ. (n.) *1. வீட்டிற்குரிய தட்டுமுட்டுப் பொருள்கள்;* house hold furniture and utensils. *2. வீட்டுப் பண்டம் பார்க்க.*

**வீட்டுச்செலவு** பெ. (n.) *உணவு காய்கறிக் கெனக் குடும்பத்திற்கு ஆகும் செலவு;* house hold expenditure.

**வீட்டுத் தெய்வம்** பெ. (n.) *1. இல்லுறைத் தெய்வம், குல தெய்வம்;* house hold deity. *2. மங்கலப் பெண்டு;* woman who dies during the life time of her husband and is worshipped as a deity by her family.

**வீட்டுப்பண்டம்** பெ. (n.) *1. வீட்டுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள்;* household provisions. *2. வீட்டில் செய்யப்படும் பொருள்கள்;* home made things.

**வீட்டுப்பூசை** பெ. (n.) *வீட்டில் இறை வனுக்குச் செய்யப்படும் பூசை;* worship of the deity at home.

**வீட்டுப்பெண்** பெ. (n.) *1. ஒரு குடும் பத்தில் (அ) வீட்டில் பிறந்த பெண்;* daughter of the family. *2. மருமகள்;* daughter-in-law.

**வீட்டு மணியம்** பெ. (n.) *வீட்டு அலுவல் களை மேற்பார்வை பார்ப்பவர்;* stewardship.

**வீட்டு வழக்கம்** பெ. (n.) *குடும்பத்தில் நடந்துவரும் வழக்கமான செயல்;* family custom, tradition.

# வெ

**வெக்கை** பெ. (n.) *1. வெப்பம், அனல்;* heat. *'வெக்கையாக உள்ளது'. 2. வெக்கை நோய் பார்க்க.*

**வெக்கை நோய்** பெ. (n.) *நச்சுயிர் பரவலால் மாடுகளுக்குக் காய்ச் சலையும் கழிச்சலையும் ஏற்படுத்தும், நோய்;* rinderpest; cattle plague.

**வெகு** பெ.அ (adj.) *மிகவும்;* very. *'காய்கறி விலை வெகு குறைவு'.*

**வெகு** இடை. (int.) *1. தன்மையை அல்லது தன்மையின் மிகுதியைக் கூறப் பயன்படும் இடைச்சொல்;* particle used in the sense of 'very'. *'குதிரை வெகு விரைவாக ஓடியது'. 2. நீண்ட என்ற பொருளில் பயன்படுத்தப்படும் இடைச்சொல்;* particle used in the sense of (in space and time) long. *'வெகு தொலைவு போக வேண்டும்'.*

**வெகுசிலர்** பெ. (n.) *மிகக் குறைந்த எண்ணிக்கையிலானவர்கள்;* very few persons. *'வெகுசிலரே நேர்மை தவறாமல் வாழ நினைக்கிறார்கள்'.*

**வெகுமக்கள்** பெ. (n.) *பெரும்பாலான மக்கள்; பொதுமக்கள்;* public; mass. *'வெகுசன கருத்து'.*

**வெகுமதி** பெ. (n.) *வெகுமானம், பரிசு;* reward. *'போட்டியில் பதக்கம் வென்றவருக்கு அரசு வெகுமதி யளித்துச் சிறப்புச் செய்தது'.*

**வெகுமானம்** பெ. (n.) *பரிசு, வெகுமதி;* reward. *'முயற்சிக்கேற்ற வெகுமானம் கட்டாயம் உண்டு'.*

**வெகுவாக** வி.எ. (adv.) *அதிகளவில், மிகவும்;* very much. *'புயல் தென் மாவட்டங்களை வெகுவாகப் பாதித்தது'.*

**வெகுளி** பெ. (n.) *கள்ளங்கபட மில்லாதவர்; பேதை;* frank and innocent person. *'அவன் ஒரு வெகுளி; யார் எதைச் சொன்னாலும் அப்படியே நம்பிவிடுவான்'.*

**வெகுளித்தனம்** பெ. (n.) *கள்ளங்கபடமற்ற தன்மை ;* the quality of being native. *'அவனது வெகுளித்தனம் பலரையும் கவர்ந்தது'.*

**வெகுளுதல்** வி. (v.) *கடுஞ்சினம் கொள் ளுதல்;* be enraged. *'குற்றங்களைக் கண்டு வெகுண்டார்'.*

**வெங்கலம்** பெ. (n.) *வெண்கலம் பார்க்க.*

**வெங்காய வெடி** பெ. (n.) *கடினமான பரப்பில் மோதும்படி விசையோடு எறிந்தால் வெடிக்கக் கூடிய, உருண்டை வடிவிலான வெடி;* a kind of cracker which explodes when dashed against anything hard.

**வெங்காரம்** பெ. (n.) *மருந்தாகப் பயன் படும், இயற்கை வெண்ணிற உப்பு;* borax.

**வெஞ்சனம்** பெ. (n.) *காய்கறி, பருப்பு முதலியவற்றால் செய்யப்படும், உணவுடன் சேர்த்து உண்ணும் தொடுகறி;* side-dish of vegetables and dhal. *'அம்மா வைக்கும் வெஞ்சனம் அருமையாக இருக்கும்'. இல்லையா?'.*

**வெட்கக்கேடு** பெ. (n.) *வெட்கித் தலை குனிய வேண்டிய நிலை;* disgrace; shameful act. *'வெட்கக் கேடான நிலை'.*

**வெட்கம்** பெ. (n.) *1. தன் விருப்பத்தைத் தெரிவிக்க முடியாத தயக்க உணர்வு; நாணம்;*shyness; bashfulness. *'மணப் பெண் வெட்கப்பட்டுச் சிரித்தாள்'. 2. அவமானம்;* shame; disgrace. *'சிறுவ னிடம் சண்டை போட வெட்கமாக உள்ளது'.*

**வெட்குதல்** வி. (v.) *அவமானம் அடைதல்;* feel disgraced. *'ஊழல்வாதிகள் வெட்கித் தலைகுனிய வேண்டும்'.*

**வெட்டரிவாள்** பெ. (n.) *மரம், கிளை போன்றவற்றை வெட்டப் பயன் படும், வளைந்த நுனிப்பகுதியை உடைய ஒருவகை அரிவாள்;* chopper with a heavy curved blade.

**வெட்டவெளி** பெ. (n.) *திறந்தவெளி, மரம், கட்டடம் போன்றவை இல்லாத பரந்த இடம்;* open space; plain ground without

any vegetation. *'வெட்ட வெளியில் நின்று வானத்தின் அழகைப் பார்த்தான்'.*

**வெட்டவெளிச்சம்** பெ. (n.) *1. எல்லோராலும் அறியப்படும் நிலை; வெளிப்படை;* being obvious or evident; self-evident nature. *'குற்றத்தின் பின்னணி வெட்டவெளிச்சமாகி விட்டது'.* 2. *எதையும்தெளிவாகப் பார்க்கக் கூடிய அளவுக்கு வெளிச்சம் (பிரகாசம்);* broad daylight. *'வெட்ட வெளிச்சத்தில் திருட்டு நடந்திருக்கிறது'.*

**வெட்டிமுறித்தல்** வி. (v.) *இன்றியமையாத அல்லது சிறப்பான செயலைச் செய்து முடித்தல்;* (ironically) do a wonderful job. *'நீ என்ன வெட்டி முறித்து விட்டு ஓய்வெடுக்கிறாய்?'.*

**வெட்டுதல்** வி. (v.) *1. நறுக்குதல்; துண்டாக்குதல்;* cut; cut off; chop; slice. *'பழங்களை வெட்டித் தந்தாள்'.* 2. *செதுக்குதல் போன்ற செயல்களின் மூலம் ஒரு பரப்பின் ஒரு பகுதியை நீக்குதல்;* trim; pare (whith a spade). *'வரப்பை வெட்டி ஒழுங்கு படுத்தினார்'. 3. நிலத்தைத் தோண்டுதல்;* dig (out); construct (by digging). *'நிலக்கரி வெட்டி எடுக்கும் எந்திரம்'. 4. கல், மாழை போன்றவற்றில் எழுத்து, குறியீடுகளைப் பொறித்தல் அல்லது பதித்தல்;* inscribe (on a slab of stone); engrave (on metal). *'அரசர்கள் தங்கள் வெற்றிகளைக் கல்லில் வெட்டி வைத்திருக்கிறார்கள்'. 5. படைப்பில் தேவையில்லாத பகுதியை நீக்குதல்;* censor anything objectionable and unnecessary). *'தணிக்கைக் குழுவால் படத்தில் பல காட்சிகள் வெட்டப் பட்டன'. 6. சில விளையாட்டுகளில் எதிராளியின் காயை ஆட்டத்திலிருந்து நீக்குதல்;* cut out (in certain games) remove (a piece, etc)). *'தாயக்கட்டை ஆட்டத்தில் பழுக்கப் போகும் நேரத்தில் காயை வெட்டி விட்டார்கள்'. 7. பேச்சை மறுத்தல்; தடுத்தல்;* oppose; argue against. *'கருத்தை ஒட்டியும் வெட்டியும் பேசினார்கள்'. 8. நோயால் கை, கால் முதலிய உறுப்புகள் ஒரு பக்கமாகச் சுண்டப்படுதல்;* (off limbs) twitch. *'வலிப்பால் கை கால்கள் வெட்டி வெட்டி இழுத்தன'. 9. மின்னல் மின்னுதல்;* (of lightning) strike. *'மின்னல் வெட்டுவதைப் பார்க்க வேண்டாம் என்றார்'. 10. வயிறு நிரம்ப உண்ணுதல்;* dovour (food) eat with avidity. *'பிடித்த குழம்பு என்றதும் சாப்பாட்டை வெட்டு வெட்டென்று வெட்டுகிறான்'. 11. ஆடு, கோழி முதலியவற்றை உணவுக்காகக் கொல்லுதல்;* killing animals for food. *'கிடாவெட்டி விருந்துவைத்தார்'. 12. அரிவாளால் தாக்கிக் கொலை செய்தல்;* murder. *'கூலிப்படையினரால் வெட்டிக் கொலை செய்யப்பட்டார்'. 13. கோடு கள், சாலைகள் போன்றவை ஒன்றுக் கொன்று குறுக்கிடுதல்;* cross. *'இருகோடுகளும் வெட்டாமல் நேராகச் செல்ல வேண்டும்'.*

**வெடவெடத்தல்** வி. (v.) *அதிக நடுக்கம்;* shivering.

**வெடித்தல்** வி. (v.) *1. ஓசையோடு பிளத்தல்;* burst; erupt. *'எரிமலை வெடித்துத் தீக்குழம்பைக் கக்கியது'.* 2. *சினம், அழுகை, விம்மல் விசையுடன் வெளிப்படுதல்;* (of sobs) burst out. *'விம்மி வெடித்தழுதாள்'.* 3. *வெடிகுண்டு, வெடி ஆகியவை விசையுடன் சிதறுதல்; விசையுடன் சிதறச் செய்தல்;* (of a bomb, etc.) explode/explode (a bomb, etc.,). *4. சினம், எரிச்சல் முதலியவற்றால் சீறுதல்;* explode (with anger, etc.,). *'ஊழலைக் கண்டு வெடித்தார்'. 5. விசையுடன் துண்டுபடுதல்;* (of blood veins, etc.,) burst. *'குருதிநாளங்கள் வெடித்தன'.* 6. *தெறித்தல் அல்லது பிளத்தல்;* (of lips) be cracked. *'மழையின்றி நிலம் பாளம்பாளமாக வெடித்தது'.*

*7. போர், புரட்சி முதலியவை தீவிரத் தன்மையுடன் ஏற்படுதல்;* (of war, agitation etc,) break out; erupt. *'ஊழலுக்கு எதிராக மாணவர் புரட்சி வெடித்தது'.*

**வெடிபோடுதல்** வி. (n.) *1. வெடி வெடித்தல்;* burst fire-crackers. *2. விடுகதை சொல்லி விடை கேட்டல்;* pose a riddle. *'கடினமான வெடி போட்டால் எனக்கு விடை தெரியாது'.*

**வெடுக்கென்று** வி.எ. (adv.) *1. திடீரென்று; எதிர்பாராத முறையில்;* unexpectedly; suddenly. *'வெடுக்கென்று பணப் பையைப் பறித்துக்கொண்டு ஓடினான்'. 2. பேசும்போது ஓரிரு சொற்களில் மனம் வருந்தும்படி;* sharply; curtly. *'என்னால் முடியாது என வெடுக்கென்று பதில் சொன்னாள்'.*

**வெண்கலக் குரல்** பெ. (n.) *கணீரென்ற ஒலியையுடைய குரல்;* a ringing voice; full throated voice.

**வெண்கலத் தொண்டை** பெ. (n.) *வெண் கலக் குரல் பார்க்க.*

**வெண்கலம்** பெ. (n.) *செப்பும் (தாமிர மும்) தகரமும் கலந்த மாழை (உலோகம்);* an alloy of copper and tin; bell metal; bronze. *'வெண்கலச் சிலை'.*

**வெண்பொங்கல்** பெ. (n.) *பாசிப்பருப்பு, மிளகு முதலியவை சேர்த்துப் பச்சரிசி யில் சமைக்கப்படும் ஒருவகை உணவு;* preparation of rice boiled with pulses and pepper.

**வெத்துவேட்டு** பெ. (n.) *1. ஒன்றைச் செய்து காட்டாமல் பகட்டுக்காகச் செய்யும் ஆரவாரம்;* without substance; hollow empty. *'வெத்துவேட்டு உறுதிமொழி களை மக்கள் நம்பமாட்டார்கள்'. 2. செயலில் எதையும் காட்டாமல் பகட்டாகப் பேசித்திரிபவர்;* gasbag. *'அவன் சரியான வெத்துவேட்டு'.*

**வெதும்பு** வி. (v.) *1. வாட்டமடைதல்;* be withered; wilt. *2. வருந்துதல்;* be grieved.

**வெதுவெதுப்பு** பெ. (n.) *மிதமான சூடு;* neither hot nor cold; lukewarm. *'வெதுவெதுப்பான வெந்நீர் கொடு என்றார்'.*

**வெப்பக் கடத்தல்** பெ. (n.) *திடப்பொரு ளில் உள்ள அணுக்கள் அதிர்வடை வதால் ஒரு முனையிலிருந்து மறு முனைக்கு வெப்பம் பரவும் முறை;* conduction (of heat).

**வெப்பக் கதிர்வீச்சு** பெ. (n.) *ஊடகங் களின் உதவியின்றி வெப்பம் பரவும் முறை;* thermal radiation. *'நெருப்புக்கு அருகில் இருக்கும் போது வெப்பக் கதிர்வீச்சு முறையில் வெப்பம் நம்மை வந்தடைகிறது'.*

**வெப்பச் சலனம்** பெ. (n.) *நீர்மம் அல்லது வளிப் பொருள்களில் அவற்றின் துகள்கள் நகர்வதன் மூலம் வெப்பம் பரவும் முறை;* convection (of heat).

**வெப்பநிலை** பெ. (n.) *வெப்பத்தின் அளவு;* temperature. *'உடம்பின் வெப்பநிலை என்ன? என்று கேட்டார்'.*

**வெப்பமானி** பெ. (n.) *(இதளியம் விரிவடைவதன் அடிப்படையில்) வெப்ப நிலையின் அளவைக் கண்டறியப் பயன்படும் கருவி;* thermometer.

**வெலவெலத்தல்** வி. (v.) *அச்சத்தால் உடம்பு நடுங்குதல்; பதறுதல்;* be unnerved. *'இரவில் திடீரென்று கேட்ட ஒலியால் வெலவெலத்துப் போனான்'.*

**வெள்ளக்காடு** பெ. (n.) *மழைநீர் எல்லா இடங்களில் நிறைந்திருக்கும் நிலை;* wide expanse of water due to heavy rain. *'அடைமழை பெய்ததால் தெரு வெல்லாம் வெள்ளக் காடானது'.*

**வெள்ளாமை** பெ. (n.) *வேளாண்மை; உழவுத் தொழில்;* cultivation. *'மழை பொய்த்ததால் வெள்ளாமை இல்லை'.*

**வெள்ளாவி** பெ. (n.) *ஆடையை வெளுக்க உதவும் நீராவிக் கலன்;* steam used for bleaching clothes.

**வெள்ளித்திரை** பெ. (n.) *திரையரங்கின் வெண்ணிறத் திரை;* cinema screen. *'விரைவில் வெள்ளித் திரையில் உங்கள் பார்வைக்கு என்று விளம்*

*பரம் செய்தார்கள்'.*

**வெள்ளிவிழா** பெ. (n.) *நிறுவனம், கல்வி நிலையம் போன்றவற்றின் இருபத்தைந்தாம் ஆண்டு நிறைவு அல்லது திரைப்படம் போன்றவற்றின் இருபத்தைந்தாம் கிழமை (வாரம்) நிறைவைக் கொண்டாடும் விழா ;* silver jubilee (in the case of a film, a run of twenty-five weeks).

**வெள்ளையடித்தல்** வி. (v.) *கட்டடம், சுவர் முதலியவற்றுக்குப் பொலிவூட்டும் வகையில், சுண்ணாம்புக் கரைசல் அல்லது வேதியல் (ரசாயன) முறையில் உருவாக்கப்பட்ட வண்ணங்களைப் பூசுதல்;* whitewash (a house); paint. *'பொங்கலுக்கு வீட்டிற்கு வெள்ளையடிப்பது வழக்கம்'.*

**வெள்ளையணு** பெ. (n.) *குருதியில் விரைவாக நகரக்கூடியதும், நோய் எதிர்ப்பாற்றலைக் கொண்டதுமான வெண்ணிற உயிரணு;* white blood cell; white corpuscle.

**வெள்ளையும் சள்ளையுமாக** வி.அ. (adv.) *பளீரென்றிருக்கும், மடிப்புக் கலையாத வெண்ணிறமாக அணிந்த உடை;* spotlessly dressed. *'அவர் வெள்ளையும் சள்ளையுமாகத் தான் இருப்பார்'.*

**வெள்ளைவெளேரென்று** வி.எ. (adv.) *மிகவும் வெண்மையாக;* brilliant white. *'வெள்ளைவெளேரென்று இருக்கிறது பல்'.*

**வெள்ளெழுத்து** பெ. (n.) *எட்டப் பார்வை;* long sightedness.

**வெள்ளோட்டம்** பெ. (n.) *1. நோட்டம் பார்க்குமாறு புதுத்தேர், நாவாய் முதலியவற்றை முதன்முதலாக ஓட்டுதல்;* dragging a new temple car, ship, for the first time in trial, trial run. *'தங்கத்தேர் வெள்ளோட்டம் நடைபெற்றது'. 2. ஒன்றைப் பயன்படுத்துவதற்கு முன் செய்து பார்க்கும் ஆய்வு(சோதனை);* preliminary test. *'புற்றுநோய்க்கான சில புதிய மருந்துகள் வெள்ளோட்டத்தில் இருக்கின்றன'.*

**வெளிக்குப் போதல்** வி. (v.) *மலம் கழித்தல்;* empty the bowels. *'குழந்தை வெளிக்குப் போயிருக்கிறது'.*

**வெளிச்சத்துக்கு வருதல்** வி. (v.) *இதுவரை அறியப்படாமலிருந்ததைப் பலரும் அறியும்படி செய்தல்;* come to light. *'ஊழல் செய்வோரின் விவரங்கள் வெளிச்சத்துக்கு வந்துள்ளன'.*

**வெளிச்சந்தை** பெ. (n.) *அரசின் கட்டுப்பாடின்றி இயங்கும் சந்தை;* open market. *'வெளிச்சந்தையில் பொருட்களின் விலை அதிகம்'.*

**வெளிச்சம்** பெ. (n.) *1. ஒளி;* light. *'வெளிச்சத்தில்' கண் கூசியது. 2. பொருள்களின் மீது ஒளி பட்டுத் திரும்புவதால் கண்ணுக்குக் கிடைக்கும் தெளிவு;* brightness. *'வெளிச்சமான அறை'.*

**வெளிநடப்பு** பெ. (n.) *ஓர் எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில் கூட்ட நடவடிக்கைகளில் பங்கேற்காமல் வெளியேறுகை;* walk out (in an assembly. *'சட்டமன்றக் கூட்டத்தின் போது எதிர்க்கட்சியினர் வெளி நடப்புச்செய்தனர்'.*

**வெளிப்படுதல்** வி. (v.) *1. வெளிவருதல்;* emerge. *'முகில்களுக்கிடையிலிருந்து நிலவு வெளிப்பட்டது'. 2. தன்மை, நிலை போன்றவை உணரக்கூடிய வகையில் தோன்றுதல்;* to become manifest or evident. *'நகைச்சுவை உணர்வு வெளிப்படப் பேசினார்'. 3. கமுக்கம், மந்தணம், உண்மை போன்றவை பலரும் அறியும் வண்ணம் வெளிப்படையாதல்;* become evident; become public; come out. *'உண்மைவெளிப்பட்டது'. 4. செயல், நிகழ்வு போன்றவற்றின் விளைவாக ஒன்று தோன்றுதல் உருவாதல்;* form. *'அடக்குமுறையின் விளைவாகப் புரட்சி வெளிப்பட்டது'.*

**வெளிப்படுத்துதல்** வி. (v.) *1. உணர்வு, திறமை, கருத்து முதலியவற்றை வெளிப்படச் செய்தல்;* show; express;

reveal. *'திறமையை வெளிப்படுத்த நல்ல வாய்ப்பு'*. 2. *உண்மை, மந்தணம், கமுக்கம் (ரகசியம்) போன்றவற்றைப் பலரும் அறியச் செய்தல்;* make public. *'ஊழல் செய்வோர் பற்றிய உண்மைகளை விரைவில் வெளிப்படுத்துவேன்'*.

**வெளிப்படை** பெ. (n.) *1. பிறர் தெளிவாக அறியக் கூடிய வகையில் இருப்பது;* openness; obviousness. *'செய்யுளின் வெளிப்படைப் பொருள்'*. 2. *ஒளிவு மறைவில்லாத தன்மை;* frankness. *'வெளிப்படையான பேச்சு பலரை அவருக்கு எதிராக்கியது'*. 3. *நேரடியாகப் புலனாகும் வகையில் இருப்பது;* that which is obvious; direct. *'காய்ச்சலின் வெளிப்படையான அறிகுறிகள்'*.

**வெளிப்புறப் படப்பிடிப்பு** பெ. (n.) *படப்பிடிப்பு நிலையம், கட்டடம், செயற்கையான அரங்குகளில் இல்லாமல், வெளி இடங்களில் நடத்தப்படும் படப்பிடிப்பு;* outdoor shooting.

**வெளியிடுதல்** வி. (v.) *1. அஞ்சல்தலை, திரைப்படம் முதலியவற்றைப் பயன்பாட்டிற்குக் கிடைக்கச் செய்தல்;* release (stamps, film, etc). *'புதிய அஞ்சல்தலையை அரசு வெளியிட்டது'*. 2. *செய்தி, உணர்ச்சி முதலியவற்றைப் பலரும் அறியும் வகையில் வெளிப்படுத்தல்;* reveal, publish. *'வியப்பை வெளியிட்டுப் பேசினார்'*. 3. *நூல் முதலியவற்றை அச்சிட்டு வெளிக்கொணரல்;* bring out; publish. *'வெளியிட்ட நூல்களெல்லாம் விற்றுவிட்டன'*. 4. *வெளிவரச் செய்தல்;* release; emit. *'மரங்கள் இரவில் கரிவளியை (கார்பன்டை ஆக்ஸைடு) வெளியிடுகின்றன'*.

**வெளியீடு** பெ. (n.) *1. (அச்சடிக்கப்பட்டு அல்லது உருவாக்கப்பட்டுப் பொது மக்களுக்காக) வெளியிடுதல்;* (the act of) publishing, release (of book, bonds, film, etc) issue. *'நூல்வெளியீட்டு விழா'*. 2. *(வெளியிடப்பட்ட நூல் முதலியவற்றின்) படி;* copy (of the publication). *'எங்களிடம் அனைத்துப் பதிப்பகத்தாரின் வெளியீடுகளும் கிடைக்கும்'*. 3. *(எண்ணம், கற்பனை முதலியவற்றின்) வெளிப்பாடு;* expression. *'கருத்து வெளியீட்டுத் திறம் மிக்கவர்களே சிறந்த படைப்பாளியாகிறார்கள்'*.

**வெளியுலகம்** பெ. (n.) *1. ஒருவரைச் சுற்றியிருக்கும் மக்கள்;* people (around someone). *'மாணவர்களின் திறமையை வெளியுலகுக்கு அடையாளம் காட்டினார்'*. 2. *உலக நடப்பு;* ways of the world. *'வெளியுலகமே தெரியாதவனாக இருக்கிறாயே'*.

**வெளியூர்** பெ. (n.) *ஒருவர் குடியிருக்கும் ஊர் அல்லாத பிற ஊர்;* place other than one's residence. *'அப்பா வெளியூர் போயிருக்கிறார்'*.

**வெளிர்** பெ.எ. (adj.) *(நிறத்தில்) அடர்த்தி குறைந்த;* light pale. *'வெளிர் பச்சை; வெளிர் மஞ்சள்'*.

**வெளிவேடம்** பெ. (n.) *பிறரை நம்பச் செய்வதற்காகப் பொய்யாக நடந்து கொள்ளும் செயல்;* pretence; deceptive appearance.

**வெளுத்துக் கட்டுதல்** வி. (v.) *1. பலரும் பாராட்டும் வகையில் அல்லது வியக்கும் வகையில் ஒன்றைச் சிறப்பாகச் செய்தல்;* do very well. *'நடிப்பில் வெளுத்துக் கட்டிவிட்டார்'*. 2. *வெயில் கடுமையாக அடித்தல்; மழை கடுமையாகப் பெய்தல்;* (of sunshine, rain, etc.) be intense or furious. *'இந்தாண்டு மழை வெளுத்துக்கட்டி விட்டது'*. 3. *கடுமையாகத் திறனாய்வு (விமரிசனம்) செய்தல்;* blast (someone or something). *'ஊழலில் சிக்கியவர்களைப் பற்றி மாத இதழில் வெளுத்துக் கட்டியிருக்கிறார்கள்'*. 4. *நன்றாக அடித்தல்;* beat severly. *'அவருக்குச்*

*சினம் வந்தால் வெளுத்துக் கட்டி விடுவார்'.*

**வெளுத்து வாங்குதல்** வி. (v.) வெளுத்துக் கட்டுதல் பார்க்க.

**வெற்றி** பெ. (n.) *1.* போர், போட்டி, தேர்தல் முதலியவற்றில் எதிர்ப் பவரைத் தோற்கடித்துப் பெறும் உயர்வு*;* victory, success. **2.** எடுத்த முயற்சியின் பயன்நிறைந்த முடிவு*;* successfull completion. *'உன் முயற்சிகள் வெற்றி பெற வாழ்த்துகள்'. 3.* திரைப்படம், நாடகம் போன்றவை நீண்டநாள் நடைபெறும் நிலை*;* (of films) box office hit. *'கலைப் படங்களில் ஒருசிலவே வெற்றி பெறுகின்றன'.*

**வெற்றிக் கேடயம்** பெ. (n.) போட்டிகளில் வென்றவர்களுக்குப் பரிசாக வழங்கப் படும் கேடயம்*;* shield.

**வெற்றிக்கோப்பை** பெ. (n.) போட்டிகளில் வென்றவர்களுக்குப் பரிசாக வழங்கப் படும் கோப்பை*;* cup.

**வெற்றிடம்** பெ. (n.) *1.* வெறுமையிடம் *(காலியிடம்);* vacant space. *'வெற்றி டத்தில் பூச்செடிகளை வளர்த்தார்'.* 2. வெற்றிடம்*;* vacuum. *'வெற்றி டத்தில் ஒலியலை பரவாது'.*

**வெற்றிலை** பெ. (n.) *1.* கொடிவகை*;* betel creeper plant. *2.* பாக்குஞ் சுண்ணாம்பும் சேர்த்து மென்று தின்பதற்குரிய, வெற்றிலைக் கொடியின் இலை*;* betel leaf.

**வெற்றிலைச்செல்லம்** பெ. (n.) வெற்றிலை, *பாக்கு முதலியவற்றைத் தனித்தனி யாக வைத்துக் கொள்வதற்கு ஏற்ற முறையில் சிறுசிறு தடுப்புகள் கொண்டதாகச் செய்யப்படும் மாழைப் (உலோகப்) பெட்டி;* a small metal box (for keeping betel leaves. areca nut, etc.,).

**வெற்றிலை பாக்கு மாற்றுதல்** வி. (v.) *வெற்றிலை, பாக்கு, பழம் போன் றவை உள்ள தட்டுகளைப் பெண் வீட்டாரும், மாப்பிள்ளை வீட்டாரும் ஒருவருக்கொருவர் மாற்றிக் கொள் வதன் மூலம் திருமணத்தை உறுதி செய்தல்;* conclude a proposal of marriage (by ceremonially exchanging betel leaves, etc.). *'பெண் பிடித்திருந்ததால் வெற்றிலை பாக்கு மாற்றி விட்டார்கள்'.*

**வெற்றிலை பாக்கு வாங்குதல்** வி. (v.) *கலைஞர்கள் நிகழ்ச்சியை நடத்த ஒப்புக் கொண்டதன் அடையாளமாக, தட்டில் வெற்றிலை, பழம் போன்ற வற்றுடன் முன்பணத்தைப் பெறுதல்;* (of performing artists) receive an advance (offered ceremonially with betel leaves, etc,) in acceptance of an engagement. *'அடுத்தவார நிகழ்ச்சிக்கு வெற்றிலை பாக்கு வாங்கிவிட்டதால் உங்கள் ஊருக்கு வரமுடியாது என்றனர்'.*

**வெற்று** பெ.அ. (adj.) *1.* எதுவும் இல்லாத, வெறும்*;* empty; bare; blank. *'வெற்றுத் தாளில் கையெழுத்துப் போடாதே'. 2. பயனற்ற; வீணான;* useless. *'வெற்றுப் பேச்சு பேசாதே'. 3.* நோக்கம் எதுவும் இல்லாத*;* purposeless; blank. *'வெற்றுப் பார்வை'. 4. உடை, கண்ணாடி* போன்றவை அணியா*;* bare; naked.

**வெறி** பெ. (n.) *1. கண்மூடித்தனமாக அல்லது கட்டுப்பாடு* இல்லாமல் நடந்து கொள்ளும் நிலை*;* uncontrolled behaviour. *2. ஒன்றின் மீது* கொண்டிருக்கும் *முறையான அளவைத் தாண்டிய* ஆர்வம் அல்லது ஆசை*;* fanaticism; craze. *'பதவி வெறிபிடித்தவர்'. 3.* ஒன்றை அடை வதற்கும் செய்வதற்கும் ஏற்படுகிற அல்லது ஏற்படுத்திக் கொள்ளுகிற வரம்பிழந்த உணர்ச்சி*;* violent passion. *4.* நச்சுயிரிகள் (வைரசு) தாக்குவதால் விலங்குகளுக்கு ஏற்படும் *(அவை கடித்தால் மக்களுக்கும் பரவும்)* கொடிய நோய்*;* (of animals) wild and mad behaviour; rabies. *'நாய்க்கடி நோய்'.*

**வெறிச்சென்று** வி.அ. (adj.) *மக்கள் நடமாட்டம் இல்லாமல்!* வெறுமை *யாக;* wearing a desolate look.

**வெறிச்சோடி** வி.அ. (adj.) *வெறிச்சென்று பார்க்க.*

**வெறித்தல்** வி. (v.) *1. ஓர் இடம் ஆட்கள் இல்லாமல் வெறிச்சோடியிருத்தல்;* (of a place) be empty (without any sign of activities). *'தெருவே வெறித்துக் கிடந்தது'. 2. மழை பெய்து வானம் தெளிதல்;* (of sky) be clear. *'மழை வெறித்துவிட்டது'. 3. மாடு முதலியவை மிரளுதல்;* be frightened. ' *4. எந்தவிதச் சிந்தனையும் இல்லாமல் ஒன்றை வெகுநேரம் பார்த்துக் கொண்டிருத்தல் பார்வை ஒன்றின் மீது நிலைத்தல்;* stare blankly give a vacant stare. *'சாப்பிடாமல் சோற்றை வெறித்தபடி உட்கார்ந்திருந்தான்'. 5. மிரட்சி, ஆர்வம், சினம் போன்றவற்றின் காரணமாக ஒருவரை வெகுநேரம் உற்றுப் பார்த்தல்;* gaze.

**வெறுங்கையுடன்** வி.எ. (adj.) *எதையும் கொண்டு வராமல் அல்லது எதையும் கொண்டு செல்லாமல்;* empty-handed.

**வெறுப்பு** பெ. (n.) *1. ஒன்றை அல்லது ஒருவரை வெறுக்கும் நிலை;* dislike. *2. வெறுமை உணர்வு; பற்றின்மை (விரக்தி);* feeling of emptiness (caused by frustration). *'வாழ்க்கையில் வெறுப்புத்தட்டக்கூடாது'.*

**வெறும்** பெ.எ. (adj.) *1. உள்ளே எதுவும் இல்லாத;* empty. *2. (உடல், உடலுறுப்புகள் குறித்து வருகையில்) எதுவும் இல்லாத;* bare; naked. *3. வேறு எதுவும் இல்லாமல் குறிப்பிட்டது மட்டும் தான் என்பதைக் கூறப் பயன்படும் சொல்;* mere; nothing but. ' *4. குறிப்பிடப்படுவதன் மேல் எதுவும் இல்லாத என்ற பொருளில் பயன்படுத்தப்படும் சொல்;* bare; empty. *5. 'பிறவற்றின் உதவியின்றி குறிப்பிடப்படுவதன் மூலமாகவே' என்னும் பொருளில் பயன்படுத்தப்படும் சொல்;* mere.

**வெறும் வாயை மெல்லுதல்** வி. (v.) *வம்பு பேசுதல்;* gossip. *'கூடி அமர்ந்து கொண்டு வெறும் வாயை மெல்லுவதே இவர்களுக்கு வேலையாகிவிட்டது'.*

**வெறுமனே** வி.எ. (adv.) *1. எதுவும் செய்யாமல்; சும்மா;* without being occupied; idly. *2. இன்றியமையாததுகூட இல்லாமல்;* without anything to accompany; as it is. *3. உரிய முறையில் அல்லாமல்;* without the usual accompanying action; for form's sake. *4. மிக இன்றியமையாதவற்றைச் செய்யாமல்;* mere. *'அடிப்படை ஏந்துகளைச் செய்துதராமல் வெறுமனே மனப் பாடக் கல்வி முறையால் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திட முடியுமா?'.*

**வெறுமை** பெ. (n.) *1. எதுவும் இல்லாதது போன்ற உணர்வு; எதிலும் பிடிப்பு இல்லாத உணர்வு;* feeling of emptiness; vacuum. *'நண்பர்கள் சென்றதும் அவன் மனத்தில் வெறுமை கவிந்தது'.*

**வேக்காடு** பெ. (n.) *புழுக்கம்;* sultriness. *'இந்த வேக்காட்டில் எப்படித்தான் வேலை செய்வது?'.*

**வேகத்தடை** பெ. (n.) *(ஊர்திகளின் வேகத்தைக் குறைப்பதற்காகச் சாலையில்) குறுக்கே சற்று மேடாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் அமைப்பு;* speed breaker. *'இந்தச் சாலையின் சந்திப்பில் வேகத்தடை வந்த பின் நேர்ச்சிகள் (விபத்துகள்) குறைந்துவிட்டன'.*

# வே

**வேகம்[1]** பெ. (n.) *(பொதுவாக இயக்கம் குறித்து வரும்போது) குறிப்பிட்ட நேரத்தில் இவ்வளவு தூரம் அல்லது இத்தனை முறை என்ற வகையில் கணக்கிடப்படும் அளவு;* speed. *'சிறுத்தை மணிக்கு எழுபது கிலோ மீட்டர் வேகத்தில் ஓடக்கூடியது'. 2. உந்துதல்; எழுச்சியுற்ற நிலை;* impulse; excitement. *'புதிதாக ஒன்றைச் செய்ய வேண்டும் என்ற வேகம்*

*அவனிடம் இருக்கிறது'*. 3. சினம்; anger. *'அவனைப் பார்த்தாலே எனக்கு வேகம் வருகிறது'*.

**வேகம்²** பெ. (n.) *நாற்றம்;* (strong) smell; odour. *'தண்ணீரில் மருந்து வேகம் அடிக்கிறது'*.

**வேகாத வெயில்** பெ. (n.) உடலை வருத்தும். மிகக் கடுமையான வெயில்; scorching sun; scorching heat. *'பச்சைக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு இந்த வேகாத வெயிலில் எங்கே போய்விட்டு வருகிறாய்?'*.

**வேங்கை¹** பெ. (n.) *புலி;* tiger.

**வேங்கை²** பெ. (n.) *மஞ்சள் நிறப் பூக்களையும் (மர வேலைக்குப் பயன்படும்) சிவந்த, பருத்த தண்டையும் உடைய ஒருவகை உயரமான மரம்;* Indian kino tree.

**வேட்டி** பெ. (n.) *(ஆண்கள்)* இடுப்பில் *சுற்றி அணியும்,* கணுக்கால்வரை *நீளமுள்ள (பெரும்பாலும் வெள்ளை நிறத்தில் இருக்கும்) ஆடை;* unstitched garment for men that hangs from waist to ankle; dhoti. *'எட்டு முழ வேட்டி'*.

**வேட்டு** பெ. (n.) *1.* வெடி; cracker; dynamic. 2. *(வெடி, துப்பாக்கி முதலியவை)* வெடிப்பது; gun shot. *'எங்கோ துப்பாக்கி வேட்டுச்சத்தம் கேட்டது'*.

**வேட்டுவை** பெ. (n.) *1. (ஒருவருக்கு)* தீங்கு *விளைவித்தல்; திட்டம் போட்டுக் கெடுத்தல்; உலைவைத்தல்;* do everything to undermine; ruin. *'அதிகாரியிடம் ஏதோ சொல்லி என் வேலைக்கு வேட்டு வைத்து விட்டான்'*. 2. *(எதிர்பாராமல் அல்லது திடீரென்று ஒருவருக்கு)* பெரும் செலவு வைத்தல்; put someone to an unexpected heavy expense. *'தெரியாத்தனமாகப் பொம்மைக் கடைக்குள் நுழைந்துவிட்டேன். என் பையன் இருநூறு ரூபாய்க்கு வேட்டுவைத்துவிட்டான்'*.

**வேட்டை** பெ. (n.) *1. (மனிதன் உணவுக்காகவோ, பொழுதுபோக்குக்காகவோ விலங்குகளையும் பறவைகளையும்) தேடித் துரத்திப் பிடிக்கும் அல்லது கொல்லும் செயல்; (விலங்குகள் தம் இரையை) துரத்திக் கொல்லுவது;* hunting. *'புலி வேட்டை தடை செய்யப்பட்டுள்ளது'*. 2. தீவிர *மாகத் தேடிப் பிடிக்கும் செயல்;* operation (against unlawful activities); hunt. *'மாநில அளவில் காவல்துறை யினர் கள்ளச் சாராய வேட்டை நடத்தினர்,'*. 3. ஒன்றைப் பெறுவதற் காக மிக விரைவாகவும் அதிக அளவிலும் செய்யும் நிலை; drive; campaign. *'வாக்கு வேட்டை'*.

**வேட்டைநாய்** பெ. (n.) *கூர்மையான மோப்பசக்தி உடையதும் காட்டில் வேட்டைக்குச் செல்வதற்குப் பயிற்சி அளிக்கப்பட்டதுமான நாய்;* hunting dog; hound.

**வேட்பாளர்** பெ. (n.) *தேர்தலில் போட்டியிடுபவர்;* candidate (for election to an office). *'இவர் எங்கள் தொகுதி வேட்பாளர்'*.

**வேட்புமனு** பெ. (n.) *வேட்பாளர் தன்னைப் பற்றிய தரவல்களை நிரப்பிக் கையெழுத்திட்டு முன் வைப்புத் தொகையுடன் (தேர்தல் அதிகாரி யிடம்) அளிக்கும் படிவம்;* nomination papers. *'வேட்பு மனுவைத் திரும்பப் பெற நாளை கடைசி நாளாகும்'*.

**வேடிக்கை** பெ. (n.) *பார்ப்பதற்கு கேட்பதற்குப் புதுமையானதாகவும், சிரிப்பை விளைவிப்பதாகவும் அமைவது;* fun; amusement. *'வேடிக்கையாகச் சொன்னதைத் தவறாக எடுத்துக்கொண்டாய்'*.

**வேடிக்கை காட்டு** வி. (v.) *(குழந்தைகள். சிறுவர்கள் போன்றோருக்கு) வேடிக்கை தரும் முறையிலான செயல்களைச் செய்துகாட்டுதல்; வேடிக்கை பார்க்கச் செய்தல்;* entertain; amuse. *'நாடகத்தில் இடை யிடையே கோமாளி ஒருவன் வேடிக்கை காட்டி எல்லோரையும் சிரிக்க வைத்தான்'*.

**வேடிக்கை பார்** வி. (v.) *1. (தன்னைச்சுற்றி நிகழ்வதை அல்லது இருப்பதை) பொழுதுபோக்கும் வகையிலோ ஈடுபாட்டுடனோ பார்த்துக் கொண்டிருத்தல்;* watch aimlessly. *'வேலையைப் பார்க்காமல் அங்கே என்ன வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாய்?'.* *2. (பிறர் மோசமாக நடத்தப்படும்போது அல்லது தவறு, ஊழல் போன்றவை நடக்கும்போது) தேவையானது எதுவும் செய்யாமல் பார்த்துக் கொண்டிருத்தல்;* be a silent witness. *'அன்றைக்கு அவன் என்னை அடிக்கும்போது நீ வேடிக்கை பார்த்துக்கொண்டுதானே இருந்தாய்?'.*

**வேடுகட்டு** பெ. (n.) *(பானை, குடம், கூடை போன்றவற்றை) துணியால் மூடிக் கட்டுதல்;* cover (a pot. vessel. basket. etc.,) with a cloth. *'தயிர்ப் பானை இறுக்கமாக வேடு கட்டப்பட்டிருந்தது'.*

**வேண்டப்பட்ட** பெ.அ. (adj.) *உறவு, நட்பு, பழக்கம் போன்ற முறையில் நெருக்கமாக உள்ள;* someone very close. *'அவள் நமக்கு மிகவும் வேண்டப்பட்ட பெண்'.*

**வேண்டாவெறுப்பாக** வி.அ. (adv.) *செய்ய வேண்டி இருக்கிறதே என்ற வெறுப்போடு; விருப்பமில்லாமல்;* reluctantly; unwillingly. *'மாமாவிடம் பணம் கேட்டேன். வேண்டா வெறுப்பாகக் கொடுத்தார்'.*

**வேண்டு**[1] வி. (v.) *1. பணிவுடனும் நயமாகவும் ஒன்றைச் செய்யுமாறு கேட்டுக்கொள்ளுதல்;* ask politely; entreat. *'நண்பர் தன் வீட்டில் உணவு உண்ணுமாறு என்னை வேண்டினார்'.* *2. (நன்மை உண்டாகுமாறு அல்லது குறிப்பிட்ட ஒன்றைத் தருமாறு இறைவனிடம்) இறைஞ்சுதல்;* pray to. *'ஆண்டவனை வேண்டிக்கொள். எல்லாம் நல்லபடியாக நடக்கும்'.*

**வேண்டுகோள்** பெ. (n.) *ஒன்றைச் செய்யுமாறு அல்லது ஒத்துக் கொள்ளுமாறு நயந்து அல்லது பணிவாகக் கேட்டல்; கனிவாகக் கேட்டுக்கொள்ளுதல்;* request; appeal. *'இது என்னுடைய தனிப்பட்ட வேண்டுகோள்'.*

**வேண்டுதல்** பெ. (n.) *வழிபடல்; நேர்ந்துகொள்ளுதல்;* vow made to a particular deity.

**வேண்டுமென்றே** வி.அ. (adv.) *(ஒன்றைச் செய்யும்போது) தற்செயலாகவோ தவறுதலாகவோ இல்லாமல் தெரிந்தே;* intentionallly; consciously; deliberately. *'வேண்டுமென்றே யாராவது இப்படிச் செய்வார்களா?'.*

**வேந்தர்** பெ. (n.) *பல்கலைக்கழகத்தின் கௌரவத் தலைவர்;* chancellor (of a university).

**வேலை வாய்ப்பகம்** பெ. (n.) *வேலை தேடுவோரின் பெயரையும் கல்வித் தகுதியையும் பதிவு செய்துகொண்டு. வேலை வாய்ப்பைத் தெரிவிக்கும் பணியைச் செய்யும் அரசு அலுவலகம்;* government office which maintains a register for those seeking employment; (in India) employment exchange.

**வேலை வாய்ப்பு** பெ. (n.) *தொழிற்சாலை, அலுவலகம் போன்றவற்றில்) முறையாக வேலைக்கு அமர்த்தப்படும் வாய்ப்பு;* employment. *'அடுத்த ஐந்து ஆண்டுகளுக்குள் இரண்டு இலக்கம் வேலை வாய்ப்புகளை ஏற்படுத்த அரசு திட்டமிட்டுள்ளது'.*

**வேலைவெட்டி** பெ. (n.) *(ஒருவர்) செய்ய வேண்டியதாக இருக்கும் ஏதேனும் ஒரு வேலை;* any work. *'வீட்டிற்குப் போய் ஏதாவது வேலைவெட்டி இருந்தால் அதைப் பார்'.* *2. வேலை; தொழில்;* job; occupation.

**வேள்வி** பெ. (n.) *1. யாகம்;* sacrifice. *'ஒவ்வோர் ஆண்டும் மார்கழி மாதக் கடைசியில் வேள்வி நடக்கும்'.*

**வேளாண்மை** பெ. (n.) *1. பயிர்த்தொழில்;* agriculture.

**வேளை** பெ. (n.) *1. (குறிப்பிட்ட) நேரம்; சமயம்;* time. *'குழந்தை பிறந்த வேளை வீட்டில் நற்செயல்கள் நடந்தன'.* 2. *ஒரு நாளில் காலை, மாலை, நண்பகல், இரவு என்று பிரிக்கப்பட்ட பொழுது;* time(s). *'மாலை வேளைதான் சற்று ஓய்வாக இருக்க முடியும்'.*

**வேற்றுமை உருபு** பெ. (இலக்.) வேற்றுமைப் பொருளை உணர்த்துவதற்காகப் பெயருக்கு இறுதியில் சேர்க்கும் உருபு; case marker or suffix.

**வேற்றுமைத் தொகை** பெ. (இலக்.) வேற்றுமைப் பொருள் அடிப்படையில் இரண்டு பெயர்ச்சொற்களால் அமைந்த கூட்டுச்சொல்; case compound in which the case marker is elliptical.

**வேறுபடு** வி. (v.) *ஒன்று மற்றொன்றைப் போல் இல்லாமலிருத்தல்; மாறுபடுதல்;* differ. *'கடைக்குக் கடை விலை வேறுபடுகிறது'.*

**வேறுபாடு** பெ. (n.) *வேற்றுமை; மாறுபாடு;* difference. *'சமயவேறுபாடுகளை மறந்து ஒரே நாட்டவர் என்ற முறையில் ஒன்றுபடுவோம்'.*

# வை

**வைக்கோல்** பெ. (n.) *நெல்மணிகள் நீக்கப்பட்டு உலர்த்திய நெற்பயிரின் காய்ந்த தாள்;* straw of paddy.

**வைகறை** பெ. (n.) *விடியத் தொடங்குகிற நேரம்; விடியல்;* dawn; daybreak. *'வைகறையில் எழுந்து குளித்து விடுவார்'.*

**வைப்பாட்டி** பெ. (த.வ.) *ஆசைநாயகி;* concubine.

**வைப்பு** பெ. (த.வ.) வைப்பாட்டி காண்க.

**வைப்புத்தொகை** பெ. (n.) *குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு பெற்றுக் கொள்ளும் வகையில் வங்கி, நிதி நிறுவனம் போன்றவற்றில் ஒருவர் செலுத்திவைத்திருக்கும் தொகை;* deposit (in a bank or paid to an agency, etc.,); (in India) fixed deposit.

**வைப்புநிதி** பெ. (n.) *(வங்கி, நிறுவனம் போன்றவை) வைத்திருக்கும் அல்லது (குறிப்பிட்ட காரணத்திற்காக) ஒதுக்கியிருக்கும் தொகை;* reserves (of money in a bank); allotted fund.

**வைரவிழா** பெ. (n.) *(ஒரு அமைப்பு) அறுபது ஆண்டுகளை நிறைவு செய்ததற்காகக் கொண்டாடப்படும் விழா;* diamond jubilee.

# வௌ

**வௌவால்** பெ. (n.) *பறவை போல் பறப்பதும் (இயல்பிலேயே தலை கீழாகத் தொங்குவதும்) இரவில் இரை தேடுவதுமான, பாலூட்டி வகையைச் சேர்ந்த சிறிய விலங்குவகை;* bat. *'பாழடைந்த மண்டபத்தில் வௌவால்கள் தொங்கிக் கொண்டிருந்தன'.*

☆☆☆